தமிழ் அர்த்தத்துடன் கூடிய

# ஸ்ரீமத்கீதாபாஷியம்.

முதல் ஆறு அத்தியாயங்கள்.

ஸ்ரீவிசிஷ்டாத்வைத மதப்பிரவர்த்தகரான

ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்த

# ஸ்ரீமத்கீதாபாஷ்யமும்.

ஆசாரியர்களால்

வி. கே. ராமாநுஜனைக்கொண்டு

எளிதான தமிழ் நடையில்

எழுதப்பட்ட உரையும்.

கும்பகோணம்

“ஸ்ரீ ஜனார்தன பிரிண்டிங் ஒர்க்ஸ்”

விலை ] 1928. [ ரூ 1—4—0.

# முகவுரை.

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம: ॥

உலகத்தில் எல்லாரும் "நான் நான்" என்று சொல்லுகிறார்கள். நான் என்பது என்ன? அது உடம்பா? அல்லது அதைக் காட்டிலும் வேறானதா? இதை யோஜித்துப் பார்ப்போம். உடம்பு தாயார் வயிற்றிலிருந்து வெளியே வரும்போது, மிகவும் சிறிதாயிருந்து, வளர்ந்து, பிறகு பையனாகவும், ஆளாகவும், கடைசியில் கிழவனாகவும் ஆகிறது. இது எல்லாருக்கும் தெரிந்த விஷயமே. நான் என்பது இவ்விதமாக வளர்ந்தும் குறைந்தும் வருகிறதென்று தோன்றுகிறதா? அப்படித்தோன்றாமல் ஒரேவிதமாய் இருப்பதாகத் தோன்றினால், எப்போதும் மாறிக்கொண்டிருக்கிற உடம்பைக்காட்டிலும் மாறுதலில்லாத நான் என்பது வேறு என்று எண்ண வேண்டியது.

2. மேலும், உடம்பு பேசுகிறது. ஓடியாடி அலைகிறது. தூங்கும்போது ஒருவேலையையும் செய்யாமல், தூக்கம் போன பிறகு மறுபடியும் கிளம்புகிறது. சாகிற காலத்தில் அடியோடே கீழே விழுந்து விடுகிறது. இந்த வேலைகளை உடம்பு தானாகச் செய்கிறதா? தானாகவே கீழே விழுந்து விடுகிறதா? அல்லது, அதைக் காட்டிலும் வேறான "நான்"என்பது அதற்குள்ளிருந்து, அதைக்கொண்டு கொஞ்சகாலம் வேலை செய்கிறதா? அந்த "நான்" என்பது உடம்பைவிட்டு ஒருகாலத்தில் போகிறதா? அப்போது உடம்பு அடியோடே கீழே விழுந்து விடுகிறதா? இதை யோஜித்துப்பார்த்தால், உடம்பு தானாக இப்படிச் செய்கிறதென்பதைக்காட்டிலும், நான் என்று ஒன்றிருந்து போய்விட்டதென்று சொல்வது பொருந்தி யிருக்கிறது.

3. "நான்" என்பது இந்திரியங்களில் ஒன்றா யிருக்குமா? இதையும் கவனிக்கவேணும். தெருவில் போகும் அழகான ஒரு ஸ்திரீயைப் பார்க்கக்கூடாது, பார்த்தால் மனது கலங்கும் என்று நினைத்து, ஒருவன் தலையைத் திருப்பிக்கொள்கிறான். ஒருக்ஷணத்தில் அவனுடைய கண்ணானது திரும்பி அவளைப்பார்க்கிறது.

சாப்பிடும்போது ஒட்டுமாம்பழத்தை இலையில் போடுகிறார்கள். அது உடம்புக்கு ஆகாது. அதைச்சாப்பிட வேண்டாம் என்று எண்ணுகிறான். ஒரு க்ஷணத்தில் அவன் கை அதை எடுத்து வாயில் போடுகிறது. அதை வாயும் விழுங்குகிறது. இப்படியே கண்ணைப் போல மற்ற ஞானேந்திரியங்களும், கையைப் போல் மற்ற கர்மேந்திரியங்களும் அவனுக்கு உட்படாமல் தங்கள் தங்கள் வேலைகளைச் செய்கின்றன. மனதும் அப்படித்தான் இருக்கிறது. தியானம் செய்ய ஒருவன் உட்கார்ந்து, ஒரு வஸ்துவையே நினைக்க வேண்டும், வேறொன்றையும் நினைக்கக்கூடாது என்று எண்ணுகிறான். உடனே மனது வெளியே ஓடிப்போகிறது. நான் என்பது கண்முதலானவைகளை தடுத்துத் திருப்பி விடுகிறது. ஆகையால் நானென்பது இந்திரியங்களுமன்று.மனதுமன்று. பிராணனாயுமிருக்க முடியாது. ஏனென்றால், நான் என்பது தூங்கும்போது ஒரு வேலையையும் செய்கிறதில்லை. அப்பொழுதும் பிராணன் தன் வேலைகளை நிறுத்தாமல் செய்து கொண்டிருக்கிறது.

4. இதின்மேல் ஒரு கேள்வி—உடம்பைக்காட்டிலும் வேறான நான் என்பவன் உடம்புக்குள் எப்படி வந்தான். தானாக வந்தானா? அல்லது அவனுக்கு மேற்பட்டவன் அவனை அதற்குள் வைத்தானா? என்று. பதில்—முதலில் சொன்னது ஸரியன்று. ஏனென்றால், எவனும் அழகு முதலான நல்ல குணங்கள் பொருந்திய உடம்போடே பணத்தினாலும், படிப்பினாலும், மற்ற நல்ல ஸங்கதிகளாலும் உயர்ந்தவனாகப் பிறக்க வேணுமென்று ஆசைப்படுவன். உலகத்திலோ பெரும்பாலும் அப்படிக் காணப்படவில்லை. ஏழைகளாயும், முட்டாள்களாயும், கெட்ட நடவடிக்கையுள்ளவர்களாயும் நான் என்பவர்கள் பிறக்கிறார்கள். அங்கங்கள் குறைவுள்ளனவாயும், அழகில்லாதவைகளாயும், அநேக வியாதிநிறைந்தவைகளாகவும் இருக்கிற உடம்புகளுடன் அவர்கள் இருக்கிறார்கள். ஆகையால் தாமாக வருவதானால் இப்படி இருப்பார்களோ? அவர்களுக்கு மேற்பட்டவனாக ஒரு யஜமானன் தான் அவர்களை உடம்புகளில் வைக்கிறான் என்று சொல்ல வேண்டும்.

5. இப்படி— (1.) உடம்பும், அதைச் சேர்ந்தவைகளும் (2.) நான் என்பவர்கள்— (3.) அவர்களுக்கு மேற்பட்ட யஜமானன்—

ரன்று மூன்று தத்வங்கள் இருப்பதாகத் தோன்றுகிறது. அவைகளுக்குப் பிரமாணங்கள் இருக்கின்றனவா என்று பார்ப்போம். உலகத்தில் மூன்று பிரமாணங்கள் இருக்கின்றன—பிரத்தியக்ஷம், அநுமாநம் (யுக்தி), சப்தம்—என்று. பிரத்தியக்ஷம் என்பது இங்கே உபயோகப்படாது. ஏனென்றால், கண் முதலான இந்திரியங்களாலே இரண்டாவது தத்வத்தையும், மூன்றாவது தத்வத்தையும் அறியமுடியாது. யுக்திகளை மாத்திரம் கொண்டும் அறிய முடியாது. ஏனென்றால், இந்த தேசத்தில் அநேகம் பேர்கள் யுக்திகளை மாத்திரம் கொண்டு விசாரித்திருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் சொன்னபடி ஒருவர் சொல்லவில்லை. ஒவ்வொருவர் சொல்வதும் அநுபவத்துக்கு ஒத்து வரவில்லை. எப்படி யென்றால், அவர்களில் ஆறு பேர்கள் மிகவும் உயர்ந்தவர்கள். அவர்களாவன— (1) ஸாங்கியமதத்தை ஏற்படுத்தின கபிலர் என்ற ருஷி. அவர் பெரிய யோகி என்று பிரஸித்தம். (2.) யோகமதத்தை ஏற்படுத்தின நான்குமுகமுடைய பிரும்மா. (3.) வைசேஷிகமதத்தை ஏற்படுத்தின கணாதன் என்கிற ருஷி. (4.) பௌத்தமதத்தை ஏற்படுத்தின புத்தர் என்பவர். இவரைப் பகவானுடைய அவதாரம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. (5.) ஜைநமதத்தை ஏற்படுத்தின ஜிநன் என்பவர். (6.) பாசுபதமதத்தை ஏற்படுத்தின பசுபதி என்கிற ருத்திரன்.

6. மேலான யஜமாநன். இவர்களில் ஸாங்கியனும், பௌத்தனும் எல்லாவற்றிற்கும் மேலானவனாகவும் யஜமானனாகவும் ஒருவனை ஒப்புக்கொள்ளவில்லை. மூன்று மதக்காரர்கள் தைவம் ஒன்று இருக்கிறது. அதை யுக்தியினாலே மாத்திரம் அறிந்து கொள்ளலாம் என்று சொல்லுகிறார்கள். அவர்கள் சொல்லும் யுக்தியாவது—ஒரு குசவன் சட்டிகளையும் பானைகளையும் செய்கிறான். இப்படியே வேறு வேலைக்காரர்கள் வெவ்வேறு வஸ்துக்களை உண்டு பண்ணுகிறார்கள் இதைப் பார்த்துக் கொண்டிருக்கிற நாம்—எந்த வஸ்து செய்யப்பட்டதோ, அதை ஒருவன் செய்திருக்க வேண்டும்—என்று அறிகிறோம். இந்த உலகமானது அநேக வஸ்துக்கள் சேர்ந்து உண்டாயிருக்கிறது. ஆகையால் அது செய்யப்பட்ட வஸ்து. அதை ஒருவன் செய்திருக்க வேண்டும்.

அவன் எவனுயிருக்கலாம்? உலகத்தைச் செய்கிறவனுக்கு அறிவும் சக்தியும் அளவில்லாமல் இருக்கவேண்டும். நான் என்கிற ஜீவன்களுக்கு அறிவும் சக்தியும் மிகவும் கொஞ்சமாயிருப்பதால், அவர்களால் அது செய்ய முடியாது. ஆகையால் தைவம் என்று ஒன்று இருக்க வேண்டும்—என்று.

இந்த யுக்தி ஸரியானதன்று—உலகமானது செய்யப்பட்டதாயிருந்தாலும், அதை ஏன் ஒரு ஜீவன் செய்திருக்கக்கூடாது? ஜீவன்களுக்குள் அறிவிலும் சக்தியிலும் தாரதம்மியமிருக்கிறதே. ஆனதினுல் ஏன்ஒருஜீவன் ஏராளமான புண்ணியத்தைப்பண்ணி, உலகத்தை உண்டு பண்ணக்கூடிய அறிவும் சக்தியுமுள்ளவனுயிருக்கக்கூடாது? இந்தப் பிரும்மாண்டத்தை ஆளுகிற பிரும்மா என்பவன் ஜீவன் தானே. ஜீவன்களிருப்பதாகவும், அவர்களுக்கு அறிவும் சக்தியும் இருப்பதாகவும் எல்லாரும் ஒப்புக்கொள்ளுகிறோம். அவர்களில் ஒரு ஜீவனுடைய அறிவுக்கும் சக்திக்கும் அளவில்லையென்பதை மாத்திரம் ஒப்புக்கொள்வது நல்லதா? அல்லது ஒருவருக்கும் தெரியாத புதிதான தைவம் என்ற ஒன்றையும், அதற்கு அளவில்லாத அறிவையும் சக்தியையும் ஒப்புக்கொள்வது நலமா? என்ருல், முதலாவதே நலம். புதிதாக ஒரு வஸ்துவை ஏற்படுத்துவதைக் காட்டிலும், இருக்கிற வஸ்துவுக்கு ஒரு குணத்தையோ, ஒப்புக்கொண்ட குணத்துக்கு அளவில்லாமையையோ ஏற்படுத்துவது தகுந்ததென்று எல்லா சாஸ்திரக்காரர்களும் ஒப்புக்கொண்டிருக்கிருர்கள். ஆகையால் தைவமிருக்கிறதென்று யுக்திமாத்திரத்தைக்கொண்டு சொல்ல முடியாது.

7. இங்கே ஸாங்கியனும் பௌத்தனும்—ஏன் கஷ்டப்படுகிருய், தைவமென்று ஒன்று எதற்காக வேண்டும்-என்று கேட்கலாம். தைவமில்லாவிட்டால் உலகத்தில் காணப்படுகிற பலவிதமான தாரதம்மியங்கள் எப்படி ஏற்படும். ஒருவன் பணக்காரன். இன்னொருவன் ஏழை. ஒருவன் புத்தியுள்ளவன். ஒருவன் முட்டாள். ஒருவன் அழகுள்ளவன். மற்ருெருவன் குரூபி. இவைகள் எப்படி ஏற்பட்டன? பௌத்தன் பதில் சொல்லுகிருன்—இவைகள் கர்மத்தினுல் ஏற்பட்டன. நல்ல கர்மம் செய்தவன் நல்லதையும், கெட்டகர்மம் செய்தவன் கெட்டதையும் அடை

கிறான்—என்று. அவனைக் கேட்போம். கர்மம் என்றால் வேலை அதைப்பண்ணி முடித்த உடனே அது போய்விடுகிறது. ஆதலால் அது இருக்கவுமில்லை. அதற்கு அறிவுமில்லையே. அது எப்படிப்பலன் களைக்கொடுக்கும்? என்று. இதற்கு அவன் ஒருபதில் சொல்லக்கூடும். அதாவது—கர்மம் உடனே போன போதிலும், அது செய்கிறவனிடத்தில் ஒரு சக்தியையுண்டு பண்ணுகிறது. அடுப்பில் ஒரு பானையில் ஜலம் வைத்து நெருப்பைப் போட்டுக் காய்ச்சினால், வெந்நீராக ஆகிறது. நெருப்பு அணைந்துபோன போதிலும், வெந்நீரில் சூடு இருக்கிறது. அதுபோல, இந்த சக்திக்கு அதிருஷ்டம் என்றுபெயர். அது தகுந்த காலத்தில் பலனைக் கொடுக்கிறது-என்று. இந்த பதிலும் ஸரியன்று—அதிருஷ்டத்துக்கும் அறிவில்லையே. அறிவுள்ளவனால் ஏவப்படாமல் ஒரு அறிவில்லாத வஸ்து ஒரு வேலையைச் செய்வதை யாராவது பார்த்திருக்கிறார்களா?

8. ஜீவன். யோகாசாரன் என்கிற பௌத்தன் சொல்லுகிறான்—நான் என்பது அறிவு. அதற்கு அறிவு இல்லை. அது ஒரு க்ஷணமிருந்து போய் விடுகிறது. அடுத்த க்ஷணத்தில் இன்னொரு அறிவு வருகிறது. அதுவும் ஒருக்ஷண மிருந்து போய் விடுகிறது. இப்படி அறிவானது வெள்ளம் போல் ஒன்றின்பின் ஒன்றாய் வந்து கொண்டிருக்கிறது. இந்த அறிவின் பிரவாஹத்தை (வரிசையை) த்தான் ஜீவன் என்று சொல்லுகிறது—என்று. இது ஒருவருடைய அனுபவத்துக்கும் ஒத்துக் கொள்ளவில்லை. நேற்று பார்த்த ஒருவனை இன்றைக்குப் பார்க்கும்போது, "அவன்தான் இவன்" என்று சொல்லுகிறோம். அவன் என்றால் நேற்றுப் பார்க்கப்பட்டவன். அவனும் இன்றைக்குப் பார்க்கப்பட்டவனும் ஒன்று என்று இதினால் ஏற்படுகிறது. ஆனதால் ஜீவன் ஒரு க்ஷணமிருந்து அழிந்து போகிறான் என்று சொல்லமுடியாது. பௌத்தன் பதில் சொல்லுகிறான்—நேற்றைக்குப் பார்க்கப்பட்டவன் வேறு. இன்றைக்குப் பார்க்கப்படுகிறவன் வேறு. இரண்டுபேரும் ஒரே மாதிரியாயிருப்பதாலே நீ மயங்குகிறாய்—என்று. இதுவும் ஸரியன்று—மயங்குகிற ஒருவன் ஒருவனை நேற்றைக்கும் மற்றொருவனை இன்றைக்கும் பார்த்தால்தானே அவர்கள் ஒன்று என்று

மயங்கக்கூடும். அப்போது இரண்டு நாள்களிலும் ஒருவன் இரு க்கவேண்டுமே. அதனால் ஜீவன் ஒரே க்ஷணமிருக்கிறான் என்று சொன்னது போய் விட்டது. அவன் நிலையாயே இருக்கிறான்.

9. வைசேஷிகன் (தர்க்க சாஸ்திரம் ஏற்படுத்தினவன்) ஜீவன் விபு (எங்கும் நிறைந்திருக்கிறவன்) என்று சொல்லுகிறான். அது பிசகு. ஜீவன் எங்கும் நிறைநதிருந்தால், எல்லா இடத்து ஸங்க திகளும் ஏன் அவனுக்குத் தெரியவில்லை என்றால், வைசேஷிகன் பதில் சொல்லுகிறான்—ஜீவன் எங்கும் நிறைந்திருந்த போதிலும், எந்த இடத்தில் அவன உடம்பிருக்கிறதோ, அந்த இடத்தில் தான் அறிவு உண்டாகிறது. மற்ற இடத்து ஸங்கதிகள் அவனுக்குத் தெரியாது— என்று. அதுவும் தப்பு— இல்லாத ஒரு ஸங்கதி யைச் சொல்லி, அதற்கு ஸமாதானம் சொல்லுவானேன் ? புண் ணியம் பண்ணிச் செத்துப் போனவன் ஸ்வர்க்கத்திற்குப் போ கிறான். பாபம் பண்ணினவன் நரகத்துக்குப் போகிறனென்று சொல் இருக்கிறதே. எங்கும் நிறைந்தவன் எந்த விடத்துக்குப் போகிறது ? எங்கிருந்து வருகிறது? ஜீவன் சின்னதாயிருந்தால் தான் போக்கும் வரத்தும் கூடும்.

ஜைநன்—உடம்பு அளவு எத்தனையோ, அத்தனை அள வுள்ளது ஜீவன்—என்று சொல்லுகிறான். அதுவும் பிசகு— ஜீவனுக்கு அனேகம் பிறப்பு உண்டாகிறதென்று நீயும் ஒப்புக் கொள்ளுகிறாய். போன ஜந்மம் யானையாயிருந்து அடுத்த ஜந்மத் தில் எறும்பாகப் பிறந்தால், யானையின் உடம்பிலிருக்கிற ஜீவனு க்கு யானையின் அளவு இருப்பதால், அந்த உடம்பை விட்டு எறும் பின் உடம்பில் நுழையும்போது முழு ஜீவன் அதில் கொள்ளாதே, ஆகையாலே இந்த மதமும் பிசகு. ஜைநன் பதில் சொல்லுகிறான்- எந்த உடம்பில் ஜீவனிருக்கிறானோ, அந்த உடம்பிற்குத் தகுந்த படி ஜீவ ஸ்வரூபம் சுருங்கிக் கொண்டும் விரிவையடைந்து கொ ண்டுமிருக்கிறது. ஆகையால் யானை உடம்பில் இருக்கும் ஜீவன் எறும்பின் உடம்பில் வரும்போது சுருங்குகிறது—என்று. அப் போது ஜீவஸ்வரூபத்துக்கு அடிக்கடி மாறுபாட்டைஒப்புக்கொள் ளுகிறபடியால்,சட்டிப்பானைபோல் அழிந்து விடும். மாறுபாடென் றும் அழிவுதான். ஆகையால் இந்த மதத்தையும் தள்ளிவிட

வேண்டியது. பிரும்மா முதல் கண்ணுக்குத் தெரியாத சின்னப் புழுவரையில் உள்ள எல்லா உடம்புகளிலும் ஜீவன் நுழைந்திருப்பதாலே, அவன் ஸ்வரூபம் மிகவும் சின்னதாயிருக்கிறது என்று சொல்லுவதே தகுந்தது. அப்படியே வேதம் சொல்லுகிறது. அதில் ஏன் உனக்கு இவ்வளவு த்வேஷம்.

10. ஸாங்கியன் ஜீவனை ஒப்புக்கொண்டு, அவன் அறிவே தவிர, அவனுக்கு அறிவில்லை என்று சொல்லுகிறான். அதுவும் தப்பு—இது ஒருவருடைய அநுபவத்துக்கும் ஒத்துக் கொள்ளவில்லை. ஏனென்றால், யாரும் ஒரு வஸ்துவைப் பார்க்கும்போது "நான் இதைப் பார்க்கிறேன்" என்று எண்ணுகிறார்கள். சொல்லவும் சொல்லுகிறார்கள். அதில் நான் என்கிற வஸ்துவில் அறிவு என்பது இருக்கிறதாக ஏற்படுகிறது. ஆகையால் ஜீவன் அறிவு மாத்திரமன்று. அறிவாயும் அறிவுள்ளவனாயும் இருப்பவன்.

வைசேஷிகன் சொல்லுகிறான்—ஜீவனுக்கு அறிவு இயற்கையன்று—நடுவில் வருகிறது, போகிறது. ஜீவனுடன் மனது சேர்ந்தால் அது வருகிறது. பிரிந்தால் அது போகிறது—என்று. அது பிசகு—அவன் மதத்தில் ஒருவன் மோக்ஷம் அடையும்போது அவனுக்கு மனது கிடையாது. ஆகையால் அப்போது அவனுக்கு அறிவு உண்டாகாது. அப்போது கல்லைப்போல் அறிவில்லாமல் இருக்க வேண்டியது இவ்விதமான மோக்ஷத்தை எவன் ஆசைப்படுவான். ஸுகமில்லாத இந்த மோக்ஷத்தைக் காட்டிலும், ஸுகமுள்ள ஸம்ஸாரமே துக்கக்கலப்பு இருந்தாலும், நல்லது. எல்லாரும் ஸம்ஸாரத்திலிருந்து கிளம்பி, அழிவில்லாததும், அளவில்லாததுமான ஸுகத்தை அநுபவிக்கவன்றோ ஆசைப்படுகிறார்கள். அறிவில்லாவிட்டால், இந்த அநுபவம் எப்படி வரும்? ஆகையால் ஜீவனுக்கு அறிவு இருக்கிறதென்றும், அது எப்போதுமிருக்கிறதென்றும் ஒப்புக்கொள்வது தான் பொருந்தியது.

11. ஸாங்கியன் சொன்னபடி ஜீவன் அறிவு என்பதை ஒப்புக்கொள்ளலாம். ஏனென்றால் அறிவு என்பது தன்னைப் பற்றியோ, தன்னையும் மற்றொன்றையும் பற்றியோ பேசுவதற்குக் காரணமாய் இருப்பது. ஜீவன் தன்னைப்பற்றிப் பேசுவதற்குக் காரணமாயிருக்கிறான். ஆகையால் அது கூடும். இது நம்மு

டைய அநுபவத்துக்கு ஒத்திருக்கிறது. ஒருவனை "நான், நான்" என்று நீ சொல்லுகிறாயே,'நான்'என்பது உனக்கு எப்படித் தெரிந்தது என்று கேட்டால், என்னை எனக்குத் தெரியாதா? அவனவனுக்கு அவனவனைத் தெரியாதா என்று பதில் சொல்லு கிறான். 'நான்' என்பது தானாகவே தோன்றும் என்று அந்தச் சொல்லிற்குப் பொருள். இந்த ஸங்கதி வைசேஷிகன் மனதில் படவில்லை. அவன் ஜீவ ஸ்வரூபத்தை ஜடம் என்று சொல்லுகிறான். ஜடம் என்றால் தானாய் தோன்றாமல் வேறொன்றின் உதவியால் தோன்றுகிற வஸ்து. இருட்டில் விளக்குத்தானாய் தோன்றுகிறது. இருட்டிலிருக்கும் வஸ்துக்கள் அதின் உதவியால் தோன்றுகின்றன. ஆத்மா அந்த வஸ்துக்கள் போலன்று. விளக்குப்போன்றது.

12. உலகம் எல்லாராலும் கண்ணால் பார்க்கப்படுகிற உலகமானது இல்லை (பொய்)என்று யோகாசாரன் என்கிற பௌத்தன் சொல்லுகிறான். அவனைக் கேட்போம்—எல்லாருக்கும் கண்ணுக்குத்தெரிகிறதே. இப்போது தோன்றுகிறபடியே நேற்றைக்கும் தோன்றிற்றே. அது எப்படிப்பொய்-என்று. அவன் பதில் சொல்லுகிறான்—ஸ்வப்நத்தில் அநேக ஸங்கதிகளைப் பார்க்கிறோமே. அவைகள் பொய்தானே. அதுபோல உலகமும் பொய். அறிவு ஒன்று தான் உண்மையில் இருக்கிறது — என்று. இந்த உதாரணம் ஸரியானதன்று. தூங்கும்போது ஸ்வப்நத்தில் நமக்குத் தோன்றுகிற வஸ்துக்கள் நமக்கு மாத்திரம் தோன்றுகிறது எல்லாருக்கும் தோன்றவில்லை. உலகம் அப்படியன்று. அதை நாம் எப்படி பார்க்கிறோமோ, அப்படியே எல்லாரும் பார்க்கிறார்கள். மேலும், தூங்கி எழுந்திருந்தால் ஸ்வப்நத்தில் கண்டவைகள் போய் விடுகின்றன. உலகமோ நிலையாய் இருக்கிறது. ஆகையால் அது பொய்யன்று.

13. பௌத்தர்களுக்குள் ஸௌத்ராந்திகன் என்று சொல்லப்பட்ட இன்னொருவன்—உலகமிருக்கிறது, அதை நம்முடைய கண் முதலிய இந்திரியங்களால் அறிய முடியாது. யுக்திகளால் தான் அறிய முடியும். யுக்தியாவது—நமக்குப் பல அறிவுகள் உண்டாகின்றன—மரம், செடி, ஆடு, மாடு—என்று. இந்த அறிவுகளில் மரம் முதலான ஸங்கதிகளிருப்பதாக அறிந்தோம். அறி

வுகளில் இந்த ஸங்கதிகள் ஏது என்று யோஜிக்கும்போது, மரம் முதலியவைகளிலிருந்து இந்த ஸங்கதிகள் அறிவுக்கு வந்திருக்க வேண்டியது. ஆகையால் மரம் முதலியவைகள் இருக்கவேண்டும். உடம்பு தெரியாமல் தூங்கி எழுந்தவன் உடம்பில் கடித்திருப்பதைப் பார்த்து தூங்கும்போது ஏதோ கடித்திருக்க வேண்டுமென்று சொல்வது போல—என்று. பிரத்தியக்ஷமாய் கண்ணால் பார்ப்பதை மறைப்பதால், இந்த மதம் ஒப்புக்கொள்ளத் தக்கதன்று. இந்த ஸௌத்ராந்திகனுக்கும் முன் பாராவில் சொன்ன யோகாசாரனுக்கும் வித்தியாஸம் என்னவென்றால், இரண்டு பேர்களும் அறிவுகள் இருப்பதாய் ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஒருவன் அறிவுகளை உண்டாக்கும் உலகமிருக்கிறதென்று சொல்லுகிறான். மற்றொருவன் அது இல்லை என்று சொல்லுகிறான்.

14. வைபாஷிகன் என்கிற பௌத்தன் உலகம் கண்ணுக்குத்தெரிகிறதென்று சொல்லுகிறான். அவனும் ஸௌத்ராந்திகனும்—உலகத்தில் இருக்கும் வஸ்துக்கள் ஒரேக்ஷணமிருக்கின்றன. அடுத்த க்ஷணத்தில் அதேமாதிரி வஸ்துக்கள் உண்டாகின்றன. அவைகளும் ஒரே க்ஷணமிருந்து போய் விடுகின்றன—என்று சொல்லுகிறார்கள். மாமரத்திலிருக்கும் ஒரு பழத்தைப் பார்த்து, பறித்து, நறுக்கி, சாப்பிடுகிறோமே. பழம் ஒரே க்ஷணமிருப்பதானால், இது எப்படிக்கூடும்? என்றால், பார்த்த பழம் வேறு, பறிக்கப்பட்ட பழம்வேறு. நறுக்கினது வேறு. சாப்பிட்டதும் வேறுதான். எல்லாம் ஒரேமாதிரியாய் இருப்பதாலே, அவைகளை நீ ஒன்று என்று எண்ணுகிறாய்—என்றும் சொல்லுகிறார்கள். இதைக்கேட்டு எவன்தான் சிரிக்கமாட்டான். பௌத்தர்கள் சொல்லுகிறார்கள்—பரிஹாஸம் பண்ணாதே. ஒருவிளக்கு எரிகிறது. அதின் ஜ்வாலைகள் ஒன்று என்று மயங்குகிறார்கள். ஆனால் அநேக ஜ்வாலைகள் ஒன்றின்பின்னால் ஒன்று வந்துபோகின்றன. திரி நாலு அங்குலமிருக்கிறது அதில் வீசம் அங்குலம் எரிந்து ஜ்வாலை உண்டாகிறது. அதுஎரிந்து போனபிறகு அந்தஜ்வாலை போய் விட்டது. இரண்டாவது வீசம் அங்குலத்தில் இரண்டாவது ஜ்வாலை உண்டாகிறது. அதுபோல ஒவ்வொரு வஸ்துவும்

ஒவ்வொருக்ஷணமிருந்து போகிறது—என்று. இவர்களைக்கேட்க வேண்டியது. விளக்கின் ஜ்வாலைக்கு திரியும் எண்ணையும் வேண்டும். அவைகள் போனால், அந்த ஜ்வாலையும் போய்விடுகிறது. பார்த்த மாம்பழம் போகிறதென்று சொல்லுகிறாயே, அதற்கு என்ன காரணம்? பறிக்கிற மாம்பழம் உண்டாவதற்கும் என்ன காரணம்? ஒரு காரணமும் தெரியவில்லையே. உலகத்தில் மண்ணைக்கொண்டு சட்டிப்பானைகள் செய்கிறார்கள். அந்த மண் இருக்கிறது. ஆனால் உருவம் வேறு. பார்த்த மாம்பழம் போய் விட்டபடியால், அதைக் கொண்டு பறித்த மாம்பழம் உண்டாகாதே. பின்னை அது எப்படி உண்டாயிற்று? பௌத்தன் பதில் சொல்லுகிறான்.—பறித்த மாம்பழம் உண்டாகிற வரையில் பார்த்த மாம்பழம் இருக்கிறது—என்று. இப்படியானால் இரண்டு மாம்பழம் கண்ணுக்கு படவேண்டுமே, ஒன்றைத்தானே பார்க்கிறோம். மேலும் பார்த்த மாம்பழம் இரண்டு க்ஷணமிருப்பதாக ஏற்படுமே. இது உன் மதத்துக்கு விரோதமல்லவா? இன்னொரு கேள்வி கேட்போம். இப்போது உலகத்தில் இருக்கிற வஸ்துக்கள் மாத்திரம் ஒரு க்ஷணமிருக்கின்றனவா? அவைகளுக்குக் காரணமாய் நீ சொல்லுகிற பரமாணுக்களும் ஒரே க்ஷணமிருக்கின்றனவா—என்று. பௌத்தன் பதில் சொல்லுகிறான்—எல்லாம் ஒரே க்ஷணம் தானிருக்கிறது—என்று. அப்படியானால் பரமாணுக்கள் சேர்ந்து தானே பூமி முதலானது உண்டாக வேணும். அவைகள் சேருவது எப்போது, உண்டாகிறது எப்போது? சேருவதுக்குள்ளே அவைகள் போய் விடும். உண்டாகிறதற்குள்ளே சேர்ந்தவைகள் போய்விடுமே. வாழை ஒரு வருஷத்தில் தார் போடும். தென்னை ஐந்து வருஷத்தில் காய்க்கும். இவைகள் ஒரு க்ஷணமிருந்தால், காய்களை எப்படிப் பார்க்க முடியும்? ஆகையாலே இந்த க்ஷணிகவாதம் மனதால் நினைக்கக்கூடத் தகுந்ததன்று.

**15.** இந்த உலகம் இப்படியே எப்போது மிருந்ததா? அல்லது எதிலிருந்தாவது உண்டாயிற்றா? என்று விசாரிக்க வேண்டும். பல மதக்காரர்கள் இந்த உலகம் உண்டானது என்று சொல்லுகிறார்கள். ஸாங்கியன் சொல்லுகிறான்—ஸத்வம் ரஜஸ், தமஸ்,

என்று மூன்று வஸ்துக்கள் ஒரு காலத்தில் ஸமமாயிருந்தன. அதாவது—ஒவ்வொன்று அதிகமாயும், மற்றவைகள் குறைந்தும் இருக்கவில்லை. அப்போது இந்த உலக முண்டாகிறதில்லை. அந்த காலத்தைப் பிரளயகாலம் என்று சொல்லுகிறது. ஸமமா யிருக்கிற காலத்தில் அவைகளுக்குப் பிரகிருதி என்று பெயர். பிறகு இவைகள் ஸமமாயிருப்பது போய், ஒவ்வொன்று மேலிட் டது. அப்போது அந்தப்பிரகிருதி—மஹத், அஹங்காரம், ஐந்து பூதங்கள், பத்து இந்திரியங்கள், மனது, இப்படி மாறிற்று. அவை களிலிருந்து இவ்வுலகம் உண்டாயிற்று. இப்படித்தான் உண்டா யிருக்கவேண்டும். காரணமான ஸத்வம், ரஜஸ், தமஸ்ஸுக்கள் ஸுகத்தையும், துக்கத்தையும், தப்பு எண்ணத்தையுமுண்டு பண் ணுகின்றன. இவைகளைத் தான் இவ்வுலகத்திலும் பார்க்கிறோம்— என்று. நாம் ஸாங்கியனைக் கேட்போம். பிரகிருதி உலகமாக ஆகிறதே, இது தானாய் ஆகிறதா? அல்லது அறிவுள்ள ஒருவன் அதை உலகமாக ஆக்குகிறானா—என்று. ஸாங்கியன் பதில் சொல்லுகிறான்—பிரகிருதி தானாகவே உலகமாயிற்று—என்று. ஓ ஸாங்கியனே! ஒரு வீடு கட்ட செங்கல்லும் சுண்ணாம்பும் வந்தி ருக்கிறது. அவைகளைக் கொண்டு ஒரு கொத்தன் வேலை செய்தால் தானே வீடாகிறது. கொத்தன் வேலை செய்யாவிட்டால், கல்லும் சுண்ணாம்பும் வீடாக ஆகுமா? அப்படியே பிரகிருதியையும் அறிவு ள்ளவன்தான் உலகமாகச் செய்யவேண்டுமே—என்று. அவன் சொல்லுகிறான்—பால் தயிராக ஆகிறதே. குளிர்ந்த தேசத்தில் தண்ணீர் பனிக்கட்டியாக ஆகின்றதே. அங்கே அறிவுள்ளவன் வேலை என்ன?—என்று. இதற்கு நாம் சொல்லுவதாவது. அறி வில்லாத வஸ்துவால் ஒரு காரியம் ஆகவேணுமேயானால், அறி வுள்ளவன் உதவி இல்லாமல் போனால் முடியாது என்பது இஷ்யூ. அதாவது நாம் விசாரிக்கவேண்டியது. நீ சொல்லுகிற பாலும் தண்ணீரும் இந்த இஷ்யூவில் அகப்பட்டவைகள். ஸாங்கியன் பதில் சொல்லுகிறான்—அறிவுள்ளவன் வேலை வேண்டியதில்லை. அவன் கிட்ட இருந்தால் போதும். பசுமாடு புல்லைத்தின்று தண்ணீரைக்குடிக்கிறது. அந்தப் புல்லும் தண்ணீரும் பாலாக ஆகின்றன. அவை பாலாக ஆகிறதற்கு மாடு இருந்தால் போதும்.

அது போலவே ஜீவன்கள் கிட்டஇருப்பதாலேயே பிரகிருதி உலகமாகிறது—என்று. இதற்கு பதில்—காளை மாடு பில்லைத் தின்று தண்ணீரைக் குடிக்கிறதே. அங்கு அறிவுள்ள ஜீவன் கிட்ட இருக்கிறதே. அவைகள் பாலாக ஆகின்றனவா? மேலும், ஜீவன்கள் எப்போதும் கிட்ட இருக்கிறார்களே. பிரகிருதி எப்போதும் உலகமாயிருக்கவேணுமே. பிரளயகாலத்தில் உலகமில்லை என்று சொல்லுகிறாயே. அது எப்படிக்கூடும். மேலும், பிரளயகாலத்தில் ஸத்வமும், ரஜஸ்ஸும், தமஸ்ஸும் ஸமமாயிருந்ததே. இது எப்படி மாறி ஒவ்வொன்று மேலிட்டு மற்றவை குறைந்தன. இது அறிவுள்ளவன் செய்கிற வேலையல்லவா? ஆகையால் தைவம் என்று ஒன்று ஒப்புக்கொண்டால் தான், அதின் எண்ணத்தாலே பிரகிருதி உலகமாக மாறிற்று என்று சொல்லலாம்.

16. வைசேஷிகன் உலகமுண்டாவதற்குத் தகுந்த காரணம் நான் சொல்லுகிறேன் என்று வருகிறான். அவன் சொல்லுகிறதாவது—ஒரு உள்ளில் கூறையின் ஓட்டை வழியாக ஸூரிய கிரணங்கள் ஒரு கம்பியாக வரும்போது, அதில் மிகவும் சின்னதான வஸ்துக்கள் சுழன்று கொண்டிருக்கின்றன. இவைகள் மிகவும் சின்னதாயிருந்தாலும், அவைகளை நாம் பார்க்கிறோம். அவைகளைக்காட்டிலும் சின்னதாய் நம்முடைய கண்ணுக்குப்படாமல் பரமாணு என்று சொல்லப்பட்ட வஸ்துக்கள் இருக்கின்றன. அவை—பூமி பரமாணுக்கள், ஜலபரமாணுக்கள், தேஜஸ்ஸு பரமாணுக்கள், காற்றுப் பரமாணுக்கள் என்று நாலுவகையாயிருக்கின்றன. பரமாணுக்களுக்கு அழிவில்லை. இவைகளில் இரண்டு பரமாணுக்கள் சேர்ந்து த்வியணுகம் என்று ஒன்று உண்டாகிறது. மூன்று த்வியணுகம் சேர்ந்து ஒரு த்ரயணுகமுண்டாகிறது. அவைகளின் வழியாய் உடம்புகளும், இந்திரியங்களும், மற்ற உலகங்களுமுண்டாகின்றன—என்று. அவனைக் கேட்போம். ஓ வைசேஷிகனே! பிரிந்திருக்கும் பரமாணுக்கள் சேருவதற்கு என்ன காரணம்—என்று. அவன் பதில்சொல்லுகிறான்—ஜீவன்கள்கர்மங்கள் செய்து அதிருஷ்டங்கள் உண்டாயிருக்கின்றன. அவைகள் கொடுக்கும் பலன்களை அநுபவிக்க ஜீவன்களுக்கு உடம்புகளும் இந்திரி

யங்களும் வேண்டும். அதற்காக அதிருஷ்டங்கள் பரமாணுக்களைச் சேரும்படி பண்ணி உலகத்தை உண்டு பண்ணுகின்றன—என்று. நீ சொல்லுகிறபடியானால், அதிருஷ்டங்கள் எப்போது மிருக்கிற படியாலே, பரமாணுக்கள் எப்போதும் சேர்ந்து கொண்டிருக்க வேணுமே. பிரளயகாலத்தில் உலகமில்லையென்றும், ஒரே தடவை யாக அது உண்டாகிறது என்றும் நீ சொல்லுகிறாயே. அது எப்படிக்கூடும்? என்றால், அவன் பதில் சொல்லுகிறான்—அதிரு ஷ்டங்கள் உடனே பலன்களைக்கொடுக்கிறதில்லை. சில இன்றைக் கும், சில நாளைக்கும், சில அடுத்த வர்ஷத்திலும், சில அடுத்த யுகத்திலும், சில அடுத்த கல்பத்திலும் பலன் கொடுக்கின்றன. உலகத்தை யுண்டாக்கும் அதிருஷ்டங்கள் எல்லாம் சேர்ந்து ஒரே காலத்தில் உலகத்தை உண்டுபண்ணுகின்றன—என்று இது ஒப்புக் கொள்ளத் தகுந்ததன்று. ஜீவன்கள் இத்தனை என்று கணக்கில்லை. அவர்கள் எல்லோரும் சேர்ந்து ஒரே மனதுடன் ஒரே விதமான கர்மத்தைச் செய்கிறதில்லை. ஆகையாலே எல்லா ருடைய அதிருஷ்டங்கள் ஒரேகாலத்தில் சேர்ந்து உலகத்தை உண்டுபண்ணும் வேலையை செய்ய முடியாது.

17. பரமாணு என்று அழிவில்லாத வஸ்து இருக்கிற தென்றுசொல்லுகிறாயே. அதை எதைக் கொண்டு சொல்லுகிறாய். நீயே அவைகள் கண்ணுக்குத் தெரியாது என்று சொல்வதாலே பிரத்தியக்ஷப் பிரமாணமில்லை. எதைக் கொண்டு அவைகளை ஒப்புக்கொள்ளுகிறாய்—என்று நாம் கேட்டால், அவன் பதில் சொல்லுகிறான்— யுக்தியால் சொல்லுகிறேன். யுக்தியாவது— ஸூரியன் வெளிச்சத்தில் சுழலுகிற சின்ன வஸ்துக்கள் கண்ணு க்குத் தென்படுவதால், அனேக அவயவங்கள் சேர்ந்து உண்டா யிருக்கவேண்டியது. உலகத்திலும் அப்படியே பார்க்கிறோம். இவைகளின் அவயவங்களுக்கும் அவயவங்கள் ஒப்புக்கொள்ள வேணும். கண்ணுக்குத் தெரிகிற வஸ்துக்களை உண்டுபண்ணுவ தால். அந்த அவயவங்கள் தான் பரமாணுக்கள்—என்று. இந்த யுக்தியை நாம் ஒப்புக் கொள்ளாவிட்டால் என்ன விரோதம் என் றால், சொல்லுகிறான்—இந்த வஸ்து அதைக்காட்டிலும் சின்னது, அது இன்னொன்றைக் காட்டிலும் சின்னது, என்று பேசப்பட்ட

சிறுமைக்கு ஒரு முடிவு வேண்டும். அதாவது—இதற்குக்கீழ் சின்னது வேறு கிடையாதென்று ஒரு வஸ்துவை ஒப்புக்கொள்ள வேணும். நாணயங்களில் ஒரு பைசாவை (தம்படி) கடைசியாக ஒப்புக்கொள்வது போல. அப்படி ஒப்புக் கொள்ளா விட்டால், ஒரு கடுகுக்கும் மலைக்கும் என்னமாய் வித்தியாஸம் சொல்ல முடியும். இதை ஒப்புக்கொண்டால், கடுகில் ஆயிரம் பரமாணுக்கள் இருக்கின்றன. மலையில் லக்ஷம் பரமாணுக்கள் இருக்கின்றன என்று சொல்லலாம் அவயவங்கள் என்பது இரண்டுக்கும் பொதுதானே—என்று. அவனுக்கு நாம் சொல்ல வேண்டியது—ஸூரியன் வெளிச்சத்தில் சுழலும் சின்ன வஸ்துக்களையே சிறுமைக்கு முடிவாக வைத்துக் கொள்ளலாமே கண்ணுக்குத் தெரியாத பரமாணுக்களை ஏன் ஒப்புக் கொள்ளவேண்டும். ஆகையால் நீ சொல்லுவதும் ஒப்புக் கொள்ளத் தகுந்த தன்று.

18. யோகமதத்தையும் பாசுபத மதத்தையும் சேர்ந்தவர்கள் சொல்லுகிறார்கள்—நாங்கள் தைவமொன்றை ஒப்புக் கொள்ளுகிறோம். அது பிரகிருதியை உலகமாகச் செய்தது. ஸாங்கியனிடத்தில் போலவும் வைசேஷிகனிடத்தில் போலவும் எங்களிடத்தில் குற்றம் சொல்ல முடியுமா?—என்று. அவர்களைக் கேட்போம்—உலகத்தில் ஒரு வஸ்துவை உண்டுபண்ணுவதற்கு உபாதானம் என்றும், நிமித்தம் என்றும் இரண்டு காரணம் சொல்லுகிறார்களே. அவைகளில் தைவம் என்ன காரணம்—என்று. அவர்கள் பதில் சொல்லுகிறார்கள்—தைவம் நிமித்த காரணம். பிரகிருதி உபாதான காரணம். உலகத்திலும் அப்படியே பார்க்கிறோம். சட்டிப்பானைகள் செய்யும்போது குயவன் நிமித்த காரணம். மண் உபாதான காரணம். இப்படியே இரண்டு காரணங்களும் பிரிந்தே யிருக்கவேண்டும்—என்று. அவனைக் கேட்க வேண்டும். தாயார் வயிற்றிலிருந்து குழந்தை பிறந்து யுவா (ஆள்) ஆகிறதே. ஆளுக்கு எது உபாதானகாரணம், எது நிமித்தகாரணம். குழந்தை உடம்பே காரணம் என்று சொல்ல முடியாது. ஜீவன் போய்விட்டால் உடம்பு வளராது. ஆகையாலே உடம்போடு கூடிய ஜீவன் உபாதான காரணம். இந்தக்குழந்தையை செய்தது வேறொன்றும் காணப்படாமையால், அதுவே

நிமித்த காரணம் என்று சொல்ல வேணும். இப்படியே பிரகிரு
தியோடு சேர்ந்த தைவமே உலகத்திற்கு உபாதானகாரணமும்
நிமித்த காரணமும் என்று சொல்லவேணும். இரண்டு காரணங்
களும் வேறாக இருக்கமுடியாது.

19. இப்படி யுக்திகளைக் கொண்டே ஏற்பட்ட மதங்களால்
நம்முடைய அநுபவத்துக்கு ஒட்டினபடி ஒரு முடிவும் ஏற்பட
வில்லை. ஆகையாலே சப்தம் என்கிற பிரமாணத்தைக்கொண்டுதா
ன் முடிவு செய்யவேண்டியது. நமக்குச் சப்தப் பிரமாணமானது
வேதம்தான். அது என்ன சொல்லுகிறதென்றால், தைவம் என்று
ஒன்றிருக்கிறது. எல்லா ஜீவன்களும் உலகமும் அவனுடைய
சொத்து. அவனே அவைகளை அடக்கி ஆளுகிறான். ஜீவன்
களுடைய கர்மத்துக்கு த்தகுந்தபடி தாரதம்மியத்துடன் உலகத்
தை உண்டு பண்ணுகிறான். ஜீவன்கள் அழிவில்லாதவர்கள்.
அவர்களுடைய ஸ்வபாவம் அணு. அதாவது மிகவும் சின்னது.
அவனுக்கு அறிவு என்கிற குணம் இயற்கையாகவே இருக்கிறது.
ஆகையாலே மோக்ஷம் அடைந்த பிறகு அது அவனை விடுகிற
தில்லை. ஜீவனுடைய ஸ்வரூபம் ஸ்வயம் பிரகாசம். அதாவது
வேறொன்றின் உதவியில்லாமல் தன்னைக்காட்டும் தன்மையுள்ளது.
உலகம் பொய்யன்று. உண்மையிலே இருக்கிறது. பௌத்தன்
சொன்னபடி ஒரேக்ஷணம் இருப்பதன்று. அது அநேக உருவங்
களையும் அநேகம் பெயர்களையுமுடையதாயிருக்கிறது. ஒரு கால
த்தில் இந்த உருவங்களும் பெயர்களும் இல்லாமல் மிகவும் ஸூ
க்ஷ்மமாய் தைவத்துடன் சேர்ந்திருந்தது. அப்போது இது தைவ
ம், இது பிரகிருதி என்றுகூட பிரிக்கமுடியாத படி இருந்தது.
ஆகையால் தைவம் ஒன்றே இருந்தது என்று வேதம் சொல்லு
கிறது. இப்படி ஒன்றாயிருந்த தைவமானது பல உருவங்களும்
பல பெயர்களும் உள்ளதாக ஆகவேண்டுமென்று எண்ணி, இந்த
உலகமாக ஆயிற்று. ஒன்றாயிருக்கிற காலத்திலும் உலகமான பிற்
பாடும் பிரகிருதியும் ஜீவன்களும் தைவத்தோடே சேர்ந்தேயிருக்
கின்றன. தைவம் ஆத்மாவாகையால், இவைகளை விட்டு ஒருக்கா
லும் பிரிகிறதேயில்லை. அது பிரிந்தால் இவைகள் வஸ்துக்கள்
அல்ல. அவைகள் தைவத்துக்கு உடம்பு. தைவம் அவைகளுக்கு

ஆத்மா. பிரகிருதியும் ஜீவன்களுமாகிய உடம்போடு கூடின தைவம் நாம் பார்க்கிற உலகமாக ஆயிற்று. தைவமே உபாதான காரணமும் நிமித்த காரணமும். ஆகையால் நாம் முதலில் பார்த்தபடி தைவமும் ஜீவன்களும் பிரகிருதியும் வெவ்வேறு தத்வங்கள்.

20. வேதத்தை ஒப்புக்கொள்ளாத மதக்காரர்கள் சேர்ந்து சில ஆக்ஷேபங்களைச் சொல்லுகிறார்கள். அவைகளாவன—

(1) வேதம் எப்படிப் பிரமாணமாக ஆகலாம். அது ஒருவனால் செய்யப்பட்டிருக்க வேண்டு மல்லவா? ஒருவன்—தான் ஒரு ஸங்கதியை உள்ளபடி பார்த்து, மோசம் பண்ணவேணும் என்கிற எண்ண மில்லாமல், பார்த்தபடியே சொன்னால் தானே, அவனை நம்பலாம். வேதத்தைச் செய்தவன் இப்படியிருந்தான் என்று சொல்ல முடியுமா? இதற்குப் பதில்—வேதம் ஒருவனாலும் செய்யப்படவில்லை. ஆகையால் சொன்னவனாலுண்டான தோஷம் வேதத்துக்கு கிடையாது. அது எப்போதுமிருந்து கொண்டிருக்கிறது.

(2) வேதம் எப்போது மிருக்கிறதென்று சொல்லலாமா? வேதம் என்பது சொல்லாயிற்றே. சொல் சொன்னவுடன் போய் விடுகிறதே. இதற்குப் பதில்—வேதத்தில் என்ன எழுத்துக்கள் இருக்கின்றனவோ, எந்த வரிசையாயும் எந்த ஸ்வரத்துடனும் இப்போது சொல்லுகிறார்களோ, இந்த மாதிரியே அந்த எழுத்துக்களும், அந்த வரிசையும் அந்த ஸ்வரங்களும் எப்போதும் சொல்லப்படுகின்றன. ஒரேமாதிரியாயிருப்பதைப் பற்றி நித்யம் என்று சொல்லுகிறது.

(3) வேதத்தில் சில மந்திரங்களை இந்த ருஷி பண்ணினார். வேறு மந்திரங்களை வேறு ருஷிகள் செய்தார்கள் என்று சொல்லியிருக்கிறதே. வேதம் எப்படி நித்தியமாயிருக்கும். பதில்—வேதம் நித்தியம் தான். அதில் அடங்கிய மந்திரங்களும் நித்தியங்கள் தான். அவைகளை ஒருருஷியும் பண்ணவில்லை. மறைந்துபோன மந்திரங்களை அந்தருஷிகள் யோகத்தாலே பார்த்து, அவைகளைப் பிறர்களுக்குச் சொல்லிக் கொடுத்தார்கள். ஆகையாலே அந்த

மந்திரங்களுக்கு அவர்களை ருஷிகள் என்று சொல்லுகிறது. ருஷி என்கிற சொல்லுக்கு "பார்த்தவர்" என்று பொருள்.

(4) தைவம் உலகத்துக்கு உபாதான காரணமென்று சொன்னீரே. சட்டிப் பானைகளுக்கு உபாதான காரணமான மண்கட்டி மாறுதலை யடைந்து, வேறு உருவங்களையும் பெயர்களையும் அடைந்து விடுகிறதே. அப்படியே தைவமும் மாறுதலை யடைந்தால், அதை ஸத்தியம் என்று எப்படிச் சொல்லக் கூடும். ஸத்தியம் என்றால், ஸ்வரூபத்திலாவது ஸ்வபாவத்திலாவது மாறுதலில்லாமல் ஒரே மாதிரியாக இருப்பதல்லவா? பதில்—தைவம் மண்கட்டியைப் போல் மாறுதலை அடைகிறதில்லை. நம்முடைய உடம்புகள் வளரும்போதும், இளைக்கும்போதும் மாறுதல்கள் உடம்பிலே தான் உண்டாகின்றன. இவைகள் உடம்புக்குள் இருக்கும் ஆத்மாவுக்கு இல்லை. அப்படியே தைவத்துக்கு உடம்பாயிருந்த பிரகிருதியானது ஒன்றாயிருந்து பல உருவமாக மாறுதலையடைந்தாலும், அதற்குள்ளே ஆத்மாவாக இருக்கும் தைவத்துக்கு ஒரு வித மாறுதலும் கிடையாது.

(5) தைவம் உபாதான காரணமாயிருந்தால், முழுவதும் செலவழிந்து போய்விட்டதா? ஒரு பாகம் செலவழிந்து ஒரு பாகம் பாக்கி இருக்கிறதா? முழுவதும் செலவழிந்துபோனால் தைவமே யில்லை. ஒரு பாகம் மீதியிருந்தால், தைவத்துக்கு அவயவங்கள் இல்லை யென்பது விரோதிக்கும். பதில்—கண்ணால் பார்க்கமுடியாத ஸங்கதிகளை வேதத்தைக் கொண்டே அறியவேண்டும். அது எப்படிச் சொல்லுகிறதோ, அதையே ஒப்புக் கொள்ள வேண்டும். அந்த விஷயங்களில் யுக்தியைக் கொண்டு இது கூடும், இது கூடாதென்று சொல்லக்கூடாது. மண்கட்டி அழிந்து சட்டியும் பானையும் ஆவதைப்பார்த்து நீ இந்த ஆக்ஷேபம் செய்கிறாய். மண்கட்டி ஒரு ஜாதி. தைவம் வேறு ஜாதி. அதனுடைய ஸ்வபாவம் தைவத்துக்கு எப்படி வரும்? சுடுவது நெருப்புக்கு ஸ்வபாவம். இதைக்கொண்டு ஜலம் ஏன் சுடவில்லை என்று கேட்கலாமோ.

(6) தைவம் உலகமாக ஆகிறதென்று சொன்னீரே. எத ற்காக இப்படி ஆகிறது? குயவன் வயிற்றுப் பிழைப்புக்காகப் பாடு படுகிறான். தைவத்துக்கு வேண்டியதெல்லாமிருக்கிறதே. பதில்— வேண்டியதெல்லாமிருக்கிற மஹாராஜா ஸாயங்கால வேளையில் பந்தாடப் போகிறானே. எந்தப் பிரயோஜனத்துக்காக இது செய்கிறான். அது போல. வாஸ்தவத்தில் உலகத்தையுண்டு பண்ணுவது அளவில்லாத தயையின் வேலை. பிரளயகாலத்தில் அறிவில்லாத வஸ்துக்களைப்போல் இருக்கிற ஜீவன்களைப் பார்த்து, தைவமிரக்கப்பட்டு, உலகத்தை யுண்டுபண்ணி, அவர் களுக்கு உடம்புகளையும் இந்திரியங்களையும் கொடுத்து, சாஸ் திரத்தைப் பலபேர்களைக் கொண்டு சொல்லி வித்து, தன்னைத்தி யானம் செய்தாவது, அல்லது தன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கொண் டாவது தன்னிடம் வரவேணும் என்று இப்படிச் செய்கிறது.

21. 1. இந்த ஸமயத்தில் நாலு அத்வைதிகள் வந்து ஆக்ஷே பிக்கிறார்கள். அவர்களில் ஒருவர் சொல்லுகிறார்—உன்னைப்போல நானும் வேதத்தை ஒப்புக்கொள்ளுகிறவன். ஸாங்கியனைப்போ லன்று. "இந்த உலகமெல்லாம் பிரும்மம்" என்று வேதம் சொல் லுகிறது. அதின் பொருள்—பிரும்மம் ஒன்றுதான் இருக்கிறது, வேறொன்று கிடையாது என்று. இப்படி யிருக்க, நீ மூன்று தத்வங்கள் இருப்பதாக எப்படிச் சொல்லலாம்—என்று. பதில்— வேதத்தில் "அநுபவிக்கிறவன், அநுபவிக்கத்தகுந்தது, இவை களை ஏவுகிறவன்—என்று மூன்று வஸ்துக்கள் இருக்கின்றன. அநுபவிக்கிறவன் ஏவுகிறவனை த்யானம் செய்தால், ஏவுகிறவனான தைவம் பிரீதியடைந்து, இவனுடைய ஸம்ஸாரத்தைப் போக்கு

---

1. பெரியவர்கள் சொன்னவைகளில் குற்றம் கண்டுபிடிக்கிறாயே. நீ யார்? என்று ஒருவன் கேட்கலாம். இந்தக்குற்றங்களை நானாகச் சொல்லவில்லை. வேறொரு பெரியவர் புத்தகத்தில் எழுதியதையே இங்கே எழுதுகிறேன். ஒரு மதத்தில் குற்றமிருப்பதாக இன்னொரு மதக்காரர் எழுதினால், உண்மையைக்கண்டுபிடிக்க வேணுமென்று ஆசைப்படுகிறவர்கள், அதை நன்றாய் கவனிக்கவேணும். தூஷித்ததாக நினைக்கக்கூடாது. நம்முடையதென்று ஒருமதமும் கிடையாது.

கிறது " என்று இன்னொரு வாக்கியமிருக்கிறதே. அதை நீங்கள் மறந்தீர்களா—என்று. அவர் சொல்லுகிறார்—நாங்கள் சொல்கிற வாக்கியத்தாலே உன்னுடைய வாக்கியம் ரத்தாகி விட்டது. வேதம் பிரும்மத்துக்கும் உலகத்துக்கும் பேதம் கிடையாதென்று சொல்ல வந்தது. பேதம் என்பதைக் காட்டித் தானே, அதை இல்லை யென்று சொல்லவேணும். உன் வாக்கியம் பிரும்மம் வேறு, உலகம் வேறு என்று சொல்லுகிறது. என் வாக்கியம் அந்த பேதம் இல்லை என்று சொல்லுகிறது. ஆகையாலே உன் வாக்கியம் ரத்தாகிபோய் விட்டது—என்று. இது பிசகு—பேதம் என்பது வேறு பிரமாணத்தாலே ஏற்பட்டிருந்தால், அதை எடுத்துச் சொல்லி, அந்த பேதமில்லை யென்று வேதம் சொல்லலாம். வேறு பிரமாணத்தாலே தைவம் என்று ஒன்றிருக்கிறது. அது வேறு, உலகம் வேறு என்று தெரிய வில்லையே. வேதம் தானே தைவமென்று ஒன்றிருக்கிறது. அது வேறு, உலகம் வேறு என்று சொல்லுகிறது. இப்படித் தெரியாத ஸங்கதியைச் சொல்லித் தெரியப்படுத்தி, அந்த ஸங்கதியை பொய்யென்று சொன்னால், வேதமானது பைத்தியம் பிடித்தவன் பேச்சுப்போலாகுமே. ஆகையால் என் வாக்கியம் ரத்தாகி விடவில்லை. என் வாக்கியத்திற்கும் உங்கள் வாக்கியத்திற்கும் பொருத்தமாக அர்த்தம் சொல்ல வேண்டியது.

22. இது நிற்க. ஒரே தத்வமிருந்தால், பல விதமான பேதங்களுடைய உலகம் எப்படித் தோன்றுகிறது? இதற்கு நீங்கள் காரணம் சொல்லவேண்டும். அவர் சொல்லுகிறார்—பிரும்மத்தை அவித்யை சூழ்ந்து கொண்டிருக்கிறது. அதனால் அது தன்னை அறியவில்லை. இருட்டிலிருப்பவன் தன்னைக் கண்ணால் பார்க்காததுபோல். அதனால் தன்னைக் காட்டிலும் வேறான உலகமிருப்பதாக மயங்குகிறது. உண்மை தெரிந்தால் உலகம் போய்விடும்—என்று. இதுவும் பிசகு. பிரும்மத்திற்கு எல்லாம் தெரியும் என்றும், இந்த அறிவுஇயற்கையாகவே இருக்கிறதென்றும் வேதம் சொல்லுகிறதே. ஆகையாலே அது தன்னை எப்போதும் உள்ளபடி பார்த்துக் கொண்டிருக்கிறதே. அதற்கு அவித்யை எப்படி வரும். அவித்யை என்றால் அறிவில்லாமை தானே.

அவர் பதில் சொல்லுகிறார்—பிரும்மத்துக்கு அறிவு என்பது கிடையாது, ஏனென்றால், வேதமே அது நிர்குணம் என்று சொல்லுகிறது. நிர்குணம் என்றால், ஒரு குணமுமில்லாதது என்று பொருள்—என்று. இதுவும் பிசகு—சில வாக்கியங்களில் பிரும்மத்துக்கு அநேக நல்ல குணங்கள் இருப்பதாகச் சொல்லப்படுகின்றன—அறிவு, வலிமை (பலம்), எல்லாரையும் அடக்கி ஆளுவது, நினைத்த வேலை முடிக்கும் தன்மை இவை முதலியவைகள். இதனால் குணமில்லை என்கிற சொல்லுக்கு கெட்ட குணமில்லை என்று தான் பொருள். ஆகையால் என் கேள்விக்குப் பதில் வரவில்லை.

23. மேலும், பிரும்மம் ஸ்வயம் பிரகாசம் என்று நீங்கள் சொல்லுகிறீர்கள். அதாவது—வேறொன்றின் உதவியில்லாமல் தானே தோன்றுகிறது—என்று. தானே தோன்றுகிற வஸ்துவுக்குத் தன்னை அறியாமை எப்படி? ஒருவன் முத்துச்சிப்பியைப் பார்க்கிறான். அதன் உருப்படி மாத்திரம் தெரிகிறது. சிப்பி என்பது தோன்றவில்லை. பளபளப்பாயிருப்பதைக் கொண்டு அதை வெள்ளியென்று எண்ணுகிறான். அப்படியே பிரும்மத்துக்குக்குணமிருந்தால், அதன் ஸ்வரூபம் மாத்திரம் தெரிகிறது. அதன் குணத்தை அவித்யை மறைக்கிறது என்று சொல்லலாம். நீங்களோ பிரும்மத்துக்குக் குணமில்லையென்று சொல்லுகிறீர்கள். அது தோன்றினால், தோன்றாத பாகமில்லை.

24. மேலும், அவித்யை யென்பது அறிவினாலே போகும் என்று சொல்லுகிறீர்கள். நீங்கள் சொல்லுகிற பிரும்மம் அறிவு தானே. அதினால் அவித்யை ஏன் போகவில்லை? அவர் பதில் சொல்லுகிறார்—பிரும்மம் என்கிற அறிவு ஸ்வரூபமான அறிவு. அவித்யையைப்போக்கும் அறிவு "பிரும்மம் ஸ்வயம் பிரகாசம்" என்கிற வாக்கியத்தால் வரும் அறிவு. பதில்—ஸ்வரூபமான அறிவினால் எந்த ஸங்கதி தெரிகிறதோ, அதைக்காட்டிலும் என்ன அதிக ஸங்கதி வாக்கியத்தால் தெரிகிறது. ஒன்றும் அதிகமாய் தோன்றவில்லையே. ஆகையாலே ஸ்வரூபமான அறிவினாலே அவித்யை போகாவிட்டால், வாக்கியத்தினால் வரும் அறிவினாலும் போகாது. இது தவிர, பிரும்மம் ஸ்வயம் பிரகாசமாயிருப்பதாலே, ஒரு அறிவுக்கும் விஷயமன்று. அறிவுக்கு விஷயமாயிருப்

பது ஸ்வயம் பிரகாசமாகாது என்று உங்களுடைய மதம். வாக்யத்தினால் வரும் அறிவுக்கு பிரும்மம் விஷயம் என்று சொல்வது உங்கள் மதத்துக்கு விரோதம்.

25. அவித்யையானது பிரும்மத்தைத் தன்னை அறியாதபடி செய்கிறதென்று சொல்லுகிறீர்கள். பிரும்மம் பிரகாசமுள்ளது என்று சொன்னால், அவித்யையினால் ப்ரகாசம் போனாலும், பிரும்மம் இருக்கும். பிரும்மமே பிரகாசமானால் அவித்யையினால் பிரகாசம் போகும்போது பிரும்மமே போய்விடுமே. அவித்யைப் பிரகாசத்தைப்போக்குவது என்பது என்ன? பிரகாசத்தை உண்டாகாதபடி பண்ணுகிறதா? அல்லது பிரகாசத்தை அழிப்பதா? பிரும்மமான பிரகாசம் உண்டானதன்று என்று சொல்லுகிறபடியால், அவித்யை அதை அழித்தது என்று தான் சொல்லவேணும். அப்போது பிரும்மம் அழிந்ததென்று முடியும்.

26. அவித்யை என்று சொல்லுகிறீர்களே. அது உண்மையா? அல்லது பொய்யா? உண்மையானால் பிரும்மம் உண்மையாயிருக்கிற வஸ்து. அவித்யையும் உண்மையாயிருக்கிற வஸ்து. அப்போது இரண்டு உண்மையான வஸ்துக்கள் ஏற்படும். உண்மையான வஸ்து ஒன்றுதானென்று உங்களுடைய மதம். அது பொய்யாயிருந்தால், பொய்யான உலகம்உண்டாவதற்காகத்தானே அவித்யையை ஏற்படுத்தினீர்கள். பொய்யான அவித்யை உண்டாவதற்கு இன்னொரு அவித்யை வேணுமே. அதுவும் பொய்யாயிருந்தால், அதுக்கு ஒரு அவித்யை வேண்டுமே. இதற்கு எங்கு முடிவு? ஒருவன் முத்துச்சிப்பியை வெள்ளி யென்று எண்ணினான். பிறகு கிட்டப்போய் பார்த்தான். சிப்பி என்று தெரிந்துகொண்டான். ஆகையால் அறிவுள்ளவனுக்கன்றோ தப்பு எண்ணம் உண்டாவதும் அது போவதும். அறிவில்லாதபிரும்மத்துக்கு தப்பு எண்ணமுண்டாவதும் அது போவதும் எப்படி? இந்த ஸங்கதிகளை யாரும் நன்றாய் கவனிக்க வேண்டும்.

இங்கே சொன்ன குற்றங்களுக்கு ஸமாதானமாக அத்வைதிகள் சொல்லுகிறார்கள்—நாங்களும் மூன்று தத்வங்களையும் உன்னைப்போல் வியவஹார தசையில் ஒப்புக்கொள்ளுகிறோம்—என்று. இதற்குப் பதில்—வியவஹார தசை என்றால் என்ன? வியவஹார

ர்ம் என்றால் பேச்சு. வார்த்தைக்குச் சொன்னேனே யொழிய உண்மையில் இல்லையென்று சொன்னதாக ஆயிற்று. அதனால் என்ன லாபம்? ஒருவனுக்குப் பதினாயிரம் ரூபாய் கொடுப்பதாகச் சொல்லி, அவன் ஸந்தோஷப்பட்டு, கொடு என்று கேட்கும் ஸமயத்தில், வேடிக்கைக்குச் சொன்னேன் என்று சொன்னால், அவனுக்கு எவ்வளவு ஸங்கடத்தை யுண்டு பண்ணும். அதுபோலிருக்கிறது.

27. இரண்டாவது அத்வைதி சொல்லுகிறார்—பிரும்மத்துக்கு அவித்யையிருக்கிறது என்று சொல்வது பெரிய குற்றம். அவித்யை ஜீவனுக்குத்தானிருக்கிறது. எப்படி என்றால், கண்ணாடி, ஜலம், மெருகு போட்ட வெள்ளி இவைகளில் முகத்தின் பிரதிபிம்பங்கள் தோன்றுகின்றன. முகம் ஒன்றாயும் அழுக்கில்லாமலுமிருந்தாலும், அவைகளுக்குத் தகுந்தபடி பிரதிபிம்பங்கள் சின்னதாயும், பெரிதாயும், அழுக்குள்ளதாயும், அழுக்கில்லாததாயும் பல விதமாய் தோன்றுகின்றன. அதுபோல பிரும்மம் ஒன்றாயும் துக்கம் முதலான குற்றமில்லாமலிருந்தாலும், அனேக அவித்யைகளினாலே ஒரே பிரும்மம் அனேகமாகத் தோன்றுகிறது. அப்படித் தோன்றியவைகள் ஜீவன்கள். அவித்யைகளுக்குத தகுந்தபடி, ஒன்று ஸுகமுள்ளதாகவும், ஒன்று துக்கமுள்ளதாகவும் காணப்படுகின்றன. பிரும்மமோ, ஒரேமாதிரியாக ஸுகமும் துக்கமுமில்லாமலிருக்கிறது—என்று அவரை நாம் கேட்போம்—யாரிடத்தில் அவித்யை இருக்கிறது? அது பிரும்மத்தினிடமிருக்க இல்லை யென்று நீங்களே சொல்லுகிறீர்கள். அது ஜீவனிடத்திலுமிருக்கக்கூடாது. ஏனென்றால், அவித்யையால் ஜீவன், ஜீவனால் அவித்யை என்று, ஒவ்வொன்று மற்றொன்றைப் பொருத்திருக்கிறது. ஒரு பிரும்மசாரிக்குப் பயித்தியம் பிடித்திருக்கிறது. கல்வியாணமானால் பயித்தியம் போகும். பயித்தியம்போனால் கல்வியாணமாகும் என்று சொல்வதுபோல. அவர் பதில் சொல்லுகிறார்—பீஜாங்குரநியாயம் கேட்டதுண்டா ? முளை விதையினால். விதை முளையால். அதாவது—முளைத்து மரமானால் விதையுண்டாகும். அதுபோல அவித்யையால் ஜீவன், ஜீவனால் அவித்யை—என்று. இதுவும் பிசகு—பீஜ—அங்குரநியாயம் (விதை—முளை) உங்களுக்கு ஒட்

டாது. ஒரு மரத்தின் விதையிலிருந்து ஒருமுளை யுண்டாகிறது அது மரமாகி அதிலிருந்து வேறு விதை உண்டாகிறது. அதிலி ருந்து இன்னொரு முளை உண்டாகிறது. இங்கே எந்த அவித்யை யினால் எந்த ஜீவனுண்டாகிறதோ, அந்த ஜீவனிடத்தில் அந்த அவித்யையிருக்கிறது என்று நீங்கள் சொல்ல வேணும். அது ஒட்டாது. அவர் சொல்லுகிறார்—அவித்யையும் ஜீவனும் பீஜாங்குரநியாயம் போலவே ஒன்றின்பின் ஒன்று வருகிறதென்று ஒப்புக்கொள்ளுகிறேன். ஒரு ஜீவனிடமிருந்து ஒரு அவித்யை வருகிறது. அதிலிருந்து வேறுஜீவன், அதிலிருந்து வேறு அவித் யை—என்று. இதுவும் பிசகு—ஒரு ஜீவத்தன்மைபோய் வேறொரு ஜீவனுண்டாகிறான் என்று சொன்னால், ஜீவன்களுக்கு அழிவு ஏற் படும். ஜீவனை நித்தியமென்று சொல்லுகிற வேதத்திற்கு விரோ தம். உம்முடைய மதத்துக்கும் விரோதம். மோக்ஷம் வரையில் ஜீவன் நிலையாயிருக்கிறான் என்று சொல்லுகிறீர்களே.

28. மூன்றாவது அத்வைதி பாஸ்கரன் சொல்வதாவது— ஒரே தத்வமிருக்கிறதென்று சொல்வது பிசகு. உண்மையில் அ னேக அந்தக்கரணங்கள் இருக்கின்றன. ஆனால் பிரும்மமும் ஜீவன்களுமொன்று. அதாவது—பிரும்மமிருக்கிறது. ஜீவன்க ளில்லை. பிரும்மத்தினிடத்தில் அந்தக்கரணங்கள் சேருவதால், அவைகள் ஜீவன்களாகின்றன அந்தக்கரணங்கள் சேராத இடம் பிரும்மமாயிருக்கிறது. உதாரணம்—ஒரே ஆகாசம் எங்கும் நிறை ந்திருக்கிறது. அப்படியிருந்தபோதிலும், அந்த உள், இந்த உள், வாசல் என்று சொல்லுகிறோம். சுவர்களால் தடுக்கப்பட்ட ஆகா சத்து (இடவெளி)க்கு உள்ளு என்று பெயர். சுவர்கள் வேறாயிருப் பதால், உள்ளுக்கள் வேறு. சுவர்களால் தடுக்கப்படாத இட வெளியை பெரிய ஆகாசம் என்று சொல்லுகிறது. அதுபோல ஒரு அந்தக்கரணத்தோடு சேர்ந்த பிரும்மம் வேறு. இன்னொரு அந்தக்கரணத்துடன் சேர்ந்த பிரும்மம் வேறு. ஒரு அந்தக்கர ணத்துடனும் சேராத பிரும்மம் வேறு. இதைக்கொண்டு தான், வேதம் "பிரும்மம் வேறு, ஜீவன்கள் வேறு, அவர்களுக்குள்ளும் ஒவ்வொருவர் வெவ்வேறு என்று" சொல்லுகிறது. ஜீவத்தன்மை வந்த பிற்பாடு ஜீவனை பிரும்மம் கர்மம் செய்கிறது. மறுபடியும்

அந்தக்கரணத்துடன் சேர்ந்து ஜீவத்தன்மையை யடைந்து கர்மம் செய்கிறது ஜீவத்தன்மையும் காமமும் ஆறுபோல ஒன்றின்பின் ஒன்றாக பெருகிக் கொண்டு வருகிறது இதைக்கொண்டுதான் வேதம் "ஜீவன்களும் அவர்கள் காமங்களும் எப்போதுமிருக்கின்றன" என்று சொல்லுகிறது அந்தக்கரணம் அணுவாயிருப்பதாலே அதனுடன் சேர்ந்த பிருமமாகிற ஜீவஸ்வரூபமும் அணுவாயிருக்கிறது அந்தக்கரணத்துடன் சேர்க்கைபோனால், அந்த ஜீவத்தன்மை போய்விடுகிறது அதாவது மோக்ஷம் வருகிறது—என்று இந்த மதமும் ஸரியன்று—(1) ஜீவத்தன்மை பிருமத்துக்குத்தானே வருகிறது அது வரும்போது அதனுலுண்டாகும் அறிவின் குறைவும் துக்கங்களும் பிருமத்துக்குத்தான் வருகிறது. துக்கங்களைப் பொய் என்று சொல்லக்கூடாது அந்தக்கரணங்கள் உண்மையிலிருக்கின்றன அவைகளுடன் சேர்க்கைகளுமுண்மை அவைகளால் வருகிற அறிவுக்குறைவும் துக்கங்களும் உண்மை இவைகள் எல்லாம் பிருமத்துக்குத்தான் வருகிறது அப்போது பிருமத்துக்கு பூர்ணமான அறிவு இருக்கிறது என்றும், ஒருவித துக்கம் முதலான குற்றமில்லை என்றும் வேதம் சொல்வதோடு விரோதிக்கும் (2) மேலும், ஒரே பிருமத்தோடு அனேக அந்தக்கரணங்கள் சேருவதால், எல்லா ஜீவத்தன்மைகளும் ஒரே பிருமத்துக்குத்தானே வருகின்றன அப்போது ஒவ்வொரு ஜீவனும் எல்லா ஜீவன்களையும் 'நான்' என்று ஏன் அறியவில்லை ஒரே பிருமமதானே எல்லா ஜீவன்களும் அவர் சொல்லுகிறார்—பிருமத்துக்கு அனேக இடங்களிருக்கின்றன. ஒவ்வொரு இடத்தை ஒவ்வொரு அந்தக்கரணம் தொடுகிறது. அந்தந்த அந்தக்கரணங்களுக்கு அதது தொட்ட இடம்தான் தெரியும் மற்றது தெரியாது ஆகையால் ஒரு ஜீவன் மற்ற ஜீவனை அறியவேண்டியதில்லை—என்று இப்படி பிருமத்தினிடம் வெவ்வேறு இடங்களை ஒப்புக்கொண்டால், பிருமத்துக்கு அவயவங்கள் இல்லையென்று சொல்லுகிற வேதவாக்கியத்துடன் விரோதிக்கும் (3) பிருமத்துக்கு அவயவங்கள் இல்லாவிட்டால், அந்தக்கரணங்கள் பிருமத்துடன் சேருவதானால், முழுவதும் சேரவேணும், சேராத இடமேயில்லை. சேராத இடமே பிருமம் என்று

சொல்லுகிறீர்கள். சேராத இடமான பிரும்மம் ஏது. எல்லா அந்தக்கரணங்களும் ஒரே வஸ்துவைத்தொடுவதால், ஒரே ஜீவன் தான் இருக்கவேண்டியது. (4) மேலும், அந்தக்கரணத்துடன் சேர்க்கை போனால், ஜீவத் தன்மை போய் விடுகிறது. அதாவது மோக்ஷம் வருகிறது. தைவம் எங்கும் நிறைந்திருப்பதால், அந்தக்கரணங்கள் அதை எங்கேயாவது தொட்டுக் கொண்டே இருக்கவேணும். தொட்டவிடம் ஜீவன். அப்போது பந்தம் (கட்டு) வருகிறது. அந்தக்கரணம் அதை விட்டால், மோக்ஷம் வருகிறது ஆகையால் பந்தமும் மோக்ஷமும் அடிக்கடி வந்து கொண்டே இருக்கவேணும்.

29. கடைசி அத்வைதி யாதவப் பிரகாசன். அவர் சொல்லுகிறார்—ஜீவன்களைப் பொய் என்று சொல்வது பிசகு. தைவமும், ஜீவன்களும், பிரகிருதியும் எல்லாம் உண்மையில் இருக்கின்றன. இவைகள் ஒன்றுக் கொன்று வேறு தான். ஆனால் இவைகள் எல்லாம் ஸத் என்கிற ஒரே வஸ்துவிலிருந்து உண்டானவைகள். உதாரணம்—ஸமுத்திரத்தில் காற்றில்லாமல் போனால் ஜலம் அசங்காமல் இருக்கிறது. இதைப்போல ஸத் என்பது. காற்று அடித்தால், அதே ஜலமானது அலைகளாகவும், நுரையாகவும், கொப்பளாங்களாகவும் ஆகிறது. இவைகள் போல் தைவமும், ஜீவன்களும், பிரகிருதியும். ஆகையால் வேதவாக்கியங்களுக்கு ஒன்றுக்கு ஒன்று விரோதமில்லை—என்று. இந்த மதமும் வேதத்துக்கு விரோதமானது. வேதம்—தைவமும் ஜீவன்களும் உண்டாகிறதில்லை என்று சொல்லுகிறது. மேலும், வெவ்வேறாக இருக்கிற இந்த மூன்று தத்வங்களும் பிரளயகாலத்தில் ஸத்தாக ஆய்விடுமாகையாலே, மோக்ஷம் என்பது தானே வந்து விடும். ஜீவன் அதற்காகப் பாடுபட வேண்டியதில்லை. ஆகையால் ஜீவன் தைவத்தைத் தியானம் பண்ணவேண்டும் என்கிற வேதவாக்கியங்களுக்குப் பிரயோஜனமில்லாமல் போய் விடும்.

30. நாலு அத்வைதிகளும் சேர்ந்து கேட்கிறார்கள்—எங்களுடைய மதத்தைத் தூஷித்தாயே. நான் சொன்ன வேதவாக்கியத்துக்கும் நீசொன்ன வேதவாக்கியத்துக்கும் பொருத்தமாக நீதான் அர்த்தம் சொல்—என்று. பதில் சொல்லுகிறேன். உண்மையில்தை

வழும், ஜீவன்களும் வெவ்வேறுதான். இந்த ஸங்கதியைப் பேதச் சுருதிகள் சொல்லுகின்றன. தைவமானது ஜீவன்களையும், பிரகிருதியையும்விட்டுப்பிரியாமையாலே,வேதம்தைவத்தையும்,மற்றவைகளையும்ஒன்ருகச் சொல்லுகிறது. உதாரணம்—ஒருவனை எந்த ஊர் என்றுகேட்டால், நான் ஸ்ரீரங்கம் என்று சொல்லுகிறான். அவன் ஸ்ரீரங்கமோ. அவன் ஸ்ரீரங்கத்திலிருப்பதாலே தன்னை ஸ்ரீரங்கமாகச் சொல்லுகிருன். ஸ்ரீரங்கம் என்பதற்கு ஸ்ரீரங்கததிலிருப்பவன் என்றுதான் பொருள். ஒருவனைப் பார்த்து இவன் கறுப்பு என்ருல், இவன் என்பது ஜீவன். கறுப்பாயிருப்பது உடம்பு. இரண்டும் வேறு. ஆனபோதிலும் ஜீவன் உடம்பில் இருப்பதால், அவனையும் உடம்பையும் ஒன்ருகச் சொல்லுகிறது. இது உலகவழக்கம். அப்படியே வேதமும் தைவம் எல்லாவஸ்துக்களிலுமிருப்பதாலே, அதையும் அந்த வஸ்துக்களையும் ஒன்ருகச சொல்லுகிறது. ஆகையால்"இதெல்லாம் பிருமம்" என்கிற வாக்கியத்திற்கு இவைகள் எல்லாவற்றிலும் தைவமிருக்கிறது என்று பொருள். மனிதன் என்கிற சொல்லிற்கு மனித உடம்பிலிருக்கிற ஜீவன் என்று பொருள். அது போல எல்லாச் சொற்களும் எல்லா வஸ்துக்களிலுமிருக்கிற தைவத்தையே சொல்லுகின்றன. அதுதான் அவைகளுக்கு முக்கியமான பொருள்.

31. இப்படி மூன்று தத்வங்கள் வெவ்வேருயிருப்பதை ஸ்ரீ கீதையும் சொல்லுகிறது. ஏழாவது அத்தியாயத்தில் பகவான் தன்னுடைய ஸ்வரூபத்தை அர்ஜுனனுக்கு உபதேசம் பண்ணும்போது, இந்த உலகத்திலிருக்கிற வஸ்துக்களை உண்டு பண்ணின பிரகிருதியும், அந்த வஸ்துக்களைத் தூக்குகிற ஜீவன்களும் தன்னுடைய ஸொத்து என்று சொல்லுகிருர். பிரகிருதியிஞலுண்டான வஸ்துக்களை ஜீவன்கள் தூக்குகிருர்களென்று சொன்னதால், பிரகிருதி வேறு, ஜீவன்கள் வேறு என்றும், அவைகள் பகவானுக்கு ஸொத்து என்பதால், அவைகள் வேறு, பகவான் வேறு என்றும் ஏற்படுகிறது.

ஜீவன்களைக் காட்டிலும் வேருக தைவமென்று ஒன்றிருந்தால்தான், அவர்களுக்குஸுகமுண்டாகும். தைவம்—தான் சொன்னபடி நடக்கிறவனுக்கு இன்பமான பலனைக் கொடுக்கும். சொன்ன

படி செய்யாதவனை தொந்தரவுகளைக்காட்டி, நல்ல வழிக்குத் திருப்பிக் கொண்டு வரும். உலகத்திலும் இப்படியே பார்க்கிறோம். ஒரு தேசத்துக்கு ராஜா இல்லாவிட்டால், அதிலிருக்கும் ஜனங்களுக்குக் கொஞ்சமேனும் ஸுகம் கிடைக்காது. ராஜா இருந்தால், அவன் சட்டப்படி நடக்கிறவனுக்கு வேண்டியதைக் கொடுப்பன். சட்டபபடி நடக்காதவனைத் தண்டித்து நல்லவழியில் திருப்புவன். தைவம் எந்த ஸங்கதியை எப்படிச செய்கிறதோ, அது உண்மையென்று காட்டுவதற்காகவே, அதே மாதிரி ஸங்கதிகளை இந்த உலகத்திலும் நடத்தி வைக்கிறது. 1.

32. இந்த ஸங்கதியை இவ்வளவு விஸ்தாரமாய் சொல்லுவதற்குக் காரணம் என்னவென்றால், ஜனங்களுக்கு இருக்கும் இரண்டு தப்பு எண்ணங்கள் மனதில் நன்றாய் பட்டு, அவைகளைப் போக்குவதற்காக இவ்வளவு பாடு பட்டது. அந்தத்தப்பு எண்ணங்களாவன—(1) உடம்புதான் ஜீவன். அதைக் காட்டிலும் வேறன்று. (2)உடம்பைக் காட்டிலும் வேறாக ஜீவன் என்று ஒரு வஸ்து இருந்தாலும், அது ஒருவருக்கும் உட்பட்டதன்று. அது தனக்காகவே இருக்கிறது. அதற்கு யஜமானனும் தைவமென்று ஒன்று கிடையாது—என்று.அந்த இரண்டு தப்புஎண்ணங்களும் போகாவிட்டால், ஒருவனுக்கு நிலையான, துக்கம் கலப்பில்லாத ஸுகம் கிடைக்காது. அதற்காகத்தான் வேதமும் அதின் அர்த்தத்தைத் தெளிவாகச் சொல்லுகிற ஸ்ரீகீதையும் இந்த ஸங்கதியை அடிக்கடி சொல்லுகிறது. ஸ்ரீபாஷ்யகாரர் மதத்தில்

---

1. இபபடி எந்தவிததததாலும் உயர்நத ஸ்ரீபாஷ்யகாரர் மதத்தை விட்டு விட்டு, எந்த விதத்திலும் இளப்பமான மதங்களில் ஜனஙகளுக்கு அபிமானமுண்டாவதேன் ? அவர்கள் குணங்களையும் தோஷஙகளையும் பார்த்துச் செய்கிறார்களா? மற்றவர்களைப் பற்றிச் சொல்லுவானேன்? அடியேன் ஸ்ரீபாஷ்யம் முதலான கிரந்தஙகளை ஸேவித்த பிறகு, வேறு மதத்தில் அபிமான முள்ளவனாய் கொஞ்சகாலமிருந்து திரிந்தேன். எனது ஆசாரியன்—ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன்—மிகுந்த கவலைப் பட்டு, அடியேனைத் திருப்பினார். அடியேன் பெரிய ஆண்டவன் திருவடிகளை அடைந்தவர்கள் வயிற்றில பிறந்தது என்கிற புண்ணியத்தால் திரும்பினேன். என்னைப் போல இருக்கும் மற்றவர்களை எந்த ஆசாரியர்கள் கவலைப் பட்டுத் திருப்புவார்களோ ?

இது ஸாரமான அர்த்தம். இது நம்முடைய மனதில் நன்றாகப் பதிந்தால், ஸம்ஸாரத்தில் கஷ்டப்பட்டு உழன்று கொண்டிருக்க மாட்டோம்.

33. ஜீவன்களுக்கு அறிவு என்கிற குணமிருப்பதால், ஸுகத்தையே தேடுகிறார்கள். இந்த உலகத்தில் துக்கம் கலப்பில்லாத நிலையான ஸுகம் கிடையாது. ஒருவன் பிள்ளைக் குழந்தையில்லை யென்று வெகு தபஸ்ஸு பண்ணுகிறான். அவன் போகாத கோவிலில்லை. கடைசியில் ஒரு குழந்தை பிறக்கிறது. அவனுக்கு அளவில்லாத ஸந்தோஷ முண்டாகிறது. கொஞ்ச நாளில் குழந்தைக்கு மாந்தம் வந்து, கையையும் காலையும் இழுக்கிறது. அவன் அங்குமிங்கும் ஓடி மருந்தை வாங்கிக் கொண்டு வருகிறான். குழந்தைக்கு என்ன வந்துவிடுமோ என்று நடுங்குகிறான். குழந்தைஇறந்து போய்விடுகிறது. அவனுக்குமூர்ச்சைபோய்,நல்லசோறில்லாமல், தூக்கமில்லாமல் வெகுநாள் அவன் கஷ்டப்படுகிறான். இவன் கொஞ்ச ஸுகத்தை வெகு கஷ்டப்பட்டு அடைகிறான். அளவில்லாத கவலையோடும் பயத்தோடும் அது கலந்திருக்கிறது. அந்த ஸுகமும் அவனிருக்கும் காலத்திலேயே போய் விடுகிறது. இன்னொருவன் கப்பல் யாத்திரைசெய்து பணம் சம்பாதிக்கிறான். அவனுக்குப் பணத்தைப் பார்ப்பதே ஸுகமாயிருக்கிறது. ஆனால் அந்தப் பணத்தாலே அநேகம் பேர்கள் விரோதிகள் ஆகிறார்கள். பெற்ற தாயார் மற்றப் பிள்ளைகளுக்குப் பணத்தைப் பங்கிட்டுக் கொடுக்க வில்லையே யென்று வைகிறாள். பெண்ணும் மாப்பிள்ளையும் சீர் செய்ய வில்லையே என்று கோபித்துக் கொள்ளுகிறார்கள். பந்துக்கள் தங்களுக்குப் பணம் கொடுக்கவில்லையே என்று ஹிம்ஸிக்கிறார்கள். திருடர்கள் எப்போது அமாவாசை வரப்போகிறது. தீவட்டிக் கொள்ளை அடிக்கலாம் என்று காத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்தப் பணக்காரனுடைய ஸுகம் என்ன ஸுகம். இதுபோலவே மற்ற ஸுகங்களுமிருக்கின்றன. ஜனங்கள் ஸுகத்தை மாத்திரம் பார்க்கிறார்களேயல்லாமல், அநுபவிக்கும் துக்கத்தை நினைக்கிறதேயில்லை. ஒருஸ்திரீ பிரஸவிக்கும்போது கஷ்டப் படுகையில், இனிமேல் புருஷனை என்னைத் தொடவொட்டேன் என்று சொல்லுகிறாள். நாலு மாதத்துக்கெல்

ஸீரம் கர்ப்பம் வந்து விடுகிறது. ஸ்வர்க்கம் என்கிற இடத்தில் துக்கம் கலப்பில்லாத ஸுகமிருக்கிறதென்று சொல்லுகிறார்கள். அதையும் அநுபவிக்கும்போது இது முடிந்து போய்விடுமே என்கிற பயம் அத்துடன் கலந்திருக்கிறது.

34. ஆதலால் அறிவுள்ளவன் நிலையான—துக்கம் கலப்பில்லாத ஸுகத்தைத் தேடவேண்டியது. அது எங்கே கிடைக்கும் என்றால், பகவான் ஸ்ரீ கீதையில் 9-வது அத்தியாயத்தில் கடைசியில் சொல்லுகிறார்—"நிலையில்லாமலும், ஸுகமில்லாமலுமிருக்கிற இந்த லோகத்தை அடைந்திருக்கிற நீ என்னைத் தியானம் பண்ணு" "என்னை இடைவிடாமல் பிரீதியுடனே நினை, என்னை மிகவுமுயர்ந்த பிரயோஜநமாக நினைத்து, இப்படி என்னைத்தியானம் பண்ணினால், என்னிடம் வரலாம்," (சுலோகம் 33—34) என்று. இந்த உலகத்தில் துக்கம் கலந்த ஸுகம்தான் இருக்கிறதென்றும், அது நிலையில்லையென்றும் கீழே சொன்னது பகவான் வார்த்தையால் உறுதிப்படுகிறது. இந்த லோகத்திலிருக்கிறவனைத் தன்னிடம் அழைத்துக் கொள்வேன் என்று சொல்வதால், அவர் இருக்குமிடம் நிலையானதாயும், மிகுந்தஸுகமுள்ளதாயும் இருக்க வேண்டியது. இப்படியில்லாவிட்டால், அவரைத்தியானம் பண்ணுகிறவனுக்கு அங்கு போவதனால் என்ன பிரயோஜனம் கிடைக்கும். இவ்விதமான இடம் எங்கே இருக்கிறதென்றால், வைகுண்டமென்கிற லோகத்தில் வைகுண்டமென்கிற பட்டணத்தில் இருக்கிறது. பகவானே அளவில்லாத ஸுகம் என்று பல காரணங்களாலே முதலாவது அத்தியாயம் அவதாரிகையில் சொல்லப்போகிறது. அதைப்பார்க்க. ஆகையால் நமக்கு எல்லாவற்றுக்கும் மேலான பிரயோஜநமானது வைகுண்டத்தில் எழுந்தருளியிருக்கும் பகவானிடம் போவது. இதற்கு வழி பகவானை வேறு நினைவு கலப்பில்லாமல் பிரீதியுடனே தியானம் பண்ணுவது. இதற்குப் பக்தி யோகம் என்று பெயர்.

35. மிகுந்தபாக்கியம் பண்ணினவர்களால் இப்படித்தியானம் செய்ய முடியும். பெரும்பாலும் ஜனங்களுக்குப்பகவான் இருக்கிறார் என்று தெரிந்த போதிலும், அவரிடத்தில் பிரீதியில்லை. அவரை இடைவிடாமல் நினைக்கவும் முடியாது. நம்முடைய மனது விஷ

யங்களில் படிந்து அவைகளையே நினைத்துக் கொண்டிருக்கிறது. பகவானிடத்தில் பக்தியில்லை என்றால், அநேகம் பேர்கள் சண்டைக்கு வருவார்கள். நான் கோவிலுக்குப் போகவில்லையா ? பெருமாளுக்குக் கைங்கரியங்கள் செய்யவில்லையா? எப்படி எனக்குப் பக்தியில்லை என்று சொல்லலாம் என்று கேட்பார்கள். அவர்களை யோஜித்துப் பார்க்கவேண்டியது. கோவிலில் பெருமாளை ஸந்தோஷமாய் ஸேவித்துக் கொண்டிருக்கும்போது, பெண்டாட்டிக்குத் தேள் கொட்டிற்று என்று யாராவது சொன்னால், உடனே வீட்டுக்கு ஓடிவர மாட்டார்களா? இதனால் பெருமாளைக்காட்டிலும் பெண்டாட்டியிடம் அதிகப் பிடிமானம் இருக்கிறதென்று ஏற்படவில்லையா? இது அடியேனுடைய அநுபவத்தைக்கொண்டு எழுதினேன். பக்தியில்லை என்கிற எண்ணமேயில்லையே. பக்தி எப்படி வரும் ? ஆகையால் பகவானிடத்தில் ஆசையுண்டாவதற்கும், அவரை வேறு நினைவில்லாமல் தியானம் பண்ணுவதற்கும் இடைஞ்சல்கள் போவதற்காக, ஒருவன் தன்னுடைய ஆத்மஸ்வரூபத்தைப் பார்க்கவேணும். அதற்காக முயற்சி செய்யும்போதே விஷயங்களில் அலுப்பு வந்து விடும். ஆத்மாவைப்பார்த்த பிறகு, அவைகளிலிருக்கிற சபலமும் போய்விடும். அப்போது பக்தியோகத்தை நன்றாகச் செய்யலாம்.

36. ஸ்ரீ கீதையில் 18 அத்தியாயங்கள் இருக்கின்றன. முதல் ஆறு அத்தியாயங்களால் ஆத்மஸ்வரூபத்தைப் பார்க்கும் வழி விரிவாய் சொல்லப்படுகிறது. ஏழாவது அத்தியாயம் முதல் ஆறு அத்தியாயங்களால் பக்தி யோகமும், அதற்கு வேண்டிய பகவானைப்பற்றிய அறிவும் சொல்லப்படுகின்றன. கடைசி ஆறு அத்தியாயங்களால் கீழ்ச் சுருக்கமாய்ச் சொல்லப்பட்ட சில ஸங்கதிகள் வெகு விரிவாய் சொல்லப்படுகின்றன.

37. முதல் ஆறு அத்தியாயங்களில் முதல் அத்தியாயமும், இரண்டாவது அத்தியாயத்தில் முதல்பதினொன்று சுலோகங்களும் ஸ்ரீ கீதை யாரால், யாருக்கு, எந்த விடத்தில், எந்தக் காலத்தில், என்னப் பிரயோஜநத்திற்காகச் சொல்லப்பட்டது—என்பதைச் சொல்லுகின்றன. அவதாரிகையைப் பார்க்க. 12-வது சுலோகம் முதல் 30-வது சுலோகம் வரையில் ஆத்மஸ்வரூபத்தைப்பகவான்

𑌦𑍍𑌧𑍍𑌯𑍋𑌸𑍍𑌸𑌮𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌕𑍁𑌰𑍁 । 𑌤𑌦𑌿𑌦𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍋𑌸𑍍𑌸𑌮𑌤𑍍𑌵𑌂
𑌯𑍋𑌗𑌸𑍍𑌥 𑌇𑌤𑍍𑌯𑌤𑍍𑌰 𑌯𑍋𑌗𑌶𑌬𑍍𑌦𑍇𑌨𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌯𑍋𑌗𑌃-𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯
𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍋𑌸𑍍𑌸𑌮𑌤𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌚𑌿𑌤𑍍𑌤𑌸𑌮𑌾𑌧𑌾𑌨𑌮𑍍 ॥ ॥ ௪௮ ॥

𑌅𑌤𑍍𑌰—𑌕𑌿𑌮𑌰𑍍𑌥𑌮𑌿𑌦𑌮𑍇𑌵𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑌿𑌤𑍍𑌯𑌤 𑌆𑌹—

𑌦𑍂𑌰𑍇𑌣 𑌹𑍍𑌯𑌵𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌾𑌦𑍍𑌧𑌨𑌂𑌜𑌯 ।
𑌬𑍁𑌦𑍍𑌧𑍌 𑌶𑌰𑌣𑌮𑌨𑍍𑌵𑌿𑌚𑍍𑌛 𑌕𑍃𑌪𑌣𑌾𑌃 𑌫𑌲𑌹𑍇𑌤𑌵𑌃 ॥௪௯॥

𑌯𑍋𑌽𑌯𑌂 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌵𑌿𑌷𑌯𑍋𑌽𑌵𑌾𑌨𑍍𑌤𑌰𑌫𑌲𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯
𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍋𑌸𑍍𑌸𑌮𑌤𑍍𑌵𑌵𑌿𑌷𑌯𑌸𑍍𑌤𑍁 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌃 । 𑌤𑌦𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌣
𑌇𑌤𑌰𑌤𑍍𑌕𑌰𑍍𑌮 𑌦𑍂𑌰𑍇𑌣𑌾𑌵𑌰𑌮𑍍 । 𑌹𑍀𑌨𑌮𑌿𑌦𑌂 𑌚 𑌯𑍋𑌗𑌾𑌦𑍁𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌟𑌾
𑌦𑌪𑌕𑍃𑌷𑍍𑌟𑌤𑌰𑌮𑍇𑌵 𑌭𑌵𑌤𑌿 । 𑌉𑌕𑍍𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮
𑌨𑌿𑌷𑍍𑌕𑌾𑌮𑌂 𑌕𑌾𑌮𑌿𑌕𑌤𑍍𑌵𑍇𑌨 𑌵𑌿𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑍍𑌯, 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌶𑍋𑌧𑌨𑌪𑍂𑌰𑍍𑌵𑌕-
𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌚 𑌮𑍋𑌕𑍍𑌷𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑌯𑌤𑌿 । 𑌇𑌤𑌰𑌤𑍍𑌤𑍁 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌭-
𑌵𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌯𑌤𑌿 । 𑌅𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌕𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌣𑍇 𑌉𑌕𑍍𑌤𑌾𑌯𑌾𑌂 𑌬𑍁-
𑌦𑍍𑌧𑍌 𑌶𑌰𑌣𑌮𑌨𑍍𑌵𑌿𑌚𑍍𑌛-𑌶𑌰𑌣𑌂-𑌆𑌶𑍍𑌰𑌯𑌣𑌂 𑌤𑌸𑍍𑌯𑌾𑌮𑍇𑌵 𑌬𑍁-
𑌦𑍍𑌧𑍌 𑌵𑌰𑍍𑌤𑌸𑍍𑌵𑍇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌕𑍃𑌪𑌣𑌾𑌃 𑌫𑌲𑌹𑍇𑌤𑌵𑌃-𑌫𑌲𑌸𑌙𑍍𑌗𑌿
𑌨𑌾 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵𑌾𑌣𑌾𑌃 𑌕𑍃𑌪𑌣𑌾𑌸𑍍𑌸𑌂𑌸𑌾𑌰𑌿𑌣𑍋 𑌭𑌵𑍇𑌯𑍁𑌃 ।

𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌜𑌹𑌾𑌤𑍀𑌹 𑌉𑌭𑍇 𑌸𑍁𑌕𑍃𑌤𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑍇 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑍋𑌗𑌾𑌯 𑌯𑍁𑌜𑍍𑌯𑌸𑍍𑌵 𑌯𑍋𑌗𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 𑌕𑍌𑌶𑌲𑌮𑍍 ॥

𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌸𑌨𑍍 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵𑌾𑌣𑌃 𑌉𑌭𑍇 𑌸𑍁-
𑌕𑍃𑌤𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑍇 𑌅𑌨𑌾𑌦𑌿𑌕𑌾𑌲𑌸𑌞𑍍𑌚𑌿𑌤𑍇 𑌅𑌤𑍍𑌰𑍈𑌵 𑌬𑌨𑍍𑌧𑌹𑍇-
𑌤𑍁𑌭𑍂𑌤𑍇 𑌜𑌹𑌾𑌤𑌿 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌕𑍍𑌤𑌾𑌯 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌾𑌯 𑌯𑍁-
𑌜𑍍𑌯𑌸𑍍𑌵 । 𑌯𑍋𑌗𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 𑌕𑍌𑌶𑌲𑌮𑍍-𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 𑌕𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌣𑍇-
𑌷𑍍𑌵𑌯𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌃 𑌕𑍌𑌶𑌲𑌮𑍍 - 𑌅𑌤𑌿𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌮𑍍-𑌅𑌤𑌿𑌸𑌾𑌮-
𑌰𑍍𑌥𑍍𑌯𑌸𑌾𑌧𑍍𑌯𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ॥ ௫௦ ॥

𑌕𑌰𑍍𑌮𑌜𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 𑌹𑌿 𑌫𑌲𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃 ।
𑌜𑌨𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌪𑌦𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑌾𑌮𑌯𑌮𑍍 ॥ ॥ ௫௧ ॥

𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌕𑌰𑍍𑌮𑌜𑌂 𑌫𑌲𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁-
𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌃, 𑌤𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌚 𑌜𑌨𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌅𑌨𑌾𑌮𑌯𑌂 𑌪𑌦𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 ।
𑌹𑌿 𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌂 𑌹𑍍𑌯𑍇𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌸𑍂𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍍𑌵𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௫௧ ॥

யதா தே மோஹகலிலம் புத்திர்வ்யதிதரிஷ்யதி ।
ததா கந்தாஸி நிர்வேதம் ஶ்ரோதவ்யஸ்ய ஶ்ருதஸ்ய ச ॥ ௫௨ ॥

உக்தப்ரகாரேண கர்மணி வர்தமாநஸ்ய தயா வ்ருத்த்யா நிர்தூதகல்மஷஸ்ய தே புத்திர்யதா மோஹகலிலம் - அத்ய ஸ்வரூபாஜ்ஞாநஹேதுபூதம் மோஹரூபம் கலுஷம் வ்யதிதரிஷ்யதி । ததா அஸ்மத்த இத:பூர்வம் த்வயா ஶ்ருதஸ்ய ஸமாதேரித:பரம் ஶ்ரோதவ்யஸ்ய ச க்ருதே ஸ்வயமேவ நிர்வேதம் கந்தாஸி - கமிஷ்யஸி ॥ ॥ ௫௨ ॥

அத — "யோகே த்விமாம் ஶ்ருணு" இத்யாதிநோக்தஸ்யாத்மயாதாத்ம்யஜ்ஞாநபூர்வகஸ்ய புத்திவிஶேஷஸம்ஸ்க்ருதகர்மாநுஷ்டாநஸ்ய லக்ஷணபூதம் யோகாக்யம் பலமாஹ—

ஶ்ருதிவிப்ரதிபந்நா தே யதா ஸ்தாஸ்யதி நிஶ்சலா ।
ஸமாதாவசலா புத்திஸ்ததா யோகமவாப்ஸ்யஸி ॥ ௫௩ ॥

ஶ்ருதி:-ஶ்ரவணம், அஸ்மத்த: ஶ்ரவணேந விஶேஷத: ப்ரதிபந்நா ஸகலேதரவிஸஜாதீயநித்யநிரதிஶயஸூக்ஷ்மதத்த்வவிஷயா ஸ்வயமசலா ஏகரூபா புத்திரஸங்ககர்மாநுஷ்டாநேந நிர்மலீக்ருதே மநஸி யதா நிஶ்சலா ஸ்தாஸ்யதி । ததா யோகம்-ஆத்மாவலோகநமவாப்ஸ்யஸி । ஏததுக்தம் பவதி— ஶாஸ்த்ரஜந்யாத்மஜ்ஞாநபூர்வக: கர்மயோக: ஸ்திதப்ரஜ்ஞதாக்யஜ்ஞாநநிஷ்டாமாபாதயதி । ஜ்ஞாநநிஷ்டாரூபா ஸ்திதப்ரஜ்ஞதா து யோகாக்யமாத்மாவலோகநம் ஸாதயதீதி ॥ ௫௩ ॥

அத — ஏவமுக்தே பார்த்தோऽஸங்ககர்மாநுஷ்டாநரூபகர்மயோகஸாத்யஸ்திதப்ரஜ்ஞதாயா யோகஸாதநபூதாயா: ஸ்வரூபம் ஸ்திதப்ரஜ்ஞஸ்யாநுஷ்டாநப்ரகாரம் ச ப்ருச்சதி-

அர்ஜுந உவாச—

ஸ்திதப்ரஜ்ஞஸ்ய கா பாஷா ஸமாதிஸ்தஸ்ய கேஶவ ।
ஸ்திததீ: கிம் ப்ரபாஷேத கிமாஸீத வ்ரஜேத கிம் ॥ ௫௪ ॥

ஸமாதிஸ்தஸ்ய ஸ்திதப்ரஜ்ஞஸ்ய கா பாஷா — கோ வாசக: ஶப்த:। தஸ்ய ஸ்வரூபம் கீத்ருஶமித்யர்த:। ஸ்திதப்ரஜ்ஞ: கிம் ச பாஷணாதிகம் கரோதி ॥ ॥௫௪॥

ஸ்ரீபகவாநுவாச —

ப்ரஜஹாதி யதா காமாந் ஸர்வாந் பார்த மநோகதாந் ।
ஆத்மந்யேவாத்மநா துஷ்ட: ஸ்திதப்ரஜ்ஞஸ்ததோச்யதே ॥௫௫

வ்ருத்திவிஶேஷகதநேந ஸ்வரூபமப்யுக்தம் பவதீதி வ்ருத்திவிஶேஷ உச்யதே । ஆத்மந்யேவாத்மநா மநஸா ஆத்மைகாவலம்பநேந துஷ்டேந தோஷேண தத்வ்யதிரிக்தாந் ஸர்வாந் மநோகதாந் காமாந் யதா ப்ரகர்ஷேண ஜஹாதி, ததாঽயம் ஸ்திதப்ரஜ்ஞ இத்யுச்யதே । ஜ்ஞாநநிஷ்டாகாஷ்டேயம் ॥

அத — அநந்தரம் ஜ்ஞாநநிஷ்டஸ்ய ததவராவஸ்தா தூரவிப்ரகர்ஷாவஸ்தோச்யதே —

து:கேஷ்வநுத்விக்நமநா: ஸுகேஷு விகதஸ்ப்ருஹ: ।
வீதராகபயக்ரோத: ஸ்திததீர்முநிருச்யதே ॥ ௫௬ ॥

ப்ரியவிஶ்லேஷாதிது:கநிமித்தேஷு உபஸ்திதேஷு அநுத்விக்நமநா: ந து:கீ பவதி। ஸுகேஷு விகதஸ்ப்ருஹ: ப்ரியேஷு ஸந்நிஹிதேஷ்வபி விகதஸ்ப்ருஹ: । வீதராகபயக்ரோத:-அநாகதேஷு ஸ்ப்ருஹா-ராக:, தத்ரஹித: । ப்ரியவிஶ்லேஷாப்ரியாகமநஹேதுதர்ஶநநிமித்தம் து:கம் பயம், தத்ரஹித: । ப்ரியவிஶ்லேஷாப்ரியாகமநஹேதுபூதசேதநாந்தரகதது:கஹேதுஶ்சித்தவிகார: க்ரோத:, தத்ரஹித: । ஏவம்பூதோ முநி:-ஆத்மமநநஶீல: ஸ்திததீரித்யுச்யதே ॥ ॥ ௫௬ ॥

அத — ததோঽவராவஸ்ததஶா ப்ரோச்யதே —

யஸ்ஸர்வத்ராநபிஸ்நேஹஸ்தத்தத்ப்ராப்ய ஶுபாஶுபம் ।
நாபிநந்ததி ந த்வேஷ்டி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥ ௫௭ ॥

யஸ்ஸர்வத்ர ப்ரியேஷ்வநபிஸ்நேஹ: உதாஸீந: ப்ரியஸம்ஶ்லேஷவிஶ்லேஷாதிகம் ஶுபாஶுபம் ப்ராப்ய அபிநந்தந த்வேஷ்டி ச, தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥ ॥ ௫௭ ॥

கிஞ்ச — கதேதஸ்ய ஸர்வாஸீநதேஹா —

யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோऽங்காநீவ ஸர்வஶ: ।
இந்த்ரியாணீந்த்ரியார்தேப்யஸ்தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥

யதேந்த்ரியாணீந்த்ரியார்தேப்ய: ஶப்தாதிப்ய: ஸம்ஹரதி, ததைவ கூர்மோऽங்காநீவேந்த்ரியார்தேப்ய: ஸர்வஶ: ப்ரதிஸம்ஹ்ருத்ய ஆத்மந்யவஸ்தாபயதி। தஸ்ய ப்ரஜ்ஞா ஏவம் ப்ரதிஷ்டிதா ஜ்ஞாநநிஷ்டா பூர்வபூர்வா உத்தரோத்தரநிஷ்டாத்யா ॥ ॥ ௫௮ ॥

கிஞ்ச — இதாநீம் ஜ்ஞாநநிஷ்டாயா து:ஸாத்யதாம் தத்ஸாத்யோபாயமாஹ —

விஷயா விநிவர்தந்தே நிராஹாரஸ்ய தேஹிந: ।
ரஸவர்ஜம் ரஸோऽப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்ததே ॥

இந்த்ரியாணாமாஹாரா விஷயா: । நிராஹாரஸ்ய விஷயேப்ய: ப்ரத்யாஹ்ருதேந்த்ரியஸ்ய தேஹிநோ விஷயா விநிவர்தமாநா ரஸவர்ஜம் விநிவர்தந்தே । ரஸோ ராக:, விஷயராகோ ந நிவர்தத இத்யர்த: । ராகோऽப்யஸ்ய பரம் விஷயேப்ய: பரம் ஸுகதரம் த்ருஷ்ட்வா நிவர்ததே ॥

யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஶ்சித: ।
இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந: ॥ ௬௦ ॥

ஆத்மதர்ஶநேந விநா விஷயராகோ ந நிவர்ததே । அநிவ்ருத்தே விஷயராகே விபஶ்சிதோ யதமாநஸ்யாபி புருஷஸ்யேந்த்ரியாணி ப்ரமாதீநி பலவந்தி மந: ப்ரஸஹ்ய ஹரந்தி । ஏவமிந்த்ரியஜய ஆத்மதர்ஶநாயத்த:, ஆத்மதர்ஶநமிந்த்ரியஜயாயத்தமிதி ஜ்ஞாநநிஷ்டா து:ஸ்ஸாத்யா ॥ ॥ ௬௦ ॥

தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர: ।
வஶே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥

ஸர்வஸ்ய பரிஜிஹீர்ஷயா விஷயாநுராகயுக்ததயா துர்ஜயாநீந்த்ரியாணி ஸம்யம்ய சேதஸ: ஶுபாஶ்ரயபூதே மயி மநோऽவஸ்தாப்ய, ஸமாஹித ஆஸீத | மநஸி மயி நிவிஷ்டே ஸதி, நிர்தக்தாஶேஷகல்மஷதயா நிர்மலீக்ருதம் விஷயாநுராகரஹிதம் மந இந்த்ரியாணி வஶ்யாநி கரோதி । ததோ வஶ்யேந்த்ரியம் மந ஆத்மதர்ஶநாய ப்ரபவதி | யதோக்தம் "யதாக்நிருத்ததஶிக: கக்ஷம் தஹதி ஸாநில: | ததா சித்தஸ்திதோ விஷ்ணுர்யோகிநாம் ஸர்வகில்பிஷம்" இதி । ததாஹ—வஶே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதேதி || ௬௧ ||

த்யாயதோ விஷயாந்பும்ஸ: ஸங்கஸ்தேஷூபஜாயதே |
ஸங்காத்ஸஞ்ஜாயதே காம: காமாத்க்ரோதோऽபிஜாயதே ||
க்ரோதாத்பவதி ஸம்மோஹ: ஸம்மோஹாத்ஸ்ம்ருதிவிப்ரம: |
ஸ்ம்ருதிப்ரம்ஶாத்புத்திநாஶோ புத்திநாஶாத்ப்ரணஶ்யதி || ௬௩

அநிரஸ்தவிஷயாநுராகஸ்ய ஹி மய்யநிவேஶிதமநஸ இந்த்ரியாணி ஸம்யம்யாவஸ்திதஸ்யாபி அநாதிபாபவாஸநயா விஷயத்யாநமவர்ஜநீயம் ஸ்யாத் । த்யாயதோ விஷயாந் பும்ஸ: புநரபி ஸங்கோऽதிப்ரவ்ருத்தோ ஜாயதே | ஸங்காத் ஸஞ்ஜாயதே காம:-காமோ நாம ஸங்கஸ்ய விபாகதஶா-புருஷோ யாம் தஶாமாபந்நோ விஷயாந் அஸம்ஶ்லிஷ்ய ஸ்தாதும் ந ஶக்நோதி, ஸ காம: । காமாத்க்ரோதோऽபிஜாயதே-காமே வர்தமாநே விஷயே சாஸந்நிஹிதே ஸந்நிஹிதாந் புருஷாந் ப்ரதி ஏபிரஸ்மதிஷ்டம் விஹதமிதி க்ரோதோ பவதி । க்ரோதாத்பவதி ஸம்மோஹ:, ஸம்மோஹ: க்ருத்யாக்ருத்யவிவேகஶூந்யதா | தயா ஸர்வம் கரோதி । ததஶ்ச ப்ராரப்தே இந்த்ரியஜயாதிகே ப்ரயத்நே ஸ்ம்ருதிப்ரம்ஶோ பவதி । ஸ்ம்ருதிப்ரம்ஶாத் புத்திநாஶ:-ஆத்மஜ்ஞாநே யோ வ்யவஸாய: க்ருதஸ்தஸ்ய நாஶ: ஸ்யாத் । புத்திநாஶாத்புந: ஸம்ஸாரே நிமக்நோ விநஷ்டோ பவதி || ||௬௨-௬௩||

रागद्वेषवियुक्तैस्तु विषयानिन्द्रियैश्चरन् ।
आत्मवश्यैर्विधेयात्मा प्रसादमधिगच्छति ॥ ६४ ॥

उक्तेन प्रकारेण मयि सर्वेश्वरे चेतस्समाश्रयणहेतुना निर्दग्धाशेषकल्मषतया रागद्वेषवियुक्तैः आत्मवश्यैरिन्द्रियैर्विषयांश्चरन्-विषयांस्तिरस्कृत्य वर्तमानः, विधेयात्मा-विधेयमनाः, प्रसादमधिगच्छति-निर्मलान्तःकरणो भवतीत्यर्थः ॥ ६४ ॥

प्रसादे सर्वदुःखानां हानिरस्योपजायते ।
प्रसन्नचेतसो ह्याशु बुद्धिः पर्यवतिष्ठति ॥

अस्य पुरुषस्य मनःप्रसादे सति प्रकृतिसंसर्गप्रयुक्तसर्वदुःखानां हानिरुपजायते । प्रसन्नचेतसः- आत्मावलोकनविरोधिदोषरहितमनसः तदानीमेव हि विविक्तात्मविषया बुद्धिः पर्यवतिष्ठते । अतो मनःप्रसादे सर्वदुःखानां हानिर्भवत्येव ॥
नास्ति बुद्धिरयुक्तस्य न चायुक्तस्य भावना ।
न चाभावयतश्शान्तिरशान्तस्य कुतस्सुखम् ॥ ६६ ॥
मयि सन्न्यस्तमनोरहितस्य स्वयत्नेन इन्द्रियदमने प्रवृत्तस्य कदाचिदपि विविक्तात्मविषया बुद्धिर्न सेत्स्यति । अत एव तस्य तद्भावना च न सम्भवति । विविक्तात्मानमभावयतो विषयस्पृहाशान्तिर्न भवति । अशान्तस्य-विषयस्पृहायुक्तस्य कुतो नित्यनिरतिशयसुखप्राप्तिः ॥ ॥ ६६ ॥

अथ—पुनरप्युक्तप्रकारेणेन्द्रियजयने अकृते दोषमाह—

इन्द्रियाणां हि चरतां यन्मनोऽनुविधीयते ।
तदस्य हरति प्रज्ञां वायुर्नावमिवाम्भसि ॥ ६७ ॥
इन्द्रियाणां विषयेषु चरतां वर्तमानानां वर्तनेन यन्मनो विधीयते - [illegible]

தர்யதே | தந்மநோऽஸ்ய விவிக்தாத்மப்ரவணாம் ப்ரஜ்ஞாம் ஹரதி-விஷயப்ரவணாம் கரோதீத்யர்த்த: | யதாऽம்பஸி நீயமாநாம் நாவம் ப்ரதிகூலோ வாயு: ப்ரஸஹ்ய ஹரதி ||௬௭||

தஸ்மாத்யஸ்ய மஹாபாஹோ நிக்ருஹீதாநி ஸர்வஶ: |
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ்தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ||

தஸ்மாதுக்தேந ப்ரகாரேண ஶுபாஶ்ரயே மயி நிவிஷ்டமநஸோ யஸ்யேந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்ய: ஸர்வஶோ நிக்ருஹீதாநி தஸ்யைவாத்மநி ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா பவதி ॥ ௬௮ ॥

யா நிஶா ஸர்வபூதாநாம் தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ |
யஸ்யாம் ஜாக்ரதி பூதாநி ஸா நிஶா பஶ்யதோ முநே: ||

யா-ஆத்மவிஷயா புத்தி: ஸர்வபூதாநாம் நிஶா-நிஶேவாப்ரகாஶா, தஸ்யாம்-ஆத்மவிஷயாயாம் புத்தௌ இந்த்ரியஸம்யமீ ப்ரஸந்நமநா ஜாகர்தி-ஆத்மாநமவலோகயந்நாஸ்த இத்யர்த்த: | யஸ்யாம்-ஶப்தாதிவிஷயாயாம் புத்தௌ, ஸர்வாணி பூதாநி ஜாக்ரதி-ப்ரபுத்தாநி பவந்தி | ஸா-ஶப்தாதிவிஷயா புத்தி: ஆத்மாநம் பஶ்யதோ முநேர்நிஶேவாப்ரகாஶா பவதி || ॥ ௬௯ ॥

ஆபூர்யமாணமசலப்ரதிஷ்டம் ஸமுத்ரமாப: ப்ரவிஶந்தி யத்வத் |
தத்வத்காமா யம் ப்ரவிஶந்தி ஸர்வே ஸ ஶாந்திமாப்நோதி ந காமகாமீ || ॥ ௭௦ ॥

யதா ஸ்வேநைவாபூர்யமாணமேகரூபம் ஸமுத்ரம் நத்யா ஆப: ப்ரவிஶந்தி | ஆஸாமபாம் ப்ரவேஶேऽப்ரவேஶே ச ஸமுத்ரோ ந கஞ்சந விஶேஷமாபத்யதே | ஏவம் ஸர்வே காமா:-ஶப்தாதயோ விஷயா: யம்-ஸம்யமிநம், ப்ரவிஶந்தி-இந்த்ரியகோசரதாம் யாந்தி, ஸ ஶாந்திமாப்நோதி-ஶப்தாதிஷ்விந்த்ரியகோசரதாமாபந்நேஷ்வநாபந்நேஷு ச ஸ்வாத்மாவலோகநத்ருப்த்யைவ யோ ந விகாரமாப்நோதி ஸ ஏவ ஶாந்திமாப்நோதீத்யர்த்த: | ந காமகாமீ-யஸ்ஶப்தாதிபிர்விக்ரியதே-ஸ கதாசிதபி ந ஶாந்திமாப்நோதி ॥ ॥ ௭௦ ॥

விஹாய காமாந்ய꞉ ஸர்வாந்புமாம்ஶ்சரதி நி꞉ஸ்ப்ருஹ꞉ |
நிர்மமோ நிரஹங்கார꞉ ஸ ஶாந்திமதிகச்சதி || ௭௧ ||

காம்யந்த இதி காமா꞉-ஶப்தாதய꞉-ய꞉ புமாந் ஶப்தாதீந் ஸர்வாந் விஷயாந் விஹாய தத்ர, நி꞉ஸ்ப்ருஹ꞉-தத்ர மமதாரஹிதஶ்ச, அநாத்மநி தேஹே ஆத்மாபிமாநரஹிதஶ்சரதி | ஸ ஆத்மாநம் த்ருஷ்ட்வா ஶாந்திமதிகச்சதி || || ௭௧ ||

ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதி꞉ பார்த நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி | ஸ்தித்வாஸ்யாமந்தகாலேऽபி ப்ரஹ்மநிர்வாணம்ருச்சதி || || ௭௨ ||

இதி ஶ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகஶாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே ஸாங்க்ய
யோகோ நாம த்விதீயோऽத்யாய꞉ ||

---

ஏஷா-நித்யாத்மஜ்ஞாநபூர்விகா அஸங்ககர்மணி ஸ்திதி꞉ ஸ்திததீலக்ஷணா, ப்ராஹ்மீ-ப்ரஹ்மப்ராபிகா, ஈத்ருஶீம் கர்மஸ்திதிம் ப்ராப்ய ந முஹ்யதி-புநஸ்ஸம்ஸாரம் நாப்நோதி | அஸ்யாம் ஸ்தித்யாமந்திமேऽபி வயஸி ஸ்தித்வா ப்ரஹ்மநிர்வாணம்ருச்சதி-நிர்வாணமயம் ப்ரஹ்ம கச்சதி, ஸுகைகதாநமாத்மாநமாப்நோதீத்யர்த꞉ | ஏவமாத்மயாதாத்ம்யம், யுத்தாக்யஸ்ய ச கர்மண ஆத்மப்ராப்திஸாதநதாமஜாநத꞉ ஶரீராத்மஜ்ஞாநேந மோஹிதஸ்ய தேந ச மோஹேந யுத்தாந்நிவ்ருத்தஸ்ய மோஹஶாந்தயே நித்யாத்மவிஷயா ஸாங்க்யபுத்தி꞉, தத்பூர்விகா சாஸங்ககர்மாநுஷ்டாநரூபகர்மயோகவிஷயா புத்தி꞉, ஸ்திதப்ரஜ்ஞதாயோகஸாத்யா ச த்விதீயேऽத்யாயே ப்ரோக்தா | ததுக்தம் "நித்யாத்மாஸங்ககர்மேஹாகோசரா ஸாங்க்யயோகதீ꞉ | த்விதீயே ஸ்திததீலக்ஷா ப்ரோக்தா தந்மோஹஶாந்தயே" இதி ||

இதி ஶ்ரீமத்ராமாநுஜவிரசிதே ஶ்ரீகீதாபாஷ்யே
ஸாங்க்யயோகோ நாம த்விதீயோऽத்யாய꞉ ||
ஶ்ரீமதே ராமாநுஜாய நம꞉ ||

---

## तृतीयोऽध्यायः ॥

—:0:—

अथ तदेवं मुमुक्षुभिः प्राप्यतया वेदान्तोदितं निरस्तनिखिलाविद्यादिदोषगन्धानवधिकातिशयासङ्ख्येयकल्याणगुणगणं परब्रह्म पुरुषोत्तमं प्राप्तुमुपायभूतवेदनोपासनध्यानादिशब्दवाच्यतदेकान्तिकात्यन्तिकभक्तिं वक्तुं [illegible], “[illegible]” त्यादिप्रजापतिवाक्योदितं प्राप्यप्राप्तृणां याथात्म्यदर्शनं [illegible] प्राजापत्यवाक्ये [illegible] । प्रजापतिवाक्ये दहरवाक्यादिकपरविद्याशेषतया प्राप्यप्राप्तृस्वरूपदर्शनं ‘यस्तात्मानमनुविद्य विजानाति’ त्युक्तं [illegible] प्राप्तृस्वरूपं परिशोधितं, “य एष सम्प्रसादोऽस्माच्छरीरात्समुत्थाय परं ज्योतिरुपसम्पद्य स्वेन रूपेणाभिनिष्पद्यत” इति दहरविद्याप्रकरणोपसंहृतम् । अन्यत्रापि “अन्यत्र धर्मादन्यत्राधर्मात् [illegible]” इत्यादिषु [illegible] विशेषणविद्यायां ‘अन्यत्र धर्मादन्यत्र’ इति प्राप्तृज्ञानमपि विधाय, “न जायते म्रियते वा विपश्चित्” इत्यादिना प्राप्तृस्वरूपं विशोध्य, “अणोरणीयान्” इत्यारभ्य, ‘महान्तं विभुमात्मानं मत्वा धीरो न शोचति, नायमात्मा प्रवचनेन लभ्यो न मेधया न बहुना श्रुतेन । यमेवैष वृणुते तेन लभ्यस्तस्यैष आत्मा विवृणुते तनूं स्वा’मित्यादिभिः परस्वरूपं, तदुपासनं, उपासनस्य च भक्तिरूपतां प्रतिपाद्य, “विज्ञानसारथिर्यस्तु मनःप्रग्रहवान्नरः । सोऽध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पद”मिति परविद्याप्रकरणोपसंहृतम् । अतः पर

𑌧𑍍𑌯𑌾𑌯𑌵𑌤𑌾𑌽𑌨𑍇𑌨 𑌉𑌕𑍍𑌤𑍈𑌵 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑍁𑌪𑌾𑌦𑌾𑌨𑍋 𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌸𑌾𑌧𑌨𑌂 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍇—

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚—

𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 𑌚𑍇𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌣𑌸𑍍𑌤𑍇 𑌮𑌤𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 ।
𑌤𑌤𑍍𑌕𑌿𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌘𑍋𑌰𑍇 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌯𑍋𑌜𑌯𑌸𑌿 𑌕𑍇𑌶𑌵 ।௧॥

𑌵𑍍𑌯𑌾𑌮𑌿𑌶𑍍𑌰𑍇𑌣𑍇𑌵 𑌵𑌾𑌕𑍍𑌯𑍇𑌨 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌮𑍋𑌹𑌯𑌸𑍀𑌵 𑌮𑍇 ।
𑌤𑌦𑍇𑌕𑌂 𑌵𑌦 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌯 𑌯𑍇𑌨 𑌶𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌹𑌮𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌮𑍍 ॥௨॥

𑌯𑌦𑌿 𑌕𑌰𑍍𑌮𑌣𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍇𑌵 𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀𑌤𑌿 𑌤𑍇 𑌮𑌤𑌾 । 𑌕𑌿𑌮𑌰𑍍𑌥𑌂 𑌤𑌰𑍍𑌹𑌿 𑌘𑍋𑌰𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌯𑍋𑌜𑌯𑌸𑌿 । 𑌅𑌤𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌭𑌵𑌤𑌿— 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑍈𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌵𑌲𑍋𑌕𑌨𑌸𑌾𑌧𑌨𑌮𑍍, 𑌕𑌰𑍍𑌮𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌤𑍁 𑌤𑌸𑍍𑌯𑌾𑌃 𑌨𑌿𑌷𑍍𑌪𑌾𑌦𑌿𑌕𑌾, 𑌆𑌤𑍍𑌮𑌾𑌵𑌲𑍋𑌕𑌨𑌸𑌾𑌧𑌨𑌭𑍂𑌤𑌾 𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌸𑌕𑌲𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑌸𑌾𑌂 𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑌿𑌵𑌿𑌷𑌯𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑍋𑌪𑌰𑌤𑌿𑌨𑌿𑌷𑍍𑌠𑍇𑌤𑍍𑌯𑌭𑌿𑌹𑌿𑌤𑌾 । 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑍋𑌪𑌰𑌤𑌿𑌨𑌿𑌷𑍍𑌠𑌯𑌾 𑌹𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌵𑌲𑍋𑌕𑌨𑌂 𑌸𑌿𑌸𑌾𑌧𑌯𑌿𑌷𑌿𑌤𑌮𑍍, 𑌸𑌕𑌲𑌕𑌰𑍍𑌮𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌯𑌾𑌮𑍇𑌵𑌾𑌹𑌂 𑌨𑌿𑌯𑍋𑌜𑌯𑌿𑌤𑌵𑍍𑌯𑌃 । 𑌕𑌿𑌮𑌰𑍍𑌥𑌂 𑌘𑍋𑌰𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑌰𑍂𑌪𑍇 𑌆𑌤𑍍𑌮𑌾𑌵𑌲𑍋𑌕𑌨𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌯𑍋𑌜𑌯𑌸𑍀𑌤𑌿 । 𑌅𑌤𑍋 𑌵𑍍𑌯𑌾𑌮𑌿𑌶𑍍𑌰𑌵𑌾𑌕𑍍𑌯𑍇𑌨 𑌮𑌾𑌂 𑌮𑍋𑌹𑌯𑌸𑍀𑌵 𑌪𑍍𑌰𑌤𑌿𑌭𑌾𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌹𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌵𑌲𑍋𑌕𑌨𑌸𑌾𑌧𑌨𑌭𑍂𑌤𑌾𑌯𑌾 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑍋𑌪𑌰𑌤𑌿𑌰𑍂𑌪𑌾𑌯𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌯𑌾𑌶𑍍𑌚𑌵𑌿𑌪𑌰𑍍𑌯𑌯𑌰𑍂𑌪𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌾𑌧𑌨𑌂 𑌤𑌦𑍇𑌵 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌵𑌾𑌕𑍍𑌯𑌂 𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌂 𑌵𑍍𑌯𑌾𑌮𑌿𑌶𑍍𑌰𑌮𑍇𑌵 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍇𑌕𑌮𑌮𑌿𑌶𑍍𑌰𑌰𑍂𑌪𑌂 𑌵𑌾𑌕𑍍𑌯𑌂 𑌵𑌦 । 𑌯𑍇𑌨 𑌵𑌾𑌕𑍍𑌯𑍇𑌨𑌾𑌹𑌮𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌰𑍂𑌪𑌂 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌯 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌮𑍍 ॥

ஸ்ரீ:

# ஸ்ரீமத் கீதா பாஷியம்.

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜ மஹாதேசிகாய நம: ||
ஸ்ரீமதே வாதூலகேஶவராமாநுஜ மஹாதேசிகாய நம: ||
ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸமஹாதேசிகாய நம: ||
ஸ்ரீரங்கநாயகீவ்ருஷ்ணி வாதூலகாப்யாம் நம: ||
ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸராமாநுஜமஹாதேசிகாய நம: ||
ஸ்ரீமத்யை கோதாயை நம: ||
ஸ்ரீகோமளவல்லீஸமேதாப்ராக்ருத பரப்ரஹ்மணே நம: ||

ஸ்ரீமந் நாராயணனுடையது எல்லா லோகங்களும். பெரும்பாலும் அவைகளிலிருக்கிற எல்லா ஜனங்களும் பூமியிலிருக்கிற ஸுகத்தைத்தான் ஆசைப்படுகிறார்கள். பூமியில் துக்கம் கலப்பில்லாத ஸுகம் ஒருவருக்கும் ஒருபோதும் கிடையாது. இதே மாதிரிதான் சாஸ்திரங்களில் சொல்லும் ஸுவர்க்கம் முதலான உலகங்களிலும் எவருக்கும் ஏதாவதுகுறைவுகள் இருந்துக்கொண்டேயிருக்கின்றன. இந்த ஸங்கதியைத்தானாக ஒருவனாலும் அறிந்துகொள்ள முடியாது. மிகுந்த பெரியவருடைய கவலையோடு கூடிய உபதேசத்தினாலே தெளிந்த ஒரு பெரியவருடைய அதே மாதிரியான உபதேசங்களாலே இந்தஅறிவு வரவேண்டியது. இப்போது படித்தவர்களோ படிக்காதவர்களோ, ஏழையோ பணக்காரனோ எவனுக்கும் இது தோன்றுவது வருத்தம். ஆனால் படித்தவர்கள் விரிவாய் சொல்லுவார்கள். அவர்களுக்குள் யாருக்கு மனதில் பட்டிருக்கிறதோ. துக்கம் கலந்த ஸுகத்தையே எவரும் அநுபவிப்பதனாலே நிலையான ஸுகத்தைப்புஸ்தகங்களைக் கொண்டுதான அறிந்துக்கொள்ளவேண்டும். யுக்திகளால் மாத்திரம் ஏற்பட்ட புஸ்தகங்களைக்கொண்டு அதையறிய முடியாது. ஏனென்றால், அதுக்கு மேலும் யுக்திகள் தோன்றுமாகையால்,

ஆகையால் அநாதியான (இது முதலென்றில்லாத) வேதத்தைக் கொண்டு ஏற்பட்ட மதத்தினால்தான் அதை அறிய முடியும். அந்த வேதத்துக்கும் அனேகம் பேர்கள் அனேகவிதமாய் அர்த்தஞ்சொல்லியிருப்பதால் அதைக்கொண்டும்அறிவதுமுடியவில்லை. வேதத்திற்கு எந்த அர்த்தம் ஸரியென்றால், யார் சொன்ன அர்த்தத்தைக்கேட்டால் உயர்ந்த தயை, பொறுமை, ஒழிவு, வணக்கம், ஜீவன்—தெய்வம்—இவைகளைப்பற்றிய நல்ல தெளிவு, இவை முதலிய நல்ல ஸங்கதிகளுண்டாகுமோ, அதுதான் ஸரியான அர்த்தம். இப்போதும் நல்ல மதத்தின் உண்மையான ஸங்கதிகளை அறிந்தவர்களிடத்தில் கீழ்ச்சொல்லிய ஸங்கதிகளைக் காணலாம். இந்த ஸங்கதிகள் ஸ்ரீ பாஷ்யகாரர் மதத்தையுண்மையாகத் தெரிந்தவர்களிடத்தில் இப்போதும் காணலாம். ஆகையால் வேதத்தின் கருத்தைச் சொல்லுவதற்காக ஸ்ரீ வியாஸர் என்ற மஹர்ஷியானவர் பிரும்மஸூத்ரம் செய்தார். அதற்கும் அனேகவிதமாய் அர்த்தம் ஏற்பட்டது. ஸ்ரீ பாஷ்யகாரர் பெரியோர்கள் பரம்பரையாய் சொல்லிவந்த அர்த்தங்களை ஸ்ரீ பாஷியம் என்கிற புஸ்தகமாக அருளிச் செய்தார். கீழ்ச் சொன்ன காரணத்தாலே அவர் சொன்ன அர்த்தம்தான் மிகவும் நல்லது. ஜனங்களால் அறியமுடியாத வேதத்தின்அர்த்தத்தைத்தெளிவாய் தெரிவிப்பதற்காகப் பகவான் ஸ்ரீ கிருஷ்ணனாய் அவதரித்து ஸ்ரீ கீதையென்னும் கிரந்தம் அருளிச் செய்தார். அதற்கும் அனேகம் பேர்கள் தோன்றினபடி அர்த்தம் எழுதினார்கள். ஸூத்திரத்துக்குப் பாஷியம் எழுதின ஸ்ரீபாஷ்யகாரர் அதில் எழுதினஅர்த்தம் ஸ்ரீ கீதைக்குப் பொருந்தினது என்று காட்டுவதற்காக ஸ்ரீ கீதைக்கும் அர்த்தம் எழுதியிருக்கிறார். வடமொழியில் எழுதின அந்த அர்த்தத்தை எல்லாரும் தெரிந்துகொள்வதற்காகக்கூடியவரையில் எளியதான தமிழ் நடையில் ஸ்ரீ பெருமாள் முதலான ஆசாரியர்களுடைய அநுக்கிரஹம் அடியேனைக் கொண்டு எழுதுகிறது.

துக்கம் கலப்பில்லாத நிலையான ஸுகத்தை வேதத்தினாலேயே தெரிந்து கொள்ள வேண்டியதென்று கீழே சொல்லப்பட்டது. அவ்விதமான ஸுகத்தை யொருவன் ஸ்ரீ வைகுண்டமென்றும் நித்யவிபூதியென்றுஞ் சொல்லுகிற இடத்திற்குப்போய்

ஸ்ரீமானான நாராயணனை அநுபவித்து அடையலாமென்று வேதம் சொல்லுகிறது. அதற்கு மேற்பட்ட ஸுகம் கிடையாது. ஏனென்றால், நாராயணன் ஸ்வரூபத்தாலும், திருமேனியாலும், ஸ்வரூபத்தின் குணங்களாலும், நகைகளாலும் ஆயுதங்களாலும், மஹாலக்ஷ்மியோடு கூடியிருப்பதாலும், விபூதியாலும், (ஸொத்தாலும்) சுற்றியிருக்கும் ஜனங்களாலும், இருக்குமிடத்தாலும் மிகுந்த உயர்ந்த வஸ்து.

ஸ்வரூபம்—உலகத்தில் வஸ்துக்களுக்குப் பெரும்பாலும்குணங்களாலேதான் உயர்த்தி. கரும்பிற்குச சாறினால் கௌரவம். சாறு போனால் அதற்குக் கௌரவமில்லை. சாப்பிடுகிற சில காய்களுக்கு வெல்லம் தேங்காய் முதலான சில பதார்த்தங்களின் சேர்க்கையால் ருசி. பூவிற்கு வாஸனையாலும் கண்ணுக்குக் குளிர்த்தியாயிருப்பதாலும், மிருதுவாயிருப்பதாலு முயர்த்தி. உலர்ந்து போனால் அதற்கு உயர்த்தியில்லை. ஒரு பூவானது தங்கத்தினால் செய்யபபட்டு வாஸனையுள்ளதாயிருந்தால் அதற்கு ஸ்வரூபத்தாலும் குணத்தாலும் உயர்த்தி. அதுபோல பகவானுடைய ஸ்வரூபமே மிகுநத ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடியதாயிருக்கிறது. ஆகையினால் ஸ்வரூபம் உயர்ந்தது. அது ஸத்யமாயும், ஞானமாயும், அநந்தமாயும், ஆநந்தமாயும் அமலமாயுமிருக்கிறது. ஸத்யமென்றால், அதற்கு ஒருவிதமான விகாரமில்லை. அறிவில்லாத வஸ்துக்கள் எப்போதும் மாறி வேறு உருவங்களை யெடுத்துக்கொண்டு வேறுபேர்களை யடைகினறன. இவ்விதமான மாறுதல் பகவானுடைய ஸ்வரூபத்தில் கிடையாது. ஜீவனுக்கு ஸ்வரூபத்தில் மாறுபாடில்லாமலிருநதாலும் அவனுடைய ஞானமென்கிற குணமானது சிலகாலத்தில் சுருங்கி வேறுகாலத்தில் விரிவை அடைகிறது. இநத வேறுபாடும் பகவானுக்குக் கிடையாது. அவன் ஸ்வரூபமும் ஸ்வபாவமும் எப்போதும் ஒரேவிதமாயிருக்கும். அது ஞானம். அதாவது—எப்போதும் சுருக்கத்தை யடையாததும் ஒருவனாலும் கொடுக்கப்படாததுமான ஞானமென்கிற குணத்தை யுடையதாயிருப்பது. அது அநந்தம். அதாவது-இடத்தினாலோ காலத்தினாலோ வஸ்துவினாலோ அளவிலலாதது அது எங்குமிருக்கிறது. எப்போதுமிருக்கிறது. எல்லாவஸ்துவாயுமிருக்கிறது. அது ஆநந்தம்,

மிகுந்த ஸுகத்தைக் கொடுக்கக்கூடியதாயிருக்கிறது. அது அமலம். அதாவது-ஒருவிதமானதோஷத்தோடும் ஒருக்காலும்சேர்ந்ததன்று. ஸூரியனிடத்தில் எப்படி இருட்டு சேராதோ, அப்படியே பகவானுடைய ஸ்வரூபம் எல்லா தோஷங்களுக்கும் விரோதியானது. ஆகையால் ஒருக்காலும் தோஷத்தோடு சேராதது. உதாரணம்— வீதியில் பகலில் வெளிச்சமும் ராத்திரியில் இருட்டும் இருக்கிறது. அப்படி ஸூரியனோடு இருட்டு சேரமுடியாது. ஸூரியன் இருட்டுக்குச சத்துரு.

திருமேனி (ரூபம்)— இது பகவானுடைய ஸ்வரூபத்துக்குத்தகுந்ததாயும் பகவானுக்குப் பிடித்ததாயுமிருக்கிறது. அது எப்போதும் ஒரேவிதமாயிருக்கிறது. ஸ்ரீ வைகுண்டத்திலிருக்கும் திருமேனியிலிருநது அநேக ரூபங்கள் உண்டானபோதிலும் அந்தத்திருமேனியானது முன்போலவேயிருக்கிறது. அந்தத் திருமேனி பளபளப்பாயும் நல்ல வாஸனையுள்ளதாயும் புஷ்பம் போல் மிருதுவாயுமிருக்கிறது. திருமேனி பொதுவாயும் அழகாயிருக்கிறது. அதின் ஒவ்வொரு அவயவமும் அழகாயிருக்கின்றது. அதில் கிழத்தனம் முதலான தோஷங்களில்லை. எப்போதும் இளமைப் பருவமுள்ளதாயிருக்கிறது. இதுபோன்ற அநேக குணங்கள் அந்தத் திருமேனியிலிருக்கின்றன. அவைகளின் உயர்வை அளவிடமுடியாது. அதை அநுபவிக்கும்போது ஒவ்வொரு நிமிஷமும் புதியதுபோல் தோன்றும். அது மிகவும் ஆச்சரியமாயிருக்கிறது.

குணம்—பகவானிடத்தில் எல்லா நல்ல குணங்களுமிருக்கின்றன. உலகத்தில் ஒவ்வொருவரிடத்தில் ஒவ்வொரு குணமிராது. பகவானிடத்திலோ எல்லா குணங்களும் சேர்ந்திருக்கின்றன. ஒருகுணம் இல்லை என்பது இல்லை. உப்பளங்களிலிருந்து எல்லா விடங்களுக்கும் உப்பைக்கொண்டு போகிறார்கள். அதுபோல பகவானுடைய குணங்களின் கோடியில் ஒருபங்கு அவன் அநுக்கிரஹத்தாலே மற்றவர்களுக்கு வருகின்றன. அவைகள் அவன் கொடுத்த பிச்சை. மேலும், ஆற்றின் பிரவாஹத்தை ஸமுத்ரம்தான் தாங்கும், ஏரி எவ்வளவு பெரிதாயிருந்தாலும் தாங்கிக்கொள்ள முடியாது. அப்படியே குணஙகள் எல்லாவற்றையும்

தாங்கும்படியான இடம் பகவான்தான். ஒரு குணமாயிருந்தாலும் பகவானுடைய குணம்போல அளவில்லாமலிருந்தால் எவன் அதை நிர்வஹிக்கக்கூடும். தயையென்பது ஒரு நல்லகுணம். அதையுடையவன் மற்றவர்களுடைய துக்கத்தைப் போக்கும்படி வேலை செய்வன். அந்த தயை நல்லவேளையாய் நம்மைப்போலொத்தவர்களுக்கு குடும்பத்தில் மட்டிலோ அல்லது ஊரார் மட்டிலோ அளவு பட்டிருக்கிறது. அப்படியில்லாவிட்டால் எல்லாருடைய துக்கத்தையும் போக்க ஆசைப்பட்டு முடியாமல் செத்துப்போய் விடுவோம். இந்த குணங்களில் ஆறுகுணங்களை ஷாட்குண்யமென்று சொல்லுகிறது. அவைகளாவன—ஞானம்-பலம்-ஐசுவரியம்—வீர்யம்-சக்தி-தேஜஸ்ஸு-என்று. பகவான் இயற்கையாகவே எல்லா வஸ்துக்களையும் ஒரேகாலத்தில் எப்போதும் பிரத்தியக்ஷத்தாலே பார்த்துக் கொண்டிருக்கிறான். இந்த குணத்திற்கு ஞானமென்று பெயர். அவன் எல்லாவுலகத்தையும் ஒவ்வொன்றிலும் நுழைந்திருந்து அதைத் தாங்குகிறான். இப்படிச் செய்யாவிட்டால் எதுவும் வஸ்துவாயிருக்கமாட்டாது. இந்த குணத்திற்குப் பலம் என்று பெயர். அவன் எல்லாருக்குமுள்ளேயிருந்து அவர்களையேவி அவர்களைக்கொண்டு வேலை செய்கிறான். இந்த குணத்திற்கு ஐசுவரியமென்று பெயர். இப்படி எல்லா வஸ்துக்களையும் உண்டு பண்ணியும் எப்போதும் சுமந்துகொண்டும் ஏவிக்கொண்டுமிருப்பதனாலே ஒருவிதக் களைப்பு அவனுக்கில்லை. இந்த குணத்திற்கு வீர்யம் என்று பெயர். ஒருவராலும் செய்யக்கூடாத வேலைகளை அவன் செய்கிறான். இதற்குச் சக்தியென்று பெயர். அவன் செய்ய நினைப்பதை ஒருவனும் தடுக்கமுடியாது. அவனை எவனும் அவமானப்படுத்த முடியாது. அவன் எல்லாரையும் அவமானப்படுத்துவன். இதற்குத் தேஜஸ்ஸு என்று பெயர். இந்த ஆறுகுணங்களுக்கும் சேர்ந்து (ஷட்கு) பகமென்று பெயர். அவைகளையுடையவன் பகவான். இந்த குணங்களால் பரத்வம் (உயர்த்தி) ஏற்படுகிறது. இந்த குணங்களைப் பார்க்கும்போது மஹாபாபிகளானநாம் பகவானிடம் போகப்பயப்படுவோம். அந்த பயத்தைத் தீர்த்து நம்மைத் தன்னிடம் அழைத்துக் கொள்வதற்காக வேறு சில குணங்களை வைத்துக் கொண்டிருக்கிறான். அவைகளாவன—வாத்ஸல்யம், ஸௌ

லப்யம், ஸௌசீல்யம், காருண்யம் முதலானவைகள். வாத்ஸல்ய மென்கிற குணத்தாலே அவன் ஜீவன்களிடத்தில் மிகுந்த ஆசையுள்ள வனாயிருக்கிறான். அதனாலேயவர்கள் தன்னைக் கேட்டுக்கொண்டால் அவர்களுடைய தோஷங்களைக்கவனிக்கிறதில்லை ஸௌலப்யம் என்கிற குணத்தாலே எவர்கள் பக்தியுடன் எப்படி ஸேவை ஸாதிக்க வேணுமென்று வருந்திக் கேட்கிறார்களோ, அவர்களுக்கு அப்படியே வந்து ஸேவைஸாதிக்கிறான். ஸௌசீல்யமென்கிற குணத்தாலே தன் பெருமையை நினையாமல் இடைவிடாமல் மிகுந்த தாழ்ந்தவர்களுடன் சேர்ந்திருக்கிறான். காருண்யமென்பதாலே ஜீவன்களுடைய கஷ்டங்களைப் போக்குவதற்கு ஆசைப்பட்டுப் பலவிதமாய் பாடுபடுகிறான். இவைபோன்ற நல்ல குணங்கள் கணக்கில்லாமல் அவனிடமிருக்கின்றன. அவைகள் அவனிடம் இயற்கையாகவேயுள்ளன. அவைகளின் மேன்மையை யளவிட முடியாது.

நகைகளும், ஆயுதங்களும்—பகவானுடைய நகைகளும் ஆயுதங்களும் அவன் திருமேனிக்குப் பொருந்தினதாயிருக்கின்றன. அவைகளில் ஒருவிதமான தோஷங்களும் கிடையாது. மிகவும் மிருதுவாயும் ஆச்சரியமாயுமிருக்கின்றன. ஆயுதங்கள் நினைக்க முடியாத சக்தியுடையதாயும், நகைகள் என்றே சொல்லலாம்படி அழகுள்ளவைகளாயு மிருக்கின்றன.

அவருக்கு மஹாலக்ஷ்மீ பத்நீ. அவள் ஸ்வரூபத்தாலும் திருமேனியாலும் குணங்களாலும் பகவானுக்குத்தகுந்தவளாயும் அவனுக்கு மிகுந்த ஸந்தோஷத்தை யுண்டுபண்ணக் கூடியவளாயுமிருக்கிறாள். அவள் பகவானைப்போலிருப்பது மல்லாமல் அவனுக்கு மேற்பட்டவளென்றும் அவளைச் சொல்லலாம். எல்லா ஸம்பத்தையும் அவள் கொடுக்கிறவள். அப்படிப்பட்டவள் பகவானை ஆசைப்பட்டு ஒருபோதும் விட்டுப்பிரிய மாட்டேனென்று இருந்தால் அவன் பெருமையைச் சொல்ல வேண்டுமோ ?

ஸ்ரீ வைகுண்ட மென்கிறவிடத்தில் ஆதிசேஷன், கருடன், விஷ்வக்ஸேநர் முதலான நித்யர்களும், ஸம்ஸாரத்தைவிட்டு முக்தியடைந்தவர்களும் அளவிடக்கூடாத அறிவுடன் பகவானுடைய அபிப்ராயத்தையறிந்து அவனுக்கு எல்லாவிதமான வேலைகளையும்

செய்து கொண்டிருக்கிறார்கள். அவ்விடத்தில் எல்லாவிதமான போகங்களைக் கொடுக்கும் வஸ்துக்களும், போகத்தை அநுபவிக்கத்தகுந்த இடங்களும், போகத்தை யநுபவிக்கும்போது உதவுகிற கருவிகளும் நிறைந்திருக்கின்றன. பசிக்கிறவனுக்குக் கிடைக்கும் நல்ல ஆஹாரம் போகத்தை கொடுக்கும் வஸ்து அதைவிட்டி விருந்து சாப்பிடுகிறான், அது போகஸ்தானம். வாழையிலையில் வைத்துக்கொண்டு காய்கறிகளுடனும் ஊர்காயுடனும் சாப்பிடுகிறான், அந்தஇலையும் காய்கறியும் ஊர்காயும்போகஉபகரணங்கள். அது மிகஆச்சரியமான இடம். பகவானிருக்குமிடமான ஸ்ரீ வைகுண்டமென்பது அவனுடைய ஒருவிபூதி, அதாவது அவனாலே ஆளப்பட்டது. அதில் காலத்தினாலே இவ்விடத்தில்போல ஒருவித மாறுபாடுகள் கிடையாது. பகவானுடைய ஸங்கல்பத்துக்குத் தகுந்தபடி மாறுகிறது. ஒருமண்டபம் உண்டாகவேணுமென்று அவன் எண்ணினால் அது உண்டாகிறது. போகவேண்டுமென்றால் அது போகிறது. எப்போதுமிருக்கவேணுமென்றால் அது அழிவில்லாமல் ஒரேவிதமாயிருக்கிறது. ஆகையாலே அந்த விபூதியை நித்ய விபூதியென்று சொல்லுகிறது. மற்றொரு விபூதி பிரகிருதிமண்டலம். இதில் அனேகப் பிரும்மாண்டங்கள் இருக்கின்றன. பிரும்மாண்டமென்பது ஒரு பிரும்மாவின் வீடு. அதில் பதினாலுலோகங்களிருக்கின்றன. அது பிரும்மாவுக்குப் பதினான்கு கட்டுள்ள வீடு. இவ்விதமான பிரும்மாண்டங்கள் கணக்கில்லாமலிருக்கின்றன. அவைகளை ஸிருஷ்டித்துக் காப்பாற்றிக் கடைசியில் அழித்துவிடுகிறான். இப்படிப் பிரளயம் என்கிற காலம் கழிந்தபிறகு அவைகளையுண்டு பண்ணுகிறான். ஸிருஷ்டிக்குப் பிரயோஜனம் என்னவென்றால்—ப்ரகிருதி மண்டலத்தில் கர்மத்தினால் கட்டுப்பட்டிருக்கும் ஜீவன்கள் தன்னைத்தெரிந்து கொண்டு தன்னிடம்வர முயற்சி செய்வதற்காக உலகத்தை யுண்டு பண்ணி அவைகளுக்கு உடம்புகளையும் கண் முதலான 1 இந்திரியங்களையும் கொடுக்கிறான். அவர்

---

1 இந்திரியமென்பது—ஜீவன் ஒன்றைத் தெரிந்துகொள்வதற்கும், ஒரு வேலையைச் செய்வதற்கும் அநுகூலமான கருவி. இது மிகவும் ஸூக்ஷ்மமானது. ஒன்றைப் பார்ப்பதற்குக் கருவியாயிருப்பது சக்ஷுஸ் என்ற இந்திரியம். சக்ஷுஸ் என்றால் கண், அந்த இந்திரியமிருக்கிற

கள் உடம்பும் இந்திரியங்களும் இழுத்த வழிபோய் தாழ்ந்த ஸு-கங்களை ஆசைப்பட்டு அதற்காகச் செய்யக்கூடாததைச் செய்து, செய்ய வேண்டியவைகளை விட்டுவிட்டு இருக்கும்போது ஸிருஷ்டி பண்ணுங்காலத்திலிருந்த பாபத்தையும் இப்போதிருக்கும் பாபங்களையும் பார்க்கும்போது, ஒன்றுக்கு கோடிபங்காக ஆகியிருந்தது. அதைப்பார்த்து, "இவன் பாபங்களைப் போக்குவதற்கன்றோ இவைகளைக் கொடுத்தோம் இப்படி வளர்த்து விட்டானே, இவைகள் இல்லாவிட்டால் பாபம் வளராமலாவது இருக்குமே" என்று எண்ணி தயையினாலே தான்கொடுத்த உடம்புகளையும் இந்திரியங்களையும் வாங்கிவிடுகிறான் இதுதான் ஸம்ஹாரம் இப்படி ஜகத்தையுண்டு பண்ணி அதைக் காப்பாற்றி அதை அழிப்பதாகிற வேலைகளைப் பகவான் விளையாட்டாகச் செய்கிறான் இதை லீலையென்றும், இந்தப் பிரகிருதி மண்டலத்தை லீலாவிபூதி யென்றும் சொல்லுகிறது நித்ய விபூதியும் லீலாவிபூதியும் பகவானுடைய ஸொத்துக்கள்

இடத்தையும் கண் என்று சொல்லுகிறது இப்படியே சப்தத்தைக் கேட்பதற்கு வேண்டிய கருவி ச்ரோத்ரம்-(காது) ஒரு வஸ்துவின் ருசியைத் தெரிவிக்கும் கருவி ரஸநம்—(நாக்கு) ஒரு வஸ்துவின் வாஸனையைத் தெரிவிக்கும் கருவி க்ராணம்-(மூக்கு) சூடு, குளுமை, மெதுவாயிருத்தல் முதலானவைகளைக் காட்டும் கருவி த்வக்—இது ஒருவன் உடம்பில் எங்குமிருக்கிறது. இந்த ஐந்தும் ஞான-இந்திரியங்கள் பேசுவதற்கு வேண்டிய கருவி வாக்கு. ஒரு வேலையைச் செய்யுங்கருவி கை. ஓரிடத்திற்குப் போவதற்கும் வருவதற்கும் வேண்டியது கால். உடம்பின் மலத்தைக் கழிக்கும் கருவி—பாயு ஆனந்தத்தையுண்டாக்கும் கருவி-உபஸ்தம் இந்த ஐந்தும் கர்மேந்திரியங்கள் ஐந்து ஞானேந்திரியங்களையும், ஐந்து கர்மேந்திரியங்களையும் தனக்கு ஸாதநமாகக் கொண்டு வேலைசெய்கிற கருவி மனது வண்டியில் பூட்டின குதிரைகளுக்கு கடிவாளம்போல இந்திரியங்களுக்கு மனது இருக்கிறது. மனதுள்பட பதினொன்று இந்திரியங்களும் ஜீவனுடன் எப்போதும் சேர்ந்திருக்கின்றன. மரணகாலத்தில் உடம்பைவிட்டுப் போகும்போது கூடப் போகின்றன திரும்பிப் பிறக்கும்போது கூட வருகின்றன அவன் முக்தி அடைகிற காலத்திலேதான் அவனை விடுகின்றன, ஸ்ருஷ்டி காலத்தி லன்றோ பிரளயகாலம் வரையிலிருக்கின்றன.

இவ்விதமான பகவானை ஸ்ரீ வைகுண்டத்தில் நித்யர்களும் முக்தர்களும் அநுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். அப்படியே நாமும் பகவானை அவ்விடம்போய் அநுபவிக்கத் தகுந்தவர்கள். நமக்குப் பாத்தியமுமுண்டு. ஆனால் நாம் அநாதியான அக்ஞானத்தினால் (அறிவின்மையால்) நம்மையுள்ளபடி தெரிந்து கொள்ளாமல், உடம்பை ஆத்மாவாக எண்ணிக்கொண்டு, அதற்கும் அதைச் சேர்ந்தவர்களுக்கும் பாடு படுகிறோம். பகவானுடைய அநுபவத்தை நாம் தெரிந்து கொள்ளாமலிருப்பதாலே, மிகவும் தாழ்ந்த ஸுகங்களை ஆசைப்பட்டு பகவானுடைய கட்டளைகளைமீறி நடக்கிறோம். அவன் எல்லாருக்கும் பொதுவாயிருப்பதாலும், ஜகத்தை வைத்து ஆளுகிறவனாகையாலும் கர்மத்துக்குத் தகுந்தபடி பலன் கொடுக்கிறேனென்று ஒருசட்டம் ஏற்பாடு செய்திருக்கிறான். ஆகையால் நம் கர்மத்தினால் அவன் நம்மை ஸம்ஸாரமாகிற பெருஞ்சுழலில் போடுகிறான். அதிலிருந்து நாம் மிகுந்த கஷ்டத்தை அநுபவிக்கிறோம். நாம் இதிலிருந்து வெளிப்பட்டுப் பகவானிடம் போவதற்கு பக்தியோகமென்று ஓர்வழி ஏற்பட்டிருக்கிறது. அதாவது—ஒவ்வொரு நாளும் ஒருகாலத்தில் பகவானை வேறு எண்ணங் கலக்காமல்,இடைவிடாமல், பிரீதியுடன் நினைப்பது. இப்படிச் செய்வதற்கு ஜீவன் தன் ஸ்வரூபத்தை உள்ளபடியே பார்க்க வேண்டியது. அதற்காகக் கர்மயோகமென்றும் ஞானயோகமென்னும் இரண்டு அங்கங்கள் ஏற்பட்டிருக்கின்றன. மிகுந்த பாக்கியத்தாலே ஸம்ஸாரத்தில் வெறுப்பும் பகவானிடத்தில் ஆசையும் உண்டாகி, அவனிடம் போவதற்குத் துடிக்கிறவன் பக்தி யோகம் செய்யாமலே,பகவானைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளலாம். இது பிரபத்தி. இந்த பக்தி பிரபத்தியிரண்டும் அவைகளின் அங்கங்களும் வேதத்தில் சொல்லப்படுகின்றன. அவைகளை ஜனங்களுக்கு அடிக்கடி நன்றாய் சொல்லிக் கொடுப்பதற்காக அநேக ரிஷிகளையும், ஆழ்வார்களையும், ஆசாரியர்களையும் பகவான் இந்த லோகத்திற்கு அனுப்புகிறான். தானு மிந்த பூமியில் அவதாரம் செய்கிறான்.ஏனென்றால், அவதாரம் பண்ணாமல் போனால்அவனையுள்ளபடி ஒருவராலும் அறியமுடியாமையால், ஞானத்தாலும் சக்தியாலும் உயர்ந்த பிரும்மா ருத்திரன் இந்திரன் முதலானவர்களுக்குங்கூட அறியவும்

தியானஞ் செய்யவும் பூஜை செய்யவும் முடியாது. அப்படியிருக்க நமக்குக்கேட்பானேன்? ஆகையால் எல்லாரும் தன்னையறிந்து அடைவதற்காக மிகுந்த தயையினால் அவனே அந்தந்த லோகங்களிலே அந்தந்த ஜாதிகளில் அததற்குத் தகுந்தபடி தன் திருமேனியைப் பண்ணிக்கொண்டு, தன்னுடைய ஸ்வபாவங்கள் ஒன்றையும் விடாமல்,வந்து பிறக்கிறான். அப்பப்போது ஜனங்கள் அவனுடைய ஆச்சரியங்களான செய்கைகளைக்கண்டு அவனைத் தெய்வமென்று தெரிந்து கொண்டு, அவனைப்பூஜித்து, தர்மம்—அர்த்தம்—காமம்—என்கிற புருஷார்த்தங்களையும், மோக்ஷமென்கிற உயர்ந்த பலனையும் பெறுகிறார்கள்.

இப்படிச் செய்த அவதாரங்களில் கிருஷ்ணாவதாரம் ஒன்று. அஸுரர்களான ராஜாக்களாகிற சுமைகளைத் தாங்கமுடியாமையால் வருத்தப்பட்ட பூமிதேவியினுடைய வேண்டுகோளின்பேரில், தன்னைஒருவழியாலும் அறியமுடியாத நம்மைப்போன்றவர்களும் தன்னை அடைவதற்காகப் பூமியில் எல்லாரும் பார்க்கும்படி பகவான் யமுனையாற்றங்கரையில் மதுரை என்கிற பட்டிணத்தில் வஸுதேவருக்கும் தேவகிக்கும் பிள்ளையாகவந்துபிறந்தருளினான். எல்லாருடைய மனதையும் கண்களையும் இழுக்கும்படியான லீலைகளைச் செய்தான். பூதனை, வண்டிரூபமான அஸுரன், இரட்டையான அர்ஜுநமரம், அரிஷ்டன், பிரலம்பன், தேநுகன், காளியன்கேசி, குவலயாபீடம்,சாணூரன் முதலானமல்லர்கள், கம்ஸன்—இவர்களை ஸம்ஹாரம் பண்ணினான். மிகுந்தப் பிரீதியோடுகூடிய பார்வையினாலும், அமிருதம்போன்ற பேச்சுக்களாலும் எல்லாரையும் ஸந்தோஷப்படுத்தினான். தன்னுடைய மிகுந்த அழகாலும் ஸௌசீல்யம் என்கிற குணத்தாலும் அக்ரூரர், மாலைகட்டி முதலானவர்களைப் பரமபாகவதர்களாகச் செய்வித்தான். பாரத யுத்தத்தில் சண்டை போடவந்த அர்ஜுநனை உத்ஸாஹப்படுத்துகிற வியாஜத்தினால், வேதத்தில் சொன்னபக்தி யோகத்தையும், பிரபத்தியையும் அர்ஜுநனுக்குச் சொல்லி, உலகத்துக்கு வெளியிட்டான். இதுதான் இந்த அவதாரம் செய்ததற்கு முக்கியமான பிரயோஜநம். பூபாரத்தை இறக்குவது என்பது வியாஜமாத்திரம். அது நினைவாலேயே செய்யலாம். அதற்கு அவதாரம் செய்ய வேண்டியதில்லை.

இப்படி கீதையை இந்த விடத்தில், இநத காலத்தில், இந்த ஸமயத்தில் அர்ஜுநனுக்கு உபதேசம் பண்ணினனென்று முதல் அத்தியாயம் சொல்லுகிறது. பாண்டவர்களுக்கும் துர்யோதன னுக்கும் சண்டை ஆரம்பிக்கையில் பகவான் புருஷோத்தமனையும், ஸர்வேசுவரனையு மிருந்தபோதிலும், தன்னையடைந்தவர்களிடத் தில் ஆசையாலே அர்ஜுநனை யஜமாநனாக ரதத்தில் வைத்து, எல் லாரும் பார்க்கும்படி தான் வண்டியோட்டினன். திருதராஷ் ட்ரன ஸ்ரீ கிருஷ்ணனைப் பகவானென்றும், அவன் பாண்டவர்க ளிடத்தில் ஆசையுள்ளவனையிருக்கிறனென்றும் அவன் உதவியாலே அவர்களுக்கே ஜயம் கிடைக்குமென்றும், தன் பிள்ளைகளுக்கு ஜயம் கிடைக்காதென்றும் தெரிநதிருந்தபோதிலும், வெளிக்கண் கெட்டதுபோல் பிள்ளைகளிடத்தில் ஆசையாலே உட்கண்ணும் கெட்டுப்போனவனய், அவர்களுக்கு ஜயம் கிடைக்கமாட்டாதா என்று எண்ணத்தினலே ஸஞ்ஜயனைக்கேட்டான். ஸஞ்ஜயன் வியாஸருடைய சிஷ்யன். அவர் ஸஞ்ஜயருக்குத் தன் அநுக்கிரஹ த்தினலே தூரதேசத்தில் நடக்கும் ஸங்கதிகளைப் பார்க்கவும், தூர தேசத்தில் நடக்கும் பேச்சுக்களைக் கேட்கவும் சக்தியுண்டுபண்ணி ஹஸ்திநாபுரத்திலிருந்துகொண்டே யுத்தக்களத்தில் நடக்கும் ஸங் கதிகளைத் திருதராஷ்டிரனுக்குச் சொல்லும்படி சொல்லியிருந்தார்.

𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰 𑌉𑌵𑌾𑌚—

𑌧𑌰𑍍𑌮𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇 𑌕𑍁𑌰𑍁𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇 𑌸𑌮𑌵𑍇𑌤𑌾 𑌯𑍁𑌯𑍁𑌤𑍍𑌸𑌵𑌃 ।
𑌮𑌾𑌮𑌕𑌾𑌃 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌶𑍍𑌚𑍈𑌵 𑌕𑌿𑌮𑌕𑍁𑌰𑍍𑌵𑌤 𑌸𑌂𑌜𑌯 ॥ ||௧||

𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚—

𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌤𑍁 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌨𑍀𑌕𑌂 𑌵𑍍𑌯𑍂𑌢𑌂 𑌦𑍁𑌰𑍍𑌯𑍋𑌧𑌨𑌸𑍍𑌤𑌦𑌾 ।
𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌮𑍁𑌪𑌸𑌂𑌗𑌮𑍍𑌯 𑌰𑌾𑌜𑌾 𑌵𑌚𑌨𑌮𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 ॥ ||௨||

---

(1) புண்ணியஞ் செய்பத்தகுந்த குருக்ஷேத்திரம் என்ற விடத் தில், என் பிள்ளைகளும் என் தம்பி பாண்டுவின் பிள்ளைகளும் சண்டைக் காகச் சேர்ந்தார்களே. அவர்கள் என்ன செய்தார்கள்.

(2) ஸஞ்ஜயன் சொல்லுகிறன். துர்யோதநன் சண்டைக்காகத் தயாராயிருந்த பாண்டவர்களுடைய ஸேனையைப் பார்த்து, தன்னு டைய ஆசாரியனை துரோணசாரியரிடம் போய் சொன்னன்.

பஶ்யைதாம் பாண்டுபுத்ராணாமாசார்ய மஹதீம் சமூம் ।
வ்யூடாம் த்ருபதபுத்ரேண தவ ஶிஷ்யேண தீமதா ॥ ௩ ॥

அத்ர ஶூரா மஹேஷ்வாஸா பீமார்ஜுநஸமா யுதி ।
யுயுதாநோ விராடஶ்ச த்ருபதஶ்ச மஹாரத: ॥ ॥ ௪ ॥

த்ருஷ்டகேதுஶ்சேகிதாந: காஶிராஜஶ்ச வீர்யவாந் ।
புருஜித்குந்திபோஜஶ்ச ஶைப்யஶ்ச நரபுங்கவ: ॥ ॥ ௫ ॥

யுதாமந்யுஶ்ச விக்ராந்த உத்தமௌஜாஶ்ச வீர்யவாந் ।
ஸௌபத்ரோ த்ரௌபதேயாஶ்ச ஸர்வ ஏவ மஹாரதா: ॥ ௬ ॥

அஸ்மாகம் து விஶிஷ்டா யே தாந்நிபோத த்விஜோத்தம ।
நாயகா மம ஸைந்யஸ்ய ஸம்ஜ்ஞார்தம் தாந்ப்ரவீமி தே ॥

பவாந் பீஷ்மஶ்ச கர்ணஶ்ச க்ருபஶ்ச ஸமிதிஞ்ஜய: ।
அஶ்வத்தாமா விகர்ணஶ்ச ஸௌமதத்திஸ்ததைவ ச ॥ ॥ ௮ ॥

---

(3) ஓ ஆசாரியனே! உமது சிஷ்யனும் துருபதமஹாராஜனின் பிள்ளையும் தெரிந்தவனுமான த்ருஷ்டத்யும்நனால் வகுக்கப்பட்ட பாண்டவர்களுடைய பெரிதான இந்த ஸேனையைப் பாரும்.

(4—5—6) இந்த ஸேனையில் பீமனும் அர்ஜுநனும்போல் சூரர்களான, எதிரிகளை வெல்லக்கூடிய சக்தியுள்ள பெரிய வில்லாளிகள் இருக்கிறார்கள். அவர்களாவன—யுயுதாநன், விராடன், மஹாரதனான த்ருபதன், த்ருஷ்டகேது, சேகிதாநன், வீர்யமுள்ள காசீராஜன், புருஜித், குந்திபோஜன், மனிதச்ரேஷ்டனான சைப்யன், பராக்கிரமமுள்ள யுதாமன்யு, வீர்யமுள்ள உத்தமௌஜன், ஸுபத்ரையின் பிள்ளையான அபிமன்யு, த்ரௌபதையின் பிள்ளைகள். இவர்களெல்லாரும் மஹாரதர்கள். (எவன் தன்னையும் ஸாரதியையும் குதிரைகளையும் காப்பாற்றிக்கொண்டு யுத்தஞ் செய்கிறானோ அவன் மஹாரதன்)

(7) நம்ம ஸைந்யத்திற்குத் தலைவர்களான, மிகுந்த பலசாலிகளானவர்களையும் தெரிவதற்காகச் சொல்லுகிறேன். அதைக் கேளும்.

(8—9) நீர், பீஷ்மர், கர்ணன், சண்டையில் ஜயத்தை யடையக்கூடிய க்ருபன், அச்வத்தாமா, விகர்ணன், ஸௌமதத்தி இவர்கள் தவிர, என் விஷயத்தில் உயிரைவிடத் துணிந்தவர்களான அனேக சூர

𑌅𑌨𑍍𑌯𑍇 𑌚 𑌬𑌹𑌵𑌃 𑌶𑍂𑌰𑌾 𑌮𑌦𑌰𑍍𑌥𑍇 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌜𑍀𑌵𑌿𑌤𑌾𑌃 ।
𑌨𑌾𑌨𑌾𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌹𑌰𑌣𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌯𑍁𑌦𑍍𑌧𑌵𑌿𑌶𑌾𑌰𑌦𑌾𑌃 ॥ ॥௯॥
𑌅𑌪𑌰𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌂 𑌤𑌦𑌸𑍍𑌮𑌾𑌕𑌂 𑌬𑌲𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌾𑌭𑌿𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌮𑍍 ।
𑌪𑌰𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌂 𑌤𑍍𑌵𑌿𑌦𑌮𑍇𑌤𑍇𑌷𑌾𑌂 𑌬𑌲𑌂 𑌭𑍀𑌮𑌾𑌭𑌿𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌮𑍍 ॥ ॥௰॥
𑌅𑌯𑌨𑍇𑌷𑍁 𑌚 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌯𑌥𑌾𑌭𑌾𑌗𑌮𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 ।
𑌭𑍀𑌷𑍍𑌮𑌮𑍇𑌵𑌾𑌭𑌿𑌰𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑍁 𑌭𑌵𑌨𑍍𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵 𑌏𑌵 𑌹𑌿 ॥ ॥௧௧॥

துர்யோதநன் பீமனால் காப்பாற்றப்பட்ட பாண்டவர்களுடைய ஸேனையையும், பீஷ்மாசாரியரால் காப்பாற்றப்பட்ட தன்னுடைய ஸேனையையும் பார்த்து, தன்னை ஜயிக்கிற விஷயத்தில் அந்த ஸேனை போதுமென்றும், தான் அவர்களை ஜயிக்கிற விஷயத்தில் தன்பலம் போராதென்றும் ஆசாரியனிடத்தில் சொல்லி, தானாகவே (திடமென்று) மனவருத்தப்பட்டான்.

𑌤𑌸𑍍𑌯 𑌸𑌂𑌜𑌨𑌯𑌨𑍍 𑌹𑌰𑍍𑌷𑌂 𑌕𑍁𑌰𑍁𑌵𑍃𑌦𑍍𑌧𑌃 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌃 ।
𑌸𑌿𑌂𑌹𑌨𑌾𑌦𑌂 𑌵𑌿𑌨𑌦𑍍𑌯𑍋𑌚𑍍𑌚𑍈𑌃 𑌶𑌙𑍍𑌖𑌂 𑌦𑌧𑍍𑌮𑍌 𑌪𑍍𑌰𑌤𑌾𑌪𑌵𑌾𑌨𑍍 ॥ ॥௧௨॥
𑌤𑌤𑌃 𑌶𑌙𑍍𑌖𑌾𑌶𑍍𑌚 𑌭𑍇𑌰𑍍𑌯𑌶𑍍𑌚 𑌪𑌣𑌵𑌾𑌨𑌕𑌗𑍋𑌮𑍁𑌖𑌾𑌃 ।
𑌸𑌹𑌸𑍈𑌵𑌾𑌭𑍍𑌯𑌹𑌨𑍍𑌯𑌨𑍍𑌤 𑌸 𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑍁𑌮𑍁𑌲𑍋𑌽𑌭𑌵𑌤𑍍 ॥ ॥௧௩॥

பீஷ்மாசாரியர் அவனுடைய வருத்தத்தைப்பார்த்து அவனுக்கு ஸந்தோஷத்தை யுண்டுபண்ணுவதற்காகச் சண்டையில்

---

ர்களிருக்கிறார்கள். அவர்களெல்லாரும் அநேக ஆயுதமுள்ளவர்களாயும் சண்டையில் கெட்டிக்காரர்களாயு மிருக்கிறார்கள்.

(10–11) ஆனால் பீமஸேனனால் காப்பாற்றப்பட்ட அவர்களுடைய இந்த ஸேனை நம்மை ஜயிக்கப் போதுமானது. பீஷ்மரால் காப்பாற்றப்பட்ட அந்த நம்முடைய ஸேனையானது ஜயிக்கப் போதாதது. நீங்களெல்லாரும் அவரவர்கள் இருக்கவேண்டிய இடங்களில் இருந்துகொண்டு பீஷ்மரையே காப்பாற்றவேண்டும்.

(12) குருவம்சத்துப் பெரியவரும் தாதாவுமான பீஷ்மாசாரியர், அந்த துர்யோதனனுக்கு ஸந்தோஷத்தை யுண்டுபண்ணுவதற்காக, சிங்கம் கர்ஜிப்பதுபோல் இரைந்து கனைத்து சங்கை ஊதினார்.

(13) பிறகு அநேக சங்குகளையும் ஊதினார்கள். நகாரக்களையும் இன்னும் அநேகவிதமான வாத்யங்களையும் உடனே அடித்தார்கள். அந்த சப்தமானது மிகவும் பெரிதாயிருந்தது.

கக்ஷிக்காரர்கள் வழக்கமாகப் பண்ணும் ஸிம்ஹநாதத்தைப் பண்ணி சங்கையும் ஊதி, இன்னும் அனேகவித வாத்தியங்களை அடிக்கும்படி செய்து, அவைகளின சப்தத்தைக் கேட்கும்போதே தனக்குக் கட்டாயம் ஜயமுண்டாகுமென்று அவனுக்குத் தோன்றும்படி செய்தார்.

𑌤𑌤𑌃 𑌶𑍍𑌵𑍇𑌤𑍈𑌰𑍍𑌹𑌯𑍈𑌰𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍇 𑌮𑌹𑌤𑌿 𑌸𑍍𑌯𑌨𑍍𑌦𑌨𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑍌 ।
𑌮𑌾𑌧𑌵𑌃 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌶𑍍𑌚𑍈𑌵 𑌦𑌿𑌵𑍍𑌯𑍌 𑌶𑌙𑍍𑌖𑍌 𑌪𑍍𑌰𑌦𑌧𑍍𑌮𑌤𑍁𑌃 ॥ ॥கச॥

𑌪𑌾𑌞𑍍𑌚𑌜𑌨𑍍𑌯𑌂 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑍋 𑌦𑍇𑌵𑌦𑌤𑍍𑌤𑌂 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯𑌃 ।
𑌪𑍌𑌣𑍍𑌡𑍍𑌰𑌂 𑌦𑌧𑍍𑌮𑍌 𑌮𑌹𑌾𑌶𑌙𑍍𑌖𑌂 𑌭𑍀𑌮𑌕𑌰𑍍𑌮𑌾 𑌵𑍃𑌕𑍋𑌦𑌰𑌃 ॥கரு॥

𑌅𑌨𑌨𑍍𑌤𑌵𑌿𑌜𑌯𑌂 𑌰𑌾𑌜𑌾 𑌕𑍁𑌨𑍍𑌤𑍀𑌪𑍁𑌤𑍍𑌰𑍋 𑌯𑍁𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌰𑌃 ।
𑌨𑌕𑍁𑌲𑌃 𑌸𑌹𑌦𑍇𑌵𑌶𑍍𑌚 𑌸𑍁𑌘𑍋𑌷𑌮𑌣𑌿𑌪𑍁𑌷𑍍𑌪𑌕𑍌 ॥ ॥கசு॥

𑌕𑌾𑌶𑍍𑌯𑌶𑍍𑌚 𑌪𑌰𑌮𑍇𑌷𑍍𑌵𑌾𑌸𑌃 𑌶𑌿𑌖𑌣𑍍𑌡𑍀 𑌚 𑌮𑌹𑌾𑌰𑌥𑌃 ।
𑌧𑍃𑌷𑍍𑌟𑌦𑍍𑌯𑍁𑌮𑍍𑌨𑍋 𑌵𑌿𑌰𑌾𑌟𑌶𑍍𑌚 𑌸𑌾𑌤𑍍𑌯𑌕𑌿𑌶𑍍𑌚𑌾𑌪𑌰𑌾𑌜𑌿𑌤𑌃 ॥ ॥கஎ॥

𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑍋 𑌦𑍍𑌰𑍌𑌪𑌦𑍇𑌯𑌾𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌪𑌤𑍇 ।
𑌸𑍌𑌭𑌦𑍍𑌰𑌶𑍍𑌚 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍁𑌃 𑌶𑌙𑍍𑌖𑌾𑌨𑍍𑌦𑌧𑍍𑌮𑍁𑌃 𑌪𑍃𑌥𑌕𑍍𑌪𑍃𑌥𑌕𑍍 ॥

பிறகு எல்லா லோகத்திற்கும் ராஜாவாய் அர்ஜுநனுக்கு வண்டிக்காரனுயிருந்த ஸ்ரீ கிருஷ்ணனும் தேராளியான அர்ஜுநனும் அந்த சப்தத்தைக்கேட்டு மூன்று லோகங்களையும் ஜயிப்பதற்கு ஸாதநமான பெரிய தேரிலேயிருந்துகொண்டு மூன்று லோ

---

(14) பிறகு வெள்ளைக் குதிரைகள் கட்டின பெரிய தேரிலிருந்த அர்ஜுநனும் ஸ்ரீ கிருஷ்ணனும் அவரவர்களுடைய உயர்ந்த சங்குகளை ஊதினார்கள்.

(15—18) ஸ்ரீ கிருஷ்ணன் பாஞ்சஜந்யமென்பதையும் அர்ஜுநன் தேவதத்தமென்பதையும், சத்துருக்களுக்குப் பயத்தை யுண்டுபண்ணக்கூடிய பீமஸேனன் பௌண்ட்ரம் என்கிற பெரிய சங்கையும், குந்தியின் பிள்ளையான யுதிஷ்டிரமஹாராஜன் அநந்தவிஜயமென்ற சங்கையும், நகுலன் ஸுகோஷமென்ற சங்கையும், ஸஹதேவன் மணிபுஷ்பகமென்ற சங்கையும், பெரிய வில்லாளியான காசிராஜாவும், மஹாரதனை சிகண்டியும், திருஷ்டத்யும்நனும் விராடனும், ஒருவராலும் ஜயிக்க

கமும் நடுங்கும்படி மிகவுமுயர்ந்த பாஞ்சஜந்யம், தேவதத்தம் என்ற தங்கள் தங்கள் சங்கை ஊதினார்கள். பிறகு யுதிஷ்டிரர் பீமஸேனன் முதலானவர்கள் தங்கள் தங்கள் சங்கங்களை ஊதினார்கள்.

स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत् ।
नभश्च पृथिवीं चैव तुमुलो व्यनुनादयन् ॥௧௯॥

அந்த சப்தமானது துர்யோதனன் முதலான உம்முடைய பிள்ளைகளுடைய நெஞ்சுகளைப்பிளந்தது. தங்களுடைய ஸேனை இப்போதே செத்ததென்றே நினைத்தார்கள். மற்றவர்களுடைய நெஞ்சுகளைப் பிளக்கவில்லை. அவர்களுக்கு ஸந்தோஷத்துக்குக் காரணமாயிருந்தது. இப்படித் தன் பிள்ளைகளுக்கு ஜயம்வரவேண்டுமென்று ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிற த்ருதராஷ்ட்ரனுக்கு ஸஞ்ஜயன் சொன்னான்.

अथ व्यवस्थितान् दृष्ट्वा धार्तराष्ट्रान् कपिध्वजः ।
प्रवृत्ते शस्त्रसम्पाते धनुरुद्यम्य पाण्डवः ॥௨௦॥
हृषीकेशं तदा वाक्यमिदमाह महीपते ।

अर्जुनः—

सेनयोरुभयोर्मध्ये रथं स्थापय मेऽच्युत ॥
यावदेतान्निरीक्षेऽहं योद्धुकामानवस्थितान् ।
कैर्मया सह योद्धव्यमस्मिन् रणसमुद्यमे ॥ ॥௨௨॥

---

முடியாத ஸாத்யகியும், த்ருபதனும், த்ரௌபதியின் பிள்ளைகளும், கைபலமுள்ள ஸுபத்ரையின் பிள்ளையும் எல்லாரும் தனித்தனியாய் தங்கள் தங்கள் சங்கை ஊதினார்கள்.

(19) அந்தப் பெரிய சப்தமானது ஆகாசத்திலும் பூமியிலும் ப்ரதித்வநியை யுண்டுபண்ணினபோதிலும் த்ருதராஷ்ட்ரன் பிள்ளைகளுடைய ஹ்ருதயங்களையே பிளந்தது.

(20-21-22) பிறகு ஹநுமானைக் கொடியாகவுடைய அர்ஜுநன் சண்டைக்கு தயாராயிருக்கிற துர்யோதநன் முதலானவர்களைப் பார்த்து, சண்டைஆரம்பித்திருக்கும்போது வில்லைக் கையில் எடுத்துக்கொண்டு, க்ருஷ்ணனைப் பார்த்துச் சொன்னான்—இந்தச் சண்டையின் ஆரம்பத்தில் சண்டை செய்வதற்காக ஆசைப்பட்டு வந்திருக்கிறவர்களில்

𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌨𑌵𑌕𑍍𑌷𑍇𑌽𑌹𑌂 𑌯 𑌏𑌤𑍇𑌽𑌤𑍍𑌰 𑌸𑌮𑌾𑌗𑌤𑌾𑌃 ।
𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌸𑍍𑌯 𑌦𑍁𑌰𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌰𑍍𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌚𑌿𑌕𑍀𑌰𑍍𑌷𑌵𑌃 ॥

பிறகு சண்டைக்காகச் சேர்ந்திருக்கிற துர்யோதனன் முதலானவர்களைப்பார்த்து, லங்கையைக் கொளுத்தின ஹநுமாரைக் கொடியிலுடைய அர்ஜுநன், ஞானம் சக்தி முதலான ஆறுகுணங்களுக்கு இருப்பிடமும், நினைத்தமாத்திரத்தில் எல்லாலோகங்களையுண்டாக்குவது காப்பாற்றுவது அழிப்பது—இவைகளை விளையாட்டாகச் செய்பவனும், உயர்ந்தவனோ மட்டமோ எல்லாருடையவும் மனதையும் மற்ற இந்திரியங்களையும் எல்லாவிதமாய் அடக்கி ஆளுபவனும், தன்னை அடைந்தவர்களிடத்தில் எல்லையில்லாத ப்ரீதியினாலே இளப்பமென்று பாராமல் வண்டியோட்டுகிறவனாயுமிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணனை சண்டைபோடுவதற்காக வந்திருக்கிறவர்களை யுள்ளபடி பார்ப்பதற்காக, அப்படிப் பார்க்கத்தகுந்த இடத்தில் தேரை நிறுத்துமென்று சொன்னான்.

𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚—

𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑍋 𑌗𑍁𑌡𑌾𑌕𑍇𑌶𑍇𑌨 𑌭𑌾𑌰𑌤 ।
𑌸𑍇𑌨𑌯𑍋𑌰𑍁𑌭𑌯𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌸𑍍𑌥𑌾𑌪𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌰𑌥𑍋𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ॥௨௪॥
𑌭𑍀𑌷𑍍𑌮𑌦𑍍𑌰𑍋𑌣𑌪𑍍𑌰𑌮𑍁𑌖𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌚 𑌮𑌹𑍀𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌮𑍍 ।
𑌉𑌵𑌾𑌚 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌪𑌶𑍍𑌯𑍈𑌤𑌾𑌨𑍍 𑌸𑌮𑌵𑍇𑌤𑌾𑌨𑍍 𑌕𑍁𑌰𑍂𑌨𑌿𑌤𑌿 ॥

அந்த ஸ்ரீகிருஷ்ணனும் அவன் வினவுடனேயே பீஷ்மாசாரியர் துரோணாசாரியர் முதலான எல்லாராஜாக்களும் பார்த்துக் கொண்டிருக்கையில் அவன் சொன்னபடி செய்தான். உங்களைச் சேர்ந்தவர்களான துர்யோதனன் முதலானவர்கள் உங்களை ஜயிக்கிறது இப்படி யிருக்கிறதென்றும் சொன்னான்.

---

எவர்களுடன் நான் சண்டைபோடவேண்டியதோ, அவர்களை நான் பார க்கிறவரையில் என்னுடைய தேரை இரண்டு ஸேனைகளுக்கும் நடுவில் நிறுத்தும்.

(23) கெட்ட புத்தியுள்ள துர்யோதனனுக்கு ஸஹாயஞ் செய்வதற்காக இங்கே வந்திருக்கிறவர்களை நான் பார்க்கிறேன்—என்று.

(24–25) ஸஞ்ஜயன் சொல்லுகிறான்-இப்படி அர்ஜுநனால் சொல்லப்பட்ட ஸ்ரீ கிருஷ்ணன் இரண்டு ஸேனைகளுக்கும் நடுவில் தேரை நிறுத்தி, "அர்ஜுநா! இந்தச் சண்டைக்காக வந்து சேர்ந்திருக்கிற கௌரவர்களைப்பார்" என்று சொன்னார்.

𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌶𑍍𑌯𑌤𑍍 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍 𑌪𑌾𑌰𑍍𑌥𑌃 𑌪𑌿𑌤𑍄𑌨𑍍 𑌅𑌥 𑌪𑌿𑌤𑌾
𑌮𑌹𑌾𑌨𑍍 । 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌨𑍍 𑌮𑌾𑌤𑍁𑌲𑌾𑌨𑍍 𑌭𑍍𑌰𑌾𑌤𑍄𑌨𑍍 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌨𑍍
𑌪𑍌𑌤𑍍𑌰𑌾𑌨𑍍 𑌸𑌖𑍀𑌂𑌸𑍍𑌤𑌥𑌾 ॥ ॥௨௬॥

𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌾𑌨𑍍 𑌸𑍁𑌹𑍃𑌦𑌶𑍍𑌚𑍈𑌵 𑌸𑍇𑌨𑌯𑍋𑌰𑍁𑌭𑌯𑍋𑌰𑌪𑌿 ।
𑌤𑌾𑌨𑍍 𑌸𑌮𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌸 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌬𑌨𑍍𑌧𑍂𑌨𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍 ॥
𑌕𑍃𑌪𑌯𑌾 𑌪𑌰𑌯𑌾𑌽𑌽𑌵𑌿𑌷𑍍𑌟𑍋 𑌵𑌿𑌷𑍀𑌦𑌨𑍍𑌨𑌿𑌦𑌮𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 ।

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌃—

𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑍇𑌮𑌂 𑌸𑍍𑌵𑌜𑌨𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣 𑌯𑍁𑌯𑍁𑌤𑍍𑌸𑍁𑌂 𑌸𑌮𑍁𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 ॥௨௮॥
𑌸𑍀𑌦𑌨𑍍𑌤𑌿 𑌮𑌮 𑌗𑌾𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌮𑍁𑌖𑌂 𑌚 𑌪𑌰𑌿𑌶𑍁𑌷𑍍𑌯𑌤𑌿 ।
𑌵𑍇𑌪𑌥𑍁𑌶𑍍𑌚 𑌶𑌰𑍀𑌰𑍇 𑌮𑍇 𑌰𑍋𑌮𑌹𑌰𑍍𑌷𑌶𑍍𑌚 𑌜𑌾𑌯𑌤𑍇 ॥ ॥௨௯॥

𑌗𑌾𑌣𑍍𑌡𑍀𑌵𑌂 𑌸𑍍𑌰𑌂𑌸𑌤𑍇 𑌹𑌸𑍍𑌤𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌕𑍍𑌚𑍈𑌵 𑌪𑌰𑌿𑌦𑌹𑍍𑌯𑌤𑍇 ।
𑌨 𑌚 𑌶𑌕𑍍𑌨𑍋𑌮𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾𑌤𑍁𑌂 𑌭𑍍𑌰𑌮𑌤𑍀𑌵 𑌚 𑌮𑍇 𑌮𑌨𑌃 ॥ ॥௩௰॥

𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌾𑌨𑌿 𑌚 𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌾𑌨𑌿 𑌕𑍇𑌶𑌵 ।
𑌨 𑌚 𑌶𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌹𑌤𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌜𑌨𑌮𑌾𑌹𑌵𑍇 ॥ ॥௩௧॥

---

(26—27½) *அர்ஜுநன் அங்கு இரண்டுஸேனைகளிலும் தகப்பனார்கள்; பாட்டனார்கள், ஆசாரியர்கள், அம்மான்கள், கூடப்பிறந்தவர்கள், பிள்ளைகள், பேரன்கள், தோழன்கள், மாமனார்கள் இன்னும் வேண்டியவர்களிருப்பதைப் பார்த்தான். அவன் எல்லாபந்துக்களிப்படி யிருப்பதைப் பார்த்து மிகுந்தஇரக்கமுண்டாகி வருத்தப்பட்டு ஸ்ரீகிருஷ்ணனைப் பார்த்துச் சொல்லுகிறான்.*

(28—29) *கிருஷ்ணா! சண்டைபோட ஆசைப்பட்டு இங்கே வந்து சேர்ந்திருக்கிற இந்த என்னுடைய பந்துக்களின் கூட்டத்தைப் பார்த்து என் உடம்பு வருத்தப்படுகிறது. முக முலர்ந்து போகிறது. என் உடம்பில் ஒரு நடுக்கலும் ஓர் மயிர்கூச்சலுமுண்டாகிறது.*

(30) *காண்டீவம் என்கிற வில்லானது கையினின்றும் நழுவுகிறது. என் உடம்பின் தோலானது நெருப்பினால் கொளுத்தப் படுகிறதுபோலிருக்கிறது. எனக்கு நிற்கமுடியவில்லை. என் மனது சுற்றுகிறது.*

(31) *கெட்ட நிமித்தங்களை நான் பார்க்கிறேன். பந்துக்களைச் சண்டையில் கொன்று உண்டாகும் க்ஷேமம் இன்னதென்று தெரியவில்லை.*

ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண ந ச ராஜ்யம் ஸுகாநி ச |
கிம் நோ ராஜ்யேந கோவிந்த கிம் போகைர்ஜீவிதேந வா ||௩௨||
யேஷாமர்தே காங்க்ஷிதம் நோ ராஜ்யம் போகா: ஸுகாநி ச |
த இமேऽவஸ்திதா யுத்தே ப்ராணாம்ஸ்த்யக்த்வா தநாநி ச ||௩௩||
ஆசார்யா: பிதர: புத்ராஸ்ததைவ ச பிதாமஹா: |
மாதுலா: ஶ்வஶுரா: பௌத்ரா: ஶ்யாலா: ஸம்பந்திநஸ்ததா ||
ஏதாந்ந ஹந்துமிச்சாமி க்நதோऽபி மதுஸூதந |
அபி த்ரைலோக்யராஜ்யஸ்ய ஹேதோ: கிம் நு மஹீக்ருதே ||
நிஹத்ய தார்தராஷ்ட்ராந்ந: கா ப்ரீதி: ஸ்யாஜ்ஜநார்தந |
பாபமேவாஶ்ரயேதஸ்மாந் ஹத்வைதாநாததாயிந: ||௩௬||
தஸ்மாந்நார்ஹா வயம் ஹந்தும் தார்தராஷ்ட்ராந் ஸ்வபாந்தவாந் |
ஸ்வஜநம் ஹி கதம் ஹத்வா ஸுகிந: ஸ்யாம மாதவ || ||௩௭||

---

(32) நான் விஜயத்தையாவது ராஜ்யத்தையாவது ஸுகங்களையாவது ஆசைப்படவில்லை. நமக்கு ராஜ்யத்தினாலாவது போகங்களினாலாவது உயிரோடிருப்பதினாலாவது என்ன பிரயோஜனம்.

(33—35) எவர்களுக்காக நாம் ராஜ்யத்தையும் போகங்களையும் ஸுகங்களையும் தேடுகிறோமோ, அவர்கள் பிராணன்களையும் தனங்களையும் விட்டு விட்டுச் சண்டைக்கு வந்திருக்கிறார்கள். அவர்களாவன—ஆசாரியர்கள், தகப்பனார்கள், பிள்ளைகள், பாட்டனார்கள், அம்மான்கள், மாமனார்கள், பேரன்கள், மச்சுனன்கள், ஸம்பந்திகள் இவர்கள் எங்களைக் கொல்லுவதாயிருந்தாலும் மூன்று லோகங்களின் அதிகாரம் வருவதற்காகக்கூட அவர்களை நான் கொல்ல விரும்பவில்லை. இந்த பூமிக்காக எப்படி அவர்களைக் கொல்லுவேன்.

(36) திருதராஷ்டிரன் பிள்ளைகளைக்கொன்று எங்களுக்கு என்ன ப்ரீதி யுண்டாகும். இந்த ஆததாயிகளைக்கொல்லுவதாலே பாபமே நம்மிடம் வந்து சேரும். (நெருப்பு வைக்கிறவன், விஷம் கொடுக்கிறவன், ஆயுதத்தைக் கையில் எடுத்துக்கொண்டு கொல்ல வருகிறவன், பணத்தைத் திருடியவன், பூமியை அபஹரித்தவன், பத்நியை அபஹரித்தவன்-இந்த ஆறு பெயர்களும் ஆததாயிகள்)

(37) ஆகையாலே திருதராஷ்டிரன் பிள்ளைகளையும் அவர்கள் பந்துக்களையும் கொல்லுவது நமக்குத்தகுந்ததன்று. பந்துக்களைக்கொன்று எப்படி ஸுகமுள்ளவர்களாக இருப்போம்.

𑌯𑌦𑍍𑌯𑌪𑍍𑌯𑍇𑌤𑍇 𑌨 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌲𑍋𑌭𑍋𑌪𑌹𑌤𑌚𑍇𑌤𑌸𑌃 ।
𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑌕𑍃𑌤𑌂 𑌦𑍋𑌷𑌂 𑌮𑌿𑌤𑍍𑌰𑌦𑍍𑌰𑍋𑌹𑍇 𑌚 𑌪𑌾𑌤𑌕𑌮𑍍 ॥௩௮॥
𑌕𑌥𑌂 𑌨 𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑌸𑍍𑌮𑌾𑌭𑌿𑌃 𑌪𑌾𑌪𑌾𑌦𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑍁𑌮𑍍 ।
𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑌕𑍃𑌤𑌂 𑌦𑍋𑌷𑌂 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌦𑍍𑌭𑌿𑌰𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 ॥ ॥௩௯॥
𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑍇 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌃 𑌸𑌨𑌾𑌤𑌨𑌾𑌃 ।
𑌧𑌰𑍍𑌮𑍇 𑌨𑌷𑍍𑌟𑍇 𑌕𑍁𑌲𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌮𑌧𑌰𑍍𑌮𑍋𑌽𑌭𑌿𑌭𑌵𑌤𑍍𑌯𑍁𑌤 ॥௪௰॥
𑌅𑌧𑌰𑍍𑌮𑌾𑌭𑌿𑌭𑌵𑌾𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌣 𑌪𑍍𑌰𑌦𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌲𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌷𑍁 𑌦𑍁𑌷𑍍𑌟𑌾𑌸𑍁 𑌵𑌾𑌰𑍍𑌷𑍍𑌣𑍇𑌯 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌵𑌰𑍍𑌣𑌸𑌂𑌕𑌰𑌃 ॥
𑌸𑌂𑌕𑌰𑍋 𑌨𑌰𑌕𑌾𑌯𑍈𑌵 𑌕𑍁𑌲𑌘𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌕𑍁𑌲𑌸𑍍𑌯 𑌚 ।
𑌪𑌤𑌨𑍍𑌤𑌿 𑌪𑌿𑌤𑌰𑍋 𑌹𑍍𑌯𑍇𑌷𑌾𑌂 𑌲𑍁𑌪𑍍𑌤𑌪𑌿𑌣𑍍𑌡𑍋𑌦𑌕𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 ॥௪௨॥
𑌦𑍋𑌷𑍈𑌰𑍇𑌤𑍈𑌃 𑌕𑍁𑌲𑌘𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌵𑌰𑍍𑌣𑌸𑌂𑌕𑌰𑌕𑌾𑌰𑌕𑍈𑌃 ।
𑌉𑌤𑍍𑌸𑌾𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌜𑌾𑌤𑌿𑌧𑌰𑍍𑌮𑌾𑌃 𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌶𑍍𑌚 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌾𑌃 ॥ ॥௪௩॥

---

(38—39) இவர்கள் ராஜ்யம் வேண்டுமென்கிற ஆசையாலே புத்திகெட்டுப்போய் குலங்களை நாசம்பண்ணுவதாலே யுண்டான தோஷத்தையும், ஸ்நேஹிதர்களுக்குக் கெடுதல் பண்ணுவதாலுண்டாகும் பாபத்தையும் பார்க்காமல் போனபோதிலும், நாம இந்தப் பாபத்திலிருந்து விலகவேண்டுமென்று எப்படித்தெரிந்து கொள்ளாமலிருக்கக்கூடும்.

(40) குலங்கள் நாசத்தை யடைந்தால் குலங்களில் எப்போதுமுள்ள தர்மங்கள் போய்விடும். தர்மம் போனால் எல்லாக் குலங்களையும் அதர்மம் வந்து பீடிக்கும்.

(41) அதர்மத்தினால் பீடிக்கப்பட்டால் குலஸ்திரீகள் கெட்டுப் போவார்கள். ஸ்திரீகள் கெட்டுப்போனால் ஜாதிகள் கலந்து விடும்.

(42) ஜாதிகளைக்கலப்பதானது குலங்களையும்குலங்களைக் கெடுத்தவர்களையும் நரகத்தில் விழும்படி செய்யும். அப்போது அவர்களுடைய பித்ருக்களுக்கு சிராத்தமும் தர்ப்பணமுமில்லாமல் அவர்கள் நரகத்தில் விழுவார்கள்.

(43) இப்படிக்குலத்தைக் கெடுத்தவர்களுடைய ஜாதிகளைக்கலக்கும்படி செய்யும் இந்த தோஷங்களாலே எப்போதுமிருக்கிற ஜாதிகளின் தர்மங்களும் குலங்களின் தர்மங்களும் கெட்டுப்போய்விடும்.

𑌉𑌤𑍍𑌸𑌨𑍍𑌨𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌣𑌾𑌂 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 ।
𑌨𑌰𑌕𑍇 𑌨𑌿𑌯𑌤𑌂 𑌵𑌾𑌸𑍋 𑌭𑌵𑌤𑍀𑌤𑍍𑌯𑌨𑍁𑌶𑍁𑌶𑍍𑌰𑍁𑌮 ॥ ॥௪௪॥

𑌅𑌹𑍋 𑌬𑌤 𑌮𑌹𑌤𑍍𑌪𑌾𑌪𑌂 𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 𑌵𑍍𑌯𑌵𑌸𑌿𑌤𑌾 𑌵𑌯𑌮𑍍 ।
𑌯𑌦𑍍𑌰𑌾𑌜𑍍𑌯𑌸𑍁𑌖𑌲𑍋𑌭𑍇𑌨 𑌹𑌨𑍍𑌤𑍁𑌂 𑌸𑍍𑌵𑌜𑌨𑌮𑍁𑌦𑍍𑌯𑌤𑌾𑌃 ॥௪௫॥

𑌯𑌦𑌿 𑌮𑌾𑌮𑌪𑍍𑌰𑌤𑍀𑌕𑌾𑌰𑌮𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑌾𑌣𑌯𑌃 ।
𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾 𑌰𑌣𑍇 𑌹𑌨𑍍𑌯𑍁𑌸𑍍𑌤𑌨𑍍𑌮𑍇 𑌕𑍍𑌷𑍇𑌮𑌤𑌰𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍 ॥ ॥௪௬॥

𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚—

𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌃 𑌸𑌙𑍍𑌖𑍍𑌯𑍇 𑌰𑌥𑍋𑌪𑌸𑍍𑌥 𑌉𑌪𑌾𑌵𑌿𑌶𑌤𑍍 ।
𑌵𑌿𑌸𑍃𑌜𑍍𑌯 𑌸𑌶𑌰𑌂 𑌚𑌾𑌪𑌂 𑌶𑍋𑌕𑌸𑌂𑌵𑌿𑌗𑍍𑌨𑌮𑌾𑌨𑌸𑌃 ॥ ॥௪௭॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍂𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂
𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨
𑌵𑌿𑌷𑌾𑌦𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌮 𑌪𑍍𑌰𑌥𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

---

இப்படி துரியோதநன் தனக்கு ஜபம் கிடைக்காமல் போகு மோவென்று வருத்தப்பட்டான். அர்ஜுநனோ பெரிதான மன துள்ளவன். துர்யோதநன் முதலானவர்கள் உறவு என்று பெயரையொழிய பெரியசத்ருக்கள். அவர்களை ஜயித்து மூன்று

---

(44) இப்படிக்குலதர்மங்கள் கெட்டுப்போவதினால் மனுஷ்யர்கள் நரகத்தில் எப்போதுமிருக்கவேண்டும். இப்படிப்பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறோம்.

(45) ஐயோ! ராஜ்யத்தையும் ஸுகத்தையும் ஆசைப்பட்டுப் பந்துக்களைக்கொல்லத் தயாராயிருக்கிற நாம் மிகவும் பெரியபாபத்தைச் செய்யத் துணிந்து விட்டோமே.

(46) நான் கையில் ஆயுதங்களை யெடுக்காமல் ஒன்றும் பதில் செய்யாமலிருக்கையில் திருதராஷ்ட்ரன் பிள்ளைகள் ஆயுதங்களைக் கையில் எடுத்துக்கொண்டுச் சண்டையில் என்னைக் கொன்றால் அது எனக்கு மிகவும் நல்லது.

(47) ஸஞ்ஜயன் சொல்லுகிறான்—அர்ஜுநன் இப்படிச் சொல்லி வில்லையும் பாணங்களையும் போட்டுவிட்டு மனதில் துக்கமுள்ளவனாய் யுத்தம் செய்யாமல் ரதத்தின் நடுவில் உட்கார்ந்துகொண்டான்.

லோகங்கள் வருவதையும் த்ருணமாக நினைத்தான். மிகவும் தயை யுள்ளவன். மிகுந்த சத்ருக்களுடைய துக்கத்தைக்கூடப்பொறுக்காதவன். நீடித்த உறவுள்ளவன். துர்யோதனன் அநேகவித பெரிய தொந்திரவுகளைச் செய்தாலும் அவர்களிடத்திலிவனுக்கு உறவு வளருகிறது. மிகுந்த தர்மத்தைப் பண்ணுகிறவன். ஆசாரியர்கள் ஆததாயிகக்ஷியில் சேர்ந்தாலும் அவர்களை யொன்றும் செய்யக்கூடாதென்று நினைத்தவன். இப்படிப்பட்ட அர்ஜுநன் ஸ்ரீ க்ருஷ்ணன் சொன்ன வார்த்தையைக் கேட்டு,அவனைக் குடும்பத்தோடு அரக்குமாளிகையில் வைத்துக் கொளுத்த ஆரம்பித்தது முதலான மிகுந்த கடுமையான தொந்திரவுகளைப் பலதடவை செய்திருந்தபோதிலும், ஸ்ரீ க்ருஷ்ணனுடைய உதவியால் தன்னாலிவர்கள் எல்லாரும் கட்டாயம் கொல்லப்படுவர்கள் என்று தீர்மானித்து, பந்துக்கள் என்ற ஸ்நேஹத்தாலும், உயர்ந்த தயையாலும், ஆசாரியர்கள் தாதா இவர்களைக்கொன்றால் பாபமுண்டாகுமென்று பயத்தாலும் எல்லாவுடம்பும் எல்லையில்லாமல் குன்றிப் போய், யார் என்ன சொன்னாலும் சண்டைப் படமாட்டேன் என்று சொல்லி, பந்துக்கள் செத்துப்போகிறார்களே என்கிற துக்கத்தாலே மனது மிகவும் ஒடுங்கி வில்லையும் பாணத்தையும் திரும்பி எடுக்கிறதில்லையென்று கீழே போட்டுத் தேரின் நடுவில் உட்கார்ந்து விட்டான்.

முதல் அத்தியாயம் முற்றிற்று.

## இரண்டாவது அத்தியாயம்.

ஸஞ்ஜய உவாச—

தம் ததா க்ருபயாऽऽவிஷ்டமச்ருபூர்ணாகுலேக்ஷணம் ।
விஷீதந்தமிதம் வாக்யமுவாச மதுஸூதந꞉ ॥ ௧ ॥

ஸ்ரீ பகவாநுவாச—

குதஸ்த்வா கஶ்மலமிதம் விஷமே ஸமுபஸ்திதம் ।
அநார்யஜுஷ்டமஸ்வர்க்யமகீர்த்திகரமர்ஜுந ॥ ௨ ॥

க்லைப்யம் மா ஸ்ம கம꞉ பார்த்த நைதத்த்வய்யுபபத்யதே ।
க்ஷுத்ரம் ஹ்ருதயதௌர்பல்யம் த்யக்த்வோத்திஷ்ட பரந்தப ॥ ௩ ॥

இப்படி அர்ஜுநன் உட்கார்ந்தபோது, வரத்தகாத இடத்தில் இப்படிப்பட்ட வருத்தம் என்னமாய் உனக்கு வந்தது என்று வைது, இந்த வருத்தத்தை விட்டுச் சண்டைக்குக் கிளம்பு. இது இந்த காலத்திலும் இவர்கள் விஷயத்திலும் வரத்தகுந்ததன்று. இது நன்றாய் தெரியாதவர்களுக்கு வரத்தகுந்தது. வேறு உலகத்திற்குப் போவதற்கு இடைஞ்சலானது. இந்த லோகத்திலும் கெட்ட பெயரை யுண்டு பண்ணும். மிகவும் இளப்பமானது. மனதின் கோழைத்தனத்தினாலுண்டானது—என்று ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொன்னார்.

(அவதாரிகை) அர்ஜுனன் கீழுண்டான ஸ்நேஹம், தயை, பயம் போகாததினால் ஸ்ரீ கிருஷ்ணன் சொன்னதைத் தனக்கு மிகவும் க்ஷேமத்தைக் கொடுக்கக் கூடியதென்று அறியாமல் மறுபடியும் சொன்னான்—

அர்ஜுந உவாச—

கதம் பீஷ்மமஹம் ஸங்க்யே த்ரோணம் ச மதுஸூதந ।
இஷுபி꞉ ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹாவரிஸூதந ॥ ௪ ॥

---

(1) இப்படி இரக்கப்பட்டு கண்களில் தண்ணீர் தளும்பத் துக்கப்படும் அர்ஜுநனைப் பார்த்துப் பகவான் இந்த வார்த்தையைச் சொல்லுகிறார்.

குரூநஹத்வா ஹி மஹாநுபாவாந் ச்ரேயோ போக்தும் பைக்ஷ்யமபீஹ லோகே । ஹத்வார்த்தகாமாம்ஸ்து குரூநிஹைவ புஞ்ஜீய போகாந் ருதிரப்ரதிக்தாந் ॥ ॥௫॥

ந சைதத்வித்ம: கதரந்நோ கரீயோ யத்வா ஜயேம யதி வா நோ ஜயேயு: । யாநேவ ஹத்வா ந ஜிஜீவிஷாமஸ்தேऽவஸ்திதா: ப்ரமுகே தார்த்தராஷ்ட்ரா: ॥ ॥௬॥

கார்ப்பண்யதோஷோபஹதஸ்வபாவ: ப்ருச்சாமி த்வாம் தர்மஸம்மூடசேதா: ॥ யச்ச்ரேய: ஸ்யாந்நிச்சிதம் ப்ரூஹி தந்மே சிஷ்யஸ்தேऽஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம் ॥ ॥௭॥

ந ஹி ப்ரபச்யாமி மமாபநுத்யாத் யச்சோகமுச்சோஷணமிந்த்ரியாணாம் । அவாப்ய பூமாவஸபத்நம்ருத்தம் ராஜ்யம் ஸுராணாமபி சாதிபத்யம் ॥ ॥௮॥

ஸஞ்ஜய உவாச —

ஏவமுக்த்வா ஹ்ருஷீகேசம் குடாகேச: பரந்தப: ।
ந யோத்ஸ்ய இதி கோவிந்தமுக்த்வா தூஷ்ணீம் பபூவ ஹ ॥௯॥

---

(6) நாம் அவர்களை ஜயிப்போமா ? அல்லது அவர்கள் நம்மை ஜயிப்பார்களா? இந்த இரண்டில் எது மிகவும் நல்லதுஎன்று எனக்குத் தெரியவில்லை. எந்த திருதராஷ்ட்ரன் பிள்ளைகளைக் கொன்று நாம் உயிரோடிருக்க ஆசைப்படவில்லையோ, அவர்கள் முன்னால் இருக்கிறார்கள்.

(7) துக்கம் என்கிற தோஷத்தினால் என் ஸ்வபாவம் கெட்டுப் போயிருக்கிறது. எது தர்மம் என்று எனக்குத் தோன்றவில்லை. உம்மைக் கேட்கிறேன். எது எனக்கு நல்லதென்று உம்மால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறதோ, அதை எனக்குச் சொல்லும். உமக்கு நான் சிஷ்யன். உம்முடைய திருவடியைப் பிடித்துக் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகிறேன். நீர் என்னை "இப்படிச் செய்" என்று சொல்லும்.

(8) பூமியில ஒருவித இடஞ்சலுமில்லாமல் நிறைந்த ராஜ்யத்தையும் தேவர்களுடைய அதிகாரத்தையும் அடைந்தபோதிலும் எனக்கு உண்டாயிருக்கு மிந்திரியங்களை யுலர்த்தும்படியான துக்கமானது போகாதென்று தோன்றுகிறது. அதையெப்படிப் போக்குவேனென்று எனக்குத் தெரியவில்லை.

மிருநத மரியாதை பண்ணததகுநத பீஷ்மா துரோணர் முத லான ஆசாரியாகளை நான எபபடிக கொலலுவேன போகஙகளை அநுபவிகக வேணடுமெனறுமிகவும ஆசையுள்ளவர்களைககொனறு, அவாகள அநுபவிதத ஸுகஙகளை அவர்கள ரததததை ஊர்கா யாக வைததுககொணடு அந்த இடஙகளிலேயே யிருநதுகொண்டு எபபடி அநுபவிபபேன இது இலையில சோறறைப போட்டுக் கொண்டு சாபபிடுவதறகுப பசியுடன உடகார்நத ஒருவனை கொலைசெயது அதேயிடததில உடகார்நது கொணடு அநதச சோறறைச சாபபிடுவதுபோலிருககிறது. நான அதைச செய யததகுநதவனோ? நீ இபபடிச சண்டையை ஆரமபிதது நடுவில நின்று விடடால, அவாகள உனனைப பலாதகாரமாய் கொலை செயவார்களேயென்றால-அபபடியேயாகடடும, அதர்மமாக அவர் களைக்கொனறு ஜயததை அடைவதைக காட்டிலும தர்மத்தையும் அதர்மததையும தெரியாத அவர்களால் கொலலப்படுவது நமக்கு நலலது என்று எனககுத தோனறுகிறது—எனறிப்படிச சொலலி "உமமை மிகவும கெஞ்சிக் கேட்டுக கொளளுகிறேன. நான உம் மால ஆளததகுநதவன எனககு எது நலலது என்று உமககுத் தீர்மானமாயத தோனறுகிறதோ, அதைச சொல்லவேணும்" என்று மிகவும தவிதது ஸ்ரீ கிருஷ்ணன திருவடிகளில விழுந தான. இபபடித தபபான ஸ்நேஹததாலும தயையாலும் ஸ்வ பாவம் மாறி க்ஷத்திரியாகளுககு உயாநத தர்மமான சண்டை யைப பாபமெனறு நினைதது தர்மத்தை யறியவேணுமென்று அர் ஜுநன திருவடிகளில விழுநதவுடன, இவனுககுண்டான தபபு நினைவானது—ஆத்மாவையுளளபடி அறிவதாலும,பலனில ஆசை யில்லாமல் சணடையைச செயவது ஆதமாவைப் பார்ப்பதறகு வழியெனறு அறிவதினாலும்தான போகும, இநத இரணடு அறி வும இலலாவிடடால போகாது—என்று எணணி, மஹாபுருஷனான பகவான ஆதமாவைபபறறின சாஸதிரததைச சொலல ஆரம்பித தான அவர் இதைச சொலலுவதறகு எஙகேயிடம் அகப்படப போகிறதெனறு பாாததுககொண்டிருநதாா அர்ஜுநனிப்படி வருததபபடடுக கேட்டுக் கொணடதாலே அவர் விருமபின வியா ஜம அகபபடடது ஸ்ரீ கீதையினுடைய அபிபராயததைச சுருக்

கமாய் அருளிச்செய்த ஸ்ரீ ஆளவந்தார் கீதார்த்த ஸங்க்ரஹ மென்கிற புஸ்தகத்தில் இதேஸங்கதியை யருளிச்செய்திருக்கிறார்.

தமுவாச ஹ்ருஷீகேச: ப்ரஹஸந்நிவ பாரத ।
ஸேநயோருபயோர்மத்யே விஷீதந்தமிதம் வச: ॥௰॥

இப்படி உடம்புவேறு ஆத்மாவேறு என்று தெரியாமல் வருத்தப்பட்டு, அது தெரிந்ததுபோல் தர்மத்தையும் பேசி, இப்படி ஒன்றோடொன்றுசேராத இரண்டு குணங்களையுடையவனாய், சண்டைக்குத் தயாராயிருந்த இரண்டு ஸேனைகளின் நடுவில் ஒரு காரணமில்லாமல் ஆரம்பித்த வேலையை அடியோடு விட்ட அர்ஜுநனைப்பார்த்து, மஹாபுருஷன் 1 பரிஹாஸவார்த்தை சொல்வதுபோல்உபதேசித்தான். ஜீவாத்மாவின் உண்மையையும், பரமாத்மாவின் உண்மையையும், அவைகளை யடைவதற்கு உபாயமான கர்மமயோகத்தையும்,ஞானயோகத்தையும், பக்தியோகத்தையும் இந்த அத்தியாயம் 12-வது சுலோகம் முதல் 18-வது அத்தியாயம் 66 வது சுலோகம் வரையிலுள்ள வார்த்தைகளாலே சொன்னார் (10)

ஸ்ரீ பகவாநுவாச—

அசோச்யாநந்வசோசஸ்த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ஶ்ச பாஷஸே ॥
கதாஸூநகதாஸூம்ஶ்ச நாநுசோசந்தி பண்டிதா: ॥௧௧॥

பகவான் சொல்லுகிறார்— வருத்தப்படத்தகாத ஸங்கதிகளுக்கு வருத்தப்படுகிறாய். உடம்பையும் ஆத்மாவையும் தெரிந்தவன் போலும் பேசுகிறாய். உண்மையாக இவைகளைத் தெரிந்தவர்களுக்கு 2 உடம்பைப் பற்றியும் ஆத்மாவைப் பற்றியும் கொஞ்சமேனும் வருத்தப்பட நியாயமில்லை. ஆதலால் நீ வருத்தப்படுவ

---

1. பரிஹாஸவார்த்தை யென்பதற்கு, வேதாந்தங்களாகிற காட்டில் மறைந்திருக்கிற உயர்ந்த அர்த்தங்களை வருத்தமில்லாமல் சொன்னாரென்றும், அதைக் குழந்தைகள்கூட லகுவாய்த் தெரிந்துகொள்ளக் கூடுமென்றும், அது வெகு ரஸமுள்ள தென்றும் கருத்து.

2. மூலத்தில் 'கதாஸூந்' என்றும், ''அகதாஸூந்'' என்றும்இரண்டு சொற்கள் இருக்கின்றன. 'கதாஸூந்' என்பதற்கு உயிர்போனது என்று அர்த்தம், 'அகதாஸூந்' என்பதர்கு உயிர்போகாதது என்று

தும் தர்மம் பேசுவதும் ஒன்றுக்கொன்று சேரவில்லை. ஆகையால் அழிவுள்ள உடம்பையும், அதைக்காட்டிலும் வேறான அழி வில்லாத ஆத்மாவையும், அந்த ஆத்மாவையுள்ளபடி அறிவ தற்குச் சண்டை முதலான தர்மங்கள் உபாயம் என்பதையும் நீ 1 அறியவில்லை. இந்தச் சண்டையை ராஜ்ஜியம் முதலான பிர யோஜனங்களை உத்தேசிக்காமல் செய்வது ஆத்மாவை யுள்ளபடி அறிவதற்கு உபாயம். 2 ஆத்மாவுக்குப் பிறப்புமில்லை, சாவு மில்லை. இரண்டு தகடு சேர்ந்தால் ஒருகுடமாகிறது. அவைகள் பிரிந்தால் குடம் அழிகிறது. அதுபோல ஆத்மாவானது சில அவயவங்கள் சேர்ந்து உண்டானதன்று. அவைகள் பிரிந்து அழி வதுமன்று. ஆகையால் எப்பொழுதும் அது இருக்கிறது. அதைப் பற்றி வருத்தப்பட நியாயமில்லை. உடம்போ அறிவில்லாதது. சின்னதாயிருந்து பெரிதாகிறது. பிறகு இளைக்கிறது, அழிந்தும் போகிறது. பிறப்பும் அழிவும் அதற்கு ஸ்வபாவம். அதைப்பற்றி யும் வருத்தப்பட நியாயமில்லை. ஏரி ஜலம் தேங்குகிறதே யென் றும், ஆறு ஜலம் போகிறதே யென்றும் எவனாவது வருத்தப்படு வனோ? அதற்கு அது ஸ்வபாவம். அதுபோல.

அவ—முதலில் ஆத்மாவினுடைய ஸ்வபாவத்தைக்கேள்—

நத்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதிபா: ।
நசைவ ந பவிஷ்யாம: ஸர்வே வயமத: பரம் ॥ ॥௧௨॥

எல்லா லோகங்களுக்கும் யஜமானனான நான் இந்த க்ஷணத் திற்கு முன்னாலே இதுமுதலென்றில்லாத காலத்தில் எப்போதா வது இல்லையென்கிறதில்லை. எப்போதுமிருந்தேன். என்னால் ஆளப்படுகிற நீயும் மற்ற இவர்களும் இல்லையென்பதில்லை. இருக்

அர்த்தம். இந்த விடத்தில் உடம்பையும் ஆத்மாவையும் பற்றி சொல்லு கிறதாகையால் அழிவதையே இயற்கையாயுடைய உடம்பை 'கதாஸுந் என்றும், எப்பொழுதும் அழிவில்லாத ஆத்மாவை "அகதாஸுந்" என் றும் சொல்லியிருக்கிறது.

1. இது இந்த அத்தியாயம் 47—53 சுலோகங்களில் சொல்லு மர்த்தத்தை நினைத்து எழுதப்பட்டது.

2. இது 17—30 சுலோகங்களின் கருத்து.

களேயிருந்தீர்கள். நானும் நீயும் மற்றவர்களுமாகிய எல்லாரும் இந்த நிமிஷத்துக்குமேலே வரப்போகிற காலத்தில் முழுவதிலும் இருக்கப்போகிறதில்லையென்பதில்லை. இருக்கத்தான் போகிறோம். 1 எல்லா லோகத்துக்கும் யஜமானனான நான்எப்படி அழிவில்லாத வன் என்பதில் ஸந்தேஹமில்லையோ, அதேமாதிரி ஜீவன்களான நீங்களும் அழிவில்லாதவர்களென்றே நினைத்துக்கொள்.

ஒரு விண்ணப்பம்—ஜீவன்களான நமக்கு மனித ஜன்மம் நேர் ந்தது உயர்ந்த பாக்கியத்தாலே. அதிலும் வேதத்தைச் சொல் லும்படியான ஜன்மம் நேர்ந்தது இன்னுமுயர்ந்த பாக்கியத்தாலே. நாமெல்லாரும் வேதத்தில் சொல்லியிருக்கும் ஸங்கதிகளை ஏற்க னவே அறியாமையால் அவைகளை அறிவதற்கு மிகவும் பாடுபடு கிறோம். ஒருவர் ஒருவிதமாய் அர்த்தம் பண்ணினார். அதற்குப் பிறகு இன்னொருவர் அதில் சில குற்றங்களைக்காட்டி வேறு வித மாய் அர்த்தஞ் சொன்னார். இரண்டாவது அர்த்தம் எழுது வதற்கு முன்னே முதல் அர்த்தத்தையே யெல்லாரும் ஸரியான அர்த்தம் என்று நினைத்தார்கள். இரண்டாவது அர்த்தம் எழு தின பிறகு ஒருவன் என்ன செய்யவேண்டும். இரண்டையும் பார்த்து எது ஸரியோ அதை யெடுத்துக் கொள்ளவேண்டும். வேதத்தின் உண்மையான அர்த்தத்தை அறிவதற்கு ஆசையிருந தால் விசாரிப்பதில் எப்படிச்சண்டையுண்டாகும். இரண்டாவது அர்த்தம் எழுதின பிறகு முதல் அர்த்தத்திலும் ஸந்தேஹம் வரக் கூடுமாகையால், முதல் அர்த்தமிருக்கையில் இரண்டாவது அர்த் தத்திலும் ஸந்தேஹம் வரக்கூடுமாகையால் ஒருவனும் ஒரு அர்த்தத்தைத்தன்னுடைய கக்ஷியென்று அபிமானம் வைக்கக்

1. அர்ஜுனன் அனேகருஷிகளின் உபதேசங்களாலே ஸ்ரீகிரு ஷ்ணபகவான் எல்லாவுலகங்களுக்கும் யஜமானன் என்றும், அவர் எப போதுமிருக்கிறாரென்றும் தெரிந்தவன். இதை அவனுக்கு உபதேசம் செய்யவேண்டுவதில்லை. ஆகையாலே அதை உதாரணமாகச் சொன் னபடி. உடம்பைக்காட்டிலும் வேறாக ஆத்மாவொன்று இருக்கிறதென்று அவனுக்குத் தெரியும். ஆனால் அது உடம்போடு பிறந்து உடம்பு அழி யும்போது அழியுமோவென்று ஸந்தேஹம் மாத்திரமிருந்தது. அந்த ஸந்தேஹத்தை மாத்திரம் இந்த பகவான் தீர்க்கிறார்.

கூடாது. இப்படி இரண்டையும் ஒத்துப் பார்க்கக்கூடிய உயர்ந்த புத்தியில்லாதவர்கள் எப்படியாவது இருக்கலாம். தகுந்த புத்திமான்கள் இந்த இரண்டையும் ஒத்துப்பார்க்காமலிருப்பதற்குக் காரணமென்ன? வேதத்தின் அர்த்தத்தை உண்மையாய் அறியவேணுமென்று ஆவலில்லாமைதான். மேலும், வேதத்தின் அர்த்தம் உண்மையாய்த் தெரிந்தவனுக்குக் கோபம் கொஞ்சமேனும் வராது. கோபம் வருகிறவனுக்கு அதின் அர்த்தம் ஸரியாய் தெரியவில்லையென்றே சொல்லலாம். இப்படிக்கோபம் வாரதவன் இப்போது அகப்படுவது மிகவும் அரிது. இல்லையென்றும் சொல்லமுடியாது. யாராவது ஒருவரிருக்கலாம். ஆகையால் வேதத்தின் அர்த்தத்தை உள்ளபடி அறியவேண்டுமென்று மிகவும் கவலைப்பட்டு, சண்டையைப் பெரிதாக நினைக்காமல், இரண்டு அர்த்தங்களையும் தெரிந்தவர்கள் சேர்ந்து விசாரிக்கவேண்டும். பிள்ளை பெண்டாட்டிகள்மேல் ஆசை அதிகமாயிருப்பதால், அவர்களிடத்தில் சண்டையேயுண்டாகாது. அப்படி உண்டானாலும் நிலைநிற்காது, அதுபோல அர்த்தத்தை உள்ளபடி அறிவதற்கு ஆவலிருந்தால், சண்டையுண்டாகாது. உண்டானாலும் சீக்கிரம் போய்விடும். சங்கராசாரியர் என்கிற மஹானும் பௌத்தமதத்தைத் தூஷித்துத்தானே பாஷியமெழுதினார். அதேமாதிரி சங்கராசாரியர் எழுதிய அர்த்தங்களில் குற்றமிருப்பதாக ஸ்ரீ வைஷ்ணவ மதப்பிரவர்த்தகரான ஸ்ரீமத் ராமாநுஜாசாரியர் எழுதியிருக்கிறார். அவைகளை நாமிரண்டு மதக்காரர்களும் சேர்ந்து கவனிக்கவேண்டும். ஒரு மதத்தை இன்னொருவன் தூஷிக்கும்போது கடுமையாக வைவது இந்த காலத்தில் கூடாது. மஹான்கள்கள் வைதது த்வேஷத்தினாலன்று; பிரீதியினாலேதான். தகப்பன் பிள்ளைகளை வைவதுபோல.

இந்த இடத்தில் அத்வைதமதத்தில் சில குற்றங்களிருப்பதாக ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்கிறார். 1. அவர்கள் ஈசுவரனைக் காட்டிலும் வேறான ஜீவனில்லை யென்றும், ஈசுவரனே ஜீவன்களாகத் தோன்றுகிறானென்றும் சொல்லுகிறார்கள். அவர்களில் சிலர்—உண்மையாயிருக்கிற உபாதி (காரணம்) சேர்வதினாலே—அது சேர்ந்த பிர்மத்தினுடைய இடம் ஜீவனாக ஆகிறது என்று

சொல்லுகிறார்கள். ஒருவன் மஞ்சளையோ கரியையோ பூசிக் கொண்டஸமயத்தில் அவன் உடம்பு பழைய உடம்பைக்காட்டிலும் வேறாகத்தோன்றுகிறது. அதுபோல பிரும்மத்தில் சில வஸ்துக்கள் சேர்வதால் பிரும்மத்தைக்காட்டிலும் வேறாக ஜீவன்கள் தோன்றுகிறார்கள். வேறு சிலர் பிரும்மமே அஞ்ஞானத்தாலே (அறியாமையாலே) தன்னை ஜீவன்களாக எண்ணுகிறது என்கிறார்கள். இந்த இரண்டு கக்ஷிகளும் பிசகு. தெரியாமையால் மயங்கின அர்ஜுநனுக்கு அந்த மயக்கம் தீரவேணுமென்று உண்மையான ஸங்கதியை ஸ்ரீ கிருஷ்ணன் உபதேசிக்கிற ஸமயத்தில், நான்-நீ-இவர்கள்-நாம் எல்லோரும் என்று சொன்னபடியால் கணக்கில்லாத ஜீவன்களுக்குள் ஒருவருக்கொருவர் வேறுபாடும், அவர்களுக்கு ஈசுவரனைக்காட்டிலும் வேறுபாடும் இருப்பது உண்மையென்று ஏற்படுகிறது.

2. மேலும், முதலாவது பக்ஷத்தில் ஈசுவரனுக்கும் ஜீவன்களுக்கும் வேறுபாடு உண்மையல்ல, உபாதிபோனால் பேதம் போய்விடும். மஞ்சளையும் கரியையும் அலம்பினால், அவைகளாலே தோன்றின பேதம் போய்விடுமே, அது உண்மையல்லவே. வேதத்திலும் "அழிவில்லாதவர்களும் அறிவுள்ளவர்களுமான அனேக ஆத்மாக்களுக்கு இஷ்டங்களை அழிவில்லாதவனும் அறிவுள்ளவனுமான ஒரு ஈசுவரன் கொடுக்கிறான்" என்று சொல்லப்படுகிறது. அதில் ஜீவன்கள் அனேகம் பேர்களென்றும், அவர்களைக் காட்டிலும் ஈசுவரன் வேறென்றும், அவர்களுக்கு அவன் யஜமானனென்றும் ஏற்படுகிறது.

3. இரண்டாவது பக்ஷத்திலும் குற்றமுண்டு. மஹாபுருஷனும் தன் ஸ்வரூபத்தினுடைய உண்மையை யறிந்தவனுமிருந்த ஸ்ரீகிருஷ்ணனுக்கு அக்ஞானமும், அதினாலுண்டான அனேக வஸ்துக்கள் இருப்பதாகத்தோற்றமும்இல்லையாகையால், அர்ஜுநன் என்று ஒருவனிருப்பதாகத் தோன்றி, அவனுடன் பேசுவது எப்படிக் கூடும். தெரிந்தவன் கண்ணாடியைப் பார்க்கும்போது அதில் தோன்றுகிற பிரதி பிம்பத்தோடு பேசுவானோ? குழந்தைகளன்றோ அப்படிச் செய்யும்.

4. பிரும்மத்தைக்காட்டிலும் வேறொன்றில்லை யென்று தெரிந்தவனுக்கும்—கொளுத்தப்பட்ட துணி சற்று நேரம் துணி போல் தோன்றுவதுபோல்—ஜீவன்களிருப்பதாகக கொஞ்சகாலம் தோன்றிக்கொண்டிருக்கும். ஆனால் அதினால் தொந்திரவு இல்லை —என்று இப்படி அவர்கள் ஸமாதானம் சொல்லக்கூடும். அதுவும் பிசகு. ஏனென்றால்—துணியை கொளுத்தினவனுக்கு அது துணி யாகத் தோன்றினாலும், அதை உடுத்த ஆரம்பிப்பனோ? வெய்யில் வேளையில் ஒரு மைதானத்தில் ஜலம் ஓடுவதுபோல் தோன்றும். அது உண்மையில் தண்ணீரல்ல என்று அறிந்தவனுக்குத் தண்ணீர் தோன்றினாலும், அவன் அதையெடுக்கக் குடம் கொண்டு போவனோ? அதுபோல உண்மை யறிந்த ஸ்ரீகிருஷ்ணனுக்கு அர்ஜுனன் என்பவன் ஒருவன் முன்னாலிருப்பதாகத் தோன்றினாலும், அவனுடன் பேச ஆரம்பிப்பது கூடுமோ?

5. மேலும், ஈசுவரன் முன்பு தன்னை யறியாதிருந்து, பிறகு சாஸ்திரத்தைக் கொண்டு உண்மையை யறிந்தும், முன்போலவே அவனுக்குத் தப்பாகத் தோற்றம் தோன்றிக்கொண்டே யிருக்கிறது—என்று சொல்வதும் கூடாது. "அவன் எல்லாவற்றையும் எப்பொழுதும் நன்றாக யறிந்தவன்" என்று வேதத்தில் சொல்லுவதும், 'எனக்கு எல்லாம் தெரியும்" என்று இந்த ஸ்ரீ கீதையில் அவன்தானே சொல்லுவதும் விரோதிக்குமே.

6 மேலும், ஸ்ரீகிருஷ்ணனும், இப்போது பரம்பரையாய் சொல்லிக்கொடுக்கிற ஆசாரியர்களும்-தங்களுக்குப் பிரும்மத்தைத் தவிர வேறு ஒரு வஸ்துவு மில்லையென்கிற உண்மையான எண்ணமிருக்கும்போது, எதிரில் எல்லாரும் இருப்பதாகத் தோன்றினாலும்—இந்த உண்மையான ஸங்கதியை யாருக்குச் சொல்லுகிறார்கள். கண்ணாடியில் பிரதி பிம்பம்போல் எதிரில் தோன்றுகிறவர்களுக்கு என்றால்-பிரதி பிம்பமென்று தெரிந்தவர்கள் பிரதி பிம்பத்தோடு பேசுவார்களோ? கொளுத்தின துணி சற்று நேரம் துணியாகத் தோன்றுவதுபோல், வேறு வஸ்து இல்லை யென்று தோன்றினவனுக்கும் வேறு இருப்பதாகத் தோன்றுகிறதென்றும் சொல்ல முடியாது. சாஸ்திரத்தினாலே யுண்டாகிற உண்மையான அறிவு-இந்தத் தோற்றத்தையுண்டுபண்ணுகிற அஜ்ஞானத்தையும்

தொலைத்துவிட்டதே. வழியில் கிடந்த பழுதையை ஒருவன் பாம்பென்று நினைத்து, அந்த வழியில் போகப் பயந்து நின்றான். விளக்கைக் கையில் கொண்டு, அந்தப் பழுதையை மிதித்துக் கொண்டு, எதிரில்வந்த ஒருவன் அவனைப்பார்த்து 'ஏன் நிற்கிறாய்' என்று கேட்க, பாம்பிருக்கிறதென்று பயப்படுகிறேன் என்று அவன் சொன்னான். "அது பாம்பல்ல, அது பழுதை, நான் அதை மிதித்துக்கொண்டு வந்தேன்,பயப்படாதே போ" என்று வந்தவன்சொன்னான். அப்போது இவனுக்கு அஜ்ஞானமும், அஜ்ஞானத்தினாலுண்டான பாம்பும், பாம்பென்கிற தோற்றமும் எல்லாம் போய்விட்டதே.

7. ஒரு ஸமயத்தில் கண்ணின் குற்றத்தால் சந்திரன் இரண்டாக ஒருவனுக்குத் தோன்றுகிறது. அப்போது தெரிந்தவன் "சந்திரன் ஒன்றுதான்" என்று சொன்னான். அவன் வார்த்தையில் இவனுக்கு நம்பிக்கை யிருக்கிறது. ஆனாலும் முன் போலவே சந்திரன் இரண்டாகத் தோன்றுகிறது—என்று இப்படி ஸமாதாநம் சொல்லுவார்கள். அதுவும் பிசகு. அது கண்ணின் குற்றத்தாலே தோன்றுகிறது. அது தப்பென்று தீர்மான மிருப்பதாலே அதினால் ஒரு கெடுதியுமில்லை. அது அறிவினால் போகாது. மருந்தினால்தான் போகும். பழுதையில் பாம்பென்கிற எண்ணத்திற்கு உண்மையான அறிவு தவிர வேறு மருந்து கிடையாது. இந்த விடத்தில் அர்ஜுநனும், அவனிருப்பதாகத் தோற்றமும், அதற்குக் காரணமான அஜ்ஞானமும் எல்லாம் பொய்யாகையால், உண்மையான அறிவினால் போய்விட்டபடியால், பிறகு அவைகள் வருவதற்கு நியாயமே இல்லை. ஆகையால் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் இப்போதிருக்கிற ஆசாரியர்களுக்கும் உண்மையான அறிவிருந்தால், உபதேசத்தைப் பெற்றுக்கொள்ள மனிதனிருப்பதாகத் தோன்றாமையாலே உபதேசங் கூடாது. அவர்களுக்கு உண்மையான அறிவில்லாமல் போனால், தெரியாமையால் உபதேசங் கூடாது.

8. மேலும், குருவுக்கு பிரும்மம் தவிர வேறு ஒன்றில்லை என்று உண்மையான அறிவு வந்தபோதே, பிரும்மத்தினுடைய அக்ஞானமும், அதினாலுண்டான உலகமும் போய்விட்டதே.அப்புறம் யாருக்கு என்னப் பிரயோஜனத்திற்காக உபதேசிக்கவே

ண்டும். ஆசாரியனும், அவனுக்கு உண்டான ஞானமும் பொய் என்றால், சிஷ்யனும் அவனுக்குண்டான ஞானமும் பொய்தானே. ஆகையால் உபதேசம் எதற்கு? இல்லை என்கிற எண்ணம் பொய் யாயிருந்தாலும், உண்டென்கிற நட்பு எண்ணத்தைப்போக்குகிற தென்று ஸமாதானம் சொல்லலாம் ஆசாரியனுக்கு இல்லையென் கிற ஞானமுண்டாயிருப்பதாலே, உண்டென்கிற எண்ணம் போய் விட்டதே. உபதேசம் எதற்கு?

இந்தமாதிரி வார்த்தைகள் நன்றாயில்லை யென்பதைப்பற்றி ஸூத்ரபாஷ்யத்தில் விரிவாய் சொல்லியிருக்கிறது. [ 12 ]

அவ— ஆத்மா அழிவில்லாதவனு யிருந்தால், 'பிறந்தான்— செத்தான்'என்கிற தோற்றமும், அந்தச் சொல்லும் எப்படியென் றால், உதாரணத்தைக் கொண்டு பதில் சொல்லுகிறார்—

𑌦𑍇𑌹𑌿𑌨𑍋𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌯𑌥𑌾 𑌦𑍇𑌹𑍇 𑌕𑍌𑌮𑌾𑌰𑌂 𑌯𑍌𑌵𑌨𑌂 𑌜𑌰𑌾 ।
𑌤𑌥𑌾 𑌦𑍇𑌹𑌾𑌨𑍍𑌤𑌰𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌰𑍍𑌧𑍀𑌰𑌸𑍍𑌤𑌤𑍍𑌰 𑌨 𑌮𑍁𑌹𑍍𑌯𑌤𑌿 ॥ ॥௧௩॥

ஒரு பருவம் போய் வேறு பருவம் வருகிறதுபோல, ஒரு உடம்பு போய் வேறு உடம்பு வருகிறது. ஒருபருவம்போய் வேறு பருவம்வரும்போது அவன் அழியாததுபோல, ஒரு உடம்பு போய் வேறு உடம்பு வரும்போதும் அவன்அழியாமலிருக்கிறான். பிறந் தான் என்பதற்கு ஒரு உடம்பை அடைந்தான் என்று தான் பொ ருள். செத்தான் என்பதற்கு அந்த உடம்பை விட்டுப் பிரிந்தானெ ன்றுபொருள். வீட்டில் ஒரு மனிதன் குடியிருப்பதுபோல், உடம் பில்அழிவில்லாத ஆத்மாவென்று ஒன்று இருக்கிறது. ஒருஉடம்பில் அதிருக்கும்போது, குழந்தைத்தனம்போய் யௌவநம வருகிறது. யௌவநமபோய் கிழத்தனம்வருகிறது. அதாவது அந்த உடம்புபல விதமாய் மாறுகிறது. குழந்தைத்தனம் போனதற்கு அவனும் அவன் பந்துக்களும் துக்கப்படவில்லை. அதுபோலத்தான் அந்த உடம்பு போய் இன்னொரு உடம்பு வருகிறது. பருவம் போன ஸம யத்தில் உடம்பு அடியோடு போகாததால் துக்கப்படுகிறதில்லை. உடம்புபோன ஸமயத்தில் அது அடியோடு போனபடியாலும், வேறு உடம்பு வருவது தெரியாததாலும், துக்கப்படுகிறார்கள். வேறு உடம்பு வருவது தெரியாத போனபோதிலும், சாஸ்தி

ரத்தில் சொல்லியிருக்கிறது. அதை நம்பினவன் துக்கப்பட நியாயமில்லை.

ஆனால் ஒன்று செய்யவேண்டியது—ஜீவன்கள் அழிவில்லாதவர்களாயிருந்தபோதிலும், 1 நெடுநாளாய் கர்மங்கள் செய்து, அந்தந்தக் கர்மங்களின் பலன்களை அநுபவிக்கத்தகுந்த உடம்புகளை அடைந்து, தொந்திரவு படுகிறார்கள். அந்தத் தொந்திரவு போவதற்காக, அந்த உடம்புகளைக் கொண்டே தங்களுடைய 2 ஜாதிக்கும் ஆசிரமத்துக்கும் 3 சாஸ்திரத்தினால் ஏற்பட்ட சண்டை முதலான கர்மங்களை 4 அவைகளின் பலன்களில் ஆசையில்லாமல் செய்யவேண்டும். அப்போது இந்திரியங்கள் விஷயங்களைத் தொடும்போது, குளிரினாலும் சூட்டினாலும் ஸுகமும் துக்கமும் உண்டாகும். அவைகளை விலக்கமுடியாது. சாஸ்திரத்தில் சொல்லிய கர்மங்கள் முடியும்வரையில் அவைகளைப் பொறுத்துக்கொள்ளவேணும். [ 13 ]

---

1. ஜீவன்கள் இயற்கையாகவே ஒரு தோஷமில்லாதவர்கள். அவர்கள் இது முதலென்றில்லாமல் வெகுகாலமாய் தங்களையுள்ளபடி அறியாமல், பலப் பிரயோஜனங்களை ஆசைப்பட்டுப் பல கர்மங்களைச் செய்கிறார்கள். அந்த பலன்களை அநுபவிப்பதற்காக அடிக்கடி பிறந்து அந்த பலன்களை அநுபவிக்கத்தகுந்த உடம்புகளை அடைகிறார்கள்.

2. பிராமணன்—க்ஷத்திரியன்—வைசியன்—சூத்திரன்—என்று நான்கு ஜாதிகள். பிரும்மசாரி (வேதம்படிக்கிறவன்). கிருஹஸ்தன் (கலியாணம் செய்து கொண்டு வீட்டிலிருக்கிறவன்.) வாநப்பிரஸ்தன் (வீட்டைவிட்டுக் காட்டுக்குப்போனவன்). ஸந்நியாஸி (எல்லாப் பற்றையும் விட்டவன்) என்று நாலு ஆசிரமத்திலிருப்பவர்கள்.

3. கர்மங்களினாலுண்டாகும் தொந்திரவைப் பகவான் தான் ஸந்தோஷப்பட்டுப் போக்கவேணும். அதற்காக அவனுக்கு ஸந்தோஷத்தை கொடுக்கக்கூடிய வேலைகளைச் செய்ய வேண்டும். அந்த வேலைகள் இப்படிப்பட்டனவென்று நமக்கு இப்போது தெரியாது. அவைகளைச் சாஸ்திரத்தைக்கொண்டே அறிந்து அவைகளைச் செய்ய வேண்டியது. இந்த ஸங்கதி 16-வது அத்தியாயம் 26-வது சுலோகத்தில் சொல்லியிருக்கிறது.

4. இது இந்த அத்தியாயம் 47-வது சுலோகத்தில் சொல்லியிருக்கிறது.

அவ— இந்த அர்த்தத்தை அடுத்த சுலோகத்தில் சொல்லு கிறார்—

மாத்ராஸ்பர்சாஸ்து கௌந்தேய சீதோஷ்ணஸுகது:கதா: |
ஆகமாபாயினோ(அ)நித்யாஸ்தாம்ஸ்திதிக்ஷஸ்வ பாரத || ||கச||

சாஸ்திரங்களில் சொல்லிய கர்மங்களைச் செய்யும்போது இந்திரியங்கள் விஷயங்களைத் தொடுவதால் ஸுகமும் துக்கமும் உண்டாகும். அந்தக் கர்மங்கள் முடிகிறவரையில் தைரியத்துடன் அவைகளைப் பொறுத்துக்கொள். அவைகள் நிலையில்லாமல் வந்து போகிறபடியால் தைரியமுள்ளவன் 1 பொறுத்துக்கொள்ளலாம். வெள்ளம்போல் ஒன்றின் பின்னாலே ஒன்று வந்து கொண்டிருப்பதும் கர்மங்களினால். கர்மங்கள் போனால், வந்துபோகிறதென்பது மிருக்காது. அவைகள் அடியோடு போய்விடும். [ 14 ]

அவ— ஸுகதுக்கங்களை எதற்காகப் பொறுத்துக் கொள்ளுகிறது என்றால், சொல்லுகிறார்—

யம் ஹி ந வ்யதயந்த்யேதே புருஷம் புருஷர்ஷப |
ஸமது:கஸுகம் தீரம் ஸோ(அ)ம்ருதத்வாய கல்பதே || ||கரு||

எவன் ஸம்ஸாரத்தைப் போக்குவதற்காகத் தன் ஜாதிக்குத் தகுந்த சண்டை முதலான கர்மங்களை அவைகளின் பலன்களில ஆசையில்லாமல் செய்து, செய்யும்போது அவைகளால், அவசியம் வரும் துக்கத்தையும் ஸுகம்போல் நினைத்து, அவைகளை விடவில்லையோ, அவனே 1 நிலையான நல்ல கதியையடைவான் 2. [15]

---

1. துக்கத்தைப் பொறுத்துக் கொள்வதென்பது எல்லாருக்கும் தெரியும். ஸுகத்தைப் பொறுத்துக் கொள்வது என்பது என்ன? ஸுகத்தை யநுபவிக்கும்போது கர்வப்படக்கூடாதென்பது அதின் பொருள். ஏழைக்கு நாலுகாசு வந்தால், அவன் கெட்டவனாயிருந்தால், அவன் படுத்துகிற பாட்டுக்கு எல்லையிராது.

1. சுலோகத்தில் 'அமிருதத்வாய கல்பதே' என்று வடமொழிச் சொல் இருக்கிறது. அதற்கு மரணமில்லாமையை யடைவதற்குத் தகுந்தவன் என்று பொருள். ஜீவன்கள் செய்கிற கருமங்களின் பலன்களை அநுபவிப்பதற்காக அடிக்கடி பிறக்கிறார்கள். மறுபடியும் கர்மங்கள் செய்து அவைகளின் பலன்களை அநுபவிப்பதற்காக மறுபடியும் பிறக்கிறார்கள்.

அவ— ஆத்மாவுக்கு அழியாமையே யியற்கை, உடம்புக்கு அழிவதே யியற்கை என்று இந்த அத்தியாயத்தில் 11-வது சுலோகத்தில் சொல்லியதை விரிவாய் சொல்ல ஆரம்பிக்கிறார்—

நாஸதோ வித்₃யதே பா₄வோ நாபா₄வோ வித்₃யதே ஸத: ।
உப₄யோரபி த்₃ருஷ்டோऽந்தஸ்த்வனயோஸ்தத்த்வத₃ர்ஶிபி₄: ॥ ॥௧௬॥

உடம்பு 1 நிலையாயிராது. ஆத்மாவுக்கு அழிவில்லை. உடம்பின் அழிவை யாரும் பார்க்கிறோம். ஆத்மா அழியாதென்பதை சாஸ்திரத்தாலும் யுக்திகளாலும் தெரிந்தவர்கள் அறிகிறார்கள். [16]

அவ— ஆத்மாவுக்கு அழிவில்லையென்பதை எதைக்கொண்டு அறியலாம் என்றால், சொல்லுகிறார்—

---

இப்படிப் பிறப்பும் இறப்பும் ஆற்றின் சுழல்போலத் திரும்பித் திரும்பி வருகின்றன. இதற்கு ஸம்ஸாரம் என்று பெயர். இதை "பந்தம்" என்றும் சொல்லுகிறது. பந்தமென்றால் கட்டுப்பட்டிருப்பது. இந்தக் கட்டுப்போவதை மோக்ஷமென்று சொல்லுகிறது. கட்டினவனும், அவிழ்க்கிறவனும் ஈசுவரன் தான். மோக்ஷமென்றால் அவிழ்க்கிறது. கர்மங்களினாலே ஜீவன் தன்னிஷ்டப்படியிருக்கமுடியாமல் கட்டுப்பட்டிருக்கிறான். கட்டிலிருந்து விடுவிக்கப்படுவது தான் மோக்ஷம். ஸம்ஸாரம் போய் கர்மத்தின் கட்டிலிருந்து விடுவிக்கப்படுகிறவனுக்குப் பகவானுடைய அநுபவம் தானாகவேவரும். இதைத்தான் "நிலையான நல்ல கதியை யடைவன்" என்று பாஷ்யத்தில் சொல்லியிருக்கிறது.

2. 12—வது சுலோகம் முதல் நான்கு சுலோகங்களாலே ஆத்மாவின் உண்மையான இருப்பும், உடம்பின் சேர்க்கை போவதற்கு வழியும், அது செய்வதனால் வரக்கூடிய நல்ல பலனும் சுருக்கமாகச் சொல்லப்பட்டன. இவைகளைத் தத்வம் என்னும், ஹிதமென்றும், புருஷார்த்தமென்றும் வடமொழியில் சொல்லுகிறது. தத்வம் என்றால் உலகத்தின் உண்மையான இருப்பு. ஹிதம் என்றால் நாம் செய்யவேண்டிய வேலை. புருஷார்த்தமென்றால் நாம் அடையவேண்டிய நிலையான பலன். தத்வத்தையும் ஹிதத்தையும் மேலே விரிவாய் சொல்லுகிறார்.

1. மூலத்திலுள்ள "அஸத்" என்கிற சொல்லுக்கு இல்லையென்று பொருளன்று, நிலையில்லாதது என்றுதான் பொருள். ஆகையால் அந்தச் சொல் உடம்பைத்தான் சொல்லுகிறது "ஸத்" என்கிற சொல்லுக்கு ஸ்வரூபத்தில் மாறுதலில்லாமல் ஒரேவிதமா யிருக்கிறவன் என்று பொருள், ஆகையால் அந்தச்சொல் ஆத்மாவைச் சொல்லுகிறது.

அவிநாசி து தத் வித்தி யேந ஸர்வமிதம் ததம் ।
விநாசமவ்யயஸ்யாஸ்ய ந கச்சித் கர்துமர்ஹதி ॥ ||௧௭||

ஆத்மா அறிவுள்ளதாய், அறிவில்லாத எல்லா உடம்புக்குள்ளே நுழைய சக்தியுள்ளதாயிருப்பதாலே, அது அவைகளைக் காட்டிலும் மிகவும் ஸூக்ஷ்மமானது (சின்னது). ஆகையாலே அது எதினாலும அழிக்கத்தகுநததன்று உலகத்தில் கத்தி, தண்ணீர், நெருப்பு, காறறு முதலான வஸ்துக்கள் ஒரு வஸ்துவில் நுழைநது அதையழிக்கிறது. உலக்கையால் ஒரு வஸ்துவை யழிக்கும்போது உலக்கை அதில் நுழையாத போனாலும், அதினாலுண்டாகும் காறறு அதில புகுநது அதையழிக்கிறது. கத்தி முதலானவைகளைக் காட்டிலும் ஆத்மா சிறியதாயிருப்பதாலே, அவைகள் அதில நுழைநது 1 அதையழிக்கமுடியாது. [ 17 ]

அவ- உடமபுக்கு அழிவதே ஸ்வபாவமென்று சொல்லுகிறார்—

அந்தவந்த இமே தேஹா நித்யஸ்யோக்தா: ஶரீரிண: ।
அநாசிநோऽப்ரமேயஸ்ய தஸ்மாத் யுத்யஸ்வ பாரத ॥ ||௧௮||

உடம்பு அநேக வஸ்துக்கள் சேர்ந்து பெருத்திருக்கிறபடியால் அழிகிறது. உலகத்தில் குடம் முதலானவைகள் அநேக வஸ்துக்கள் சேர்ந்து பெருத்திருக்கிறபடியால் உடைந்துபோகின்றன. மேலும கர்மஙகளின் பலன்களான ஸுகஙகளையும் துக்கங்களையும் ஜீவன் அநுபவிபபதறகாக உடம்புகள் ஏறபட்டிருக்கின்றன என்று சாஸ்திரம் சொல்லுகிறது. கர்மம் போனால் உடனே உடம்பு அழிந்துபோய்விடும. க்ஷணமகூட நிறகாது. ஒருவருஷம் ஜெயிலில் போடப்பட்டவனை கெடுவானவுடன, அவன் இருக்கிறேனென்று சொன்னாலும், ஒரு நிமிஷம்கூட அங்கு வைப்பார்களா?

1. ஆத்மா மிகவும சின்னது. ஒரு மயிரின் நுனியை நூறுபஙகாக்கி, அதில ஒரு பஙகை நூறுபஙகாக்கினால், அதிலொருபங்கு ஆதமாவின் அளவு. இபபடி வேதததில் சொலலியிருக்கிறது. கண்ணுக்குத தெரியாத சின்னப் புழுதியைக் கததியால் வெட்ட முடியாது. அது கத்திக்கு அகப்படாது. அப்படியே ஆத்மாவையும ஒரு விதத்தாலும் அழிகக முடியாது.

ஆத்மாவோ அறிவுள்ளதானதால் அதற்கு அழிவில்லை. உலகத்தில் அறியப்படும் வஸ்துக்களிலேதான் அழிவைப் பார்க்கிறோம். ஆத்மா அறியப்படும் வஸ்துவல்ல. அறிகிறவஸ்து. எப்போதும் "நான் இதை அறிகிறேன்" என்றே தோன்றுகிறது. நான் என்பது அறிகிறவன். இதை யென்பது அறியப்படும் பொருள். இது 13-வது அத்தியாயத்தில் 1-வது சுலோகத்தில் சொல்லப்படும்.

ஆத்மாவென்பது அனேக அவயவங்கள் சேர்ந்து உண்டானதாகத் தெரியவில்லை. "எனக்குக்காலில் வலிக்கிறது" "தலையில் ஸுகமாயிருக்கிறது" என்று துக்கத்துக்கும் ஸுகத்துக்குமிருப்பிடமாக உடம்பின் அவயவங்களைப் பேசுகிறோம். அப்படி ஆத்மாவுக்கு அவயவங்களிருப்பதாகத் தெரியவில்லை. ஆத்மா அறிவுள்ளதாயிருப்பதாலே, அது அவயவங்களின் சேர்க்கையாயிருந்தால், அந்த அவயவங்களுக்கும் அறிவு இருப்பதாக ஒப்புக்கொள்ளவேணும். அப்போது ஒரு அவயவத்துக்கும் மற்றொரு அவயவத்துக்கும் சண்டை நேரிடும். அப்படிச் சண்டையிருப்பதாய் ஒருவருக்கும் தெரியாதபடியால், ஆத்மா அவயவங்களின் சேர்க்கையன்று. ஆகையால் ஆத்மா மாறுதலன்றியில் ஒரேரூபமாயிருக்கிறது. அனேக அவயவங்கள் சேர்ந்து உண்டானதன்று ஒன்றையறிகிற வஸ்துவாகவும் மிகவும் சிறிய வஸ்துக்களிலும் நுழையத்தகுந்ததாயுமிருக்கிறது ஆகையால் அதற்கு அழிவில்லை. உடம்போ அனேக வஸ்துக்கள் சேர்ந்து உண்டாயிருக்கிறபடியாலும், ஜீவன்கள் கர்மபலனை யநுபவிப்பதற்காக உண்டாயிருப்பதாலும், எப்போதும் ஒரேமாதிரியாயில்லாமையாலும், ஆத்மாவினால் நுழையக்கூடியதாயிருப்பதாலும், அதற்கு 1. அழிவுண்டு. ஆகை

---

1. உடம்பு அழிவுள்ளது என்று எல்லாரும் பார்த்துக்கொண்டிருக்கிறார்களே, அதற்கு யுக்தி சொல்லுவானேனென்றால், அதினால் எட்டு விதப் பிரயோஜநங்களிருக்கின்றன—1. ஆத்மாவுக்கு அழிவில்லை என்பதைக் காட்டுவதற்காக உடம்பின் அழிவைக் காட்டினபடி. அதாவது—எந்தக் காரணங்களால் உடம்பு அழிகிறதோ,அந்தக்காரணங்கள் ஆத்மாவுக்கு இல்லையென்று காட்டுதல். 2. உடம்புக்கும் ஆத்மாவுக்கும் ஒன்றுக்கு அழியும் தன்மையுண்டென்றும், ஒன்றுக்கு அழியும் தன்மையில்லையென்றும் காட்டுவதினால்,அது வேறு இது வேறு என்று காட்டுதல

யால அழிவே இயறகையான உடமபையும் எப்போதும் அழி விலலாத ஆத்மாவையும பறறி நீ துககபபடாதே நீ நல்ல கதியை யடைவதறகாக விதிக்கப்பட்ட சணடை முதலான காமஙகளில உனககும பிறருககும வரும் தொநதிரவுகளை தைரியததிருல பொறுததுக்கொண்டு பலனகளில ஆசையிலலாமல சணடையை ஆரமபி [ 18 ]

ய ஏனம் வெத்தி ஹந்தாரம் யஶ்சைநம் மந்யதே ஹதம் ।
உபௌ தௌ ந விஜாநீதோ நாயம் ஹந்தி ந ஹந்யதே ॥

இப்படி அழிவிலலை யென்று சொலலபபட்ட ஆதமாவை கததி முதலானது அழித்தது எனறு எணணுகிறவனும, அவை களில ஏதாவ தொனருல ஆதமா கொலலபபடடது எனறு எண்ணுகிறவனும - இநத இரணடுபேர்களும் அறியாதவர்கள். கீழசசொன்ன காரணஙகளாலே ஆதமாவுக்கு அழிவில்லையா கையால, கததி முதலானது அவனைக் கொலலுவதிலலை. அவன கொ லலப்படுவதுமில்லை லோகததில " ஒருவன ஒருவனைக கொன ருன " என்று சொல்லுவதறகு உடமபைவிட்டு ஆதமாவைப பிரிததானெனறு பொருள "பிராணிகளைக கொலை பணணக

3 நீ லக்ஷ்ம ஜாககிரதை பணணிருலும, உடமபு நிலையாயிராது எனறு காட்டுதல. 4 உடம்பு பல காரணஙகளால கட்டாயம அழிநதுவிடு மெனறு தோனறபபணணி, அதில வெறுபபை யுணடுபணணுதல. 5. தைவததின ஒததாசையிலலாமல ஒருவனை ஒருவன கொலல முடி யாது உஙகளை அரககு மாளிகையில வைததுக கொளுதத ஆரமபித தீரகளே, முடிநததோ? இபபோது துரயோதநன முதலானவாகளைக கொலல நான தீாமானிததுவிட்டேன். அதை உனனுல தடுககமுடி யுமோ? ஆகையால தைவமிலலாமலஒருவனுல மட்டும ஒரு வேலை செ யய முடியாதெனறு காட்டுகை 6 ஒருவேளை தவருமல தளிகை பண ணுவதும சாபபிடுவதும இதேமாதிரி ஓயாமல நடததும்போது,"அபபா! இநதப பசியை எபபோது அடியோடு துலைபபோம" எனறு நலல அறி வுள்ளவனுககு தோனறுவதுபோல, அடிக்கடி அழியககூடிய இநத உட மபு ஒருககாலும நமககு இல்லாமல பணணுவதறகு வழி யெனன எனறு தோனறி, நலல காமஙகள செயது, இநத உடமபையே வராமல பணணலாமெனறு தோனறபபணணுகை 7 கட்டாயம அழியககூடிய உடமபின அழிவைபபறறி வருததபபடலாமோ என்று காட்டுகை. 8 ஒருவன் மோக்ஷததை அடைவதறகு வேணடிய ஸாதனததைச சீக்கிரம தேடவேணடுமென்று காட்டுகை.

கூடாது'' ''பிராம்மணனைக் கொல்லக்கூடாது'' என்று சொல்லு கிற சாஸ்திரங்களுக்கு ''கொல்லவேணும்'' என்று சொல்லப் பட்ட இடங்கள் தவிர மற்ற இடங்களில் உடம்பை விட்டு ஆத்மா வைப் பிரிக்கக்கூடாதென்று பொருள். [19]

ந ஜாயதே ம்ரியதே வா கதாசிந் நாயம் பூத்வா பவிதா வா ந பூய꞉ । அஜோ நித்ய꞉ ஶாஶ்வதோ(அ)யம் புராணோ ந ஹந்யதே ஹந்யமாநே ஶரீரே ॥ ॥௨௦॥

கீழ்ச்சொன்ன காரணங்களாலே ஆத்மாவுக்கு அழிவில்லை. ஆகையாலே அது பெருக்கிறதுமில்லை. இளைக்கிறதுமில்லை. ஒரு வித மாறுதலையுமடைவதில்லை. பிறப்பு இறப்பு முதலான அறி வில்லாத உடம்பினுடைய எல்லா ஸங்கதிகளும் ஆத்மாவுக்கு ஒரு காலத்திலுமில்லை. 1 கல்பத்தின் ஆரம்பத்தில் பிரும்மா முதலானவர்கள் உண்டாகிறார்களென்றும், கல்பத்தின் முடிவில் அவர்கள் போய்விடுகிறார்களென்றும் வேதத்தில் சொல்லப்பட்ட பிறப்பும் சாவும் அவர்கள் உடம்புக்கே தவிர ஆத்மாவுக்கில்லை. ஆகையால் எல்லாவுடம்புகளிலும் இருக்கும் ஆத்மாவுக்குப் பிறப்பு மில்லை அழிவுமில்லை. பிரளயகாலத்திலும் 2 பிரகிருதி ஒருவிதமாக

---

1. மனிதர்களுக்கு ஒரு வர்ஷம் தேவர்களுக்கு ஓர் நாள். அப் படிப்பட்ட 360 நாள் கொண்டது ஒரு தேவவர்ஷம். பன்னீராயிரம் தேவவர்ஷம் கூடியது ஒரு சதுர்யுகம் (நாலுயுகங்கள்). கலியுகத்துக்கு (432000) நான்கு லக்ஷத்து முப்பத்தீராயிரம் வர்ஷம். இதற்கு இரண்டு பங்கு கொண்டது த்வாபரயுகம், மூன்றுபங்கு கொண்டது த்ரேதாயுகம். நான்கு பங்கு கொண்டது க்ருதயுகம். ஆக நாலுயுகங்களுக்கும் 4320000 நாற்பத்து மூன்று லக்ஷத்து இருபதினாயிரம் வர்ஷம். ஆயிரம் சதுர்யுகம் கூடியது பிரும்மாவுக்கு ஓர்பகல், இதற்குக் கல்பம் என்று பெயர்.

2. பிரகிருதி யென்பது ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்கிற மூன்று குணமுள்ளவஸ்து. ஸிருஷ்டி காலத்தில் அது மாறி வேறு பெயர்களை அடைகிறது. பிரளயகாலத்திலும் அதற்கு ஒரேவிதமான மாறுபாடு இருந்து கொண்டேயிருக்கிறது. அப்போது அதற்குப் பிரகிருதி யென் றே பெயர். வேறு பெயர் இடமுடியாது. உதாரணம்—ஒரு பெரிய குளத்தில் பெருங்காற்று அடிக்கும்போது தண்ணீரைபுரட்டிக்கொண்டு வருகிறது. அந்தத் தண்ணீருக்கு அலையென்று பெயர். காற்று மெது

மாறுவதுபோல் மாறுகிறதுமில்லை. அது எப்போதும் அநுபவித்தாலும், ஒவ்வொரு க்ஷணத்திலும் புதிதுபோல் இன்பமாயிருக்கிறது. ஆகையால் உடம்பு அழியும்போது ஆத்மாவுக்கு அழிவில்லை. [20]

வேதாவிநாசிநம் நித்யம் ய ஏநமஜமவ்யயம் |
கதம் ஸ புருஷ: பார்த்த கம் காதயதி ஹந்தி கம் ||௨௧||

இப்படிப் பிறப்பும் இறப்பும் உருவத்தில் மாறுபாடும் இல்லாமையால் ஆத்மா, நிலையாயிருக்கிறதென்று எவன் அறிந்தானோ, அவன் பலவித உடம்புகளிலிருக்கும் ஆத்மாவைத் தானாகவோ பிறரைக்கொண்டோ அழிப்பதாக எப்படி நினைத்து 1 வருத்தப் படுவன். ஆகையால் ஆத்மாவைக் கொன்றேன் என்றும், கொல்லுவித்தேன் என்றும் துக்கப்படுவது ஆத்மாவை உள்ளபடி அறியாமையாலேயே. [21]

அவ— தேவரீர் சொன்னபடி ஆத்மாவுக்கு அழிவில்லை, சாவு என்பது ஆத்மாவை உடம்பை விட்டுப்பிரிப்பது தான். மிகவும் உயர்ந்த ராஜ உடம்பு போய்விடுகிறதே. அதைப்பற்றி வருத்தம் வாராதோ என்றால், பதில் சொல்லுகிறார்—

வாஸாம்ஸி ஜீர்ணாநி யதா விஹாய நவாநி க்ருஹ்ணாதி நரோऽபராணி | ததா ஶரீராணி விஹாய ஜீர்ணாந்யந்யாநி ஸம்யாதி நவாநி தேஹீ || ||௨௨||

சாஸ்திரப்படி செய்யப்படுகிற சண்டையில் சாகிறவனுக்கு ராஜ உடம்பைக்காட்டிலும் கோடிபங்கு அதிகமான அழகுள்ள உடம்பு வருகிறதென்று சாஸ்திரம் சொல்லுகிறது. ஒருகாசு கூடப்பெறாத கிழிந்த அழுக்குத் துணியை உடுத்திக்கொண்டி-

---

வாய் அடிக்கும்போது தண்ணீர் அசங்கிக் கொண்டேயிருக்கிறது. அதற்கு அலையென்று பெயரில்லை. அதுபோல ஆத்மாவுக்கு வேறு பெயரிடமுடியாத வேறுபாடும் கிடையாது.

1. உடம்பைக்காட்டிலும் வேறான அழிவில்லாத ஆத்மாவொன்று இருப்பதாக நாமும் சொல்லுகிறோமேயொழிய நமக்கு மனதில் படவில்லை. நாமும் அர்ஜுநனைப்போலவே தானிருக்கிறோம். இது மனதில் பட்டதாக நினைக்கிறோம். ஆனால் மனதில் படவில்லை. இதைக்கவனிக்கவேணும்.

ருக்கிறவன் நூறுரூபாய் பொருமானமுள்ள மிகவும் அழகான புதுத்துணியை உடுத்திக்கொள்ள வருத்தப்படுவனோ. ஸந்தோஷப்படமாட்டானோ. [ 22 ]

அவ— கீழ்ச்சொன்ன ஆத்மாவின் அழிவில்லாமை மனதில் நன்றாய் படுவதற்காக மறுபடியும் விரிவாய்ச்சொல்லி ஸ்திரப்படுத்துகிறார்—

𑌨𑍈𑌨𑌂 𑌛𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌨𑍈𑌨𑌂 𑌦𑌹𑌤𑌿 𑌪𑌾𑌵𑌕𑌃 ।
𑌨 𑌚𑍈𑌨𑌂 𑌕𑍍𑌲𑍇𑌦𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌪𑍋 𑌨 𑌶𑍋𑌷𑌯𑌤𑌿 𑌮𑌾𑌰𑍁𑌤𑌃 ॥ ௨௩ ॥

𑌅𑌚𑍍𑌛𑍇𑌦𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑌦𑌾𑌹𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑌕𑍍𑌲𑍇𑌦𑍍𑌯𑍋𑌽𑌶𑍋𑌷𑍍𑌯 𑌏𑌵 𑌚 ॥
𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌃 𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌰𑌚𑌲𑍋𑌽𑌯𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 ॥ ௨௪ ॥

ஆத்மாவைக்கத்தியால் வெட்டவும், நெருப்பினுல் கொளுத்தவும், ஜலத்தினுல் நனைக்கவும், காற்றினுல் உலர்த்தவும் முடியாது. ஆத்மா அவைகளுக்குள்ளே புகுமேயொழிய, ஆத்மாவுக்குள் அவைகளால் நுழையமுடியாது. கீழ்ச்சொன்ன வெட்டுவது முதலான ஸங்கதிகள் நுழைந்து தான் ஆகவேண்டும். நுழையாமல் முடியாது. ஆகையால் ஆத்மா அழிவில்லாதது. அழிக்கத் தகுந்ததல்ல. அழிக்கும் வஸ்துவுக்கு அகப்படாதது. இது முதலென்று இல்லாமலிருக்கிறது. [ 23–24 ]

அவ— கீழ்ச்சொன்ன ஸங்கதிகளுக்கு விரோதமான அநுபவமுமில்லை, யுக்தியுமில்லை என்று காட்டி முடிக்கிறார்—

𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍋𑌽𑌯𑌮𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑌵𑌿𑌕𑌾𑌰𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍇𑌵𑌂 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑍈𑌨𑌂 𑌨𑌾𑌨𑍁𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

வெட்டுவது முதலான வேலைகளுக்குத் தகுந்த வஸ்துக்களை கண் முதலான இந்திரியங்களால் அறிகிறோம். அப்படி அவைகளால் ஆத்மாவை அறியமுடியாது. ஆகையால் ஆத்மா அந்த ஜாதியல்ல. ஒருக்கால் அதுபோலிருக்கலாமோவென்று எண்ணவும் முடியாது. ஆகையால் ஒருவிதமான வேறுபாடுக்கும் தகுந்ததல்ல. இந்த ஸங்கதி உன்மனதில் பட்டால் வருத்தமுண்டாகாது. [ 25 ]

𑌅𑌥 𑌚𑍈𑌨𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌜𑌾𑌤𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑌾 𑌮𑌨𑍍𑌯𑌸𑍇 𑌮𑍃𑌤𑌮𑍍 ।
𑌤𑌥𑌾𑌪𑌿 𑌤𑍍𑌵𑌂 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌨𑍈𑌨𑌂 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

பிறப்பையும் சாவையும் இயற்கையாகவுடைய உடம்பு தவிர வேறு ஆத்மா இல்லையென்று நீ நினைத்தாலும், இப்படி அதிகமாக வருத்தப்பட நியாயமில்லை. அழியக்கூடிய உடம்பு அழியாதிருக்குமோ. [ 26 ]

𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌧𑍍𑌰𑍁𑌵𑍋 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌧𑍍𑌰𑍁𑌵𑌂 𑌜𑌨𑍍𑌮 𑌮𑍃𑌤𑌸𑍍𑌯 𑌚 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑍍𑌯𑍇𑌽𑌰𑍍𑌥𑍇 𑌨 𑌤𑍍𑌵𑌂 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

உண்டான எல்லா வஸ்துக்களும் தவராமல் அழிவதைப் பார்க்கிறோம். அப்படியே அழிந்ததும் கட்டாயம் உண்டாகும். ஆகையால் கட்டாயம் அழியக்கூடிய உடம்பை ஆத்மாவாகநினைத்தவன் அதின் அழிவுக்கு அழுவனோ? ஆற்றங்கரையிலுட்கார்ந்து கொண்டு ஜலத்துக்கு கிழக்கே போகிறதே ஸ்வபாவம் என்று தெரிந்தவன் அதற்கு அழுவனோ ?

அழிந்தது உண்டாகுமோ ? அது எப்படி என்றால்—சேணியன் துணி நெய்கிறானே. அந்தத்துணி முன் இருந்ததா ? இல்லாததா? சேர்ந்த நூல்கள் தவிர துணியென்று வேறு வஸ்து கண்ணுக்குத் தெரிகிறதோ. சேர்ந்தால் துணி. பிரிந்தால் நூல். இது தானே. ஆகையால் "உண்டாகிறது, அழிகிறது" என்பதிரண்டும் ஒரு வஸ்துவின் ஒரு விதமான இருப்பின் மாறுதல். அழிந்த காலத்திலும் வஸ்து இருக்கிறது. அழிந்தது உண்டாகலாம். புதிதாகத் துணியென்று முன் இல்லாத ஒன்று உண்டாகிறதென்று சொல்லுகிற தர்க்க சாஸ்திரகாரர்களுக்கும் கண்ணுக்குப்படுவது சேர்ந்த நூல்தானே. புதிதாய் முன்பில்லாத துணியென்று ஒன்று உண்டாகிறதென்பது கட்டுப்பாடுதானே. சேர்ந்த நூல் பிரியும்போது துணி கிழிந்தது என்று சொல்லுகிறது. துணி கிழிந்தது நூலின் பிரிவுதான். நூலாயிருந்த வஸ்துவிற்கு துணியாயிருப்பு அழிவு. அதுதானே துணிக்குப் பிறப்பு. ஆகையால் நூல் துணியாகும். துணி நூலாகும். இந்த மாறுதல் நிற்காது [ 27 ]

அவ்யக்தாதீநி பூதாநி வ்யக்தமத்யாநி பாரத ।
அவ்யக்தநிதநாந்யேவ தத்ர கா பரிதேவநா ॥ ॥ ௨௮ ॥

வஸ்துக்களுடைய முன் இருப்புபோய், வேறு இருப்பு வரும் போது, வநதது கெடுதல என்று தெரிநதால், துக்கப்படலாம். ஒரு நல்ல மாம்பழத்தை இரண்டு நாள் பார்க்காமலிருந்து அது அழுகிப்போனால், அதைப்பறறி வருத்தப்படுகிறோம். ஒரு மனிதன் இறநதுபோன பிறகு இன்னமாயிருக்கிறனென்று தெரியுமா? அது கெடுதல என்று பார்க்கிறோ? எப்படி அதைப் பற்றி வருத்தப்படக்கூடும். இப்போதிருப்பதைக் காட்டிலும் வரப்போகிற இருப்பு நல்லதாயிருநதால், ஸந்தோஷபபட வேண்டாமா? குழந்தை பிறந்தவுடன் ஒருவன் ஸந்தோஷப்படுகிறனே. அதினுடைய முன் இருப்பு அவனுக்குத் தெரியுமா? அது கெடுதலாயிருநததா? ஆகையால் முன் இருந்ததும் தெரியவில்லை பின்பு வரப்போகிறதும் தெரியவில்லை. ஆகையால கெடுதி தெரியாமையால் ஒரு வஸ்து அழிவதை நினைத்து வருத்தப்பட நியாயமில்லை. [ 28 ]

அவ— உடம்பையே ஆத்மாவாக நினைத்தாலும், வருததப்பட நியாயமில்லையென்று சொனனேன். உடம்பைக்காட்டிலும் வேருய், ஆதமாவென்று ஒரு வஸ்து இருககிறது. அது மிகவும் ஆசசரியமானது. அதைப் பார்ப்பதும், சொல்லுவதும, கேட்பதும, கேட்டு அதின் உண்மையை யறிவதும் மிகவும் அரிது என்று சொல்லுகிறர்—

ஆஶ்சர்யவத்பஶ்யதி கஶ்சிதேநமாஶ்சர்யவத்வததி ததைவ சாந்ய: । ஆஶ்சர்யவச்சைநமந்ய: ஶ்ருணோதி ஶ்ருத்வாப்யேநம் வேத ந சைவ கஶ்சித் ॥ ॥ ௨௯ ॥

ஒருவன் உயர்நத தபஸ்ஸைப்பண்ணி, பாபத்தைப போக்கி, புண்ணியத்தைஸம்பாதித்து, உடம்பைக்காட்டிலும் வேருயும், தன்னைத்தவிர மறற அறிவில்லாத எல்லா வஸ்துக்களைக் காட்டிலும வேறு ஜாதியாயும், அதனுலே ஆசசரியமாயும்இருக்கிற ஆத்ம ஸ்வரூபத்தைப பார்க்கிறன். இப்படிப்பட்ட ஒருவன மற்றொருவனுக்குச சொல்லுகிறன். இதையாரோ ஒருவன் கேட்கிறன.

அப்படிக்கேட்டும் ஒருவனும் அதை யுள்ளபடி 1 அறியவில்லை.

தேஹீ நித்யமவத்யோऽயம் தேஹே ஸர்வஸ்ய பாரத ।
தஸ்மாத் ஸர்வாணி பூதானி ந த்வம் ஶோசிதுமர்ஹஸி ॥

தேவ உருவம், மனித உருவம், மிருக உருவம், மர உருவம்- இவைகளில் ஜாதி, குணம், தேசம், காலம் முதலானவைகளால் வேறுபாடுகளும், அவைகளிலிருக்கும் ஆத்மாக்களுக்கு 2 ஸுகத்திலும் துக்கத்திலும் வேறுபாடுகளும் இருந்தாலும், அழிவில்லையென்கிற விஷயத்தில் எல்லா ஆத்மாக்களும் ஒரேமாதிரி. சில உடம்புகளில் ஆத்மா அழிகிறதென்றும், சில உடம்புகளில் ஆத்மா அழிகிறதில்லை யென்றுமில்லை. வேறுபாடுகளும் அழிவும் உடம்புகளில்தானிருக்கின்றன ஆகையால் ஒரு ஆத்மாவைப் பற்றியும் நீ வருத்தப்படாதே. இவ்வளவு தூரம் சொன்னது பீஷ்மரும் துரோணரும் மாத்திரம் சாகவில்லை யென்பதில்லை. ஒரு ஆத்மாவுக்கும் சாவு இல்லை என்று காட்டுவதற்காக [ 30.]

அவ— துர்யோதநன் முதலானவர்கள் விஷயத்தில் ஸ்நேஹத்தாலும் தயையாலும் வந்த கலக்கத்தைத் தீர்த்தார். துரோணாசாரியர் முதலானவர்களைக் கொல்லுவது பாபம் என்கிற எண்ணத்தைப் போக்குகிறார்—

ஸ்வதர்மமபி சாவேக்ஷ்ய ந விகம்பிதுமர்ஹஸி ।
தர்ம்யாத்தி யுத்தாச்ச்ரேயோऽன்யத் க்ஷத்ரியஸ்ய ந வித்யதே ॥௩௧॥

---

1. உடம்பைக் காட்டிலும் வேறான ஆத்மாவைப் பார்க்கிறவனே அரிது. அதையுள்ளபடி பார்க்கிறவன் அரிது என்று சொல்லவேணுமோ? இப்படிப்பட்டவர்களிருந்தாலும், அதைச்சொல்லுகிறவனே அரிது. அதினுடைய எல்லா ஸங்கதிகளையும் சொல்லுகிறவன் அரிது என்று சொல்லவேணுமோ? இப்படி சொல்லுகிறவர்களிருந்தாலும், கேட்கிறவனே அரிது. சிஷ்யனுக்கு வேண்டியஎல்லா குணங்களோடுகூடி, அதை யுள்ளபடி யிருப்பதைக் கேட்பவன் அரிதென்று சொல்லவேணுமோ?

2. உடம்புகளில் மாறுபாடு இருப்பது எல்லாருக்கும் தெரியும். ஸுகத்திலும் துக்கத்திலும் வேறுபாடுகளிருப்பதாலே, ஆத்மாக்களுக்குள்ளும் வேறுபாடுகளிருக்கிறதோ என்று உண்டாகும் ஸந்தேஹம் இந்த ஸ்லோகத்தில் தீர்க்கப்படுகிறது.

இப்போது ஆரம்பித்திருக்கிற சண்டை பிராணிகளைக் கொல்லுவதாயிருந்தாலும், யக்ஞத்தில் ஆட்டைக் கொல்லுவதைப்போல, அதைத் தர்மமென்று நினை கலங்காதே நியாயமாக ஏற்பட்ட சண்டையைக் காட்டிலும், ஆத்மாவுக்கு க்ஷேமத்தைக்கொடுக்கிற வேறு நல்லவேலை க்ஷத்திரியனுக்குக் கிடையாது க்ஷத்திரியனுக்குச் சண்டைசெய்வது தொழிலென்று, அந்தந்த ஜாதிக்குத் தொழில்களைச் சொல்லுமிடத்தில் (18–வது அத்தியாயம் 43–வது சுலோகம்) சொல்லப்போகிறார்.

யாகத்தில் ஆடு கொல்லப்பட்டாலும், அதற்கு மிகவும் இளப்பமான ஆட்டுருவம் போய், மிகவும் உயர்ந்ததான தேவ உருவம் வருகிறதென்று வேதம் சொல்லுகிறது சிரங்கைக் கத்தியால் அறுத்து, வைத்தியன் செய்கிறவேலை, அந்த வேளையில் தொந்திரவைக் கொடுத்தாலும், பிறகு மிகுந்த ஸௌக்கியத்தைக்கொடுக்கிறது அப்படியே யக்ஞத்தில் ஆட்டைக்கொல்வது. அப்போது அதற்குத் தொந்திரவாயிருந்தாலும், பிறகு ஸுகத்தை கொடுப்பதால், தோஷமன்று சண்டையில் சாகிறவர்கள் தேவர்களாகிறார்கள் என்று சாஸ்திரம் சொல்லுகிறது [ 31 ]

யத்ருச்சயா சோபபந்நம் ஸ்வர்க்கத்வாரமபாவ்ருதம் ।
ஸுகிந: க்ஷத்ரியா: பார்த்த லபந்தே யுத்தமீத்ருசம் ‖௩௨‖

பிரயத்தனமில்லாமல் வந்ததும், மிகவுமுயர்ந்த ஸுகத்தைக் கொடுக்கக் கூடியதும், ஒருவிதமான தடங்கலில்லாததுமான இவ்விதமான சண்டை மிகுந்த புண்ணியம் பண்ணின க்ஷத்திரியர்களுக்கு வருகிறது [ 32 ]

அத சேத்த்வமிமம் தர்ம்யம் ஸங்க்ராமம் ந கரிஷ்யஸி ।
தத: ஸ்வதர்மம் கீர்த்திம் ச ஹித்வா பாபமவாப்ஸ்யஸி ॥ ‖௩௩‖

க்ஷத்திரியனுக்குக் கட்டாயம் செய்ய வேண்டியதென்று சாஸ்திரத்தால் சொல்லப்படுகிற, இப்போது நேர்ந்திருக்கிற, இந்தச் சண்டையை, இதின் உண்மையை யறியாமல், நீ விட்டு விட்டால், தர்மத்தைச் செய்யாததினால் வேறு லோகத்தில் வரும் ஸுகத்தையும், இந்த லோகத்தில் வரும் கீர்த்தியையும் இழந்து, மிகுந்த பாபத்தையும் அடைவாய் [ 33 ]

𑌅𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌂 𑌚𑌾𑌪𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌕𑌥𑌯𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇𑌽𑌵𑍍𑌯𑌯𑌾𑌮𑍍 ।
𑌸𑌂𑌭𑌾𑌵𑌿𑌤𑌸𑍍𑌯 𑌚𑌾𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌰𑍍𑌮𑌰𑌣𑌾𑌦𑌤𑌿𑌰𑌿𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ ॥௩௪॥

ஸுகத்தையும் கீர்த்தியையும் இழப்பது மாத்திரமன்று, "அர்ஜுநன் சண்டை ஆரம்பித்தவுடன் பயந்து ஓடிப்போய் விட்டானும்" என்ற கெட்ட பெயரை எல்லா விடங்களிலும் எப்போதும் யாரும் சொல்லுவார்கள். அதினால் என்னவென்றால், நல்ல பெயர்பெற்ற ஒருவனுக்கு கெட்டபெயர் வருவதைக்காட்டிலும் சாவே மிகவும் நல்லது. [ 34 ]

அவ— நான் பந்துக்களிடத்தில் ஸ்நேஹத்தாலும் தயையாலும் அன்றோ சண்டைப்படாமலிருக்கிறேன். பயந்து ஓடுகிறான் என்று கெட்டபெயர் எப்படிவரும் என்றால், பதில்சொல்லுகிறார்-

𑌭𑌯𑌾𑌦𑍍𑌰𑌣𑌾𑌦𑍁𑌪𑌰𑌤𑌂 𑌮𑌂𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌮𑌹𑌾𑌰𑌥𑌾𑌃 ।
𑌯𑍇𑌷𑌾𑌂 𑌚 𑌤𑍍𑌵𑌂 𑌬𑌹𑍁𑌮𑌤𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌯𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 𑌲𑌾𑌘𑌵𑌮𑍍 ॥

தருந்த கெட்டிக்காரர்களோடு சண்டை நேரும்போது, தருந்த கெட்டிக்காரனென்று எதிரிகளால் கொண்டாடப்பட்ட ஒருவன் பயமில்லாவிட்டால், ஸ்நேஹத்தாலும் தயையினாலும் ஒதுங்குவது வழக்கமில்லை. ஒதுங்கவும் மாட்டான். கர்ணன் முதலானவர்கள் பயத்தாலே நீ ஓடினாய் என்று தான் நினைப்பார்கள்.

𑌅𑌵𑌾𑌚𑍍𑌯𑌵𑌾𑌦𑌾𑌂𑌶𑍍𑌚 𑌬𑌹𑍂𑌨𑍍𑌵𑌦𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑌵𑌾𑌹𑌿𑌤𑌾𑌃 ।
𑌨𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑌵 𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌂 𑌤𑌤𑍋 𑌦𑍁𑌃𑌖𑌤𑌰𑌂 𑌨𑍁 𑌕𑌿𑌮𑍍 ॥௩௬॥

அதுவும் தவிர, "சூரர்களான எங்கள் முன்னிலையில் இந்த அர்ஜுநன் ஒரு க்ஷணம் நிற்க முடியுமா? வேறு இடத்தில்தான் இவன் ஸாமர்த்தியம் செல்லும்" என்று உன்னைப் பலவிதமாக துர்யோதநன் முதலான சத்ருக்கள் எல்லாரும் தூஷிப்பார்கள். அதைக்காட்டிலும் பெரிதான துக்கம் உனக்கு எது ? இப்படி அவர்கள் சொல்லக் கேட்கும்போது, அதைக்கேட்பதைக்காட்டிலும் சாவதே மேலென்று நீயே நினைப்பாய். [ 36 ]

அவ— ஆகையால் நீயாவது அவர்களைக் கொல்லுவது, அல்லது அவர்கள் உன்னை கொல்லுவது—இநத இரண்டும் மிகவும் நல்லது என்று சொல்லுகிறார்—

**ஹதோ** வா ப்ராப்ஸ்யஸி ஸ்வர்க்கம் ஜித்வா வா போக்ஷ்யஸே மஹீம் | தஸ்மாதுத்திஷ்ட கௌந்தேய யுத்தாய க்ருதநிஶ்சய: || ||௩௭||

தர்மமான சண்டையில் நீ பிறர்களால் கொல்லப்பட்டால், அதிலேயே உயர்ந்த ஸுகத்தையடைவாய். நீ அவர்களைக் கொன்றால், ஒருவிதத் தொந்திரவுமில்லாத ராஜ்ஜியத்தை அநுபவிப்பாய். இந்த சண்டையைச் சாஸ்திரம் செய்யவேணுமென்று சொல்லுகையால், மோக்ஷத்தையும் அடைவாய். சண்டைப்படுவது மோக்ஷத்திற்கு ஸாதநமென்று நினைத்து, சண்டைக்குக் கிளம்புவதுதான் என் அத்தை குந்தியின் பிள்ளையான உனக்குத் தகுந்தது. [ 37 ]

அவ— மோக்ஷத்திற்காகச் சண்டை செய்கிற விதத்தைச் சொல்லுகிறார்—

**ஸுகது:கே ஸமே க்ருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ |**
தததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாபமவாப்ஸ்யஸி ||௩௮||

உடம்பைக்காட்டிலும் வேறாய், உடம்பிலுள்ள ஒருவித கெடுதியும் அழிவும் இல்லாத ஆத்மாவையறிந்து, சண்டையில் நேரிடும் ஸுகத்தையும் துக்கத்தையும், லாபத்தையும் நஷ்டத்தையும், ஜயத்தையும் தோல்வியையும் ஸமமாக எண்ணி, அதாவது அவைகளால் மனது கலங்காமல், ஸுவர்க்கம் முதலான பிரயோஜநங்களை விரும்பாமல், இந்தச் சண்டையைக் கட்டாயம் செய்யவேண்டியதென்று நினைத்துச் சண்டையைச்செய். இப்படிச் செய்தால், இப்போதிருக்கிற ஸம்ஸாரம் போய்விடும். இனிமேல் ஸம்ஸாரமும் வராது. [ 38 ]

அவ— இப்படி ஆத்மாவை யுள்ளபடி அறிவித்து,இந்த அறிவுடன் செய்யவேண்டிய மோக்ஷத்திற்கு ஸாதநமான கர்மயோகத்தைச் சொல்ல ஆரம்பிக்கிறார்—

ஏஷா தேऽபிஹிதா ஸாங்க்யே **புத்திர்யோகே** த்விமாம் ஶ்ருணு | புத்த்யா யுக்தோ யயா பார்த்த கர்மபந்தம் ப்ரஹாஸ்யஸி || ||௩௯||

ஆத்மாவையுள்ளபடி அறிவதற்குச் சொல்ல வேண்டியதைச் சொன்னேன் இந்த அறிவுடன் மோக்ஷத்திற்காகக் கர்மம் செய்யும்போது, என்ன நினைவு வேணுமோ அதைச் சொல்லுகிறேன் அந்த நினைவு இல்லாவிட்டால், அந்தக் கர்மத்தினால் ஸம்ஸாரம் போகாது தாம்பிரம முதலானவைகளைச் சுத்திசெய்யாமல் பஸ்மம் (மருந்து) பண்ணினால், அதனால் குணமுண்டாகாது அது போல். [ 39 ]

அவ— சொல்லப்போகிற நினைவுடன் செய்கிற கர்மத்தின் பெருமையைச் சொல்லுகிறார்—

நேஹாபிக்ரமநாஸோ(அ)ஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே ।
ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் ॥௪௦॥

நான் சொல்லப்போகிற நினைவுடன் செய்ய வேண்டிய கர்மத்தை ஆரம்பித்து நடுவில் விட்டு விட்டாலும், செய்யப்பட்டது வீணாய்ப்போகாது தோஷமுமில்லை. தைவவசத்தால் நடுவில் நின்றாலும், கொஞ்சம்செய்ததும் பெரிய பயத்தை யுண்டுபண்ணக்கூடிய ஸம்ஸாரத்தைப்போக்கும் இந்த ஸங்கதி 6-வது அத்தியாயம் 40-வது சுலோகத்தில் விரிவாய்ச் சொல்லப்படும். உலகத்தில் ஒருவன் ஏர்த்துவிட்டு, மேலே செய்யவேண்டிய வேலைகளைச் செய்யாமல் விட்டுவிட்டால், அவனுக்கு ஒன்றும் அகப்படாது விதைக்காமல் போனால், அந்த விதையைக் குத்திச் சாப்பிடலாம். அதையும் இழந்தான் நிறைந்த வெள்ளமுள்ள ஆற்றைத்தாண்டி, அக்கரை போக நினைத்தவன், அதிவிரங்கி கொஞ்சதூரம் நீந்தி நடுவாற்றில் நீந்தாமல் இருந்தால், அதுவரையில் நீந்தினதும் வீண். ஆற்றோடே போய்விடுவான் ஸ்வர்க்கத்திற்காக யாகம் செய்ய ஆரம்பித்தவன் நடுவில் அதை விட்டு விட்டால், செய்ததும் வீண், தோஷமுமுண்டு அவன் பிரும்மராக்ஷஸ்ஸாகவும் ஆய்விடுவன் என்று சாஸ்திரம் சொல்லுகிறது [ 40 ]

அவ— மற்ற பிரயோஜனத்திற்காக கர்மங்கள் செய்யும்போது இருக்கும் நினைவைக்காட்டிலும், மோக்ஷத்திற்காக கர்மங்கள்செய்யும்போது இருக்கும் நினைவின் பெருமையைச் சொல்லுகிறார்—

வ்யவஸாயாத்மிகா புத்திரேகேஹ குருநந்தந |
பஹுஶாகா ஹ்யநந்தாஶ்ச புத்தயோऽவ்யவஸாயிநாம் ||௪௧||

1. *ஆத்மாவை யுள்ளபடி அறிந்து, மோக்ஷம் வேணுமென்று ஆசைப்பட்டு, கர்மங்களைச் செய்பவனுக்கு தன்னால் செய்யப்படும் சாஸ்திரத்தில் சொல்லிய எல்லாக் கர்மங்களிலும் ஒரே நினைவு தானிருக்கிறது. ஏனென்றால்—அந்தக் கர்மங்கள் எல்லாவற்றுக்கும் அவனுக்கு மோக்ஷமொன்றே பலன். அப்படியே அவன் எல்*

---

1. *ஸ்வர்க்கம் முதலான பலன்களுக்காகக் கர்மங்கள் செய்கிறவனுக்கு, உடம்பைக்காட்டிலும் வேறான அழிவில்லாத ஆத்மாவென்று ஒருவஸ்து இருக்கிறது என்கிற அறிவுமாத்திரம் போதும். உடம்பைக் காட்டிலும் ஆத்மா வேறு என்று அறிவுமாத்திரம் போதாது. அது உடம்போடு பிறந்து உடம்போடு அழியும் என்கிற தப்பெண்ணமிருந்தால், வேறு லோகத்தில் அநுபவிக்கக்கூடிய பலன்களை ஆசைப்பட்டுக் கர்மங்களைச் செய்யமாட்டான். ஆனால் ஆத்மா ஸ்வயம் பிரகாசம் (தானே தோன்றுகிறது) என்றும், அதில்இயற்கையாக ஒருவித தோஷம் கிடையாதென்றும், அது மிகவும் இன்பமானதென்றும், பகவானுக்கு உடம்பென்றும் அவன் அறியவேண்டியதில்லை. இந்த அறிவில்லாமலே ஸ்வர்க்கம் முதலான பலன்களை ஆசைப்படவும், அவைகளுக்கு வேண்டிய ஸாதநங்களைச் செய்யவும், அந்தப்பலன்களை அநுபவிக்கவும் கூடும். ஸ்வர்க்கம் ஸுகமென்று சாஸ்திரத்தாலே தெரிந்தால், தானே அதில் ஆசையுண்டாகும். அதனுடைய ஸாதநங்களைச் செய்வதற்குத் தகுந்த உடம்பு முதலான கருவிகள் இருப்பதாலும், பலனை யநுபவிக்கும்காலத்தில்தானிருப்பதாக நிச்சயமிருப்பதாலேயும்,அறிவில்லாத குடியானவன் நெல்லுக்காக வயலையுழுவதுபோல், அதின் ஸாதநங்களை அவன் செய்வான். ஸாதநங்கள் ஸரியாயிருந்தால், பலன் கட்டாயமுண்டாகும். அநுபவத்திற்காகவே அவன் பிறந்திருப்பதாலே, பலனை யநுபவிக்கவும் கூடும். அப்போது அவனுக்கு ஆத்மாவின் உள்ளபடி அறிவு வேண்டியதில்லை. ஸ்வர்க்கத்தை ஆசைப்பட்டவன் ஆத்மாவை உள்ளபடி அறிந்துதான் யாகங்களைச்செய்ய வேணுமென்று சாஸ்திரம் சொல்லவில்லை. ஆத்மாவை உள்ளபடி தெரியாதவனே ஸ்வர்க்கம் முதலான பலன்களை அநுபவிக்கிறானென்றும், புகை முதலான வழியால் அவன் ஸ்வர்க்கத்திற்குப் போகிறானென்றும் சாஸ்திரம் சொல்லுகிறது. அடுத்த சுலோகத்திலும் ஆத்மாவை யுள்ளபடி அறியாதவன் ஸ்வர்க்கத்திற்காகப் பாடுபடுகிறானென்று சொல்லுகிறது.*

லாக் கர்மங்களையும் மோக்ஷமென்கிற ஒரே பலனுக்காகச் செய்ய வேண்டியதென்று வேதத்தில் சொல்லியிருக்கிறது ஆகையாலே அவன் செய்யும் கர்மங்கள வெவ்வேறாக இருநதாலும,வெவ்வேறு விதிகளைக்கொண்டு செயயப்படடாலும, மோக்ஷமெனகிற ஒரே பலனை அவைகளால அடைய வேணடியது. அநத விதிகளெல லாம் அவனுககு ஒரே விதியாயிருககினறன ஆகையாலே அவ னுக்கு எல்லாக கர்மஙகளிலும ஒரே நினைவுதான இருககிறது உதாரணம்—தர்சம எனறும, பூர்ணமாஸமெனறும சொலலப பட்ட யகஞஙகளில ஆறு 1 யாகஙகளைச செயயுமபடி ஐநது விதிக ளிருக்கினறன. அநத யாகஙகள பலன கொடுபபதறகு உதவி யாக, பதினொனறு யாகஙகள வேறு விதிகளால தனிததனி விதிக கபபடுகினறன இவைகள எலலாவறறுககும ஸ்வாககமொன றே பலன ஆகையால இநதக்காமஙகள வெவவேறாக இருநதா லும, ஒரே பலனைக் கொடுககிறதாகையால, அவைகளைபபறறின நினைவு ஒனறுதான இதுபோல மோக்ஷததை ஆசைபபடடவ னுககு அவன் செய்யும எல்லாககர்மஙகளிலும ஒரே நினைவுதானி ருககிறது ஸ்வர்ககம்-பிளளை-பசு-சோறு, முதலான பலன களை ஆசைப்படடவன செயயும காமஙகளில இருககும நினைவுகள கணககிலலாதவைகளாயிருககினறன ஏனெனறால — அவன ஆசைபபடுகிற பலனகளுககுக கணககிலலை ஸ்வாககம எனற ஒரே பலனுககாக வேதம் சொலலுகிற தர்சமெனறும, பூர்ணமா

---

1. யாகமெனபது ஒரு தேவதைககு ஒரு பொருளை கொடுபபது அமா வாஸைக்கு அடுதத பிரதமையில மூனறு யாகஙகள செயய வேணடி யது. அவைகளுக்குத தாசமெனறு பெயா. பௌாணமாஸிககு அடுததப் பிரதமையில மூனறு யாகஙகள செயய வேணடியது. அவை களுககு பூாணமாஸம எனறு பெயா தாசமும பூாணமாஸமும சோநது ஸ்வாககம எனகிற பலனைககொடுககினறன இவைகள பிரதாநயாகங கள். இவைக்ளுககு உதவிசெயகிற யாகஙகள பதினொனறு. அவை யாவன- ஐநது பிரயாஜஙகள இரணடு ஆஜ்யபாகஙகள இவைகளை பிரதாநயாகஙகளுக்கு முன்னாலே செயய வேணடியது ஸவிஷ்ட க்ருத் மூனறு அநுயாஜஙகள் இவைகளைப பிரதான யாகஙகளுககுப பின்னாலே செய்யவேணடியது, இவைகளுககுத தனியான பலன் கிடையாது.

ஸமென்றும் சொல்லப்பட்ட கர்மங்களைச் செய்யும்போது, நடுவில் ஸுவர்க்கத்தோடு அநேக 1 சின்ன பலன்களை ஆசைப்பட்டு, அவைகளுக்காகச் சில கர்மங்கள் செய்யப்படுவதால், ஒரே நினைவில் பல பிரிவுகளிருக்கின்றன.

2 இதினால் மோக்ஷம் வேணுமென்று ஆசைப்படுகிறவன் தெரிந்து கொள்ள வேண்டியதாவது— 3 நித்யமென்றும், நைமித்திகமென்றும் சொல்லப்படுகிற கர்மங்களினால் சில முக்கியமான பலன்களும், நடுவில் சின்னபலன்களும் வருமென்று வேதத்தில் சொல்லப்படுகின்றன. அந்த பலன்களை யெல்லாம் விட்டுவிட்டு,

---

1. சின்ன பலன்கள்—உதாரணம் - தர்சமும் பூர்ணமாஸமும் செய்யும்போது, வருத்த அரிசிமாவை உண்டையாகப் பிடிப்பதற்காக ஒரு மர அகலில் ஜலத்தை யெடுத்து ஆஹவனீய அக்நிக்கு வடபுறம் வைக்க வேண்டியது. இந்த ஜலத்திற்குப் பிரணீதா என்று பெயர். யஜமானனுக்குப் பசுவில் ஆசையிருந்தால், மர அகலுக்குப் பதிலாக மாடு கறக்கிற பாத்திரத்தில் இந்த ஜலத்தை வைக்கவேண்டியது. அப்படிச் செய்தால், ஸுவர்க்கம் என்கிற முக்கியமான பலனுடன், பசு என்கிற சின்ன பலனும் வருகிறது.

2. பலன்களை ஆசைப்பட்டுக் கர்மங்களைச் செய்கிறவனுக்கு அனேக நினைவுகளும், ஒவ்வொரு நினைவில் அனேகப் பிரிவுகளும் இருப்பதால், அவன் நாலு பக்கத்திலும் இழுக்கப்படுகிறான். அதனால் மனது கலங்கி, ஒரு கர்மத்தையும் நன்றாய் செய்ய முடியாது. மோக்ஷத்திற்காகக் கருமங்கள் செய்கிறவனுக்கு ஒரே நினைவு இருக்கிறபடியால், மனதில் கலக்கமில்லை. அவனுடைய சக்தி முழுவதையும் அந்தக் கர்மங்களில் செலுத்தி அவைகளை நன்றாய் செய்யலாம்.

3. நித்யகர்மம் என்றால், எந்தக் கர்மங்களைச்செய்யாமல் போனால், தண்டனை யுண்டென்று சாஸ்திரம் சொல்லுகிறதோ, அவைகள். ஸந்தியாவந்தனம் முதலியவைகள். ஒருகாரணம் நேர்ந்தபோது செய்யவேண்டிய கர்மங்களை நைமித்திக கர்மங்கள் என்று சொல்லுகிறது. கிரஹணம் வந்தால், தர்ப்பணம் செய்வது நைமித்திக கர்மம். இவைகளையும் செய்யாவிட்டால் தண்டனையுண்டு. இவைகளை ஒரு காலத்தில் செய்ய வேண்டியது. நித்யகர்மங்களை உயிரோடிருக்கும் வரையில் செய்யு வேண்டியது.

அவைகளுக்கு எல்லாம் 1மோக்ஷமொன்றே பலனென்றும், அவைகள் வெவ்வேறு சாஸ்திரங்களால் விதிக்கப்பட்டாலும், எல்லா விதியும் ஒரே விதியென்றும் எண்ணி, அவைகளைச் செய்யவேண்டியது பலனுக்காகவே ஏற்பட்ட (காமிய) கர்மங்களிலும், தன்னுடைய ஜாதிக்கும் ஆசிரமத்துக்கும் தகுந்த கர்மங்களை அவைகளின் பலன்களில் ஆசையை விட்டு, அவைகளுக்கு மோக்ஷம் ஒன்றே பலனென்று எண்ணி, நித்யம் நைமித்திகம் என்ற கர்மங்களுடன் 2 சேர்த்துத் தன் சக்திக்குத் தகுந்தபடி செய்ய வேண்டியது [41]

அவ— ஸ்வர்க்கம் முதலான பிரயோஜனங்களுக்காகக் கர்மம் செய்கிறவர்களைத் தூஷிக்கிறார்—

யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்யவிபஶ்சித: ।
வேதவாதரதா: பார்த² நாந்யதஸ்தீதி வாதி³ந: ॥ ॥௪௨॥

காமாத்மாந: ஸ்வர்க³பரா ஜந்மகர்மப²லப்ரதா³ம் ।
க்ரியாவிஶேஷப³ஹுலாம் போ⁴கை³ஶ்வர்யக³திம் ப்ரதி ॥௪௩॥

போ⁴கை³ஶ்வர்யப்ரஸக்தாநாம் தயாபஹ்ருதசேதஸாம் ।
வ்யவஸாயாத்மிகா பு³த்³தி⁴: ஸமாதௌ⁴ ந விதீ⁴யதே ॥ ॥௪௪॥

1 நித்ய கர்மங்களைச் செய்வதனாலே பாபம் போகுமென்று சொல்லவில்லையா? மோக்ஷமென்கிற ஒரே பலனென்று சொல்லக்கூடுமா? பதில்—நித்ய கர்மங்கள் பாபத்தை நாசம் செய்து, மனதின் கல்மஷத்தைப் போக்கி, மோக்ஷத்திற்கு உதவி செய்கின்றன. ஆதலால் அவைகளுக்கும் மோக்ஷமே பலன்.

2 இதன் கருத்து—முமுக்ஷுவுக்கு காமியகர்மங்களில் அங்கங்கள் குறைந்தபோதிலும், நித்யகர்மங்களிலும் நைமித்திகங்களிலும் போல் தோஷம் வராது பிரதானமான தர்சத்திலும் பூர்ணமாஸத்திலும் விட்டுப்போவது உண்டானால் தோஷமுண்டு அவைகளுக்கு அங்கமான பிரயாஜம் முதலான யாகங்களை, தேசமும் காலமும் ஒத்துக் கொள்ளாததாலே, விட்டுப்போதிலும் தோஷமில்லை. அப்படியே நித்ய கர்மங்களும், நைமித்திக கர்மங்களும், காமியகர்மங்களும் கர்மயோகத்துக்கு அங்கமாயிருப்பதாலே, ஒருக்கால் அவைகள் செய்ய முடியாமல் நின்றுபோய் விட்டாலும் குறையில்லை பிரதானமான கர்மயோகம் நின்றால்தான் குறை.

சிலர் நல்ல அறிவு இல்லாமல், சில கர்மங்களாலே சில பலன்கள் வருமென்று வேதத்தில சொல்லுகிற வார்த்தைகளில மனது படிந்து, அந்தப் பிரயோஜநங்களில் ஆசையை வைத்து, அவைகளுக்குள் ஸ்வர்க்கத்தையே உயர்ந்த பிரயோஜநமாக எண்ணி, அதைக்காட்டிலும் உயர்ந்த ஸுகம் கிடையாது என்று விஷயாநுபவத்தைப் பற்றியும், நாலு ஜநத்தை யடக்கி ஆளுகிற அதிகாரத்தைப்பற்றியும், சில பேச்சுக்களைப் பேசுகிறார்கள். அந்தப்பேச்சுக்கள், பின்னால பழத்தைக் கொடுக்காத புஷ்பம்போல், கேட்கும்போது ஸுகமாயிருந்தாலும், முடிவில் ஸுகத்தைக் கொடுப்பதன்று அவர்கள் சொல்லுங்கர்மங்களில் ஆத்மாவின் உண்மையான அறிவு இல்லை. வேலைபாகங்களே அதிகமாயிருக்கின்றன. அவைகள ஸ்வர்க்கத்தில் அநுபவம் முடிந்தவுடன், முன்போல் பிறப்பைக் கொடுத்து, ஸ்வர்க்கம் முதலான பிரயோஜநங்களுக்காக மறுபடியும் கர்மங்களைச் செய்யும்படி செய்யும். இந்தக் கர்மங்களைப்பற்றியே பேசிக்கொண்டிருப்பதால், அவர்கள் மனது விஷயாநுபவத்திலும் அதிகாரத்திலும் படிந்திருக்கிறது ஆத்மாவின் நினைவில் இல்லை. ஆகையால் ஆத்மாவை யுள்ளபடி அறிந்து, மோக்ஷத்திற்காக கர்மங்கள் செய்யவேணுமென்று அவர்கள் மனதில் தோன்றாது ஆகையால ஸ்வர்க்கம் முதலான பிரயோஜநங்களை மோக்ஷத்தை விரும்புகிறவன கொஞ்சங்கூட ஆசைபபடக்கூடாது. [42-44]

அவ— நல்ல தாய் தகப்பனகளைக்காட்டிலும் ஆயிரம் பங்கு அதிகமான பிரீதியுள்ள வேதமானது, ஜீவனகளுக்கு உயாந்த ஸுகத்தைக் கொடுப்பதற்காக ஏற்பட்டது அது மிகவும் கொஞ்சமாயும் நிலையில்லாததுமான பிரயோஜநங்களைக் கொடுக்கக்கூடிய கர்மங்களை ஏன் சொல்லுகிறது ? மேலும், வேதத்தில் சொல்லிய கர்மங்களைச் செய்ய வேண்டாமெனறுதான் சொல்லலாமோ என்றால், இரண்டு ச்லோகங்களாலே பதில சொல்லுகிறார்—

த்ரைகுண்ய விஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந । நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்தோ நிர்யோகக்ஷேம ஆத்மவாந் ॥ ॥சரு॥

யாவாநர்த்த உதபாநே ஸர்வத꞉ ஸம்ப்லுதோதகே ॥
தாவாந்ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜாநத꞉ ॥

உலகத்தில் ஜநங்கள் பலவிதமாயிருக்கிறார்கள். அவர்களில் சிலரிடம் ஸத்வமென்கிற குணம் மேலிட்டிருக்கிறது. சிலரிடத்தில் ரஜோகுணம். சிலரிடத்தில் தமோகுணம். ஸத்வகுணம் மேலிட்டவர்களுக்காக மோக்ஷத்திற்கு வேண்டிய கர்மங்களை வேதம் எப்படிக் காட்டுகிறதோ, அப்படியே ரஜோகுணமும் தமோகுணமும் மேலிட்டவர்களுக்கும் பிடித்த பலன்களை கொடுக்கத் தகுந்த கர்மங்களை வேதம் சொல்லுகிறது. அது அவைகளைச் சொல்லாவிட்டால், அவர்கள் தங்களுக்கு வேண்டிய பலன்களை அடைய வழிதெரியாமல், தப்பு வழிகளில் போய் கெட்டுப் போவார்கள். கும்பகோணம் முதலான பெரிய ஸ்தலங்களில் கூலிவேலை செய்கிறவர்களுக்காக கள்ளுக்கடைகள் இருக்கவேண்டியது. அப்படியில்லாவிட்டால், கள்ளு இல்லாவிட்டால் தாங்க முடியாதவர்கள் கள்ளுக்கடையிருக்கும் ஊர்களுக்குபோய், கும்பகோணத்தில்போல் தொழில் அகப்படாமல், உத்ஸவகாலத்தில் ஆராவமுதனை கருடவாகனத்தில் எழுந்தருளப்பண்ணுகிற பாக்கியத்தையும், அதினாலுண்டாகும் புண்ணியத்தையும் இழந்து போவார்கள். ஆகையாலே வேதமானது பிரீதியினாலேயே அவரவர்களுக்கு வேண்டிய பலன்களுக்கு ஸாதனங்களைக் காட்டுகிறது.

பலன்களைக் கொடுக்கக்கூடிய கர்மங்களை இப்படி அர்ஜுநனிடத்தில் தூஷிக்கக் கூடுமோ, என்று ஸந்தேஹமுண்டாகலாம். அர்ஜுநன் "உமக்கு நான் சிஷ்யன், எனக்கு நல்ல ஸங்கதியைச் சொல்லவேணும்" என்று கேட்டுக்கொண்டபடியால், அவனிடத்தில் ஸத்வகுணம் மேலிட்டிருக்கிறதென்றும், அவன் மற்ற இரண்டு குணங்களையும் தலையெடுக்கவொட்டாமல் செய்ய வேண்டியது என்றும் நினைத்து பகவான் அருளிச் செய்கிறார். பிறவியிலேயே ஸத்வகுணம் மேலிட்ட நீ அந்த குணத்தையே வளரப்பண்ணு. கெட்ட பலன்களை கொடுக்கக்கூடிய புண்ணியங்களிலும், பாபங்களிலும் ஆசையில்லாதவனாய், ரஜோகுணமும் தமோகுணமும் சேராத ஸத்வகுணத்தில் இரு. இது எப்படி வருமென்றால், சொல்லுகிறேன். ஆத்மாவின் உள்ளபடி அறிவையும், அதை

கொடுக்கக்கூடியவைகளையும் தேடி, அவைகளைக்காப்பாற்று. மற்றதைத்தேடாதே. இருப்பதையும் விட்டுவிடு. இப்படிச்செய்தால், ரஜோகுணமும் தமோகுணமும் தன்னடையாய் போய்விடும். ஸத்வகுணம் வளரும்.

வேதத்தில் சொல்லிய எல்லா வேலைகளையும் எல்லாரும் எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை. எல்லாருக்காகவும், எல்லாப்பிரயோஜநங்களுக்காகவும் ஏற்பட்டு தண்ணீர் நிறைந்திருக்கிற ஒரு குளத்தில் தாஹமெடுத்தவன் தாஹம்தணிய எவ்வளவு வேணுமோ, அவ்வளவுதான் எடுத்துக்கொள்ளுகிறான். 1. தண்ணீர் முழுவதையும் குடித்துவிடுகிறானோ ? அப்படியே வேதத்திலும். வேதத்தைப்படித்து, ஆத்மாவையுள்ளபடி அறிந்து, இதை விட வேண்டியது, இதையெடுத்துக்கொள்ள வேண்டியது என்று தெரிந்து, ஸம்ஸாரத்தைப் போக்கவேணும், பகவானிடம் போகவேணும் என்று ஆசைப்படுகிறவன் அதற்காக வேண்டிய ஸங்கதிகளை மாத்திரம் எடுத்துக் கொள்ளவேணும் [ 46 ]

அவ— ஆகையால் ஸத்வமுணமுள்ளவனாய் மோக்ஷத்தை ஆசைப்படுகிற நீ, மேலே சொல்லப்போகிற ஸங்கதியைத்தான் எடுத்துக்கொள்ளவேணு மென்கிறார்—

கர்மண்யேவாதிகாரஸ்தே மா ஃபலேஷு கதாசந ।
மா கர்மஃபலஹேதுர்பூர் மா தே ஸங்கோஸ்த்வகர்மணி ॥

நித்யம், நைமித்திகம், காம்யம் என்று பிரிவுள்ள கர்மங்களுக்கு ஏற்பட்ட 2 பலன்களில் ஆசையை வைக்காமல், கர்மங்களை

---

1. துணி தோய்க்கப்போனவன் ஸ்நாநம் பண்ணுகிறானோ ஸ்நாநம் பண்ணப்போனவன் மீன் பிடிப்பனோ. மீன் பிடிக்கப்போனவன் ஒருவேளை ஸ்நாநஞ்செய்யலாம். அவன் ஸ்நாநம் பண்ணுவதற்காகத்தான் மீன் குளத்தில் கொண்டுவந்து விடப்பட்டிருக்கிறது.

2. ஒருவன் ஆத்மாவை உள்ளபடி தெரிந்தால்தான், பலன்களில் ஆசையை விடுவான். 'தான் உடம்பைக்காட்டிலும் வேறு என்று தெரிந்தால், உடம்பையும் அதைச் சேர்ந்தவைகளையும் தன்னுடையதென்று எண்ணமாட்டான். அந்த எண்ணமில்லாவிட்டால், அவைகளுக்கு வேண்டிய வஸ்துக்களைத் தேடவேணுமென்று ஆசையுண்டாகாது. ஆகையி

மாத்திரம் நீ 1. செய்யவேண்டியது. மோக்ஷமென்பது இப்போ
திருக்கும் பிள்ளை பெண்டாட்டி முதலான கட்டைவிடுவது. மற்ற

---

ஞல்பலனில ஆசையைவிடுவதாகாக-தான உடமபைககாட்டிலும வேறு
என்றும, அதுவும அதைச சோநதவைகளும தன்னது அன்று என்றும,
அறியவேணும இது இநத அததியாயம 71-வது சுலோகததில சொல
லபபடும மேலும, இநதக காமஙகளை சுலோகததில சொலலியபடி
செய்யும்போது, இரணடு நினைவுகள வேணடியது. இநதக காமங
களை எனககுப பிரயோஜநம என்பது ஒரு நினைவு "தான பகவானு
ககு வேலைககாரன, வேலைசெய்து அவனை ஸநதோஷப்படுதத வேணடி
யது" என்று தன்னுடைய ஸ்வரூபததைததெரிநதால, "என காமஙக
ளால பகவானை ஸநதோஷபபடுததுகிறேன, ஆகையால் அவைகளே
எனக்குப பிரயோஜநம. அவைகளால வேறு பிரயோஜநததை நான
வேணடேன" என்றெண்ணமுடியும இரணடாவது நினைவு-நானகர்மங
களைச செயயவிலலையென்று அதாவது—இநத வேலைகளைச்செயவது
என ஸ்வரூபததுககு இயறகையன்று உடமபோடு கூடியிருப்பதாலே
நான அவைகளைசசெயகிறேன என்று நினைக்கவேணடியது. அதாவது—
ஆதமாவுககு அடியோடே கர்மமபோயவிட்டால, அதாவது மோக்ஷம
வநதால—இமமாதிரி வேலை இல்லை இதுதவிர நான பகவானுககு உட
பட்டவன, அவன ஏவினபடி நான வேலைசெயகிறேன என்றும நினைக்க
வேணடும ஆகையாலே இதற்காகவும தன ஸ்வரூபததை நினைக்க
வேணடும அதாவது—தான உடமபைககாட்டிலும வேறு என்றும,
பகவானுக்காக ஏறபட்டவனென்றும, பகவானுக்கு உட்பட்டவன என
றும. ஆகையாலேதான ஸ்ரீ பாஷ்யகாரர "ஆதமாவையுள்ளபடி அறி
நது கர்மயோகததைச செயய வேணடியது" என்று அடிக்கடி அருளிச
செயகிறார.

1 இநத சுலோகததில், சாஸதிரம சொலலுகிற வேலைகளை ஒரு
வன எபபடிச செயயவேணடியதென்று சொலலபபடுகிறது. அவைக
ளில மோக்ஷததை வேணடுகிறவன தன்னாலே செயயமுடியுமான காமத
தை யெடுததுககொண்டு, ஆதமாவைப பார்க்கிறவரையில விடாமல
கீழ்ச்சொன்ன இரணடு நினைவுகளுடன செயதுவர வேண்டியது. இது
தான காமயோகம. மறற காமஙகள அதறகு அஙகஙகள் அதாவது—
காமயோகததினாலே ஆதமாவைப பாரபபதறகு ஒவவொருநாளும உண
டாகும இடைஞசலகளைபபோககி உதவி செயகின்றன. இந்தக கர்மஙக
ளினாலே பகவானுககு ஸநதோஷமுணடாகவேண்டியதாகையால சாஸ
திரம சொலலும காமததையே காமயோகமாகச செயயவேணடியது
சாஸ்திரததில சொலலாதவைகளும, சாஸதிரம செயயககூடாதென்று
சொன்னவைகளும பலனகளில ஆசையை விடடபோதிலும காமயோக
மாகமாட்டாது.

பலன்களை விரும்பினால் கட்டுத்தானே வரும். ஆகையாலே பலன்களில் ஆசை வைக்கக்கூடாது. கர்மங்களையே பிரயோஜனமாக எண்ண வேண்டியது. ஏனென்றால், அவைகளால் எனக்கு ஸந்தோஷமுண்டாகிறது. நான் ஸந்தோஷபபட்டு கட்டை விடுவிப்பேன். வேறு ஒருவனாலும் விடுவிக்கமுடியாது. மற்ற பலன்களை விரும்புமவர்களைக்கண்டால் எனக்குப்பிடிக்கவில்லை. மேலும், அந்தக்கர்மங்களைச் செய்கிறபோது, நீ அவைகளைச் செய்கிறேனென்று நினைக்காதே. சாப்பாடு முதலிய வேலைகளால் பசிபோவது முதலிய பலன்கள் வந்து அநுபவிக்கும்போதும், நான் அந்த பலன்களை உண்டுபண்ணினேன்—என்று நினைக்காதே. நீ சாப்பிடுகிறதும், அதினால் பசிபோவதும் உன்னுடைய ஸத்வம் முதலான குணங்களுக்குத் தகுந்தபடி உண்டாகிறது. பேனாவைக்கொண்டு ஒருவன் எழுதுவதுபோல், பகவானும், ஸத்வம் முதலிய உன் குணங்களும் உன்னைக் கொண்டு வேலைசெய்கின்றன என்று நினை. இந்த ஸங்கதி மேலே சொல்லப்போகிறது. இப்படி நினைத்துக்கொண்டு வேலைகளைச் செய். "சண்டைபோடமாட்டேன்" என்று நீசொன்னாய். அப்படி வேலைசெய்யாமலிருப்பதைத் துளிக்கூட மனதில் வைக்காதே. நான் சொன்னபடி சண்டை முதலான கர்மங்களிலேயே உன மனது இருக்க வேண்டியது. [ 47 ]

அவ— சொன்னதையே தெளிவாகச் சொல்லுகிறார்—

𑌯𑍋𑌗𑌸𑍍𑌥𑌃 𑌕𑍁𑌰𑍁 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌙𑍍𑌗𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯 ।
𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍋𑌃 𑌸𑌮𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌸𑌮𑌤𑍍𑌵𑌂 𑌯𑍋𑌗 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

ராஜ்யம், பந்துக்கள் முதலானவைகளில் ஆசையை விட்டு, சண்டை முதலான கர்மங்களை யோகத்திலிருந்து செய். அதாவது அவைகளில் வருகிற ஜயத்தையும், தோல்வியையும் ஒரே மாதிரியாக நினைத்துச் சண்டையைச் செய். இப்படி இரண்டையும் ஒரே மாதிரியாக நினைப்பதை யோகம் என்று சொல்லுகிறது. [ 48 ]

அவ— "நினைவு வேண்டும்" "நினைவு வேண்டும்" என்று ஏன் பலதடவை சொல்லுகிறீர் என்றால், சொல்லுகிறார்—

𑌦𑍂𑌰𑍇𑌣 𑌹𑍍𑌯𑌵𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌾𑌦𑍍𑌧𑌨𑌞𑍍𑌜𑌯 ।
𑌬𑍁𑌦𑍍𑌧𑍌 𑌶𑌰𑌣𑌮𑌨𑍍𑌵𑌿𑌚𑍍𑌛 𑌕𑍃𑌪𑌣𑌾𑌃 𑌫𑌲𑌹𑍇𑌤𑌵𑌃 ॥ ॥௪௯॥

ஒரு கர்மத்தினுடைய முக்கியமான பலனை வேண்டாமலும், நடுவில் நேருகிற லாபநஷ்டங்களை ஒரேமாதிரியாக நினைத்தும், செய்கிற கர்மங்கள் மிகவுமுயர்ந்தன. பலனை நினைத்துச் செய்யும் கர்மங்கள் மிகவும் தாழ்ந்தன வென்றால், முதலில் சொன்ன கர்மமானது ஸம்ஸாரத்தில் உண்டாகும் எல்லா வருத்தங்களையும் போக்கி, அளவில்லாத ஸுகமான மோக்ஷத்தைகொடுக்கும். இரண்டாவது சொன்னது இப்போது ஸம்ஸாரத்திலிருக்கிற வருத்தத்தைக் காட்டிலும் அதிகமான வருத்தத்தை யுண்டாக்கும். நினைவுடன்சேர்ந்த செய்கையால்தான் ஸுகம் வரும். நினைவு இல்லாவிட்டால் செய்கைக்கு பலன் இல்லை அதற்காகத்தான் நினைவை அடிக்கடி சொல்லுகிறது. ஆகையால் கர்மஞ்செய்யும்போது இந்த எண்ணம் உனக்குக்கட்டாயம் வேண்டியது [49]

புத்தியுக்தோ ஜஹாதீஹ உபே ஸுக்ருததுஷ்க்ருதே |
தஸ்மாத்யோகாய யுஜ்யஸ்வ யோக: கர்மஸு கௌஶலம் ||

கீழ்ச்சொன்ன நினைவுடன் கர்மங்களைச் செய்தால், அதனால் பகவான் ஸந்தோஷப்பட்டு, வெகுகாலமாய் வந்துகொண்டிருக்கிற பலவித தொந்திரவுகளைக் கொடுக்கும்படியான, கணக்கில்லாத [1] புண்ணியங்களையும் பாபங்களையும் போக்குகிறான். ஆகையால் மிகவும் யோசனை பண்ணி, இந்த நினைவை ஸம்பாதித்துக்கொள் அது நல்ல கெட்டிக்காரனுக்குத்தான் வரும். [ 50 ]

கர்மஜம் புத்தியுக்தா ஹி பலம் த்யக்த்வா மநீஷிண: |
ஜந்மபந்தவிநிர்முக்தா: பதம் கச்சந்த்யநாமயம் || ||டுக||

---

1. புண்ணியமென்பது ஸுவர்க்கம் முதலான நல்லபலன்களை கொடுக்கும் கர்மங்கள். பாபமென்றால் நரகம் முதலான துக்கங்களை கொடுக்கும் கர்மங்கள். மோக்ஷத்தை வேண்டுகிறவனுக்கு இந்தஇரண்டும் இடஞ்சல்கள். இஷ்டப்படி போகவேணுமென்பவனுக்குத் தங்கத்தினால் செய்த விலங்கு போட்டாலென்ன! இரும்பினால் செய்த விலங்கு போட்டாலென்ன! இரண்டும் இடஞ்சல்தானே. ஆகையால் புண்ணியங்களையும் சிலவிடங்களில் பாபமென்கிற சொல்லாலே சொல்லுகிறது.

கர்மங்களின் பலன்களை வேண்டாமென்று வெறுத்து, கர்மங்களைக்கீழ்ச்சொன்ன நினைவுகளுடன் செய்தால், பிறவியென்கிற பெரிய 1 வருத்தம்போய், ஒரு தொந்திரவுமில்லாத அளவில்லாத 2 ஸுகமான பதம் வரும். இது உபநிஷத்துக்களில் பிரஸித்தம். [51]

யதா தே மோஹகலிலம் புத்திர்வ்யதிதரிஷ்யதி ।
ததா கந்தாஸி நிர்வேதம் ச்ரோதவ்யஸ்ய ச்ருதஸ்ய ச ॥

நான் சொன்ன நினைவுகளுடன் நீ கர்மங்களைச் செய்தால், அதனால் உன் பாபங்கள்போய், புத்தி தெளிந்து, நான் இதுவரையில் நீ விடவேண்டியதென்று சொன்னதும், இனிமேல்சொல்லப் போகிறதும் ஆன சின்ன பிரயோஜநங்களில் அலுப்புவரும். அப்போது "நான் முன்னே மிகுந்த கெடுதல்களைச் செய்தேன், நல்ல ஸங்கதிகளைச் செய்யவில்லை" என்று நினைத்து 3 நீயே வருத்தப்படுவாய். [ 52 ]

அவ— ஆத்மாவையுள்ளபடி அறிந்து, கீழ்ச்சொன்ன நினைவுகளுடன் கர்மங்களைசசெய்வதாலே வரும் பலனைச் சொல்லுகிறார்—

ச்ருதிவிப்ரதிபந்நா தே யதா ஸ்தாஸ்யதி நிச்சலா ।
ஸமாதாவசலா புத்திஸ்ததா யோகமவாப்ஸ்யஸி ॥ ॥ருஉ॥

என்னிடமிருந்து கேட்டதனால், ஆத்மா மற்ற வஸ்துக்களைக்காட்டிலும் வேறு ஜாதியென்றும், அழிவில்லாதது என்றும், மிகவும்

---

1. முன் சுலோகத்தில் புண்ணியங்களையும் பாபங்களையும் விடுவன் என்று சொல்லப்பட்டது. இந்த சுலோகத்தில் அதின்பலனை கட்டுப்போவதும் மோக்ஷத்தையடைவதும் சொல்லப்படுகிறது.

2. மூலத்தில் "பதம்" என்று சொல் இருக்கிறது. அதற்கு அடையப்படுகிறது என்று பொருள். அது பகவான். மோக்ஷத்தையடையும்போது, ஒருவனுடைய மறைந்திருந்த ஸ்வரூபம் வெளிப்படுகையால், அதுவும் அடையவேண்டியதுதான் அதையும் பதமென்று சொல்லலாம். வைகுண்டமென்கிற இடத்துக்குப் போய் பகவானை அடையவேண்டியதாகையால், அதையும் பதமென்று சொல்லலாம்

3. நீயே—நான் சொல்லாமலே. இன்னது விடவேண்டியது இன்னது எடுத்துக்கொள்ளவேண்டியது என்று உனக்கே தெரியும்

சின்னமென்றும் அறிந்திருப்பாய். இந்த அறிவு அடிக்கடி நினைப்பதால் ஸ்திரப்பட்டு, கர்மயோகத்தைச் செய்வதால் தெளிந்த உன் மனதில் கெட்ட யுக்திகளால் கலங்காமல் எப்போது நிலையாயிருக்குமோ, அப்போது யோகத்தை அடைவாய். அதாவது ஆத்மாவைப் [1] பார்ப்பாய் இந்த சுலோகத்தால் சொல்லப்பட்டதாவது— சாஸ்திரத்தில் ஆத்மாவையுள்ளபடி அறிந்து, கர்மயோகத்தைச் செய்வதால், அந்த அறிவு நிலையாய் நிற்கும். இதற்கு ஸ்திதப்ரக்ஞதையென்று பெயர். அதனால் யோகமென்று சொல்லப்படுகிற ஆத்மாவின் பார்வையுண்டாகும். [ 53 ]

அவ— கீழ்ச்சொன்ன ஸ்திதப்ரக்ஞதையென்பது என்ன? அதுவுள்ளவன் என்ன வேலைகளைச் செய்வன்? என்று அர்ஜுநன் கேட்கிறான்—

அர்ஜுந உவாச—

ஸ்தித ப்ரஜ்ஞஸ்ய கா பாஷா ஸமாதிஸ்தஸ்ய கேசவ ।
ஸ்திததீ: கிம் ப்ரபாஷேத கிமாஸீத வ்ரஜேத கிம் ॥ ௫௪ ॥

மனதை வசப்படுத்திக்கொண்டு ஆத்மாவை நிலையாய் அறிகிறவனுடைய ஸ்வரூபம் என்ன? அவன் பேச்சு முதலான வேலைகள் எப்படியிருக்கும். [ 54 ]

அவ— வேலைகளைச் சொன்னால் ஸ்வரூபமும் சொன்னதாக ஆகுமென்று எண்ணி, பகவான் சொல்லுகிறார்—

ப்ரஜஹாதி யதா காமாந் ஸர்வாந் பார்த்த மநோகதாந் ।
ஆத்மந்யேவாத்மநா துஷ்ட: ஸ்திதப்ரஜ்ஞஸ்ததோச்யதே ॥ ௫௫ ॥

தெளிந்த மனதால் எவன் ஆத்மாவை எப்பொழுதும் உள்ளபடி நினைத்துக்கொண்டு மிகவும் ஸந்தோஷமடைந்து, அதனால் உலக ஸங்கதிகள் எல்லாவற்றையும் நன்றாய் விட்டுவிட்டானோ, அப

---

1. ஆத்மாவின் அறிவில் மூன்று படிகளிருக்கின்றன 1 சாஸ்திரத்தாலே அதையறிவது 2. அதையே இடைவிடாமல் நினைத்துக் கொண்டிருப்பது இதற்கு த்யானமென்றும், உபாஸனமென்றும் பெயர் 3 ஆத்மாவைப் பார்ப்பது கர்மயோகம் செய்து, மனது தெளிந்த பிறகு இரண்டாவது [illegible] இரண்டாவது படியால் மூன்றாவது படி வருகிறது.

போது அவனுக்கு ஆத்மாவின் அறிவு நிலையாயிருக்கிறதென்று சொல்லுகிறது. இது நாலுபடிகள் உள்ள ஞானநிஷ்டையில் உயர்ந்த படி. நன்றாய் விட்டுவிட்டானென்றால், பிறகு ஒருக்காலும் நினைப்பதில்லை யென்று பொருள். [ 55 ]

அவ— இதற்கு அடுத்த கீழ்ப்படி (மூன்றாவது) சொல்லப் படுகிறது—

து:கேஷ்வநுத்விக்நமநா: ஸுகேஷு விகதஸ்ப்ருஹ: ।
வீதராகபயக்ரோத: ஸ்திததீர்முநிருச்யதே ॥ ॥ ரு௬ ॥

இஷ்டமான வஸ்துக்களின் பிரிவு முதலானவைகள் வந்த போது வருத்தப்படான். மிகவும் பிடித்த வஸ்துக்கள் கிட்ட வந்தாலும் ஸந்தோஷமடைகிறதில்லை ஆசையும் பயமும் கோபமும் போனவன். இப்படியிருந்து ஆத்மாவை எப்போதும் நினைத்துக்கொண்டேயிருக்கிறவனுக்கு ஆத்மாவின் அறிவு 1 நிலையாயிருக்கிறதென்று சொல்லப்படுகிறது ஆசையென்றால் பிடிக்கும் வஸ்துக்கள் வரப்போகிறதென்று ஸந்தோஷம். பயமென்பது இஷ்டமான வஸ்துக்களின் பிரிவுகளுக்கும், பிடிக்காத வஸ்துக்களின் வரவுக்கும் காரணங்களைப்பார்த்து உண்டாகும் வருத்தம். கோபமென்றால் இஷ்டமான வஸ்துக்களைப் பிரித்தும், தொந்திரவைக் கொடுக்கும் வஸ்துக்களை சேர்த்தும், வருத்தத்தையுண்டு பண்ணுகிற ஒரு மனிதனுக்குத் தொந்திரவை யுண்டுபண்ணக் கூடிய மனதின் கலக்கம் [ 56 ]

ய: ஸர்வத்ராநபிஸ்நேஹஸ்தத்தத்ப்ராப்ய சுபாசுபம் ।
நாபிநந்ததி ந த்வேஷ்டி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥ ௫௭ ॥

1. அர்ஜுநன், ஒருவனுக்கு ஆத்மாவின் அறிவு நிலையாயிருப்பதற்கு அடையாளமென்ன என்று கேட்டான். அதற்குப் பகவான் இரண்டு சுலோகங்களாலே பதில் சொன்னார். ஆத்மாவின் நினைவு நிலையாயிருக்கிறவர்கள் இருவர். ஒருவன உலகங்களிலுள்ள வஸ்துக்களைக் கண் முதலான இந்திரியங்களால அறிகிறதேயில்லை. மற்றொருவன் இவைகளை அறிந்தாலும், வருத்தமும் ஸந்தோஷமுமடைகிறதில்லை. இந்த இரண்டு படிகளையும் இந்த அத்தியாயக் கடைசியில 69—70 வது சுலோகங்களில் ஸ்தோத்ரம் பண்ணுகிறார்.

இஷ்டமான வஸ்துக்களைக்கண்டபோது ஸந்தோஷப்பட்டு ஒன்றும் செய்கிறதில்லை பிடிக்காத வஸ்துக்களைக்கண்டு வருத்தப்பட்டு ஒன்றுஞ் செய்கிறதில்லை 1 எந்தவஸ்துவைக் கண்டாலும், நமக்கு இதனால் என்னப் பிரயோஜநம் என்று இருக்கிறான்.

அவ— இதற்குக் கீழ்ப்படி (முதலாவதுபடி) யைச் சொல்லுகிறார்—

யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோ(அ)ங்காநீவ ஸர்வஶ: ।
இந்த்ரியாணீந்த்ரியார்தேப்யஸ் தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥

இஷ்டமான வஸ்துக்கள் கண்ணுக்குப் படும்போது, பார்க்கக்கூடாதென்று நினைத்து, கண்ணையும் மனத்தையும் அதிலிருந்து இழுத்து, ஆத்மாவில் நிறுத்துகிறான் ஒரு குளத்திலிருக்கிற ஆமையானது மனிதனைக்கண்டவுடன், நீட்டின கால்களைச் சுருக்கிக்கொண்டு மறைந்து விடுகிறது. அதுபோல், கீழ்ப்படிகளால் மேல்படிகள் உண்டாகின்றன. 2. [ 58 ]

---

1. பாஷ்யத்தில் "எந்த வஸ்து" என்றிருந்தாலும், பிடித்தவஸ்துக்கள் என்று பொருள் பிடிக்காத வஸ்துக்களில் ஆசையுண்டாகவே இடமில்லை. பிரியமான வஸ்துக்களைக் கண்டால், அதனால் ஸந்தோஷமுண்டாகும் ஆனால் அது விஷயமாக ஒரு வேலையும் செய்கிறதில்லை. பிடிக்காத வஸ்துக்களைக் கண்டால், வருத்தமுண்டாகும். ஆனால் அதை விலக்குவதற்காக ஒரு வேலையும் செய்கிறதில்லை. இந்தப்படியில் விஷயங்களிலிருக்கும் ஆசைகளில் சில ஆசைகள் ஜயிக்கப்பட்டு போய்விட்டன. சில ஆசைகள் இருக்கின்றன. அவைகளையும் போக்குவதற்குப் பிரயத்தனப்படுகிறான். பிடிக்கும் வஸ்துக்கள் வருவதற்கு தானாக வேலை செய்கிறதில்லை பிடித்த வஸ்துக்கள் தானாக வந்தபோதும், போன போதும், ஸந்தோஷத்தாலும் வருத்தத்தாலும் ஒரு வேலையும் செய்கிறதில்லை

2. 55-வது முதல் நான்கு ச்லோகங்களில் நாலுபடிகள் சொல்லப்பட்டன. இந்த நாலுபடிகளுக்கு வித்தியாஸம் என்னவென்றால்- முதற்படியில் ஒருவன் விஷயங்கள் தன்னை யிழுக்கின்றனவென்று பயந்து, அவைகளில்லாத இடத்தில் போவான். விஷயங்கள் என்றால் இந்திரியங்களால் அநுபவிக்கக்கூடிய வஸ்துக்கள். இதற்கு அடுத்த

அ— 1 கீழ்ச்சொல்லிய உயர்ந்தபடி வருவது மிகவும் அரிது என்றும், அது வருவதற்கு வழியையும் சொல்லுகிறார்—

விஷயா விநிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தேஹிந: ।
ரஸவர்ஜம் ரஸோ஽ப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே ॥

இந்திரியங்களுக்கு ஆஹாரங்கள் விஷயங்கள் அவைகளை விஷயங்களில் போகாமல் அடக்கினவனுக்கு விஷயங்கள் தோன்றாது ஆனால் அவைகளிலிருக்கும் ஆசை ஒழியாது விஷயங்களைக் காட்டிலும் உயர்ந்த ஸுகமான ஆத்மாவைப் பார்த்தால்தான் ஆசையொழியும் நாம் பார்க்கக்கூடாது என்று எண்ணி சில வஸ்துக்களைப் பார்க்காமலிருக்கிறோம் ஆனால் அவைகளில் ஆசையொழியவில்லை இதை யோஜித்தால் தெரியும் [ 59 ]

மேற்படியில் ஸந்தோஷத்தைக் கொடுக்கும் ஒரு நன்மை கிடைத்தால், அதனாலுண்டாகும் ஸந்தோஷத்தின் வேலையையும், துக்கத்தைக் கொடுக்கும் தீமை வந்தால், அதனாலுண்டாகும் வருத்தத்தின் வேலையையும் பிரயத்னப் பட்டுத் தடுப்பன் இதற்கடுத்த மேற்படியில் நன்மையும் தீமையும் வந்தால், ஸந்தோஷமும் துக்கமும் உண்டாகாது ஒன்றிலும் ஆசையில்லாமையால் ஆசைப்பட்ட வஸ்து கிடைக்காமல் போகுமோ என்று பயமுமுண்டாகாது அது வருவதை எவனாவது தடுத்தாலும், அவனிடம் கோபமுமுண்டாகாது இந்தப் படியில் விஷயங்கள் கண்ணில் படும் எல்லாவற்றிற்கும் மேலான படியில் விஷயங்களே கண்ணில் படாது உதாரணம்—முதல் படியில் ஒருவன் ஒரு அழகான ஸ்திரீ கண்ணில் பட்டால், அவளைப் பார்க்கக்கூடாதென்று கண்ணைத் திருப்பிக் கொள்ளுகிறான் அதற்கு அடுத்த மேற்படியில் அவளைப் பார்த்தால் ஸந்தோஷமுண்டாகிறது ஆனால் மேலே ஒருவேலையும் செய்கிறதில்லை இதற்கு அடுத்த மேற்படியில் ஸந்தோஷமே உண்டாகிறதில்லை உயர்ந்தபடியில் ஸ்திரீயைப் பார்ப்பதேயில்லை இப்போது நாமோ ஸ்திரீகளிருக்கிற இடத்தைவிட்டுப் போகாமல், அவர்களிருக்குமிடத்தைத் தேடிப்போகிறோம்

2 இந்த ஸங்கதியை எதற்காகச் சொல்லுகிறார் என்றால், ஞானயோகத்தைச் சொன்னவுடன் அதை அர்ஜுனன் செய்கிறேனென்று சொல்லுவனோவென்று பயந்து, அவனுக்கு அந்த எண்ணம் உண்டாகாமலிருப்பதற்காக இதைச்சொன்னாரென்று தோன்றுகிறது.

அவ— இப்படி ஆத்மாவைப்பார்க்காவிட்டால் விஷயங்களில் ஆசைபோகாது என்று கீழே சொல்லப்பட்டது. இப்போது விஷயங்களில் ஆசைபோகாமல் போனால், இந்திரியங்களை ஜயிக்க முடியாதென்று சொல்லுகிறார்—

யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஶ்சித: ।
இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந: ॥ ॥௬௰॥

விஷயங்களில் ஆசைபோகாதபோனால், ஒருவன் சாஸ்திரத்தைக்கொண்டு நல்ல ஸங்கதிகளைத் தெரிந்து, நல்ல வேலைகளில் பிரயத்தினம் பண்ணினாலும், 1. வலிமையுள்ள இந்திரியங்கள் அவனைக்கலக்கி பலாத்காரமாய் அவன் மனதை இழுத்துக்கொண்டு போய்விடும். ஆகையால் ஆத்மாவைப்பார்த்தால்தான் இந்திரியங்களை ஜயிக்கலாம். இந்திரியங்களை ஜயித்தால்தான் ஆத்மாவைப் பார்க்கலாம். ஆகையால் உயர்ந்தபடி வருவது மிகுந்த வருத்தம்.

தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர: ।
வஶே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥ ௬௧॥

கீழ்ச்சொன்னபடி ஒன்றுக்கொன்று துணையாயிருப்பதால், உயர்ந்தபடியை அடையமுடியாத கஷ்டத்தைத் தீர்ப்பதற்காக, விஷயங்களில் ஆசையிருப்பதாலே ஜயிக்கமுடியாத 2 இந்திரியங்களை அடக்கி, 3 மிகவும் இன்பமாயும், எல்லாப் பாபங்களையும் போக்குவதும் ஆன என்னுடைய திருமேனியில் உன் மனதை நிறுத்தி, ஜாக்கிரதையாய் என்னையே நினைத்துக்கொண்டிரு. இடை

---

1. இந்திரியங்களுக்கு வலிமை விஷயங்களில் ஆசை.

2. இவ்விடத்தில் இந்திரியங்களை அடக்குவதாவது விஷயங்களைத் தொடாமல்மாத்திரம்செய்வது. முழுவதும்இப்போது அடக்கமுடியாது.

3. இது சுலோகத்தில் உள்ள ''மத்பர:'' என்கிற சொல்லின் கருத்து. அதின் பொருள்—என்னையே நினைத்துக்கொண்டவனாய் என்று. ஆகையாலே கிருஷ்ணபகவானுடைய திருமேனியை நினையென்று சொல்லப்பட்டது. எதற்காக அவருடைய திருமேனியை நினைப்பது என்றால், அத்தத்திருமேனியில் இரண்டு குணங்கள் இருக்கின்றன. முதலாவது அது மிகவும் இன்பமானது. ஆகையால் அதில் மனதை நிறுத்தலாம். மிகவும் அழகான வஸ்துக்களைப் பார்த்தால், அவைகளை

விடாமல் என் திருமேனியை நீ நினைத்தால், உன்னுடைய 1 எல்லாப்பாபங்களும் போய்விடும். அதனால் மனது 2 தெளிந்து, ஆசையையொழித்து, இந்திரியங்களை உன் வசப்படுத்திக் கொள்வாய். அப்போது ஆத்மாவைப்பார்க்க முடியும் இதையே சுலோகத்தின் பின்பாதி சொல்லுகிறது. 'காற்றோடு கூடிய நெருப்பு வைக்கோல் போரைக் கொளுத்துவதுபோல, யோகிகளுடைய மனதிலிருக்கும் விஷ்ணு அவர்களுடைய எல்லாப் பாபங்களையும் கொளுத்திவிடுவான்" என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் சொல்லியிருக்கிறது. [ 61 ]

த்யாயதோ விஷயாந் பும்ஸ: ஸங்கஸ்தேஷூபஜாயதே |
ஸங்காத் ஸஞ்ஜாயதே காம: காமாத் க்ரோதோऽபிஜாயதே ||

க்ரோதாத் பவதி ஸம்மோஹ: ஸம்மோஹாத் ஸ்ம்ருதிவிப்ரம: |
ஸ்ம்ருதிப்ரம்ஶாத் புத்திநாஶோ புத்திநாஶாத் ப்ரணஶ்யதி ||௬௩||

---

யே நினைப்பது மனதிற்கு வழக்கம். அளவில்லாத ஸுகமுள்ள பகவானுடைய திருமேனியில் மனது நிலையாய் நிற்குமென்று சொல்லவேண்டுமோ. பிரும்மா முதலானவர்களுடைய உடம்பை நினைக்கலாம். ஆனால் அவைகளை நினைத்தவனுக்குப் பாபங்கள் போகாது. பகவானுடைய திருமேனியை நினைப்பவனுக்கு அவைகள் போய்விடும். பாபங்களைப் போக்குவது அதற்கு ஸ்வபாவம் நெருப்புக்கு வைக்கோல் போரைக் கொளுத்துவதுபோல. இது பகவானுடைய திருமேனிக்கு இரண்டாவது குணம்.

1. இங்கே 'எல்லாப் பாபம்' என்பதற்கு, ஆத்மாவைப் பார்ப்பதற்கு விரோதியான பாபங்கள் என்றுபொருள்.

2 மனது தெளிந்து என்றால் ரஜஸ்ஸும் தமஸ்ஸும் குறைந்து என்று பொருள் அதனால்தான் விஷயங்களில் ஆசைபோகிறது ஆத்மாவை விடாமல் நினைப்பதற்கு இடைஞ்சலானது இந்திரியங்கள் அடங்காமை. அதற்குக் காரணம் விஷயங்களில் ஆசையிருப்பது. அதற்கும் காரணம் ரஜஸ்ஸும் தமஸ்ஸும் ஆகிற குணங்கள் மேலிட்டிருப்பது. இதைத் தடுப்பதற்கு ஸாதநம் சுலோகத்தில் சொன்னபடி பகவானுடைய திருமேனியில் மனதை வைத்து அவனையே நினைத்துக்கொண்டிருப்பது.

தானுகவே ஆசையொழியாமலும், என் உருவத்தில் மனதை வைக்காமலும், தன்னுடைய ப்ரயத்தினத்தால் இந்திரியங்களை அடக்கவேணுமென்று ஆரம்பித்தால், நெடுநாளாய் வந்த கெட்ட பழக்கத்தாலே வரும் விஷயங்களுடைய நினைவைத் தள்ளமுடியாது. விஷயங்களை நினைத்ததே ஆசை வளரும். ஆசை வளர்ந்தால் காமமுண்டாகும். காமமாவது ஆசையின் கடுமையான நிலை. அதாவது—எந்த ஸமயத்தில் விஷயங்களை யநுபவிக்காத போனால் தாங்கமுடியாதோ, அப்படிப்பட்ட ஆசை. காமத்தால் கோபமுண்டாகும். அந்தக்காமம் இருக்கும்போது அநுபவிக்க வேண்டிய விஷயம் கிட்டாதபோனால், "இவர்கள்தான் இந்த விஷயங்களை கிட்டவொட்டாமல் செய்தார்கள்" என்று அருகில் இருக்கிறவர்களிடம் கோபமுண்டாகிறது. கோபம் வந்தால், இன்னது செய்யலாம், இன்னது செய்யக்கூடாது என்கிற அறிவு போய்விடும். அப்போது எதை வேணுமோ, அதைச் செய்வன். தாய்தகப்பனையும் கொலைபண்ணுவன். அப்போது "இந்திரியங்களை அடக்கவேணுமென்று ஆரம்பித்தோம்" என்கிற நினைவுபோய்விடும். அதுபோனால் ஆத்மாவைஅறியவேணுமென்கிற நிர்ணயம் போய் விடும். அது போய்விட்டால், மறுபடியும் 1 ஸம்ஸாரத்தில் அழுந்தி விடுவன். பிறப்பு சாவு முதலிய தொந்திரவுகள் நிற்காது. [62-63]

ராகத்வேஷவியுக்தைஸ்து விஷயாநிந்த்ரியைஶ்சரந் ।
ஆத்மவஶ்யைர்விதேயாத்மா ப்ரஸாதமதிகச்சதி ॥ ॥௬௪॥

61—வது ச்லோகத்தில் சொல்லியபடி எல்லா உலகங்களுக்கும் ராஜாவான என்னுடைய திருமேனியில் மனதைப்பதித்து, எல்லாப் பாபங்களையும் போக்கி, அதனால் ஆசையும் த்வேஷமும் ஆகிற வலிமைபோன இந்திரியங்களைத்தன் வசமாக்கி,விஷயங்கள்

1. ச்லோகத்தில் "ப்ரணச்யதி" என்று சொல் இருக்கிறது. அதற்கு மிகவும் அழிந்து போவன் என்று பொருள். ஆத்மாவுக்கு அழிவில்லாமையாலே அந்தச் சொல்லுக்கு இல்லாதது போலாகிறான் என்று பொருள் கொள்ளவேணும். இல்லாதது என்றது தன்னையுள்ளபடி அறியாமை. அதற்குக்காரணம் உடம்பையே ஆத்மாவாக எண்ணுவது. அதற்கும் காரணம் கர்மத்தின் ஸம்பந்தம்.

எதிரில் இருந்தாலும், அவைகளை லக்ஷியம் பண்ணுமலிருக்கிறவனுக்கு மனது அடங்கி தெளிவையடைகிறது [ 64 ]

ப்ரஸாதே ஸர்வது:கா²நாம் ஹாநிரஸ்யோபஜாயதே ।
ப்ரஸந்நசேதஸோ ஹ்யாஶு பு³த்³தி⁴: பர்யவதிஷ்ட²தே ॥ ௬௫ ॥

மனது தெளிந்தால், உடம்புடன் சேர்க்கையால் வருகிற எல்லா துக்கங்களும் போய்விடுகின்றன. ஏனென்ருல், ஆத்மாவைப் பார்ப்பதற்கு விரோதியான தோஷம்போன மனதுள்ளவனுக்கு அப்போதே ஆத்மாவின் அறிவு நிலைத்து நிற்கும். ஆகையால மனது தெளிந்தால, ஒரு துக்கம் இராதென்றுசொல்லலாம்.

நாஸ்தி பு³த்³தி⁴ரயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பா⁴வநா ।
ந சாபா⁴வயத: ஶாந்திரஶாந்தஸ்ய குத: ஸுக²ம் ॥ ௬௬ ॥

என திருமேனியில் மனதை நிறுத்தாமல், தன் பிரயத்நத்தால இந்திரியங்களை அடக்கவேணுமென்று ஆரம்பித்தவனுக்கு, ஒருநாளும், அதாவது வெகுகாலம் பிரயத்நப்பட்டும், உடம்பைக் காட்டிலும் வேருன ஆதமாவின் அறிவு நிலையாய் நிற்காது. எப்போது அது இல்லையோ, அப்போது ஆக்மாவை நீடித்து நினைக்க முடியாது ஆத்மாவை நீடித்து நினைக்காதவனுக்கு விஷயங்களில ஆசை ஒழிவது இல்லை ஆசையொழியாதவனுக்கு நிலையான அளவில்லாத ஸுகம எப்படிக் கிடைக்கும். 1. [ 66 ]

கீழ்சொல்லியபடி இந்திரியங்களை அடக்காதவனுக்கு வரும் தொந்திரவை மறுபடியும் சொல்லுகிருர்—

---

1. இந்த சுலோகத்தில் யோகத்திற்கு அங்கங்களான பிரத்யாஹாரம் முதலான மூன்று அங்கங்கள் சொல்லப்படுகின்றன. "ஆத்மாவின அறிவு நிலையாய நிற்காது" என்பதனுல விஷயங்களிலிருந்து மனதையிழுத்து, ஆத்மாவில் அதை வைக்கவில்லையென்றுஏற்படுகிறது. விஷயங்களிலிருந்துமனதைஇழுப்பதற்குப்பிரதயாஹாரம என்றுபெயர். மனதை ஆதமாவில் நிறுத்துவதற்குத் தாரணை எனறு பெயர். பிரதயாஹாரம் முதலில ஏற்பட்டுப் பிறகு தாரணை வரவேண்டியது. பிரதயாஹாரமில்லாவிட்டால் தாரணை முடியாது. ஆக்மாவை நீடித்து நினைப்பது என்பது தியானம். தாரணையில்லாவிட்டால் தியானம முடியாது தியானமில்லாவிட்டால் ஆதமாவைப் பார்க்க முடியாது. ஆக்மாவைப்

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 𑌹𑌿 𑌚𑌰𑌤𑌾𑌂 𑌯𑌨𑍍𑌮𑌨𑍋𑌽𑌨𑍁𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ।
𑌤𑌦𑌸𑍍𑌯 𑌹𑌰𑌤𑌿 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌂 𑌵𑌾𑌯𑍁𑌰𑍍𑌨𑌾𑌵𑌮𑌿𑌵𑌾𑌮𑍍𑌭𑌸𑌿 ॥௬௭॥

விஷயங்களிலேயே நோக்காயிருக்கிற இந்திரியங்களின் பின்ளுல் எவன் மனதை விடுகிருனே, அந்த மனதானது அவனுடைய ஆத்மாவின் அறிவை வாரிக்கொண்டு போய்விடுகிறது. அதாவது ஆத்மாவை விட்டு விஷயங்களையே நினைக்கும்படி பண்ணுகிறது. ஸமுத்திரத்தில் கிழக்கே போகவேண்டிய கப்பலை கடுமையான கிழ்காற்று மேற்கே கொண்டு போவதுபோல.[67]

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌨𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 ।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾 ॥

ஆகையால் கீழ்ச்சொல்லியபடி பாபங்களைப் போக்கக்கூடிய மிகவும் இன்பமான என் திருமேனியில் மனதைப்பதித்து, இந்திரியங்களை விஷயங்களில் போகாமல் எவன் தடுக்கிருனே, அவனுக்குத்தான் ஆத்மாவின் அறிவு நிலையாய் நிற்கும். [ 68 ]

அவ— இப்படி இந்திரியங்களை அடக்கி, அதனுல் மனது தெளிந்தவனுக்கு வரும்பலனைச் சொல்லுகிருர்—

𑌯𑌾 𑌨𑌿𑌶𑌾 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌤𑌸𑍍𑌯𑌾𑌂 𑌜𑌾𑌗𑌰𑍍𑌤𑌿 𑌸𑌂𑌯𑌮𑍀 ।
𑌯𑌸𑍍𑌯𑌾𑌂 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌸𑌾 𑌨𑌿𑌶𑌾 𑌪𑌶𑍍𑌯𑌤𑍋 𑌮𑍁𑌨𑍇𑌃 ॥

உலகத்தில் பெரும்பாலும் ஜனங்களுக்கு ஆத்மாவின் அறிவானது கொஞ்சமேனும் வெளிச்சமில்லாத மழைகாலத்திய இருட்டிலிருக்கும் பண்டங்கள்போல் இருக்கிறது. இந்திரியங்களை அடக்கி மனது தெளிந்தவனுக்கு, அதே ஆத்மா நல்ல வெளிச்சத்தில் கண்ணுல் பார்ப்பவனுக்கு பதார்த்தங்கள் தோன்றுவது

---

பார்க்காவிட்டால் விஷயங்களில் ஆசை போகாது.விஷயங்களில் ஆசை போவதை சுலோகத்தில் 'சாந்தி'என்கிற சொல்லாலே சொல்லியிருக்கிறது. அந்த சாந்தியில்லாவிட்டால், மோக்ஷமென்கிற நிலையான அளவில்லாத ஸுகம் வராது. அதைசுலோகத்தில் "ஸுகம்" என்று சொல்லியிருக்கிறது. இப்படி பிரத்யாஹாரம்-தாரணை-தியானம்-ஆத்மதர்சனம்-சாந்தி-ஸுகம் இவைகள் சங்கிலிபோல் ஒன்ருேடொன்று சேர்ந்து ஒன்றினுல் ஒன்று வருகிறது.

போல் தோன்றுகிறது. அதாவது—அவன் ஆத்மாவையே பார்த்துக்கொண்டிருக்கிறான். அறிவில்லாத ஜனங்களுக்கு எப்போதும் தோன்றுகிற பிள்ளை பெண்டாட்டி முதலானவைகள் மனது தெளிந்தவனுக்கு, இருட்டிலிருக்கும் பண்டம்போலிருக்கின்றன. அதாவது அவைகள் அவனுக்குத் துளியேனும் தோன்றுகிறதில்லை. 1. [ 69 ]

ஆபூர்யமாணமசலப்ரதிஷ்டம் ஸமுத்ரமாப: ப்ரவிசந்தி யத்வத் । தத்வத்காமா யம் ப்ரவிசந்தி ஸர்வே ஸ ஶாந்திமாப்நோதி ந காமகாமீ ॥ ॥௭௦॥

மழைகாலத்தில் ஆறுகள்போய் விழுவதினாலே ஸமுத்திரம் பெருகவில்லை. கோடைகாலத்தில் ஆறுகள் வற்றிப்போகும்போது அது வடிபவில்லை. அது எப்போதும் ஒரேமாதிரியாயிருக்கிறது. அதுபோல எவன் ஆத்மாவையே எப்போதும் நினைத்து மஹாஸந்தோஷமடைந்து, பிடிக்காததோ பிடித்ததோ, எது கிட்டினாலும் எது கிட்டாவிட்டாலும் ஒரேமாதிரியா யிருக்கிறானோ, அவன்தான் ஸுகத்தையடைவன். எவன் விஷயங்களால் கலங்குகிறானோ, அவனுக்கு ஒருபோதும், அதாவது—ஆசைபோகிறவரையில், ஸுகம் கிடையாது. [ 70 ]

விஹாய காமாந் ய: ஸர்வாந் புமாம்ஶ்சரதி நி:ஸ்ப்ருஹ: ।
நிர்மமோ நிரஹங்கார: ஸ ஶாந்திமதிகச்சதி ॥ ॥௭௧॥

எவன் உடம்பை ஆத்மாவாக நினைக்காமலும், உடம்பைச் சேர்ந்த பண்டங்களைத் தன்னது என்று நினைக்காமலும், அவை

---

1. இந்த சுலோகத்தாலே, இந்த அத்தியாயம் 55-வது சுலோகத்தில் சொன்ன உயர்ந்தபடி சொல்லப்படுகிறது. அடுத்த சுலோகத்தில் 56-வது சுலோகத்தில் சொன்ன இரண்டாவதுபடி சொல்லப்படுகிறது. இவைகளும் மற்ற இரண்டு படிகளும் கர்மயோகம் செய்கிறவனுக்கு வரும் பலன்கள். இந்த அத்தியாயத்தை முடிக்கிறவராய், கர்மயோகம் செய்கிறவனுக்கு வந்து நிலையாய் நிற்கும் ஆத்மாவின் அறிவை இந்த இரண்டு சுலோகங்களிலும், அதற்குக் காரணமான கர்மயோகத்தை 71-வது சுலோகத்திலும், இவைகளை ஒருவன் மறந்து போகாமலிருப்பதற்காக மறுபடியும் அருளிச் செய்கிறார்.

களை அடைய வேண்டுமென்ற எண்ணமில்லாமலும், 1 எல்லா விஷயங்களையும் விடுகிறானோ, அவன் ஆத்மாவை உள்ளபடி பார்த்து எல்லா துக்கங்களும் நீங்கி, உயர்ந்த ஸுகத்தை அடைகிறான்.[71]

ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதி: பார்த்த நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி । ஸ்தித்வாஸ்யாமந்தகாலேऽபி ப்ரஹ்ம நிர்வாணம்ருச்சதி ॥ ॥௭௨॥

இதி ஸ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ஸாங்க்யயோகோ நாம த்விதீயோऽத்யாய: ॥

ஸ்ரீக்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம: ॥

---

அழிவில்லாத ஆத்மாவின் உண்மையை அறிந்து, பலன்களை விரும்பாமல், நான் செய்யவில்லை என்கிற நினைவுடன் காமங்களைச் செய்தால், ஆத்மாவின் அறிவு நிலைத்து ஆத்மாவைப் பார்க்கலாம். பிறகு ஸம்ஸாரத்தை அடையமாட்டான். இளவயதில் நல்ல வேலைகளைச் செய்யாமல் கெட்ட வேலைகளைச் செய்து அலைந்தவனும், நல்லவர்களுடன் சேர்க்கை முதலான காரணங்களாலே "இப்படிக் கெட்டுப்போய்விட்டேனே" என்று கிழத்தனத்தில் வருந்தி கீழ்ச்சொன்ன கர்மயோகத்தைச் செய்வதாலும், அழிவில்லாத ஸுகமான ஆத்மாவை அடையலாம். இளவயது முதல் இதைச்செய்கிறவனுக்கு ஸுகம் வருமென்று சொல்லவேணுமோ.

இந்த அத்தியாயத்தில் சொன்ன ஸங்கதிகளாவன— 1 ஆத்மாவினுடைய உண்மையான அறிவு 2 சில நினைவுகளுடன் கர்மங்களைச் செய்யவேண்டியது என்கிற கர்மயோகத்தின் விதம். 3

1. இந்த சுலோகத்தில் காமயோகம் சொல்லப்படுகிறது. "எல்லா விஷயங்களையும் விடுகிறானோ" என்பதாலே காமங்களுடைய பலன்களில் ஆசையை விடுவது சொல்லப்பட்டது. ஆசைகளுக்குக் காரணம் பலன்கள் தன்னது என்கிற எண்ணம் அதற்கும் காரணம் உடம்பே ஆத்மா என்கிற எண்ணம். இந்த எண்ணம் போனால் உடம்பைச் சேர்ந்தவைகளைத் தன்னது என்று எண்ணமாட்டான். அந்த எண்ணமில்லாவிட்

இதனால் ஆத்மாவின் அறிவு நிலையாய் நிற்கும் என்பது. 4 அதனால் ஆத்மாவைப் பார்ப்பது. இவைகளை அர்ஜுனனுக்கு உண்டான தப்பு எண்ணத்தைப் போக்குவதற்காக பகவான் அருளிச்செய்து, கடைசியில் ஞானயோகத்தைச் செய்து, அர்ஜுனன் கஷ்டப்படவேண்டாம் என்று அதைச் செய்வதிலிருக்கும் கஷ்டத்தைத் தெளிவாகக் காட்டினார்.

நல்ல ஆசாரியர்களுடைய அநுக்கிரஹத்தாலே (கவலையாலே) ஒருவன் ஆத்மாவைத் தெரிந்து கர்மயோகத்தைச்செய்து ஆத்மாவைப்பார்க்க வேண்டியது.

இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌭𑌾𑌷𑍍𑌯𑌕𑌾𑌰𑌾𑌯 𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌯 𑌨𑌮𑌃 ॥

---

டால், பலன்களில் ஆசையை விட்டுவிடுவேன். இந்த ஸங்கதி இந்த அத்தியாயம் 47-வது சுலோகத்தின் 1-வது குறிப்பில் சொல்லியிருக்கிறது. அதைப் பார்க்க.

## மூன்றாவது அத்தியாயம்

அவ-வேதாந்தங்களில் ஒருகுற்றமுமில்லாத எல்லா நல்ல குணங்களோடுகூடிய பரப்ப்ருமமாமென்று சொல்லப்படுகிற பகவானை ஒருவன் அடைந்தால், துக்கம் கலப்பில்லாத அளவில்லாத ஸுகத்தை அடையலாமென்றும், அதை ஆசைப்படுகிறவன் அதற்காக பகவானைத் தியானம் பண்ணவேணுமென்றும், அப்படித் தியானம் பண்ணும்போது, ஜீவாத்மாவை உள்ளபடி பார்த்துத்தான் பண்ணவேணுமென்றும், ஜீவாத்மாவைப் பார்ப்பது தியானத்திற்கு அங்கமென்றும், சொல்லியிருக்கிறது கீழ் அத்யாயத்தில் ஜீவாத்மா உடம்பைக்காட்டிலும் வேறு என்றும், அழிவில்லாத வஸ்துவென்றும் சொல்லி, இந்த அறிவுடன் கர்மங்களை அவைகளின் பலன்களில் ஆசையில்லாமல் செய்ய வேண்டுமென்றும், அதினாலே ஞானயோகமுண்டாகி, அந்த ஞான யோகத்தினாலே ஜீவாத்மாவை உள்ளபடி பார்க்கலாமென்றும் சொல்லப்பட்டது. மூன்றாவது அத்யாயம் முதல் நாலு அத்யாயங்களால் கீழ்ச் சொன்ன ஜீவாத்மாவை உள்ளபடி பார்ப்பதையும், அதினுடைய ஸாதனத்தையும் விரிவாய்ச் சொல்லுகிறார்.

அர்ஜுந உவாச—

ஜ்யாயஸீ சேத் கர்மணஸ்தே மதா புத்திர் ஜநார்த்தந।
தத் கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேசவ॥ ॥1॥

வ்யாமிச்ரேணேவ வாக்யேந புத்திம் மோஹயஸீவ மே।
ததேகம் வத நிச்சித்ய யேந ச்ரேயோऽஹமாப்நுயாம்॥ ॥2॥

ஆத்மாவைப் பார்ப்பதற்கு கர்மத்தைக்காட்டிலும், ஆத்மாவை நினைப்பது உயர்ந்த ஸாதநம் என்று உமக்குத்தோன்றினால், பல தொந்திரவுகளுடன் கூடிய கர்மத்தை ஏன் என்னைப்பண்ணச் சொல்லுகிறீர்?

கர்மத்தைக் காட்டிலும் ஆத்மாவை நினைப்பது உயர்ந்த ஸாதநம் என்று எவ்விடத்தில் சொல்லியிருக்கிறது? 2-வது

அத்தியாயத்தில் 49வது ச்லோகத்தில் சில நினைவுகளோடு செய்த கர்மங்களை உயர்ந்ததென்று சொல்லவில்லையா? உயர்ந்ததென்றால் எந்த விஷயத்தில்? உயர்ந்ததாய் இருந்தாலும், காமத்தை ஏன் செய்யக்கூடாது? அது செய்வதில் என்ன தொந்திரவுகள் இருக்கின்றன? என்று கேள்விகள் உண்டாகும். அதற்காக ஸ்ரீ பாஷ்யகாரர் அர்ஜுனனுடைய அபிப்பிராயத்தை விவரமாக அருளிச் செய்கிறார்

கர்மங்களைச் சொன்னபடி செய்தால், ஆத்மாவின் நினைவு நிலையாய் வரும். அதனால் ஆத்மாவைப் பார்க்கலாம். ஆகையினாலே ஆத்மாவின் நிலையான நினைவு ஆத்மாவைப் பார்ப்பதற்கு கிட்டின உதவி. மேலும், ஆத்மாவின நினைவு நிலையாய் நிற்கும் காலத்தில், ஆத்மாவைத் தவிர வேறு ஒரு விஷயமும் தோன்றாது ஒரு விஷயமும் தோன்றாமலிருந்தால்தான் ஆத்மாவைப் பார்க்கமுடியும். எல்லா விஷயங்களையும் கவனித்தால்தான் கர்மங்களைச் செய்யமுடியும். ஒரு விஷயத்தையும் கவனிக்காமலிருக்கும்போது வருகிற ஆத்மாவின் பார்வைக்குக் கர்மங்களைச் செய்வது எப்படி உதவும். ஆகையினாலே, ஆத்மாவைப் பார்ப்பதற்கு ஆத்மாவின் நினைவுதான் உயர்ந்த ஸாதநம் என்று நீர் சொல்லியிருக்கையாலே, எல்லாக் கர்மங்களையும் விட்டு ஆத்மாவை நினைக்கும்படி என்னை ஏவவேண்டியது எதற்காக எல்லா இந்திரியங்களுக்கும் வேலை கொடுக்கிற கர்மங்களைச் செய்யும்படி சொல்லுகிறீர். அவைகள் ஆத்மாவைப் பார்ப்பதற்கு இடைஞ்சலாக இருக்குமல்லவா

ஆகையால், உம்முடைய சொல்லினாலே எனக்கு கலக்கமுண்டாகிறது. இரக்கமுள்ள தேவரீர் என்னை அப்படிச் செய்யமாட்டீர் இரண்டையும் கலந்து பேசி, என்னை நீர் கலக்குகிறீர்போல என்னுடைய புத்திக்குறைவினால் எனக்குத் தோன்றுகிறது. எனக்கு ஸந்தேஹமில்லாமல் தெளிவு வரும்படி ஒரேவிதமாய்ச் சொல்லும் எந்த வார்த்தையைக் கேட்டு, இதுதான் நான் செய்ய வேண்டியதென்று தீர்மானித்து, அதைச் செய்து நான் க்ஷேமத்தை யடைவேனோ [2]

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚—

𑌲𑍋𑌕𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌾 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌪𑍁𑌰𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌮𑌯𑌾𑌨𑌘 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑍍 ॥

𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌕𑍍𑌤𑌂 𑌨 𑌸𑌮𑍍𑌯𑌗𑌵𑌧𑍃𑌤𑌂 𑌤𑍍𑌵𑌯𑌾 । 𑌪𑍁𑌰𑌾 𑌹𑍍𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌲𑍋𑌕𑍇 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌿𑌸𑌮𑍍𑌪𑍂𑌰𑍍𑌣𑍇, 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌾 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾-𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌷𑌯𑌾 𑌯𑌥𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌂 𑌸𑌂𑌪𑍂𑌰𑍍𑌣𑍈𑌵 𑌮𑌯𑍋𑌕𑍍𑌤𑌾 । 𑌨 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌲𑍌𑌕𑌿𑌕𑌾𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌃 𑌸𑌂𑌜𑌾𑌤𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌭𑌿𑌲𑌾𑌷𑌾𑌸𑍍𑌤𑌦𑌾𑌨𑍀𑌮𑍇𑌵 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑍇 𑌪𑍍𑌰𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 । 𑌅𑌪𑌿 𑌤𑍍𑌵𑌨𑌭𑌿𑌸𑌂𑌹𑌿𑌤𑌫𑌲𑍇𑌨 𑌕𑍇𑌵𑌲𑌪𑌰𑌮𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑌾𑌧𑌨𑌵𑍇𑌷𑍇𑌣𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌿𑌤𑍇𑌨 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌵𑌿𑌧𑍍𑌵𑌸𑍍𑌤𑌸𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌮𑌲𑍋𑌽𑌵𑍍𑌯𑌾𑌕𑍁𑌲𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌯𑌾𑌮𑌧𑌿𑌕𑌰𑍋𑌤𑌿 । "𑌯𑌤𑌃 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌯𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌤𑌮𑍍 । 𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌤𑌮𑌭𑍍𑌯𑌰𑍍𑌚𑍍𑌯 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 𑌮𑌾𑌨𑌵𑌃" 𑌇𑌤𑌿 𑌪𑌰𑌮𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑌾𑌧𑌨𑍈𑌕𑌵𑍇𑌷𑌤𑌾 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍇 । 𑌇𑌹𑌾𑌪𑌿 "𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑍇𑌵𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑍇" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾𑌨𑌭𑌿𑌸𑌂𑌹𑌿𑌤𑌫𑌲𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌂 𑌵𑌿𑌧𑌾𑌯, 𑌅𑌨𑍇𑌨 𑌵𑌿𑌷𑌯𑌵𑍍𑌯𑌾𑌕𑍁𑌲𑌤𑌾𑌮𑍂𑌲𑌮𑍋𑌹𑌾𑌦𑍁𑌤𑍍𑌤𑍀𑌰𑍍𑌣𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 "𑌪𑍍𑌰𑌜𑌹𑌾𑌤𑌿 𑌯𑌦𑌾 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗 𑌉𑌦𑌿𑌤𑌃 । 𑌅𑌤𑌃 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑍇𑌵 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌨𑌿𑌷𑍍𑌠𑍋𑌕𑍍𑌤𑌾 । 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂 𑌤𑍁 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 । 𑌸𑌂𑌖𑍍𑌯𑌾-𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌤𑌦𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌾𑌃 । 𑌆𑌤𑍍𑌮𑍈𑌕𑌵𑌿𑌷𑌯𑌯𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌿𑌨𑌃 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌾𑌃 । 𑌅𑌤𑌦𑌰𑍍𑌹𑌾𑌃 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌿𑌣𑍋 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 । 𑌵𑌿𑌷𑌯𑌵𑍍𑌯𑌾𑌕𑍁𑌲𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌽𑌧𑌿𑌕𑌾𑌰𑌃, 𑌅𑌵𑍍𑌯𑌾𑌕𑍁𑌲𑌬𑍁𑌦𑍍𑌧𑍀𑌨𑌾𑌂 𑌤𑍁 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌽𑌧𑌿𑌕𑌾𑌰 𑌉𑌕𑍍𑌤 𑌇𑌤𑌿 𑌨 𑌕𑌿𑌂𑌚𑌿𑌦𑌿𑌹 𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌂 𑌵𑍍𑌯𑌾𑌮𑌿𑌶𑍍𑌰𑌮𑌭𑌿𑌹𑌿𑌤𑌮𑍍 ॥ ॥௩॥

பகவான் சொல்லுகிறார்:— நான் முன்னாலே சொன்னதை நீ நன்றாய் கவனிக்கவில்லை. இந்த உலகத்தில் எல்லாரும் ஒரே விதமான சக்தியுள்ளவர்களன்று. எல்லாருக்கும் மோக்ஷம் வேணு

மென்று ஆசை பிறந்த உடனேயே ஞானயோகம் செய்ய முடியாது. கர்மங்களை அவைகளின் பலன்களில் ஆசையில்லாமல், பகவானுடைய பிரீதிதான் வேணுமென்று செய்தால், பகவான் ஸந்தோஷத்தை யடைந்து, மனதிலுள்ள ரஜஸ்ஸு தமஸ்ஸு என்கிற குணங்களைப் போக்கி, இந்திரியங்களை மற்ற விஷயங்களில் போகாமல் அடக்கி, ஆத்மாவின் நினைவு நிலையாய் நிற்கும்படி செய்வன். ஆகையினால், இப்படி மனது அடங்கின பிறகுதான் ஆத்மாவை நினைக்கமுடியும். அதற்கு முன்பு எல்லாரும் கர்மயோகத்தையேதான் செய்ய வேண்டியது. ஆகையால், 1 இந்திரியங்கள் அடங்கினவர்களுக்கு ஞானயோகம், இந்திரியங்கள் அடங்காதவர்களுக்குக் கர்மயோகம் என்று பிரித்தே முன்னாலே சொன்னேன். இந்திரியங்களை அடக்குவதற்கும் அவைகள் உதவிதான். இடஞ்சலன்று. நீ கர்மங்களைச் செய்யாவிட்டால், உன் மனது அடங்காது. இப்போது ஞானயோகம் செய்யஉன்னால் முடியாது. நான் ஸந்தேஹம் வரும்படி சொல்லவில்லை.

பலன்களில் ஆசையில்லாமல், பகவானுடைய பிரீதிதான் வேணுமென்று எண்ணி, கர்மங்களைச் செய்தால், பகவான் ஸந்தோஷப்பட்டு கர்மங்கள் செய்கிறவனுடைய மனதின்கலக்கத்தை போக்குவர் என்று 18-வது அத்தியாயம் 46-வது சுலோகத்தில் சொல்லியிருக்கிறது. இதையே 2-வது அத்தியாயம் 47-வது சுலோகத்தில் "கர்மங்களையே நீ செய்ய வேண்டியது. பலன்களை நீ ஆசைப்படக்கூடாது" என்று சொல்லி, இப்படிக் கர்மங்களைச் செய்தால் புத்தியின் கலக்கம் தீரும். அப்போது அந்த அத்தியா

1. கர்மங்களை அவைகளின் பலன்களில் ஆசையில்லாமல், பகவானுடைய பிரீதிதான் வேணுமென்று எண்ணிச் செய்ய வேண்டியது. இதற்கு கர்மயோகமென்று பெயர். அப்போது இந்த கர்மங்களை நான் செய்யவில்லை என்று எண்ண வேண்டியது. இந்த எண்ணமானது கர்மயோகத்திற்கு அங்கம். அதாவது கர்மயோகம் பலனைக் கொடுப்பதற்கு உதவியாயிருக்கிறது. அந்த எண்ணம் இல்லாமல் போனால், கர்மயோகத்தினால் பலன் வாராது. இந்தஅங்கத்தோடுகூடி கர்மம் செய்வதைக்கர்மயோகம் என்றும், ஆத்மாவினுடைய ஸ்வரூபத்தை நினைத்துக் கொண்டிருப்பதை ஞானயோகமென்றும் சொல்லுகிறது.

யம் 55-வது சுலோகம் முதல் நாலு சுலோகங்களில் சொல்லப் பட்ட ஆத்மாவை நினைப்பது ஆகிய ஞானயோகத்தைச் செய்யலாம் என்று சொல்லப்பட்டது. [3]

அத — ஸர்வஸ்ய லோகஸ்ய வர்த்தமாநஸ்ய மோக்ஷேச்சாயாம் ஜாதாயாம் ஸஹஸைவ ஜ்ஞாநயோகே நாதிகார இத்யாஹ—

ந கர்மணாமநாரம்பாந்நைஷ்கர்ம்யம் புருஷோऽஶ்நுதே।
ந ச ஸம்ந்யஸநாதேவ ஸித்திம் ஸமதிகச்சதி ॥ ॥௪॥

ந ஶாஸ்த்ரீயாணாம் கர்மணாமநாரம்பாதேவ புருஷோ நைஷ்கர்ம்யம்-ஜ்ஞாநநிஷ்டாம் ப்ராப்நோதி। நஹ்யாரப்யஸ்ய ஶாஸ்த்ரீயஸ்ய த்யாகஃ। யதோऽநபிஸம்ஹிதபலஸ்ய பரமபுருஷாராதநவேஷஸ்ய கர்மணஸ்ஸித்திஸ்ஸ்யாத்। அதஸ்தேந விநா தாம் ந ப்ராப்நோதி। அநபிஸம்ஹிதபலைஃ கர்மபிரநாராதிதகோவிந்தஸ்ய விநஷ்டாநாதிகாலப்ரவ்ருத்தாநந்தபாபஸஞ்சயஸ்யாவ்யாகுலேந்த்ரியதாபூர்விகா ஜ்ஞாநநிஷ்டா அஸம்பவாத் ॥ ॥௪॥

அவ— உலகத்தில் இருக்கிறவனுக்கு மோக்ஷம் வேணுமென்று ஆசை உண்டான உடனே, கர்மயோகம் செய்யாமல் ஞானயோகத்தைப் பண்ண முடியாதென்று சொல்லுகிறார்—

சாஸ்திரத்தில் சொல்லிய கர்மங்களைச் செய்யாமலும், ஆரம்பித்த கர்மங்களை நிறுத்தியும், ஞானயோகம் செய்ய முடியாது. ஏனென்றால், பகவானுடைய பிரீதியை மாத்திரம் உத்தேசித்து கர்மங்களைச் செய்து, கோவிந்தனை பகவானை ஸந்தோஷப் படுத்தாவிட்டால், நெடுநாளாய் வந்த கணக்கில்லாத பாபங்கள் போகாது. பாபங்கள் போனாலொழிய ஆத்மாவின் நினைவு வாராது. ஆகையினால் கர்மயோகம் செய்யாவிட்டால், மனது தெளியாது. ஞானயோகமும் பண்ணமுடியாது. [4]

அவ—அத தமேவார்த்தமாஹ—

𑌨 𑌹𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌕𑍍𑌷𑌣𑌮𑌪𑌿 𑌜𑌾𑌤𑍁 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍 ।
𑌕𑌾𑌰𑍍𑌯𑌤𑍇 𑌹𑍍𑌯𑌵𑌶𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌰𑍍𑌵𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑍈𑌰𑍍𑌗𑍁𑌣𑍈𑌃 ॥

𑌨𑌹𑍍𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌲𑍋𑌕𑍇 𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌕𑍍𑌷𑌣𑌮𑌪𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌕𑍁𑌰𑍍𑌵𑌾𑌣𑌸𑍍𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 । 𑌨 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍𑌕𑌰𑍋𑌮𑍀𑌤𑌿 𑌵𑍍𑌯𑌵𑌸𑌿𑌤𑍋𑌽𑌪𑌿 𑌸𑌰𑍍𑌵𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑍈𑌃 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌰𑌜𑌸𑍍𑌤𑌮𑍋𑌭𑌿𑌃 𑌪𑍍𑌰𑌾𑌚𑍀𑌨𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌗𑍁𑌣𑌂 𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑍈𑌰𑍍𑌗𑍁𑌣𑍈𑌃 𑌸𑍍𑌵𑍋𑌚𑌿𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌵𑌶𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌤𑍇-𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌤 𑌉𑌕𑍍𑌤𑌲𑌕𑍍𑌷𑌣𑍇𑌨 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌪𑍍𑌰𑌾𑌚𑍀𑌨𑌂 𑌪𑌾𑌪𑌸𑌂𑌚𑌯𑌂 𑌨𑌾𑌶𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌗𑍁𑌣𑌾𑌂𑌶𑍍𑌚 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑍀𑌨𑍍 𑌸𑍍𑌵𑌵𑌶𑍇 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌾𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑍇𑌨 𑌸𑌂𑌪𑌾𑌦𑍍𑌯𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌃 ॥ ॥௫॥

அவ— இதற்குக் காரணம் சொல்லுகிறார்—

இந்த லோகத்தில் இருப்பவன் ஒருவனும் ஒரு காலத்திலும் ஒரு க்ஷணமும் ஒரு வேலையையும் செய்யாமல் இருக்க முடியாது. எவனும் தூங்குகிற காலம் தவிர, எப்பொழுதும் ஏதாவது ஒரு வேலையைச் செய்துகொண்டே யிருப்பன். ஏனென்றால், ஒரு காரியமும் செய்கிறதில்லை யென்று தீர்மானம் பண்ணிக் கொண்டிருக்கிறவனையும், முன் பண்ணின கர்மங்களுக்குத் தக்கபடி உடம்பில் வளர்ந்து வரும் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்கிற குணங்கள் இவனை இழுத்துக் கொண்டுபோய், தம் தம் வேலைகளைச் செய்யும்படி செய்யும். இவன் அவைகளுக்கு உட்பட்டு விடுவான். ஆகையினால் கீழ்ச் சொல்லியபடி கர்மங்களைச் செய்து, நெடுநாளாய் வருகிற பாபங்களைப் போக்கி, ஸத்வம் முதலான குணங்களை வசப்படுத்திக்கொண்டு, மனது தெளிந்தவனுக்குத்தான் ஞானயோகம் செய்ய முடியும். [5]

𑌅𑌵— 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌾𑌯 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍋 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌚𑌾𑌰𑍋 𑌭𑌵𑌤𑍀𑌤𑍍𑌯𑌾𑌹—

𑌕𑌰𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌸𑌂𑌯𑌮𑍍𑌯 𑌯 𑌆𑌸𑍍𑌤𑍇 𑌮𑌨𑌸𑌾 𑌸𑍍𑌮𑌰𑌨𑍍 ।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌵𑌿𑌮𑍂𑌢𑌾𑌤𑍍𑌮𑌾 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌚𑌾𑌰𑌃 𑌸 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ ॥௬॥

𑌅𑌵𑌿𑌨𑌷𑍍𑌟𑌪𑌾𑌪𑌤𑌯𑌾 𑌅𑌜𑌿𑌤𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌃 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌯 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍋 𑌵𑌿𑌷𑌯𑌪𑍍𑌰𑌵𑌣𑌤𑌯𑌾 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌵𑌿𑌮𑍁𑌖𑍀𑌕𑍃-

த³மநா: விஷயாநேவ ஸ்மரந்நாஸ்தே, அந்யதா² ஸங்கல்ப்ய அந்யதா² ஆசரதீதி ஸ மித்²யாசார உச்யதே । ஆத்மஜ்ஞாநாயோத்³யுக்தோ விபரீதோ விநஷ்டோ ப⁴வதீத்யர்த²: ॥ ‖௬‖

அவ— கர்மயோகத்தைச் செய்யாமல், ஞானயோகம் செய்ய வேணுமென்று ஆரம்பித்தவன் அந்த எண்ணத்திற்குத் தப்பாக நடக்கிறானென்று சொல்லுகிறார்—

கர்மயோகம் செய்யாவிட்டால் பாபங்கள் போகாது. பாபங்கள் போகாவிட்டால் இந்திரியங்கள் அடங்காது. இந்திரியங்கள் விஷயங்களிலே போகும். ஆகையால் அப்படிப்பட்டவன் ஆத்மாவை நினைக்க ஆரம்பித்தால், மனது நெடுநாளாய் விஷயங்களிலேயே அழுந்தியிருக்கிறபடியால், ஆத்மாவில் செல்லாமல் விஷயங்களையே நினைத்துக் கொண்டிருப்பன். ஆத்மாவை நினைக்க ஆரம்பித்து விஷயங்களை நினைக்கிறபடியால், எண்ணத்திற்கு விரோதமாக நடக்கிறானென்று சொல்லப்படுகிறான். அவன் நினைத்தது ஒன்று செய்கிறது ஒன்று. இப்படியிருக்கிறோமென்று அப்போது அவனுக்குத் தெரியாது. ஆத்மாவை அறிவதற்கு ஆரம்பித்து அதற்கு இடைஞ்சலான வேலையைச் செய்கிறபடியால், இவன் ஆசைப்பட்ட பிரயோஜனத்தை அடையமாட்டான் [ 6 ]

யஸ்த்விந்த்³ரியாணி மநஸா நியம்யாரப⁴தே(அ)ர்ஜுந ।
கர்மேந்த்³ரியை: கர்மயோக³மஸக்த: ஸ விஶிஷ்யதே ॥ ‖எ‖

அத: பூர்வாப்⁴யஸ்தவிஷயஸஜாதீயே ஶாஸ்த்ரீயே கர்மணி இந்த்³ரியாணி ஆத்மாவலோகநப்ரவ்ருத்தேந மநஸா நியம்ய ஸ்வத:ஸித்³த⁴வைவ கர்மேந்த்³ரியை: அஸங்க³ம் ய: கர்மயோக³மாரப⁴தே ஸோ(அ)ஸம்பா⁴வ்யமாநப்ரமாத³த்வேந ஜ்ஞாநநிஷ்டா²த³பி புருஷாத்³விஶிஷ்யதே ॥ ‖எ‖

இந்திரியங்களுக்கு விஷயங்களில் போவதே வழக்கம். அதைத் திடீரென்று நிறுத்த முடியாது. அவைகள் இப்படியாகவே வேலைகளில் படிந்திருக்கின்றன. அவைகளை, முன் செய்து பழகின வேலைகள் போன்ற சாஸ்திரத்தில் சொல்லிய கர்மங்களில்

செலுத்தி, ஆத்மாவைப் பார்க்க வேண்டுமென்கிற மனதோடே கெட்ட கர்மங்களில் போகாமல் தடுத்து, கீழ்ச் சொன்னபடி பலன்களில் ஆசையில்லாமல் எவன் கர்மயோகம் செய்ய ஆரம்பிக்கிறானோ, அவனுக்கு ஒருவிதமான கெடுதியும் நேராது. ஆரம்பித்த கர்மம் ஒரு நாளும் நிற்காது. ஆகையால், அவன் ஞானயோகம் செய்கிறவனைக் காட்டிலும் உயர்ந்தவன். இருகரையும் ஒத்துப்போகிற வெள்ளத்தில் நீந்தி அக்கரை போகிறவன்போல் ஞானயோகம் செய்கிறவன். பாலம் கடந்து போகிறவன்போல் கர்மயோகம் செய்கிறவன். நீந்துகிறவனுக்கு நடுவில் கை சளைத்தால் தொந்திரவு. மற்றொருவனுக்கு அது இல்லை. [7]

நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண: ।
ஶரீரயாத்ராऽபி ச தே ந ப்ரஸித்த்யேதகர்மண: ॥ ௮ ॥

நியதம்-வ்யாப்தம் ப்ரக்ருதிஸம்ஸ்ருஷ்டேந ஹி வ்யாப்தம் கர்ம, ப்ரக்ருதிஸம்ஸ்ருஷ்டஸ்யாநாதிவாஸநயா | நியதத்வேந ஸுஶகத்வாதஸம்ஶயிதத்வாச்ச கர்மண: கர்மைவ குரு | அகர்மண:-ஜ்ஞாநநிஷ்டாயா அபி கர்மைவ ஜ்யாய: | "நைஷ்கர்ம்யம் புருஷோऽஶ்நுதே" இதி ப்ரக்ருதத்வாத் கர்மஶப்தேந ஜ்ஞாநநிஷ்டோச்யதே | ஜ்ஞாநநிஷ்டாதிகாரிணோऽப்யநப்யஸ்தபூர்வதயா ஹ்யநியதத்வேந துஷ்கரத்வாத் ஸப்ரமாதத்வாச்ச ஜ்ஞாநநிஷ்டாயா: கர்மநிஷ்டைவ ஜ்யாயஸீ | கர்மணி க்ரியமாணே சாத்மயாதாத்ம்யஜ்ஞாநேநாத்மநோऽகர்த்ருத்வாநுஸந்தாநம் யோகாந்தர்கதமேவேதி ஸாக்ஷாத்காரோ பாவ்யதே | அத ஆத்மஜ்ஞாநஸ்யாபி கர்மயோகாந்தர்கதத்வாச்ச ஜ்யாயஸ்த்வம் | கர்மணோ ஜ்ஞாநநிஷ்டாயா ஜ்யாயஸ்த்வவசநம் ஜ்ஞாநநிஷ்டாயாமதிகாரே ஸத்யேவோபபத்யதே | யதி ஸர்வம் கர்ம பரித்யஜ்ய, கேவலம் ஜ்ஞாநநிஷ்டாயாமதிகரோஷி, ததாऽபி கர்மணோ ஜ்ஞாநநிஷ்டஸ்ய ஜ்ஞாநநிஷ்டோபகாரிணீ ஶரீரயாத்ராऽபி ந ஸேத்ஸ்யதி | யாவத்ஸாதநஸமாப்தி ஶரீரதாரணம் அவஶ்யம் கார்யம் | ந்யாயார்ஜிததநேந மஹாயஜ்ஞாதிகம் க்ருத்வா தச்சி

ஷ்டாஶநேநைவ ஶரீரதாரணம் கார்யம் । "ஆஹாரஶுத்தௌ ஸத்த்வஶுத்தி: ஸத்த்வஶுத்தௌ த்ருவா ஸ்ம்ருதி:" இத்யாதி ஶ்ருதே: । "புஞ்ஜதே தே த்வகம் பாபா யே பசந்த்யாத்மகாரணாத்" இதி ச வக்ஷ்யதே । அதோ ஜ்ஞாநநிஷ்டஸ்யாபி கர்மாகுர்வதோ தேஹயாத்ராபி ந ஸேத்ஸ்யதி । யதோ ஜ்ஞாநநிஷ்டஸ்யாபி ம்ரியமாணஶரீரஸ்ய யாவத்ஸாதநஸமாப்தி மஹாயஜ்ஞாதிநித்யநைமித்திகம் கர்மாவஶ்யம் கர்தவ்யம் । யதஶ்ச கர்மயோகாந்தர்கத ஏவாத்மயாதாத்ம்யாநுஸந்தாநஞ்சாஸ்தி । யதஶ்ச ப்ரக்ருதிஸம்ஸ்ருஷ்டஸ்ய கர்மயோக: ஸுகரோऽப்ரமாதஶ்ச । அதோ ஜ்ஞாநநிஷ்டாயோக்யஸ்யாபி ஜ்ஞாநயோகாத் கர்மயோக ஏவ ஜ்யாயாந் । தஸ்மாத்த்வம் கர்மயோகமேவ குர்விதி அபிப்ராய: ॥ ॥அ॥

அவ— முதலில் ஞானயோகம் செய்யமுடியாது. கர்மயோகம்தான் செய்யமுடியும் என்றும், கர்மயோகத்தில் கெடுதி கிடையாது என்றும் சொல்லப்பட்டது. இப்போது ஞானயோகம் செய்யத் தகுந்தவனும் கர்மயோகம் செய்வது லகுவாயிருப்பதாலும், கெடுதியில்லாமையாலும் அவனுக்குக் கர்மங்களை விடமுடியாதாகையாலும், கர்மயோகத்தையே செய்ய வேணுமென்று சொல்லுகிறார்

உடம்போடு கூடியிருக்கிறவனுக்கு வேலைசெய்து வழக்கம். பந்தடித்தாலென்ன? யாகம் செய்தால் என்ன? இரண்டும் இந்திரியங்களின் வேலைதானே. அதை லகுவாகச் செய்யக்கூடும். அது நிற்காமல் நடக்கும். தியானமானால் பழக்கமில்லாததினால், அதை முதலில் செய்வது வருத்தம். அது முழுக்க நடக்காது ஆகையால் தியானத்தைக் காட்டிலும் கர்மம் உயர்ந்தது. கர்மத்தையே நீ செய் கர்மங்களைச்செய்யும்போது ஆத்மாவை உள்ளபடி அறிந்து செய்ய வேண்டியதால், நான் செய்யவில்லை என்கிற எண்ணம் இருக்கவேணுமென்று மேலே சொல்லப்படுகிறது. அதாவது ஸம்ஸாரிகளின் வேலைகளை செய்வது ஆத்மாவுக்கு சுபாவமன்று. உடம்போடு சேர்ந்திருப்பதினாலேதான் அவைகளை ஒருவன் செய்

கிறான். இப்படி நினைப்பதினாலே ஆத்மாவின் நினைவும் கர்மத்தில் அடங்கியிருக்கிறது. இந்த காரணத்தினாலேயும் கர்மயோகமே உயர்ந்தது. இதற்கு இன்னொரு காரணமுமிருக்கிறது. உடம்பை வைத்துக்கொண்டு தானே ஞானயோகம் செய்ய வேண்டும். சாப்பிட்டால்தானே உடம்பு நிற்கும். 1 ஐந்து மஹாயக்ஞங்கள் முதலானவைகளைப் பண்ணி, மிகுதியிருக்கும் ஆஹாரத்தைச் சாப்பிட வேண்டும். ஆஹாரம் கெட்டுப்போனால் மனது கெட்டுப் போகும். மனது கெட்டால் நல்ல நினைவு வராது. மஹாயக்ஞங்களைப் பண்ணாமல் சாப்பிட்டால், பாபத்தையே ஒருவன் சாப்பிடுகிறானென்று மேலே சொல்லுகிறது. ஆகையால், ஞானயோகம் செய்கிறவனுக்கும் கர்மங்களை விடமுடியாது. ஆகையால், ஞானயோகம் செய்யத்தகுந்தவனும், கீழ்ச்சொன்ன பல காரணங்களாலே கர்மயோகத்தையே செய்யவேண்டும் [ 8 ]

[illegible] ஆஹ—

யஜ்ஞஶிஷ்டாஶிந: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பிஷை: ।
புஞ்ஜதே தே த்வகம் பாபா யே பசந்த்யாத்மகாரணாத் ॥ ॥௧௩॥

[illegible]

---

1. கல்லியாணம் செய்துகொண்டு மனைவியுடன் இல்வாழ்க்கையில் இருக்கிற ஒவ்வொருவனும், ஆஹாரம் தயாரானபிறகு அதைக்கொண்டு தேவதைகளையும், பித்ருக்களையும், வீட்டிற்குவரும் அதிதிகளையும், மற்றைய எல்லாப் பிராணிகளையும் திருப்தி பண்ணவேண்டியது. இவைகளை முறையே தேவயக்ஞமென்றும், பித்ருயக்ஞமென்றும், மனுஷ்ய யக்ஞமென்றும், பூதயக்ஞமென்றும் சொல்லுகிறது. படித்த வேதத்தை தினம் சொல்லுவதை பிரும்ம யக்ஞமென்று சொல்லுகிறது. இந்த ஐந்தையும் ஐந்து மஹாயக்ஞங்கள் என்று சொல்லுகிறது.

த்ரவ்யார்ஜநாதிகம் கர்ம ஸமாசர| தத்ராத்மப்ரயோஜநஸாதநதயா யஸ்ஸங்க: தஸ்மாத்ஸங்காந்முக்த: ததர்த்தம் ஸமாசர । ஏவம் முக்தஸங்கேந யஜ்ஞாத்யர்த்ததயா கர்மணி க்ரியமாணே யஜ்ஞாதிபி: கர்மபிராராதித: பரமபுருஷோऽஸ்யாநாதிகாலப்ரவ்ருத்தகர்மவாஸநாமுச்சித்ய அவ்யாகுலாத்மாவலோகநம் ததாதீத்யர்த்த: ॥ ॥௯॥

*அவ— கர்மங்களைச் செய்ய வேணுமானுல், பணம் ஸம்பாதிப்பது முதலான வேலைகளைச் செய்யவேணுமே. அப்போது, "நான் கெட்டிக்காரன், பணம் என்னுடையது" என்பது முதலான கெட்ட எண்ணங்கள் வருமே. அதனுல் மனது கலங்குமே. மோக்ஷம் வேணுமென்று ஆசைப்பட்டவனுக்கும் கர்மங்களுடைய 1 வாஸனையினுலே மேன்மேலும் ஸம்ஸாரம் தொடர்ந்து வருமே. முன்னுலுண்டான வாஸனை ஒழியவில்லையே. இப்போது செய்கிற வேலையினுலே அது வலுப்படுமே என்றல், பதில் சொல்லுகிறர்—*

*யக்ஞம் முதலான சாஸ்திரத்தில் சொல்லிய கர்மங்களுக்காக பணம் சம்பாதிப்பது முதலான் வேலைகளைச்செய்தால்,புதுவாஸனை உண்டாகாது. 2 முன் வாஸனையும் வலுப்படாது. உன்னுடைய*

---

1. *வாஸனை என்பது பழக்கத்தினுல் ஒட்டிக்கொள்வது. ஒருவன் சாப்பிடும்போது நன்றக செய்யப்பட்ட பருப்புக் குழம்பை கையால் சாப்பிட்டு, சாப்பிட்ட பிறகு கையைத் தேய்த்து அலம்பிவிட்டாலும், கையை மோந்து பார்த்தால் பருப்புக்குழம்பு வாஸிக்கிறது. குழம்பிற்கும், கைக்கும் கால் நாழிகைகூட சேர்க்கையில்லை. அப்படி யிருக்கச் செய்தே தேய்த்து அலம்பியும் போகிறதில்லை. அப்படியிருக்க நெடுநாளாக பிள்ளை, பெண்டாட்டி, பணம், முதலானவைகளில் ஆசை, கோபம், பொறுமை, முதலிய ஸங்கதிகளும், அவைகளினுல் ஏற்படும் வேலைகளும் வந்திருப்பதால்,அந்தப்பழக்கம் போவது மிகவும் வருத்தம். அந்தப் பழக்கத்தினுல் வந்த ஒட்டுதலை வாஸனை என்று சொல்லுகிறது.*

2 *ஒருவனுக்கு ஒருவேலை கெடுதியைக் கொடுக்கிறதென்றுமில்லை. ஒருவேலை ஸுகத்தைக்கொடுக்கிறதென்றுமில்லை. ஒருவேலை பகவானுக்கு வருத்தத்தை உண்டுபண்ணுகிறது. அதனுல் அவன் இவனுக்குத்*

பிள்ளை, பெண்டாட்டிகளுக்காக பணம் ஸம்பாதித்தால்தான் கெடுதியுண்டாகும்.

ஆகையினாலே யக்ஞங்களுக்காக வேலைகளைச்செய். செய்யும்போது இந்த வேலைகள் பகவானுக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கக்கூடியதாகையால், அந்த வேலைகளே பிரயோஜனம், எனக்கு அவைகளால் வேறு பிரயோஜநமில்லையென்று நினைத்துச் செய். இப்படிக் கர்மங்களைச் செய்தால், பகவான் யக்ஞம் முதலான கர்மங்களினாலே ஸந்தோஷத்தை யடைந்து, நெடுநாளாய் வந்த கர்ம வாஸனையைப் போக்கி, உன்னை ஆத்மாவை உள்ளபடி பார்க்கும்படி செய்வான். [ 9 ]

ஏவ—யஜ்ஞஶிஷ்டேநைவ ஸர்வபுருஷார்த்தஸாதந நிஷ்டாநாம் ஶரீரயாத்ராகர்தவ்யேதி அயஜ்ஞஶிஷ்டேந ஶரீரயாத்ராம் குர்வதாம் தோஷம் சாஹ—

ஸஹயஜ்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி: ।
அநேந ப்ரஸவிஷ்யத்வமேஷ வோऽஸ்த்விஷ்டகாமதுக் ॥ ॥௧௦॥

"பதிம் விஶ்வஸ்ய" இத்யாதிஶ்ருதேர்நிருபாதிக: ப்ரஜா

---

துக்கத்தைக் கொடுக்கிறான். ஒருவேலையினால் பகவான் ஸந்தோஷத்தை யடைகிறான். அதனால் இவனுக்கு ஸுகத்தைக் கொடுக்கிறான். ஒருவேலை கெட்டது என்பதற்கு பகவானுக்கு வருத்தத்தைக் கொடுக்கக் கூடியது என்று பொருள். நல்லது என்பதற்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கக் கூடியது என்று பொருள். ஒரு பெரிய சேற்றில் இறங்குவது பகவானுக்கு இஷ்டமாயிருந்தால், அந்த சேறு இவன்பேரில் ஒட்டாது. மிகவும் தெளிந்திருக்கிற ஜலத்தில் இறங்குவதும் பகவானுக்கு இஷ்டமில்லாதிருந்தால், உடம்பு முழுக்க சேறாய்விடும். ஆகையால், கெடுதியோ, நல்லதோ இரண்டும் தெய்வத்தின் வருத்தத்தினாலும் ஸந்தோஷத்தினாலுமே யொழிய வேலையினால் அல்ல. ஆகையினால், இந்த வேலைகளில் பகவானுக்கு ஸந்தோஷமிருப்பதால், இந்த வேலைகள் கெட்ட வாஸனைகளைக் கொடுக்கக் கூடியதாயிருந்தாலும், அவை கெட்டவாஸனைகளைக் கொடுக்காது. கொடுக்காததுமன்னியில் முன்னிருந்த கெட்ட வாஸனைகளைப் போக்கி, எல்லையில்லாத ஸுகத்தைக் கொடுக்கும்படியான பகவானுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணும்.

பதிஶப்த: ஸர்வேஶ்வரம் விஶ்வஸ்ய ஸ்ரஷ்டாரம் விஶ்வாத்மாநம் பராயணம் நாராயணமாஹ | புரா-ஸர்க்ககாலே ஸ ஹி பகவாந் ப்ரஜாபதி: அநாதிகாலப்ரவ்ருத்தாசித்ஸம்ஸர்க்கவிவஶா உபஸம்ஹ்ருதநாமரூபவிபாகா: ஸ்வஸ்மிந் ப்ரலீநா: ஸகலபுருஷார்த்தாநர்ஹா அசேதநகல்பா: ப்ரஜா: ஸமீக்ஷ்ய பரமகாருணிகஸ்தாஸாமுஜ்ஜிஜீவயிஷயா ஸ்வாராதநபூதயஜ்ஞநிர்வ்ருத்தயே யஜ்ஞஸஹ தா: ஸ்ருஷ்ட்வா ஏவமுவாச-அநேந யஜ்ஞேந ப்ரஸவிஷ்யத்வம்-ஸ்வாத்மநோ வ்ருத்திம் குருத்வம் | ஏஷ வோ யஜ்ஞ: பரமபுருஷார்த்தலக்ஷணமோக்ஷாக்யஸ்ய காமஸ்ய ததநுகுணாநாம் ச காமாநாம் ப்ரபூரயிதா பவது || ||௧௦||

*அ*வ— எந்தப் புருஷார்த்தத்தை விரும்புகிறவனும் மஹா யக்ஞங்களைச் செய்து மிகுந்த ஆஹாரத்தையேதான் சாப்பிடவேணும். அப்படிச் செய்யாமல் சாப்பிட்டு உடம்பை வளர்க்கிறவனுக்கு தோஷம்தான் உண்டு என்று சொல்லுகிறார்—

பகவான் ஒரு காலத்தில் எல்லா உலகங்களையும் துலைத்துவிடுகிறான். அப்போது அசேதந வஸ்துக்களில் பிரகிருதி என்பது மாத்திரமும், ஜீவன்களும்தான் இருக்கின்றன. அதைப் பிராகிருத—பிரளயமென்று சொல்லுகிறது. அக்காலத்தில் ஜீவன்கள் உருவமும், பெயருமில்லாமல், நெடுநாளாய் வந்திருக்கிற பிரகிருதியினுடைய ஸம்பந்தத்தாலே அதற்கு உட்பட்டவர்களாய், உடம்பும் இந்திரியங்களும் இல்லாததினாலே, தங்களுக்கு 1 அறிவு என்கிற குணம் இயற்கையாகவே இருந்தபோதிலும், அந்த அறிவினால் ஒரு ஸங்கதியையும் அறியமுடியாமலும், ஒரு புருஷார்த்தத்தையும் அடைய முடியாமலும் அறிவில்லாத வஸ்துக்களைப் போல் இருக்கிறார்கள்.

அவர்களைப் பார்த்து பகவான் மிகவும் இரக்கப்பட்டு, அவர்

---

1. ஜீவன்களுக்கு கர்மம்அடியோடு போகிறவரையில், அறிவானது இந்திரியங்கள் வழியாகச்சென்று வஸ்துக்களை அறியவேண்டியது. மோக்ஷம் வந்தபிறகு, அறிவு இந்திரியங்களில்லாமலே எல்லா விஷயங்களிலும் பரவுகிறது.

களுக்கு ஸாதகங்களைக் கொடுக்க வேணுமென்று நினைத்து, உலகங்களை மறுபடியும் உண்டுபண்ணி அவர்களுக்கு உடம்புகளையும், இந்திரியங்களையும் கொடுத்து, அவர்கள் தன்னை ஸந்தோஷப்படுத்துவதற்காக 1 யக்ஞங்களையும் ஏற்படுத்தி, அவர்களைப் பார்த்து "இந்தக் கருமங்களால் நீங்கள் க்ஷேமத்தை யடையுங்கள். இந்த யக்ஞங்கள் உங்களுக்கு மோக்ஷத்தையும் அதற்கு உதவியான வஸ்துக்களையும் வேண்டியபடி கொடுக்கும்" என்று சொன்னார்.

சுவ—கூயடு —

𑌦𑍇𑌵𑌾𑌨𑍍 𑌭𑌾𑌵𑌯𑌤𑌾𑌨𑍇𑌨 𑌤𑍇 𑌦𑍇𑌵𑌾 𑌭𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑍁 𑌵𑌃 ।
𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌂 𑌭𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 𑌪𑌰𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌥 ॥ ‖௧௧‖

𑌅𑌨𑍇𑌨 𑌦𑍇𑌵𑌤𑌾𑌰𑌾𑌧𑌨𑌰𑍂𑌪𑍇𑌣 𑌦𑍇𑌵𑌾𑌨𑍍 𑌮𑌚𑍍𑌛𑌰𑍀𑌰𑌭𑍂𑌤𑌾𑌨𑍍 𑌮𑌦𑌾𑌤𑍍𑌮𑌕𑌾𑌨𑍍 𑌆𑌰𑌾𑌧𑌯𑌤 । " 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌹𑌿 ...

---

1. யக்ஞம் என்கிற வடமொழிச் சொல்லிற்கு ஒரு தேவதைக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கும் வேலை யென்று பொருள் வேதத்தில் பல பல தேவதைகளுக்கு ஸந்தோஷத்தை யுண்டுபண்ணி அவர்களிடமிருந்து பிரயோஜனங்களைப் பெற்றுக் கொள்ளுவதற்காக அநேக யக்ஞங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவைகளை ஸ்வர்க்கம் முதலான தாழ்ந்த பலன்களை ஆசைப்பட்டவர்களும், மோக்ஷமென்கிற உயர்ந்த பலனை ஆசைப்பட்டவர்களும் செய்ய வேண்டியது. ஆனால் ஸ்வர்க்கம் முதலான பலன்களை விரும்புகிறவர்கள் இந்திரன் முதலான தேவதைகளை மாத்திரம் ஸந்தோஷப் படுத்துகிறார்கள். மோக்ஷத்தை விரும்புகிறவன் இந்திரன் முதலான தேவதைகளுக்கு ஆத்மாவாய், அவர்களுக்குள்ளேயிருந்து அவர்களை ஏவுகிற பகவானுடைய ஸந்தோஷத்தை வேண்டி கர்மங்களைச் செய்கிறார்கள். 7-வது அத்தியாயத்தில் 20-வது சுலோகம் முதல் நாலு சுலோகங்களாலே பகவானே எல்லா தேவதைகளுக்கும் உள்ளிருந்து அவர்களை ஏவுகிறானென்றும், அவன் ஆத்மாவென்றும், அவர்கள் அவனுக்கு உடம்புகள் என்றும் தேவதைகளுக்கு செய்யும் கர்மங்களினாலே அவன் தான் ஸந்தோஷப்படுவதாகவும், அவனே அந்தக் கர்மங்களுக்கு பலன் கொடுப்பதாகவும் சொல்லப்படுகிறது. இந்த இடத்தில் மோக்ஷம் வேணுமென்கிறவனைப் பற்றியே பேசுவதால், அதற்குத் தகுந்தபடியே இந்த சுலோகங்களுக்கு அர்த்தத்தை ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிச் செய்கிறார்.

होतार उपहूयन्ते' इति हि श्रूयते । यज्ञेना-
राधिता हि देवा आराधकानां स्वाराधनापेक्षिता-
न्नादिकं [illegible] । एवं परस्परं भावय-
न्तः परं श्रेयो मोक्षमवाप्स्यथ ॥ ‖௧௧‖

அவ— 1 யகஞம என்பது அக்நியி (நெருப்பி) ல் மந்தி ரங்களைச சொலலி நெய் முதலானவைகளைச சேர்ப்பது. அது செய்த உடனே போய்விடுமே. அவைகள் வேறு காலத்தில் பலனை எப்படிக கொடுக்கும்? அப்போது அது இல்லையே 2 ஞா னத்தாலேதான மோக்ஷம கிடைக்கும் என்று சொல்லியிருக் கிறதே ஸ்வர்க்கங்களைக கொடுப்பதாகச சொல்லப்பட்ட யகஞங் கள் எப்படி மோக்ஷத்தைக கொடுக்கும்? 3 மோக்ஷத்தைக காட் டிலும் வேறான, பலவிதமான, ஸம்ஸாரிகள் வேண்டுகிற பலன கள மோக்ஷத்திற்கு எப்படி உதவும்? அவைகள் அதற்கு இடைஞ் சல்கள் என்றுகூடச சொல்லலாமே. இப்படி உண்டாகும சில ஸந்தேஹங்களுக்குப் பரிஹாரம சொல்லுகிறார்—

எனக்கு உடம்பான தேவதைகளை இந்த யகஞங்களினாலே ஸந்தோஷப்படுத்துங்கள் யகஞங்களினாலே ஸந்தோஷமடைந்த தேவர்கள் தாங்கள மறுபடியும ஸந்தோஷப்படுவதற்கு வேண்டிய

---

1. யகஞங்கள் பலனைக கொடுக்கவில்லை. அவைகள் தேவதை களுக்கு ஸந்தோஷத்தை யுண்டு பண்ணுகின்றன தேவதைகள் ஸந் தோஷமடைந்து பலனகளைக் கொடுக்கிறார்கள் இதனாலே முதல் கேள்விக்கு பதில சொல்லப்பட்டது.

2-வது கேள்விக்கும பதில-ஞானத்தினாலே (தியானத்தாலே) பக வான ஸந்தோஷத்தை அடைந்து மோக்ஷத்தைக் கொடுக்கிறான. அந்த ஞானத்திற்குக காமங்கள உதவியாயிருக்கின்றன ஆகையினால் அது மோக்ஷத்திற்கு உதவியாகச சொல்லப்பட்டது.

3-வது கேள்விக்கு பதில்.— ஸந்தோஷமடைந்த தேவதைகளோ, பகவானோ அவரவர்கள வேண்டின வஸ்துக்களைக் கொடுக்கிறார்கள். மோக்ஷத்தை வேண்டாதவர்களுக்கு ஸம்ஸாரிகள் கோருகிற பலனைக் கொடுக்கிறார்கள் மோக்ஷத்தை வேண்டுகிறவர்களுக்கு அவர்கள செய் யும காமங்களுக்கு வேண்டின வஸ்துக்களைக் கொடுக்கிறார்கள.

எல்லாவற்றையும் உங்களுக்குக் கொடுப்பார்கள். இப்படி ஒருவருக்கொருவர் செய்து கொண்டு மோக்ஷமென்கிற உயர்ந்த க்ஷேமத்தை அடையுங்கள். [ 11 ]

இஷ்டாந்போ₄கா₃ந்ஹி வோ தே₃வா தா₃ஸ்யந்தே யஜ்ஞபா₄விதா꞉ । தைர்த₃த்தாநப்ரதா₃யைப்₄யோ யோ பு₄ங்க்தே ஸ்தே₁ந ஏவ ஸ꞉ ॥ ॥ ௧௨ ॥

யஜ்ஞபா₄விதா꞉ யஜ்ஞேநாராதி₄தா꞉ மதா₃த்மகா தே₃வா꞉ இஷ்டாந் போ₄கா₃ந் வோ தா₃ஸ்யந்தே உத்தமபுருஷார்த₂லக்ஷணம் மோக்ஷம் ஸாத₄யதாம் யே இஷ்டா போ₄கா₃꞉ தாந் போ₄கா₃ந் பூர்வபூர்வயஜ்ஞபா₄விதா தே₃வா தா₃ஸ்யந்தே । உத்தரோத்தராராத₄நாபேக்ஷிதாந் ஸர்வாந்போ₄கா₃ந் தா₃ஸ்யந்தி இத்யர்த₂꞉ । ஸ்வாராத₄நாய தைர்த₃த்தாந் போ₄கா₃ந் தேப்₄ய꞉ அப்ரதா₃ய யோ பு₄ங்க்தே ஸ்தேந ஏவ ஸ꞉ । ஸ்தேயம் ஹி நாம அந்யதீ₃யே தத்ப்ரயோஜநாயைவ பரிக்லுப்தே வஸ்துநி ஸ்வகீயதாபு₃த்₃தி₄ம் க்ருத்வா தேந ஸ்வாத்மபோஷணம் । அதோ(அ)ஸ்ய ந பரமபுருஷார்தா₂நர்ஹதாமாத்ரம், அபி து நிரயகா₃மித்வம் ச ப₄விஷ்யதீத்யபி₄ப்ராய꞉ ॥ ॥ ௧௨ ॥

யஜ்ஞங்களால் ஸந்தோஷப் படுத்தப்பட்ட என்னுடைய உடம்பான தேவதைகள், தங்களை மேன் மேல் ஸந்தோஷப் படுத்துவதற்கு வேண்டிய எல்லா ஸங்கதிகளையும் உங்களுக்குக் கொடுப்பார்கள். இப்படி அவர்கள் கொடுக்கும் திரவியங்களை நீங்கள் அவர்களுக்குக் கொடுக்க வேண்டியது. அப்படிக் கொடுக்காமல் நீங்களே சாப்பிட்டால், திருடர்கள் ஆவீர்கள். திருடு என்பது எது என்றால், ஒருவனுடையதுமாய், அவனுடைய ஸுகத்திற்காக ஏற்பட்டதுமான வஸ்துவை யாதொரு ஸம்பந்தமில்லாத இன்னொருவன் தன்னுடையது என்று எண்ணி, அதைத் தான் உபயோகப் படுத்திக் கொள்வது. ஆகையால் தேவதைகளைக் கீழே சொன்னபடி ஸந்தோஷப் படுத்தாவிட்டால் மோக்ஷம் கிடைக்காது-என்பது மாத்திரமல்ல, நரகமும் வரும்,

அவ — தமேவ விவ்ருணோதி —

யஜ்ஞசிஷ்டாசிந: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பி³ஷை: ।
பு⁴ஞ்ஜதே தே த்வக⁴ம் பாபா யே பசந்த்யாத்மகாரணாத் ॥

ஐந்த்³ராத்³யாத்மநாவஸ்தி²த பரமபுருஷாராத⁴நார்த²மேவ த்³ரவ்யாண்யுபாதா³ய விபச்ய தைர்யதா²வஸ்தி²தம் பரமபுருஷமாராத்⁴ய தச்சி²ஷ்டாசநேந யே சரீரயாத்ராம் குர்வதே । தே த்வநாதி³காலோபார்ஜிதை: கில்பி³ஷைராத்மயாதா²த்ம்யாநுப⁴வவிரோதி⁴பி⁴: ஸர்வைர்முச்யந்தே । யே து பரமபுருஷேணேந்த்³ராத்³யாத்மநா ஸ்வாராத⁴நாய த³த்தாநாத்மார்த²தயோபாதா³ய விபச்யாஶ்நந்தி தே பாபாத்மாநோ(அ)க⁴மேவ பு⁴ஞ்ஜதே । அக⁴பரிணாமித்வாத³க⁴மித்யுச்யதே । ஆத்மாவலோகநவிமுகா²: நரகாயைவ பச்யந்தே ॥ ॥௧௩॥

அவ— இதையே விவரமாகச் சொல்லுகிறார்—

இந்திரன் முதலானவர்களுக்கு ஆத்மாவாக இருக்கிற பகவானை ஸந்தோஷப் படுத்துவதற்காகவே திரவியங்களை அடைந்து, அவைகளைச் சமைத்து, சாப்பாட்டிற்குத் தகுதியாகப் பண்ணி, அவைகளைப் பகவானுக்குக் கொடுத்து, அவர் சாப்பிட்ட மிகுதியைச் சாப்பிட்டு, எவர்கள் உடம்பை வளர்க்கிறார்களோ அவர்களுக்கு நெடுநாளாய்ச் செய்யப்பட்டு, ஆத்மாவை உள்ளபடி பார்ப்பதற்கு இடைஞ்சல்களான எல்லா பாபங்களும் தானே போய் விடும். எவர்கள் பகவானுமே தன்னை ஸந்தோஷப் படுத்துவதற்காகக் கொடுத்த வஸ்துக்களைத் தங்கள் ஸுகத்திற்காக என்று எண்ணி, சமைத்துச் சாப்பிடுகிறார்களோ, அவர்களைப் பாபமென்றே சொல்லலாம். அவர்கள் பாபத்தைத்தான் சாப்பிடுகிறார்கள். அந்தச் சோறு பாபத்தை உண்டுபண்ணுகிற படியால், அது பாபமென்றே சொல்லப்படுகிறது. ஆத்மாவினுடைய உண்மையை அறியவேணுமென்று யாராவது சொன்னாலும், அவரிடத்தில் கோபித்துக் கொள்வார்கள். இப்படி நரகம் போவதற்காகவே இருக்கிறார்கள்.

𑌅𑌤 — [illegible] 𑌲𑍋𑌕𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌯𑌜𑍍𑌞𑌮𑍂𑌲𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌯𑌿𑌤𑍍𑌵𑌾, 𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌨𑌸𑍍𑌯𑌾𑌵𑌶𑍍𑌯𑌕𑌾𑌰𑍍𑌯𑌤𑌾𑌮𑍍 𑌅𑌨𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌨𑍇 𑌦𑍋𑌷𑌂 𑌚𑌾𑌹—

𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌪𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑌾𑌦𑌨𑍍𑌨𑌸𑌂𑌭𑌵𑌃 ।
𑌯𑌜𑍍𑌞𑌾𑌦𑍍𑌭𑌵𑌤𑌿 𑌪𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑍋 𑌯𑌜𑍍𑌞𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌃 ॥ ॥௧௪॥

𑌕𑌰𑍍𑌮 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌕𑍍𑌷𑌰𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌯𑌜𑍍𑌞𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌮𑍍 ॥ ॥௧௫॥

𑌏𑌵𑌂 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑌂 𑌚𑌕𑍍𑌰𑌂 𑌨𑌾𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌯𑌤𑍀𑌹 𑌯𑌃 ।
𑌅𑌘𑌾𑌯𑍁𑌰𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑌾𑌮𑍋 𑌮𑍋𑌘𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸 𑌜𑍀𑌵𑌤𑌿 ॥௧௬॥

𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 । 𑌪𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑌾𑌦𑌨𑍍𑌨𑌸𑌂𑌭𑌵 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌕𑌮𑍍 । 𑌯𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌪𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑍋 𑌭𑌵𑌤𑍀𑌤𑌿 𑌚 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌣𑌾𑌵𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 - "𑌅𑌗𑍍𑌨𑍌 𑌪𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑌾𑌹𑍁𑌤𑌿𑌃 𑌸𑌮𑍍𑌯𑌗𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌮𑍁𑌪𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍇 । 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌾𑌜𑍍𑌜𑌾𑌯𑌤𑍇 𑌵𑍃𑌷𑍍𑌟𑌿𑌃" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 । 𑌯𑌜𑍍𑌞𑌶𑍍𑌚 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌾𑌰𑍍𑌜𑌨𑌾𑌦𑌿𑌕𑌰𑍍𑌤𑍃𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑌰𑍂𑌪𑌕𑌰𑍍𑌮𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌃 । 𑌕𑌰𑍍𑌮 𑌚 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 । 𑌅𑌤𑍍𑌰 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌶𑌬𑍍𑌦𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌰𑍂𑌪𑌂 𑌶𑌰𑍀𑌰𑌮𑍍 । "𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍇𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌮𑌨𑍍𑌨𑌂 𑌚 𑌜𑌾𑌯𑌤𑍇" 𑌇𑌤𑌿 𑌹𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌶𑌬𑍍𑌦𑍇𑌨 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌰𑍍𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑌾 । 𑌇𑌹𑌾𑌪𑌿 "𑌮𑌮 𑌯𑍋𑌨𑌿𑌰𑍍𑌮𑌹𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮" 𑌇𑌤𑌿 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌤𑌃 "𑌕𑌰𑍍𑌮 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌦𑍍𑌭𑌵𑌮𑍍" 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌰𑍂𑌪𑌶𑌰𑍀𑌰𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮𑍇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌭𑌵𑌤𑌿 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌕𑍍𑌷𑌰𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌮𑌿𑌤𑍍𑌯𑌤𑍍𑌰 𑌅𑌕𑍍𑌷𑌰𑌶𑌬𑍍𑌦𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑍋 𑌜𑍀𑌵𑌾𑌤𑍍𑌮𑌾 । 𑌅𑌨𑍍𑌨𑌪𑌾𑌨𑌾𑌦𑌿𑌨𑌾 𑌤𑍃𑌪𑍍𑌤𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑍇 𑌪𑍍𑌰𑌭𑌵𑌤𑍀𑌤𑌿, 𑌕𑌰𑍍𑌮𑌸𑌾𑌧𑌨𑌭𑍂𑌤𑌂 𑌶𑌰𑍀𑌰𑌮𑌕𑍍𑌷𑌰𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮. 𑌸𑌰𑍍𑌵𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌿𑌗𑌤𑌂 𑌶𑌰𑍀𑌰𑌂-𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌯𑌜𑍍𑌞𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂-𑌯𑌜𑍍𑌞𑌮𑍂𑌲𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌏𑌵𑌂 𑌪𑌰𑌮𑍇𑌷𑍍𑌠𑌿𑌨𑌾 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑌮𑌿𑌦𑌂 𑌚𑌕𑍍𑌰𑌮𑍍-𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌭𑍂𑌤𑌶𑌬𑍍𑌦𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑌾𑌨𑌿 𑌸𑌜𑍀𑌵𑌾𑌨𑌿 𑌶𑌰𑍀𑌰𑌾𑌣𑌿, 𑌪𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑌾𑌦𑌨𑍍𑌨𑌮𑍍, 𑌯𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌪𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑌃, 𑌯𑌜𑍍𑌞𑌶𑍍𑌚 𑌕𑌰𑍍𑌤𑍃𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑌰𑍂𑌪𑌾𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌣𑌃, 𑌕𑌰𑍍𑌮 𑌚 𑌸𑌜𑍀𑌵𑌾𑌚𑍍𑌛𑌰𑍀𑌰𑌾𑌤𑍍, 𑌸𑌜𑍀𑌵𑌂 𑌶𑌰𑍀𑌰𑌮𑍍

[illegible] ‖௧௬‖

அவ— மறுபடியும் லோக அநுபவத்தாலும் சாஸ்திரத்தாலும், எல்லாம் யக்ஞங்களாலேயே வருகின்றனஎன்பதைக் காண்பித்துக் கொண்டு, யக்ஞங்களைக் கட்டாயம் பண்ணவேணு மென்றும், பண்ணுதபோனல் கெடுதியுண்டென்றும் சொல்லுகிறார்—

உலகத்தில் எல்லாப் பிராணிகளும் ஆஹாரத்தினலேதான் வளர்கின்றன. ஆஹாரம் மழையினலேதான் உண்டாகிறது. இந்த இரண்டு ஸங்கதிகளையும் எல்லாரும் கண்ணுலே பார்த்துக் கொண்டிருக்கிறோம். யக்ஞங்களால் மழை உண்டாகிறதென்பதை சாஸ்திரத்தினல் அறிகிறோம். யக்ஞங்கள், பணம் ஸம்பாதிப்பது முதலான வேலையால் உண்டாகிறது. அந்த வேலை உடம்பால் உண்டாகிறது. உடம்பு இல்லாமற்போனல் வேலையை என்னவிதமாய்ச் செய்யமுடியும். அந்த உடம்பு, ஜீவன் உடம்பிலிருந்து சோறைச் சாப்பிட்டு, தண்ணீரைக் குடிப்பதினல் வேலைக்கு உதவுகிறது. ஆகையினல், எல்லாருடைய உடம்புகளும் யக்ஞங்களாலேதான் உண்டாகின்றன. இப்படி, பகவானல் ஏற்படுத்தி நடத்தப்பட்டு, ஒன்றினல் ஒன்று உண்டாகி, சக்கிரம்போல் ஓயாமல் சுற்றிக்கொண்டிருக்கிற இந்த வரிசையைக்கர்மயோகம் செய்கிறவனே, ஞானயோகம் செய்கிறவனே, யார் நடத்தவில்லையோ, அவன் பாபத்தினலே பிறந்து, பாபம் செய்வதற்காகவே இருக்

கிறான். ஆகையால், இந்திரியங்களைக் கொண்டு அவன் ஸுகப் படுவனே யொழிய ஆத்மாவைப் பார்த்து ஸுகப்படமாட்டான். சாஸ்திரத்தில் சொல்லிய ஆஹாரத்தைக் கொண்டு உடம்பை வளர்க்காதபடியால், ரஜோ குணமும், தமோ குணமும் மேலிட்டு, ஆத்மாவைப் பற்றின பேச்சில் அலுப்பு உண்டாகி, விஷயங்களி னுடைய அநுபவத்திலேதான் ஸந்தோஷப்படுவன். ஆகையால் ஞானயோகம் முதலியவைகளை ஆரம்பித்தாலும், முறைப்படி செய்யாமையால், அவன் பிரயத்தினம் வீணாய்ப் போய்விடும். அவன் இருந்தும் பிரயோஜனமில்லை. 1 [ 14–16 ]

அத — அஸாதநாயத்தாத்மக்ஞாநேந ஸ்வயமேவ ஸாத்ய ... ஜ்ஞாநயோகாதிகாரிண ... ததா —

யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாதாத்மத்ருப்தஶ்ச மாநவ: ।
ஆத்மந்யேவ ச ஸந்துஷ்டஸ்தஸ்ய கார்யம் ந வித்யதே ॥கஎ॥
நைவ தஸ்ய க்ருதேநார்தோ நாக்ருதேநேஹ கஶ்சந ।
ந சாஸ்ய ஸர்வபூதேஷு கஶ்சிதர்தவ்யபாஶ்ரய: ॥கஅ॥
தஸ்மாதஸக்த: ஸததம் கார்யம் கர்ம ஸமாசர ।
அஸக்தோ ஹ்யாசரந்கர்ம பரமாப்நோதி பூருஷ: ॥ககூ॥

யஸ்மாத் ஜ்ஞாநயோகயோக்யஸ்யாபி ஸாத்யநிரபேக்ஷ: — ஸ்வதந்த்ர ஆத்மாவலோகந: ... ஆத்மைவ த்வயா நாஶ

---

1 ஸ்ரீ பாஷ்யகாரர் யக்ஞம் என்கிற சொல்லுக்கு வைச்வதேவம் பஞ்சமஹாயக்ஞம் என்றே அர்த்தம் சொல்லுகிறார். வைச்வதேவத்தி ற்கு உபயோகப்படாத ஆஹாரம் மோக்ஷத்தைக் கொடுக்காததுமன்னி யில், நரகத்தைக் கொடுக்குமென்றும் சொல்லுகிறார். இது பக்தியோகம் செய்கிறவனுக்கும், ப்ரபத்தி செய்கிறவனுக்கும், இரண்டும் செய்யாத வனுக்கும் பொதுதான். இதை வைஷ்ணவர்களான நாம் சொல்லுகி றோமே யொழிய, பெரும்பாலும் செய்கிறதில்லை. செய்யாவிட்டாலும், செய்ய வேண்டியதுதான் செய்ய வில்லை என்று சொல்வது மிகவும் நல்லது. இவைகள் பிரபந்நனுக்குச் செய்ய வேண்டியதில்லை என்று சொல்லி, அவைகளை விடுவது ஆசார்யர்களுடைய திருவுள்ளத்திற்கும், பகவானுடைய திருவுள்ளத்திற்கும் மிகவும் வருத்தத்தை உண்டுபண்ணும். மன்னிக்கவும்.

यतः कर्मयोगाधिकारिणो दुर्लभाः —

काङ्क्षन्तः कर्मणां सिद्धिं यजन्त इह देवताः ।
क्षिप्रं हि मानुषे लोके सिद्धिर्भवति कर्मजा ॥१२॥

सर्व एव पुरुषाः कर्मणां फलं काङ्क्षमाणाः इन्द्रादिदेवतामात्रं यजन्ते, न तु कश्चिद् इन्द्रादिदेवतात्मभूतं सर्वयज्ञानां भोक्तारं मां यजन्ते। कुतः? यतः क्षिप्रम् अस्मिन्नेव मानुषे लोके कर्मजा पुत्रपश्वन्नाद्यसिद्धिर्भवति। मनुष्यलोकशब्दः स्वर्गादीनामपि प्रदर्शनार्थः। सर्व एव लौकिकाः पुरुषाः अक्षीणानादिकालप्रवृत्तानन्तपापसंचयतया अविवेकिनः क्षिप्रफलाकाङ्क्षिणः पुत्रपश्वन्नाद्यस्वर्गाद्यर्थतया सर्वाणि कर्माणि इन्द्रादिदेवताराधनमात्राणि कुर्वते। न तु कश्चित् संसारोद्विग्नहृदयो मुमुक्षुः उक्तलक्षणं कर्मयोगं मदाराधनभूतम् आरभत इत्यर्थः ॥१२॥

அவ—பிரஸ்தாவத்தில் வந்த ஸங்கதியை முடித்து, கர்மயோகம் என்பது வெறும் வேலையல்ல, உயர்ந்த அறிவுடன் செய்யப்படுவதால், உயர்ந்த அறிவுதான் என்று சொல்லுவதற்காக, அப்படிப்பட்ட அறிவுடன் கர்மயோகத்தை செய்கிறவர்கள் அகப்படுவது 1 வருத்தமென்று சொல்லுகிறார்.

---

1 ஆத்மாவை உள்ளபடி முதலில் அறியவேண்டும். கர்மங்களின் பலன்களில் ஆசையைவிட்டு, பகவானுடைய பிரீதிக்காகவே அவைகளைச் செய்யவேண்டும். நடுவில் வரும் பணம் முதலானவைகளையும், ஸ்வர்க்கம் முதலானவைகளையும் விரும்பாமல், பகவானையே அடைவதுதான் பிரயோஜனமென்று எண்ண வேண்டியது. எந்த வேலை செய்தாலும், வண்டிக்காரனிடம் அகப்பட்ட வண்டிமாடுபோல், நாம் பகவானிடம் அகப்பட்டு அவனாலே வேலைகளைச் செய்விக்கப்படுகிறோம் என்றும் நினைக்கவேண்டியது. இப்படிச் செய்வது கர்மயோகம். இவைகளை வாயால் சொல்லவதே கஷ்டம். நினைவு எப்படி வரும். செய்வது எங்கு இருக்கிறது.

எல்லாரும் இந்த உலகத்தில் பணம் காசு முதலான ஸுகங்களையும், ஸ்வர்க்கலோகத்திய ஸுகங்களையும் ஆசைப்பட்டு, இந்திரன் முதலான தேவதைகளை மாத்திரம் பூஜித்து, அவர்களை ஸந்தோஷப்படுத்துகிறார்கள். ஒருவனாவது அந்த பலன்களை ஆசைப்படாமல், இந்திரன் முதலான எல்லா தேவதைகளுக்கும் நான் தான் ஆத்மாவாயிருக்கிறேனென்றும், எல்லா யக்ஞங்களிலும் நான் தான் ஸந்தோஷத்தை யடைகிறேனென்றும் என்னை அறிந்து, பூஜித்து, ஸந்தோஷப்படுத்துகிறதில்லை. ஏனென்றால், இந்திரன் முதலானவர்களை ஸந்தோஷப்படுத்தினால், அவர்கள் பிள்ளை பெண்டாட்டி, சோறு, தண்ணீர், முதலான பலன்களை [1] உடனே கொடுக்கிறார்கள். ஜீவன்கள் இது முதல் என்று இல்லாமல் நெடுநாளாய கணக்கில்லாத பாபங்களைச் செய்திருக்கிறார்கள். அதனாலே "உடம்பு வேறு ஆத்மா வேறு உடம்பும் அதைச் சேர்ந்தவைகளும் அழிவுள்ளவைகள் மிகவும் தாழ்ந்தவைகள். அவைகளால் ஆத்மாவுக்கு ஒரு பிரயோஜநமுமில்லை ஆத்மா என்பது அழிவில்லாதது மிகவுமுயர்ந்தது. பகவானை அடைய வேண்டிய வஸ்து, அதற்காகத்தான் வேலைகளைச் செய்யவேண்டியது" இது முதலான ஸங்கதிகளை அறிய முடியவில்லை. சீக்கிரம் உண்டாகிற பிள்ளை பெண்டாட்டி, மாடு கன்று முதலான பலன்களைத் தேடுகிறார்கள். ஒருவனும் ஸம்ஸாரத்தில் வெறுப்புண்டாகி மோக்ஷத்தை ஆசைப்பட்டு எனக்கு ஸந்தோஷத்தையுண்டு பண்ணும்படி கர்மயோகத்தைச் செய்ய ஆரம்பிக்கிறதில்லை. [12]

௧௩— 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌾𑌰𑌮𑍍𑌭𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌪𑌾𑌪𑌕𑍍𑌷𑌯𑌹𑍇𑌤𑍍𑌵𑌨𑍍𑌤𑌰𑌮𑌾𑌹 —

𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌵𑌣𑍍𑌯𑌂 𑌮𑌯𑌾 𑌸𑍃𑌷𑍍𑌟𑌂 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑌾𑌗𑌶𑌃 ।
𑌤𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌪𑌿 𑌮𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥ ||௧௩||

𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌵𑌣𑍍𑌯𑌪𑍍𑌰𑌮𑍁𑌖𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑌿𑌸𑍍𑌤𑌮𑍍𑌬𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂 𑌜𑌗𑌤𑍍 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌵𑌿𑌭𑌾𑌗𑍇𑌨 𑌤𑌦𑌨𑍁𑌗𑍁𑌣𑌶𑌮𑌾𑌦𑌿

1. இந்திரன் முதலான தேவதைகளிடம் பலன்களை வேண்டுவது ஒருவன் ஒரு பணக்காரனிடம் போய் அவனைத் தாறுமாறாய்த் தோத்திரம் பண்ணி, அவனிடமிருந்து இரண்டணா பெற்று ஸந்தோஷப்படுவது போல இருக்கிறது.

கர்மவிபாகேந ச விபக்தம் மயா ஸ்ருஷ்டம் | ஸ்ருஷ்டிக்ரஹணம் ப்ரதர்ஶநார்தம் | மயைவ ரக்ஷ்யதே, மயைவ சோபஸம்ஹ்ரியதே | தஸ்ய விசித்ரஸ்ருஷ்ட்யாதே: கர்தாரமபி அகர்தாரம் மாம் வித்தி || ||௧௩||

அவ—பாபத்தினலே அறிவு கெட்டு, கர்மயோகத்தை ஆரம்பிக்கிறதில்லை யென்று சொல்லப்பட்டது. அந்த பாபம் போவதற்கு வழியைச் சொல்லுகிருர்.

பிராமணன் முதலான நாலு ஜாதிகளையும், பிரும்மா முதல் புழுவரையிலுள்ள எல்லா ஜந்துக்களையும் நான் உண்டுபண்ணி, காப்பாற்றி, அழிக்கிறேன். ஸத்வம், ரஜஸ், தமஸ், என்கிற குணங்களில் சிலருக்கு சில குணங்கள் அதிகமாயும், சிலருக்கு குறைவாகவும் இருக்கும்படி செய்கிறேன். அந்த குணங்களுக்குத் தகுந்தபடி, தொழில்களையும் ஏற்பாடு செய்திருக்கிறேன். ஆகையினலே உலகத்தில் ஒருவனைப்போல் ஒருவன் இருக்கவில்லை. ஒருவன் பெரிய பணக்காரன், மற்ருருவன் மிகவும் ஏழை. ஒருவன் மஹா புத்திமான். இன்ெனருவன் அடியோடு முட்டாள். இப்படி உலகத்தைப் பலவிதமாகப் பண்ணியிருக்கிறேன். ஆனல் அப்படி நான் பண்ணியிருந்தபோதிலும், நான் பண்ணவில்லை யென்று நினை. [13]

ஸ்வ— கயம் இத்யாஹ—

ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மபலே ஸ்ப்ருஹா |
இதி மாம் யோऽபிஜாநாதி கர்மபிர்ந ஸ பத்யதே ||

யாநீமாநி விசித்ரஸ்ருஷ்ட்யாதீநி கர்மாணி மாம் ந லிம்பந்தி, ந மாம் ஸம்பத்நந்தி | ந தத்ப்ரயுக்தாநி தேவாதிவைசித்ர்யாணி, ஸ்ருஜ்யாநாம் பூர்வக்ருதபுண்யபாபரூபகர்மவிஶேஷப்ரயுக்தாநீத்யர்த: | அத: ப்ராப்தாப்ராப்தவிவேகேந விசித்ரஸ்ருஷ்ட்யாதேர்ந அஹம் கர்தா | யத: ஸ்ருஷ்டா: க்ஷேத்ரஜ்ஞா: ஸ்ருஷ்டிலப்தகரணகளேபரா: ஸ்ருஷ்டிலப்தபோக்யஜாதம் ஸமஸ்தம் யதேஷ்டம் ப்ராப்ய ஸ்வகர்மாநுகுணம் ரஜ்யந்தே | ஸ்ருஷ்ட்யாதிகர்மபலே ச தேஷாமேவ ஸ்ப்ருஹா

தி ந மே ஸ்ப்ருஹா। ததாஹ ஸூத்ரகார: — வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாதிதி । ததா ச பகவாந் பராசர: — நிமித்தமாத்ரமேவாயம் ஸ்ருஜ்யாநாம் ஸர்ககர்மணி । ப்ரதாநகாரணீபூதா யதோ வை ஸ்ருஜ்யசக்தய: ॥ நிமித்தமாத்ரம் முக்த்வைகம் நாந்யத் கிஞ்சிதபேக்ஷதே । நீயதே தபதாம் ஶ்ரேஷ்ட ஸ்வஶக்த்யா வஸ்து வஸ்துதாமிதி । ஸ்ருஜ்யாநாம் தேவாதீநாம் க்ஷேத்ரஜ்ஞாநாம் ஸ்ருஷ்டே: காரணமாத்ரமேவாயம் பரமபுருஷ: । தேவாதிவைசித்ர்யே து ப்ரதாநகாரணம் ஸ்ருஜ்யபூதக்ஷேத்ரஜ்ஞாநாம் ப்ராசீநகர்மசக்திரேவ। யதோ நிமித்தமாத்ரம் முக்த்வா ஸ்ருஷ்டே: கர்தாரம் பரமபுருஷம் முக்த்வா இதரம் க்ஷேத்ரஜ்ஞவஸ்து தேவாதிவிசித்ரபாவே நாந்யதபேக்ஷதே, ஸ்வகதப்ராசீநகர்மசக்த்யைவ ஹி தேவாதிவஸ்துபாவம் நீயத இத்யர்த்த: । ஏவமுக்தப்ரகாரேண ஸ்ருஷ்ட்யாதே: கர்தாரமபி அகர்தாரம் ஸ்ருஷ்ட்யாதிகர்மபலஸம்பந்தரஹிதம் ச யோ மாமபிஜாநாதி, ஸ கர்மயோகாரம்பவிரோதிபி: ஸம்ஸாரஹேதுபி: ப்ராசீநகர்மபிர்ந ஸம்பத்யதே — முச்யத இத்யர்த்த: ॥ ॥௧௪॥

அவ—ஒரே வேலையை 'நான் செய்தேன்' 'நான் செய்யவில்லை' என்பது எப்படி ஒட்டும்? என்றால் சொல்லுகிறார்—

ஒருவன் தேவனாகவும், மற்றொருவன் மனிதனாகவும் பிறந்திருக்கிறான். இது மாதிரி பேதங்கள் என்னால் ஏற்படவில்லை. ஜீவன்களுடைய புண்ணியத்தாலும், பாபத்தாலும் ஏற்பட்டவைகள். உதாரணம் ஒரு கொல்லையில் ஒருவன் வெவ்வேறு விதைகளை விதைக்கிறான். அவைகள் பலவிதமாய் முளைக்கின்றன. விதைத்தவன் ஒருவன். பூமி ஒன்று, தண்ணீரும் ஒரே கிணற்றிலிருந்து எடுக்கப்பட்டது. எருவும் ஒன்று. எல்லாம் ஒன்றாயிருந்தாலும் விதைகளின் வெவ்வேறு சக்திகளாலே வெவ்வேறு முளைகள் உண்டாகின்றன. அதுபோல. என்னாலே உண்டு பண்ணப்பட்ட ஜீவன்கள் அவரவர்களுக்குப் பிடித்த பண்டங்களை அவரவர்கள் கர்மத்திற்குத் தகுந்தபடி அனுபவிக்க வேண்

டியது. அதற்காக அதற்குத்தகுந்த உடம்புகளையும், இந்திரியங்களையும் அவர்களுக்குக் கொடுத்திருக்கிறேன்.

உடம்புகளும், இந்திரியங்களும், உண்டாவதற்கு நான் பொதுவான காரணம். அவைகள் வெவ்வேறாயிருப்பதற்கு அவரவர்கள் கர்மங்களே காரணம். ஆகையினாலே பலவித பேதங்களை நான் உண்டு பண்ணினாலும், 'நான் உண்டு பண்ணவில்லை' என்று சொன்னேன். மேலும், எனக்கு ஒரு பிரயோஜனத்திலாசையினால், இப்படி பலவிதமான பேதங்களை நான் உண்டு பண்ணவில்லை. உலகத்தில் சில அதிகாரிகள் அவனவனுக்கு யோக்கியதைக்குத்தகுந்தபடி சில வேலைகளைக் கொடுக்கிறார்கள். அதை அவர்கள் தங்கள் பிரயோஜனத்திற்காகச் செய்யவில்லை. வேறு சிலர்கள் வேலை பண்ணிக் கொடுத்து லஞ்சம் வாங்குகிறார்கள். நான் அப்படி ஒரு பிரயோஜனத்தை ஆசைப்பட்டு, பலவித பேதங்களை செய்யவில்லை. இப்படி யார் என்னை நினைக்கிறாரோ, அவனுக்குக் கர்மயோகம் செய்வதற்கு இடைஞ்சலான பாபங்கள் போய் விடும். அதாவது பகவான் எல்லாருக்கும் எல்லாவித உறவாயிருக்கிறான். எல்லாரும் ஸௌக்கியத்தை அடையவேணுமென்று ஆசைப்பட்டு பலவிதமாய்ப் பாடுபடுகிறான். அவனுக்கு ஒருவனிடத்திலும் த்வேஷமில்லை. ஆனால் அவன் அவரவர்களுடைய பாபத்துக்கும் புண்ணியத்திற்கும் தகுந்தபடி ஒருவனை உயர்த்தியாயும்,ஒருவனைத் தாழ்த்தியாகவும் வைக்கிறான். இதை அறிந்தால் அவரவர்கள் தங்கள் பாபத்தை அறிந்து, அதைப்போக்கும் வழியைத் தேடுவார்கள். உலகத்திலும் இதைப்பார்க்கலாம். திருடனை ராஜா தண்டிக்கிறான். பள்ளிக்கூடத்தில் நன்றாய்ப் படித்த பையனுக்கு இனம்கொடுக்கிறான். ராஜா அவனவனுடைய வேலைக்குத் தகுந்தபடி பலன் கொடுக்கிறான். தண்டிக்கப்பட்டவன் தன்னுடைய குற்றத்தினாலேதான் தண்டனை வந்ததென்று நினைத்தால்,திருட்டை நிறுத்தி விடுவன். அப்படியே பகவான், நம்முடைய பாபங்களுக்கு பலன் கொடுக்கிறானென்று எண்ணினால், நாமும் நம்முடைய பாபங்களை நிறுத்த முயற்சிசெய்வோம். தெய்வத்திற்குக்கண் இல்லை யென்று

பகவானவை யமாட்டேடாய 1

ஏவம் ஜ்ஞாத்வா க்ருதம் கர்ம பூர்வைரபி முமுக்ஷுபி:।
குரு கர்மைவ தஸ்மாத்த்வம் பூர்வை: பூர்வதரம் க்ருதம்॥ ॥௧௫॥

ஏவம் மாம் ஜ்ஞாத்வா விமுக்தபாபை: பூர்வைரபி முமுக்ஷுபிராத்மப்ரக்ஷணாய கர்ம க்ருதம்। தஸ்மாத்த்வமுக்தப்ரகாரவிஷயஜ்ஞாநவிதூதபாப: பூர்வை: விவஸ்வந்மந்வாதிபி: க்ருதம் பூர்வதரம் புராதநம் ததாநீந்தநைரநுஷ்டிதம் வக்ஷ்யமாணாகாரம் கர்மைவ குரு॥ ॥ ௧௫ ॥

இப்படி என்னைத் தெரிந்துகொண்டு, எல்லாப் பாபங்களையும் போக்கி, ஸம்ஸாரத்தைப் போக்கவேணுமென்று ஆசைப்பட்ட முன்னிருந்த பெரியோர்கள் கர்மயோகத்தைச் செய்தார்கள் நீயும் அதே மாதிரி என்னை நினைத்து, பாபத்தைப் போக்கி, முன்னிருந்த விவஸ்வான், மனு முதலான பெரியோர்களுக்கு அப்போதே என்னால் சொல்லப்பட்டு, அவர்களால் செய்யப்பட்டு, நெடு நாளாய் வந்த கர்ம யோகத்தையே கீழ்ச்சொல்லியபடியும், மேல் சொல்லப்போகிறபடியும் செய் (15)

அத—வக்ஷ்யமாணஸ்ய கர்மணோ துர்ஜ்ஞாநதாமாஹ—

கிம் கர்ம கிமகர்மேதி கவயோऽப்யத்ர மோஹிதா:।
தத்தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யஜ்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽசுபாத்॥

முமுக்ஷுணாநுஷ்டேயம் கர்ம கிம்ரூபம்? அகர்ம ச கிம்? அகர்மேதி கர்த்துராத்மநோ யாதாத்ம்யஜ்ஞாநமுச்யதே। அநுஷ்டேயம் கர்ம தத³ந்தர்க³தம் ஜ்ஞாநம் ச கிம்ரூபமிதி உபயத்ர கவயோ வித்வாம்ஸோऽபி மோஹிதா: யதாவந்ந

1. உலகத்தில் படித்தவரோ படிக்காதவரோ யாருக்கும் இது பாபம் என்றும், நாம் பாபத்தைப் பண்ணினோம், பண்ணுகிறோம் என்றும் தோன்றுகிறதே இல்லை இதைத்தானாகவும், பிறர் சொன்னாலும் கவனிக்கிறதில்லை. நான் பாபி என்று மனதார நினைப்பதை மோக்ஷத்திற்கு ஆரம்பமென்று ஸ்ரீ தேசிகன் அருளிச் செய்திருக்கிறார்.

ஜாநந்தி| ஸோऽஹம் தத் கர்மஜ்ஞாநம் யுக்தம் தே ப்ரவக்ஷ்யாமி| யத் ஜ்ஞாத்வா கர்மாநுஷ்டாய அஶுபாத் ஸம்ஸாரபந்தாந் மோக்ஷ்யஸே | கர்தவ்யகர்மஜ்ஞாநம் ஹ்யநுஷ்டாநாபேக்ஷம் || ௧௬ ||

அவ— நான் சொல்லப்போகிற கர்மத்தை அறிவது மிகவும் வருத்தமென்று சொல்லுகிறார்.

ஸம்ஸாரத்தைப் போக்கவேணுமென்று ஆசைப்பட்டவன் செய்யவேண்டிய கர்மம் இன்னது, அது செய்யும்போது நினைக்க வேண்டிய நினைவு இன்னது (அதாவது இன்ன வேலையை இன்ன நினைவுடன் செய்யவேண்டும்) என்கிற இந்த இரண்டு த்விஷய தில் மிகவும் தெரிந்தவர்களும் மயங்குகிறார்கள். அந்த அறிவோடு கூடிய கர்மத்தை நான் உனக்குச் சொல்லுகிறேன். அதை அறிந்து நீ 1. செய்தால், உனக்கு ஸம்ஸாரம் போய்விடும். (16)

அவ— கர்மதத்வஸ்ய துர்ஜ்ஞாநத்வமாஹ—

கர்மணோ ஹ்யபி போத்தவ்யம் போத்தவ்யம் ச விகர்மண: |
அகர்மணஶ்ச போத்தவ்யம் கஹநா கர்மணோ கதி: || ||௧௭||

யஸ்மாந்மோக்ஷஸாதநபூதே கர்மஸ்வரூபே போத்தவ்யமஸ்தி| விகர்மணி ச நித்யநைமித்திககாம்யரூபேண தத்ஸாதநத்ரவ்யார்ஜநாத்யாகாரேண ச விவிததாமாபந்நே கர்மணி | அகர்மணி-ஜ்ஞாநே ச போத்தவ்யமஸ்தி | கஹநா துர்விஜ்ஞாநா முமுக்ஷோ: கர்மணோ கதி:| விகர்மணி போத்தவ்யம் நித்யநைமித்திககாம்யத்ரவ்யார்ஜநாதௌ கர்மணி ஃபலபேதக்ருதம் வைவித்யம் பரித்யஜ்ய மோக்ஷைகஃபலதயா ஏகஶாஸ்த்ரார்தத்வாநுஸந்தாநம் | தச்ச "வ்யவஸாயாத்மிகா புத்திரேகேஹ" இத்யத்ரைவோக்தமிதி நேஹ ப்ரபஞ்ச்யதே || || ௧௭ ||

அவ— அந்த ஸங்கதியை அறிவது ஏன் இவ்வளவு வருத்தம் என்றால், சொல்லுகிறார்—

---

1 ஒரு ஸங்கதியை அறிவதனால் மாத்திரம் பிரயோஜனமில்லை. அதைச்செய்தால்தான் பிரயோஜனம் உண்டு. நமக்கு அறிவதே கஷ்டமாயிருக்கிறது. எப்போது செய்யப்போகிறோம்.

ஸம்ஸாரத்தைப் போக்குவதற்கு ஸாதனமான கர்மம் இன்னதென்று அறியவேணும் நித்தியம், நைமித்திகம், காமியம், என்பவைகளையும், அவைகளுக்கு ஸாதனமான பணம் ஸம்பாதிப்பது முதலான வேலைகளையும் அறியவேண்டும். கர்மத்தைச் செய்யும்போது கூடஇருக்கவேண்டிய நினைவையும் அறியவேண்டும். ஆகையினால் இவைகளை அறிவது மிகவும் கஷ்டம். நித்யம், நைமித்திகம், காமியம் என்கிற கர்மங்களையும், அவைகளுக்கு ஸாதன மான பணம் ஸம்பாதிப்பது முதலானவைகளையும் அறிவதாவது அவைகளுக்கு ஏற்பட்ட பலன்களினாலே அவைகள் வெவ்வேறு என்கிற எண்ணத்தை விட்டு, எல்லாம் மோக்ஷம்என்கிற ஒரே பலனைக் கொடுப்பதினால், அவைகள் எல்லாம் ஒரே வகுப்பு என்று எண்ணுவது இது 2—வது அத்தியாயம் 41—வது சுலோகத்தில் சொல்லப்பட்டது (17)

அத — கர்மணோ ஜ்ஞாநாகாரத்வமாஹ —

கர்மண்யகர்ம ய: பச்யேதகர்மணி ச கர்ம ய: ।
ஸ புத்திமாந் மநுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்நகர்மக்ருத் ॥ ௧௮ ॥

அகர்மசப்தேந அத்ர கர்மேதரத் ப்ரஸ்துதமாத்மஜ்ஞாநம் உச்யதே। கர்மணி க்ரியமாணமேவ ஆத்மஜ்ஞாநம் ய: பச்யேத்। அகர்மணி ச ஆத்மஜ்ஞாநே ச கர்ம ய: பச்யேத்। க்ரியமாணமேவ கர்ம ஆத்மயாதாத்ம்யாநுஸந்தாநேந ஜ்ஞாநாகாரம் ய: பச்யேத்। தச்ச ஜ்ஞாநம் கர்மாந்தர்கததயா கர்மாகாரம் ய: பச்யேதித்யர்த:। க்ரியமாணே ஹி கர்மணி கர்த்ருபூதாத்மயாதாத்ம்யாநுஸந்தாநேந ததுபயம் ஸம்பந்நம் பவதி। ஏவமாத்மயாதாத்ம்யாநுஸந்தாநகர்ம ய: பச்யேத், ஸ புத்திமாந் க்ருத்ஸ்நசாஸ்த்ரார்தவித்। மநுஷ்யேஷு ஸ யுக்த: மோக்ஷாயார்ஹ:। ஸ ச க்ருத்ஸ்நகர்மக்ருத் க்ருத்ஸ்நசாஸ்த்ரார்தக்ருத் ॥ ॥௧௮॥

அ— மோக்ஷத்திற்கு ஸாதனமான கர்மத்தையும், அது செய்யும்போது இருக்கவேண்டிய நினைவையும் சொல்லுகிறார்—

மோக்ஷத்திற்கு ஸாதனமான கர்மத்தைச் செய்கிற

வன் ஆத்ம ஸ்வரூபததை உளளபடி நினைப்பதிலலை, கர்மத்தில அறிவு இருககிறதெனறும், ஆதம ஸ்வரூபததை உளளபடி நினைககிறவன காமததைச செய்கிறபடியால், அறிவில கர்மம இருககிறதெனறும எவன் பார்ககிருனே, அவன் கெட்டிககாரன. அதாவது ஆதமாவின் நினைவுசேர்நததுதான் கர்மம். காமத்துடன் சேர்நததுதான ஆதமாவின நினைவு ஆகையால கர்மமே நினைவு நினைவுதான காமம காமமும், ஆதமாவின நினைவும ஒனறைவிட்டு ஒனறு இராது ஆதமாவை உளளபடி அறிந்து, கர்மத்தைச செயகிறவனுககு இரணடும சொம்பிவிடுகிறது. இப்படி எவன் கர்மததை ஆத்மாவின நினைவுடன் சேர்நததெனறு பார்க்கிருனே, அவன சாஸ்திரத்தை உளளபடி அறிநதவன் மனிதர்களுககுளளே அவனதான் ஸமஸாரத்தைப போககககூடியவன் அவன் சாஸதிரததில சொலலிய எலலா கர்மஙகளையும் செய்கிறவன 1. (18)

அவ— ப்ரத்யக்ஷேண க்ரியமாணஸ்ய கர்மணோ ஜ்ஞாநாகாரதா கத²முபபத்³யத இத்யத்ராஹ —

யஸ்ய ஸர்வே ஸமாரம்பா⁴: காமஸங்கல்பவர்ஜிதா: ॥
ஜ்ஞாநாக்³நித³க்³த⁴கர்மாணம் தமாஹு: பண்டி³தம் பு³தா⁴: ॥௧௯॥

யஸ்ய ஸர்வே த்³ரவ்யார்ஜநாதி³லௌகிக கர்மபூர்வக நித்யநைமித்திககாம்யரூபகர்மஸமாரம்பா⁴: காமவர்ஜிதா: ப²லஸங்க³ரஹிதா: ஸங்கல்பவர்ஜிதாஶ்ச । ப்ரக்ருத்யா தத்³கு³ணைஶ்சாத்மாநமேகீக்ருத்யாநுஸந்தா⁴நம் ஸங்கல்ப:, ப்ரக்ருதிவியுக்தாத்மஸ்வரூபாநுஸந்தா⁴நயுக்ததயா தத்³ரஹிதா:। தமேவம் கர்ம குர்வாணம் பண்டி³தம் கர்மாந்தர்க³தா

---

1. நாம இபபோது நமமைப்பிராமணனுக நினைததுக்கொளளவுமிலலை, பிராமணன இனன வேலை செயயவேணடுமெனபதையும அறியவிலலை. சிலர் அதைச செய்யவேணுமென்று வாயால சொலலுகிருர்களேயொழிய, மனதில படவிலலை. செய்யவேணுமெனறு ஆசையுமிலலை. சிலவேளைகளில ஏதோ மிகவும சொறபமான ஆசையால செயதாலும, ஆதமாவின் நினைவுடன் செயவது அரிது.

த்யாஜ்யஸ்ய ஜ்ஞாநாக்³நிநா த³க்³த⁴ஸர்வகர்மாணம் தமாஹு: பண்டி³தம் பு³தா:। அத: கர்மணோ ஜ்ஞாநாகாரத்வமுச்யதே ॥௧௯॥

அவ— செய்யப்படுகிற கர்மம் வேறு ஆத்மாவின் நினைவு வேறு இப்படியே பார்க்கிறோம் எப்படி கர்மம் நினைவாயிருக்கும் கண்ணாலே பார்ப்பதற்கு விரோதமாக இருப்பதைச் சாஸ்திரத்தைக்கொண்டோ, யுக்தியைக்கொண்டோ எப்படி ஸாதிக்கக்கூடும் ? என்றால் சொல்லுகிறார்.—

ஸம்ஸாரத்தைப் போக்கவேணுமென்று நினைவுள்ளவன் நித்யம், நைமித்திகம், காம்யம் என்கிற கர்மங்களையும், அவைகளுக்கு ஸாதனமான பணம் ஸம்பாதிப்பது முதலான காமங்களையும், அவைகளுக்கு ஏற்பட்ட பலன்களில் ஆசையில்லாமல் பகவானுடைய பிரீதிதான் வேணுமென்றும், உடம்பு வேறு, ஆத்மா வேறு என்கிற எண்ணத்துடனும் செய்கிறான் இப்படிக் கருமங்களைச் செய்கிற அவனைக்காமங்களோடு சேர்ந்த ஆத்மாவின் அறிவு என்கிற நெருப்பினால், நெடுநாளாய வந்த புண்ணியங்களையும், பாபங்களையும் கொளுத்திவிட்டவனென்று தெரிந்தவர்கள் சொல்லுகிறார்கள் நினைவினால் தான் காமம் பாபத்தைப் போக்குகிறது. நினைவுதான் ரஸம் ஆகையினாலே காமங்களை நினைவு (ஞானம்) என்று சொல்லுகிறது [ 19 ]

ஸவ— ஸ ஏவ விவ்ருணோதி—

த்யக்த்வா கர்மப²லாஸங்க³ம் நித்யத்ருப்தோ நிராஶ்ரய: ।
கர்மண்யபி⁴ப்ரவ்ருத்தோঽபி நைவ கிஞ்சித்கரோதி ஸ: ॥

கர்மப²லஸங்க³ம் த்யக்த்வா நித்யத்ருப்த: - நித்யே ஸ்வாத்மந்யேவ த்ருப்த:, நிராஶ்ரய:- அஸ்தி²ரப்ரக்ருத்யாஶ்ரயஸ்வபு³த்³தி⁴ரஹித:, ய: கர்மாணி கரோதி, ஸ கர்மணி ஆபி⁴முக்²யேந ப்ரவ்ருத்தோঽபி நைவ கிஞ்சித்கர்ம கரோதி। கர்மாபதே³ஶேந ஜ்ஞாநாப்⁴யாஸமேவ கரோதீத்யர்த²: ॥ ॥ ௨௦ ॥

அவ— இதையே விரிவாகச் சொல்லுகிறார்—

கர்மங்களுக்கு இவ்வுலகத்திலோ, வேறு உலகங்களிலோ

ஏற்பட்ட பலன்களில் ஆசையை விட்டு, அழிவில்லாத ஆத்மாவை நினைப்பதிலேயே ஸந்தோஷத்தை யடைந்து, உடம்பும், உடம்பை சேர்ந்தவைகளும் நிலையானவைகள் அல்லவென்று, அவைகளில் ஆசையில்லாமல், எவன் கர்மங்களைச் செய்கிறானோ, அவன் கர்மங்களையே ஆசைப்படச் செய்தாலும், கர்மங்களைச் செய்யவில்லை. கர்மம் என்று பெயரை வைத்துக்கொண்டு ஆத்மாவின் நினைவைத் தான் பழக்குகிறான். [ 20 ]

அத² வ்யாவ்ருத்தாநுஸந்தா⁴நத்வம் கர்மணோ ஜ்ஞாநாகாரத்வேந விஶோத்⁴யதே—

நிராஶீர்யதசித்தாத்மா த்யக்தஸர்வபரிக்³ரஹ꞉ ।
ஶாரீரம் கேவலம் கர்ம குர்வந்நாப்நோதி கில்பி³ஷம் ॥௨௧॥

நிராஶீ꞉ நிர்க³தப²லாபி⁴ஸந்தி⁴꞉। யதசித்தாத்மா-யதசித்தமநா꞉। த்யக்தஸர்வபரிக்³ரஹ꞉-ஆத்மைகப்ரயோஜநதயா ப்ரக்ருதிப்ராக்ருதவஸ்துநி மமதாரஹித꞉। யாவஜ்ஜீவம் கேவலம் ஶாரீரமேவ கர்ம குர்வந் கில்பி³ஷம் - ஸம்ஸாரம் நாப்நோதி- ஜ்ஞாநநிஷ்டா²வ்யவதா⁴நரஹிதகேவலகர்மயோகே³நைவ ஆத்மாநம் பஶ்யதீத்யர்த²꞉ ॥ ॥௨௧॥

அவ— மறுபடியும் கர்மங்கள் நினைவாயிருக்கும் என்பதைத் தெளிவாகச் சொல்லுகிறார்—

கர்மங்களுக்கு ஏற்பட்ட பலன்களில் ஆசையில்லாமல், ஆத்மாவைத் தவிர வேறு விஷயங்களில் மனதைப் போகாமல் அடக்கி, ஆத்மா ஒன்றே வேணும் என்கிற நினைவினாலே உடம்பிலும், உடம்பைச் சேர்ந்த வஸ்துக்களிலும், இவைகள் என்னுடையவை என்கிற எண்ணத்தை விட்டு, எவன் செத்துப்போகிறவரையில் உடம்பினாலும், இந்திரியங்களாலும் கர்மங்களையே செய்து கொண்டிருக்கிறானோ, அவன் ஸம்ஸாரத்தைப் போக்குகிறான். அவன் ஞானயோகமில்லாமலே இப்படிப்பட்ட கர்மயோகத்தினாலேயே ஆத்மாவைப் பார்த்துவிடுகிறான். [21]

யத்ருச்சாலாபஸந்துஷ்டோ த்வந்த்வாதீதோ விமத்ஸர: ।
ஸம: ஸித்தாவஸித்தௌ ச க்ருத்வாபி ந நிபத்யதே ॥ ॥௨௨॥

யத்ருச்சோபநதசரீரதாரணஹேதுவஸ்துஸந்துஷ்ட:। த்வந்த்வாதீத:- யாவத்ஸாதநஸமாப்தி அவர்ஜநீயசீதோஷ்ணாதிஸஹ:। விமத்ஸர:- அநிஷ்டோபநிபாதஹேதுபூதஸ்வகர்மநிரூபணேந பரேஷு விமத்ஸர:। ஸம: ஸித்தாவஸித்தௌ ச யுத்தாதிகர்மஸு ஜயாதிஸித்த்யஸித்த்யோ: ஸமசித்த:, கர்மைவ க்ருத்வாபி ஜ்ஞாநநிஷ்டாம் விநாபி ந நிபத்யதே- ந ஸம்ஸாரம் ப்ரதிபத்யதே ॥ ॥௨௨॥

கீழே சொன்னபடி காமயோகம் செய்கிறவன தறசெயலாய்- அதாவது தன் பிரயதனம் இலலாமல், உடமபை வளர்ப்பதற்கு வேண்டிய வஸ்துக்கள கிடைததால், அவைகளைக்கொண்டு ஸந்தோஷப்படுகிறான செயயவேண்டியவேலைகளைச செயயுமபோது, நடுவில் நேரிடுகிற குளிர் சூடு முதலானவைகளைப் பொறுத்துக் கொளளுகிறான ஒருவனால் தனககு ஒரு தொந்திரவு நேரிடுமபோது, இது நான் பண்ணின பாபததின பலன் என்று நினைதது, தொநதிரவு செய்கிறவனிடததில கோபிககிறதில்லை. செய்ய வேண்டிய சண்டை முதலான வேலைகளைச செய்யும்போது, ஜயம முதலான பலன்கள கிடைத்தால் ஸந்தோஷமிலலை கிடைக்கா விட்டால் வருததமுமிலலை. அவைகளுக்காக அவன் செய்யவில்லையே. மோக்ஷததிறகாகவன்றோ செய்கிறான். இப்படியிருநது ஒருவன் கர்மஙகளையேசெயதாலும, ஞானயோகமிலலாமலே ஸம்ஸாரத்தைப் போக்குகிறான் [22]

கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஜ்ஞாநாவஸ்திதசேதஸ: ।
யஜ்ஞாயாசரத: கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே ॥ ॥௨௩॥

ஆத்மவிஷயஜ்ஞாநாவஸ்திதமநஸ்த்வேந நிவ்ருத்ததிதரஸங்கஸ்ய தத ஏவ நிகிலபரிக்ரஹவிநிர்முக்தஸ்ய உக்தலக்ஷண யஜ்ஞாதிகர்மநிர்வ்ருத்தயே வர்த்தமாநஸ்ய புருஷஸ்ய பந்தஹேதுபூதம் ப்ராசீநம் கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே- நிஶ்ஶேஷம் க்ஷீயதே ॥ ॥௨௩॥

ஆத்மாவை உள்ளபடி அறிவதிலேயே மனது செல்வதால், வேறுவஸ்துக்களைப்பற்றின ஆசை தன்னடையே போய்விடுகிறது. அதினாலேயே இவனைச்சேர்ந்த எல்லா வஸ்துக்களும் இவனைவிட்டு விடுகின்றன. அதாவது எல்லா வஸ்துக்களுடன் இவன் இருந்தாலும், அவைகளிடத்தில் இவனுக்குப் பிடிமானமில்லை. யக்ஞம் முதலான கர்மங்களைச் செய்வதற்காக அவன் வேலைகளைச் செய்தாலும், அவனுக்குத் தொந்திரவு செய்யக் கூடிய, நெடு நாளாய் வந்த எல்லாக்கர்மங்களும் தானே போய் விடுகின்றன 1 [23]

ஏவம் — ப்ரக்ருதிவியுக்தாத்மஸ்வரூபாநுஸந்தாநயுக்ததயா கர்மணோ ஜ்ஞாநாகாரத்வம் உக்தம் । இதாநீம் ஸர்வஸ்ய ஸபரிகரஸ்ய கர்மணோ பரப்ரஹ்மாத்மகத்வாநுஸந்தாநயுக்ததயா ஜ்ஞாநாகாரத்வம் ஆஹ —

ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்மஹவிர்ப்ரஹ்மாக்நௌ ப்ரஹ்மணா ஹுதம் ।
ப்ரஹ்மைவ தேந கந்தவ்யம் ப்ரஹ்மகர்மஸமாதிநா ॥ ॥௨௪॥

ப்ரஹ்மார்ப்பணமிதி ஹவிர்விஶேஷணம், அர்ப்யதே அநேந இதி அர்ப்பணம் ஸ்ருகாதி, தச்ச ப்ரஹ்மகார்யத்வாத் ப்ரஹ்ம । ப்ரஹ்ம

1 ஆத்மாவைப்பார்க்கவேணுமென்று கர்மயோகம்பண்ணும்போது, மூன்று எண்ணங்கள் இருக்கக்கூடாது. (1) உடம்பே ஆத்மாவென்று எண்ணுவது. (2)உடம்பைச்சேர்ந்தவைகளை தன்னதென்று எண்ணுவது. (3)அவைகளில் ஆசையிருப்பது: முதல் எண்ணத்தினாலே இரண்டாவது எண்ணம் உண்டாகிறது. இரண்டாவது எண்ணத்தினாலே மூன்றாவதான ஆசை உண்டாகிறது. இந்தமூன்றும் ஆத்மாவைப்பார்க்க வேணுமென்று ஆசைப்படுகிறவனுக்கு இருக்கக்கூடாதென்று 2-வது அத்தியாயம்—71—வது சுலோகத்தில் சொல்லப்பட்டது. இங்கே 19-வது சுலோகம்முதல்5 சுலோகங்களில் கர்மயோகம்செய்கிறவனுக்கு இவைகள் இல்லையென்றும், அவன்ஆத்மாவையே பார்த்துக் கொண்டிருக்கிறானென்றும் சொல்லப்படுகிறது. 19-வது சுலோகமும்,23-வது சுலோகமும் கர்மயோகம் செய்தவனுடைய முந்தின கர்மங்கள்எல்லாம் போய்விடுகின்றன, பாக்கிஒன்றுமில்லை என்றும், 20- வது சுலோகம் அவன் ஒரு கர்மமும் செய்யவில்லை, கர்மம் என்கிற வியாஜத்தைவைத்துக் கொண்டு அவன் நினைவையே பழக்குகிறான் என்றும், 21-22- வது சுலோகங்கள் பந்தம்போவதற்கு ஞானயோகம் வேண்டியதில்லை, கர்மயோகமே போதுமென்றும் சொல்லுகின்றன.

यस्य हविषोत्पवनं च ब्रह्मार्पणम् । ब्रह्म हविः ब्रह्मार्पणं हविः स्वयं च ब्रह्मभूतम् । ब्रह्माग्नौ ब्रह्मभूतेऽग्नौ ब्रह्मणा कर्त्रा हुतमिति सर्वं कर्म ब्रह्मात्मकतया ब्रह्ममयमिति यः समाधत्ते, स ब्रह्मकर्मसमाधिः, तेन ब्रह्मकर्मसमाधिना ब्रह्मैव गन्तव्यं ब्रह्मात्मकतया ब्रह्मभूतात्मस्वरूपं गन्तव्यम् । मुमुक्षुणा क्रियमाणं कर्म परब्रह्मात्मकमेवेत्यनुसन्धानयुक्ततया ज्ञानाकारं साक्षादात्मावलोकनसाधनं न ज्ञाननिष्ठाव्यवधानेनेत्यर्थः ॥ ॥२४॥

அவ — உடம்பைக்காட்டிலும் வேருன ஆத்மாவின் ஸ்வ பாவத்தை நினைத்துக் கொண்டு, கர்மங்களைச் செய்யவேண்டு மென்று இது வரையில் சொல்லப்பட்டது, இப்போது எல்லா கருமங்களும், அவைகளைச்சேர்ந்தவைகளும் பகவானுக்கு உரு வமாயிருக்கிறது என்கிற நினைவுடன் கர்மங்களைச் செய்யவேணு மென்று சொல்லப்படுகிறது.

எவன் சாஸ்திரத்தில் சொல்லிய ஹோமங்களைச் செய்யும் போது, ஹோமம் செய்யப்பட்ட நெய் முதலான பதார்த்தங்களை யும், ஹோமம் செய்வதற்கு உதவியான இலை முதலானதையும், அந்த பதார்த்தங்களை யேற்றுக் கொள்ளுகிற அக்நியையும், ஹோ மம் செய்கிற தன்னையும் ப்ரும்மமென்று எண்ணிக்கொண்டு, ஹோமத்தைச் செய்கிருனே, அவன் பிரும்மமான தன் ஸ்வ ரூபத்தை அடைகிருன். அதாவது-மோக்ஷத்தை அடைய வேணு மென்று ஆசைப்பட்டவன் செய்யும் கர்மமானது பரப்பிரும்மமான பகவானுடைய உருவமென்று [1] எண்ணிச் செய்யப் படுவதால்

---

1 நம்முடைய உடம்புகளில் ஜீவன்களான நாம் இருப்பதுபோல, பக வான்உலகத்தில் எல்லாவஸ்துக்களிலும் விட்டுப்பிரியாமல் ஆத்மாவாக இ ருக்கிருன்.அவன் ஹோமம்செய்யப்பட்ட நெய்யிலும்,ஹோமம் செய்வத ற்குஸாதனமான இலையிலும்,அக்நியிலும்,ஹோமம்செய்கிறவனிடத்திலும் இருக்கிருன். அவைகளெல்லாம் அவனுடைய உடம்புகள். இப்படியே உலகத்திலுள்ள எல்லாவஸ்துக்களும் பகவானுடைய உடம்புகள். இப்படி

அந்தக்கருமத்தில் அறிவு இருக்கிறது அந்தக கர்மத்திஞலேயே ஞானயோகமில்லாமலேயே நேராக ஆதமாவைப்பார்க்கிருன்.[24]

அவ.—ஸவம் கர்மணோ ஜ்ஞாநாகாரதாம் ப்ரதிபாத்ய, கர்மயோகபேதாந்—

தைவமேவாபரே யஜ்ஞம் யோகிந: பர்யுபாஸதே ।
ப்ரஹ்மாக்நாவபரே யஜ்ஞம் யஜ்ஞேநைவோபஜுஹ்வதி ॥ ௨௫ ॥

தைவம்-தேவார்சநரூபம்-யஜ்ஞமேவாபரே கர்மயோகிந: பர்யுபாஸதே-ஸேவந்தே । தத்ரைவ நிஷ்டாம் குர்வந்தீத்யர்த்த: । அபரே ப்ரஹ்மாக்நௌ யஜ்ஞம் யஜ்ஞேநைவோபஜுஹ்வதி । அத்ர யஜ்ஞசப்தோ ஹவிஸ்ஸ்ருகாதி யஜ்ஞஸாதநே வர்த்ததே । ப்ரஹ்மார்பணம் ப்ரஹ்ம ஹவிரி'தி ந்யாயேந யாகஹோமயோர் நிஷ்டாம் குர்வந்தி ॥ ௨௫ ॥

அவ— மோக்ஷத்திற்காகச் செய்யும் கர்மங்கள் ஆத்மாவின் அறிவுடன் கூடியிருக்கிறதென்று சொல்லி, கர்ம யோகத்தினுடைய பிரிவுகளைச் சொல்லுகிருர்—

கர்மயோகம் பண்ணுகிறவர்களில் சிலர், பகவானுக்குப்பூஜை செய்கிறது எனகிற யக்ஞத்தை கர்மயோகமாகச் செய்கிருர்கள். வேறு சிலர் யாகத்தையும், ஹோமத்தையும் 24-வது சுலோகத்தில் சொன்னபடி செய்கிருர்கள். 1 [25]

---

யே பகவான எல்லாவஸ்துககளில் இருப்பதாகவும அவைகள அவனுககு உடமபுகள்என்றும, அவைகளுககு அவன் ஆதமாவெனறும வேதமசொலலுகிறது. உடம்பையும ஆத்மாவையும ஒனருகசசொலவது லோகததிலும வேதததிலும வழக்கம. ஆகையால் வஸதுக்களே பகவான் எனறு சொல்லுகிற இடஙகளுக்கு அந்தவஸ்துககள பகவானுடைய உடம்பென்றே பொருள்கொள்ளவேணும.

1 சாஸ்திரததில் பிராமணன முதலான ஜாதிகளுக்கும, பிருமமசாரி முதலான ஆச்ரமங்களுக்கும தகுநதபடி அநேக காமங்கள் சொல்லபபடுகின்றன. அவைகளில் ஒரு காமததைக் கர்மயோகம் செயகிறவன ஆத்மாவைப் பார்ப்பதறகு நேரான ஸாதனமாகச் செய்கிருன். ஆதமாவைப் பார்க்கிறவரையில் அதை ஒரு நாளும் விடாமல் செய்து கொண்டு

ஶ்ரோத்ராதீநீந்த்ரியாண்யந்யே ஸம்யமாக்நிஷு ஜுஹ்வதி ।
ஶப்தாதீந்விஷயாநந்ய இந்த்ரியாக்நிஷு ஜுஹ்வதி ॥ ॥௨௬॥

அந்யே ஶ்ரோத்ராதீநாமிந்த்ரியாணாம் ஸம்யமேந வ்யவஸ்தாபநே । அந்யே யோகிநஃ இந்த்ரியாணாம் ஶப்தாதிவிஷயப்ரவணதாநிவாரணே வ்யவஸ்தந்தே ॥ ॥௨௬॥

வேறு சிலர் காது முதலான இந்திரியங்களை, விஷயங்கள் கிட்ட இருந்தபோதிலும், அவைகளிடத்தில் போகாமல் 1 அடக்குவதாகிய கர்மயோகத்தைச் செய்கிறார்கள். இன்னும் சிலர் சப்தம் முதலான விஷயங்களில் இந்திரியங்கள் போகாமலிருப்பதற்கு, அவைகள் இல்லாத விடத்தில் இருப்பதாகிய கர்மயோகத்தைச் செய்கிறார்கள். [ 26 ]

---

வருகிறான் மற்ற கர்மங்களை அதற்கு அங்கமாகச் செய்கிறான். அதாவது—அந்தக் கர்மத்தினாலே ஆத்மாவைப் பார்ப்பதற்கு அவைகள் உதவி செய்கின்றன. அதாவது அவைகள் பகவானுடைய பிரீதிக்கு என்று செய்யப்படுகிறபடியினாலே, பகவான் ஸந்தோஷப்பட்டு ஒவ்வொருநாளும் உடம்பிலுண்டாகும் ரஜஸ் தமஸ என்கிற குணங்களைக் குறைத்து, ஸத்வம் என்கிற குணத்தை அதிகப்படுத்தி, கர்மயோகத்தை வளர்க்கிறான். இவ்விதமாக அந்தக் கர்மங்கள் மோக்ஷத்திற்கு நேரே ஸாதநமான காமத்திற்கு உதவி செய்கின்றன. ஆகையாலே அவைகளை அதற்கு அங்கமென்று சொல்லுகிறது. இந்த அர்த்தத்தை இந்த அத்தியாயம் 32-வது சுலோகத்தில் சொல்லப்போகிறது. ஆத்மாவைப் பார்ப்பதற்கு நேராக ஸாதனமான காமங்களின் பிரிவுகள் இது முதல் 31-வது சுலோகம் வரையில் சொல்லப்படுகின்றன. அவரவர்கள் தங்களுடைய சக்திக்கும் ஆசைக்கும் தகுந்தபடி ஒவ்வொன்றைக் கர்மயோகமாக வைத்துக் கொள்ளுகிறார்கள். இவ்விடத்தில் கர்மயோகத்தின் பிரிவுகளெல்லாம் 'யஜ்ஞம்' என்றும் ஹோமம் என்றும் சொல்லப்படுகின்றன. யஜ்ஞம், ஹோமம் என்பது ஒரு தேவதைக்கு பிரீதி உண்டாவதற்காக அக்நியில் ஒரு திரவியத்தை ஹோமம் செய்வது. ஆகையால யஜ்ஞம் ஹோமம் என்று சொல்லும்போது அக்நியையும் சொல்ல வேண்டும் அதனால் ஒவ்வொன்றை ஒவ்வொன்றுக்கு அக்நியாகச் சொல்லுகிறார்.

1 இந்திரியங்களை அடக்குவதென்பது பாபத்தை உண்டாக்கும் விஷயங்களில் இந்திரியங்களை அடியோடு போகாமல் செய்வதும், பாபமில்லாத விஷயங்களில் அதிக ஆவலுடன் செலுத்தாமல் இருப்பதும்,

ஸர்வாணீந்த்ரியகர்மாணி ப்ராணகர்மாணி சாபரே |
ஆத்மஸம்யமயோகாக்நௌ ஜுஹ்வதி ஜ்ஞாநதீபிதே || ||௨௭||

அபரே ஜ்ஞாநதீபிதே மநஸ்ஸம்யமயோகாக்நௌ ஸர்வாணி இந்த்ரியகர்மாணி ப்ராணகர்மாணி ச ஜுஹ்வதி | மநஸ இந்த்ரியப்ராணகர்மப்ரவணதாநிவாரணே ப்ரயதந்தே ||

இன்னும் சிலர் வலிமையுள்ள மனதை இந்திரியங்களுடையவும், பிராணன்களுடையவும் எல்லா வேலைகளிலும் படியாமல் இருக்கும்படி செய்வதாகிய கர்மயோகத்தைச் செய்கிறார்கள். கர்மங்களைச் செய்யும்போது ஆத்மாவை உள்ளபடி நினைப்பதினாலே மனதிற்கு வலிமை ஏற்படுகிறது. 1 [ 27 ]

த்ரவ்யயஜ்ஞாஸ்தபோயஜ்ஞா யோகயஜ்ஞாஸ்ததாபரே |
ஸ்வாத்யாயஜ்ஞாநயஜ்ஞாஸ்ச யதய: ஸம்ஸிதவ்ரதா: || ||௨௮||

கேசித் கர்மயோகிநோ த்ரவ்யயஜ்ஞா: ந்யாயதோ த்ரவ்யாணி உபாதாய தேவதார்சநே ப்ரயதந்தே | கேசிச் ச தாநேஷு | கேசிச் ச யாகேஷு | கேசிச் ச ஹோமேஷு | ஸர்வே ஏதே த்ரவ்யயஜ்ஞா: | கேசித் தபோயஜ்ஞா: - க்ருச்ச்ரசாந்த்ராயணோபவாஸாதிஷு நிஷ்டாம் குர்வந்தி | யோகயஜ்ஞாஸ்சாபரே - புண்யதீர்த்தபுண்யஸ்தாநப்ராப்திஷு நிஷ்டாம் குர்வந்தி | அத்ர யோகஸப்த: கர்மநிஷ்டாப்ரகரணாத் தத்விஷய: | கேசித் ஸ்வாத்யாயாப்யாஸபரா: | கேசித்

---

1. இந்த இரண்டு சுலோகங்களில் மூன்று கர்மயோகங்கள் சொல்லப் படுகின்றன. முதலில் விஷயங்கள் கிட்ட இருந்தால், அவைகளில் இந்திரியங்கள் போகாமல் தடுப்பது. இரண்டாவதில் விஷயங்கள் கிட்ட இருந்தால், அவைகளில் இந்திரியங்கள் போகுமென்று பயந்து தூரத்தில் போய்விடுகிறது. மூன்றாவதில் இந்திரியங்களுடையவும், பிராணன்களுடையவும் வேலைகளில் மனதைப் போகாமல் தடுப்பது. அவைகளில் இரண்டாவதைக் காட்டிலும் முதல் வேலை கஷ்டம். அதைக் காட்டிலும் மூன்றாவது வேலை இன்னும் கஷ்டம். இந்திரியங்களுடைய வேலை-பார்ப்பது முதலியது. பிராணனுடைய வேலை-மூச்சு விடுவது முதலானது.

ஸ்வாத்யாயஜ்ஞாநாப்யாஸபரா: | யதய: யதநஶீலா:, ஸம்ஶி
தவ்ரதா:-த்ருடஸங்கல்பா: || ||உஅ||

வேறு சிலர் திரவிய யக்ஞங்களையும், சிலர் தபஸாகிற யக்ஞத்தையும், சிலர் யோகம் என்கிற யக்ஞத்தையும், சிலர் வேதத்தைச் சொல்வதாகிற யக்ஞத்தையும், சிலர் அதின் அர்த்தத்தை அறிவதாகிற யக்ஞத்தையும், கர்மயோகமாகச் செய்கிறார்கள்.

திரவிய யக்ஞமென்பது சாஸ்திரத்தில் சொல்லியபடி பொருள்களை ஸம்பாதித்து, அதைப் 1 பகவானைப் பூஜை செய்வதிலோ, யாகங்களையும், ஹோமங்களையும் செய்வதிலோ, தானம் செய்வதிலோ செலவழிப்பது. தபஸாகிற யக்ஞமென்பது, சாஸ்திரத்திற்கு ஒத்து ஸரீரத்தைக் குறைத்துக் கொள்ளுகிறவேலை. அவைகள் 2 கிருச்சிரம், சாந்த்ராயணம், உபவாஸம் முதலானவை

1. பகவானைப் பூஜைசெய்வதையும், யாகத்தையும் ஹோமத்தையும் செய்வதையும், கர்மயோகத்தின் பிரிவுகளாக 25-வது சுலோகத்தில் சொல்லப்பட்டது. இங்கே தானமாகிய யக்ஞத்தைச் சொல்லவந்தது. அதைத்தான யக்ஞமென்றுசொல்லாமல், திரவியயக்ஞமென்று சொன்னதின் கருத்து—நியாயமானவழியாய்ப் பொருளைஸம்பாதித்து பகவானுடைய பூஜையையும் யாகங்களையும் ஹோமங்களையும் செய்யவேண்டுமென்றும், இவைகளும் தானயக்ஞமும் - தபோயக்ஞம் முதலானவைகளைக்காட்டிலும் வேறுஎன்றும் காட்டுவதற்காக, திரவிய யக்ஞம் என்கிற பொதுவான சொல்லாலேசொன்னது.

2. கிருச்சிரம் என்பதில் அனேகவிதங்களிருக்கின்றன. அவைகளில் பிராஜாபத்ய- கிருச்சிரம் என்பது பன்னிரண்டு நாளில் முடிக்கப்படுவது. முதல் மூன்று நாள் பகலில் மாத்திரம் சாப்பாடு. அடுத்த மூன்று நாள் ராத்திரியில் மாத்திரம் சாப்பாடு. அடுத்தமூன்றுநாள் யாராவது கொண்டுவந்து கொடுத்ததைச் சாப்பிடுவது. கடைசி மூன்று நாளில் சாப்பாடேயில்லை. சாந்திராயணம் என்பது முப்பது நாளில் முடிக்கக்கூடியது. ஒருவன் ஆஹாரத்தைப் பதினைந்து பாகமாகப் பண்ணிக்கொண்டு, கிருஷ்ணபக்ஷம் பிரதமை முதல் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பாகத்தைக் குறைத்துக் கொண்டுவந்து, அமாவாசையன்று கொஞ்சமுங் சாப்பாடு இல்லாமலிருந்து, சுக்லபக்ஷம் பிரதமை முதல் ஆஹாரத்தைப்பதினைந்துபாகமாகப் பண்ணிக்கொண்டு, ஒவ்வொரு பங்காக ஏற்றிக்கொண்டு வருகிறது. பூர்ணிமையன்று பூர்ணமான ஆஹாரம்.

கள். யோகமென்பது ஸ்ரீரங்கம் முதலான க்ஷேத்திரங்களுக்கும், கங்கை முதலான புண்ணிய தீர்த்தங்களுக்கும் போவது. இவர்கள் எல்லாரும் ஆத்மாவைப் பார்ப்பதற்கு முயற்சி செய்கிறவர்கள். அவர்கள் ஒப்புக்கொண்டவிரதத்தை உறுதியாகச்செய்கிறவர்கள்.

𑌅𑌪𑌾𑌨𑍇 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌽𑌪𑌾𑌨𑌂 𑌤𑌥𑌾𑌽𑌪𑌰𑍇 ।
𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑌗𑌤𑍀 𑌰𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑌪𑌰𑌾𑌯𑌣𑌾𑌃 ॥௨௯॥
𑌅𑌪𑌰𑍇 𑌨𑌿𑌯𑌤𑌾𑌹𑌾𑌰𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌷𑍁 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 ।

𑌅𑌪𑌰𑍇 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑍇𑌷𑍁 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 । 𑌤𑍇 𑌚 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌾𑌃 𑌪𑍂𑌰𑌕𑌰𑍇𑌚𑌕𑌕𑍁𑌮𑍍𑌭𑌕𑌭𑍇𑌦𑍇𑌨 । 𑌅𑌪𑌾𑌨𑍇 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌿𑌤𑌿 𑌪𑍂𑌰𑌕𑌃 । 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌽𑌪𑌾𑌨𑌮𑌿𑌤𑌿 𑌰𑍇𑌚𑌕𑌃 । 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑌗𑌤𑍀 𑌰𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌷𑍁 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑍀𑌤𑌿 𑌕𑍁𑌮𑍍𑌭𑌕𑌃 । 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑌪𑌰𑌾𑌯𑌣𑍇𑌷𑍁 𑌤𑍍𑌰𑌿𑌷𑍍𑌵𑌪𑍍𑌯𑌨𑍁𑌷𑌜𑍍𑌯𑌤𑍇 𑌨𑌿𑌯𑌤𑌾𑌹𑌾𑌰𑌾 𑌇𑌤𑌿 ॥ ॥௨௯½॥

வேறு சிலர்கள் பிராணாயாமத்தைக் கர்மயோகமாகச் செய்கிறார்கள். அவர்களில் மூன்று வகுப்பு இருக்கின்றன. சிலர் மூச்சை விடுகிறார்கள்—சிலர் மூச்சை எத்துகிறார்கள்—சிலர் இரண்டுமில்லாமல் இருக்கிறார்கள்-இந்த மூன்று பெயர்களும் சாப்பாடு விஷயத்தில் கட்டுப்பாடு உள்ளவர்களாக இருக்கிறார்கள். [29½]

𑌸𑌰𑍍𑌵𑍇𑌽𑌪𑍍𑌯𑍇𑌤𑍇 𑌯𑌜𑍍𑌞𑌵𑌿𑌦𑍋 𑌯𑌜𑍍𑌞𑌕𑍍𑌷𑌪𑌿𑌤𑌕𑌲𑍍𑌮𑌷𑌾𑌃 ॥௩௰॥
𑌯𑌜𑍍𑌞𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌮𑍃𑌤𑌭𑍁𑌜𑍋 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍 ॥

𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌯𑌜𑍍𑌞𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌿𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑍇𑌷𑍁 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌭𑍇𑌦𑍇𑌷𑍁 𑌸𑍍𑌵𑌸𑌮𑍀𑌹𑌿𑌤𑍇𑌷𑍁 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌾 𑌏𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑍇 "𑌸𑌹𑌯𑌜𑍍𑌞𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾" 𑌇𑌤𑍍𑌯𑌭𑌿𑌹𑌿𑌤𑌮𑌹𑌾𑌯𑌜𑍍𑌞𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌨𑌿𑌤𑍍𑌯𑌨𑍈𑌮𑌿𑌤𑍍𑌤𑌿𑌕𑌕𑌰𑍍𑌮𑌰𑍂𑌪𑌯𑌜𑍍𑌞𑌵𑌿𑌦𑌃—𑌤𑌨𑍍𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌃 । 𑌤𑌤 𑌏𑌵 𑌕𑍍𑌷𑌪𑌿𑌤𑌕𑌲𑍍𑌮𑌷𑌾𑌃, 𑌯𑌜𑍍𑌞𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌮𑍃𑌤𑍇𑌨 𑌶𑌰𑍀𑌰𑌧𑌾𑌰𑌣𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤 𑌏𑌵 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇 𑌵𑍍𑌯𑌾𑌪𑍃𑌤𑌾𑌃 𑌸𑌨𑌾𑌤𑌨𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 ॥ ॥௩௰½॥

25-வதுசுலோகம் முதல் இதுவரையில் சொல்லப்பட்ட கர்ம

யோகப்பிரிவுகளில் தங்களுக்குத் [1] தகுந்ததைச் செய்கிறவர்கள் 3-வது அத்தியாயம்-10-வது சுலோகத்தில் எல்லாரும் செய்ய வேணுமென்று சொல்லப்பட்ட மகாயக்ஞம் முதலான நித்யம், நைமித்திகம் என்கிற கர்மங்களை அறிந்து, [2] விடாமல் செய்து கொண்டு, அதனாலே பாபங்களைப் போக்கி, யக்ஞத்தில் [3] மிகுதியான ஆஹாரத்தைச் சாப்பிட்டு, சரீரத்தை வளர்த்துக் கொண்டே கர்மயோகத்தைச் செய்து, அழிவில்லாத ஆத்மாவை உள்ளபடி பார்க்கிறார்கள். [ 30½ ]

நாயம் லோகோ(அ)ஸ்த்யயஜ்ஞஸ்ய குதோ(அ)ந்ய: குருஸத்தம ॥

அயஜ்ஞஸ்ய-மஹாயஜ்ஞாதிபூர்வக நித்யநைமித்திக கர்மரஹிதஸ்ய நாயம் லோக:-ந ப்ராக்ருதலோக:, ப்ராக்ருதலோகஸம்பந்தீ தர்மார்த்தகாமாக்ய: புருஷார்த்தோ ந ஸித்யதி। குதோ(அ)ந்யோ மோக்ஷாக்ய: புருஷார்த்த:। பரமபுருஷார்த்ததயா மோக்ஷஸ்ய ப்ரஸ்துதத்வாத் தர்மாதி புருஷார்த்த: 'அயம் லோக' இதி நிர்திஶ்யதே। ஸ ஹி ப்ராக்ருத: ॥ ॥௩௧॥

மஹா யக்ஞம் முதலான நித்யகர்மங்களையும் நைமித்திக கர்மங்களையும் [4] செய்யாதவனுக்கு பிருகிருதி மண்டலத்திலுள்ள தர்மம், அர்த்தம், காமம் (அறம், பொருள், இன்பம்) என்கிற பலன்கள் அகப்படாது, இவைகளே அகப்படாவிட்டால்

1. இங்கே சொன்ன கர்மயோகத்தினுடைய பிரிவுகளுக்கு பலனில் வித்யாஸமில்லாமையினாலே ஒருவன் தனக்கு எது இஷ்டமோ அதைச் செய்யலாம் என்று கருத்து.

2. பிராணாயாமத்தைக் கர்மயோகமாகச் செய்கிறவர்களும் யக்ஞங்களைச் செய்ய வேண்டியது என்று இதனால் காட்டப்பட்டது.

3. 3-வது அத்தியாயம் 13-வது சுலோகத்தை நினைத்து சொல்லப்பட்டது.

4. நான் கர்மயோகம் செய்கிறேனென்கிற எண்ணத்தினாலே பொதுவான தர்மங்களான நித்ய கர்மங்களையும், நைமித்திக கர்மங்களையும் விட்டவனுக்கு ஒரு பிரயோஜனத்தையும் அடையத் தகுதியில்லை என்று இந்த சுலோகத்தினால் சொல்லப்படுகிறது.

எப்படி அவனுக்கு இவைகளைக் காட்டிலும் வேறான மேலான மோக்ஷமென்பது அகப்படும். [ 31 ]

ஏவம் பஹுவிதா யஜ்ஞா விததா ப்ரஹ்மணோ முகே ।
கர்மஜாந் வித்தி தாந் ஸர்வாந் ஏவம் ஜ்ஞாத்வா விமோக்ஷ்யஸே ॥

ஏவம் ஹி பஹுவிதா: கர்மயோகா: ப்ரஹ்மணோ முகே விததா:- ஆத்மயாதாத்ம்யாவாப்தி ஸாதநதயா ஸ்திதா: । தாந் உக்தலக்ஷணாந் கர்மயோகாந் ஸர்வாந் கர்மஜாந் வித்தி । அஹரஹரநுஷ்டீயமாந நித்யநைமித்திககர்மஜாந் வித்தி । ஏவம் ஜ்ஞாத்வா யதோக்தப்ரகாரேணாநுஷ்டாய விமோக்ஷ்யஸே ॥ ॥௩௨॥

கீழ்ச் சொன்ன எல்லா கர்ம யோகங்களின் பிரிவுகளும் ஆத்மாவை உள்ளபடி பார்ப்பதற்கு ஸாதனமாய் ஏற்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு நாளும், நித்தியகர்மங்களையும், நைமித்திக கர்மங்களையும் விடாமல் செய்வதனால், அவைகள் 1 உண்டாகின்றன. நீ இந்த ஸங்கதியைத் தெரிந்து கொண்டு, சொன்னபடி செய்து, ஸம்ஸாரத்தைப் போக்கு [ 32 ]

அத—அந்தர்கதஜ்ஞாநதயா கர்மணோ ஜ்ஞாநாகாரத்வமுக்தம், தத்ராந்தர்கதஜ்ஞாநே கர்மணி ஜ்ஞாநாம்ஸஸ்யைவ ப்ராதாந்யமாஹ —

ஶ்ரேயாந் த்ரவ்யமயாத் யஜ்ஞாஜ் ஜ்ஞாநயஜ்ஞ: பரந்தப ।
ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞாநே பரிஸமாப்யதே ॥௩௩॥

உபயாகாரே கர்மணி த்ரவ்யமயாம்ஸாத் ஜ்ஞாநமயோம்ஸ: ஶ்ரேயாந் । ஸர்வஸ்ய கர்மணஸ்தத்ஸாதநஸ்ய ப்ராப்யஸ்ய

1. இதனாலே—கீழ்ச்சொன்ன கர்மயோகத்தின் பிரிவுகள் முக்கியமானது என்றும், நித்தியகர்மங்களும், நைமித்திககர்மங்களும் அதற்காகச் செய்ய வேண்டியதென்றும்—காட்டப்பட்டது. அவைகள் ஒவ்வொருநாளும் உண்டாகும் பாபத்தைப்போக்கி, ஸத்வ குணத்தை வளர்த்து, கர்மயோகம் வளரும்படி செய்கின்றன. அவைகளை ஆத்மாவைப் பார்க்கிறவரையில் செய்ய வேண்டியது.

உபாதேயஸ்ய ஜ்ஞாநே பரிகரோத்தேஷ:, தஸ்யைவ ஸர்வை: ஸாதநை: ப்ராப்யபூதம் ஜ்ஞாநம் கர்மாந்தர்கதத்வேநா ப்யஸ்யதே | தஸ்யைவ ஸாத்யஸ்யாநம் க்ரமேண ப்ராப்ய ரூபம் ப்ரதிபத்யதே || ||௩௩||

*அவ — கீழே சில நினைவுகளுடன் கர்மங்களைச் செய்யவேண்டும் என்று சொல்லப்பட்டது. அவைகளில் நினைவுதான் முக்கியமென்று சொல்லுகிறார்—*

*நினைவும், வேலையும் கலந்த கர்மத்தில் திரவியத்தைக் கொடுப்பது முதலான வேலைபாகத்தைக் காட்டிலும், நினைவு பாகம் தான் 1 உயர்ந்தது ஏனென்றால், எல்லாக் கர்மங்களையும் அவைகளினுடைய எல்லா அங்கங்களையும் செய்வது ஆத்மாவை உள்ளபடி பார்ப்பதற்காகத்தான். நாளைக்கு வரவேண்டிய ஆத்மாவின் அறிவை வேலை செய்யும் போதெல்லாம் 2 பழக்குகிறோம். இந்தப் பழக்கம் முற்றினால், நாம் அடைய வேண்டிய ஆத்மாவின் பார்வை வருகிறது.* [ 33 ]

தத்3வித்3தி4 ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா |
உபதே3க்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ்தத்த்வத3ர்சிந: || ||௩௪||

---

1. *நினைவுதான் உயர்ந்தது என்பதற்கு உதாரணம்—ஒரு பணக்காரன் வந்தவர்களுக்கு மரியாதையும் பிரீதியும் இல்லாமல், கணக்கில்லாத பதார்த்தங்களைச் சமையல் பண்ணி சாப்பாடு போடுகிறான். ஏழையான வேறொருவன் கையில் காசு அதிகமாக இல்லாததினால், ஏதோ அகப்பட்டதைக்கொண்டு 'ஸரியாய் ஒன்றும் செய்வதற்கு இல்லையே' என்று வருத்தப்பட்டு, வந்தவர்களுக்கு பயத்துடனும், பிரீதியுடனும் சாப்பாடு போடுகிறான், ஏழைக்கு ஏராளமான பலன் கிடைக்கிறது. இதில் எத்தனையில் ஒரு பங்கு பணக்காரனுக்கு வரும்? பகவான் 'எனக்குப் பணம் பெரிதல்ல. பிரீதிதான் பெரிது' என்று சொல்லுகிறான்.*

2. *நமக்கு வேண்டியது ஆத்மாவின் பார்வை. அதற்காக வேலை செய்கிறோம். வேலையை மாத்திரம் செய்யவில்லை, ஆத்மாவை நினைத்துக்கொண்டே அதைச் செய்கிறோம். நமக்கு வேண்டிய பார்வையை இப்படிப் பழக்கிக்கொள்ளுகிறோம். நமக்கு வேண்டியதும் அறிவு. பழக்குகிறதும் அறிவு. ஆகையால் அறிவுதான் முக்கியம்,*

तदात्मविषयं ज्ञानं "अविनाशि तु तद्विद्धि" इत्यारभ्य "एषा तेऽभिहिता" इत्यन्तेन मयोपदिष्टम् । त[illegible] विपाककाले [illegible] प्रणिपातपरिप्रश्नसेवादिभिर्विशदाकारं ज्ञानिभ्यो विद्धि । साक्षात्कृतात्मस्वरूपास्तु ज्ञानिनः प्रणिपातादिभिः सेविताः ज्ञानबुभुत्सया परितः पृष्टास्तव आशयमालक्ष्य ज्ञानमुपदेक्ष्यन्ति ॥ ॥३४॥

2-வது அத்தியாயம் 17-வது சுலோகம் முதல் 39-வது சுலோகம்வரையில் ஆத்மாவின் உண்மையைப்பற்றி நான் சொன்னேனே, அதை நினைத்துக்கொண்டே, நான் சொன்னபடி கர்மங்களைச் செய்துகொண்டுவா. அப்படிச்செய்து கொண்டு வரும்போது, உனக்குக்கொஞ்சம் தெளிவும், கொஞ்சம் ஸந்தேஹமும் வரும். ஸந்தேஹப்பட்ட ஸங்கதியை ஆத்மாவை உள்ளபடி அறிந்து பார்த்த பெரியோர்களிடம் கேள். கேட்கும்போது அவர் பெருமையை அறிந்து மனதாலும், வாக்காலும், உடம்பாலும் வணங்கு. ஸந்தேஹப்பட்ட ஸங்கதியை மாத்திரம் குறிப்பிட்டுக் 1 கண்டிப்பாய்க் கேட்காமல், வணக்கத்துடன் கேள். உன்னுடைய வணக்கம் முதலானவைகளால் ஸந்தோஷப்பட்டு, அவர்கள் உண்மை

---

1. உதாரணம்-ஒரு ஸ்திரீ கடுகு கடன் வாங்க பக்கத்து வீட்டிற்குப்போய், அந்த வீட்டுக்காரியின் பெண்ணைப்பற்றி 'ரெங்கநாயகி ஸௌக்கியமாயிருக்கிறாளா? கடிதாசு வருகிறதா? வெறுமனே தானே இருக்கிறாள். ரொம்பநாளாச்சுதே. ஏன் அழைத்துவரவில்லை' என்று சொல்லி, ஸந்தோஷத்தை உண்டுபண்ணி, கடைசியில் ஆத்துக்காரர்கடைக்குப்போயிருக்கிறார். வந்த உடன் கொடுக்கிறேன். கடனாக ஒரு கரண்டி முட்டை கடுகு கொடு' என்று கேட்கிறாள். வீட்டுக்காரி இதைக் கடனாகக் கொடுக்க வேண்டுமோ என்று சொல்லி, ஒரு பிடியை அள்ளிப் போடுகிறாள். இப்படியே லோகத்தில் யாரும் பிச்சைக்குப் போகும்போது, அவர்களை ஸந்தோஷப்படுத்தி, தங்களுக்கு ஆகவேண்டியதைக் கேட்கிறார்கள். அதுபோல், பெரியோர்களை வணங்கி ஸந்தேஹம் உண்டான இடத்திற்குக் கீழேயே ஒரு வார்த்தையைப்பிரஸ்தாபித்துக் கேட்கவேணும். கச்சேரியில் ஸாக்ஷிக்காரனை வக்கீல் கேட்பதுபோல் கேட்கக்கூடாது.

யான ஸங்கதியை உனக்குச் சொல்லுவார்கள். அப்படி அப்போதப்போது முறைப்படி பெரியோர்களைக் கேட்டுத்தெரிந்துகொள்.

அத — ஆத்மயாதாத்ம்யவிஷயஸ்ய ஜ்ஞாநஸ்ய ஸாக்ஷாத்காரரூபஸ்ய லக்ஷணமாஹ —

யஜ்ஜ்ஞாத்வா ந புநர்மோஹமேவம் யாஸ்யஸி பாண்டவ ।
யேந பூதாந்யஶேஷேண த்ரக்ஷ்யஸ்யாத்மந்யதோ மயி ॥

யச் ஜ்ஞாநம் ஜ்ஞாத்வா புநரேவம் தேஹாத்மாபிமாநரூபம் தந்மூலம் மமதாத்மகம் ச மோஹம் ந யாஸ்யஸி, யேந ச தேவமநுஷ்யாத்யாகாரேண அநுஸந்தீயமாநாநி ஸர்வாணி பூதாநி ஸ்வாத்மந்யேவ த்ரக்ஷ்யஸி । யதஸ்தவாந்யேஷாம் ச பூதாநாம் ப்ரக்ருதிவியுக்தாநாம் ஜ்ஞாநைகாகாரதயா ஸாம்யம் । ப்ரக்ருதிஸம்ஸர்கதோஷவிநிர்முக்தம் ஆத்மவஸ்து ஸர்வம் ஸமமிதி வக்ஷ்யதே "நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்மாத் ப்ரஹ்மணி தே ஸ்திதா:" இதி। அதோ மயி ஸர்வாணி பூதாந்யஶேஷேண த்ரக்ஷ்யஸி — மத்ஸ்வரூபஸாம்யாத் பரிஶுத்தஸ்ய ஸர்வஸ்யாத்மவஸ்துந: । "இதம் ஜ்ஞாநமுபாஶ்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா:" இதி ஹி வக்ஷ்யதே । ததா "ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதீ"த்யேவமாதிஷு நாமரூபவிநிர்முக்தஸ்யாத்மவஸ்துந: பரஸ்வரூபஸாம்யமவகம்யதே । அத: ப்ரக்ருதிவிநிர்முக்தம் ஸர்வமாத்மவஸ்து பரஸ்பரம் ஸமம் ஸர்வேஶ்வரேண ச ஸமம் ॥ ॥௩௫॥

அவ— ஆத்மாவை உள்ளபடி பார்க்கும்போது, இன்னமாதிரி இருக்குமென்று சொல்லுகிறார்—

ஆத்மாவை உள்ளபடி நீ பார்த்தால், 'நான் ராஜா, நான் பணக்காரன், அவன் பிச்சைக்காரன், துரியோதனன் முட்டாள், நான் கெட்டிக்காரன், இது என்னுடையது' என்கிற இந்தமாதிரி தப்பெண்ணங்கள் உண்டாகாது. ஆத்மா உடம்பு அன்று என்று தீர்ந்துவிட்டபடியால், எல்லா ஆத்மாக்களும், ஞான ஸ்வரூபமாய்

ஒரே மாதிரியாயிருப்பதால், எல்லா ஆத்மாக்களும் உன்னிடத்தில் இருப்பதாகத்தோன்றும் பிறகு எல்லா ஆத்மாக்களும் என்னிடத்தில் இருப்பதாக உனக்குத் தோன்றும் அதாவது-எல்லா ஆத்மாக்களும் 1 ஞானஸ்வரூபமாகையால், அவர்கள் ஒரே மாதிரி யென்றும்,எல்லாக கருமங்களும் போனபோது அவர்கள் 2 பரிசுத்தர்களாய் என்னைப்போல் இருப்பார்கள் என்றும் உனக்குத் தோன்றும் ஜீவன்கள் முக்தர்களாகும்போது பகவானைப்போலிருப்பார்கள் என்று 14-வது அத்தியாயம் 2-வது சுலோகத்தில்சொல்லப்படும். முக்தியை அடையும்போது அவர்களுக்கு இப்போது இருக்கிற உருவங்களும், பெயர்களும் போய்விடுமாகையால் எல்லா ஆத்மாக்களும் ஒரே மாதிரியாய் இருப்பார்கள். கர்மங்கள் போய்விட்டபடியால், அவர்கள் பகவானைப்போல ஆய்விடுவார்கள். [35]

---

1. உடம்பு வேறு, ஆத்மா வேறு என்று நாம் அறியாமல், உடம்போடு சேர்ந்திருப்பதால், இவன் தேவன், இவன் மனிதன் என்று நினைக்கிறோம். நாம் கீழ்ச்சொல்லியபடி ஆத்மாவை உள்ளபடி பார்த்தால், நம்மை ஞான ஸ்வரூபமென்று அறிவோம். அப்போது ஒரு பானைக்கு ஒரு சோறு பதம் என்பதுபோல, நம்மை அறிந்தபோதே மற்ற ஆத்மாக்களும் இப்படியே ஞானஸ்வரூபமென்று அறிந்து, எல்லா ஆத்மாக்களும் ஒரே மாதிரி என்று அறிந்து கொள்வோம் இப்போது உலகத்தில் படித்தவர்களோ, படிக்காதவர்களோ யாருமே உடம்புவேறு ஆத்மா வேறு என்று சொல்லுகிறார்களே யொழிய பெரும்பாலும் அறியவில்லை என்றே சொல்லலாம் படித்தவர்கள் புஸ்தகங்களுக்கு மனதில் படாமலே விரிவாய ஆத்தம் சொல்லுகிறார்கள் மனதில் படவில்லை என்பதும் தெரியவில்லை. மனதில் பட்டாலும், படவில்லையென்று தெரிந்தாலும் இப்போது வருகிற கோபம் வராது.

2. பகவான் எப்படி அமலமாய (தோஷமில்லாமல்) இருக்கிறானோ, அப்படியே ஜீவன்கள்—முக்தர்களாகிறபோது,அவர்களுடைய எல்லாக் கர்மங்களும் அடியோடு போனபடியால்—தோஷமில்லாதவர்களாக ஆகிறார்கள். இதை அறிந்தவன் தன்னையும் மற்ற ஜீவன்களையும் பகவானைப்போல் தோஷமில்லாமலிருப்பதாகப் பார்க்கிறான் ஜீவன்கள் எல்லாரும் ஒரேமாதிரி என்பதற்கு இரண்டு காரணம்.--(1) உடம்பைக் காட்டிலும் வேறாய் ஞானஸ்வரூபமாய இருப்பது. (2) கர்மங்கள் போனபோது பகவானைப்போல அமலமாயிருப்பது. ஜீவன்கள் எல்லாரும் ஞானஸ்வரூபமாயிருக்கிறார்கள் என்றும், கர்மங்கள் அடியோடு போனா

அபி சேதஸி பாபேப்ய: ஸர்வேப்ய: பாபக்ருத்தம: |
ஸர்வம் ஜ்ஞானப்லவேனைவ வ்ருஜினம் ஸந்தரிஷ்யஸி ||௩௬||

யத்யபி ஸர்வேப்ய: பாபேப்ய: பாபக்ருத்தமோஸி ஸர்வம் பூர்வார்ஜிதம் வ்ருஜினார்ணவம் ஸோத்ய ஆத்மவிஷயஜ்ஞானப்லவேனைவ ஸந்தரிஷ்யஸி || ||௩௬||

யதைதாம்ஸி ஸமித்தோக்னிர் பஸ்மஸாத் குருதேர்ஜுன |
ஜ்ஞானாக்னி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா ||

ஸம்யக் ப்ரவ்ருத்தோக்னிரிந்தனஸஞ்சயமிவ ஆத்மயாதாத்ம்யஜ்ஞானரூபோக்னிர்ஜீவாத்மகதமனாதிகாலப்ரவ்ருத்தானந்தகர்மஸஞ்சயம் பஸ்மீகரோதி || ||௩௭||

அவ— இந்த வார்த்தையைக் கேட்டவுடன் அர்ஜுனனுக்கு மஹா பாபியான நான் இப்படி ஆத்மாவை எப்போது பார்க்கப் போகிறேன் என்று 1 திகில் உண்டாகிவிட்டது. அதை பகவான் தீர்க்கிறார்.

நீ எல்லா பாபிகளைக்காட்டிலும் மஹாபாபியாயிருந்தாலும், உன்னாலே ஸம்பாதிக்கப்பட்ட அளவில்லாத பாபமாகிற ஸமுத்திரத்தை ஆத்மாவின் உண்மையைப் பார்ப்பதாகிய தெப்பத்தினால் தாண்டிவிடுவாய். வளர்ந்த நெருப்பு அளவில்லாத விறகுகளைசாம் பலாக்குவதுபோல். ஆத்மாவின் உண்மையைப் பார்ப்பது கணக்

---

போது பகவானைப்போல் ஆகிறார்கள் என்றும் இரண்டு ஸங்கதிகள் அறியவேணும். ஜீவன்கள் எல்லாரும் ஞானஸ்வரூபமாயிருப்பதாலே எப்படிஒரேமாதிரியோ, அப்படியே பகவானைப்போலிருப்பதாலும் ஒரேமாதிரி. இரண்டு பழமும் ருசியால் எப்படி ஒரேமாதிரியோ, அப்படியே ஒரேமரத்தில் உண்டானதாலும் ஒரேமாதிரி. அதுபோல.

1. இந்த ஸங்கதியைக் கேட்டவுடன்அர்ஜுனனுக்கு ‘நான் பாபி’ என்கிற திகில் உண்டானதே.அதுமாதிரி நமக்கு உண்டாகிறதோ?உண்டாகவில்லையே என்றாவது தோன்றுகிறதோ? கீதையை வாசிக்கிறதற்க்காகத்தான் நமக்குத் தெய்வம் தயவுபண்ணவேணும்.

இல்லாத நெடுநாளாய் வந்த எல்லா 1. பாபங்களையும் போக்கி விடும். 2. (36) (37)

𑌨 𑌹𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌸𑌦𑍃𑌶𑌂 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌮𑌿𑌹 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ।
𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌯𑌂 𑌯𑍋𑌗𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌃 𑌕𑌾𑌲𑍇𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 ॥ ||௩௮||

𑌯𑌸𑍍𑌮𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌸𑌦𑍃𑌶𑌂 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂 𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌕𑌰𑌮𑌿𑌹 𑌜𑌗𑌤𑌿 𑌵𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍍𑌤𑌰𑌂 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑌾𑌪𑌂 𑌨𑌾𑌶𑌯𑌤𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌤𑌤𑍍-𑌤𑌥𑌾𑌵𑌿𑌧𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌯𑌥𑍋𑌪𑌦𑍇𑌶𑌮𑌹𑌰𑌹𑌰𑌨𑍁𑌷𑍍𑌠𑍀𑌯𑌮𑌾𑌨𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌕𑌾𑌰𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌃 𑌕𑌾𑌲𑍇𑌨 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌵 𑌲𑌭𑌤𑍇 ॥ ||௩௮||

ஆத்மாவை உள்ளபடி பார்ப்பதைப்போல் பாபத்தைப் போக்குகிற வஸ்து உலகத்தில் வேறு கிடையாது. ஆகையினால் அது எல்லா பாபங்களையும் போக்கிவிடும். நான் 3. கீழ்ச் சொன்னபடி

---

1. பெருமாளிடத்தில் போவதுதான் நமக்குப் பிரயோஜனம். அதற்குப் புண்ணியமும் இடஞ்சல். பாபமும் இடஞ்சல். புண்ணியம் பண்ணினவன் ஸ்வர்க்கத்திற்குப்போகிறான். பாபம்பண்ணினவன் நரகத்திற்குப் போகிறான். இரண்டுபேர்களாலும் பெருமாளிடத்தில் போகமுடியாது. உதாரணம்— ஒருவன் இரண்டுபேர்களை ஏன் கோவிலுக்குப் போகவில்லை யென்று கேட்டான். அவர்களில் ஒருவன் 'நான் மிகவும் ஏழை. வயிற்றுப்பாடு படுவதே எனக்கு வேலையாயிருக்கிறது. கோவிலுக்குப்போகக் காலமில்லை' என்று சொன்னான். மற்றொருவன் 'எனக்கு லக்ஷரூபாய் கொடுக்கல் வாங்கல் இருக்கிறது. அதினால் எனக்கு ஒழியவில்லை' என்று சொன்னான். பணமும், பணமில்லாமையும் கோவிலுக்குப்போகிற விஷயத்தில் ஒரேமாதிரி இடஞ்சல்கள். அதுபோல. பெருமாள் தன்னைத்தவிர வேறு பிரயோஜனத்தில் ஆசையுள்ளவனை அழைத்துக்கொள்வதில்லை.

2. முதல் சுலோகத்தில் பாபத்தை ஸமுத்திரமாகவும் ஞானத்தைத் தெப்பமாகவும், 2-வது சுலோகத்தில் பாபத்தை விறகாகவும், ஞானத்தை நெருப்பாகவும் சொல்லியிருக்கிறது. ஸமுத்திரத்தைத் தாண்டினாலும் ஸமுத்திரம் உருப்படியிருக்கிறது. நெருப்பினால் விறகு சாம்பலாய்விட்டால், உருப்படியே இல்லை.

3. அதாவது 'சாஸ்திரத்தினால் அறிந்து, நித்யகர்மங்களுடனும் நைமித்திக கருமங்களுடனும் சேர்ந்து, குறைவில்லாமல், அந்தந்த காலங்களிலே பெரியோர்களைக் கேட்டுத் தெளிந்து' என்று பொருள்.

நினைவுடன் விடாமல் ஒருவன் கர்மயோகத்தைச் செய்துவந்தால், இவ்விதமான ஆத்மாவின் அறிவு 1 தன்னடையேவரும். (38)

𑌅𑌵—𑌤𑌮𑍇𑌵 𑌸𑍍𑌪𑌷𑍍𑌟𑌯𑌤𑌿—

𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌾𑌁𑌲𑍍𑌲𑌭𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑌤𑍍𑌪𑌰𑌃 𑌸𑌂𑌯𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 𑌪𑌰𑌾𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑌚𑌿𑌰𑍇𑌣𑌾𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥ ॥௩௯॥

𑌏𑌵𑌮𑍁𑌪𑌦𑍇𑌶𑌾𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 𑌚 𑌉𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍃𑌦𑍍𑌧𑍌 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌾𑌨𑍍, 𑌤𑌤𑍍𑌪𑌰𑌃-𑌤𑌤𑍍𑌰𑍈𑌵 𑌨𑌿𑌯𑌤𑌮𑌨𑌾𑌃 𑌤𑌦𑌿𑌤𑌰𑌵𑌿𑌷𑌯𑌾𑌤𑍍𑌸𑌂𑌯𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃 𑌅𑌚𑌿𑌰𑍇𑌣 𑌕𑌾𑌲𑍇𑌨𑍋𑌕𑍍𑌤𑌲𑌕𑍍𑌷𑌣𑌵𑌿𑌪𑌾𑌕𑌦𑌶𑌾𑌪𑌨𑍍𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌲𑌭𑌤𑍇। 𑌤𑌥𑌾𑌵𑌿𑌧𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 𑌪𑌰𑌾𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑌚𑌿𑌰𑍇𑌣𑌾𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿-𑌪𑌰𑌂 𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿॥

அவ— அதையே தெளிவாகச் சொல்லுகிறார்.

பெரியவர்கள் சொன்னதைக் கேட்டு, ஸங்கதிகளை நன்றாய் அறிந்து, அவர்கள் சொன்ன அறிவே தனக்கு வரவேண்டுமென்று மிகவும் ஆசைப்பட்டு, அதையே எப்போதும் நினைத்து, மற்ற ஸங்கதிகளில் மனதை விடாமல் இருந்தவன் வெகு சீக்கிரத்தில் ஆத்மாவை உள்ளபடி பார்ப்பன். அந்தப் பார்வை வந்தால், எல்லா துக்கங்களும் போய்விடும். உயர்ந்த ஸுகத்தையும் அடைவன். [39]

𑌅𑌜𑍍𑌞𑌶𑍍𑌚𑌾𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌶𑍍𑌚 𑌸𑌂𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿 ।
𑌨𑌾𑌯𑌂 𑌲𑍋𑌕𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌨 𑌪𑌰𑍋 𑌨 𑌸𑍁𑌖𑌂 𑌸𑌂𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥

𑌅𑌜𑍍𑌞𑌃-𑌏𑌵𑌮𑍁𑌪𑌦𑍇𑌶𑌲𑌬𑍍𑌧𑌜𑍍𑌞𑌾𑌨𑌰𑌹𑌿𑌤𑌃 । 𑌉𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍃𑌦𑍍𑌧𑍍𑌯𑍁𑌪𑌾𑌯𑍇 𑌚𑌾𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌃-𑌅𑌤𑍍𑌵𑌰𑌮𑌾𑌣𑌃 । 𑌉𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑍇 𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌸𑌂𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌾-𑌸𑌂𑌶𑌯𑌮𑌨𑌾𑌃 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿-𑌨𑌷𑍍𑌟𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍁𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑍇 𑌆𑌤𑍍𑌮𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌵𑌿𑌷𑌯𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌸𑌂𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍋𑌽𑌯𑌮𑌪𑌿 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑍋 𑌲𑍋𑌕𑍋 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿, 𑌨 𑌚 𑌪

1. கர்மயோகத்தை நினைவுடன் செய்கையால், அந்த நினைவு ஒவ்வொருநாளும் வலுப்படுகிறது. ஆத்மாவை உள்ளபடி பார்ப்பதற்கு விரோதியான பாபமும் போய் விடுகிறது. இந்த இரண்டு காரணங்களினாலே ஆத்மாவின் பார்வை தானே வருகிறது.

ர: யதோக்தகாமோபேதா: புருஷார்த்தா ந ஸித்யந்தி, குதோ மோக்ஷ இத்யர்த்த: | ஸாஸ்த்ரீயகர்மஸித்திரூபத்வாத் ஸர்வபுருஷார்த்தாநாம், ஸாஸ்த்ரீயகர்மஜந்யஸித்தேஸ்ச தேஹாதிரிக்தாத்மநிஸ்சயபூர்வகத்வாத் | அதஸ்ஸுஸூக்ஷ்மோபி ஸுகலேஸோ ந ஸம்பவதி || ||௪0||

இப்படி பெரியோர்களிடத்தில் கேட்டுத் தெரிந்து கொள்ளாதவனும், அப்படித் தெரிந்து கொண்டாலும், அந்த அறிவை வளர்ப்பதற்கு பரபரப்பில்லாதவனும், அவர் சொன்ன ஸங்கதியில் ஸந்தேஹப் படுகிறவனும், கெட்டுப் போய்விடுவார்கள். பெரியோர்கள் சொன்ன விஷயங்களில் ஸந்தேஹமுள்ளவனுக்கு தர்மம், அர்த்தம், காமம், (அறம், பொருள், இன்பம்) இவைகளே கிடையாது. மோக்ஷ பலன் எப்படி வரும்? ஆத்மாவை நம்பினால் சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட வேலைகளை ஒருவன் செய்வன். அதைச் செய்தால் தான் எல்லா பலன்களும் கிடைக்கும். ஆத்மாவைப் பற்றி ஸந்தேஹப்பட்டவனுக்கு ஒருவித ஸுகமும் துளிக்கூடக் கிடைக்காது. [ 40 ]

யோகஸந்ந்யஸ்தகர்மாணம் ஜ்ஞாநஸஞ்சிந்நஸம்ஸயம் |
ஆத்மவந்தம் ந கர்மாணி நிபத்நந்தி தநஞ்ஜய || ||௪௧||

யதோக்தயோகேந ஸந்ந்யஸ்தகர்மாணம் ஜ்ஞாநாகாரதாபந்நகர்மாணம், யதோக்தேந ச ஆத்மஜ்ஞாநேந ஸஞ்சிந்நஸம்ஸயம் ஆத்மவந்தம் மநஸ்விநம் உபதிஷ்டார்த்தே த்ருடதரமநஸம் பந்தஹேதுபூதாநி ப்ராசீநாநி கர்மாணி ந நிபத்நந்தி|| || ௪௧ ||

கீழ்ச் சொன்னபடி நினைவுடன் கர்மங்களைச் செய்பவனையும் ஆத்மாவை உள்ளபடி அறிவதனால், அது விஷயத்தில் ஸந்தேஹமில்லாதவனையும், சொன்ன ஸங்கதிகளில் உறுதியுள்ளவனையும் நெடுநாளாய் வந்த கர்மங்கள் தொந்தரவு பண்ணாது. [ 41 ]

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌭𑍂𑌤𑌂 𑌹𑍃𑌤𑍍𑌸𑍍𑌥𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌸𑌿𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।
𑌛𑌿𑌤𑍍𑌤𑍍𑌵𑍈𑌨𑌂 𑌸𑌂𑌶𑌯𑌂 𑌯𑍋𑌗𑌮𑌾𑌤𑌿𑌷𑍍𑌠𑍋𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠 𑌭𑌾𑌰𑌤 ॥௪௨॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀 𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍂𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌮 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

---

𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯 𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 𑌨𑌮𑌃 ॥

---

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌨𑌾𑌦𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌭𑍂𑌤𑌂 𑌹𑍃𑌤𑍍𑌸𑍍𑌥𑌮𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌷𑌯𑌂 𑌸𑌂𑌶𑌯𑌂 𑌮𑌯𑍋𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑌨𑌾𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌸𑌿𑌨𑌾 𑌛𑌿𑌤𑍍𑌤𑍍𑌵𑌾 𑌮𑌯𑍋𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑌂 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌮𑌾𑌤𑌿𑌷𑍍𑌠 । 𑌤𑌦𑌰𑍍𑌥𑌮𑍁𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠 𑌭𑌾𑌰𑌤𑍇𑌤𑌿 ॥௪௨॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌵𑌿𑌰𑌚𑌿𑌤𑍇 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌭𑌾𑌷𑍍𑌯𑍇 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ।

---

ஆகையால், இதுவரையில் ஆத்மாவைப் பற்றித் தெளிவாக ஒருவரும் சொல்லிக் கொடுக்காத்தினாலே, நெடுநாளாய் இருந்த ஸந்தேஹமாகிற மரத்தை என் உபதேசத்தினால் கிடைத்த அறிவாகிய கோடாலியால் வெட்டி, கர்மயோகத்தைச்செய். அதற்காக, நான் சொன்னபடி உன் கர்மமாகிய சண்டையைச் செய்யக் கிளம்பு.

ஸ்ரீமதே பகவதே பாஷ்யகாராய மஹா தேசிகாய நம:

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பஞ்சமோऽத்⁴யாய: ॥

——:0:——

அவ.—சதுர்தே²ऽத்⁴யாயே கர்மயோக³ஸ்ய ஜ்ஞாநாகாரதாபூர்வகஸ்வரூபபே⁴தோ³ ஜ்ஞாநாம்ஸ²ஸ்ய ச ப்ராதா⁴ந்யமுக்தம் । ஜ்ஞாநயோகா³தி⁴காரிணோऽபி கர்மயோக³ஸ்யாந்தர்க³தாத்மஜ்ஞாநத்வாத் அப்ரமாத³த்வாத் ஸுகரத்வாந்நிரபேக்ஷத்வாச்ச ஜ்யாயஸ்த்வம் த்ருதீய ஏவாத்⁴யாயே ப்ரோக்தம். இதா³நீம் கர்மயோக³ஸ்யாத்மப்ராப்திஸாத⁴நத்வே ஜ்ஞாநநிஷ்டா²யா: ஸை²க்⁴ர்யம் கர்மயோகா³ந்தர்க³தகர்த்ருத்வாநுஸந்தா⁴நப்ரகாரம் ச ப்ரதிபாத்³ய, தந்மூலம் ஜ்ஞாநம் ச விஸோ²த்⁴யதே—

அர்ஜுந உவாச—

ஸம்ந்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண புநர்யோக³ம் ச ஸ²ம்ஸஸி ।
யச்ச்²ரேய ஏதயோரேகம் தந்மே ப்³ரூஹி ஸுநிஸ்²சிதம் ॥௧॥

கர்மணாம் ஸம்ந்யாஸம்-ஜ்ஞாநயோக³ம் புந: கர்மயோக³ம் ச ஸ²ம்ஸஸி । ஏதது³க்தம் ப⁴வதி-த்³விதீயேऽத்⁴யாயே முமுக்ஷோ: ப்ரத²மம் கர்மயோக³ ஏவ கார்ய:, கர்மயோகே³ந ம்ருதி³தாந்த:கரணகஷாயஸ்ய ஜ்ஞாநயோகே³நாத்மத³ர்ஸ²நம் கார்யமிதி ப்ரதிபாத்³ய, புநஸ்த்ருதீயசதுர்த²யோர்ஜ்ஞாநயோகா³தி⁴காரத³ஸா²பந்நஸ்யாபி கர்மயோக³ ஏவ ஜ்யாயாந் । ஸைவ ஜ்ஞாநநிஷ்டா²நிரபேக்ஷா ஆத்மப்ராப்திஸாத⁴நமிதி கர்மநிஷ்டா²ம் ப்ரஸ²ம்ஸஸி-இதி। தத்ரைதயோர்ஜ்ஞாநயோக³கர்மயோக³யோராத்மப்ராப்திஸாத⁴நபா⁴வே யதே³கம் ஸௌகர்யாச்சை²க்⁴ர்யாச்ச ஸ்²ரேய:-ஸ்²ரேஷ்ட²மிதி ஸுநிஸ்²சிதம் தந்மே ப்³ரூஹி ॥ ॥௧॥

அவ— நாலாவது அத்தியாயத்தில் கர்மயோகம் நினைவு ரூபம் (நினைவுடன் சேர்ந்தது) என்பதையும், அதனுடைய ஸ்வரூபத்

தையும், பிரிவுகளையும், நினைவுபாகம்தான் முக்கியம் என்பதையும் சொன்னார். ஞானயோகம் செய்யக் கூடியவனும் பல காரணங்களால் கர்மயோகத்தையே செய்ய வேண்டியது என்று மூன்றாவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டது. இந்த ஐந்தாவது அத்தியாயத்தில் ஞான யோகத்தைக் காட்டிலும் கர்ம யோகத்தினால் ஆத்மாவைச் சீக்கிரத்தில் பார்க்கலாம் என்றுசொல்லி, கர்ம யோகத்தில் அடங்கிய 'நான் செய்யவில்லை' என்கிற எண்ணத்தை விஸ்தாரமாகச் சொல்லி, அதனாலுண்டாகும் ஆத்மாவின் பார்வையையும் சொல்லுகிறார்.

அர்ஜுநன் சொல்லுகிறான்.

மோக்ஷத்தை ஆசைப்பட்டவன் முதலில் கர்மயோகம் செய்யவேண்டியது. அதனால் மனது தெளிந்த பிறகு, ஞான யோகம் செய்து ஆத்மாவைப் பார்க்கலாமென்று இரண்டாவது அத்தியாயத்தில் சொன்னீர். பிறகு ஞான யோகமே வேண்டியதில்லை. அதைச் செய்யக் கூடியவனும் கர்மயோகத்தாலேயே ஆத்மாவைப் பார்க்கலாம் என்று மூன்றாவது, நாலாவது அத்தியாயங்களில் சொன்னீர். இந்த இரண்டில் எதனாலே, ஆத்மாவை ஸுகமாயும், சீக்கிரமாயும் பார்க்கலாம். அதை எனக்குச் சொல்லவேணும். [1]

ஸ்ரீ பகவாநுவாச—

ஸந்ந்யாஸ꞉ கர்மயோகஶ்ச நிஶ்ரேயஸகராவுபௌ ।
தயோஸ்து கர்மஸந்ந்யாஸாத் கர்மயோகோ விஶிஷ்யதே ॥

ஸம்ந்யாஸ꞉-ஜ்ஞாநயோக꞉ கர்மயோகஶ்ச ஜ்ஞாநயோகஶக்தஸ்யாபி உபௌ நிரபேக்ஷௌ நிஶ்ரேயஸகரௌ। தயோஸ்து கர்மஸந்ந்யாஸாத்-ஜ்ஞாநயோகாத் கர்மயோக ஏவ விஶிஷ்யதே ॥ ॥௨॥

ஸ்ரீ பகவான் சொல்லுகிறார் —

ஞானயோகத்தாலே ஆத்மாவைப் பார்க்கலாம். ஞானயோகம் இல்லாமல் ஞானயோகம் பண்ணக் கூடியவனும், கர்ம யோகத்தாலேயே ஆத்மாவைப் பார்க்கலாம். இந்த இரண்டில் ஞான யோகத்தைக் காட்டிலும் கர்மயோகமே தரம். [2]

अव— कुत इत्यत्राह—

ज्ञेयः स नित्यसंन्यासी यो न द्वेष्टि न काङ्क्षति ।
निर्द्वन्द्वो हि महाबाहो सुखं बन्धात्प्रमुच्यते ॥

यः कर्मयोगी तदन्तर्गतात्मानुभवतृप्तः तद्व्यतिरिक्तं किमपि न काङ्क्षति । तत एव किमपि न द्वेष्टि । तत एव द्वन्द्वसहः स नित्यसंन्यासी—नित्यज्ञाननिष्ठ इति ज्ञेयः । स हि सुकरकर्मयोगनिष्ठतया सुखं बन्धात्प्रमुच्यते ॥ ॥௩॥

அவ— ஏனென்றால் சொல்லுகிறார்—

எவன் கர்ம யோகத்தைச் செய்து, அதிலடங்கிய ஆத்மாவின் அனுபவத்தாலே ஸந்தோஷத்தை அடைந்து, ஏற்கனவே பிடித்ததான வேறொரு வஸ்துவை ஆசைப்படவில்லையோ, அந்த ஸந்தோஷத்தினால் ஏற்கனவே பிடிக்காத வேறொரு ஸங்கதியில் த்வேஷம் இல்லையோ, குளிர், வெய்யில் முதலான த்வந்த்வங்களைப் பொறுத்துக் கொள்ளுகிறானோ, அவனை எப்போதும் ஞான யோகம் செய்கிறவனாகவே நினை. அவன் கர்ம யோகத்தை ஸுகமாகச் செய்வதால், பிரயாஸமில்லாமல் ஸம்ஸாரத்தைப் போக்குகிறான்.

अव— ज्ञानयोगकर्मयोगयोरात्मप्राप्तिसाधनभावे अन्योन्यनैरपेक्ष्यमाह—

साङ्ख्ययोगौ पृथग्बालाः प्रवदन्ति न पण्डिताः ।
एकमप्यास्थितः सम्यगुभयोर्विन्दते फलम् ॥ ॥௪॥

ज्ञानयोगकर्मयोगौ फलभेदात्पृथग्भूतौ ये प्रवदन्ति, ते बालाः—अनिष्पन्नज्ञानाः । न पण्डिताः—अकृत्स्नविदः । कर्मयोगो हि ज्ञानयोगमेव साधयति, ज्ञानयोगस्तु केवलं साधयतीति तयोः फलभेदेन पृथक्त्वं वदन्तो न पण्डिता इत्यर्थः । उभयोरात्मावलोकनैकफलयोरेकस्मिन् सम्यगास्थितस्तदेव फलं लभते ॥ ॥௪॥

அவ—ஆத்மாவைப் பார்க்கும் விஷயத்தில் கர்ம யோகத்திற்கு ஞான யோகத்தின் உதவி வேண்டியதில்லை. ஞான யோகத்திற்கு கர்ம யோகத்தின் உதவி வேண்டியதில்லை என்று சொல்லுகிறார்—

கர்ம யோகம் ஞானயோகத்தைத்தான் உண்டு பண்ணும். ஞான யோகம் ஒன்றினால்தான் ஆத்மாவைப் பார்க்கலாம் என்று சொல்லுகிறவர் தெரியாதவர். இந்த இரண்டிற்கும் ஆத்மாவைப் பார்ப்பதாகிய பலன் உண்டு. ஆகையினாலே, அவைகளில் ஒன்றை மாத்திரம் நன்றாகச் செய்தாலும், ஆத்மாவைப் பார்க்கலாம்.

𑌅𑌵— 𑌸 𑌏𑌤𑌦𑍇𑌵 𑌵𑌿𑌵𑍃𑌣𑍋𑌤𑌿॥—

𑌯𑌤𑍍𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍈𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌤𑌦𑍍𑌯𑍋𑌗𑍈𑌰𑌪𑌿 𑌗𑌮𑍍𑌯𑌤𑍇। 𑌏𑌕𑌂 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌂 𑌚 𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿॥

𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍈𑌃-𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑍈𑌃 𑌯𑌤𑍍-𑌆𑌤𑍍𑌮𑌾𑌵𑌲𑍋𑌕𑌨𑌰𑌾𑌪𑌂 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇। 𑌤𑌦𑍇𑌵 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌨𑌿𑌷𑍍𑌠𑍈𑌰𑌪𑌿 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇। 𑌏𑌕𑌫𑌲𑌤𑍍𑌵𑍇𑌨𑍈𑌕𑌂 𑌵𑍈𑌕𑌲𑍍𑌪𑌿𑌕𑌂 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌂 𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿, 𑌸 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸 𑌏𑌵 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ॥௫॥

அவ— இதையே விரிவாகச் சொல்லுகிறார்—

ஞான யோகத்தினால் அடையும்—ஆத்மாவைப் பார்ப்பதாகிய பலனைக கர்ம யோகத்தினாலும் அடையலாம். இரண்டிற்கும் ஒரே பலனாகையால் அவைகள் ஒன்று. அதாவது ஞான யோகத்தையாவது, கர்ம யோகத்தையாவது செய்தால் போதும். இப்படி அறிகிறவன் உண்மையை அறிந்தவன். [ 5 ]

𑌅𑌵—𑌅𑌯𑌂 𑌤𑍁 𑌵𑌿𑌶𑍇𑌷 𑌇𑌤𑍍𑌯𑌾𑌹—

𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌤𑍁 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌦𑍁𑌃𑌖𑌮𑌾𑌪𑍍𑌤𑍁𑌮𑌯𑍋𑌗𑌤𑌃।
𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌮𑌨𑌿𑌰𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨 𑌚𑌿𑌰𑍇𑌣𑌾𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿॥ ॥௬॥

𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌸𑍍𑌤𑍁 𑌅𑌯𑍋𑌗𑌤𑌃-𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌾𑌦𑍃𑌤𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍁𑌮𑌶𑌕𑍍𑌯𑌃। 𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌃-𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌮𑍁

ஏவ ஹி முநி:-ஆத்மமநநஶீல: ஸுகேந கர்மயோகம் ஸாதயித்வா ந சிரேண அல்பேநைவ காலேந ப்ரஹ்ம, ப்ரஹ்ம-ஆத்மாநம் ப்ராப்நோதி। ஜ்ஞாநயோகயுக்தஸ்து மஹதா து:கேந ஜ்ஞாநயோகம் ஸாதயதி, து:கஸாத்யத்வாத் ஆத்மாநம் சிரேண ப்ராப்நோதீத்யர்த:। ||௬||

அவ— ஆனால் கொஞ்சம் பேதமிருக்கிறது என்று சொல்லுகிறார்—

கர்ம யோகமில்லாமல், ஞான யோகத்தை அடைவது முடியாது. கர்ம யோகம் செய்கிறவன் ஞானயோகமில்லாமலே ஆத்மாவை நினைத்து, பழக்கம் பண்ணி, பிரயாஸமில்லாமல் கர்ம யோகத்தை முடித்து, கொஞ்ச காலத்திலேயே ஆத்மாவைப் பார்க்கிறான். ஞானயோகம் செய்கிறவனே மிகவும் கஷ்டப்பட்டு, ஞான யோகத்தை முடிக்கிறான். இப்படிக் கஷ்டப்பட்டுச் செய்வதால், ஞானயோகத்தால் ஆத்மாவைப் பார்ப்பதற்கு நாளாகிறது. [ 6 ]

யோகயுக்தோ விஶுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரிய:।
ஸர்வபூதாத்மபூதாத்மா குர்வந்நபி ந லிப்யதே ||௭||

கர்மயோகயுக்தஸ்து ஶாஸ்த்ரீயே பரமபுருஷாராதநரூபே விஶுத்தே கர்மணி வர்தமாந:, தேந விஶுத்தமநா: விஜிதாத்மா, ஸ்வாப்யஸ்தே கர்மணி வ்யாப்ருதமநஸ்த்வேந ஸுகேந விஜிதமநா:, தத ஏவ ஜிதேந்த்ரிய: கர்துராத்மநோ யாதாத்ம்யாநுஸந்தாநநிஷ்டதயா ஸர்வபூதாத்மபூதாத்மா ஸர்வேஷாம் தேவாதிபூதாநாம் ஆத்மபூத ஆத்மா யஸ்யாஸௌ ஸர்வபூதாத்மபூதாத்மா, ஆத்மயாதாத்ம்யாநுஸந்தாநஸ்ய ஹி தேவாதீநாம் ஸ்வஸ்ய சைகாகார ஆத்மா, தேவாதிபேதாநாம் ப்ரக்ருதிபரிணாமவிஶேஷரூபதயா ஆத்மாகாராஸம்பவாத்। ப்ரக்ருதிவியுக்தஸ்ஸர்வத்ர தேவாதிதேஹேஷு ஜ்ஞாநைகாகாரதயா ஸமாநாகார இதி 'நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம' இத்யநந்தரமேவ வக்ஷ்யதே। ஏவம்பூத: கர்ம குர்வந்நபி அநாத்மந்யாத்மாபிமாநேந

ந ஹீயதே-நஸம்ஶய்யதே । கர்மயோகிநோ ஜ்ஞாநம் ப்ர வர்த்ததே ॥ ॥எ॥

கர்மயோகம் செய்கிறவனே என்றால்-சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட—பகவானுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணுகிற[1]தோஷத்தைப்போக்குகிற கர்மங்களைச்செய்கிறான். அதனால் மனது தெளிந்து, நெடுநாளாய்ப்பழகின கர்மங்களில் மனது செல்வதால் வருத்தமில்லாமல், மனதையும் இந்திரியங்களையும் ஜயித்து, தன்னை உள்ளபடி நினைக்கையால் எல்லா ஆத்மாக்களும் ஒரே மாதிரிஎன்று நினைத்து, கர்மங்களையே செய்கிறான். இப்படி இருந்து கொண்டு கர்மங்களையே செய்தாலும், உடம்பே ஆத்மா என்கிற நினைவு அவனுக்கு வருகிறதேயில்லை. ஆகையால் அவன் கர்மயோகத்தாலேயே ஆத்மாவைச் சீக்கிரம் பார்க்கிறான். ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி நினைக்கிறவனுக்கு தேவர்கள்முதலான ஆத்மாக்களும் தானும் ஒரேமாதிரி. அவர்களுக்கு ஒருவருக்கொருவர் இருக்கும் பேதங்கள் உடம்புகளில் இருக்கின்றன. கர்மங்கள் அடியோடே போகி உடம்பு போனபோது, அவர்கள் எல்லாரும் ஞானஸ்வரூபமாக இருப்பதால் ஒரேமாதிரி என்று தோன்றும். ஆத்மாக்கள் எல்லாம் ஒரே மாதிரி,ஒன்றன்று-என்பது இந்த அத்தியாயம் 19-வது சுலோகத்தில் சொல்லப்படுகிறது. [7]

கஷ—யதவஹோகயோகஸ் ஸெஹவஜ ஸ்ரூ கஉெபோஹ வஸ வ ஸ்ஹயாநு, கதஹூஉவெகஷிகம் ஹ்ரண—

நைவ கிஞ்சித் கரோமீதி யுக்தோ மந்யேத தத்த்வவித் ।
பஶ்யந் ஶ்ருண்வந் ஸ்ப்ருஶந் ஜிக்ரந் அஶ்நந் கச்சந் ஸ்வபந் ஶ்வஸந் ॥
ப்ரலபந் விஸ்ருஜந் க்ருஹ்ணந் உந்மிஷந் நிமிஷந்நபி ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேஷு வர்த்தந்த இதி தாரயந் ॥ ॥௮॥

வஸவஸாத் தத்த்வவித் ஜ்ஞாநேந்த்ரியாணி வாஹ தீநி ச கர்மேந்த்ரியாணி ப்ராணாஶ்ச ஸ்வவிஷயேஷு வர்த்தந்தே

---

1 தோஷத்தைப் போக்குகிற— ரஜோகுணத்தையும், தமோகுணத்தையும், அவைகளால் உண்டாகும் ஆசையையும் த்வேஷத்தையும் போக்குகிறதான.

இதி யாவத்-தத்த்வஸம்ஜ்ஞாநோ நாஹம் கிஞ்சித் கரோமீதி
மந்யேத-ஜ்ஞாநைகஸ்வபாவஸ்ய மம கர்மமூலேந்த்ரிய ப்ராண
ஸம்பந்தக்ருதம் ஈத்ருசம் கர்த்ருத்வம், ந ஸ்வரூபப்ரயுக்தமிதி
மந்யேதேத்யர்த்த: ॥ ॥அ-௯॥

அவ— காமயோகத்தால் ஆத்மாவைப் பார்ப்பது ஸுகமாயும் சீக்கிரமாயும் கூடுவதால், அதற்கு வேண்டிய ஸங்கதியைச் சொல்லுகிறேன் கேள் என்கிறார்—

கீழ்ச்சொன்னபடி ஆத்மாவின் உண்மையை அறிந்தவன், கண் முதலான ஞான இந்திரியங்களும், வாக்கு முதலான கர்ம இந்திரியங்களும், பிராணன்களும் அந்தந்த வேலையைச் செய்கிறதென்று நினைத்து, நான் ஒன்றும் செய்யவில்லை என்று நினைக்கவேண்டும். அதாவது—அறிவையே ஸ்வபாவமாகவுடைய எனக்கு கர்மத்தினாலே இந்திரியங்களுடையவும் பிராணனுடையவும் சேர்க்கை வந்திருக்கிறது அதனாலே புண்ணியங்களையும் பாபங்களையும் செய்யும்படி நேர்ந்திருக்கிறது கர்மம் போய் சுத்தனானால் இந்தமாதிரி வேலைகளைச் செய்யமாட்டேன் என்று நினைக்கவேண்டும் 1 [8–9]

ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதி ய: ।
லிப்யதே ந ஸ பாபேந பத்மபத்ரமிவாம்பஸா ॥ ॥௰॥

1 ஆத்மாவின் உண்மையை அறிந்து காமயோகம் செய்கிறவன்-ஒன்றைப் பார்க்கும்போதும், கேட்கும்போதும், தொடும்போதும், மூக்கினால் முகரும்போதும், சாப்பிடும்போதும், நடக்கும்போதும், தூங்கும்போதும், மூச்சு விடும்போதும், பேசும் போதும், மலங்களை வெளியே தள்ளும் போதும், ஒன்றை எடுக்கும் போதும், கண்ணை மூடும் போதும், திறக்கும் போதும், இந்திரியங்கள் தம் தம் வேலைகளைச் செய்கின்றன என்று நினைத்து, நான் ஒன்றும் செய்யவில்லையென்று எண்ண வேண்டியது. பார்ப்பது, கேட்பது, தொடுவது, முகருவது, சாப்பிடுவது— இவைகள் ஞானேந்திரியங்களின் வேலைகள் நடப்பது, பேசுவது, மலங்களை வெளியே தள்ளுவது, ஒன்றை எடுப்பது-இவைகள் கர்மேந்திரியங்களின் வேலைகள் இவைகளில் மலங்களை வெளியே தள்ளுவது என்பதில் உபஸ்தம் என்கிற இந்திரியத்தினுடைய வேலையும் சேர்ந்திருக்கிறது. தூங்குவது, மூச்சு விடுவது, கண்ணைத் திறப்பது —இவைகள் பிராணன்களுடைய வேலைகள்.

ब्रह्मशब्देन प्रकृतिरिहोच्यते, 'मम योनिर्महद्ब्रह्म' इति हि वक्ष्यते। इन्द्रियाणां प्रकृतिपरिणामविशेषरूपत्वेन इन्द्रियाकारेणावस्थितायां प्रकृतौ 'पश्यञ्शृण्वन्' इत्याद्युक्तप्रकारेण कर्माणि ब्रह्मण्याधाय फलसङ्गं त्यक्त्वा नैव किंचित्करोमीति यः कर्माणि करोति, सः प्रकृतिसंसृष्टतया वर्तमानोऽपि प्रकृत्यात्माभिमानरूपेण बन्धहेतुना पापेन न लिप्यते। पद्मपत्रमिवाम्भसा-यथा पद्मपत्रमम्भसा संसृष्टमपि न लिप्यते-तथा न लिप्यत इत्यर्थः ॥

*அவ— புண்ணியங்களையும், பாபங்களையும் செய்வது ஆத்மாவின் ஸ்வபாவமன்று. அது கர்மத்தால் வந்தது என்று நினைத்தாலும், உடம்போடு சேர்ந்திருப்பதால் உடம்பே ஆத்மா என்கிற நினைவு போகுமோ என்றால், பதில் சொல்லுகிறார்.*

*1 இந்திரியங்கள்தான் இந்த வேலைகளைச்செய்கின்றன என்று எண்ணி, கர்மங்களின் பலன்களில் ஆசையில்லாமல், நான் ஒன்றையும் செய்யவில்லை என்று நினைத்து, கர்மங்களைச் செய்கிறவனுக்கு உடம்பே ஆத்மா என்கிற நினைவு வராது. ஜலம் எல்லாவற்றிலும் ஒட்டுகிறதாயிருந்தாலும், தாமரை இலையின் முன் பக்கத்தில் எத்தனை நாளைக்கு வைத்திருந்தாலும் ஒட்டுகிறதில்லை. அந்த இலை ஜலத்திலேயே பிறந்து, ஜலத்திலேயே வளர்ந்து, ஜலத்திலேயே இருந்தாலும், அது ஜலத்தினால் நனைக்கப்படுகிறதில்லை. அது இலையின் குணம். அதுபோல, ஜீவன் உடம்போடு சேர்ந்து உடம்பினால் ஸுகங்களை அனுபவித்தாலும், அறிவின் வலுவினாலே தன்னை உடம்பாக எண்ணாமலும், ஸம்ஸாரத்தில் ஒட்டாமலும்இருக்கலாம்.* [10]

कायेन मनसा बुद्ध्या केवलैरिन्द्रियैरपि ।
योगिनः कर्म कुर्वन्ति सङ्गं त्यक्त्वात्मशुद्धये ॥ ॥கக॥

---

*1 சுலோகத்தில் 'பிரும்மணி' என்கிற சொல் இருக்கிறது. 'பிரும்ம' என்பது பிரகிருதி. அதுதான் இந்திரியங்களாக ஆகியிருக்கிறது. ஆகையினாலே அந்த சொல்லிற்கு இந்திரியங்களிடத்தில் என்று பொருள்.*

காயமநோபு³த்³தீ⁴ந்த்³ரியஸாத்⁴யம் கர்ம ஸ்வர்கா³தி³ப²லஸங்க³ம் த்யக்த்வா யோகி³ந ஆத்மவிஶுத்³த⁴யே குர்வந்தி- ஆத்மக³தப்ராசீந கர்மப³ந்த⁴விநாஶாய குர்வந்தீத்யர்த²: || ||௧௧||

பெரியோர்கள் ஆத்மாவை அறிவதற்கு இடைஞ்சலான தங்களுடைய பாபம் போவதற்காக உடம்பு, மனது, எண்ணம், கண் முதலான இந்திரியங்கள்—இவைகளைக் கொண்டு, சாஸ்திரத்தில் சொன்ன வேலைகளை பணம், ஸ்வர்க்கம் முதலான பலன்களை ஆசைப்படாமல், பகவானுடைய ப்ரீதியே வேணுமென்று செய்கிறார்கள் அப்படிச் செய்து பாபங்களைப் போக்கி ஆத்மாவைப் பார்க்கிறார்கள் [11]

யுக்த: கர்மப²லம் த்யக்த்வா ஶாந்திமாப்நோதி நைஷ்டி²கீம் ।
அயுக்த: காமகாரேண ப²லே ஸக்தோ நிப³த்⁴யதே || ||௧௨||

யுக்த:- ஆத்மவ்யதிரிக்தப²லேஷ்வசபல: ஆத்மைகப்ரவண: கர்மப²லம் த்யக்த்வா, கேவலமாத்மஶுத்³த⁴யே கர்மாநுஷ்டா²ய நைஷ்டி²கீம் ஶாந்திமாப்நோதி ஸ்தி²ராமாத்மாநுப⁴வரூபாம் நிர்வ்ருதிமாப்நோதி । அயுக்த:- ஆத்மவ்யதிரிக்தப²லேஷு சபல: ஆத்மாவலோகநவிமுக²: காமகாரேண ப²லே ஸக்த: கர்மாணி குர்வந் நித்யம் கர்மபி⁴ர்ப³த்⁴யதே- நித்யஸம்ஸாரீ ப⁴வதி । அத: ப²லஸங்க³ரஹித இந்த்³ரியாகாரேண பரிணதாயாம் ப்ரக்ருதௌ கர்மாணி ஸந்ந்யஸ்ய ஆத்மநோ ப³ந்த⁴மோசநாய கர்மாணி குர்வீதேத்யுக்தம் ப⁴வதி ||௧௨||

ஆத்மாவை உள்ளபடி அறிவது என்கிற பிரயோஜனம் தவிர வேறு பிரயோஜனத்தில் ஆசையில்லாமல் ஆத்மாவிலேயே நோக்கு உள்ளவனாய், கர்மங்களின் பலன்களை விட்டு, தன்னிடத்திலிருக்கும் தோஷம் போவதற்காகவே வேலைகளைச் செய்கிறவன், அதனாலே பகவானை ஸந்தோஷப்படுத்தி, அதின் வழியாய் நிலையாயிருக்கும் ஆத்மாவை அனுபவிப்பதான ஸுகத்தை அடைகிறான். ஆத்மாவை அறியவேணுமென்று ஆசையில்லாமல், அதைக் காட்டிலும் வேறான பலன்களில் ஆசையுமுள்ளவனாய கர்மங்களின்

பலன்களை விரும்பிக் கர்மங்களைச் செய்கிறவனுக்கு ஸம்ஸாரம் போகிறதில்லை. 1 ஆகையால் ஸம்ஸாரம் போவதற்காகக் கீழ்ச் சொல்லியபடி கர்மத்தையே செய். [ 12 ]

அத தேஹாகாரேண பரிணதாயாம் ப்ரக்ருதௌ கர்த்ருத்வஸந்ந்யாஸ உச்யதே—

ஸர்வகர்மாணி மநஸா ஸந்ந்யஸ்யாஸ்தே ஸுகம் வஶீ ।
நவத்வாரே புரே தேஹீ நைவ குர்வந்ந காரயந் ॥௧௩॥

ஆத்மந: ப்ராசீநகர்மமூலதேஹஸம்பந்தப்ரயுக்தமிதம் கர்மணாம் கர்த்ருத்வம் ந ஸ்வரூபப்ரயுக்தமிதி விவேகவிஷயேண மநஸா ஸர்வாணி கர்மாணி நவத்வாரே புரே ஸந்ந்யஸ்ய தேஹீ ஸ்வயம் வஶீ தேஹாதிஷ்டாநப்ரயத்நமகுர்வந், தேஹம் ச நைவ காரயந் ஸுகமாஸ்தே ॥ ॥௧௩॥

உண்மை அறிந்தவன் ஆத்மாவிற்கு நெடுநாளாய் வந்த கர்மத்தினால் ஏற்பட்ட உடம்பின்சேர்க்கையால், இந்தவேலைகளை நான்செய்கிறேன். அது எனக்கு இயற்கையல்ல. பிரளயகாலத்தில் உடம்பு இல்லாதபோது ஏதாவது வேலையைச்செய்கிறேனா, அது போல. கர்மங்கள் போனபிறகு இந்தமாதிரி வேலைகளைச் செய்வதில்லை என்று நினைத்து, எல்லாவேலைகளையும் 2 உடம்பேசெய்கிற

1 ஒரே கர்மமானது ஒருவனுக்கு ஸம்ஸாரத்தைக் கொடுக்கிறது. மற்ற ஒருவனுக்கு ஸம்ஸாரத்தைப் போக்குகிறது—என்பது எப்படிக் கூடும் என்றால், அதற்குப் பதில் இந்த சுலோகத்தில் சொல்லப்படுகிறது. கர்மஙகள் அவற்றின் பலங்களில் ஆசையுடையவனுக்கு ஸம்ஸாரத்தைக் கொடுக்கின்றன; ஆசையில்லாதவனுக்கு அதைப் போக்குகின்றன. ஒரே மருந்து தேனில் குழைத்துச் சாப்பிட்டால் ஒரு வேலையைச் செய்கிறது. நெய்யில் குழைத்துச் சாப்பிட்டால் வேறு வேலையைச் செய்கிறது.

2. இந்த சுலோகத்தில் "ஒன்பது வாசலுள்ள பட்டணத்தில்" என்று இரண்டு சொற்கள் இருக்கின்றன. உடம்புதான் இந்தப் பட்டணம். முகத்தில் இரணடு கண்கள், இரண்டு மூக்குகள், இரண்டு காதுகள், வாய் ஆக ஏழு வாசல்கள். கீழே மலத்தையும், ஜலத்தையும் தள்ளுகிற இரண்டு வாசல்கள். ஆக ஒன்பது. இப்படி ஒன்பது வாசல்களுள்ள

தென்றெண்ணி, உடம்பை நான் தூக்குகிறேனென்றும் அதைநான் ஏவுகிறேனென்றும் எண்ணாமல், உடம்பிற்குஉள்படாமல், தன்னை உடம்பாக எண்ணாமல், நான்வேலையைச்செய்கிறேன் என்கிறஎண்ணத்தால் உண்டாகும் கவலையில்லாமல் இருக்கிறான். [ 13 ]

அவ — ஸாக்ஷாதாத்மந: ஸ்வாபாவிகரூபமாஹ —

ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு: ।
ந கர்மபலஸம்யோகம் ஸ்வபாவஸ்து ப்ரவர்த்ததே ॥ ||கச||

அஸ்ய தேவதிர்யங்மநுஷ்யஸ்தாவராத்மநா ப்ரக்ருதிஸம்ஸர்கேண வர்த்தமாநஸ்ய லோகஸ்ய தேவாத்யஸாதாரணம் கர்த்ருத்வம், தத்தத³ஸாதாரணாநி கர்மாணி, தத்தத்கர்மஜந்ய தேவாதிபலஸம்யோகம் ச ஸ்வயம் ப்ரபு:- கர்மார்ஹ: ஸ்வாபாவிகஸ்வரூபேணாவஸ்தித ஆத்மா ந ஸ்ருஜதி - நோத்பாதயதி । கஸ்தர்ஹி? ஸ்வபாவஸ்து ப்ரவர்த்ததே - ஸ்வபாவ: ப்ரக்ருதிவாஸநா । அநாதிகாலப்ரவ்ருத்தபூர்வபூர்வகர்மஜநிததேவாத்யாகாரப்ரக்ருதிஸம்ஸர்கக்ருததத்ததாத்மாபிமாநஜநிதவாஸநாக்ருதம் ஏவம்ரூபம் கர்த்ருத்வாதிகம் ஸர்வம்-ந ஸ்வரூபப்ரயுக்தமித்யர்த்த: ॥ ||கச||

அவ— ஆத்மாவிற்கு இயற்கையாய் ஏற்பட்ட ஸ்வரூபத்தைச் சொல்லுகிறார்—

தேவன், மனிதன், மாடு, மரம், முதலான உடம்புகளு

---

தென்று சொன்னதற்குக் கருத்து—உடம்பு அநேக அவயவங்கள் சேர்ந்து உண்டானது. ஆத்மா அப்படியன்று. உடம்பில் ஓட்டைகள் இருக்கின்றன. அவைகள் ஆத்மாவில் இல்லை. உடம்பு பெரிது. ஆத்மா சின்னது. உடம்பு ஆத்மாவிற்கு உள்பட்டது. ஆத்மா ஸ்வதந்தரம். உடம்பு ஏவப்பட்டது. ஆத்மா ஏவுகிறது. இவ்விதமான வித்தியாஸங்களினாலே உடம்பைக் காட்டிலும் ஆத்மா வேறு என்று காட்டுவது. பட்டணம்போல் உடம்பு. பட்டணத்தில் இருக்கிறவர்கள்போல் இந்திரியங்கள். பட்டணத்தில் இருக்கும் ராஜாவைப்போல் அந்தர்யாமியாயிருக்கும் பகவான். வேலைக்காரனைப்போல் ஜீவன். இப்படி தன்னையும், உடம்பையும் பார்க்கிறவனுக்கு கவலை யென்பதே இருக்காது.

டன் சேர்ந்திருக்கிற ஜீவன்கள் அந்தந்த ஜாதிக்கு ஏற்பட்ட பிரயத்தனங்களையும், வேலைகளையும், செய்து, அந்த வேலைகளால் உண்டாகும் பலன்களையும் அனுபவிக்கிறார்கள். ஆனால் இவர்கள் செய்யவுமில்லை, அனுபவிக்கவுமில்லை. ஆனால் பின்னை யார் செய்கிறார்கள் என்றால், அநாதி வாஸனை இப்படிச்செய்கிறது. நெடுநாளாய் ஒரு கர்மத்தினாலே இன்னொரு கர்மம், அதனாலே இன்னொரு கர்மம், இப்படி கர்மங்கள் வரிசையாய் ஆறுபோல் பெருகுகிறது. அதனாலே ஒருவன் தேவன் முதலான உடம்பை அடைந்து, தன்னை அந்த உடம்பாகவே நினைத்து, கர்மங்கள் செய்வதினால் வாஸனைகள் உண்டாகின்றன. அவைகளாலேதான் இந்த மாதிரி வேலைகளும் அநுபவங்களும் உண்டாகின்றன. கர்ம ஸம்பந்தம் போனால் சுத்தமான ஆத்மாவுக்கு இந்த வேலைகள் இல்லவேயில்லை. [14]

𑌨𑌾𑌦𑌤𑍍𑌤𑍇 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 𑌪𑌾𑌪𑌂 𑌨 𑌚𑍈𑌵 𑌸𑍁𑌕𑍃𑌤𑌂 𑌵𑌿𑌭𑍁𑌃 ।
𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑌾𑌵𑍃𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑍇𑌨 𑌮𑍁𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌜𑌨𑍍𑌤𑌵𑌃 ॥ ॥௧௫॥

𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 𑌸𑍍𑌵𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌿𑌤𑌯𑌾𑌽𑌭𑌿𑌮𑌤𑌸𑍍𑌯 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌦𑍇𑌃 𑌪𑌾𑌪𑌂 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌨𑌾𑌦𑌤𑍍𑌤𑍇-𑌨𑌾𑌪𑌨𑍁𑌦𑌤𑌿। 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿𑌕𑍂𑌲𑌤𑌯𑌾𑌽𑌭𑌿𑌮𑌤𑌸𑍍𑌯 𑌸𑍁𑌕𑍃𑌤𑌂-𑌸𑍁𑌖𑌂 𑌚 𑌨𑌾𑌦𑌤𑍍𑌤𑍇-𑌨𑌾𑌪𑌨𑍁𑌦𑌤𑌿। 𑌯𑌤𑍋𑌽𑌯𑌂 𑌵𑌿𑌭𑍁𑌃-𑌨 𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍𑌕𑌃, 𑌨 𑌦𑍇𑌵𑌾𑌦𑌿𑌦𑍇𑌹𑌾𑌸𑌾𑌧𑌾𑌰𑌣𑌦𑍇𑌶𑌃। 𑌅𑌤𑌏𑌵 𑌨 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑍀-𑌨 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿𑌕𑍂𑌲𑌶𑍍𑌚, 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌵𑌾𑌸𑌨𑌾𑌕𑍃𑌤𑌮𑍍। 𑌏𑌵𑌂𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌸𑍍𑌯 𑌕𑌥𑌮𑌿𑌯𑌂 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌵𑌾𑌸𑌨𑍋𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇? 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑌾𑌵𑍃𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂-𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌨𑌾 𑌪𑍂𑌰𑍍𑌵𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌸𑍍𑌵𑌫𑌲𑌾𑌨𑍁𑌭𑌵𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌯 𑌅𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌵𑍃𑌤𑌂-𑌸𑌙𑍍𑌕𑍁𑌚𑌿𑌤𑌮𑍍। 𑌤𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌵𑌰𑌣𑌰𑍂𑌪𑍇𑌣 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌦𑍇𑌵𑌾𑌦𑌿𑌦𑍇𑌹𑌸𑌂𑌯𑍋𑌗𑌃 𑌤𑌤𑍍𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌰𑍂𑌪𑍋 𑌮𑍋𑌹𑌶𑍍𑌚 𑌜𑌾𑌯𑌤𑍇। 𑌤𑌤𑌶𑍍𑌚 𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌵𑌾𑌸𑌨𑌾-𑌤𑌦𑍁𑌚𑌿𑌤𑌕𑌰𑍍𑌮𑌵𑌾𑌸𑌨𑌾 𑌚, 𑌵𑌾𑌸𑌨𑌾𑌤𑍋 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌾𑌤𑍍𑌮𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌃, 𑌕𑌰𑍍𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌶𑍍𑌚𑍋𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇॥

இந்த ஜீவன் கர்மத்தினால் எல்லா உடம்புகளிலும் இருக்கக் கூடியவன். இன்ன உடம்பில்தான் இருக்கிறதென்று கட்டுப்பாடு

இல்லை, ஆகையால் ஒருவனுக்கு இவன் உறவுமன்று, ஒருவனுக்கு சத்துருவுமன்று. ஆனால் இப்போது சிலரைத்தன் பிள்ளை, பெண் டாட்டி என்று நினைத்து, அவர்களுடைய வருத்தங்களைப் போக்கப் பாடுபடுகிறான். சிலரை சத்துரு என்று நினைத்து, அவர்களுக்குப் பலவிதமான கெடுதிகளை உண்டு பண்ணப்பாடுபடுகிறான். இதெல்லாம் வாஸனையாலேற்பட்டது. இயற்கையில் நல்லவனான ஜீவனுக்கு இந்தக் கெட்ட வாஸனை எப்படி வந்தது என்றால், இவனுடைய நல்ல ஞானத்தைக் கெடுக்கிற நெடுநாளாக வந்த கர்மத்தின் பலத்தை அநுபவிப்பதற்காக அந்த கர்மம் இவனுடைய ஞானத்தை நல்ல ஸங்கதிகளைக்கவனிக்க வொட்டாமலும் சுருங்கும்படியாகவும் செய்து விட்டது, நல்ல அறிவைக் கெடுக்கிற அந்த கர்மத்தினால், இவனுக்கு தேவன் முதலான உடம்பின் சேர்க்கையும், அந்த உடம்புதான் நான் என்கிற தப்பு எண்ணமும் உண்டாகிறது. பிறகு இந்த எண்ணத்தின் வாஸனையும் அதற்குத் தகுந்த வேலைகளின் வாஸனையும் உண்டாகிறது—மறுபடியும் இதேமாதிரி, வாஸனையால் தப்பு எண்ணமும் அந்த வேலைகளும் உண்டாகின்றன. [ 15 ]

ஸ்வ—ஸர்வம் ஜ்ஞாநப்ரவேஶேந வ்யாபிநம் ஸங்கோசிஷ்யஸி, ஜ்ஞாநஸங்கோசகாநி ஹ்யஸம்ஸாரகர்மாணி தயா, ந ஹி ஜ்ஞாநேந ஸத்ருஶம் பவித்ரமிதி ப்ரதிபாதிதம் ஸ்வகாமெ ஸஞ்ஜ்பதி—

ஜ்ஞாநேந து ததஜ்ஞாநம் யேஷாம் நாஶிதமாத்மந: ।
தேஷாமாதித்யவஜ்ஜ்ஞாநம் ப்ரகாஶயதி தத்பரம் ॥ ॥௧௬॥

ஏவம் வர்த்தமாநேஷு ஸர்வேஷ்வாத்மஸு யேஷாமாத்மநாமுக்தலக்ஷணேநாத்மயாதாத்ம்யோபதேஶஜநிதேந ஶுத்தவிஷ்யேண அஹரஹரப்யாஸாதேயாதிஶயேந நிரதிஶயபவித்ரேண ஜ்ஞாநேந தத்-ஜ்ஞாநாவரணமநாதிகாலப்ரவ்ருத்தாநந்தகர்மஸஞ்சயரூபமஜ்ஞாநம் நாஶிதம், தேஷாம் தத்-ஸ்வாபாவிகம் பரம் ஜ்ஞாநமபரிமிதமஸங்குசிதமாதித்யவத் ஸர்வம் யதாவஸ்திதம் ப்ரகாஶயதி। தேஷாமிதி விநஷ்டாஜ்ஞாநாநாம்

பஹுத்வாபிதாநாச்ச த்விதீயாத்யாயோக்தம் பஹுத்வம்; 'ந த்வேவாஹம் ஜாது நாஸம்' இத்யுபக்ரமோக்தம் ஸ்புடீக்ருதம் | நந்வேவம் பஹுத்வஸ்யௌபாதிகத்வாத் விநஷ்டாஜ்ஞாநாநாமேகத்வா பத்திரஸம்பவாத் | 'தேஷாமாதித்யவஜ்ஜ்ஞாநம்' இதி வ்யதிரேக நிர்தேஶாச்ச, ஜ்ஞாநஸ்ய ஸ்வாபாவிகத்வம் ப்ரதிபாதிதம்| ஸூர்யத்ருஷ்டாந்தேந ஜ்ஞாத்ருஜ்ஞாநயோ: ப்ரபாப்ரபாவதோ ரிவாவஸ்தாநம் ச | தத ஏவ ஸம்ஸாரதஶாயாம் ஜ்ஞாநஸ்ய ஸங்கோசோ மோக்ஷதஶாயாம் விகாஸஶ்சாவகத:||

அவ— நாலாவது அத்தியாயம் 36, 37, 38-வது சுலோகங்களில்ஆத்மாவின் அறிவானது எல்லா பாபங்களையும் போக்கும் என்று சொன்ன ஸங்கதியை அந்த அறிவின் ஸ்வரூபத்தைச் சொல்லுகிற ஸமயத்தில் நினைப்பு மூட்டுகிறார்—

கர்மத்தால் மயங்குகிற ஜீவன்களுக்குள், நான் சொன்னதனுல் உண்டான—ஆத்மாவைப் பற்றின—எவர்களுடைய உண்மையான அறிவு, ஒவ்வொருநாளும் பழக்கம் பண்ணிப் பண்ணி வளர்ந்து, அதனுல் அவர்களுடைய அறிவை மறைக்கிற நெடு நாளாகவந்த எல்லையில்லாத கர்மங்களைத் துலைக்கிறதோ, அவர்களுக்கு இயற்கையாக ஏற்பட்டு, இதுவரையில் சுருங்கியிருந்த ஞானம் என்கிற குணமானது அளவில்லாமல் விரிவை யடைந்து, சூரியன் வெளிச்சம் எல்லா வஸ்துக்களையும் காட்டுகிறதுபோல், எல்லா வஸ்துக்களையும் உள்ளபடி காண்பிக்கும். (1) சுலோகத்தில் 'எவர்களுடைய அறிவு கர்மத்தைத் துலைக்கிறதோ' என்று ஜீவன்களைப் பலராகச் சொல்லுகையால், 2-வது அத்தியாயம் 12-வது சுலோகத்தில் ஜீவன்கள் பலர் என்று சொன்னது இந்த இடத்தில் மிகவும் நன்றாய் சொல்லப்பட்டது. (2) நாலு பக்கங்களிலும் கண்ணாடி வைத்த ஒரு உள்ளில் ஒருவன் நின்றால், ஒரே மனிதன் கண்ணாடிகளில் பலராகத் தோன்றுகிறான். இங்கு ஜீவன்களைப் பலர் என்று சொன்னது அதுபோலல்ல. உண்மையாகவே பலர். ஏனென்றால் அக்ஞானம் போனவர்கள் பலர் என்று சொன்னபடியால் கண்ணாடியில் தோன்றினது போலன்று. (3) 'அவர்களுடைய ஞானம்' என்று சொல்லியிருப்பதால், ஜீவன்களுக்கு

இயற்கையாகவே 'ஞானம்' என்று ஒரு குணம் இருக்கிறதாக ஏற்படுகிறது. (4)'ஸூரியன் வெளிச்சம்போல்' என்று சொன்னதால் ஜீவன் ஸூரியன்போல் என்றும், ஞானம் அதின்வெளிச்சம்போல் என்றும் ஏற்படுகிறது. (5) ஞானம் வெளிச்சம்போல் இருப்பதால், ஜீவனுக்குக் கர்மம் இருக்கும் காலத்தில் அது சுருங்குவதும், கர்மம் அடியோடு போகும்போது, அது எல்லையில்லாத விரிவை யடைவதும் கூடும். 1 [ 16 ]

𑌤𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑌸𑍍𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌸𑍍𑌤𑌨𑍍𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌸𑍍𑌤𑌤𑍍𑌪𑌰𑌾𑌯𑌣𑌾𑌃 ।
𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑍍𑌯𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌰𑍍𑌧𑍂𑌤𑌕𑌲𑍍𑌮𑌷𑌾𑌃 ॥ ॥கஎ॥

𑌤𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑌃-𑌤𑌥𑌾𑌵𑌿𑌧𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌧𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌾𑌃, 𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃-𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑌮𑌨𑌸𑌃, 𑌤𑌨𑍍𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌃-𑌤𑌦𑌭𑍍𑌯𑌾𑌸𑌨𑌿𑌰𑌤𑌾𑌃, 𑌤𑌤𑍍𑌪𑌰𑌾𑌯𑌣𑌾𑌃-𑌤𑌦𑍇𑌵 𑌪𑌰𑌮𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌮𑌿𑌤𑌿 𑌮𑌨𑍍𑌵𑌾𑌨𑌾𑌃 𑌏𑌵𑌮𑌭𑍍𑌯𑌸𑍍𑌯𑌮𑌾𑌨𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌨𑌿𑌰𑍍𑌧𑍂𑌤𑌕𑌲𑍍𑌮𑌷𑌾𑌃 𑌤𑌥𑌾𑌵𑌿𑌧𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿-𑌯𑌦𑌵𑌸𑍍𑌥𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇, 𑌸 𑌹𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌅𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃, 𑌸𑍍𑌵𑍇𑌨 𑌰𑍂𑌪𑍇𑌣𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ॥கஎ॥

ஆத்மாவை உள்ளபடி பார்க்கவேணுமென்று தீர்மானித்து, அந்தப் பார்வையையே மனதால் நினைத்துக் கொண்டு, அதை பழக்கி, அதையே உயர்ந்த பிரயோஜந மென்று நினைக்கிறவர்கள் அப்படிப் பழக்கப்பட்ட அறிவினுலே நெடுநாளாய்வந்த பாபங்கள்போய் ஆத்மாவை உள்ளபடி பார்க்கிருர்கள். பிறகு அந்தப் பார்வை அவர்களுக்கு ஒருக்காலும் போகிறதில்லை. [ 17 ]

𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌨𑌯𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑍇 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇 𑌗𑌵𑌿 𑌹𑌸𑍍𑌤𑌿𑌨𑌿 ।
𑌶𑍁𑌨𑌿 𑌚𑍈𑌵 𑌶𑍍𑌵𑌪𑌾𑌕𑍇 𑌚 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌃 𑌸𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 ॥ ॥கஅ॥

𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌨𑌯𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑍇, 𑌕𑍇𑌵𑌲𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇, 𑌗𑍋𑌹𑌸𑍍𑌤𑌿𑌶𑍍𑌵𑌶𑍍𑌵𑌪𑌾𑌕𑌾𑌦𑌿𑌷𑍁 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌵𑌿𑌷𑌮𑌾𑌕𑌾𑌰𑌤𑌯𑌾 𑌪𑍍𑌰𑌤𑍀𑌯𑌮𑌾𑌨𑍇𑌷𑍁

---

1. இந்த சுலோகத்தில் ஆத்மாவையுள்ளபடி அறிந்து, பிறகு பக்தியோகத்தைப் பண்ணி, மோக்ஷத்தை யடையும்போது உண்டாகும் அறிவின் விரிவைச் சொல்லுகிருர்.

आत्मसु पण्डिताः आत्मयाथात्म्यविदः ज्ञानैकाकारतया सर्वत्र समदर्शिनः, विषमाकारस्तु प्रकृतेः, नात्मनः, आत्मा तु सर्वत्र ज्ञानैकाकारतया सम इति पश्यन्तीत्यर्थः ॥ ॥१८॥

அ-வ— ஒருவன் ஆத்மாவை உள்ளபடி பார்க்கும்போது அவன் தோற்றம் எப்படி யிருக்கும்? என்றால் சொல்லுகிறார்—

இப்போது நாம் உலகத்தில் எல்லாரையும் பார்க்கும்போது, இவன் படித்து வணக்கமுள்ள பிராமணன், இவன் வெறும் பிராமணன் என்றும், இது பசு, இது யானை என்றும், இது நாய், இவன் நாய்தின்கிறவன் என்றும், அவர்களுடைய உருவங்களைக் கொண்டும், தொழில்களைக்கொண்டும், ஆத்மாக்களை வெவ்வேறாகப் பார்க்கிறோம். ஏனென்றால், உடம்பு என்றும், அதைக்காட்டிலும் வேறான ஆத்மாவென்றும் இரண்டு இருப்பதாகத் தோன்றவில்லை. இருப்பதாகச் சொல்லுகிறவர்களுக்கும் அவைகள் வேறென்று மனதில் படவில்லை. அதனாலே அந்தந்த ஆத்மாவை அந்தந்த உடம்பாகவே நினைக்கிறோம். தங்களுடைய ஆத்மாவை உள்ளபடிபார்த்து எல்லா உடம்புகளிலும் இருக்கும் ஆத்மாக்கள் இதே மாதிரி, வேற்றுமையெல்லாம் உடம்புகளில் இருப்பது என்று தெரிந்தவர்கள் கீழ்ச்சொல்லிய வஸ்துக்களில் ஆத்மாவைக் காட்டிலும் வேறான உடம்புகளைத்தள்ளி, எல்லா ஆத்மாக்களும் ஒரே மாதிரி என்று பார்ப்பார்கள். (இப்படிப் பார்க்கிறவனுக்கு யார் என்னபண்ணினாலும் கோபம்வராது.) [18]

इहैव तैर्जितः सर्गो येषां साम्ये स्थितं मनः।
निर्दोषं हि समं ब्रह्म तस्माद्ब्रह्मणि ते स्थिताः॥१९॥

इहैव साधनानुष्ठानदशायामेव तैः सर्गो जितः-संसारो जितः । येषामुक्तरीत्या सर्वेष्वात्मसु साम्ये स्थितं मनः । निर्दोषं हि समं ब्रह्म—प्रकृतिसंसर्गदोषवियुक्ततया समात्मवस्तु हि ब्रह्म। आत्मसाम्ये स्थिताश्चेद्ब्रह्मणि स्थिता एव ते । ब्रह्मणि स्थितिरेव हि संसारजयः। आत्मसु ज्ञानैकाकारतया साम्यमेवानुसन्दधाना मुक्ता एवेत्यर्थः ॥ ॥१९॥

கீழ்ச்சொன்னபடி, எவர்கள் தம்முடைய ஸ்வரூபத்தை உள்ளபடி பார்த்து, இதேமாதிரிதான் மற்ற ஆத்மாக்களும்-ஆகையால் எல்லா ஆத்மாக்களும் ஞானஸ்வரூபமாகையாலே ஒரேமாதிரிதான் என்று பார்க்கிறார்களோ, அவர்கள் ஸம்ஸாரத்தில் இருந்த போதிலும், பிரும்மத்திலிருப்பதால் (பிரும்மத்தைப் பார்ப்பதால்) ஸம்ஸாரத்தை ஜயித்தவர்கள்தான். உடம்பின் சேர்க்கையால் உண்டான பேதங்கள் இல்லாமல் ஒரே மாதிரியான ஜீவன்கள் பிரும்மம். ஜீவன்களை ஒரே மாதிரியாகப் பார்க்கிறவன் பிரும்மத்தைப் பார்க்கிறவன். பிரும்மத்தை உள்ளபடி பார்த்தவனுக்கு ஸம்ஸாரம் கிடையாது. அதாவது— ஜீவன்கள் எல்லாரும் ஞானஸ்வரூபமாகையால் ஒரே மாதிரி என்று பார்க்கிறவர்கள் முக்தர்கள். முக்தர்களுக்கு துக்கம் கிடையாது. இவர்களுக்கும் துக்கம் கிடையாது என்று இவர்களைஸ்தோத்திரம் பண்ணுகிறார்

(உலகத்தில் இருக்கும் அநேகவித வேற்றுமைகள் ஆத்மாவில் இருப்பதாகத்தோன்றுகிறபடியால், நமக்கு துக்கங்கள் உண்டாகின்றன. நம்முடைய ஆத்மாவை ஞான ஸ்வரூபமென்று, உள்ளபடி பார்த்து எல்லா ஆத்மாக்களையும் ஒரேமாதிரியாகப் பார்த்தால், துக்கங்கள் உண்டாகாது. இப்போதே ஸுகம் வரும். நாளைக்கு ஸுகம் என்பது மட்டுமல்ல. நாளைக்கு உயர்ந்த ஸுகம் வருமென்பதற்கு இதுவே அடையாளம்.) [ 19 ]

அத²—யேந ப்ரகாரேணாவஸ்தி²தஸ்ய கர்மயோகி³ந꞉ ஸமத³ர்ஶநரூபோ ஜ்ஞாநவிபாகோ ப⁴வதி, தம் ப்ரகாரமுபதி³ஶதி—

ந ப்ரஹ்ருஷ்யேத்ப்ரியம் ப்ராப்ய நோத்³விஜேத்ப்ராப்ய சாப்ரியம் ।
ஸ்தி²ரபு³த்³தி⁴ரஸம்மூடோ⁴ ப்³ரஹ்மவித்³ ப்³ரஹ்மணி ஸ்தி²த꞉ ॥ ॥ உ०॥

யாத்³ருஶதே³ஹஸ்த²ஸ்ய ப்ராப்தஸ்ய ப்ராகீ³நகர்மவாஸநயா ப்ரியம் ப⁴வதி, யச்சாப்ரியம், தது³ப⁴யம் ப்ராப்ய ஹர்ஷோத்³வேகௌ³ ந கார்யௌ । கத²ம்? ஸ்தி²ரபு³த்³தி⁴꞉-ஸ்தி²ரே ஆத்மநி பு³த்³தி⁴ர்யஸ்ய ஸ꞉ ஸ்தி²ரபு³த்³தி⁴꞉, அஸம்மூட⁴꞉-அஸ்தி²ரேண ஶரீரேண ஸ்தி²

ராத்மாநமேகீக்ருத்ய மோஹஸ்ஸம்மோஹ:—தத்ரஹித: । தச்ச கதம்? ப்ரஹ்மவித் ப்ரஹ்மணி ஸ்தித:—உபதேஶேந ப்ரஹ்மவித் தஸ்மிந் ப்ரஹ்மண்யப்யாஸயுக்த: । ஏததுக்தம் பவதி—தத்த்வவிதாமுபதேஶேந ஜ்ஞாதயாத்மயாதாத்ம்யவிஷயா தமேவ யதமாநோ தேஹாத்மாபிமாநம் பரித்யஜ்ய ஸ்திரரூபாத்மாவலோகநப்ரியாநுபவே வ்யவஸ்தித: அஸ்திரே ப்ராக்ருதே ப்ரியாப்ரியே ப்ராப்ய ஹர்ஷோத்வேகௌ ந பஜதே இதி ॥ ॥௨0॥

அவ— இம்மாதிரி பார்வை உண்டாவதற்குமுன் கர்மயோகம் செய்கிறவன் என்னமாதிரி இருப்பன் என்றால், சொல்லுகிறார்-

இன்னின்ன உடம்பில் இருப்பவனுக்கு இன்னின்னது பிடிக்கும்-இன்னின்னது பிடிக்காது என்று பழைய வாஸனையால் ஏற்பட்டிருக்கிறது. எவன் ஒரு உடம்பிலிருக்கும்போது அந்த உடம்புக்கு ஏற்பட்ட பிடித்த வஸ்துக்களை அடைந்து ஸந்தோஷப்படாமலும், பிடிக்காத வஸ்துக்களை அடைந்து வருத்தப்படாமலும் இருக்கிறானோ, அவன் எல்லா ஆத்மாக்களையும் ஒரேமாதிரியாகப் பார்ப்பன். அவனுக்கு வழக்கப்படி ஸந்தோஷமும் வருத்தமும் ஏன் வரவில்லை என்றால், அவன் நிலையாயிருக்கிற ஆத்மாவையே நினைத்துக் கொண்டிருக்கிறான். நிலையில்லாத உடம்பை ஆத்மாவாக நினைக்கவில்லை- இந்த இரண்டும் எப்படி வந்தது என்றால், ஆத்மாவின் உண்மையை அறிந்த பெரியோர்கள் உபதேசத்தினால் ஆத்மாவின் உண்மையைக் கேட்டான். கேட்டு அதன் உண்மையைப் பார்க்கவேணுமென்று பிரயத்தினப்பட்டான். உடம்பே ஆத்மா வென்கிற எண்ணம் போய், நிலையாயிருக்கிற ஆத்மாவைப் பார்ப்பதையே பெரிய பிரயோஜனமாக நினைத்து, அதைப்பழக்கினான். ஆகையாலே, நிலையில்லாத உடம்பைச் சேர்ந்த பிடித்த வஸ்துக்களையும், பிடிக்காத வஸ்துக்களையும் பார்க்கும்போது ஸந்தோஷமுமில்லை, வருத்தமுமில்லை. 1 [ 20 ]

---

1. சின்னபுத்தியால் சொல்லுகிறேன். மன்னிக்கவேணும். உண்மையை அறிந்தவர்களேமிகவும் அரிது. அவர்கள் உபதேசத்தைக் கேட்டு உண்மையை அறிகிறவனும் அரிது. அப்படிஅறிந்தாலும், அது வளரு

பாஹ்யஸ்பர்சேஷ்வஸக்தாத்மா விந்தத்யாத்மநி யத் ஸுகம் ।
ஸ ப்ரஹ்மயோகயுக்தாத்மா ஸுகமக்ஷயமச்நுதே ॥ ॥௨௧॥

ஏவமுக்தேந ப்ரகாரேண பாஹ்யஸ்பர்சேஷு-ஆத்மவ்யதிரிக்தவிஷயாநுபவேஷு அஸக்தமநா: அந்தராத்மந்யேவ ஸுகம் விந்ததி-லபதே। ஸ ப்ரக்ருத்யப்யாஸம் விஹாய ப்ரஹ்மயோகயுக்தாத்மா - ப்ரஹ்மாப்யாஸயுக்தமநா: ப்ரஹ்மாநுபவரூபம் அக்ஷயம் ஸுகம் ப்ராப்நோதி ॥ ॥௨௧॥

கீழ்ச்சொன்னபடி மற்ற பதார்த்தங்கள் பிடிக்காமையால், எவனுக்கு ஆத்மாவே பிடிக்கிறதோ; அவன் உடம்பைச் சேர்ந்த வஸ்துக்களின் பழக்கத்தை விட்டு, எப்போதும் மனதால் ஆத்மாவையே நினைத்துப் பழகி, எல்லையில்லாத, அழிவில்லாத ஆத்மாவைப் பார்ப்பதாகிய ஸுகத்தை அனுபவிக்கிறான். [21]

அத—ப்ராக்ருதஸ்ய போகஸ்ய ஸுத்யஜதாமாஹ—

யே ஹி ஸம்ஸ்பர்சஜா போகா து:கயோநய ஏவ தே ।
ஆத்யந்தவந்த: கௌந்தேய ந தேஷு ரமதே புத: ॥௨௨॥

விஷயேந்த்ரியஸ்பர்சஜா: யே போகா: து:கயோநய: து:கோதர்கா:। ஆத்யந்தவந்த: அல்பகாலவர்திநோ ஹி உபலப்யந்தே। ந தேஷு தத்யாதாத்ம்யவித் ரமதே ॥ ॥௨௨॥

அவ— உடம்பினால் வரும் ஸுகத்தை எளிதாக விடுவதற்கு வழி சொல்லுகிறார்—

---

இறதற்கு பாடு படுகிறது வருத்தம். இப்படியிருந்தால், பிடித்த வஸ்துக்களைக் கண்டு ஸந்தோஷமும் பிடிக்காத வஸ்துக்களைக் கண்டு வருத்தமும் ஏன் வராதிருக்கும். இந்த ஸங்கதி நமக்கு வரவில்லையே என்று வந்து இருக்கிறதோ. பெரியோர்களின் உபதேசத்தையும் சாஸ்திரத்தையும் கொண்டு ஜீவன் இருக்க வேண்டிய விதத்தை அறிந்து, ஒருவன் அப்படியில்லாதபோனாலும், அப்படியிருக்கவில்லையே யென்று வருத்தப் படாதபோனால், அவனிடத்தில் பகவானுக்கு எப்படிப் பிரீதி உண்டாகும். அவனுக்கு அவன் ஆசாரியபலத்தால் நல்ல கதி கிடைக்கலாம். அவனுக்கு வருத்தமில்லாமையால், அவனுக்கு பிரபத்தி செய்ய அதிகாரமில்லை, அவனால் சிஷ்யனுக்கு எப்படி ஸுகம் வரும்,

இந்திரியங்கள் விஷயங்களுடன் சேர்ந்து வரும் ஸுகங்கள் வருத்தப்பட்டு வருகின்றன. மேலும் வருத்தத்தைக் கொடுக்கின்றன. நிலையாயும் இருப்பதில்லை—என்று ஒருவன் அறிந்தால், அவைகள் அவனுக்குப் பிடிக்காது. 1 அவைகளை ஸுகமாய் விடலாம். [ 22 ]

ஶக்நோதீஹைவ ய: ஸோடும் ப்ராக் ஶரீரவிமோக்ஷணாத் |
காமக்ரோதோத்பவம் வேகம் ஸ யுக்த: ஸ ஸுகீ நர: ||௨௩||

ஶரீரவிமோக்ஷணாத் ப்ராகிஹைவ ஸாதநாநுஷ்டாந தஶாயாமேவ ஆத்மாநுபவப்ரீத்யா காமக்ரோதோத்பவம் வேகம் ஸோடும் நிரோத்தும் ய: ஶக்நோதி, ஸ யுக்த: ஆத்மாநுபவாய அர்ஹ: | ஸ ஏவ ஶரீரவிமோக்ஷணோத்தரகாலம் ஆத்மாநுபவைகஸுகஸ்ஸம்பத்ஸ்யதே || ||௨௩||

விஷயங்களை அனுபவித்துவரும் ஸுகத்தில் தோஷங்களைப் பார்த்து, அவைகளில் கொஞ்சமேனும் பிடிமானமில்லாதவனாய், இந்த உடம்புடன் இருந்து ஆத்மாவைப் பார்ப்பதற்கு பழக்கம் செய்யும்போதே எவன் தன்னுடைய ஆத்மாவை அறிவதில் ஸந்தோஷத்தினால் கெட்ட ஆசையினுடைய வேகத்தையும்

---

1. கண்ணினால் ஒரு வஸ்துவை ஒருவன் பார்க்கிறான். அது கொஞ்சம் விலகிப்போனால் அழுகிறான். பாட்டுக்கேட்கும் போது பாட்டுப்பாடுகிறவன் கொஞ்சம் நிறுத்தினால் விசனப்படுகிறான். நல்ல மாங்காய் ஊறுகாயில் ஒரு துண்டத்தை வாயில் போட்டுக் கொண்டு கடித்து விழுங்குகிறான். உடனே இன்னொரு துண்டத்தை வாயில் போட்டுக் கொள்ளுகிறான். முதல் துண்டத்தைக் கடித்து விழுங்கின ஸுகம் கடிகாரத்தின் ஒரு'டிக்'காலமிருக்குமா? அந்த மாங்காயைக் கொண்டு வருவதற்கு எவ்வளவோ பிரயாஸம். அதைச் சாப்பிட்ட பிறகு எவ்வளவோ தொந்தரவு. இவைகளை ஒருவன் அறியும் போது, அவனுக்கு அலுப்புவர வேறு உபதேசம் வேண்டுமா? இதை நாம் வாயால் சொல்லுகிறோமே யொழிய நம் மனதில் படவில்லை. ஜன்மாந்தர ஸுக்ருதமும் பெரியவர்களுடைய அனுக்கிரஹமும் வேண்டும். நம்முடைய கவனிப்பு மாத்திரம் போதாது.

கோபத்தின் 1வேகத்தையும் தடுக்குகிறானோ, அவன்தான் ஆத்மாவைப் பார்ப்பதற்குத் தகுந்தவன். அவன்தான் இந்த உடம்பு போனவுடனேயே ஆத்மாவைப்பார்ப்பதென்கிற ஒரே ஸுகத்தை அடைகிறான். [23]

யோऽந்த:ஸுகோऽந்தராராமஸ்ததாந்தர்ஜ்யோதிரேவ ய: |
ஸ யோகீ ப்ரஹ்ம நிர்வாணம் ப்ரஹ்மபூதோऽதிகச்சதி ||௨௪||

யோ பாஹ்யவிஷயாநுபவம் ஸர்வம் விஹாய அந்த:ஸுக: ஆத்மாநுபவைகஸுக:, அந்தராராம: - ஆத்மைகோத்யாந:, ஸ்வகுணைராத்மைவ ஸுகவர்தகமுத்யாநம் யஸ்ய ஸ ததோக்த: | ததாந்தர்ஜ்யோதி: - ஆத்மைகஜ்ஞாநோ யோ வர்ததே ஸ ப்ரஹ்மபூதோ யோகீ ப்ரஹ்மநிர்வாணம் - ஆத்மாநுபவஸுகம் ப்ராப்நோதி || ||௨௪||

ஆத்மாவைத் தவிர, மற்ற எல்லா விஷயங்களுடைய அனுபவத்தை விட்டு, ஆத்மாவை நினைத்தே எவன் ஸுகப்படுகிறானோ, எவனுக்கு ஆத்மாவே அநேக ஸுகங்களைக் கொடுக்கக் கூடிய உயர்ந்த 2 தோட்டம்போல் இருக்கிறதோ, எவனுக்கு எப்போதும் ஆத்மா 3 ஒன்றே தோன்றுகிறதோ, அவன் ஆத்மாவாக

1. வேகமாவது யோஜிக்காமல் தடுக்கமுடியாதபடி செய்கிற வேலை. கெட்ட ஆசையின் வேகமென்பது —தகாத விஷயத்தை நினைப்பது, இளப்பமான பேச்சுகளைப்பேசுவது, ராஜாவின் அந்தப்புரத்தில் பிரவேசிப்பது-இவை முதலானவைகள். கோபத்தினுடைய வேகமாவது— பிறருக்கு வருத்தம் உண்டுபண்ணக்கூடிய வேலையை எண்ணுவது, கடுமையாய்ப் பேசுவது, அடிப்பது முதலானவைகள்.

2. தோட்டமானது, நிழல், தளிர், பூ, பழம், இவை முதலானவைகளால் ஒருவனுக்கு மிகுந்த ஸந்தோஷத்தைக் கொடுக்கிறது. அது போல, ஆத்மாவானது தன்னுடைய ஞானம், ஆனந்தம் முதலான குணங்களால் ஸந்தோஷத்தை வளர்க்கிறது.

3. உலகத்தில் ஒருவன் சாதத்தை ஒரு இடத்தில் வைத்துக் கொண்டு, தண்ணீர், ஊறுகாய் இவைகளுடன் சாப்பிடுகிறான். ஆத்மாவை அனுபவிக்கிறவனுக்கு அப்படி யல்ல. அவனுக்கு ஆத்மாவே சோறு, ஆத்மாவே இடம், ஆத்மாவே தண்ணீரும் ஊறுகாயும். ஆத்மாவென்கிற ஒரு வஸ்துவே அவனுக்கு எல்லாமாக இருக்கிறது.

1 ஆகி, ஆத்மாவை அனுபவிக்கிற ஸுகத்தை அடைகிருன். [24]

𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌮𑍃𑌷𑌯𑌃 𑌕𑍍𑌷𑍀𑌣𑌕𑌲𑍍𑌮𑌷𑌾𑌃 |
𑌛𑌿𑌨𑍍𑌨𑌦𑍍𑌵𑍈𑌧𑌾 𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌹𑌿𑌤𑍇 𑌰𑌤𑌾𑌃 ||௨௫||

𑌛𑌿𑌨𑍍𑌨𑌦𑍍𑌵𑍈𑌧𑌾𑌃 𑌶𑍀𑌤𑍋𑌷𑍍𑌣𑌾𑌦𑌿𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌯𑌤
𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃-𑌆𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵 𑌨𑌿𑌯𑌮𑌿𑌤𑌮𑌨𑌸𑌃, 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌹𑌿𑌤𑍇 𑌰𑌤𑌾𑌃
𑌆𑌤𑍍𑌮𑌵𑌦𑍇𑌵 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌹𑌿𑌤𑍇𑌷𑍍𑌵𑍇𑌵 𑌨𑌿𑌰𑌤𑌾𑌃, 𑌋𑌷
𑌯𑌃-𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾𑌰𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾𑌵𑌲𑍋𑌕𑌨𑌪𑌰𑌾𑌃| 𑌯 𑌏𑌵𑌂𑌭𑍂𑌤𑌾𑌸𑍍𑌤 𑌏𑌵
𑌕𑍍𑌷𑍀𑌣𑌾𑌶𑍇𑌷𑌾𑌤𑍍𑌮𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌕𑌲𑍍𑌮𑌷𑌾𑌃 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌂 𑌲
𑌭𑌨𑍍𑌤𑍇 || ||௨௫||

குளிர், வெய்யில் முதலான தொந்தரவுகளை ஜயித்து,மனதை ஆத்மாவைத் தவிர மற்ற இடங்களில் போகாமல் அடக்கி, 2 எல்லாப் பிராணிகளுக்கும் அனுகூலமானதைச் செய்வதில் ஆசையோடு, எவர்கள் ஆத்மாவைப் பார்க்கிருர்களோ, அவர்களுக்கு ஆத்மாவைப் பார்ப்பதற்கு இடஞ்சலான எல்லா பாபங்களும் போய், அவர்கள் ஆத்மாவைப் பார்த்து ஸுகத்தை அனுபவிக்கிருர்கள். [25]

𑌅𑌥—𑌉𑌕𑍍𑌤𑌗𑍁𑌣𑌾𑌨𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌹𑌸𑍍𑌤𑌸𑍍𑌥𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌹—
𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌵𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌯𑌤𑍀𑌨𑌾𑌂 𑌯𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌮𑍍 |
𑌅𑌭𑌿𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌂 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌵𑌿𑌦𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌮𑍍 || ||௨௬||

𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌵𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌯𑌤𑍀𑌨𑌾𑌂-𑌯𑌤𑌨𑌶𑍀𑌲𑌾𑌨𑌾𑌮𑍍, 𑌯𑌤
𑌚𑍇𑌤𑌸𑌾𑌂-𑌨𑌿𑌯𑌮𑌿𑌤𑌮𑌨𑌸𑌾𑌂 𑌵𑌿𑌦𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌮𑍍, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌾
𑌣𑌮𑌭𑌿𑌤𑍋 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇-𑌏𑌵𑌂𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌹𑌸𑍍𑌤𑌸𑍍𑌥𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌾
𑌣𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 || ||௨௬||

---

1. ஆத்மாவை அனுபவிப்பதற்குமுன் உடம்பாயிருந்தான். இப்போது ஆத்மாவாக ஆய்விடுகிருன். அதாவது, தன்னை முன்பு உடம்பாக நினைத்திருந்தான். இப்போது ஞான ஸ்வரூபனுக ஆத்மாவை நினைக்கிருன்.

2. 'எல்லாப்பிராணிகளுக்கும்' என்று தன்னைச் சேர்த்துச் சொன்னது—ஒருவன் தனக்கு எப்படி அனுகூலத்தையே செய்வனே, அப்படியே மற்றவர்களுக்கும் செய்யவேணு மென்று காட்டுவதற்காக.

*அவ—* கீழ்ச்சொன்ன 1 குணம் உள்ளவர்கள் ஆத்மஸ்வரூபத்தைப் பிரயாஸம் இல்லாமல் உள்ளபடி பார்க்கிறார்கள்—

2. ஆசையும், கோபமும் இல்லாமல், ஆத்மாவை உள்ளபடி அறியவேணுமென்று 3 பிரயத்தனப்பட்டு, ஆத்மாவில் 4 எல்லாவித ஸுகங்களுமிருப்பதாக எண்ணி, இதர விஷயங்களில் 5 தோஷங்களைப் பார்த்து, மனதை ஜயிக்கிறவர்களுக்கு ஆத்மாவைப்பார்ப்பதனால் வரும் ஸுகம் அவர்களைச் சுற்றிலும் இருக்கிறது. அதாவது அவர்கள் 6 கையிலிருக்கிறது. [ 26 ]

अथ—उक्तं कर्मयोगं स्पर्शत्यागोपेतयोगशिरस्कमुपसंहरति—

स्पर्शान्कृत्वा बहिर्बाह्यांश्चक्षुश्चैवान्तरे भ्रुवोः । प्राणापानौ समौ कृत्वा नासाभ्यन्तरचारिणौ ॥ ॥२७॥

यतेन्द्रियमनोबुद्धिर्मुनिर्मोक्षपरायणः ।
विगतेच्छाभयक्रोधो यः सदा मुक्त एव सः ॥ ॥२८॥

---

1. இந்த குணங்களாவன:— 1. பிடித்த வஸ்துவினால் ஸந்தோஷமும், பிடிக்காத வஸ்துவினால் வருத்தமும் இல்லாமை. 2. ஆத்மாவைத்தவிர வேறு வஸ்துக்களில் ஆசையில்லாமை. 3. ஆத்மாவைத் தவிர, வேறு வஸ்துக்களை அனுபவித்து வரும் ஸுகத்தில் இருக்கும் கெடுதிகளை நினைக்கை. 4. ஆத்மாவையே எல்லாவிதமான இன்பமான வஸ்துக்களாக நினைப்பது. 5. ஆசையின் வேகத்தையும், கோபத்தின் வேகத்தையும் தடுப்பது. 6. எல்லாப் பிராணிகளுக்கும் அனுகூலத்தையே செய்ய ஆசைப்படுவது. இவைகளில் 6-வது குணமானது எல்லா ஆத்மாக்களும் ஒரேமாதிரி என்கிற பார்வைக்கு மிகவும் உயர்ந்த ஸாதநம். இந்தப் பார்வை துளி வந்தால் இந்தக்குணம் வரும் அதால் இந்தப் பார்வை வளரும்.

2. இது 23-வது சுலோகத்தின் பொருள்.

3. இது 20, 21-வது சுலோகங்களின் பொருள்.

4. இது 24-வது சுலோகத்தின் பொருள்.

5. இது 22-வது சுலோகத்தின் பொருள்.

6 கையிலே ஒரு கழியை வைத்துக் கொண்டு அதினாலே மரத்திலிருந்து பறிக்க வேண்டிய பழம் போலன்று, கையிலேயே இருக்கிறது.

[illegible] ||௨௭-௨௮||

அவ— கர்ம யோகம் செய்தபிறகு ஆத்மாவைப் பார்க்கலாம் என்று சொல்லி, கர்ம யோகத்தைப் பற்றின உபதேசத்தை முடிக்கிறார்—

கண் முதலான இந்திரியங்களை விஷயங்களில் விடாமல் தடுத்து, தியானம் பண்ணத் தகுந்த 1 ஆஸனத்தில் உடம்பை வளைக்காமல் உட்கார்ந்து, 2 கண்களை மூக்கு நுனியில் வைத்து, வெளியே வருகிற காற்றையும், உள்ளே போகிற காற்றையும், (பிராணனையும், அபானனையும்) 3 ஸமமாய்ப் பண்ணி, ஆத்மாவைப் பார்ப்பது தவிர வேறு விஷயங்களில் 4 இந்திரியங்களும், மனதும்

1. இது 6-வது அத்தியாயம் 11-வது சுலோகத்திலும் 13-வது சுலோகத்திலும் சொல்லப் போவதை நினைத்து சொல்லப்பட்டது.

2. சுலோகத்தில் "கண்ணை இரண்டு புருவங்களின் நடுவில் நிறுத்தி" என்று சொல்லியிருந்த போதிலும், 6-வது அத்தியாயம் 13-வது சுலோகத்தில் மூக்கைப் பார்த்துக் கொண்டு என்று சொல்லி யிருப்பதனாலே இப்படி சொல்லப்பட்டது.

3. 'ஸமமாய்ப் பண்ணி' என்பது ஒரேஇடத்தில் ஒரேவேளையுள்ளதாகப் பண்ணி என்றுபொருள் அன்று. ஒரேமாதிரி போகும்படி பண்ணி என்றுபொருள். அதாவது எப்படிமூச்சு வெளியேவருகிறதோ அப்படி மூச்சு உள்ளேபோகவேண்டியதென்று பொருள்.

4. 'இந்திரியங்களை விஷயங்களில் விடாமல்தடுத்து' என்பது விஷயங்களைத் தொடஆரம்பித்தவைகளைத் தடுப்பது. இங்கே "போகாதபடி பண்ணி" என்பது அதினுடைய பலனாய் தன்னடையே விஷயங்களில் போகாததைச்சொன்னபடி. ஆகையினாலே ஒரேஸங்கதியை இரண்டு தடவை சொன்ன தோஷமில்லை.

எண்ணமும், போகாதபடி பண்ணி, அதனாலேயே ஆசையும், பயமும், கோபமும் போய், ஆத்மாவைப் பார்ப்பதையே பிரயோஜனமாக நினைத்து, எவன் ஆத்மாவைப் பார்ப்பதற்கு பழக்கம் பண்ணுகிறானோ, அவன் எப்போதும் ஸம்ஸாரத்தால் விடப்பட்டவனே. அதாவது ஆத்மாவைப் பார்க்கிறபோதும், ஆத்மாவைப் பார்க்கப் பழக்குகிறபோதும், எப்போதும் துக்கப்படாதவன். [27—28]

𑌉𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌨𑌿𑌤𑍍𑌯𑌨𑍈𑌮𑌿𑌤𑍍𑌤𑌿𑌕𑌕𑌰𑍍𑌮𑍇𑌤𑌿𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑌾𑌕𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌯𑍋𑌗𑌶𑌿𑌰𑌸𑍍𑌕𑌸𑍍𑌯 𑌸𑍁𑌕𑌰𑌤𑌾𑌮𑌾𑌹 —

𑌭𑍋𑌕𑍍𑌤𑌾𑌰𑌂 𑌯𑌜𑍍𑌞𑌤𑌪𑌸𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ।
𑌸𑍁𑌹𑍃𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑌾𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑍃𑌚𑍍𑌛𑌤𑌿 ॥

𑌯𑌜𑍍𑌞𑌤𑌪𑌸𑌾𑌂 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌸𑍁𑌹𑍃𑌦𑌂 𑌮𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑍃𑌚𑍍𑌛𑌤𑌿-𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌕𑌰𑌣 𑌏𑌵 𑌸𑍁𑌖𑌮𑍃𑌚𑍍𑌛𑌤𑌿 । 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌂-𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌲𑍋𑌕𑍇𑌶𑍍𑌵𑌰𑌾𑌣𑌾𑌮𑌪𑍀𑌶𑍍𑌵𑌰𑌮𑍍। “𑌤𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌾𑌣𑌾𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍” 𑌇𑌤𑌿 𑌹𑌿 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑍇 । 𑌮𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍁𑌹𑍃𑌦𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑌦𑌾𑌰𑌾𑌧𑌨𑌰𑍂𑌪𑌃 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗 𑌇𑌤𑌿 𑌸𑍁𑌖𑍇𑌨 𑌤𑌤𑍍𑌰 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌸𑍁𑌹𑍃𑌦 𑌆𑌰𑌾𑌧𑌨𑌾𑌯 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌪𑍍𑌰𑌯𑌤𑌨𑍍𑌤𑍇 ॥ ॥௨௯॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌵𑌿𑌰𑌚𑌿𑌤𑍇 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌭𑌾𑌷𑍍𑌯𑍇 𑌪𑌞𑍍𑌚𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ।

அவ— கீழ்ச்சொன்ன கர்ம யோகத்தை பிரயாஸமில்லாமல் செய்வதற்கு வழியைச் சொல்லுகிறார்—

உலகத்தில் செய்யப்பட்ட எல்லா யக்ஞங்களாலும், தபஸ்ஸுகளாலும் நான்தான் ஸந்தோஷத்தை யடைகிறவன். நான்தான எல்லா உலகங்களுக்கும் மஹாராஜா. எல்லா ஆத்மாக்களுக்கும் க்ஷேமத்தை நினைக்கிறவனும் நானே. இப்படி என்னை ஒருவன் நினைத்து கர்ம யோகத்தைச் செய்தால், அதாவது கர்ம யோகத்தைச் செய்யும்போது என்னை இந்தமாதிரி நினைத்தால் அதைக் கொஞ்சங்கூட வருத்தமில்லாமல் ஸந்தோஷத்துடன் செய்வன். மிகவும் இன்பமான மாப்பிள்ளை வீட்டிற்கு வந்தால், எவ்வளவு வேலைகளைச் செய்தாலும் மாமியாருக்கு வருத்தமிராது. பரமஸந்தோஷமாக இருக்கும். அதுபோல.

ஸ்ரீமதே பகவதே பாஷ்யகாராய மஹாதேசிகாய நம:

ஶ்ரீமதே ராமாநுஜாய நம꞉ ||

ஷஷ்டோ(அ)த்⁴யாய꞉ ||

———:0:———

ஶ்ரீப⁴க³வாநுவாச—

அநாஶ்ரித꞉ கர்மப²லம் கார்யம் கர்ம கரோதி ய꞉ |
ஸ ஸம்ந்யாஸீ ச யோகீ³ ச ந நிரக்³நிர்ந சாக்ரிய꞉ || ||1||

உக்த꞉ கர்மயோக³꞉ ஸபரிகர꞉ | இதா³நீம் ஜ்ஞாநயோக³கர்மயோக³ஸாத்⁴யாத்மாவலோகநரூபயோகா³ப்⁴யாஸவிதி⁴ருச்யதே | தத்ர கர்மயோக³ஸ்ய நிரபேக்ஷயோக³ஸாத⁴நத்வம் த்³ரட⁴யிதும் ஜ்ஞாநாகார꞉ கர்மயோகோ³ யோக³ஶிரஸ்க இத்யநூத்³யதே |

கர்மப²லம்-ஸ்வர்கா³தி³கமநாஶ்ரித꞉ கார்யம்-கர்மாநுஷ்டா²நமேவ கார்யம் ஸர்வாத்மநா(அ)ஸ்மத்ஸுஹ்ருத்³ப⁴க³வதா³ராத⁴நரூபதயா கர்மைவ மம ப்ரயோஜநம்-ந தத்ஸாத்⁴யம் கிஞ்சிதி³தி ய꞉ கர்ம கரோதி| ஸ ஸம்ந்யாஸீ ச-ஜ்ஞாநயோக³நிஷ்ட²ஶ்ச, யோகீ³ ச-கர்மயோக³நிஷ்ட²ஶ்ச-ஆத்மாவலோகநரூபயோக³ஸாத⁴நபூ⁴தோப⁴யநிஷ்ட² இத்யர்த²꞉ | ந நிரக்³நிர்ந சாக்ரிய꞉-ந சோதி³தயஜ்ஞாதி³கர்மஸ்வப்ரவ்ருத்த꞉ ந ச கேவலஜ்ஞாநநிஷ்ட²꞉, தஸ்ய ஹி ஜ்ஞாநநிஷ்டை²வ, கர்மயோக³நிஷ்ட²ஸ்ய தூப⁴யமஸ்தீத்யபி⁴ப்ராய꞉ || ||1||

அவ— அங்கங்களுடன் கர்மயோகம் சொல்லப்பட்டது. ஞான யோகத்தினுலும், கர்ம யோகத்தினுலும் வரக்கூடிய ஆத்மாவின் பார்வையைப் பழக்கும் வழியை இந்த அத்தியாயத்தில் சொல்லுகிருர். முதலில் ஞான யோகத்தின் உதவியில்லாமலே, கர்ம யோகம் ஆத்மாவின் பார்வையை உண்டுபண்ணும் என்கிற விஷயத்தை உறுதிப்படுத்துவதற்காக, அது ஞான ரூபமாயிருக்கிறதென்றும், முடிவில் ஆத்மாவின் பார்வையைக் கொடுக்குமென்றும் முன் சொன்னதையே சொல்லுகிருர்—

கர்மங்களுக்கு ஏற்பட்ட ஸ்வர்க்கம் முதலான பலன்களில் ஆசையை விட்டு, நமக்கு மிகவும் வேண்டியவரான பகவானுக்குப்

பிரீதியை உண்டாக்குவதால் கர்மங்களை நமக்குப் பிரயோஜனம், வேறு ஒன்றும் வேண்டாம் என்று நினைத்து, எவன் ஸந்தோஷத்துடன் கர்மங்களைச் செய்கிறானோ, அவன் ஞான யோகத்தையும், கர்ம யோகத்தையும், இரண்டையும் செய்கிறவன். யக்ஞம் முதலான கர்மங்களைச் செய்யாத ஞான யோகக்காரன் அப்படியல்ல. அவனுக்கு ஞான யோகம் ஒன்றுதான். [1]

அத—உக்தலக்ஷணகர்மயோகே ஜ்ஞாநமப்யஸ்தீத்யாஹ—

யம் ஸந்ந்யாஸ இதி ப்ராஹுர்யோகம் தம் வித்தி பாண்டவ ।
ந ஹ்யஸந்ந்யஸ்தஸங்கல்போ யோகீ பவதி கஶ்சந ॥ ௨ ॥

யம் ஸந்ந்யாஸ இதி-ஜ்ஞாநயோக இதி-ஆத்மயாதாத்ம்யஜ்ஞாநமிதி ப்ராஹுஸ்தம் கர்மயோகமேவ வித்தி। ததுபபாதயதி-நஹ்யஸந்ந்யஸ்தஸங்கல்போ யோகீ பவதி கஶ்சநேதி। ஆத்மயாதாத்ம்யாநுஸந்தாநேந அநாத்மநி ப்ரக்ருதாவாத்மஸங்கல்ப: ஸந்ந்யஸ்த: பரித்யக்தோ யேந ஸ ஸந்ந்யஸ்தஸங்கல்ப:, அநேவம்பூத: அஸந்ந்யஸ்தஸங்கல்ப: । ந ஹ்யுக்தேஷு கர்மயோகிஷு அநேவம்பூத: கஶ்சந கர்மயோகீ பவதி । "யஸ்ய ஸர்வே ஸமாரம்பா: காமஸங்கல்பவர்ஜிதா:" இதி ஹ்யுக்தம் ॥ ௨ ॥

கர்ம யோகத்தை ஞான யோகமென்றே நினை—அதாவது ஞான யோகமென்பது ஆத்மாவின் உண்மையான அறிவு. அது கர்ம யோகத்திலும் இருக்கிறது. ஆத்மாவின் உண்மையை அறியாமல், அதாவது—ஆத்மாவே உடம்பு என்கிற எண்ணத்தை விடாமல், ஒருவனும் கர்ம யோகம் செய்ய முடியாது. இந்த ஸங்கதி 4-வது அத்தியாயம் 19-வது சுலோகத்தில் சொல்லியிருக்கிறது. [2]

அத—கர்மயோக ஏவாப்ரமாதேந யோகம் ஸாதயதீத்யாஹ—

ஆருருக்ஷோர்முநேர்யோகம் கர்ம காரணமுச்யதே ।
யோகாரூடஸ்ய தஸ்யைவ ஶம: காரணமுச்யதே ॥ ௩ ॥

யோகம்-ஆத்மாவலோகநம் ப்ராப்துமிச்சோர்முமுக்ஷோ:

கர்மயோக ஏவ காரணமுச்யதே | தஸ்யைவ யோகாரூடஸ்ய-ப்ரதிஷ்டிதயோகஸ்யைவ ஶம:-கர்மநிவ்ருத்தி: காரணமுச்யதே | யாவதாத்மாவலோகநரூபமோக்ஷாவாப்தி கர்ம கார்யமித்யர்த: || ||3||

அவ— கர்ம யோகம் பண்ணினால்தான் தொந்தரவு இல்லாமல் ஆத்மாவைப் பார்க்கலாம். அது முழுக்க நடக்கும் என்று சொல்லுகிறார்—

ஆத்மாவைப் பார்க்க வேணுமென்று ஆசைப்படுகிற [1] ஏறவேணுமென்று நினைக்கிறவனுக்கு கர்ம யோகம்தான் செய்ய வேண்டும். ஏறினவனுக்கு ஆத்மாவைப் பார்ப்பதால் கர்மம் வேண்டாம். ஆகையால் ஆத்மாவைப் பார்க்கிறவரையில் கர்மம் செய்ய வேண்டியது. [3]

அவ — கதா ப்ரதிஷ்டிதயோகோ பவதீத்யத்ராஹ —

யதா ஹி நேந்த்ரியார்தேஷு ந கர்மஸ்வநுஷஜ்ஜதே |
ஸர்வஸங்கல்பஸந்ந்யாஸீ யோகாரூடஸ்ததோச்யதே || ||4||

யதாऽயம் யோகீ து ஆத்மைகாநுபவஸ்வபாவதயா இந்த்ரியார்தேஷு-ஆத்மவ்யதிரிக்தப்ராக்ருதவிஷயேஷு, தத்ஸம்பந்திஷு ச கர்மஸு நாநுஷஜ்ஜதே-ந ஸங்கமர்ஹதி | ததா ஹி ஸர்வஸங்கல்பஸந்ந்யாஸீ யோகாரூட இத்யுச்யதே | தஸ்மாதாருருக்ஷோர்விஷயாநநுஷங்காப்யாஸரூப: கர்மயோக ஏவ யோகநிஷ்பத்திகாரணம், அத: விஷயாநநுஷங்காப்யாஸரூபம் கர்மயோகமேவாருருக்ஷு: குர்யாத் || ||4||

---

1. இதே ஸங்கதி 3-வது அத்தியாயம் 17-வது சுலோகத்தில் சொல்லப்பட்டது. இந்த சுலோகத்தில் "ஏறவேணுமென்று நினைக்கிறவன்" என்றும், "ஏறினவன்" என்றும் பொருளுள்ள இரண்டு சொற்கள் இருக்கின்றன. ஏறினவன் என்பவன் எப்போதும் ஆத்மாவையே பார்த்துக் கொண்டிருப்பதால் எதிரில் என்ன நின்றாலும் அவனுக்குத் தோன்றாது. ஆகையால் அவனுக்குக் கர்மம் வேண்டாம். ஏறவேணுமென்று நினைக்கிறவன் கர்மத்தைத்தான் செய்யவேண்டும்.

அவ—எப்போது ஏறினவன் ஆகிறான் என்றால் சொல்லு கிறார்—

எப்போதும் ஒருவன் ஆத்மா ஒன்றையே பார்த்துக்கொண் டிருப்பதால், அதைக்காட்டிலும் வேறான விஷயங்களை அனுப விப்பதிலும், அதற்கு வேண்டிய வேலைகளிலும், எவனுடைய இந்திரியங்கள் தாமாகவே செல்லாதோ, அப்போது அவன் உட ம்புதான் ஆத்மா என்கிற எண்ணத்தை அடியோடு விட்டு, "ஆத் மாவைப்பார்க்கிறவன் (ஏறினவன்)" என்று சொல்லப்படுகிறான். ஆகையால் ஏறுகிறவனுடைய இந்திரியங்கள் விஷயங்களில் போக த்தகுந்தவைகளாய் இருக்கிறபடியால், விஷயங்களில் இந்திரியங் கள் போகாதிருப்பதைப் பழக்குவதாகிய கர்மயோகத்தைத்தான் அவன் செய்யவேண்டியது. (4)

அவ—தடுவாஹ—

உஃஶெரஓாத்தாநாzzத்தாநஂ நாத்தாநஉவஸாஓயெஶ ।
ஆலெக்ஷுவ ஹ்யாத்தநொ வஸுஶுரொகெக்ஷுவ ரிவஶுராத்தநஃ॥௫॥

ஆத்தநா உநவஸா-விஷயாநநஶஷெக்ஷ உநவஸா ஆத்தந உஶஶெரஶ। தவிவாரீத உநவஸா ஆத்தாநஂ நாவஸாஓயெஶ। ஆலெக்ஷுவ-உநவநவ ஹ்யாத்தநொ வஂயுஃ, தடுவாத்தநொ ரிவஃ॥ ॥௫॥

அவ—கீழ் இரண்டு சுலோகங்களில் சொன்ன அர்த்தத்தை விரித்துச்சொல்லுகிறார்—

மனதை ஆத்மாவைத்தவிர வேறு விஷயங்களில் போகவிடா மல் அடக்கி, ஆத்மாவையே பார்க்கும்படி செய்து, ஸம்ஸாரத்தைப் போக்கி, ஆத்மாவுக்கு க்ஷேமத்தை உண்டுபண்ணவேண்டும். மன தை அடக்காமல் ஆத்மாவைக்கெடுக்கக்கூடாது. ஆத்மாவிற்கு மன து தான் பந்து (உறவு). மற்ற பந்துக்கள் நல்லதைக்கெடுத்தாலும் மனது ஸரியாக இருந்தால், அவர்களால் கெடுக்க முடியாது. ஆத் மாவிற்கு மனது தான் சத்துரு. மற்ற சத்துருக்கள் நல்லதைச் சொன்னாலும், மனது கெடுதலாயிருந்தால், அவர்களால் அனுகூல மில்லை. [5]

ஸ்ம்யமாத்ராத்ரஸ்ய யேநாத்மைவாத்மநா ஜித: ।
அநாத்மநஸ்து ஶத்ருத்வே வர்தேதாத்மைவ ஶத்ருவத் ॥௬॥

யேந மநஸா ஸ்வேநைவ ஸ்வஸ்மிந் விஷயே ஹ்யோ ஜிதம், தந்மநஸ்தஸ்ய ஸம்யம: । அநாத்மந:-அஜிதமநஸ:-ஸ்வகீயமேவ மந: ஸ்வஸ்ய ஶத்ருவத் ஶத்ருத்வே வர்தேத-ஸ்வநி:ஶ்ரேயஸவிபரீதே வர்தேதேத்யர்த: । யதோக்தம் பகவதா பராஶரேணாபி "மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ: । பந்தாய விஷயாஸங்கி முக்த்யை நிர்விஷயம் மந:" இதி ॥ ॥௬॥

எவனால் மனது விஷயங்களில் போகாமல் தடுக்கப்படுகிறதோ, அந்த மனது அவனுக்குத்துணை. எந்த மனது எவனால் தடுக்கப்படவில்லையோ, அவனுக்கு அது சத்துருபோல் ஆத்மாவின் க்ஷேமத்தைக்கெடுக்கிறது. [ 6 ]

அத—யோகாரம்பயோக்யாவஸ்தாமாஹ—

ஜிதாத்மந: ப்ரஶாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹித: ।
ஶீதோஷ்ணஸுகது:கேஷு ததா மாநாபமாநயோ: ॥௭॥

ஶீதோஷ்ணஸுகது:கேஷு மாநாபமாநயோஶ்ச ஜிதாத்மந:-ஜிதமநஸ: விகாரரஹிதமநஸ:, ப்ரஶாந்தஸ்ய மநஸி பரமாத்மா ஸமாஹித:-ஸம்யக்ஸமாஹித:-ஸ்வரூபேணாவஸ்தித: । ப்ரத்யகாத்மா அத்ர பரமாத்மேத்யுச்யதே, தமேவாதிக்ருத்ய ப்ரக்ருதத்வாத் । தஸ்யாபி பூர்வபூர்வாவஸ்தாபேக்ஷயா பரமாத்மத்வாத் । ஆத்மா பரம் ஸமாஹித இதி வாऽந்வய: ॥ ॥௭॥

அத—ஆத்மாவைத் தியானம் பண்ண ஆரம்பிப்பதற்குத் தகுந்த இருப்பைச் சொல்லுகிறார்—

எப்போது குளிரையும், சூட்டையும், ஸுகத்தையும், துக்கத்தையும் அனுபவிக்கும்போதும், ஒருவன் தன்னைப்பெருமைப் படுத்துகிறபோதும், அவமானம் பண்ணுகிறபோதும், எவனுக்கு மனது கலங்காமல் இருக்கிறதோ, எவன் கண் முதலான இந்திரி

யங்களை வெளியில் விடாமல் இருக்கிறானோ, அப்போது அவன் ஆத்மாவைத் தியானம் பண்ணத்தகுந்தவன்.

சுலோகத்தில் பரமாத்மா என்கிற சொல் இருக்கிறது. அதற்கு ஜீவாத்மா என்றுதான் பொருள். முன்னே உடம்போடு சேர்ந்திருப்பதால் தன்னை உடம்பாகவே எண்ணினான். இப்போது உடம்பைக்காட்டிலும் வேறாகத் தன்னை எண்ணியிருப்பதால், அவன் (பரமாத்மா) உயர்ந்த ஆத்மாவாகச் சொல்லப்படுகிறான். [7]

ஜ்ஞாநவிஜ்ஞாநத்ருப்தாத்மா கூடஸ்தோ விஜிதேந்த்ரிய: |
யுக்த இத்யுச்யதே யோகீ ஸமலோஷ்டாஸ்மகாஞ்சந: || ||௮||

ஜ்ஞாநவிஜ்ஞாநத்ருப்தாத்மா-ஆத்மஸ்வரூபவிஷயேண ஜ்ஞாநேந தஸ்ய ச ப்ரக்ருதிவிஸஜாதீயாகாரவிஷயேண ஜ்ஞாநேந ச த்ருப்தமநா: | கூடஸ்த:-தேவாத்யவஸ்தாஸு அநுவர்தமாநஸர்வஸாதாரண ஜ்ஞாநைகாகாராத்மநி ஸ்தித: | அத ஏவ விஜிதேந்த்ரிய: ஸமலோஷ்டாஸ்மகாஞ்சந:-ப்ரக்ருதிவிவிக்தஸ்வரூப நிஷ்டதயா ப்ராக்ருதவஸ்துவிஶேஷேஷு போக்யதாபாவாத் லோஷ்டாஸ்மகாஞ்சநேஷு ஸமப்ரயோஜநோ ய: கர்மயோகீ ஸ யுக்த இத்யுச்யதே | ஆத்மாவலோகநரூபயோகாப்யாஸார்ஹ இத்யுச்யதே | ||௮||

எவன் பொதுவாய் ஆத்மா என்று ஒன்று இருக்கிறது என்றும், உடம்பிற்கும் அதற்கும் வேறுபாடு இருக்கிறதென்றும், அறிந்து அதனால் ஸந்தோஷத்தையடைந்து, அனேக விதமான உடம்புகளில் ஆத்மா இருந்தபோதிலும், எல்லாவற்றிலும் ஞான ஸ்வரூபமாய், ஒரே மாதிரியாய் ஆத்மா இருக்கிறதென்று தீர்மானித்து, அந்த எண்ணம் உறுதியாய் இருப்பதால், இந்திரியங்களை ஜயித்து, உடம்பைக்காட்டிலும் வேறான ஆத்மாவை எப்போதும் நினைத்துக் கொண்டிருக்கிறபடியினால், உலகத்திலுள்ள மற்ற வஸ்துக்களில் பிரீதி இல்லாமையால்[1] தங்கத்தையும் ஓட்டுச்

1. ஓட்டுச்சல்லிக்கும், கருங்கல்சல்லிக்கும் வித்தியாஸம் இருந்தபோதிலும் இரண்டையும் ஒரேமாதிரி எப்படி அலக்ஷ்யம் பண்ணுகிறார்களோ, அதேமாதிரி கருங்கல்லுக்கும் தங்கத்திற்கும் வித்தியாஸ

சல்லியையும், கருங்கல்லையும் ஒரே மாதிரியாய் நினைக்கிறானோ, அவன் ஆத்மாவின் பார்வையைப் பழக்கம் பண்ணத்(தியானம் பண்ண) தகுந்தவனென்று சொல்லப்படுகிறான். [8]

௯ — ததா ச —

ஸுஹ்ருந்மித்ரார்யுதாஸீநமத்யஸ்தத்வேஷ்யபந்துஷு ।
ஸாதுஷ்வபி ச பாபேஷு ஸமபுத்திர்விஶிஷ்யதே ॥௯॥

வயோவிஶேஷாநங்கீகாரேண ஸ்வஹிதைஷிண: ஸுஹ்ருத: । ஸமவயஸோ ஹிதைஷிணோ மித்ராணி । அரயோ நிமித்ததோ(அ)நர்த்தேச்சவ: । உபயஹேத்வபாவாத் உபயரஹிதா உதாஸீநா: । ஜந்மத ஏவோபயரஹிதா மத்யஸ்தா: । ஜந்மத ஏவாநிஷ்டேச்சவோ த்வேஷ்யா: । ஜந்மத ஏவ ஹிதைஷிணோ பந்தவ: । ஸாதவோ தர்மஶீலா: । பாபா: பாபஶீலா: । ஆத்மைகப்ரயோஜநதயா ஸுஹ்ருந்மித்ராதிபி: ப்ரயோஜநாபாவாத் விரோதாபாவாச்ச தேஷு ஸமபுத்திர்யோகார்ஹத்வே விஶிஷ்யதே ॥ ॥௯॥

1உலகத்தில் ஒருவனுக்கு ஜனங்களில் சிலர்வேண்டியவர்கள் என்றும், சிலர் வேண்டாதவர்கள் என்றும், சிலர் இரண்டுமில்

---

மிருந்தபோதிலும், இவை யிரண்டையும் ஒரேமாதிரி அலக்ஷியம்பண்ணுகிறான். அவைகளில் எதிலும் அவனுக்குப் பிரயோஜனமில்லை. பிரயோஜனமில்லாமையில்அவைகளெல்லாம்அவனுக்குஸமமாயிருக்கின்றன.

1. சுலோகத்தில் வேண்டியவர்களை ஸுஹ்ருத்—மித்ர—பந்து—என்கிற மூன்று சொற்களால் சொல்லியிருக்கிறது. இவர்களில் பந்துக்கள்—தகப்பனர் முதலானவர்கள். மித்திரன்—ஸமான வயதுள்ள வேண்டியவன். ஸுஹ்ருத் என்பவன் ஸமமானவயவில்லாத க்ஷேமத்தையே நினைக்கிறவன். வேண்டாதவர்களை 'அரி, த்வேஷ்ய' என்கிற சொற்களாலே சொல்லியிருக்கிறது. பந்து என்ற சொல்லுடன் சேர்த்துச்சொல்லியிருப்பதினாலே,'த்வேஷ்ய' என்றசொல் பிறப்பாலேவிரோதியைச்சொல்லுகிறது. 'அரி' என்கிற சொல்லானது ஒரு காரணத்தினாலே விரோதியாயிருக்கிறவனைச் சொல்லுகிறது. 'உதாஸீந' என்பவர்கள் ஸ்நேஹத்திற்கும் த்வேஷத்திற்கும் காரணமில்லாததால் இரண்டும் இல்லாதவர்கள். மத்யஸ்த என்கிற சொல்லானது பிறப்பினாலே இரண்டும் இல்லாதவர்களைச் சொல்லுகிறது.

லாதவர்கள் என்றும் மூன்று விதமாய்த்தோன்றுகிறார்கள். இதுவும் தவிர, பொதுவாய் ஜனங்கள் நல்லவர்கள் என்றும், பொல்லாதவர்கள் என்றும் இரு வகை. எவன் ஆத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி பார்க்கவேணுமென்று ஆசைப்படுகிறானோ, அவனுக்கு கீழ்ச்சொன்ன பிரிவுள்ளவர்களால் லாபமுமில்லை, நஷ்டமுமில்லை. அதனால் அவர்களிடத்தில் பிரீதியுமில்லை. துவேஷமுமில்லை. அவனுக்கு ஒருவராலும் பிரயோஜனம்இல்லாதபடியால், அவர்கள் எல்லாரும் ஒரேமாதிரியாய்த் தோன்றுகிறார்கள். 1 [9]

𑌯𑍋𑌗𑍀 𑌯𑍁𑌞𑍍𑌜𑍀𑌤 𑌸𑌤𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌰𑌹𑌸𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ।
𑌏𑌕𑌾𑌕𑍀 𑌯𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌨𑌿𑌰𑌾𑌶𑍀𑌰𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ॥ ‖௧௦‖

𑌯𑍋𑌗𑍀-𑌉𑌕𑍍𑌤𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌨𑌿𑌷𑍍𑌠𑌃, 𑌸𑌤𑌤𑌂-𑌅𑌹𑌰𑌹𑌃 𑌯𑍋𑌗𑌕𑌾𑌲𑍇 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌯𑍁𑌞𑍍𑌜𑍀𑌤-𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑍀𑌤, 𑌸𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌨𑌨𑌿𑌷𑍍𑌠𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑍀𑌤𑍇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃। 𑌰𑌹𑌸𑌿 𑌜𑌨𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑍇 𑌨𑌿𑌶𑍍𑌶𑌬𑍍𑌦𑍇 𑌦𑍇𑌶𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃। 𑌏𑌕𑌾𑌕𑍀-𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌨 𑌸𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌃 𑌯𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾-𑌯𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌮𑌨𑌾𑌃, 𑌨𑌿𑌰𑌾𑌶𑍀𑌃-𑌆𑌤𑍍𑌮𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑍇 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑍇 𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌿 𑌨𑌿𑌰𑌪𑍇𑌕𑍍𑌷𑌃, 𑌅𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑌃-𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑍇 𑌕𑌸𑍍𑌮𑌿𑌂𑌶𑍍𑌚𑌿𑌦𑌪𑌿 𑌮𑌮𑌤𑌾𑌰𑌹𑌿𑌤𑌃 ॥ ‖௧௦‖

அவ—இந்த அத்தியாயம் யோகத்தின் பழக்கத்தினுடைய விதியைச் சொல்லவந்தது. அதைச் சொல்லுகிறார்.

கீழ்ச்சொன்னபடி கர்மயோகம் செய்கிறவன் 2 ஒவ்வொரு

---

1 இந்த மூன்று சுலோகங்களில் ஆத்மாவின் அறிவுநிலையாய் நிற்பதற்கு அடையாளங்கள் சொல்லப்படுகின்றன. (1) உடம்பினால் வருவதையும், மனதினால் வருவதையும் ஜயிப்பது. இது 7-வது சுலோகத்தில் சொல்லப்பட்டது. (2) பணம் காசு முதலானவைகளை ஜயிப்பது. இது 8-வது சுலோகத்தில் சொல்லப்பட்டது. (3) மனிதர்களை ஜயிப்பது. இது 9-வது சுலோகத்தில் சொல்லப்பட்டது. இந்தக் கடைசி ஜயமானது மற்றவைகளைக் காட்டிலும் உயர்ந்தது.

(2) சுலோகத்தில் 'ஸததம்' என்கிற சொல் இருக்கிறது. அதற்கு எப்போதும் என்று பொருள். எப்போதும் கர்மயோகத்தை செய்யமுடியாது. அப்படிச் செய்யவேணுமென்றும் யோகசாஸ்திரத்தில் சொல்லவில்லை. ஆகையினாலே இங்கே அந்த சொல்லிற்கு ஒவ்வொரு நாளும் யோகம் செய்வதற்குத் தகுந்ததாக சாஸ்திரம் சொல்லுகிற—ஸத்வ குணம் மேலிட்டுஇருக்கிற எல்லாக் காலங்களிலும் என்று பொருள்.

நாளும் யோகம் செய்யும் காலத்தில் மனதால் 1 ஆத்மாவைப்பார்க்கவேண்டும். ஜனங்களில்லாமலும் 2 வெளியில் இருக்கிற ஜனங்களின் சப்தம் கேளாமலும் இருக்கிற இடத்தில் 3 தனியாக இருந்து கொண்டு, 4 மனதை வேறு விஷயங்களில் விடாமல், ஆத்மாவைத் தவிர வேறு வஸ்துக்களைவேண்டாமலும்,அவைகளைத் தன்னதென்று எண்ணாமலும் ஆத்மாவை நினைத்துக்கொண்டு இருக்க வேண்டும். [ 10 ]

ஶுசௌ தேஶே ப்ரதிஷ்டாப்ய ஸ்திரமாஸநமாத்மந: ।
நாத்யுச்ச்ரிதம் நாதிநீசம் சைலாஜிநகுஶோத்தரம் ॥ ॥௧௧॥

தத்ரைகாக்ரம் மந: க்ருத்வா யதசித்தேந்த்ரியக்ரிய: ।
உபவிஶ்யாஸநே யுஞ்ஜ்யாத்யோகமாத்மவிஶுத்தயே ॥ ॥௧௨॥

---

1. ஆத்மாவைத்தியானம் பண்ணுங்காலத்திலும் ஆத்மாவைப்பார்க்கிறான். தியானம் நிறைவேறினபிறகும் ஆத்மாவைப்பார்க்கிறான். முதல்பார்வையை தியானம் என்றும்,இரண்டாவது பார்வையை ஸாக்ஷாத்காரம் என்றும் சொல்லுகிறது. முதல்பார்வை பிரயாஸத்தால் வருகிறது. இரண்டாவதுபார்வை அதிகப்பழக்கத்தால் தானாகவே வருகிறது முதல்பார்வையை உண்டுபண்ணுகிறது என்றும், இரண்டாவதை உண்டுபண்ணப்பட்டது என்றும் சொல்லியிருக்கிறது. இரண்டும் வேறல்ல. முன்சொன்னபடி இருப்பு (அவஸ்தை) மாத்திரம் வேறு.

2. சுலோகத்தில் 'ரஹஸி' என்கிற சொல்லிற்கு ஜனங்கள் இல்லாத இடத்தில் என்றுபொருள். அந்த இடத்திலும் வெளியில் இருக்கிறவர்கள் சொல்லும் சப்தமானது வந்தால் மனதுஅடங்கி இருக்காது. ஆகையினாலே வெளியிலிருந்து வரும் சப்தம் வராத இடம்என்று அந்த சொல்லிற்கு பொருள் கொள்ளவேணும்.

3. ரஹஸ்யமான இடத்திலும் சிஷ்யன் முதலான மிகவும் கிட்டினவர்களும் இருக்கக்கூடாதென்று கருத்து.

4. சுலோகத்தில் சித்த என்றும், ஆத்மா என்றும் இரண்டு சொற்கள் இருக்கின்றன. ஆத்மாஎன்பது மனது. சித்தம் என்பது ஒன்றை நினைப்பதாகிய வேலையைச் செய்யும்போது மனதிற்குப்பெயர். ஆகையினாலே மனதை வேறொன்றையும் நினைக்கும்படி விடாமல் என்று பொருள்.

[illegible] ||கக-கஉ||

போகம் செய்கிற இடமானது நீட்டுக்காரனுடையதாயும், அவன் அதிகாரத்திற்கு உட்பட்டதாயும், அவன் செய்கிற வேலைக்கு இடமாயும், அசுத்தமான வஸ்துக்களால் தொடப்பட்டதாயும் இருக்கக்கூடாது. அது ஏற்கனவே சுத்தமாயிருக்கவேண்டியது. அதில்அதிக உயரமும் அதிக தாழ்த்தியும் இல்லாத பலகை முதலான ஆஸனத்தை அசங்காமல் போட்டு அதன்மேலே 1 துணியையும், அதன் மேலே மான் தோலையும், அதன் மேலே தர்ப்பப்பில்லையும் போட்டு 2 சாய்மானப் பலகையில் சாய்ந்துகொண்டு அதில் 3 உட்கார்ந்து, மனதைக் கலங்காமலும் ஒரே இடத்தில் நிற்கும்படியும் செய்து, வெளியில் இருக்கும் வஸ்துக்

1. பலகை கடினமாயிருப்பதால், மிருதுவாய் இருப்பதற்காக துணி. அது மடங்காமலிருப்பதற்காகவும் சுத்திக்காகவும் மான்தோல். சுத்திக்காகவும் ஸத்வகுணம் மேலிடுவதற்காகவும் தர்ப்பப்பில். சிலர் முதலில் தர்ப்பபில்லையும், அதன்மேலே மான்தோலையும், அதன்மேல துணியையும் போடவேணுமென்று எண்ணுகிறார்கள். இப்படி செய்வதனாலே மனதிற்கு ஒரு தெளிவு உண்டாகிறது

2. இந்தப்பலகை யில்லாவிட்டால் உடம்பைத்தூக்குகிற பிரயாஸத்தினாலே தியானம் கெட்டுப்போகும்.

3. நிற்கவும் கூடாது. படுக்கவும்கூடாது. நின்றால் வருத்தம் உண்டாகும், படுத்தால் தூக்கம் வரும். இரண்டும் தியானத்திற்கு விரோதம்.

களில் மற்ற இந்திரியங்கள் போகாமல் அடக்கி, தனக்கு 1 ஸம்ஸாரம் போவதற்காக ஆத்மாவைப் பார்த்துக்கொண்டு இருக்க வேண்டும் [ 11–12 ]

ஸமம் காயசிரோக்ரீவம் தாரயந்நசலம் ஸ்திர: ।
ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம் திசச்சாநவலோகயந் ॥௧௩॥

ப்ரசாந்தாத்மா விகதபீர் ப்ரஹ்மசாரிவ்ரதே ஸ்தித: ।
மந: ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பர: ॥ ॥௧௪॥

காயசிரோக்ரீவம் ஸமம்-ஆஸநாச்ரயதயா ஸ்திரம் தாரயந், திசச்சாநவலோகயந், ஸ்வநாஸிகாக்ரம் ஸம்ப்ரேக்ஷ்ய, ப்ரசாந்தாத்மா-அத்யந்தநிர்வ்ருதமநா:, விகதபீ: ப்ரஹ்மசர்ய யுக்தோ மந: ஸம்யம்ய மச்சித்தோ யுக்த: அவஹித: மத்பர ஆஸீத-மாமேவ சிந்தயந்நாஸீத ॥ ॥௧௩ ௧௪॥

உடம்பு, தலை, கழுத்து, இவைகளைக்கோணல் இல்லாமலும், அசங்காமலும் இதேமாதிரி நிலையாயிருந்துகொண்டு (சாய்மானம் இருக்கிறபடியால் அசங்காமை நிலையாயிருக்க முடியும்) 2 நாலு பக்கமும் பார்க்காமல் இருப்பதற்காகத் தன் மூக்கின் நுனியைப் பார்த்துக்கொண்டு மிகுந்த ஸந்தோஷமுள்ளவனுய் பயமில்லா

---

1 சுலோகத்தில் 'ஆத்மாவிற்கு சுத்தி உண்டாவதற்காக'' என்கிற பொருளுள்ள சொல் இருக்கிறது. ஆத்மாவிற்கு அசுத்தியானது கர்ம ஸம்பந்தந்தான். இங்கே மனக்கலக்கம் என்கிற அசுத்தி சொல்லவில்லை. ஏனென்ருல் மனக்கலக்கம் போனவன்தான் இந்தயோகத்தைச் செய்கிருன்

2. கண்கள் நாலுபக்கமும் போகாமலிருப்பதற்காகத்தான் யோகம் ஆரம்பிக்கிறகாலத்தில் மூக்கின் நுனியைப்பார்ப்பது. கண்ணை மூடிக்கொண்டே வெளியிலிருக்கிற வஸ்துக்களைப்பார்க்காமல் இருக்கலாம். ஆனல் அப்படிச்செய்வதால் தூக்கம் வந்துவிடும் அதற்காக மூக்கின் நுனியைப் பார்த்துக்கொண்டு இருக்கவேண்டியது. தியானம் செய்வதற்கு மூக்கைப்பார்ப்பதும் இடைஞ்சலாகையால், தியானத்திற்கு இடைஞ்சலணியில் கண்களை மூக்கில்வைத்துக்கொள்ளவேண்டுமென்று கருத்து.

மல் 1 ஸ்திரீகளை நினைப்பது, பார்ப்பது, பேசுவது முதலானவை இல்லாமல், மனதை அடக்கி, மிகவும் அழகான என்னுடைய திருமேனியில் அதை நிறுத்தி, ஜாக்கிரதையாய் அதையே நினைத்துக்கொண்டு இருக்கவேண்டும். [13-14]

யுஞ்ஜந்நேவம் ஸதா₃த்மாநம் யோகீ³ நியதமாநஸ꞉ ।
ஶாந்திம் நிர்வாணபரமாம் மத்ஸம்ஸ்தா₂மதி⁴க³ச்ச₂தி ॥ ॥கரு॥

ஏவம் மயி பராஸ்மிந் ஸுப⁴ஶ்ரயே ஸதா³ ஆத்மாநம் மநோ யுஞ்ஜந் நியதமாநஸ꞉ மத்ஸ்பர்ஶபவித்ரீக்ருததயா நிஶ்சலமாநஸ꞉ மத்ஸம்ஸ்தா₂ம் நிர்வாணபரமாம் ஶாந்திமதி⁴க³ச்ச₂தி நிர்வாணகாஷ்டா₂ரூபாம் மத்ஸம்ஸ்தா₂ம் மயி ஸம்ஸ்தி₂தாம் ஶாந்திமதி⁴க³ச்ச₂தி ॥ ॥கரு॥

அவ—ஜீவஸ்வரூபத்தை நினைக்கவேண்டிய காலத்தில் தேவரீரை ஏன் நினைக்கவேண்டும்? என்றால், சொல்லுகிறார்:—

இப்படி மஹாபுருஷனை என்னுடைய அழகாயும் பாபத்தைப் போக்குகிறதுமான திருமேனியை நினைப்பதால் வந்த ஸந்தோஷத்தினால் மனது சுத்தமாகி, ஒரே இடத்தில் நிற்கும்படி சக்தி உண்டாகி, ஜீவனைத் தியானம் செய்து, கடைசியில் என்னைப்போல் பசி தாஹமில்லாதவனாய், எல்லா ஸுகங்களையும் 2 அடைவன்.

---

1. ஸ்தனங்களையுடைய மாம்ச பிண்டத்தை (ஸ்திரீயை) இன்பமாக நினைப்பது, பார்ப்பது, அதுடன்பேசுவது முதலானவைகள் கூடாதென்று கருத்து.

2. இந்த ஆறுசுலோகங்களாலே யோகம் என்கிற தியானம் சொல்லப்பட்டது. தியானம் என்றால் ஒன்றை வேறுஎண்ணம் கலப்பில்லாமல் நினைத்துக் கொண்டிருப்பது. இதுதான் ஸமாதிஎன்பதும். இரண்டிற்கும் வித்யாஸம் என்னவென்றால், ஜீவனுடைய தியானத்தில் வித்தியாஸமில்லை. பகவானுடைய தியானத்தில் உண்டு. அதாவது பகவானுடைய திருமேனியையும்சேர்த்து நினைத்துக்கொண்டிருப்பது தியானம். ஸமாதி யென்பது பகவானுடைய திருமேனியை விட்டு ஸ்வரூபத்தை மாத்திரம் நினைத்துக் கொண்டிருப்பது. தியானம் நிலையாய் நிற்பதற்கு ஆறு அங்கங்கள் வேண்டியது. அவையாவன— யமம், நியமம், ஆஸனம், பிராணாயாமம், பிரத்தியாஹாரம், தாரணை. இவை

𑌸 𑌚 — 𑌏𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌯𑍋𑌗𑌮𑌾𑌰𑌭𑌮𑌾𑌣𑌸𑍍𑌯 [illegible]
[illegible]
[illegible] 𑌯𑍋𑌗𑍋𑌪𑌕𑌰𑌣𑌮𑌾𑌹 —

𑌨𑌾𑌤𑍍𑌯𑌶𑍍𑌨𑌤𑌸𑍍𑌤𑍁 𑌯𑍋𑌗𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌨 𑌚𑍈𑌕𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑌶𑍍𑌨𑌤𑌃 ।
𑌨 𑌚𑌾𑌤𑌿𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌶𑍀𑌲𑌸𑍍𑌯 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑍋 𑌨𑍈𑌵 𑌚𑌾𑌰𑍍𑌜𑍁𑌨 ॥௧௬॥

𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌹𑌾𑌰𑌵𑌿𑌹𑌾𑌰𑌸𑍍𑌯 𑌯𑍁𑌕𑍍𑌤𑌚𑍇𑌷𑍍𑌟𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 ।
𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌾𑌵𑌬𑍋𑌧𑌸𑍍𑌯 𑌯𑍋𑌗𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌦𑍁𑌃𑌖𑌹𑌾 ॥௧௭॥

𑌅𑌤𑍍𑌯𑌶𑌨𑌾𑌨𑌶𑌨𑍇 𑌯𑍋𑌗𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌨𑍀, 𑌅𑌤𑌿𑌵𑌿𑌹𑌾𑌰𑌾𑌵𑌿

---

களில யமம்எனபது ஐநது குணஙகள் அவைகளாவன —1. அஹிமஸா —ஒருவனுக்கும ஒருவிதமான தொநதரவை உணடுபணணுமை 2. அஸதேயம—ஒருவனுடைய சொததை அவன ஸமமத மிலலாமல எடுக்காமை. 3. ஸததியம—நடந்ததை நடநதபடியேசொல்வது. 4. பிரமமசரியம—ஸதிரீகளை இனபமாக நினைப்பது பாரப்பது முதலானவைகளை இல்லாமை. 5. அபரிகரஹம-ஒருவஸதுவிலும தன்னது என்கிற எணணமிலலாமை. இந்த அததியாயததில பிருமமசரியம 14-வதுசுலோகததிலும, அபரிக்ரஹம 10-வது சுலோகததிலும சொலலப்பட்டன. இவைகளைச் சொனனபோதே மற்ற மூன்று குணஙகளும் இருக்க வேணுமெனறு விததம். நியமம எனபது ஐநதுகுணஙகள். 1. படிததவேததை தினம சொல்லிககொணடிருப்பது. 2 சௌசம அதாவது சுததியாயிருப்பது. 3. ஸந்தோஷம. 4 தபஸ. 5 பகவானிடததில மனதை நிறுததிஅவனை நினைத்துக்கொணடிருப்பது. இந்த ஐந்து குணஙகளில் 3 வதும்,5வதும 14 வது சுலோகததில சொலலபபட்டன மற்ற மூனறுகுணஙகளும வேண்டுமெனறுவிததம. ஆஸனம் என்கிறஅஙகம விஸ்தாரமாகச சொல்லப்பட்டது. பிராணுயாமத்தை இந்தஇடததில சொலலவிலலே. ஆனுல் 5-வது அததியாயம 27-வது சுலோகததில சொன்னதை வைததுக்கொள்ளவேணடும. பிரத்தியாஹாரம என்பது சப்தமமுதலானவிஷயஙகளில இநதிரியஙகளை போகவொட்டாமல் தடுதது மனதிற்கு ஒத்து வேலைசெய்யும்படி செய்வது. இதை 12-வது சுலோகததில் ‘மற்றஇநதிரியங்களை அடக்கி’ என்று சொல்லப்பட்டது தாரணை என்பதுதியானம பண்ணவேண்டிய வஸ்துவில் மனதைநிறுததுவது. இதை 1?-வதுசுலோகததிலேயே சொலலியிருக்கிறது. இநத ஆறுஅஙகஙகளும் இருநதால தான் தியானம சரியாய நடக்கும. (விஷ்ணுபுராணம 6-வது அமசம. 7-வது அததியாயம. 36,37,38,43,61,62சுலோகஙகள் )

हारे च । तथा अतिमात्रस्वप्नजागरे । तथात्र्यायासानायासौ । मिताहारविहारस्य मितायासस्य मितस्वप्नावबोधस्य सकलदुःखहा बन्धनाशनो योगः संपन्नो भवति ॥ ॥१६-१७॥

அ-வ—இப்படி யோகத்தை ஆரம்பிக்கும்போது மனதின் தெளிவுக்காக அதைப் பகவானுடைய திருமேனியில் வைத்துத் தியானம் செய்யவேணுமென்று சொல்லி, இப்போது யோகத்திற்கு வேறு ஒரு உதவியைச் சொல்லுகிறார்—

அதிகமாகச் சாப்பிடுகிறதும் அடியோடு சாப்பிடாமல் இருக்கிறதும், அதிகமாய் [1] வேலை செய்கிறதும், கொஞ்சம் கூடவேலை செய்யாமலிருப்பதும், அதிக தூக்கமும், அதிக விழிப்பும், அதிக சிரமும் கொஞ்சங்கூட சிரமமில்லாமலிருப்பதும் யோகத்திற்கு இடைஞ்சல். 2 நிதானமான ஆஹாரம், வேலை, சிரமம், தூக்கம், விழிப்பு இவைகள் உள்ளவனுக்குத்தான் எல்லா துக்கங்களையும் போக்கக்கூடிய யோகமானது ஸரியாய் நடக்கும். [16-17]

यदा विनियतं चित्तमात्मन्येवावतिष्ठते ।
निःस्पृहः सर्वकामेभ्यो युक्त इत्युच्यते तदा ॥१८॥

यदा योजनविषयं चित्तं विनियतं-विशेषेण नियतं - निरतिशयप्रयोजनतया आत्मन्येव नियतं निश्चलमवतिष्ठते, तदा सर्वकामेभ्यो निःस्पृहः सन् युक्त इत्युच्यते-योगार्हः इत्युच्यते ॥१८॥

அ-வ— இதுவரையில் யோகத்திற்கு வேண்டியவைகள் சொல்லப்பட்டன. இப்போது யோகதசையைச் சொல்லப்போகிறார். அதற்கு முந்தி யோகம் செய்யத் தகுந்த தசையை

---

1 வேலையென்கிற சொல்லிற்கு சோம்பல் போவதற்காகச் செய்யும் வியாபாரம் என்றுபொருள். சிரமம் என்கிற சொல்லிற்குச் சிரமத்தைக் கொடுக்கும்படியான வியாபாரம் என்றுபொருள்.

2 நிதானம் என்கிறசொல்லினாலே அதிகமும்கூடாது குறைவும் கூடாது என்று காட்டப்படுகிறது. அதிகமும். குறைவும்தோஷங்கள்.

(இருப்பை) கீழே 4-வது ச்லோகத்தில் சொல்லப்பட்டதை ஞாபகப்படுத்துகிறார் —

ஆத்மாவைப் பார்ப்பது தவிர, வேறு பிரயோஜனங்களை நினைக்காமல், ஆத்மாவையே மிகவும் உயர்ந்த பிரயோஜனமென்று நினைத்து, எப்போது ஆத்மாவிலேயே மனது அசையாமல் நிற்கிறதோ, அப்போது எல்லா ஆசைகளும் ஒழிந்திருப்பதால், ஆத்மாவைப் பார்ப்பதற்குத் தகுந்தவன் என்று சொல்லப்படுகிறான், [18]

யதா² தீ³போ நிவாதஸ்தோ² நேங்க³தே ஸோபமா ஸ்ம்ருதா |
யோகி³நோ யதசித்தஸ்ய யுஞ்ஜதோ யோக³மாத்மந: ||௧௯||

நிவாதஸ்தோ² தீ³போ யதா² நேங்க³தே-ந சலதி ஸப்ரப⁴ஸ்திஷ்ட²தி। யதசித்தஸ்ய-நிவ்ருத்தஸகலேதரமநோவ்ருத்தே: யோகி³ந: ஆத்மநி யோக³ம் யுஞ்ஜத: ஆத்மஸ்வரூபஸ்ய ஸா உபமா। நிவாதஸ்த²தயா நிஶ்சலஸ்ய ப்ரதீ³பவந்நிவ்ருத்தஸகலேதரமநோவ்ருத்திதயா நிஶ்சலோ ஜ்ஞாநப்ரப⁴ ஆத்மா திஷ்ட²தீத்யர்த²:|| ||௧௯||

அவ-யோகத்தசையை(யோகத்தின் இருப்பை)ச்சொல்லுகிறார்.

காற்று இல்லாத இடத்தில் இருக்கும் விளக்கு எப்படி அசையாமல் 1 வெளிச்சத்துடன் இருக்குமோ, அப்படியே ஆத்மாவைத்தவிர 2 வேறு வஸ்துக்களில் மனதை விடாமல் அடக்கி, யோகம் செய்கிறவனுடைய 3 ஆத்மா இருக்கும் அதா

1. அசையாமல் இருப்பதற்கு மலையை உதாரணமாகச் சொல்லலாம். அப்படிச்சொல்லாமல் விளக்கை உதாரணமாகச் சொன்னதற்குக் கருத்து—அதுவெளிச்சத்துடன் இருக்கிறது என்று காட்டுவதற்காக.

2 ச்லோகத்தில் "மனதை அடக்கி" என்கிறசொல்லிற்கு மனதை "ஆத்மாவைத்தவிர வேறுவஸ்துக்களில் போகாமல் அடக்கி, ஆத்மாவில் நிறுத்தி" என்றுபொருள். மனதால் ஒன்றையும் நினைக்கக்கூடாதென்று சொன்னால், 'யோகம் யுஞ்ஜீத' என்கிறசொற்களோடு விரோதிக்கும்.

3 விளக்கைப்போல் ஆத்மா, அதன்வெளிச்சம்போல ஆத்மாவினுடைய ஞானம் என்கிறகுணம், காற்றைப்போல் வெளியில் போகும்

வது காற்று இல்லாத இடத்தில் இருப்பதினுலே விளக்கு அசையாமல் வெளிச்சத்தோடு கூடி இருக்கிறது. அப்படியே ஆத்மாவைத்தவிர, வேறு ஒன்றையும் மனதால்நினைக்காதபோது, அவனுடைய ஞானம் என்கிற குணமானது நாலு பக்கமும் போகாமல் ஆத்மாவினிடத்திலேயே நிலையாயிருக்கிறது. அப்போது ஆத்மாவை நன்ருய் பார்க்கிருன். [19]

யத்ரோபரமதே சித்தம் நிருத்தம் யோகஸேவயா ।
யத்ர சைவாத்மநாத்மாநம் பஶ்யந்நாத்மநி துஷ்யதி ॥உ0॥
ஸுகமாத்யந்திகம் யத்தத் புத்திக்ராஹ்யமதீந்த்ரியம் ।
வேத்தி யத்ர ந சைவாயம் ஸ்திதஶ்சலதி தத்த்வதஃ ॥ ॥உ௧॥
யம் லப்த்வா சாபரம் லாபம் மந்யதே நாதிகம் ததஃ ।
யஸ்மிந் ஸ்திதோ ந து:கேந குருணாபி விசால்யதே ॥
தம் வித்யாத் து:கஸம்யோகவியோகம் யோகஸம்ஜ்ஞிதம் ।
ஸ நிஶ்சயேந யோக்தவ்யோ யோகோऽநிர்விண்ணசேதஸா ॥

யோகஸேவயா ஹேதுநா ஸர்வத்ர நிருத்தம் சித்தம் யத்ர யோகே உபரமதே-அதிஶயிதஸுகமிதி ரமதே, யத்ர ச யோகே ஆத்மநாऽऽத்மாநம் பஶ்யந் அந்யநிரபேக்ஷமாத்மந்யேவ துஷ்யதி। யத்ததீந்த்ரியமாத்மாகாரபுத்த்யேகக்ராஹ்யமாத்யந்திகம் ஸுகம் யத்ர ச யோகே வேத்தி-அநுபவதி। யத்ர ச யோகே ஸ்திதஃ ஸுகாதிரேகேண தத்த்வதஸ் ஸ்வரூபாந் ந சலதி। யம் யோகம் லப்த்வா யோகாத்விரதஸ்தத்ஸுகமேவ காங்க்ஷமாணோ நாபரம் லாபம் மந்யதே। யஸ்மிம்ஶ்ச யோகே

மனது. காற்றடித்தால் விளக்குஅசையும். வெளிச்சம் குறையும். அப்படியே மனது நாலுவஸ்துக்களிலும் போகும்போது ஞானம் என்கிற குணம் மனதுடன்கூடப்போய் ஒன்றிலும் நிறைந்திருக்காது. கர்மம்போகிறவரையில் இந்தகுணம் மனதுவழியாகவே விஷயங்களில் போகும். காற்றில்லின்ருல் விளக்குஅசையாமல் வெளிச்சம் நன்ருய்த்தெரியும். அப்படியே மனது ஆத்மாவினிடத்திலேயே இருந்தால், இந்தகுணமும் அதிலேயேநிறைந்து இருக்கும். அப்போது ஆத்மாவை நன்ருயப்பார்க்லாம்.

[illegible] ॥ ||௨௦—௨௩||

அவ—அடுத்த நான்கு சுலோகங்களிஞலே ஆத்மாவைப் பார்ப்பதே மிகவும் உயர்ந்த பிரயோஜனமென்று காட்டி, யோக தசையையே விரிவாகச்சொல்லுகிருர்.—

ஆத்மாவைப் பார்ப்பதற்காக, மற்ற விஷயங்களில் போகாத படி அடக்கப்பட்ட மனதானது, யாதொரு யோகஸமயத்தில் ஆத்மாவைப்பார்ப்பது உயர்ந்த ஸுகமென்று ஸந்தோஷப்படுகிற தோ, எந்த யோகத்தில் யோகம் செய்கிறவன் மனதிஞல் ஆத்மா வைப் பார்த்துக் கொண்டு வேறு வஸ்துக்களை வேண்டாமல், ஆத்மாவினிடத்திலேயே ஸந்தோஷத்தை அடைகிருனே, எந்த யோகத்தில் இந்திரியங்களைக்கொண்டு அடைய முடியாத, தன்ன றிவிஞலேயே மாத்திரம்அடையக்கூடிய உயர்ந்தஸுகத்தை அநு பவிக்கிருனே, எந்த யோகத்தில் இருப்பவன் உயர்ந்த ஸுகத்தை அனுபவிப்பதிஞலே ஒருக்ஷணங்கூட அதை விடமுடியாமல் இரு க்கிருனே,எந்தயோகத்தை விட்டபோது-அதாவது அந்த நினைவு கலைந்தபோது-மறுபடியும் அதையே ஆசைப்பட்டுக்கொண்டு, வே று பிரயோஜனத்தை நினைக்கமாட்டானே, எந்த யோகம்செய்கிற போதும் செய்யாதபோதும் மிகவும் குணமுள்ள பிள்ளை இறந்து போனது முதலான பெரிய துக்கத்திஞலும் யோகத்திற்கு விரோ தமானவருத்தத்தை அடைகிறதில்லையோ—அதைத்துக்கத்திற்குச் சத்துருவென்றும், யோகமென்று பெயர் உள்ளது என்றும் நினை. யோகமானது இவ்வளவு மிகவும் உயர்ந்ததென்று ஆரம்பத்திலே யே தீர்மானித்து மிகுந்த ஸந்தோஷத்துடன் அதைச் செய்யவே ண்டியது. 1 [20-23]

1. இந்த நாலுசுலோகங்களில் சொல்லிய ஸங்கதிகள் —1. மனது வேறு விஷயங்களில் போகாமல் ஆத்மாவினிடத்திலேயே நின்றுவிடுகி றது. 2. அதற்கு வேறொன்றும் பிடிக்கவில்லை. 3. ஆத்மஸ்வரூபத்தை

ஸங்கல்பப்ரபவாந் காமாம்ஸ்த்யக்த்வா ஸர்வாநஶேஷத: ।
மநஸைவேந்த்ரியக்ராமம் விநியம்ய ஸமந்தத: ॥ ௨௪ ॥

ஶநைஶ்ஶநைருபரமேத் புத்த்யா த்ருதிக்ருஹீதயா ।
ஆத்மஸம்ஸ்தம் மந: க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத் ॥ ௨௫ ॥

ஸ்பர்ஶஜா: ஸங்கல்பஜாஶ்சேதி த்விவிதா: காமா: । ஸ்பர்ஶஜா: ஶீதோஷ்ணாதய:, ஸங்கல்பஜா: புத்ரக்ஷேத்ராதய: । தத்ர ஸங்கல்பப்ரபவா: ஸ்வரூபேணைவ த்யக்தும் ஶக்யா: । தாந் ஸர்வாந் மநஸைவ ததநந்வயாநுஸந்தாநேந த்யக்த்வா ஸ்பர்ஶஜேஷு அவர்ஜநீயேஷு தந்நிமித்தஹர்ஷோத்வேகௌ த்யக்த்வா ஸமந்தத: ஸர்வஸ்மாத் விஷயாத் ஸர்வமிந்த்ரியக்ராமம் விநியம்ய, ஶநைஶ்ஶநைர் த்ருத்யா க்ருஹீதயா விவேகவிஷயயா புத்த்யா ஸர்வஸ்மாதிதரஸ்மாதுபரம்ய ஆத்மஸம்ஸ்தம் மந: க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத் ॥ ௨௪-௨௫ ॥

அவ—எந்த வஸ்துவிலும் என்னுடையது என்கிற எண்ணம் இல்லாமை முதலான அங்கங்கள் தனித்தனியாகச் சொல்லப்பட்டன. அவைகளை வருத்த மில்லாமல் தெரிந்துகொள்ளுவதற்காகவும், யோகத்தை ஸுகமாய் செய்யலாமென்று காட்டுவதற்காகவும் அவைகளைச்சேர்த்து இங்கே நினைப்பு மூட்டுகிறார்.—

உலகத்தில் ஸுகங்களும், துக்கங்களும் இரண்டு விதமாய் வருகின்றன—(1)1. நினைவினால்,( 2) கண் முதலான இந்திரியங்க

யே மிகவும் உயர்ந்தஸுகமாக அநுபவிக்கிறது. 4.அதைநிறுத்த முடிகிறதில்லை, 5. வேறு ஸுகங்களினாலாவது, பெரிய துக்கத்தினாலாவது மனது அதிலிருந்து சலிக்கிறதில்லை.

1. நினைவினால் வருகிறவைகள்—இவன் என்பிள்ளை, இது என்நிலம், இது என் பணம் என்று நினைப்பதினாலே உண்டாகிற ஸுகங்களும், அவைகள் போவதினால் உண்டாகும் துக்கங்களும். இவைகளை என்னுடையவைகள் அன்று என்று எண்ணினால், அடியோடுவிட்டுவிடலாம். இந்திரியங்களுக்கும் விஷயங்களுக்கும் சேர்க்கையினால் உண்டாகும் ஸுகங்களுக்கும், துக்கங்களுக்கும் உதாரணம்—கடுமையானவெய்யிலில் மிகவும்குளிர்ந்த ஜலத்தை மேலே விட்டுக்கொண்டால் உண்டாகும்

ளுக்கும் விஷயங்களுக்கும் சேர்க்கையினால். முதல் விதமான எல்லா ஸுகங்களையும் துக்கங்களையும்—அவைகள் நம்முடையதன்று என்று அடிக்கடி நினைத்து—விடவேண்டியது. இந்த நினைவினால் அதை ஸுகமாய் விடலாம். இரண்டாவது விதமான ஸுகங்களும் துக்கங்களும் நினைவினால் விலக்க முடியாமையால், அவைகளைப் பொறுத்துக்கொண்டு ஸந்தோஷத்தையும் வருத்தத்தையும் அடையாமலிருக்கவேண்டியது. எல்லா இந்திரியங்களையும், எல்லா விஷயங்களிலிருந்து 1 இழுத்து 2 நல்ல யோசனையினாலும் 3 உறுதியினாலும், அவைகளிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாய் 4 ஒழித்து, மனதை ஆத்மாவினிடத்தில் 5 வை

---

ஸுகம். அதேகாலத்தில் கொதிக்கிற ஜலத்தை விட்டுக் கொண்டால் உண்டாகும் துக்கம். இவைகளை விடமுடியாது. ஆனால் இவைகளை அனுபவித்தே தீரவேண்டும் என்று நினைத்துப்பொறுத்தால், அவைகளில் ஸந்தோஷமும், வருத்தமும் உண்டாகாது. உலகத்தில் சொல்லம்பு, வில்லம்பு என்று இரண்டுண்டு. அதில் வில்லம்பைப்பொறுக்கலாம் சொல்லம்பைப் பொறுக்கமுடியாது. வில்லம்பினால் வந்த புண் ஆறிவிடும். சொல்லம்பினால் வந்த மனதின் துக்கம் ஆறாது என்று சொல்வதுவழக்கம். ஆத்மஸ்வரூபத்தை நன்றாக அறிந்தவனுக்குச் சொல்லம்பு லக்ஷியமில்லை. எவ்வளவு விவேகியாயிருந்தாலும், உடம்பில் முள்ளுக் குத்தினால் வலிக்கும். அதைக்கஷ்டப்பட்டுப் பொறுத்துக் கொள் என்று சொல்லுகிறார்.

1. இப்படி இந்திரியங்களை விஷயங்களிலிருந்து இழுப்பதற்கு பிரத்யாஹாரம் என்றுபெயர்.

2. யோசனை என்றால் உடம்புவேறு, ஆத்மாவேறு, ஆத்மாவைப்பார்ப்பதுதான் மிகவும் உயர்ந்த பிரயோஜனம் என்கிற நினைவு.

3. உறுதிஎன்பது ஆரம்பித்த நல்லபழக்கத்தை எவ்விதத் தடங்கல் வந்தாலும் விடாமல் செய்யவேணுமென்கிற நினைவு. இது அறிவினால் வரவேண்டியது.

4. ஒழித்து என்கிற சொல்லாலே பிரத்யாஹாரம் என்பது தியானத்திற்கு அங்கமென்று காட்டப்பட்டது. ஸ்நானம் செய்து சாப்பிடு என்றால், ஸ்நானமானது சாப்பாட்டிற்கு அங்கம். அதுபோல்.

5. இதற்குத் தாரணை என்றுபெயர்.

த்து அதைத்தவிர 1 வேறொன்றையும் நினைக்கக்கூடாது. [25]

யதோ யதோ நிஶ்சரதி மநஶ்சஞ்சலமஸ்திரம் ।
ததஸ்ததோ நியம்யைததாத்மந்யேவ வஶம் நயேத் ॥௨௬॥

ஸ்வஸ்வபாவதயா சஞ்சலம் அஸ்திரம் மந: யதோ யதோ விஷயப்ராவண்யஹேதோராலம்பநாந்நிஶ்சரதி | ததஸ்ததோ யத்நேந மநோ நியம்ய ஆத்மந்யதிஶயிதஸுகபாவநயா வஶம் நயேத் ॥ ॥௨௬॥

நல்லதோ பொல்லாததோ பழகினதோ பழகாததோ மனதானது ஒருவஸ்துவிலும் நிலையாய் நிற்கிறதில்லை. அதுவே அதற்கு வழக்கம். ஆத்மாவை நினைத்துக் கொஞ்சங்கூட பழக்கமில்லை. ஆகையால் ஆத்மாவில் மனது நிலையாய் நிற்காமல், விஷயங்களில் ஆசையினால் எதெதில் போகிறதோ, அததிலிருந்து, ஆத்மாதான் உயர்ந்த ஸுகம் என்று நினைத்து, மிகவும் சிரமப்பட்டு, அதைத்திருப்பி, ஆத்மாவில் வைக்கவேண்டியது. இப்படி எண்ணினால் மனதை ஸுகமாக அடக்கலாம். [26]

ப்ரஶாந்தமநஸம் ஹ்யேநம் யோகிநம் ஸுகமுத்தமம் ।
உபைதி ஶாந்தரஜஸம் ப்ரஹ்மபூதமகல்மஷம் ॥ ॥௨௭॥

ப்ரஶாந்தமநஸம் - ஆத்மநி நிஶ்சலமநஸம் - ஆத்மந்யஸ்தமநஸம் ததஏவ தக்தாஶேஷகல்மஷம் ததஏவ ஶாந்தரஜஸம் - விநஷ்டரஜோகுணம் ததஏவ ப்ரஹ்மபூதம் - ஸ்வஸ்வரூபேணாவஸ்திதம் ஏநம் யோகிநம் ஆத்மாநுபவரூபம் உத்தமம் ஸுகம் உபைதி | ஹீதி ஹேதௌ | உத்தமஸுகரூபத்வாதாத்மஸ்வரூபஸ்யேத்யர்த்த: ॥ ॥௨௭॥

மனதை வெளியில் விடாமல் ஆத்மாவிலேயே இருக்கும்

---

1. வேண்டியதோ வேண்டாததோ, இரண்டுமில்லாததோ ஒன்றையும் நினைக்கக்கூடாது. ஆத்மாவைமாத்திரம் நினைத்துக்கொண்டிருக்கவேண்டியது.

படி செய்வதால் எல்லா 1 பாபங்களும் போகின்றன. பாபம் போனால் ரஜோகுணம் போய்விடுகிறது. அப்போது யோகம் செய்கிறவன் 2 சுத்தமான தன் ஸ்வரூபத்தைப் பார்க்கிறான். அப்போது ஆத்மாவை அனுபவிப்பதான உயர்ந்த 3 ஸுகம் தன்னடையே வரும். ஆத்மாவென்பது உயர்ந்த ஸுக ஸ்வரூபமாயிருப்பதால். [27]

யுஞ்ஜந்நேவம் ஸதா³த்மாநம் யோகீ³ விக³தகல்மஷ꞉ |
ஸுகே²ந ப்³ரஹ்மஸம்ஸ்பர்ஶமத்யந்தம் ஸுக²மஶ்நுதே ||௨௮||

ஏவமுக்தப்ரகாரேண ஆத்மாநம் யுஞ்ஜந் தத ஏவ விக³தாநாதி³காலப்ரவ்ருத்தாநந்தகல்மஷ꞉ ப்³ரஹ்மஸம்ஸ்பர்ஶம் ப்³ரஹ்மாநுப⁴வரூபம் ஸுக²மத்யந்தமபரிமிதம் ஸுகே²ந அநாயாஸேந ஸதா³ அஶ்நுதே || ||௨௮||

கீழ்ச் சொன்னபடி யோகத்தைச் செய்கிறவன் அதினாலேயே நெடு நாளாய் வந்த எல்லாப் பாபங்களையும் போக்கி, ஆத்மாவைப்பார்ப்பதாகிய அளவில்லாத ஸுகத்தைப் பிரயாஸமில்லாமல் எப்போதும் அனுபவிக்கிறான். 4 [28]

---

1. பஞ்சகவ்யம் சாப்பிட்டவனுக்குப் பாபங்கள் போகுமென்று சாஸ்திரம் சொல்லுகிறது. அப்படியே தன் ஆத்மாவைப்பற்றி யோகம் செய்கிறவனுக்கு அந்தயோகத்தினாலேயே பாபங்கள் போய்விடுமென்று சாஸ்திரம சொல்லுகிறது.பகவான்இப்படிஏற்படுத்தியிருக்கிறான்.

2. சுலோகத்தில்‘ பிரும்மபூதம்’ என்ற சொல் இருக்கிறது. அதற்கு ‘மிகவும் பெரியதாய் ஆகிறான் என்று பொருள். முன்னாலே உடம்பே ஆத்மாவென்று ஒருதப்பெண்ணம் உண்டாகி, ஜீவன் வருத்தப்பட்டுக் கொண்டிருந்தான். அந்த இருப்பைக் காட்டிலும் இப்போது ஆத்மாவை உள்ளபடி அறிந்து ஸுகப்படுவதினாலே இப்போதிருப்பை முன்னிருப்பைக்காட்டிலும் பெரிதென்று சொல்லலாம்.

3.சுலோகத்தில் உயர்ந்தஸுகம் வரும்என்று சொல்லியிருக்கிறது. இந்தஸுகம் ஆத்மாவைப் பார்க்கிறஸுகம்தான். விஷயங்களினால் உண்டாகும் ஸுகம் அற்பமாயும் துக்கத்தோடு கலந்து இருப்பதாலும் தாழ்ந்தது. ஆத்மாவைப்பார்ப்பதினால் உண்டாகும் ஸுகம் அளவில்லாமலும் துக்கத்தின் கலப்பில்லாமலும் இருப்பதால் உயர்ந்த ஸுகம்.

4. இந்த சுலோகத்தோடு யோகப்பிரகரணத்தை முடிக்கிறான். “கீழ்ச் சொன்னபடி” என்றது இந்தஅத்தியாயம் 10-வது சுலோகம் முதல்ஆரம்

அவ.— அத யோகவிபாகதசா சதுஷ்ப்ரகாரா உச்யதே—

ஸர்வபூதஸ்தமாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி ।
ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சன: ॥ ௨௯ ॥

ஸ்வாத்மன: பரேஷாம் ச ஸர்வேஷாம் பூதானாம் ப்ரக்ருதிவியுக்தஸ்வரூபாணாம் ஜ்ஞானைகாகாரதயா ஸாம்யாத் வைஷம்யஸ்ய ச ப்ரக்ருதிகதத்வாத், யோகயுக்தாத்மா ப்ரக்ருதிவியுக்தாத்மஸ்வரூபஸாக்ஷாத்காரீ ஸ்வாத்மனி ஸர்வபூதேஷு ச ஜ்ஞானைகாகாரதயா ஸமதர்சன: – ஸர்வபூதஸ்தம் ஸ்வாத்மானம் ஸர்வபூதானி ச ஸ்வாத்மனி ஈக்ஷதே। ஸர்வபூதஸமானாகாரம் ஸ்வாத்மானம்—ஸ்வாத்மஸமானாகாராணி ச ஸர்வபூதானி பச்யதீத்யர்த்த:। ஏகஸ்மின்னாத்மனி த்ருஷ்டே ஸர்வஸ்யாத்மவஸ்துனஸ்தத்ஸாம்யாத் ஸர்வமாத்மவஸ்து த்ருஷ்டம் பவதீத்யர்த்த:—“ஸர்வத்ர ஸமதர்சன:” இதி வசனாத் “யோ(அ)யம் யோகஸ்த்வயா ப்ரோக்தஸ்ஸாம்யேன” இத்யனந்தரோக்தாத், “நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம” இதி வசனாத் ॥ ॥ ௨௯ ॥

அவ.—மேல் நாலு சுலோகங்களாலே ஆத்மாவைப் பார்க்கிறவனுக்கு வரும் நாலு படிகளை அடிப்படி முதல் சொல்லுகிறார்.

1 உடம்பைக் காட்டிலும் வேறான தானும் மற்ற ஆத்மாக்களும் ஞானஸ்வரூபம் என்று ஒரே மாதிரி. தேவன், மனிதன் முதலான வேற்றுமை உடம்புகளில்தான் இருக்கிறது த்யானம் செய்து

---

பித்து, இதுவரையில் சொல்லப்பட்டபடி என்று அர்த்தம். இந்த சுலோகத்தில் நான்கு ஸங்கதிகள் சொல்லப்படுகின்றன—(1) யோகத்தின் மஹிமையினாலே ஆத்மாவின் பார்வை என்கிற உயர்ந்த ஸுகமுண்டாகிறதென்றும் (2) ஆத்மாவைப்பார்த்தபிறகு அந்த ஸுகத்திற்கு அளவில்லையென்றும், (3) அதற்கு அழிவில்லையென்றும், (4) அது கஷ்டப்படாமல் வரும் என்றும்.

1. சுலோகத்தில் 'எல்லா ஆத்மாக்களையும் ஒரேமாதிரியாகப் பார்க்கிறான்' என்று சொன்னது கூடுமென்று காட்டுவதற்காக, ஆத்மாக்கள் இயற்கையாகவே ஒரேமாதிரி என்றும், வேற்றுமை உடம்புகளில்தானிருக்கிறது என்றும் வியாக்கியானத்தில் சொல்லப்பட்டது.

தன்னை உள்ளபடி பார்த்தவன், தானும் எல்லா ஆத்மாக்களும் ஞானஸ்வரூபம் என்று ஒரே மாதிரி என்று பார்க்கிறான். 1 எல்லா ஆத்மாக்களில் தான் இருப்பதாகவும் தன்னிடத்தில் எல்லா ஆத்மாக்களும் இருக்கிறதாகவும் பார்க்கிறான், அதாவது எல்லா ஆத்மாக்களை தன்னைப் போலவும், தன்னை எல்லா ஆத்மாக்களைப் போலவும் பார்க்கிறான். அதாவது உடம்பை விட்டுப்பிரிந்த எல்லா ஆத்மாக்களுக்கும் ஞான ஸ்வரூபம் என்பது ஒன்று தான் இருக்கிறது. வேறு பேதம் கிடையாது. ஆகையினால் அவைகள் எல்லோரும் 2. ஒரே மாதிரி என்று பார்க்கிறான். ஆத்மா என்கிற வஸ்துக்களுக்குக் கணக்கில்லை. அவைகளில் ஒன்றாகிய தன்னை உள்ளபடி பார்த்தால்,மற்றவை எல்லாம் அதே மாதிரியாகையால், எல்லா ஆத்மாக்களையும் பார்த்ததாக ஆகிறது.

இந்த சுலோகத்திற்கு எல்லா ஆத்மாக்களும் ஒன்று தான் என்று பொருளல்ல. இங்கே ஆத்மாக்கள் எல்லாம் ஒரே மாதிரி என்றுதான் சொல்லப் படுகிறது. சுலோகத்திலேயே "எல்லாரையும் ஒரே மாதிரியாகப்பார்க்கிறான்" என்று சொல்லியிருப்பதினாலேயும், இந்த அத்தியாயம் 33-வது சுலோகத்தில் "எல்லாரையும் ஸமமாகப் பார்க்கவேணுமென்று சொன்னீரே" என்று அர்ஜுநன் சொல்வதினாலேயும், 5-வது அத்தியாயம் 19-வது சுலோகத்தில் "கர்மம் போய் ஸமமாயிருக்கும் ஆத்மாக்களை பிரும்மம்" என்று சொல்வதினாலேயும் இப்படித்தான் பொருள் கொள்ளவேண்டியது. [ 29 ]

---

1. யோகத்தில் ஆத்ம ஸ்வரூபத்தைப் பார்ப்பதினாலே எல்லாரையும் ஒரேமாதிரிஎன்று பார்க்கிறான் என்று சொல்லியிருக்கிறது. யாரை யாருக்கு ஸமானமாகப் பார்க்கிறானென்று காட்டுவதற்காக,தான் எல்லாரிடத்தில் இருப்பதாகவும், எல்லாரும் தன்னிடத்தில் இருப்பதாகவும் இந்த சுலோகம் சொல்லுகிறது.

2. யோகம் செய்கிறவன் தன் ஆத்மாவை மாத்திரந்தான் பார்க்கிறான். அவன் தன்னையும், மற்றவர்களையும் ஒரேமாதிரி என்று எப்படிப் பார்க்கக்கூடும்? அதற்கு பதில் சொல்லப்படுகிறது—ஒரே ஜாதி வஸ்துக்களில் ஒரு வஸ்துவைப் பார்ப்பதினாலேயே-ஒரு பானை சோற்றிற்கு ஒரு சோறு பதம் என்கிற பழமொழிப்படி—அந்த ஜாதியில் சேர்ந்த எல்லா வஸ்துக்களும் பார்க்கப்படுகின்றன.

𑌯𑍋 𑌮𑌾𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌚 𑌮𑌯𑌿 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 |
𑌤𑌸𑍍𑌯𑌾𑌹𑌂 𑌨 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌸 𑌚 𑌮𑍇 𑌨 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌤𑌿 ||௩௰||

𑌤𑌤𑍋 𑌵𑌿𑌪𑌾𑌕𑌦𑌶𑌾𑌪𑌨𑍍𑌨𑍋 𑌮𑌮 𑌸𑌾𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌮𑍁𑌪𑌾𑌗𑌤𑌃, “𑌨𑌿𑌰𑌞𑍍𑌜𑌨𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌸𑌾𑌮𑍍𑌯𑌮𑍁𑌪𑍈𑌤𑌿” 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑍋 𑌵𑌿𑌧𑍂𑌤𑌪𑍁𑌣𑍍𑌯𑌪𑌾𑌪𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇𑌣𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌸𑍍𑌯 𑌮𑌤𑍍𑌸𑌾𑌮𑍍𑌯𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍, 𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑌾𑌤𑍍𑌮𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌿 𑌮𑌾𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿, 𑌸𑌰𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌵𑌸𑍍𑌤𑍁 𑌚 𑌮𑌯𑌿 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿—𑌅𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌸𑌾𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌾𑌦𑍇𑌕𑌤𑌰𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨 𑌅𑌨𑍍𑌯𑌤𑌰𑌦𑌪𑌿 𑌤𑌾𑌦𑍃𑌶𑌮𑌿𑌤𑌿 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 | 𑌤𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌃 𑌅𑌹𑌂 𑌤𑌤𑍍𑌸𑌾𑌮𑍍𑌯𑌾𑌨𑍍𑌨 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌾𑌮𑌿—𑌨𑌾𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍁𑌪𑌯𑌾𑌮𑌿 | 𑌮𑌮𑌾𑌪𑌿 𑌮𑌾𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑍋 𑌮𑌤𑍍𑌸𑌾𑌮𑍍𑌯𑌾𑌤𑍍, 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌮𑌤𑍍𑌸𑌮𑌮𑌵𑌲𑍋𑌕𑌯𑌨𑍍 𑌸 𑌮𑌾𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍁𑌪𑌯𑌾𑌤𑌿 ||

*அவ.—இதற்கு அடுத்த மேல்படியைச் சொல்லுகிறார்.—*

முதல் படியிலிருக்கிறவனைக் காட்டிலும் 1 அதிகப்பழக்கமுள்ளவன் புண்ணியங்களும் பாபங்களும் நீங்கி, ஸ்வரூபத்தோடு இருக்கிற எல்லா ஜீவன்களையும் 2என்(பகவான்) மாதிரிஇருப்ப

1 யோகம் செய்கிறவன் தானும் மற்ற ஆத்மாக்களும் ஞான ஸ்வரூபமென்றும், எல்லாரும் ஒரே மாதிரி என்றும், வெவ்வேறு உடம்புகளில் இருப்பதுதான் ஒருவருக்கொருவர் பேதம் என்றும் தெரிந்த பிறகு, உடம்புகளின் சேர்க்கை ஞான ஸ்வரூபமாயிருக்கிற ஆத்மாவிற்கு எப்படி வந்ததென்று விசாரிக்கிறான். அது அவரவர்கள் கர்மத்தினாலே வந்ததென்றும், புண்ணியமும் பாபமுமாகிய கர்மம் போனால், எல்லாரும் பகவானைப்போல் ஆய் விடுவார்களென்றும் சாஸ்திரத்தினாலே தெரிந்து கொண்டு அதை நினைக்கிறான். அப்போது தன்னைப் பார்க்கும் போது, என்னுடைய கர்மம் போனால் பகவான் மாதிரி ஆய் விடுவேனென்று நினைப்பதினாலே, பகவானுடைய நினைவு வருகிறது.

2 உதாரணமாகச் சொல்லப்பட்டது. எப்படி நான் என்னைப் பார்க்கும்போது அவனையும் என் மாதிரி என்று பார்க்கிறேனோ, அப்படியே அவனும் தன்னை பார்க்கும்போது தன் மாதிரி நான் இருக்கிறேனென்று என்னையும் நினைக்கிறான். பகவான் எல்லாரையும் பார்க்கிறேனென்று சொன்னதனால், பகவானும் ஆத்மாக்களும் ஒரே மாதிரி

தாகப் பார்த்துக் கொண்டு எல்லா ஆத்மாக்களிலும் என்னையும், என்னிடத்தில் எல்லா ஆத்மாக்களையும் பார்க்கிறான். நானும் அவர்களும் ஒரே மாதிரியாய் இருப்பதால், ஒருவரைப் பார்க்கும் போது மற்றவர்களும் இப்படித்தான் இருக்கிறார்கள் என்று பார்க்கிறான். இப்படித் தன்னுடைய ஸ்வரூபத்தைப் பார்க்கிறவனுக்கு நான் மறைகிறதில்லை. தன் மாதிரியாயிருப்பதினாலே என்னை எப்போதும் அவன் பார்க்கிறான். என்னைப் பார்த்துக் கொண்டிருக்கிற எனக்கும் என் மாதிரி இருப்பதினாலே அவன் மறைகிறதில்லை. அதாவது அவனை எப்போதும் நான் பார்க்கிறேன். [ 30 ]

[illegible]

[illegible] |
[illegible] ||௩௧||

[illegible] ||௩௧||

அவ —இதற்கும் மேற்பட்ட படியைச் சொல்லுகிறார்.—

ஆத்மாவிற்கு அடியோடே கர்மம் போன பிறகு, அவனுடைய ஞானம் என்கிற குணமானது ஒருவிதச் சுருக்கமுமில்லாமல் விரிவை அடைகிறது. பகவானுடைய அறிவு போலவே ஆகிறது. பேதமில்லை. இப்படி யோகம் பண்ணுகிற காலத்தில் அந்த குணத்தில் உண்டாகும் தாரதம்மியமில்லாமல், அந்த

---

என்கிற ஸங்கதியானது எல்லாம் தெரிந்த பகவானுக்குத் தோன்றுவதால், உண்மையானது என்று காட்டப்பட்டது. எல்லா ஜீவன்களும் ஒரேமாதிரி என்றும், கர்மம்போன ஜீவன்கள் பகவான்மாதிரி என்றும், 4-வது அத்தியாயத்தில் 35-வது சுலோகத்தில் சொல்லப்பட்டது, அது இங்கே விரிவாய்ச் சொல்லப் படுகிறது.

ஆத்மாவைப் பகவான் மாதிரி இருப்பதாக 1 நன்றாய்ப் பார்க்கிறவன், யோகம் நின்று உலகத்தில் வேலைகளைச் செய்யும்போதும், தன்னையும் எல்லா ஆத்மாக்களையும் பார்க்கும்போது அவர்களை பகவானைப்போலவே இருப்பதாகப் பார்க்கிறான். [31]

அவ—தவெதாzவஹி காஷாஊஹ—

ஆுதெளவஜெநு ஸவ-த்ர ஸஊ வஶுதி யொஜ-ந।
ஸுவ வா யதி வா ஊ:வ ஸ யொகீ வாஊா உத:॥

ஸா தநஸாநெநுஷாஂ வாதநாஊஸஂகாஷிதஜஞாநெந காகாரதயா ஔவஜெநு ஸாதநி வாநெநுஷ வ ஸவ-த்ர வத-ஊாநஂ வுத்ர ஜநாஃிரவஂ ஸுவஂ தநாரணாஃிரவஂ வ ஊ:வஊஸஂஜநஸாஊாதஊஂ ய: வஶுதி - வரவுத்ரஜநஊரணாஃிஸஊஂ ஸ்வவுத்ரஜநஊரணாஃிகஂ ய: வஶுதீதுய:। ஸ யொகீ வாஊா உத:-யொகாஷாஂ தவெதா உத:॥ ॥௩௨॥

அவ.—எல்லாவற்றிற்கும் மேற்பட்ட படியைச் சொல்லுகிறார்.—

யோகம் செய்கிறவன் தானும் மற்ற ஆத்மாக்களும் ஞான ஸ்வரூபமாயிருப்பதினாலே ஒரே மாதிரி என்கிற நினைவை நன்றாகப்பழக்கம் செய்வதினாலே, தன்னிடத்திலும், மற்ற ஆத்மாக்களிடத்திலும் இருக்கும்—பிள்ளை பிறப்பது முதலான ஸுகத்தையும், பிள்ளை சாவது முதலான துக்கத்தையும்— தங்கள் ஒருவருக்கும் அவைகளில் ஸம்பந்த மில்லை யென்று— ஸமமாகப் பார்க்கிறான். அதாவது தனக்கு வருகிற பிள்ளை பிறந்த ஸுகத்திலும், பிள்ளை இறக்கும் துக்கத்திலும்—மற்றவர்களுக்கு ஸம்பந்

1. நன்றாய்ப் பார்ப்பதினாலே பழக்கம் முற்றி, ஆத்மாக்களும் பகவானும் ஒரே மாதிரி என்கிற நினைவானது ஒன்றன் பின் ஒன்றாக ஆறுபோல் பெருகிக் கொண்டு வருகிறதாகையினாலே, யோகம் நின்று வேறு வேலை செய்யும் போதும் இந்த நினைவு தொடர்ந்து வருகிறது.

தமில்லாதது போல — தனக்கும் ஸம்பந்தமில்லாமலிருக்கிறான்1. இப்படிப் பட்டவன் யோகத்தினுடைய உயர்ந்த படியை அடைந்தவன்.2 [32]

அர்ஜுந உவாச —

யோऽயம் யோகஸ்த்வயா ப்ரோக்த: ஸாம்யேந மதுஸூதந ।
ஏதஸ்யாஹம் ந பஶ்யாமி சஞ்சலத்வாத் ஸ்திதிம் ஸ்திராம் ॥ 33 ॥

சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம் ।
தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் ॥ 34 ॥

யோऽயம் தேவமநுஷ்யாதிபேதேந ஸ்தாவரபேதேந வாஸ்தவபிந்நேஷ்வாத்மஸு ஜ்ஞாநைகாகாரதயா ஸர்வத்ர ஸமதர்ஶநரூபோ ஸாம்யேந யோகஸ்த்வயா ப்ரோக்த:। ஏதஸ்ய யோகஸ்ய ஸ்திராம் ஸ்திதிம் ந பஶ்யாமி, மநஸஶ்சஞ்சலத்வாத் । ததா ஹி நாநாவிதபுருஷார்த்தேஷு வ்யவஸ்திதம் புருஷஸ்ய சஞ்சலம் மநோ ஹி ப்ரமாதி பலவத் த்ருடம் । தஸ்ய ஸ்வாப்யஸ்தவிஷயேஷு சஞ்சலஸ்ய மநஸஸ் தத்விபரீதாகாராத்மநி ஸ்தாபநரூபம் நிக்ரஹம் ப்ரதிகூலமஹாவாதஸ்ய வ்யஜநாதிநேவ ஸுதுஷ்கரம் மந்யே । மநோநிக்ரஹோபாயோ வக்தவ்ய இத்யபிப்ராய: ॥ ॥ 33-34 ॥

---

1. இரண்டாவது படியில் கர்மம் இல்லாமையினாலும், கர்மத்தினால் வரும் அறிவின் வித்தியாஸமில்லாமையினாலும், ஜீவன் பகவான் போலிருக்கிறானென்று யோகி நினைக்கிறான். இப்படியே யோகம் நின்றபோதும் நினைக்கிறான். அது மூன்றாவது படி. நாலாவது படியில் கர்மங்களுடையவும், அறிவுகளுடையவும் வித்தியாஸத்தால் வரும் ஸுகத்திலும் துக்கத்திலும் வித்தியாஸமில்லாமையை நினைக்கிறான்.

2. இது ஜீவாத்ம யோகத்தினுடைய உயர்ந்தபடி. பகவானுடைய யோகத்தைப்பற்றி மேலே சொல்லப்போகிறார்.

*அர்ஜுநன் சொல்லுகிறுன்—*

1. தேவன் முதலான பிரிவுகளாலும், ஜீவன், பகவான் என்கிற பிரிவினுலும், எல்லா ஆத்மாக்களையும் பகவானையும் ஒருவருக்கொருவர் வேறென்று நாளது வரையில் நினைத்துக் கொண்டிருக்கிறேன். ஆகையால் ஞானஸ்வரூபமாயிருப்பதினுலே எல்லா ஆத்மாக்களும் ஒரே மாதிரி என்றும், அடியோடு கர்மம் போன பிறகு எல்லா ஆத்மாக்களும் பகவான் மாதிரி என்றும் எண்ணுவது மிகவும் கஷ்டம். அப்படி ஏதோ கொஞ்சம் நினைவு வந்தாலும், அது 1 நிலையாய் நிற்காது என்று தோன்றுகிறது. ஏனென்றுல், மனது ஒரே விஷயத்தில் நிற்கிறதில்லை. நெடு நாளாய் மிகவும் பிரீதியோடு பழகின பிள்ளை, பெண்டாட்டி முதலானவைகளையும் ஒரு நாழிகை விடாமல் நினைப்போமென்றுல், மனது நிற்காது. நிறுத்தினுலும் அந்த மனது ஒருவனை பலாத்காரமாய் கலக்கி, இன்னொரு இடத்திற்கு இழுத்துக்கொண்டே போய் விடும். இப்படி இருக்கும் மனதை இதுவரையில் ஒருக்காலும் நினைக்காத கீழ்ச்சொன்ன ஸங்கதியில் நிலையாக நிறுத்துவது என்பது கடுங்காற்றை விசிறியால் தடுப்பதுபோல் முடியாதென்று நினைக்கிறேன். ஆகையினுலே, மனதை அடக்குவதற்கு வழி சொல்லவேணும்.

ஶ்ரீபகவாநுவாச—

அஸம்ஶயம் மஹாபாஹோ மநோ துர்நிக்ரஹம் சலம் |
அப்யாஸேந து கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே ||

---

1. நான் அநாதி காலமாய் "அவன் வேறு, இவன் வேறு, நான் வேறு" என்று எண்ணிக்கொண்டு வருகிறேன். என்ன யோஜித்துப்பார்த்தாலும், நான் அழகாயிருக்கிறேன், நான் பணக்காரன், யுத்தத்தில் நான் கெட்டிக்காரன், இவன் அழகில்லாதவன், இவன் பிச்சைக்காரன், இவன் வில்லை தொடத்தகாதவன், இது முதலான எண்ணங்கள் எனக்குப் போகவில்லை. என் மனது அடங்கவில்லை. இப்படி நினைப்பது என்னுலே எப்படி முடியும். எல்லாம் தெரிந்த நீர் தான் இதை நினைக்கவும் சொல்லவும் கூடும்—என்று அர்ஜுநன் கருத்து. இந்த அத்தியாயம் 5-வது 6-வது சுலோகங்களில் யோகத்திற்கு ஸாதநம் சொல்லப்பட்டது. அதையே தெளிவாய்த்தெரிந்து கொள்ளுவதற்காக அர்ஜுநன் கேட்கிறுன்.

𑌅𑌸𑌂𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌯𑍋𑌗𑍋 𑌦𑍁𑌷𑍍𑌪𑍍𑌰𑌾𑌪 𑌇𑌤𑌿 𑌮𑍇 𑌮𑌤𑌿𑌃 ।
𑌵𑌶𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌤𑍁 𑌯𑌤𑌤𑌾 𑌶𑌕𑍍𑌯𑍋𑌽𑌵𑌾𑌪𑍍𑌤𑍁𑌮𑍁𑌪𑌾𑌯𑌤𑌃 ॥௩௬॥

𑌚𑌲𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑌯𑌾 𑌮𑌨𑍋 𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌮𑍇𑌵𑍇𑌤𑍍𑌯𑌤𑍍𑌰 𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃 । 𑌤𑌥𑌾𑌪𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍋 𑌗𑍁𑌣𑌾𑌕𑌰𑌤𑍍𑌵𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌜𑌨𑌿𑌤𑌾𑌭𑌿𑌮𑍁𑌖𑍍𑌯𑍇𑌨 𑌆𑌤𑍍𑌮𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑍇𑌷𑍁 𑌦𑍋𑌷𑌾𑌕𑌰𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌨𑌜𑌨𑌿𑌤𑌵𑍈𑌤𑍃𑌷𑍍𑌣𑍍𑌯𑍇𑌨 𑌚 𑌕𑌥𑌂𑌚𑌿𑌦𑍍𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌸𑌂𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾-𑌅𑌜𑌿𑌤𑌮𑌨𑌸𑌾 𑌮𑌹𑌤𑌾𑌪𑌿 𑌬𑌲𑍇𑌨 𑌯𑍋𑌗𑍋 𑌦𑍁𑌷𑍍𑌪𑍍𑌰𑌾𑌪 𑌏𑌵 । 𑌉𑌪𑌾𑌯𑌤𑌸𑍍𑌤𑍁 𑌵𑌶𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 - 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌕𑍍𑌤𑍇𑌨 𑌮𑌦𑌾𑌰𑌾𑌧𑌨𑌰𑍂𑌪𑍇𑌣 𑌜𑍍𑌞𑌾𑌨𑌗𑌰𑍍𑌭𑍇𑌣 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌜𑌿𑌤𑌮𑌨𑌸𑌾, 𑌯𑌤𑌤𑌾 𑌤𑍇𑌨 𑌯𑌤𑌮𑌾𑌨𑍇𑌨 𑌸𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌰𑍂𑌪𑍋 𑌯𑍋𑌗𑍋𑌽𑌵𑌾𑌪𑍍𑌤𑍁𑌂 𑌶𑌕𑍍𑌯𑌃 ॥ ॥௩௫—௩௬॥

பகவான் சொல்லுகிருர்—

மனதுக்கு ஒரு இடத்தில் நிலையாய் நிற்காமல் இருப்பதே ஸ்வபாவமாகையால், அதை அடக்க முடியாது என்கிற விஷயத்தில் ஸந்தேஹமில்லை. அப்படியிருந்தாலும், ஆத்மா உயர்ந்த 1 குணமுள்ளது என்று எப்போதும் நினைத்தால், அதை உள்ள படி பார்க்கவேணு மென்று ஆசையுண்டாகும். மற்ற விஷயங் களில் உள்ள தோஷங்களைப் பல தடவை நினைத்தால், அவைக ளில் வெறுப்புண்டாகும். இந்த ஆசையினுலும், வெறுப்பினு லும் மனதைக் கஷ்டப் பட்டு அடக்கலாம். மனதை அடக் காமல் 2 எவ்வளவு பிரயாஸப் பட்டாலும், கீழ்ச்சொன்ன பார் வையை அடைய முடியாது. கீழ் அத்தியாயங்களில் சொன்ன 3. கர்மயோகத்தினுலே மனதை அடக்கி யோகத்தைப் பழக்கு கிறவன் அதையே ஸுகமாக அடையலாம். [35-36]

---

1. ஆத்மாவின் குணங்களாவன—அது அழிவில்லாதது, ஞான ஸ்வரூபம், மிகவும் இன்பமானது, இயற்கையில் கர்மத்திற்கு உட்பட்ட தன்று, இயற்கையில் தோஷமில்லாதது—இவை முதலானவைகள்.

2. ‘மஹாபாஹோ’ (பெரிய கைகளை யுடையவனே) என்று சுலோ கத்தில் சொன்னதின கருத்து.—உபாயத்தாலே எது செய்ய முடியு மோ, அதை வலிமையால் செய்ய முடியா தென்று.

3. கர்மயோகமதான மனதை அடக்குவதற்கு வழி. முன் சொ ன்ன ஆசையும் வெறுப்பும கர்ம யோகததுக்கு உதவிகள்.

अव — अथ 'नेहाभिक्रमनाशोऽस्ति' इत्यादावुक्तं योगमाहात्म्यं यथावज्ज्ञातुमर्जुनः पृच्छति । अ-
र्जुनेनात्मज्ञानतया योगसिद्ध्या वा अस्ति कर्मयोग-
माहात्म्यं तन्निष्ठस्य । तत्र योगमाहात्म्ये —

अर्जुन उवाच —

अयतिः श्रद्धयोपेतो योगाच्चलितमानसः ।
अप्राप्य योगसंसिद्धिं कां गतिं कृष्ण गच्छति ॥ ३७ ॥
कच्चिन्नोभयविभ्रष्टश्छिन्नाभ्रमिव नश्यति ।
अप्रतिष्ठो महाबाहो विमूढो ब्रह्मणः पथि ॥ ३८ ॥
एतन्मे संशयं कृष्ण छेत्तुमर्हस्यशेषतः ।
त्वदन्यः संशयस्यास्य छेत्ता न ह्युपपद्यते ॥ ३९ ॥

श्रद्धया योगे प्रवृत्तो यः पश्चादयतिः शिथिलप्रयत्नः योगाच्चलितमानसः योगसंसिद्धिमप्राप्य कां गतिं गच्छति । उभयविभ्रष्टः छिन्नाभ्रमिव कच्चिन्न नश्यति । यथा वेदोक्तं स्वर्गादिसाधनं कर्म वायुवशात् विच्छिन्नं अभ्रमिव नश्यति, तद्वदेव कच्चिन्न नश्यति । कथमुभयविभ्रष्टता? अप्रतिष्ठो विमूढो ब्रह्मणः पथीति । यथावस्थितं स्वर्गादिसाधनभूतं कर्म फलाभिसन्धिरहितत्वात् स्वर्गादिसाधनतया अप्रतिष्ठः, ब्रह्मणः पथि विमूढः विच्छिन्नश्च । अतः उभयविभ्रष्टतया किमयं नश्यति, उत न नश्यति । तदेनं संशयमशेषतश्छेत्तुमर्हसि । त्वदन्यः सर्वज्ञः संशयस्यास्य छेत्ता न ह्युपपद्यते ॥

அவ.—இரண்டாவது அத்யாயம் 40-வது சுலோகத்தில் 1. யோகத்தின் பெருமை சொல்லப்பட்டது. அதை உள்ளபடி அறிந்துக் கொள்வதற்காக அர்ஜுநன் கேட்கிறான்.—

---

1. முன்னே கர்ம யோகத்தின் பெருமையன்றோ சொல்லப்பட்

ஆத்மாவை உள்ளபடி பார்ப்பதற்காக யோக(த்யான)த்தை ஆரம்பித்து, வலுவான பழக்கமாகிய ப்ரயத்னக் குறைவினாலே யோகத்தினுடைய பலனை அடைவதற்கு முன்னாலே அதிலிருந்து மனது 2 சலித்தவனுக்கு 3 கதி என்ன? பெரியமேகத்திலிருந்து பிரிந்த துண்டு மேகம் போல் இரண்டுமில்லாமல் அவன் கெட்டுப்போகிறானா? அதாவது பெரிய மேகத்தை விட்டு துண்டு மேகம் தனியாய் வந்தால், அது முன்னே இருந்த மேகத்துடனும், பின்னே வரும் மேகத்துடனும் சேராமல் நடுவில் உருப்படியில்லாமல் போய் விடுகிறது. அது போல 4 கர்மங்களைச் செய்யும் போது ஸ்வர்க்கம் முதலான பலன்களை வேண்டாமென்று விட்டு விட்டான். ஆத்மாவைப் பார்ப்பதற்கோ ஸரியானபடி யோகத்தைச் செய்யவில்லை. ஸ்வர்க்கத்திற்கு ஸ்வர்க்கமும் போய் விட்டது. ஆத்மாவின் பார்வையும் வரவில்லை. ஆகையினால் இவன் வீணாய்ப் போய்விடுவனா? அல்லது ஸௌக்கியத்தை அடைவனா? எல்லா ஸங்கதிகளையும் ப்ரத்யக்ஷமாய் ஒரே காலத்தில் எப்போதும் பார்த்துக் கொண்டிருக்கிற உம்மைத் தவிர இந்த ஸந்தேஹத்தைப்போக்குகிறவர்கள் இல்லை. ஆகையால் இந்த ஸந்தேஹத்தைத் தீர்த்துத் தெளிய வைக்கவேணும். [37-38-39]

---

டது. இப்போது கர்ம யோகத்தின் பலனாகிய ஆத்மாவின் பார்வையின் பெருமை சொல்லப்படுகிறது. இதை முன்னாலே சொல்லப் பட்டதாக எப்படி சொல்லலா மென்றால், பதில்—ஆத்மாவைப் பற்றின அறிவு சேர்த்திருப்பதும், த்யானத்தின் வழியாய் ஆத்மாவின் பார்வையைக் கொடுப்பதும்—என்கிற இந்த இரண்டும்தான் கர்மயோகத்திற்குப் பெருமையாகச் சொல்லப்பட்டது. அது யோகத்தின் பெருமைதான். யோகமாவது ஆத்மாவின் த்யானம்.

2. யோகததை எல்லா அங்கங்களுடனே செய்ய முடியாதவன்.

3. ஆசைப்பட்ட விஷயங்களின் அநுபவமா? அல்லது மோக்ஷமா? அல்லது நரகமா? இவைகளில் எது ? இந்த ஸங்கதியைத்தான் 38—வது சுலோகத்தில் விரிவாய்ச் சொல்லுகிறார்.

4. கர்ம ஸ்வரூபத்தைச் செய்வதில் ஒரு குறைவுமில்லை. ஆனால் பலன் வேண்டாமென்று விட்டு விட்டபடியால் ஸ்வர்க்கம் முதலான பலன்கள் வாரது என்று கருத்து.

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 —

𑌪𑌾𑌰𑍍𑌥 𑌨𑍈𑌵𑍇𑌹 𑌨𑌾𑌮𑍁𑌤𑍍𑌰 𑌵𑌿𑌨𑌾𑌶𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ।
𑌨 𑌹𑌿 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌕𑍃𑌤𑍍𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑍍𑌦𑍁𑌰𑍍𑌗𑌤𑌿𑌂 𑌤𑌾𑌤 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥ ॥௪௦॥

[illegible] ॥ ॥௪௦॥

அவ: – பகவான் சொல்லுகிறார்—

ஆவலுடனே யோகத்தை ஆரம்பித்து, அதைப்பூர்ணமாகச் செய்ய முடியாதவனுக்கு ஸ்வர்க்கம் முதலான ஸுகங்களின் அனுபவத்திலும், ஆத்மாவைப் பார்ப்பதிலும் கிடையாதது ஒன்றுமில்லை. ஒருவித கெடுதியும் கிடையாது. கெடுதி என்றால் ஆசைப்பட்ட பலனை அடையாமையும் தொந்தரவைக் கொடுக்கும் தோஷத்தை அடைவதும். மிகுந்த நல்ல காரியமான யோகத்தைச் செய்கிற எவனுக்கும் 1. ஒருக்காலும் கெடுதி கிடையாது. [40]

[illegible] —

𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑍃𑌤𑌾𑌂 𑌲𑍋𑌕𑌾𑌨𑍁𑌷𑌿𑌤𑍍𑌵𑌾 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍀𑌃 𑌸𑌮𑌾𑌃 ।
𑌶𑍁𑌚𑍀𑌨𑌾𑌂 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑌾𑌂 𑌗𑍇𑌹𑍇 𑌯𑍋𑌗𑌭𑍍𑌰𑌷𑍍𑌟𑍋𑌽𑌭𑌿𑌜𑌾𑌯𑌤𑍇 ॥

[illegible]

1. இவ்வளவு நல்ல வேலையை ஆரம்பித்தவன் மூன்று காலத்திலும் நல்லவன். அவனுக்குக் கெடுதல் கிடையாது. ஏனென்றால், வெகு காலமாய் கணக்கில்லாத புண்ணியத்தைப் பண்ணித்தான் இந்த யோகத்தை ஆரம்பிக்கக்கூடும். இப்போது மிகுந்த நல்ல வேலையான யோகத்தைச் செய்கிறான். பின்னும் புண்ணிய லோகத்தை யடைவது, யோகத்தை முடிப்பது, மோக்ஷத்தை அடைவது முதலானவைகள் வாய்ப்போகின்றன

யாவத்தேஷாமத்ருஷ்ணாஸாநம் ஸாஸ்வதீஸமாஸ்ஸத்ராஷிகா. த ஸ்மிந் லோகே வித்ருஷ்ண: ஸ்வநாம் ஸ்ரீமதாம்-யோகப்ரஷ்ட உயோகாநாம் குலே யோகப்ரஷ்டோ ஹ்யேஷ யோகமா ஹாத்ம்யாஜ்ஜாயதே ॥ ॥சக॥

எந்த விதமான ஸுகத்தில் ஆசையினுலே யோகத்தை ஸரி யாகச் செய்து முடிக்க வில்லையோ அதேமாதிரியான 1 மிகவும் உயர்ந்த ஸுகத்தை இவன் கொஞ்சம் பண்ணின யோகத்திறகாக பகவான் ஸந்தோஷப் பட்டுக் கொடுக்கிறுன் அவன் மிகுந்தபுண் ணியம் பண்ணினவர்கள் அடையும லோகங்களை அடைந்து,வெகு கால மிருந்து, 2 அதை அனுபவிக்கிறுன் அந்த ஸுகத்தை அனுப வித்து,ஆசை 3 அடங்கின பிறகு,யோகத்தை ஆரம்பிக்கத் தகுந்த சுத்தியையும (அநுஷ்டானத்தையும்)ஸமபத்தையும்(நல்ல அறிவை யும்) உடையவர்களுடைய வயிற்றில பிறக்கிறுன். இது யோகத் தைக் கொஞ்சம செயது அதில மனது சலித்தவனுக்கு வருகிற பலன் இது யோகத்தின மஹிமையால் வருகிறது. [41]

அதவா யோகிநாமேவ குலே பவதி தீமதாம் ।
ஏதத்தி துர்லபதரம் லோகே ஜந்ம யதீத்ருஸம் ॥ ॥சஉ॥

பரிபக்வயோகஸ்ஸ்விதஸ்ச்ச யோகிநாம் தீமதாம்-யோ கம் குர்வதாம் ஸ்வயமேவ யோகோபதேஸக்ஷமாணாம் கு

1 ஆசைப்பட்ட ஸுகத்தினுடைய ஜாதியாயிருந்தாலும, அந்த ஜாதியில மிகவும உயர்ந்தது. உலகத்திலும் ஒரே ஜாதியான ரஸங்களி லும, வாஸனைகளிலும் சில உயர்ந்தவை, சில தாழ்ந்தவைகளாயிருக் கின்றன.

2 தாமத்திறகாக ஸமபாதித்த பொருளை தன் ஸுகத்திற்காக செலவழிப்பதுபோல்.

3 ஒருவன ஸுவர்க்கத்திறகாக புண்ணியமசெய்து ஸுவர்க்கத்தை அநுபவித்து, அந்த புண்ணியம் செலவழிந்து திரும்பி வருவதுபோல், இவன்யோகத்தின் பெருமை போயத திரும்பி வரவில்லை அந்தப பெரு மையானது செலவழிந்து போகக் கூடியதல்ல ஸுகத்தை இடைவிடா மல் அனுபவிப்பதினுலே, அதில அலுப்பு வருவதாலும், பிராரப்த கர்மத் தில இருக்கும் புண்ணியத்தினுலே ஸத்வகுணம் மேலிட்டு விவேகமு ண்டாவதினுலும் ஆசை அடங்குகிறது.

ஜெ ஸவதி। தஜ்ஞாநாவஸ்யம்-யோகயோக்யாநாம் யோகி
நாம் ச குலெ ஜந்ம யோகோபதேஷ்டூணாம் ஜ்ஞாநிநாம் ஸதாம்।
ஸந்ததேர் யோகஸம்பந்நா க்ருதம் ॥ ॥சஉ॥

1. யோகத்தை வெகுதூரம் பழக்கி, அது பூர்த்தியை அடைவதற்கு முன்னமே அதிலிருந்து மனது சலித்தவன் யோகத்தைத் தான் பண்ணிக்கொண்டும், பிறருக்கு அதைச் சொல்லிக் கொடுக்க தகுந்தவர்களுமாய் இருக்கிறவர்களுக்கு 2 பிள்ளையாகப் பிறக்கிறான். யோகத்தை ஒருவரிடத்திலிருந்து தெரிந்துகொண்டு ஆரம்பிக்கக்கூடியவர்கள் வயிற்றில் பிறப்பும், யோகத்தைச் செய்கிறவர்கள் வயிற்றில் பிறப்பும்—இந்த இரண்டும் விஷயங்களையே பார்த்துக்கொண்டு மோக்ஷத்தில் ஆசையில்லாமல் இருப்பவர்களுக்கு வருவது மிகவும் அரிது. யோகத்தின் பெருமையாலேதான் வரவேண்டியது. 3 [42]

தத்ர தம் புத்திஸம்யோகம் லபதே பௌர்வதேஹிகம்।
யததே ச ததோ பூயஸ் ஸம்ஸித்தௌ குருநந்தந ॥சங॥

பத்வாஸ்யாஸெந தத்வெநவ ஹியதே ஹ்யவஶோऽபிஸ:

தத்ர ஜந்நி தஸ்ய பௌர்வதேஹிகம் யோகவிஷயம் புத்திஸம்யோகம் லபதே। ததஸ்ஸுப்தப்ரபுத்தவத் ஸம்ஸ்

1. இந்த ஸங்கதி சுலோகத்தில் சொல்லப்படாமல் போனபோதிலும், முன் சுலோகத்தில் சொன்ன பிறப்பைக் காட்டிலும் உயர்ந்த பிறப்பை இதில் சொல்வதினாலே, அதற்குக் காரணமும் உயர்ந்ததாயிருக்க வேணுமென்று கருத்து.

2. சுலோகத்தில் "யோகிகளுடைய குலத்தில்" என்று சொல்லியிருக்கிறது. அதற்கு யோகம் செய்கிற ஒருவனுடைய பிள்ளை, பேரன் முதலானவர்கள் வயிற்றில் பிறப்பு என்று பொருளல்ல. ஏனென்றால் அதினாலே யோகத்திற்கு அதிக உதவியில்லை. ஆகையினாலே தான் யோகம் செய்து கொண்டும், அதைச் சொல்லிக் கொடுக்க தகுந்தவனுமாய் இருக்கிறவனுக்கு பிள்ளையாய்ப் பிறக்கிறானென்றுதான் பொருள்.

3. முன் சுலோகத்தில் பிறரிடத்தில் போய் யோக விஷயமான உபதேசத்தைப் பெறுவதற்குத் தகுந்தவர்களைச் சொல்லிற்று. இந்த சுலோகத்தில்தாமே உபதேசம்பண்ணத்தகுந்தவர்களைச்சொல்லுகிறது.

ஸம்ஸித்தௌ யததே। யதா நாந்தராயஹதோ பவதி ததா யததே। தேந பூர்வாப்யாஸேந பூர்வேண யோகவிஷயேணாப்யாஸேந ஸ யோகப்ரஷ்டோ ஹ்யவசோऽபி யோக ஏவ ஹ்ரியதே। ப்ரஸித்தம் ஹ்யேதத் ஸம்ஸ்காரமாஹாத்ம்யம்॥

அவ—கீழ்ச்சொன்ன பிறப்பினால் மோக்ஷத்திற்கு என்ன உதவி? முன்னே செய்த யோகம் போய்விட்டதே என்றால், சொல்லுகிறார்—

இப்படிப் பிறந்து முன் பண்ணின யோகவிஷயமான நினைவு வந்து, அந்தயோகத்தை ஆரம்பித்து, அதைக் கெடுதியில்லாமல் முடிப்பதற்குத்தகுந்தபடி பிரயத்தனம் பண்ணுகிறான். 1உதாரணம்:—ஒருவன் மிகுந்த ஆசையுடன் ஒருவேலையைச் செய்து கொண்டிருக்கும்போது, தூக்கம்வந்து அது நின்றுபோய்விட்டாலும், தூக்கத்திலிருந்து எழுந்திருந்தவுடன் ஆசையுடன் அதை

---

1. ஒருவனுக்கு முன் ஜன்மத்திலே உண்டான எல்லா ஸம்ஸ்காரங்களும் மறு ஜன்மத்திலே மறைந்து போவதாலே, முன் ஜன்மத்தில் பண்ணின யோகத்தின் நினைவு இந்த ஜன்மத்தில் எப்படி வரக்கூடும்? என்றால், இதற்கு பதில் தூங்கி எழுந்தவனென்கிற உதாரணத்தினாலே காட்டப்படுகிறது. புண்ணியம் செய்தவர்களுக்கு முன் ஜன்மத்தில் உண்டான நல்ல ஸம்ஸ்காரங்கள் மறைகிறதில்லை என்று கருத்து. ஸம்ஸ்காரமென்பது ஒரு வஸ்துவின் பார்வை முதலானதாலே உண்டாகி, பிறகு அந்த நினைவு மூட்டுகிற அடையாளங்கள் சேர்ந்தால்—மறுபடி அந்த வஸ்துவின் நினைவை உண்டாக்குகிற குணம். வாஸனையென்பது ஒரு அறிவினால், அல்லது வேலையினால் அதேமாதிரி அறிவிலும், வேலையிலும் ஒரு ஆசையை உண்டு பண்ணுவது. ஆகையினால் அறிவு வேறு. ஸம்ஸ்காரம் வேறு, வாஸனை வேறு. முன் ஜன்மத்தின் வாஸனை மறு ஜன்மத்தில் வரும். ஸம்ஸ்காரம் எல்லாருக்கும் வராது. ஆதி பரதர் தான் வளர்த்த மானை நினைத்துக் கொண்டு இறந்தபடியால் மானாகப் பிறந்தார். அப்போது முன் ஜன்மத்தில் செய்ததெல்லாம் அவர் நினைவிற்கு வந்து, மறுபடியும் இப்படிக் கெட்டுபோகாமலிருப்பதற்கு வேண்டிய பிரயத்தனம் பண்ணினார். விதுரர் உயர்ந்த ஜாதியில் பிறந்து பக்தியோகம் பண்ணி, ஏதோ ஒரு காரணத்தினால், சூத்திர ஜாதியில் பிறந்தார். அந்த ஜன்மத்தில் முன் பண்ணின பக்தியோகத்தின் நினைவு வந்து பக்தி யோகத்தைச் செய்து முடித்தார்.

மறுபடியும் ஆரம்பித்து முடிப்பன். அதுபோல். முன் பண்ணி னயோகத்தின் பழக்கம் இவனை அதைப்பண்ணும்படி பலாத்கார மாய் இழுக்கிறது. இவ்விதமான யோகத்தின் பெருமையை ஆதி பரதர், விதுரர், பீஷ்மர் முதலானவர்களுடைய சரித்திரங்களில் பார்க்கலாம். ( 43,43½, )

ஜிஜ்ஞாஸுரபி யோகஸ்ய ஶப்³த³ப்³ரஹ்மாதிவர்ததே ॥ ॥சச॥

அப்ரவ்ருத்தயோகோ யோகே ஜிஜ்ஞாஸுரபி தத்ஸ்ப்ருஹித மனா: ஸ: புனரபி தேனைவ ஜிஜ்ஞாஸாஸம்ஸ்காரேண யோகமா ஸ்தா²ய ஶப்³த³ப்³ரஹ்மாதிவர்ததே । ஶப்³த³ப்³ரஹ்ம தே³வமனுஷ்யப்ருதி²வ்யந்தரிக்ஷஸ்வர்கா³தி³ ஶப்³தா³பி⁴லாபயோ க்³யம் ப்³ரஹ்ம ப்ரக்ருதி: ; ப்ரக்ருதிப³ந்தா⁴த்³ விமுக்த: ஶப்³தா³ பி⁴லாபானர்ஹம் ஜ்ஞானானந்தை³கதானம் ஆத்மானம் ப்ராப்னோதீத்யர்த²: ॥ ॥சச॥

யோகத்தை ஆரம்பிக்காமல், ஆரம்பிக்க வேணுமென்று ஆசைப்பட்டுக் கொண்டிருந்து, அதிலிருந்து மனது சலித்தவன் மறுபடியும் அதே ஆசையை [1]அடைந்து, கர்மயோகம் முதலாய் யோகம் வரையில்செய்து, தேவன், மனிதன் என்று சொல்லக் கூடிய உடம்பையும், அதனால் அநுபவிக்கக்கூடிய ஸ்வர்க்கம் முதலான லோகங்களையும் விட்டு, ஞானஸ்வரூபமாயும், ஆனந்த த்திற்கு ஒரே இருப்பிடமாயும் இருக்கும் ஆத்மாவை உள்ளபடி பார்க்கிறான். [ 44 ]

ப்ரயத்நாத்³யதமானஸ்து யோகீ³ ஸம்ஶுத்³த⁴கில்பி³ஷ: ।
அனேகஜன்மஸம்ஸித்³த⁴ஸ்ததோ யாதி பராம் க³திம் ॥ ॥சரு॥

யதமானம் யோகமாரப்⁴ய தஸ்மாத் அனேகஜன்மார்ஜித புண்யஸஞ்சயேன ஸம்ஶுத்³த⁴கில்பி³ஷ: ஸம்ஸித்³த⁴ஜாத: ப்ர

1. யோகம் செய்து கொண்டிருந்து அதிலிருந்து மனது சலித்த வனுக்கு மறுபடியும் யோகம் வருகிறது. யோகம் ஆரம்பித்தவுடன் மனது சலித்தவனுக்கு அதனுடைய ஆரம்பம். யோகம் செய்ய வேணு மென்று ஆசைப்பட்டு மனது சலித்தவனுக்கு அந்த ஆசை வருகிறது. இப்படி அந்தந்த இருப்புக்குத் தகுந்தபடி யோகமோ, யோகத்தின் ஆரம்பமோ, யோகத்தில் ஆசையோ மறுபடியும் வருகிறது.

யத்நாத்³யதமாநஸ்து யோகீ³ ஸம்ஸு²த்³த⁴கில்பி³ஷ: அநேகஜந்மஸம்ஸித்³த⁴ஸ்ததோ யாதி பராம் க³திம் ॥ ॥௪௫॥

யோகத்திற்கு இவ்வளவுபெருமை யிருப்பதால் அநேக ஜன்மங்களிலே பண்ணின புண்ணியங்களால் பாபங்கள்போய், யோகம் செய்வதற்குத் தகுந்தவனாகி, அதிகப்பிரயத்தனப்பட்டவன், அதிலிருந்து வேறு ஒரு காரணத்தால் மனது சலித்தாலும், மறுபடியும் ஆத்மாவைப் பார்ப்பன். மோக்ஷத்தையும் அடைந்து விடுவன்.

ஸ:—அதிஶயிதபுருஷார்த²நிஷ்ட²தயா யோகி³நஸ் ஸர்வஸ்மாத³திஶயமாஹ—

தபஸ்விப்⁴யோऽதி⁴கோ யோகீ³ ஜ்ஞாநிப்⁴யோऽபி மதோऽதி⁴க: ।
கர்மிப்⁴யஸ்²சாதி⁴கோ யோகீ³ தஸ்மாத்³யோகீ³ ப⁴வார்ஜுந ॥ ॥௪௬॥

கேவலதபோநிஷ்டே²ப்⁴ய: புருஷார்த²ஸாத⁴நதயா, ஆத்மஜ்ஞாநவ்யதிரிக்தஜ்ஞாநநிஷ்டே²ப்⁴ய:, யத் கேவலாஸ்²வமேதா⁴தி³கர்மநிஷ்டே²ப்⁴ய:, தேப்⁴யஸ்ஸர்வேப்⁴யோऽஸௌ புருஷார்த²ஸாத⁴நதயா புருஷார்த²தயா ச அதி⁴க:, தபஸ்விப்⁴யோ ஜ்ஞாநிப்⁴ய: கர்மிப்⁴யோऽதி⁴கோ யோகீ³ । தஸ்மாத்³யோகீ³ ப⁴வார்ஜுந ॥ ॥௪௬॥

அவ—கீழ்ச் சொன்ன யோகத்தின் பெருமை தபஸ் முதலானவைகளில் ஒன்றிற்கும் கிடையாது. ஆகையினாலே, யோகம் செய்கிறவன் தபஸ்ஸு முதலானவைகளைச் செய்கிறவர்களைக் காட்டிலும் உயர்ந்தவன் என்று சொல்லி, யோகத்தையும் யோகம் செய்கிறவனையும் ஸ்தோத்திரம் பண்ணி, ஜீவாத்மாவின் யோகத்தைப் பற்றின வார்த்தையை முடிக்கிறார்—

எந்தப் பிரயோஜனங்களை யோகமில்லாத பட்டிணிமுதலான தபஸ்ஸுகளாலேயும், ஆத்மாவின் அறிவைத்தவிர வேறு அறிவினாலேயும், ஆத்மாவின் உள்ளபடி யோகமில்லாத அசுவமேதம் முதலான யக்ஞங்களாலேயும் ஒருவன் அடைகிறானோ—அவைகளெல்லாவற்றைக் காட்டிலும், யோகத்தினாலே வரும் பிரயோஜனம் மிகவும் உயர்ந்தது. ஆகையால் கீழேசொன்ன தபஸ், ஞானம், கர்மம் இவைகள் உள்ளவர்களைக் காட்டிலும் யோகி மிகவும் உயர்ந்தவன். ஆகையினாலே நீ யோகியாக ஆகவேண்டும்.

அத—ஏவம் பரவித்யாங்கபூதம் ப்ரஜாபதிவாக்யோதிதம் ப்ரத்யகாத்மதர்சனமுக்த்வா அங்கினீம் பரவித்யாம் ப்ரஸ்தௌதி—

யோகிநாமபி ஸர்வேஷாம் மத்கதேநாந்தராத்மநா ।
ஶ்ரத்தாவாந் பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத: ॥ ௪௭ ॥

---

இதி ஸ்ரீ பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே
யோகாப்யாஸயோகோ நாம ஷஷ்டோऽத்யாய: ॥

---

யோகிநாமிதி பஞ்சம்யர்த்தே ஷஷ்டீ । 'மேருஸர்ஷபயோரிவ தேஜஸ்தாரதம்ய' இத்யாதிநா பஞ்சமீநிர்திஷ்டா யோகிந: ப்ரதிபாதிதா:। தேஷாம் தபஸ்விப்ய: அதிகஸ்ய யோகிந: । ந ஹி நிர்தாரணே ஷஷ்டீ ஸம்பவதி । "ஸமேதஸர்வேஷாம்" இதி ஸர்வஶப்தே நிர்திஷ்டாஸ்வபி ப்ரஸ்துதயோ:। தத்ராப்யயோக்தேந ந்யாயேந பஞ்சம்யர்த்தே ஷஷ்டீ:। யோகிப்யோऽபி ஸர்வேப்யோ ஆத்மாநம் யோகீ யுக்ததம: । தபஸ்விப்ய: கர்மிப்யஶ்ச அதிகஸ்ய ப்ரதிபாதிதாநாம் யோகிநாம் ஸ நப்ரக்ருதிவிசேஷ இத்யர்த்த:। ஶேஷாபேக்ஷயா ஸர்வோபேக்ஷாவர்ணநமிவ । யத்யபி ஸர்வேஷு வேதேஷு ஆந்யாந்யேநாயிகதாவோ வித்யதே, ததாபி ஶேஷாபேக்ஷயா அகாரஸ்ய நிர்தேசப்ரமாணா: । அத்யர்த்தமத்ப்ரியத்வாதிரேகேண அநந்யஸாதாரணஸௌஹார்தயா மத்கதேநாந்தராத்மநா ப்ரவணஸ்வாபாவ்யாத் தீவிசேஷாஶ்ரயஸம்யுக்தம் மநோ ஹ்ருதயம் அந்தராத்மா । அத்யர்த்தமத்ப்ரியத்வேந மாம் விநா ஆத்மதாரணாஸம்பவாத் மத்கதேந மநஸா, ஶ்ரத்தாவாந்-அத்யர்த்தமத்ப்ரியத்வேந க்ஷணமாத்ரவிஶ்லேஷாஸஹதயா மத்ப்ராப்திப்ரவ்ருத்தௌ த்வராவாந், யோ மாம் பஜதே-மாம் விசித்ராநந்தபோக்யபோக்ய போகோபகரணபோகஸ்தாநபரிபூர்ணம் நிகில

[illegible]

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌵𑌿𑌰𑌚𑌿𑌤𑍇 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌭𑌾𑌷𑍍𑌯𑍇
𑌷𑌷𑍍𑌠𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

𑌪𑍍𑌰𑌥𑌮𑌷𑌟𑍍𑌕𑌂 𑌸𑌮𑌾𑌪𑍍𑌤𑌮𑍍 ॥

அவ— மோக்ஷத்திற்காகச் செய்யவேண்டிய பகவானுடைய தியானத்திற்கு உதவியாக உபநிஷத்துக்களில் சொல்லப்பட்ட ஜீவாத்மாவின் உள்ளபடி பார்வை சொல்லப்பட்டது. இதற்குப் பிறகு பகவானுடைய தியானத்தைச் சொல்ல ஆரம்பிக்கிறார்—

இதுவரையில் சொல்லப்படாத• ஒருயோகியை இப்போது சொல்லப்போகிறேன். அவன் இந்த அத்தியாயம் 29—வது சுலோகம் முதல் நாலுசுலோகங்களால் சொல்லப்பட்ட யோகிகளைக் காட்டிலும், 46—வது சுலோகத்தில் சொன்ன தபஸ்விம்

ஞானமும், கர்மமும் உள்ளவர்களைக் காட்டிலும் மிகவும் சிறந்தவன். தபஸ்முதலானவைகள் உள்ளவர்களைக் காட்டிலும் நாலுவிதமான யோகிகள் சிறந்தவர்களாயிருந்தாலும், சொல்லப்போகிற யோகியைக்காட்டிலும் மட்டம் என்பதில் எல்லாரும் ஒரே மாதிரி. கடுகில் ஒன்று சிறியதாயும், ஒன்று பெரியதாயுமிருந்தாலும், மலையைக் காட்டிலும் சின்னது என்பதில் எல்லா கடுகுகளும் ஒரேமாதிரிதானே. அதுபோல. அவன் யாரென்றால், என்னிடத்தில் அளவில்லாத பிரீதியுடன் எப்போதும் என்னையே நினைத்துக்கொண்டு, ஒருக்ஷணம் என்னை விட்டுப்பிரிந்தால் தாங்கமுடியாதவனாய், என்னை எப்போது அடையப்போகிறேனென்று அவசரப்பட்டு 1 எவன் என்னைத்தியானம் பண்ணுகிறானோ அவன். அவன் மிகவும் உயர்ந்தவன் என்று எல்லாவற்றையும் எப்போதும் உள்ளபடி தானாகவே பார்த்துக் கொண்டிருக்கிற எனக்குத் தோன்றுகிறது 2 [ 47 ]

ஸ்ரீ மதே பகவதே பாஷியகாராய மஹாதேசிகாய நம:

---

1. முதல் அத்தியாயத்தில் ஆரம்பத்தில் சொன்னபடி ஸ்ரீ பாஷியகாரர் பகவானை இங்கே வர்ணிக்கிறார்.

2. அர்ஜுனனுக்கு ஜீவாத்ம யோகத்தைச் சொன்னபோது, அவன் இவ்வளவுதான் நான் தெரிந்து கொள்ள வேண்டியது என்று எண்ணாமலிருப்பதற்காக, இதற்கு மேற்பட்ட ஒரு யோகத்தை பிரஸ்தாபிக்கிறார். இந்த யோகத்தை 7, 8, 9-வது அத்தியாயங்களில் விவரமாய்ச்சொல்லுகிறார்.

---

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம:

தமிழ் அர்த்தத்துடன் கூடிய

# ஸ்ரீமத்கீதாபாஷியம்.

## இரண்டாவது பாகம்.

( 7-வது முதல் 12-வது அத்தியாயம் உள்பட )

கும்பகோணம்
ஸ்ரீ ஜனார்த்தன பிரிண்டிங் ஒர்க்ஸில்
பதிப்பிக்கப்பெற்றது.

லை ] 1929 [ ரு. 1—0—0

## குறிப்பு.

(2-வது அத்தியாயம் 28-வது சுலோகம் 43-வது பக்கம் தமிழ் உரைக்குப் பதிலாக கீழ் அச்சிட்டிருப்பதைத் வைத்துக் கொள்ள வேண்டியது)

மனிதன் முதலான உடம்புக்கு இப்போது இருக்கும் உருவம் அதைவிட்டு பிரியாத ஸ்வபாவமல்ல அப்படியே இதற்கு முன்னே இருந்த இருப்பும், இதற்குப் பிற்பாடு வரப்போகிற இருப்பும் ஸ்வபாவமல்ல. ஆகையால் அதற்கு மாறுவது என்பதுதான் ஸ்வபாவம். ஆகையால் இந்த உடம்புக்கு வரப்போகிற மாறுதலைப்பற்றி கவலைப்படக்கூடாது. இந்த உடம்பு உண்டானது தானே. இதற்கு முன்பு இது ஒருவிதமாக இருந்திருக்குமே. அதை இதற்கு ஸ்வபாவமென்று சொல்லுகிறாயோ? அப்படிச் சொன்னால், அந்தஸ்வபாவம்போய், இப்படி உடம்பாக ஆனதற்கு நீ அழவேணும். இப்போது இருக்கும் உருவமே ஸ்வபாவம்; ஒருவித இடஞ்சலால் மாறுதல் வருகிறது என்று சொன்னால், அந்த இடஞ்சல் தடுக்க முடியாததாக இருந்தால், அது வந்தே தீரும். துக்கப்படுவதில் பிரயோஜனமில்லை. மேலும் அந்த இடஞ்சல் போகாதோ. போகக்கூடியதுதானே. அதுபோனால் ஸ்வபாவமான இந்த உடம்பு உருவம் வருகிறது; அழுவானேன். வஸ்துக்களுக்கு மாறுதலே ஸ்வபாவம். ஒருவன் அதைப் பொறுக்காமல் வருத்தப்பட்டால், அவன் எல்லா வஸ்துக்களையும் பார்த்து அழுது கொண்டேதான் இருப்பன். இப்போது புதிதாய் அழவேண்டியதற்கு என்ன காரணம்.

# விஷய அட்டவணை.

## ஏழாவது அத்தியாயம். ஸ்லோகம்.



## 8-வது அத்தியாயம்.

## 9-வது அத்தியாயம்.



## 10-வது அத்தியாயம்



## 11-வது அத்தியாயம்.

## 12-வது அத்தியாயம்.

ப்ராப்யதே । யதேதத் ஷட்கேந ப்ரதிபாதிதம் தேந ப்ரஹ்மப்ராப்த்யுபாயஸ்ய ஜ்ஞாத்ருவிஶேஷணத்வேந ஜ்ஞாதும் ஸாதிஶயவிஶேஷணாந் ப்ரவர்ணாத்மந: வர்ணீயத்வேந ஹேதுபூதம் ஸகலகுணவிஷயஸ்யாத்யந்தப்ரியத்வேந ஸ்வயமப்யத்யந்தப்ரியரூபம் ஸ்ம்ருதிஸந்தாநமேவோபாஸந ஶப்தவாச்யமிதி ஹி நிர்திஶ்யதே । ததேவ ஹி பக்திரித்யுச்யதே । "ஸ்நேஹபூர்வமநுத்யாநம் பக்திரித்யபிதீயதே" இத்யாதிவசநாத் । அத: "தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி । நாந்ய: பந்தா அயநாய வித்யதே", "நாஹம் வேதைர்ந தபஸா ந தாநேந ந சேஜ்யயா । ஶக்ய ஏவம்விதோ த்ரஷ்டும் த்ருஷ்டவாநஸி மாம் யதா ॥ பக்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதோऽர்ஜுந । ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப" இத்யநயோரேகார்த்யம் ஸித்தம் பவதி ॥

தத்ர ஸப்தமே தாவத் உபாஸ்யபூதபரமபுருஷஸ்வரூபயாதாத்ம்யம், ப்ரக்ருத்யா தத்திரோதாநம், தந்நிவ்ருத்தயே பகவத்ப்ரபத்தி:, உபாஸகவிதாபேதா:, ஜ்ஞாநிந: ஶ்ரைஷ்ட்யம் சோச்யதே ॥

ஜீவன்கள் அழிவில்லாத ஸுகத்தை அடைவதற்காக, மஹா லெக்ஷ்மியோடு கூடின நாராயணனை அடைய வேண்டியது. அதற்காக அவனைத் தியானம் செய்ய வேண்டியது. அந்தத் தியானத்தைச் சொல்லுவதற்காக, ஸ்ரீ கிருஷ்ணபகவான் முதல் ஆறு அத்தியாயங்களிலுைலே அந்தத் தியானத்திற்கு உதவியான ஜீவாத்மாவின் உள்ளபடி பார்வையையும், ஆத்மாவை உள்ளபடி அறிந்து கர்மங்களைச் செய்வதினுல் அந்தப் பார்வை உண்டாகும் என்பதையும் சொன்ஞர். இப்போது நடுவிலிருக்கும் ஆறு அத்தியாயங்களாலே அடைய வேண்டிய பகவானுடைய ஸ்வரூபத்தையும், பக்தி யென்று சொல்லப்படுகிற தியானத்தையும் சொல்லுகிருர். இந்த ஸங்கதியை 18-வது அத்தியாயத்தில் 46-வது சுலோகம் முதல் ஒன்பது சுலோகங்களிலுைலே சுருக்கிச் சொல்லப்போகிருர்.

உபநிஷத்துக்களில் "பகவானைப்பற்றின அறிவினால் அவனை அடைய வேண்டும்" என்று சொல்லியிருக்கிறது. இன்னுமொரு இடத்தில் நினைவினால் என்று இருக்கிறது, இன்னுமொரு இடத்தில் இடைவிடாத நினைவினால் என்று இருக்கிறது. வேறு இடத்தில பகவானைப்பார்ப்பதினால் என்று இருக்கிறது. அறிவு, நினைவு, இடைவிடாத நினைவு, பார்வை-என்கிற சொற்களுக்கு ஒரேபொருள் கொள்ள வேண்டியது. ஏனென்றால், வேதத்தில் "பசுவை (நாலுகாலுள்ள பிராணியை)க் கொன்று யாகம் செய்ய வேண்டியது" என்று சொல்லியிருக்கிறது. இன்னுமொரு இடத்தில் "வெள்ளாட்டினுடைய வயிற்றிலிருக்கும் வபையை ஹோமம் பண்ணுவதற்குத் தகுந்த மந்திரத்தைச் சொல்லு என்று அத்வர்யு ஹோதாவை ஏவுகிறான்" என்று சொல்லியிருக்கிறது. அதினால் பசு என்கிற சொல்லுக்கு வெள்ளாடு என்று பொருள் என்று மீமாம்ஸையில் நிர்மானிக்கப்பட்டிருக்கிறது. இதை ஸாமான்னிய—விசேஷ நியாயம் என்று வடமொழியில் சொல்லுகிறார்கள். அதாவது பொதுவான சொல்லுக்கு ஒரு காரணத்தைக்கொண்டு அதின் பொருளில் அடங்கிய ஒரு வஸ்துவை மாத்திரம் பொருளாகக் கொள்ளுவது. அந்த நியாயப்படி இங்கே பொருள் கொள்ள வேண்டும். அறிவு என்பது பொதுவான சொல். அதன் பொருளில் அடங்கினது நினைவு என்பது. அதுவும் பொதுவான சொல். அதில் அடங்கினது இடைவிடாத நினைவு. அது கண்ணாலே பார்ப்பதுபோல் தெளிவாயிருக்கலாம். அல்லது தெளிவில்லாமலிருக்கலாம். ஆகையினாலே இந்தப் பொதுவான சொற்களுக்கெல்லாம் கண்ணாலே பார்ப்பதுபோல் தெளிவாய், இடைவிடாமல் நினைப்பது என்று பொருள்.

மேலும் வேதத்தில் ஒரு இடத்தில், பெரியவர்களிடத்தில் பகவானைப்பற்றி கேட்க வேணுமென்றும், கேட்ட ஸங்கதியை யோசிக்க வேணுமென்றும், பிறகு பகவானைத் தியானம் செய்ய வேணுமென்றும், தியானத்தினால் அவனை அடையலாமென்றும் சொல்லியிருக்கிறது. இன்னொரு இடத்தில் "பகவானைக் கேட்பதினாலும், யோசிப்பதினாலும், தியானம் பண்ணுவதினாலும், அடைய முடியாது. பின்னை எப்படி அடையலாமென்றால், அவன்

எவனைக்கூப்பிடுகிறானோ, அவனால்தான் அவனை அடைய முடியும். அவனுக்குத்தான் அவன் தன்னைக் காட்டுவான்" என்று சொல்லி யிருக்கிறது. இப்படி வேதம் சொல்லுகிறதே. நாம் எதைச்செய் கிறது?நாம் தியானம் செய்கிறதா? அல்லது அவனாக நம்மைக்கூப் பிடுவனென்று ஒன்றும் செய்யாமலிருக்கிறதா என்று ஸந்தேஹம் உண்டாகிறது. இந்த ஸந்தேஹத்தைப் பெரியோர்கள் இரண்டு இடங்களையும் ஒட்டி :தீர்த்திருக்கிறார்கள். உலகத்தில் ராமன் என்பவன் கிருஷ்ணன் என்பவனை எப்போது கூப்பிடுவான். அவ னுக்குக் கிருஷ்ணனிடத்தில் மிகுந்த பிரீதி இருந்தால் தான் கூப்பிடுவான். ராமனுக்கு எப்போது மிகுந்த பிரீதியிருக்கும். கிருஷ்ணனுக்கு ராமனிடத்தில் மிகுந்த பிரீதி இருந்தால் தான் இருக்கும். ஆகையால் நமக்கு பகவானுடைய இடைவிடாத நினைவு மாத்திரம் போதாது. நமக்குப் பிள்ளை பெண்டாட்டிகளி டம் பிரீதி இருப்பதுபோல், பிரீதியோடே நாம் பகவானை இடை விடாமல் நினைத்தால், அவனுக்கு நம்மிடத்தில் அளவில்லாத பிரீதி உண்டாகும். அப்போது அவன் நம்மைக் கூப்பிடுவான். ஆகையால் பிரீதியுடன் தியானம்பண்ணினால், பகவானை அடையலாம் என்று பொருள் கொள்ள வேணும். அப்படிக் கொண்டால் எல்லாச் சொற்களுக்கும் பொருத்தமான பொருள் ஏற்படும்.

பகவானுக்கு நம்மிடத்தில் அளவில்லாத பிரீதியிருக்கிறது. இது இன்றைக்கோ நேற்றைக்கோ உண்டானதன்று. இதுமுதல் என்று இல்லாத காலமாய் இருக்கிறது. நாமோ அவனை அநாதி காலமாய் தெரிந்து கொள்ளவேயில்லை. அதுவும் தவிர, அவனுக் குப் பிடிக்காத—மிகுந்த வருத்தத்தைக் கொடுக்கக்கூடிய—வேலை களைக் கணக்கில்லாமல் செய்திருக்கிறோம். இப்பவும் செய்கிறோம். இப்படி யிருக்கையில், பெரியோர்கள் மூலமாய் அவனைத் தெரிந்து, அவனிடத்தில் கொஞ்சம் பிரீதியை நாம் பண்ணினால், அவன் தயையினாலே நம்மிடத்தில் அளவில்லாத பிரீதியைப் பண்ணி, நம் மைத் தன்னிடம் அழைத்துக் கொண்டு போகிறான். இப்படிப் பிரீதியுடன், கண்ணாலே பார்ப்பதுபோல் தெளிவாய், இடைவிடா மல் நினைப்பதை பக்தி யென்றும், பக்தி யோகம் என்றும் சொல் லுகிறது.

ஏழாவது அத்தியாயத்தில் தியானம் பண்ண வேண்டிய பகவானுடைய ஸ்வரூபத்தின் உண்மையையும், உடம்புடன் சேர்ந்திருப்பதால் அந்த உண்மை நமக்கு மறைந்திருக்கிறது என்பதையும், அந்த மறைவு நீங்குவதற்கு பகவானைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளவேணுமென்பதையும், அவனைத் தியானம் செய்கிறவர்களின் பிரிவுகளையும், அவர்களில் பகவான் தான் வேணுமென்று தியானம் செய்கிறவர்களின் உயர்த்தியையும் சொல்லுகிறார்.

ஶ்ரீ𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚—

𑌮𑌯𑍍𑌯𑌾𑌸𑌕𑍍𑌤𑌮𑌨𑌾𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌯𑍋𑌗𑌂 𑌯𑍁𑌞𑍍𑌜𑌨𑍍𑌮𑌦𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 ।
𑌅𑌸𑌂𑌶𑌯𑌂 𑌸𑌮𑌗𑍍𑌰𑌂 𑌮𑌾𑌂 𑌯𑌥𑌾 𑌜𑍍𑌞𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 𑌤𑌚𑍍𑌛𑍃𑌣𑍁 ॥

𑌮𑌯𑌿 𑌨𑌿𑌰𑌤𑌿𑌶𑌯𑌪𑍍𑌰𑍇𑌮𑌣 𑌸𑌕𑍍𑌤𑌮𑌨𑌾𑌃-𑌮𑌦𑍀𑌯𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌾𑌤𑌿𑌶𑌯𑌸𑍍𑌵 𑌰𑍂𑌪𑍇𑌣 𑌮𑌦𑍍𑌗𑍁𑌣𑍈𑌶𑍍𑌚 𑌮𑌚𑍍𑌚𑍇𑌷𑍍𑌟𑌿𑌤𑍇𑌨 𑌮𑌦𑍍𑌵𑌿𑌭𑍂𑌤𑍍𑌯𑌾 𑌵𑌿𑌶𑍍𑌲𑍇𑌷𑍇 𑌸𑌤𑌿 𑌤𑌤𑍍𑌕𑍍𑌷𑌣𑌾𑌦𑍇𑌵 𑌵𑌿𑌶𑍀𑌰𑍍𑌯𑌮𑌾𑌣𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑌯𑌾 𑌮𑌯𑌿 𑌸𑍁𑌸𑌂𑌸𑌕𑍍𑌤𑌮𑌨𑌾𑌃, 𑌮𑌦𑌾𑌶𑍍𑌰𑌯𑌃-𑌤𑌥𑌾 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌚 𑌮𑌯𑌾 𑌵𑌿𑌨𑌾 𑌵𑌿𑌶𑍀𑌰𑍍𑌯𑌮𑌾𑌣𑌤𑌯𑌾 𑌮𑌦𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 𑌮𑌦𑍇𑌕𑌾𑌧𑌾𑌰𑌃, 𑌮𑌦𑍍𑌯𑍋𑌗𑌂 𑌯𑍁𑌞𑍍𑌜𑌨𑍍-𑌯𑍋𑌕𑍍𑌤𑍁𑌂 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌃, 𑌯𑍋𑌗𑌵𑌿𑌷𑌯𑌭𑍂𑌤𑌂 𑌮𑌾𑌂 𑌅𑌸𑌂𑌶𑌯𑌂-𑌨𑌿𑌸𑍍𑌸𑌂𑌶𑌯𑌂 𑌸𑌮𑌗𑍍𑌰𑌂-𑌸𑌕𑌲𑌂 𑌯𑌥𑌾 𑌜𑍍𑌞𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 - 𑌯𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑍋𑌕𑍍𑌤𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌸𑍍𑌯𑌸𑌿। 𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌂, 𑌅𑌵𑌹𑌿𑌤𑌮𑌨𑌾𑌃 𑌶𑍃𑌣𑍁 ॥ ॥௧॥

பகவான் சொல்லுகிறார்.

என்னிடத்தில் உயர்ந்தபிரீதி இருப்பதினாலே, என்னுடைய ஸ்வரூபத்தையும், என் குணங்களையும், நான்செய்த வேலைகளையும், என்னுடைய ஸொத்துக்களையும் விட்டுப் பிரிந்தால், அரைக்ஷணம் கூடத் தாங்கமுடியாமலிருப்பதால், எப்போதும் என்னையே நினைத்துக்கொண்டும், என்னால் எப்பொழுதும் தாங்கப்பட்டும் இருந்துகொண்டு, என்னைத் தியானம் செய்ய ஆரம்பிப்பதற்காக ஸந்தேஹமில்லாமல் என்னுடைய எல்லாஸங்கதிகளையும், எப்படிச்சொன்னால் நீ அறிவாயோ, அந்தமாதிரி சொல்லுகிறேன். நீ மிகவும் ஜாக்கிரதையாய்க்கேள். [1]

ஜ்ஞாநம் தே³ऽஹம் ஸவிஜ்ஞாநமித³ம் வக்ஷ்யாம்யஶேஷத: ।
யஜ்ஜ்ஞாத்வா நேஹ பூ⁴யோऽந்யஜ்ஜ்ஞாதவ்யமவஶிஷ்யதே ॥

அஹம் தே மத்³விஷயமித³ம் ஜ்ஞாநம் விஜ்ஞாநேந ஸஹ அஶேஷதோ வக்ஷ்யாமி। விஜ்ஞாநம்-விவிக்தாகாரவிஷயம் ஜ்ஞாநம்। யதா²ऽஹம் மத்வ்யதிரிக்தாத் ஸமஸ்தாச்சித³சித்³வஸ்துஜாதாத³கி²லஹேய ப்ரத்யநீகதயாऽநவதி⁴காதிஶயாஸங்க்²யேய கல்யாணகு³ணக³ணாநந்தமஹாவிபூ⁴த்யா ச விவிக்த: - தேந விவிக்தவிஷய ஜ்ஞாநேந ஸஹ மத்ஸ்வரூபவிஷயஜ்ஞாநம் வக்ஷ்யாமி। கிம் ப³ஹுநா? யத் ஜ்ஞாநம் ஜ்ஞாத்வா மயி புநரந்யத் ஜ்ஞாதவ்யம் நாவஶிஷ்யதே ॥ ॥௨॥

நான் என்னைப் பொதுவாகவும், விசேஷமாகவும் சொல்லுகிறேன். விசேஷமாவது—உலகத்தில் இருக்கும் அறிவுள்ள ஜீவன்களை, அறிவில்லாத வஸ்துக்களை, அவைகளைக் காட்டிலும் நான் வேறு ஜாதியானவன். இருட்டை ஸூர்யன் போக்குவது போல், எல்லாக் கெடுதிகளையும் போக்கக் கூடியவன். எல்லையில்லாத கணக்கில்லாத உயர்ந்த குணங்கள் என்னிடத்திலிருக்கின்றன. எல்லா உலகங்களும் என்னுடைய ஸொத்து. இந்த மாதிரி ஸங்கதிகள். அதிகமாகச் சொல்லுவானேன்? மறுபடியும் என்னைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டிய ஸங்கதி மீதியில்லாமல் சொல்லுகிறேன். [ 2 ]

அத² —வக்ஷ்யமாணஸ்ய ஜ்ஞாநஸ்ய து³ர்லப⁴தாமாஹ —

மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஶ்சித்³யததி ஸித்³த⁴யே ।
யததாமபி ஸித்³தா⁴நாம் கஶ்சிந்மாம் வேத்தி தத்த்வத: ॥ ॥௩॥

மநுஷ்யா:-ஶாஸ்த்ராதி⁴காரயோக்³யா:, தேஷாம் ஸஹஸ்ரேஷு கஶ்சிதே³வ ஸித்³தி⁴பர்யந்தம் யததே। ஸித்³தி⁴பர்யந்தம் யதமாநாநாம் ஸஹஸ்ரேஷு கஶ்சிதே³வ மாம் விதி³த்வா மத்த: ஸித்³த்⁴யதி। விது³ஷாம் ஸஹஸ்ரேஷு கஶ்சிதே³வ தத்த்வதோ யதா²வஸ்தி²தம் மாம் வேத்தி, ந கஶ்சிதி³த்யபி⁴ப்ராய:। 'ஸ மஹாத்மா ஸுது³ர்லப⁴:, மாம் து வேத³ ந கஶ்சந'' இதி ஹி வக்ஷ்யதே ॥ ॥௩॥

அவ—ஒருவனுக்கு நான் சொல்லப்போகிற அறிவுவருகிறது வருத்த மென்று சொல்லுகிருர்.

சாஸ்திரத்தில் சொல்லிய வேலைகளை நடத்தக்கூடிய ஆயிரம் பேர்களில் ஒருவன்தான் பலன் கிடைக்கும் வரையில் ஒரு வேலையைச் செய்கிருன். அப்படி வேலை செய்கிற ஆயிரம் பேர்களில் ஒருவன்தான் என்னை அறிந்து, என்னிடத்தில் இருந்து பலனை அடைவதற்காகப் பாடுபடுகிருன். என்னை அறிந்த ஆயிரம்பேர்களில் ஒருவன்தான் என்னை 1 உள்ளபடி அறிகிருன்—என்று சொன்ஞர். இப்படிச் சொன்னதிற்கு இப்படிப்பட்ட ஒருவனும் இல்லை யென்று கருத்து. அதாவது அரிது என்று கருத்து. "அப்படிப்பட்ட மஹாத்மா (ரொம்பப் பெரியவன்) அகப்படுவது மிகவும் அரிது" என்றும், "என்னை ஒருவனும் அறியவில்லை" என்றும் மேலே சொல்லப் போகிருர். (சுலோகம்—19-26) [ 3 ]

பூமிராபோऽநலோ வாயு: கம் மநோ புத்திரேவ ச ।
அஹங்கார இதீயம் மே பிந்நா ப்ரக்ருதிரஷ்டதா ॥ ॥ ௪ ॥

அஸ்ய விசித்ராநந்தபோக்யபோகோபகரணபோகஸ்தா-நரூபேணாவஸ்திதஸ்ய ஜகத: ப்ரக்ருதிரியம் ஸூக்ஷ்மாதிரூபேண கவ்யாதிமத்வேந்த்ரியாகாசாதிரூபேண மந:ப்ரக்ருதீந்த்ரியரூபேண மஹதஹங்காரரூபேண சாஷ்டதா பிந்நா மதீயேதி வித்தி ॥ ॥ ௪ ॥

இந்த ஆச்சரியமான எல்லையில்லாத ஜகத்தானது அநுபவிக்கத் தகுந்த வஸ்துக்களாகவும், அநுபவத்துக்கு உதவிகளாகவும், அநுபவத்துக்கு வேண்டிய இடங்களாகவும் இருக்கிறது அதையுண்டு பண்ணுகிற பூமி, ஜலம், நெருப்பு, காற்று, ஆகாசம், மனது முதலான இந்திரியங்கள், மஹத், அஹங்காரம்—இப்படி எட்டு விதமாய்ப் பிரிந்திருக்கிற 2 பிரகிருதியானது

---

1. சுலோகத்தில் பின்பாதி ஒரேவாக்கியமாயிருந்தாலும், அதை இரண்டு வாக்கியமாக வியாக்கியானத்தில் பண்ணியிருக்கிறது. ஏனென்றால், பொதுவாக அறிந்த பிற்பாடுதானே உள்ளபடி அறிவது கூடும்.

2. பிரகிருதி என்பது ஸத்வம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு என்கிற மூன்று குணங்களையுடைய வஸ்து. அது சுத்தஸத்வம் இருக்குமிடம் தவிர, மற்ற இடங்களில் எங்கும் நிறைந்திருக்கிறது அதினுடைய

1 என்னுடையது என்றறிநீ. [4]

மூன்று குணங்களும் ஸமமாயிருக்கும்போது, பிரளயம் என்கிற இருப்பு. ஒருகுணம் மேலிட்டு மற்றவைகள் குறைந்து இருக்கும்போது ஜகத்து உண்டாகிறது. ஜகத்து உண்டாகும் விதமாவது:— முதலில் பிரகிருதி மஹத்து என்கிற வஸ்துவாக ஆகிறது. மஹத்து அஹங்காரமாக ஆகிறது. அந்த அஹங்காரம் மூன்று பிரிவாக இருக்கிறது, ஸத்வகுணம் மேலிட்டதும், ரஜஸ்ஸு மேலிட்டதும், தமஸ்ஸு மேலிட்டதும் என்று. ஸத்வகுணம் மேலிட்டதிலிருந்து மனது முதலான பதினொன்று இந்திரியங்கள் உண்டாகின்றன. (7-வது பக்கத்தில் 1-உ குறிப்பைப்பார்க்க). தமோகுணம் மேலிட்டதிலிருந்து ஆகாசமும், அதிலிருந்து காற்றும், காற்றிலிருந்து நெருப்பும், நெருப்பிலிருந்து ஜலமும், ஜலத்திலிருந்து பூமியும் உண்டாகின்றன. இவைகளைப் பஞ்சபூதங்கள் என்று சொல்லுகிறது. அஹங்காரமானது ஆகாசமாக மாறும்போது, நடுவில் சப்ததந்மாத்திரம் என்கிற ஒரு வஸ்துவாக ஆகி ஆகாசமாக ஆகிறது. அப்படியே மற்றநாலுபூதங்களும் அந்தந்ததந்மாத்திரங்கள்வழியாகஉண்டாகின்றன. ஐந்துபூதங்கள், ஐந்து தந்மாத்திரங்கள், பதினொன்று இந்திரியங்கள், மஹத், அஹங்காரம்—ஆக இருபத்து மூன்று தத்வங்கள். இவைகளுக்குக்காரணமான பிரகிருதியையும்சேர்த்துஇருபத்துநாலுதத்வங்கள் என்று சொல்லுகிறது. சுலோகத்தில் காரணமான பிரகிருதியை எட்டுவிதமாய் பிரிந்திருக்கிறது என்று சொன்னது எப்படியென்றால், பதினொன்று இந்திரியங்களை ஒருவகுப்பாகப்பண்ணியும், தந்மாத்திரங்களைப் பூதங்களுடன் சேர்த்தும் எட்டு என்கிற கணக்கு ஏற்படுகிறது. இவைகள் சேர்ந்து பலவிதமான இந்த ஜகத்து உண்டாகிறது. காரணமான இவைகளை உண்டுபண்ணுவதை ஸமஷ்டி-ஸ்ருஷ்டி என்றும், இவைகளிலிருந்துபல்விதமாய் தோன்றுகிற ஜகத்தை உண்டுபண்ணுவதை வியஷ்டி-ஸ்ருஷ்டி என்றும் சொல்லுகிறது. ஸமஷ்டியும், வியஷ்டியும் இன்னதென்று உதாரணத்தைக் கொண்டு தெரிந்து கொள்ளலாம். சமையல் பண்ணுகிறவன் தனித்தனியாயிருக்கும் உப்பு, புளி, மிளகாய், கடுகு, வெந்தயம், காயம், கரிகாய் முதலான ஸாமான்களைப் பல விதமாய்ச் சேர்த்து, குழம்பு ரஸம், கரி, என்று பெயருள்ள பதார்த்தங்களாகச் செய்கிறான். தனித்தனியாய் இருந்தவைகளை ஸமஷ்டி (பொது) என்றும், அவைகளைச் சேர்த்து உண்டானதை வியஷ்டி-(பிரிந்தவைகள்) என்றும் சொல்லுகிறது. இதுபோல ஒன்றோடொன்று சேராத பூமி முதலானவைகள் ஸமஷ்டி. அவைகளைச் சேர்த்து உண்டான ஜகத்து வியஷ்டி.

1. பிரகிருதி என்னுடையது என்று சொல்வதாலே, அது பகவானைக்காட்டிலும் வேறுஎன்று ஏற்படுகிறது. உலகத்தில் ஸொத்து வேறு, ஸொத்தையுடையவன் வேறு என்று பார்க்கிறோம். அப்படியே பகவான் வேறு, பிரகிருதி வேறு.

अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम् ।
जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत् ॥५॥

इयं मे अपरा प्रकृतिः। इतस्त्वन्याम्-इतः अचेतनायाः चेतनभोग्यभूतायाः प्रकृतेः विसजातीयाकारां, जीवभूतां परां-तस्याः भोक्तृत्वेन प्रधानभूतां चेतनरूपां, मदीयां प्रकृतिं विद्धि। ययेदम्-अचेतनं कृत्स्नं जगद्धार्यते ॥ ॥५॥

இது என்னுடைய 1 தாழ்ந்த 2 பிரகிருதி. அறிவுள்ள ஜீவன்களால் அநுபவிக்கப்படுகிற அறிவில்லாத இந்தப் பிரகிருதியைக் காட்டிலும் வேறான—அதை அநுபவிப்பதாலே உயர்ந்ததான அறிவுள்ள ஜீவன்களை 3 என்னுடைய உயர்ந்த மற்றொரு பிரகிருதி

---

1. ஜீவன்கள் அறிவில்லாத வஸ்துக்களை அநுபவிக்கிறார்கள். அநுபவிக்கிற ஜீவன்களை உயர்ந்தவர்களாகவும், அநுபவிக்கப்படுகிற அறிவில்லாத வஸ்துக்களைத் தாழ்ந்தனவாகவும் சுலோகம் சொல்லுகிறது.

2. பிரகிருதி என்கிற சொல்லுக்குக் காரணம் என்று பொருள். அறிவுள்ள ஜீவன்கள்—அறிவு இல்லாத வஸ்துக்கள் இவைகளிரண்டும் சேர்ந்து உலகம் உண்டாகிறது. ஆதலால் உலகத்தை காரியம்(உண்டாகிறது) என்றும், இவை யிரண்டையும் காரணம(உண்டுபண்ணுகிறது) என்றும் சொல்லுகிறது. அவைகளில மாறுகிற—அறிவில்லாத வஸ்துக்களை உண்டாகிறது என்று சொல்லலாம். மாறுதலும் அறிவுமில்லாத அறிவுள்ள ஜீவன்களை உண்டாகிறதென்றும் உண்டுபண்ணுகிறதென்றும் சொல்லலாமா? என்றால், பதில—ஜீவன்களுக்கு இரண்டு விதமான இருப்பு இருக்கிறது. பிரளய காலத்தில் எல்லாரும ஒரேமாதிரியாகவும், அறிவில்லாத வஸ்துக்களைப் போலவும் இருக்கிறார்கள். ஸிருஷ்டி காலத்தில் வெவ்வேறு உடம்புகளோடும், இந்திரியங்களோடும் சேருகிறார்கள். இந்த சேர்க்கையாலே அவர்களுடைய அறிவிலும, அவர்கள் செய்யும் வேலைகளிலும், அவர்களுடைய அநுபவங்களிலும், பலவேறுபாடுகள் இருக்கின்றன. இந்த இருப்பு வியஷ்டியான இருப்பு. முன் இருப்பு ஸமஷ்டி இருப்பு. முன இருப்பு காரணம். பின் இருப்பு காரியம் (செய்யப்பட்டது). காரணம என்பது காரியத்துக்கு முன் இருக்கும் இருப்பு.

3. இதனாலே பகவான் ஜீவன்களைக் காட்டிலும் வேறு என்று ஏற்படுகிறது. முன் சுலோகம் அவர் ஜகத்தைக் காட்டிலும் வேறு

யாக நினை. அந்த ஜீவன்களால்தான் இந்த அறிவில்லாத லோகங்கள் 1 தூக்கப்படுகின்றன. [5]

𑌏𑌤𑌦𑍍𑌯𑍋𑌨𑍀𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑍀𑌤𑍍𑌯𑍁𑌪𑌧𑌾𑌰𑌯 ।
𑌅𑌹𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌃 𑌪𑍍𑌰𑌲𑌯𑌸𑍍𑌤𑌥𑌾 ॥ ॥௬॥

𑌏𑌤𑌦𑍍𑌯𑍋𑌨𑍀𑌨𑌿 𑌏𑌤𑌚𑍍𑌚𑍇𑌤𑌨𑌾𑌚𑍇𑌤𑌨𑌸𑌮𑌷𑍍𑌟𑌿𑌰𑍂𑌪𑌮𑌦𑍀𑌯𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌦𑍍𑌵𑌯𑌯𑍋𑌨𑍀𑌨𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑌿𑌸𑍍𑌤𑌮𑍍𑌬𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌨𑍍𑌯𑍁𑌚𑍍𑌚𑌾𑌵𑌚𑌭𑌾𑌵𑍇𑌨𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑌿 𑌚𑌿𑌦𑌚𑌿𑌨𑍍𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌣𑌿 𑌮𑌦𑍀𑌯𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑍀𑌤𑍍𑌯𑌵𑌧𑌾𑌰𑌯। 𑌮𑌦𑍀𑌯𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌦𑍍𑌵𑌯𑌯𑍋𑌨𑍀𑌨𑌿 𑌹𑌿 𑌤𑌾𑌨𑌿 𑌮𑌦𑍀𑌯𑌾𑌨𑍍𑌯𑍇𑌵। 𑌤𑌥𑌾 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌦𑍍𑌵𑌯𑌯𑍋𑌨𑌿𑌤𑍍𑌵𑍇𑌨 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑌃 𑌤𑌯𑍋𑌰𑍁𑌭𑌯𑍋𑌰𑌪𑌿 𑌮𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌤𑍍𑌵𑍇𑌨 𑌮𑌦𑍀𑌯𑌤𑍍𑌵𑍇𑌨 𑌚 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑌃 𑌅𑌹𑌮𑍇𑌵 𑌪𑍍𑌰𑌭𑌵𑍋𑌽𑌹𑌮𑍇𑌵 𑌚 𑌪𑍍𑌰𑌲𑌯𑍋𑌽𑌹𑌮𑍇𑌵 𑌚 𑌶𑍇𑌷𑍀𑌤𑍍𑌯𑌵𑌧𑌾𑌰𑌯 । 𑌤𑌯𑍋𑌶𑍍𑌚𑌿𑌦𑌚𑌿𑌤𑍍𑌸𑌮𑌷𑍍𑌟𑌿𑌭𑍂𑌤𑌯𑍋𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌪𑍁𑌰𑍁𑌷𑌯𑍋𑌰𑌪𑌿 𑌪𑌰𑌪𑍁𑌰𑍁𑌷𑌯𑍋𑌨𑌿𑌤𑍍𑌵𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌸𑌿𑌦𑍍𑌧𑌮𑍍। "𑌮𑌹𑌾𑌨𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍇 𑌲𑍀𑌯𑌤𑍇। 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑌕𑍍𑌷𑌰𑍇 𑌲𑍀𑌯𑌤𑍇। 𑌅𑌕𑍍𑌷𑌰𑌂 𑌤𑌮𑌸𑌿 𑌲𑍀𑌯𑌤𑍇। 𑌤𑌮𑌃 𑌪𑌰𑍇 𑌦𑍇𑌵 𑌏𑌕𑍀𑌭𑌵𑌤𑌿", "𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌤𑍍𑌪𑌰𑌤𑍋𑌦𑌿𑌤𑍇 𑌦𑍍𑌵𑍇 𑌰𑍂𑌪𑍇 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌶𑍍𑌚 𑌵𑌿𑌪𑍍𑌰", "𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌰𑍍𑌯𑌾 𑌮𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌾 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌿𑌣𑍀 । 𑌪𑍁𑌰𑍁𑌷𑌶𑍍𑌚𑌾𑌪𑍍𑌯𑍁𑌭𑌾𑌵𑍇𑌤𑍌 𑌲𑍀𑌯𑍇𑌤𑍇 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌿। 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌚 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌮𑌾𑌧𑌾𑌰𑌃 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 । 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌨𑌾𑌮𑌾 𑌸 𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑍇𑌷𑍁 𑌚 𑌗𑍀𑌯𑌤𑍇" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌾 𑌹𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌸𑍍𑌮𑍃𑌤𑌯𑌃 ॥ ॥௬॥

---

என்று சொல்லிற்று. ஆகையாலே அவர் அறிவுள்ளதோ அறிவில்லாததோ, எல்லாவற்றைக் காட்டிலும் வேறு ஜாதி. ஜீவன்கள் அறிவில்லாத வஸ்துக்களைக் காட்டிலும் வேறு என்று சொல்லப்பட்டது. ஆகையாலே உலகத்தில் மூன்று தத்வங்கள் இருக்கின்றன—பிரகிருதி, ஜீவன்கள், பகவான்—என்று.

1. ஜீவன்கள் தூங்குகிற காலத்தில் அறிவில்லாத வஸ்துக்களை (உடம்புகளை) தங்களுடைய ஸ்வரூபத்தாலே தூக்குகிறார்கள். விழித்துக் கொண்டிருக்கும்போது தங்களுடைய ஸங்கல்பத்தாலே (எண்ணத்தாலே)யும் தூக்குகிறார்கள்.

1 என்னுடையதான, அறிவுள்ளதும்—அறிவில்லாததும் என்று இருவகைப்பட்ட—ஸமஷ்டியான (பொதுவான) இந்த இரண்டு பிரகிருதிகளால் உண்டான—பிரும்மா முதல் புழுவரையில் உயர்ந்தவைகளாகவும், தாழ்ந்தவைகளாகவுமிருக்கும்—உடம்புடன் சேர்ந்திருக்கிற எல்லாப் பிராணிகளும் என்னுடையதுஎன்றறிநீ. என்னுடைய இரண்டு பிரகிருதிகளால் எல்லாமுண்டானபடியாலே அவைகளும் என்னுடையவைகள்தான். இப்படியிருப்பதாலே, அதாவது—ஜகத்து இரண்டு பிரகிருதிகளிலிருந்து உண்டானபடியாலும், அந்த இரண்டு பிரகிருதிகளும் என்னிடமிருந்து உண்டான படியாலும்—எல்லா லோகங்களும் என்னிடத்திலிருந்து தான் 2 உண்டாகின்றன. என்னிடம்தான் வந்து முடிவில் அடங்குகின்

1. முன் இரண்டு சுலோகங்களாலே ஸமஷ்டியான அறிவில்லாத வஸ்துக்களும், ஸமஷ்டியான ஜீவன்களும் பகவானுடைய ஸொத்து என்று சொல்லப்பட்டது. இந்த சுலோகம் அறிவில்லாத வஸ்துக்களும், ஜீவன்களும் சேர்ந்து உண்டான வியஷ்டி வஸ்துக்கள் பகவானுடைய ஸொத்துக்கள் என்று சொல்லுகிறது.

2. இரண்டு பிரகிருதிகளும் பகவானிடமிருந்து உண்டாகின்றன என்று வேதத்தில் எங்கே சொல்லியிருக்கிறது என்றால், பதில்-வேதத்தில் இரண்டு பிரகிருதிகளும் பகவானிடத்தில் பிரளய காலத்தில் லயத்தை அடைகின்றன என்று சொல்லியிருக்கிறது. இதைக்கொண்டு, பகவானிடமிருந்து அவைகள் உண்டாகின்றன என்று வேதத்தினால் சொல்லப்படுகிறதென்று ஒப்புக்கொள்ள வேண்டும். பகவானிடத்தில் இவைகள்லயத்தைஅடைகிறது (அடங்குகிறது) என்பது, பாலில்ஜலத்தை விட்டால், இதுபால், இதுஜலம், என்றுஎப்படிப்பிரித்துஅறியமுடியாதோ அப்படியே பகவானிடத்தில்இந்த இரண்டும் பிரித்துஅறியமுடியாதபடி சேருகிறதுதான். பாலோடுசேர்ந்த ஜலத்தைஎப்படிப்பால் என்றுசொல்லுகிறோமோ, அப்படியே இரண்டு பிரகிருதிகளோடு சேர்ந்த பகவானைப் பிரும்மம் என்று சொல்லுகிறது. இரண்டுதத்வங்களுக்கும் ஸ்வரூபத்தில் அழிவில்லை. ஆகையாலே அவைகளை நித்தியங்கள் என்றுசொல்லுகிறது. பிரிக்கமுடியாதபடி ஒன்றாயிருப்பதாலே அவைகளை ஒன்று என்றும் சொல்லுகிறது.

பகவான் தான் ஜகத்துக்கு உபாதானகாரணமும், நிமித்தகாரணமும். ஒரு குயவன் மண் கட்டியிலிருந்து சட்டியையும் பானையையும் செய்கிறான். மண்கட்டியை உபாதானகாரணம் என்றும், குயவனை நிமித்

றன. எல்லாம் என்னுடையவைகளாக இருப்பதாலே நானே 1 சேஷி என்று நினை. ஸமஷ்டியான அறிவுள்ள பிரகிருதியும், அறிவில்லாத பிரகிருதியும் பகவானிடமிருந்து உண்டாகிறது என்பது வேதத்திலும் ஸ்மிருதிகளிலும் சொல்லப் பட்டிருக்கிறது. (6)

மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சித³ஸ்தி த⁴நஞ்ஜய ।

யதா² ஸர்வகாரணஸ்யாபி ப்ருத²க்த்வாத³யஸ்ய காரணத்வேந ஸர்வஸ்யாபி வேத³நஸ்ய ஶேஷித்வேந ஶேஷித்வஸ்யாபி ஶேஷித்வே ந காரணதயா ஶேஷிதயா சாஹம் பரதர:, ததா² ஜ்ஞாநஶக்திப³லாதி³ கு³ணயோகே³ந சாஹமேவ பரதர: । உக்தம் ச — ந்யத்³ உத்க்ருஷ்டம் கிஞ்சித் ஜ்ஞாநப³லாதி³கு³ணாந்தரயோகா³தபி பரதரம் நாஸ்தி ॥ ॥௭-½॥

எல்லாவற்றையு முண்டுபண்ணுகிற இரண்டு பிரகிருதிகளை உண்டுபண்ணுகையாலும், எல்லா அறிவில்லாத வஸ்துக்களுக்கு சேஷிகளான ஜீவன்களுக்கும் சேஷியாயிருப்பதாலும், எப்படி நான் பரதரனோ (மிகவும் உயர்ந்தவனோ) 2 அப்படியே, ஞானம், சக்தி, வலிமை, முதலான குணங்களாலேயும் நான்தான் பரதரன்.

---

தகாரணம் என்றும் சொல்லுகிறது. இங்கே இரண்டுகாரணமும் வேறாயிருக்கிறது. இப்படியே உலகத்தில் எங்குமிருக்கிறது. அப்படியிருக்க எப்படி பகவானே இரண்டுகாரணமுமாய் இருக்கக்கூடும் என்றால், பதில்— இரண்டு பிரகிருதிகளோடும் சேர்ந்த பகவானே ஜகத்தாக ஆகிறான். தாயாருடைய கர்ப்பத்தில் வைக்கப்பட்ட ஜீவனோடுகூடிய ரேதஸ்ஸானது குழந்தையாய்வளர்ந்து, வெளியே வந்து, வளர்ந்து பாலனாகவும், யுவாவாகவும் எப்படிஆகிறதோ; அப்படியே இரண்டுபிரகிருதிகளோடு சேர்ந்திருக்கிற பகவான் மஹத், அஹங்காரம், ஆகாசம் முதலானவைகளாய் வரிசையாய் ஆகி, பிறகுஜகத்தாக ஆகிறான். இதைத்தான் வேதத்தில் “ நான்பஹுவாக (பலவஸ்துக்களாக) ஆகவேணும்” என்று பகவான் நினைத்ததாகச் சொல்லியிருக்கிறது.

1. எவனுக்காகவே (அதாவது-எவனுடைய உபயோகத்துக்காகவே) எந்தவஸ்து இருக்கிறதோ, அதை அவனுக்கு சேஷம் என்றும், அவனைச்சேஷி என்றும் சொல்லுகிறது.

2 இது சுலோகத்தில் சொல்லாமல் போனபோதிலும், அப்படியே அர்த்தம் கொள்ளவேணும். முன் சுலோகங்களில் எல்லாவஸ்துக்களுக்கு

1 என்னைத்தவிர குணங்களாலே பரதரமான வஸ்து உலகத்தில் கிடையாது. ( 7 )

மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ ‖ ‖எ‖

ஸர்வமிதம் சிதசித்வஸ்துஜாதம் கார்யாவஸ்தம் காரணாவஸ்தம் ச ஶரீரபூதம் ஸூத்ரே மணிகணவதாத்மதயாவஸ்தி தே மயி ப்ரோதம் ஆஶ்ரிதம் | "யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்...யஸ்யாத்மா ஶரீரம் ..ஏஷ ஸர்வபூதாந்தராத்மாபஹதபாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண:" இத்யாதி ஶ்ருதிஶதஸித்தம் இதம் ஸர்வஸ்ய பகவச்சரீரத்வம் ... ஷ்டம் விதுஷ: ‖ ‖எ‖

உண்டுபண்ணப் பட்டதும், அவைகளை யுண்டுபண்ணுகிறதுமான எல்லாஉலகமும், 2 நூலில் மணிகளை கோர்ப்பதுபோல்,

---

ம் யஜமானனையும், அவைகளை உண்டுபண்ணுகிறவனையும் சொன்னபடியாலே, பகவானே மிகவும் உயர்ந்தவன் என்று ஏற்படுகிறது. அதையே இந்த சுலோகம் உறுதிப்படுத்துகிற தென்றால், அவ்வளவு பிரயோஜன முள்ளதாக ஆகாது. புதிதான ஸங்கதியைச் சொல்லக்கூடுமேயானால் அதைச்சொல்லுவதுதான் தகுதி. ஆகையாலே குணங்களால் உயர்த்தி சொல்லப்பட்டது.

1. சுலோகத்தில் "பரதரம்" என்றும், "அந்யத்" என்றும் சொற்கள் இருக்கின்றன. "அந்யத்" என்ற சொல்லை "மத்த:" என்ற சொல்லுடன் சேர்த்து, என்னைத தவிர வேறான மிகவு முயர்ந்த வஸ்து இல்லையென்று அர்த்தம் பண்ணவேணும். அப்படியில்லாமல் என்னைக்காட்டிலும் மிகவு முயர்ந்தது—என்று அர்த்தம் பண்ணினால் "அந்யத்"என்ற சொல் வேண்டியதில்லை. கீழே சொன்னபடி அர்த்தம் பண்ணினால், நான்தான் மிகவும் உயர்ந்தவன் என்று பொருள் கிடைக்கும். ஆகையால், எனக்குஸமானனும், மேல்பட்டவனு மில்லை என்று ஏற்படும்.

2. நூல் அறுபட்டால் மணிகள் சிதறிப்போய்விடும். உடம்பில் ஆத்மா போய்விட்டால் அது அழிந்துபோய்விடும். அதுபோல பகவான் இல்லாவிட்டால் உலகம்முடிய சிதறிப்போய்விடும். நூல் உதாரணத்தாலே எப்படி ஒரேநூல் எல்லாமணிகளையும் தூக்குகிறதோ, அப்படியே பகவானும் எல்லா உலகங்களையும் தூக்குகிறான் என்றும், மணிகள் நெருங்கி யிருந்தால் எப்படி நூல் மறைந்திருக்குமோ, அப்படியே பக

என்னிடத்தில் கோர்க்கப் பட்டிருக்கிறது.1 ( 6½ )

வான் எல்லா வஸ்துக்களிலு மிருந்தாலும், எல்லாருக்கும் தெரியாமல் மறைந்திருக்கிறான் என்றும், நூலாலே மணிகளுக்கு உபயோகமே யல்லாமல், மணிகளால் நூலிற்கு எப்படி உபயோக மில்லையோ, அப்படியே பகவானாலே எல்லா லோகங்களும தாக்கப்படுகிறதே யல்லாமல், அவன் அவைகளின் அதீனமா யிருக்கவில்லை என்றும் ஏற்படுகிறது.

1. இந்த சுலோகத்தில் எல்லாவஸ்துக்களில் பகவான் நுழைந்து, அவைகளைத் தாக்கிக் கொண்டிருக்கிறா னென்று சொல்லியிருக்கிறது. வஸ்துக்களுக்குள்ளே நுழைந்திருப்பது அவைகளை ஏவி அவைகளைக் கொண்டு வேலைசெய்வதற்காக. இப்படி பகவான் எல்லாருடைய ஹிருதயத்தி லிருந்து ஏவி வேலை வாங்குகிறா னென்று 18-வது அத்தியாயம் 61-வது சுலோகததில் சொல்லப் போகிறது. 4-வது சுலோகம் முதல் இதுவரையில் பகவானைப் பற்றிச்சொன்னதாவது—பகவான் எல்லாவற்றையும் தாக்குகிறான். எல்லாவற்றையும் ஏவி வேலை வாங்குகிறான். எல்லாம் அவனுடைய ஸொத்து. அதாவது-அவனுக்கு வேலைசெய்து அவனை ஸந்தோஷப் படுத்தவேண்டியது. ஆகையாலே எல்லாம் அவனுக்கு உடம்புகள். அவைகளுக்கு அவன் ஆத்மா. ஆத்மா என்பது-ஒருவஸ்துவைத் தாக்கிக்கொண்டு, அதை ஏவி வேலைவாங்கி, அதைத் தன்னிஷ்டப்படி உபயோகப் படுத்துகிறவன். உடம்பு என்பது—ஒரு அறிவுள்ளவனாலே தாக்கப்பட்டு, அவனால் ஏவப்பட்டு, அவன் இஷ்டப்படி உபயோகிக்கத் தகுந்த வஸ்து.

பகவானே எல்லா வஸ்துக்களாக ஆகிறான் என்று கீழே சொல்லப் பட்டது. இதினாலே அவனுக்கு உடம்பாகிய ஜீவன்களுக்கும், பிரகிருதிக்கும் போல அவனுக்கு மாறுதல் உண்டோ என்று ஸந்தேஹம் உண்டாகலாம். ஜீவன்களுக்கு ஸ்வரூபத்தில் வேறுபாடு இல்லை. அது ஒரேமாதிரியாக இருக்கிறது. ஆனால் அவனுடைய அறிவுஎன்கிற குணமானது சிலவேளைகளில் சுருங்கியும், சிலவேளைகளில் விரிவையடைந்து கொண்டு மிருக்கிறது. பிரகிருதியின் ஸ்வரூபமே மாறி, வேறு உருவங்கள்வந்து, வேறுபெயர்களை அடைகிறது. பகவானுக்கு இந்த இரண்டு விதமானவேறுபாடுகளும் கிடையாது. ஏனென்றால், அவன் ஆத்மாவாகவும், மற்றவைகள் அவனுக்கு உடம்பாகவும் இருக்கின்றன. நம்முடைய உடம்புகளுக்கு குழந்தைப்பருவமும், யௌவனமும், கிழத்தனமும் வருகிறபடியால் அதற்கு மாறுதல் இருக்கிறது. இது அந்த உடம்புக்குள் இருக்கும் ஜீவனுக்குக் கிடையாது. அதுபோல். இந்த சுலோகத்தாலே இன்னொரு ஸங்கதி ஏற்படுகிறது. "ஜீவன்களும், பிரகிருதியும் ஒன்றினால் தாக்கப்படவில்லை, அவைகள்தனியாகவேஇருக்கின்றன" என்றுசிலர் சொல்லுகிறார்கள். அந்தமதம்பிசகுஎன்று காட்டப்படுகிறது.

அவ— இத்த²ம் ஸர்வஸ்ய பரமபுருஷஶரீரதயா ததா³த்மபூ⁴த பரமபுருஷப்ரகாரதயா ப்ரகார: பரமபுருஷ ஏவாவஸ்தி²த இதி ஸர்வைஶ்ஶப்³தை³ஸ்தஸ்யைவாபி⁴தா⁴நமிதி தத்ஸாமாநாதி⁴கரண்யேநாஹ—

ரஸோऽஹமப்ஸு கௌந்தேய ப்ரபா⁴ஸ்மி ஶஶிஸூர்யயோ:।
ப்ரணவஸ்ஸர்வவேதே³ஷு ஶப்³த³: கே² பௌருஷம் ந்ருஷு ॥
புண்யோ க³ந்த⁴: ப்ருதி²வ்யாம் ச தேஜஶ்சாஸ்மி விபா⁴வஸௌ।
ஜீவநம் ஸர்வபூ⁴தேஷு தபஶ்சாஸ்மி தபஸ்விஷு ॥ ॥௯॥
பீ³ஜம் மாம் ஸர்வபூ⁴தாநாம் வித்³தி⁴ பார்த² ஸநாதநம்।
பு³த்³தி⁴ர்பு³த்³தி⁴மதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்விநாமஹம் ॥ ॥௧௦॥
ப³லம் ப³லவதாம் சாஹம் காமராக³விவர்ஜிதம்।
த⁴ர்மாவிருத்³தோ⁴ பூ⁴தேஷு காமோऽஸ்மி ப⁴ரதர்ஷப⁴ ॥௧௧॥

ஏதே ஸர்வே விலக்ஷணா பா⁴வா மத்த ஏவோத்பந்நா: மச்சே²ஷபூ⁴தா: மச்ச²ரீரதயா மய்யேவாவஸ்தி²தா:। அதஸ்தத்ப்ரகாரோऽஹமேவாவஸ்தி²த: ॥ ॥அ-௧௧॥

அவ—ஆகையால் எல்லாம் பகவானுக்கு உடம்புகள், அவன் அவைகளுக்கு ஆத்மா. ஆகையால் எல்லாம் அவனுக்குப் 1 பிரகாரங்கள். அவன் எல்லாப்பிரகாரமாயிருக்கிறான். எல்லா சொற்களும் அவனையே சொல்லுகின்றன. இந்தக்காரணத்தாலே அந்தந்த சொற்களாலே பகவானையே அடுத்தநாலுசுலோகங்கள் சொல்லுகின்றன—

---

1. உலகத்தில் ஒரு ரோஜாப்பூவைப் பார்க்கும்போது, "இது ரோஜா, இது சிகப்பு" என்று அறிகிறோம். "சிகப்பு" என்கிற அறிவு சிகப்பு என்கிற குணத்தையும், அது உடையவஸ்துவையும், ரோஜா என்கிற அறிவு ரோஜா என்கிற ஜாதியையும், அதுஉள்ள வஸ்துவையும் காட்டுகின்றன. இருப்பதாகத் தோன்றுகிற சிகப்பு என்கிற குணத்தையும், ரோஜாஎன்கிற ஜாதியையும் "பிரகாரம்" என்றும், அவைகளை உடையதாகத்தோன்றுகிற வஸ்துவை "பிரகாரி" என்றும் வடமொழியில்சொல்லுவதுவழக்கம். அந்தகுணமும்ஜாதியும்அந்தவஸ்துவைவிட்டுத் தனியாய் இருக்கிறதில்லை. அப்படியேபகவானிடத்தில் எல்லாவஸ்துக்

1ரஸம், வெளிச்சம் முதலான 2 விலக்ஷணமான எல்லா வஸ்துக்களும் என்னிடமிருந்துதான் உண்டாகின்றன. என்னுடைய உபயோகத்துக்காகவே தான் இருக்கின்றன. என் உடம்பாகையால் என் அதீனமாகவே இருக்கின்றன. ஆகையால் நானே எல்லாப்பிரகாரமாக இருக்கிறேன்—அதாவது அவையெல்லாம் எனக்குப் பிரகாரம். (8–11)

---

களும் ஒருபோதும் பிரியாமல் இருக்கின்றன. ஆகையாலே அவைகளைக் காட்டும்சொற்களாலே பகவானைவேதமும், வேதமறிந்தவர்களும் சொல்லுவது வழக்கம்.

1. ரஸம், வெளிச்சம் முதலான சொற்களாலே பகவானையே சொல்லுவதற்குக் காரணம் காட்டப்படுகிறது. உலகத்தில் "ராஜா தான் ராஜ்யம்" என்று சொல்லுகிறார்கள். அதற்கு ராஜாவின் அதீனமாக ராஜ்யம் இருக்கிறதென்று பொருள். இங்கே அப்படிப் பொருள் கொள்ளக் கூடாது. முக்கியமான பொருள் கிடைக்கும்போது, அதை விடுவதற்கு நியாயமில்லை.

2. 12-வது சுலோகத்தில் சொல்லப்போகிற ரஜோகுணமும் தமோகுணமும் மேலிட்ட பதார்த்தங்களைக் காட்டிலும் வேறு என்று பொருள். இந்த நாலு சுலோகங்களில் சொல்லுகிற ரஸம்கந்தம் முதானவைகள் அந்தந்த திரவியங்களுக்கு முக்கியமான குணங்கள்.

சுலோகங்களுக்குப் பொழிப்புரை—ஜலத்திலுள்ள ரஸம் என்கிற குணம் நான். சந்திரனுடையவும் ஸூரியனுடையவும் வெளிச்சம் நான். எல்லாவேதங்களுக்கு முக்கியமான பிரணவமும், ஆகாசத்தில் சப்தம் என்கிறகுணமும், ஜீவன்களிடத்திலுள்ள வேலைசெய்யும் சக்தியும், நான். (குறிப்பு:—ரஸமென்பது ஜலத்தின் முக்கியமானகுணம். ஜலம் நெருப்பிலிருந்து உண்டாகும்போது- நெருப்பிலில்லாமல் ஜலத்துக்கு இந்தகுணம் புதிதாய் உண்டாகிறது.வெளிச்சம்என்பது—அது இருக்கும் ஸூரியனையும் சந்திரனையும் காட்டிலும் வேறான நாலுபக்கத்திலும் பரவுகிற தேஜஸ்ஸான திரவியம். இந்த வெளிச்சத்தைக் கொண்டு ஜகத்துக்குச் சந்திரனும், ஸூரியனும் உபகாரம் பண்ணுகிறபடியாலே அது முக்கியமானது. பிரணவமானது எல்லாவேதங்களின் அர்த்தத்தைச் சுருக்கமாகச் சொல்வதால் அது முக்கியமானது.)

9-வது சுலோகம-பூமியிலுள்ள நல்லவாஸனையும், அக்னியிலுள்ள ஜொலுத்துகிற சக்தியும், உடம்போடு கூடிய எல்லா பிராணிகளும்

பிழைத்திருப்பதற்குக் காரணமும், தபஸ்ஸை செய்கிறவர்களின் தபஸ்ஸும் நான். (குறிப்பு—துளஸி முதலானவஸ்துவின் நல்ல வாஸனையாலே பூமி ஸத்வகுணத்தை அதிகப்படுத்துவதாலும், ஸுகத்தை உண்டு பண்ணுவதாலும் அது முக்கியமான குணம். உடம்போடு கூடிய எல்லாரிடத்திலும் என்று சொல்வதில் பிரும்மாமுதலானவர்களைச் சேர்த்து சொல்லப்பட்டது.)

10-வது சுலோகம். அர்த்தத வஸ்துக்களுக்கு இருக்கும் இன்னொரு வஸ்துவாக ஆகிற சக்தியை நான் என்று தெரிந்து கொள். மண்ணோடு சேர்ந்த விதைக்கு மரமாக ஆகிறசக்திபோல. புத்தியுள்ளவர்களுடைய புத்தியாகவும், தேஜஸ்ஸையே ஸ்வபாவமாக உடையவர்களுடைய தேஜஸ்ஸாகவும் நான் இருக்கிறேன். (குறிப்பு-தேஜஸ்ஸு என்பது ஒருவனாலும் அவமானப்படுத்த முடியாதபடி இருப்பது. ஒருவனை அவமானப்படுத்தும் ஸாமர்த்தியம் என்றும் சொல்வது உண்டு.

11-வது சுலோகம் பலமுள்ளவர்களுடைய காமத்தாலும், ராகத்தாலும் விடப்பட்ட பலம் என்கிறகுணம் நான் தேவர்களிடத்திலும் மனிதர்களிடத்திலுமிருக்கிற தர்மத்திற்கு விரோதமில்லாத காமமும் நான். (குறிப்பு:—ராகம் என்றால் ஆசை. அதுமுற்றினால் காமமாகிறது. இவைகளோடு சேர்ந்த பலமானது அயலாருக்கு ஹிம்ஸையை உண்டு பண்ணுமாகையால், அதுடன்சேராத—தர்மம் செய்வதற்கு உபயோகமான—பலம் இங்கே சொல்லப்பட்டது. தர்மத்துக்கு விரோதமில்லாத காமமாவது—ஒருவனுக்குத்தன் மனைவியினிடத்தில் இருக்கும் ப்ரீதி முதலானது.)

வேதத்தில் சிலஇடங்களில் பகவான் வேறு, ஜகத்து வேறு என்று சொல்லியிருக்கிறது. இதைப்பேதசுருதி என்று சொல்கிறது. வேறு சில இடங்களில் ஜகத்தே பகவான் என்று சொல்லியிருக்கிறது இதை அபேதச்ருதி என்று சொல்லுகிறது. இந்த இரண்டு சுருதிகளுக்கும் பொருந்தும்படியாக அர்த்தம் சொல்லவேண்டியது. உண்மையில் பகவான் வேறு, ஜகத்து வேறு. ஜகத்தைப் பகவானுக்கு உடம்பாகவும், பகவான் ஜகத்துக்கு ஆத்மாவாகவும், ஜகத்துப் பகவானுடனே எப்போதும் சேர்ந்தும், ஒருக்ஷணமும் அவனைவிட்டுப் பிரியாமலும் இருப்பதால், ஜகத்தையே பகவானாகச் சொல்லுகிறது. ஜீவனும், அவன் உடம்பும் எப்போதும் சேர்ந்திருக்கிறபடியால், அவர்களை உடம்பாகச் சொல்லுவது உலக வழக்கம். "நான் மனிதன்" என்று ஒருவன் சொல்லுகிறான். 'நான்" என்பது அழிவில்லாத ஜீவன். 'மனிதன்" என்பது அழியக்கூடிய உடம்பு. இவையிரண்டும் ஒன்றாக இருக்கமாட்டாது.

கூவ—கிம் விஶிஷ்ட்யாஹி்யதெ—

யெ செசவ ஸாத்விகா ஹாவா ராஜஸாஸ்தாமஸாஸ்ச யெ ।
மத்தவெவெதி தாநு விஜி நத்வஹம் தெஷு தெ மயி ‖கஉ‖

ஸாத்விகா ராஜஸாஸ்தாமஸாஸ்ச ஜகதி தெஹத்வெநெஂத்ரியத்வெந ஹொக்யத்வெந தத்ஹெதுத்வெந சாவஸ்திதா யெ ஹாவாஃ, தாநு ஸவ-ாநு மத்த வவொத்பநாநு விஜி। தெ மச்ஜரீரதயா மய்யெவாவஸ்திதாஜதி ச। நத்வஹம் தெஷுதநாஹம் கதாசிதபி ததாயத்தஸ்திதிஃ। அநயத்ராத்மாயத்தஸ்திதெசரவி ஶரீரஸ்ய ஶரீரெணாத்மநஃஸ்திதாவுபகாரொ வித்யதெ। இஹ து தெநநுகஶ்சித்தயாவிய உபகாரஃ। கெவலமீஶெவ லீலாப்ரயொஜநமித்யர்தஃ ‖கஉ‖

தனித்தனியாய்ச் சொல்லுவானேன். உலகத்தில் சில வஸ்துக்களில் ஸத்வகுணமும், சிலவஸ்துக்களில் ரஜோகுணமும்,

---

ஆகையால் நான் உடம்பு என்பதற்கு, உடம்பிலே நான் இருக்கிறேன் என்று பொருள். அப்படியே "ஜகத்து பகவான்" என்றால், ஜகத்தில் பகவான் இருக்கிறான் என்று பொருள். இப்படித்தான் பொருள் கொள்ள வேணுமென்பது "ஜகத்து பகவானுக்கு உடம்பு" என்று சொல்லுகிற சில வேதவாக்கியங்களால் ஏற்படுகிறது. இவைகளுக்குக் கடகச்ருதி என்று பெயர். 4- 5- 6—வது சுலோகங்களில் பேதச்ருதியின் அர்த்தமும், 8—11—வது சுலோகங்களில் அபேதச்ருதியின் அர்த்தமும், 7-வது சுலோகத்தில் கடகச்ருதியின் அர்த்தமும் சொல்லப்படுகிறது.

வேறுசிலர்-"அபேதம் (பேதமில்லாமை) தான் உண்மை. பேதச்ருதி பேதத்தைக்காட்டுகிறது. பேதத்தைத்தெரிந்துகொண்டுதானே அதை இல்லையென்றுசொல்லவேண்டும், அதற்காக"-என்றுசொல்லுகிறார்கள். அது ஸரியானதன்று. ஏனென்றால், பேதம் என்று ஒன்று இருப்பதாக வேறு பிரமாணங்களாலே தெரிந்தாலன்றோ, அதை இல்லை யென்று வேதம்சொல்லக்கூடும். பகவானை வேதத்தால் அல்லதுஅறியமுடியாததாலே அவனுக்கும் உலகத்துக்கும் பேதத்தை வேறுபிரமாணங்களாலே அறியமுடியாது. வேதத்தினாலேயே அதைத் தெரிந்துகொள்ளவேண்டியது. வேதம் முதலில் பேதத்தைச் சொல்லி, பிறகு அதை இல்லை யென்று சொன்னால், அது பயித்தியக்காரன் வார்த்தை போலாகும். ஆகையாலே கீழே சொன்னபடிதான் பொருள் கொள்ளவேணும்.

சிலவஸ்துக்களில தமோகுணமும் மேலிட்டிருக்கின்றன. அவைகள உடம்புகளாகவும், இந்திரியங்களாகவும், அவைகளால் அநுபவிக்கத்தக்கூந்த வைகளாகவும். 1 அவைகளை உண்டுபண்ணுகிறவைகளாகவும் இருக்கின்றன. இவைகள எலலாம் 2 என்னிடமிருந்தே உண்டானவைகள் என்று நினை என உடம்புகளாய இருப்பதால், என அதீனமாயுமிருக்கின்றன ஒருக்காலத்திலும் அவைகள அதீனமாய் நான் இருக்கவில்லை. உலகத்தில ஆத்மாவின அதீனமாக உடம்புகள் இருந்தபோதிலும், உடம்பினாலே ஆத்மாவுக்கு உதவி உண்டு. அப்படி அவைகளாலே எனக்குத் துளிக் கூட உதவி இல்லை அவைகளை நான் விளையாட்டு (லீலை)க்காக வைத்துக் கொண்டிருக்கிறேன். ( 12 )

த்ரிபிர்குணமயைர்பாவைரேபி: ஸர்வமிதம் ஜகத் ।
மோஹிதம் நாபிஜாநாதி மாமேப்ய: பரமவ்யயம் ॥ ॥௧௩॥

ததேவம் தேவமநுஷ்யாத்மகம் க்ருத்ஸ்நம் ஜகந்நித்யம் காலே காலே உத்பந்நோத்பத்யதே, ஸ்திதி ச ப்ராப்யதே, ஸத்யேவா வஸ்திதம், ஸம்ஸாரஹேதும், ஸாத்மகம் தேவாதிஸமவே காரணாவஸ்தாயாம் காயாநுவஸ்தாயாம் ச ஸம்ப்ரதீர்த்யா ஸம்ப்ராப்ய கார்யாவஸ்திக:। அத: காரணத்வேந சேஷித்வேந ச ஜ்ஞாநாத்யஸங்க்யேய கல்யாணகுணகணைஸ் ஸ்வாமித்வேந ஸமஸ்தப்ரகாரைர் பரத்ர:, ஸத்த்வாதிநா த்ரிவித கல்யாணகுணகணேந பரத்ரம் நவித்யதே। யத: ஸத்வாம் மாம் த்ருஷ்ட்வா ஸாத்விகராஜஸதாமஸகுணமயைர் பாவைர் ஸர்வேப்ய: பரம் மேஹஸாயாகமைர்: கல்யாணஆநந்த தேஹேந த்ரயாத்ரா ப்ரகாரேண பரமாத்யந்த ஸ்தூல, கர்மஸம்பந்தகாரணேவ

---

1. இதனால் ஸமஷ்டி இருப்பு சொல்லப்படுகிறது.

2 "என்னிடமிருந்தே" என்பதாலே உலகத்திற்கு உபாதான காரணமும், நிமித்தகாரணமும பகவான ஒருவனே என்று காட்டப்படுகிறது. மேலும், ஸத்வகுணம மேலிட்டது முதலான பலவஸ்துக்களைச் சொல்லுவதாலே அத்தற்குத் தகுந்த அநேககாரணங்கள் உண்டென்கிற ஸந்தேஹமும் தீர்க்கப்படுகிறது

[illegible] ||  ||கரு||

அவ—இப்படி பகவானுடைய உண்மையான ஸ்வரூபம் சொல்லப்பட்டது. மேல் பிரகிருதியினாலே அது மறைக்கப்படு கிறது என்று சொல்கிறார்.

இப்படி அறிவுள்ளது, அறிவில்லாததுஎன்று இருவகையான இந்த எல்லா உலகமும் என்னுடையது. அந்தந்த காலத்தில் என்னிடமிருந்துதான் உண்டாகிறது. பிறகு என்னிடம்தான் வந்து அடங்குகிறது. என்னிடத்திலேயே இருக்கிறது, அது எனக்கு உடம்பு. நான் அதுக்கு ஆத்மா. இந்தக்காரணங்களாலே, பிரளயகாலத்தில் அழியாமலிருக்கிற ஜீவன்கள் உருவமாயும் பிரகிருதி உருவமாயும நான்தான் இருக்கிறேன். இப்போது காணப்படுகிற அனேக வஸ்துக்களின உருவமாயு மிருக்கிறேன். ஆதலால் உண்டு பண்ணுவதாலும், எல்லா வஸ்துக்களையும் உபயோகித்துக் கொள்வதாலும், அறிவு முதலான கணக்கில்லாத உயர்ந்த நல்ல குணங்களாலும் எல்லாவிதத்தாலும் நானே மிகவும் உயர்நதவன். என்னிடத்திலிருக்கும் ஒரு ஸங்கதியாலாவது மிகவும் உயர்ந்தவஸ்து வேறொன்றும் கிடையாது. இப்படி ஸத்வம் முதலான மூன்று குணங்களுள்ள மற்ற எல்லாவஸ்துக்களைக் காட்டிலும், என்னிடத்தில் மாத்திரமிருக்கிற நல்ல குணங்களின் கூட்டங்களாலும், 1 பலவிதத்தாலே நான் இன்பமாயிருப்பதினு

---

1. பிரகிருதியிலிருந்து உண்டான வஸ்துக்கள் சப்தம் முதலான தங்களுடைய குணங்களாலே ஸுகத்தைக்கொடுக்கின்றன. பகவானோ ஞானம் சக்திமுதலான குணங்களாலும்,திருமேனியினுடையபலவிதங்க ளான குணங்களாலும், சுத்த ஸத்வம் என்கிற திரவியத்தினுடைய சப்தம் முதலான குணங்களாலும், பிராகிருத வஸ்துக்களையும் பகவானுடையது என்கிற எண்ணத்தினால் ஸுகத்தைக் கொடுப்பதாகப்பண்ணுகையாலும் பகவான் மிகுந்த ஸுகத்தைக் கொடுக்கக் கூடியவர். அந்த ஸுகங்களின் உயர்த்திக்கு எல்லையில்லை.

னும் மிகவும் உயர்ந்தவனுயும், இவைகளுக்கு ஒருக்காலும் குறை வில்லாதவனுயும், எப்போதும் ஒரே மாதிரியாயும இருக்கிற என்னை-தேவன், மாடு(திர்யக்) மனிதன், மரம்(ஸ்தாவரம்)என்று 1 நான்கு வகைப்பட்ட உலகம், 2 ஸத்வம் முதலான குணங்க ளால் ஏற்பட்டதாயும், மிகவும் இளப்பமாயும், நிலையில்லாததாயும் அவரவர்கள் கர்மங்களுக்குத் தக்கபடி உடம்புகளாயும், இந்திரியங் களாயும், பிள்ளை பெண்டாட்டி முதலான அநுபவிக்கத் தகுந்த வஸ்துக்களாயுமிருக்கிற பதார்த்தங்களினுலே 3 மயங்கி அறிய வில்லை. (13)

[illegible]

1. சுலோகத்தில் 'இந்த எல்லா ஜகத்'' என்ற சொற்கள் இருக் கின்றன. அதில்'' எல்லா'' என்கிறசொல்லானது தேவஜாதியில் சேர் ந்த பிரும்மா முதலானவர்களை மற்றவர்களுடன் சேர்த்துச் சொல்லுகி றது. ''இந்த'' என்கிற சொல்லாலே கண்ணுலேபார்க்கப் படுகிற மரம் மாடு மனிதன் முதலான வேறுபாடுகளைக் காட்டுகிறது. ''ஜகத்'' என்ற சொல்லானது உடம்புகளோடு சேர்ந்த ஜீவன்களைச் சொல்லு கிறது.

2. ''ஸத்வம் முதலானகுணங்களால் ஏற்பட்ட'' என்பதாலே ஸுகத்தில் துக்கத்தின் கலப்பு சொல்லப்பட்டது. ரஜஸும் தமஸு ம் துக்கத்திற்கும் மோஹத்திற்கும் காரணம் என்று 14-வது அத்தியா யத்தில் சொல்லப்போகிறுர் ''கர்மங்களுக்கு தக்கபடி'' என்பதாலே இவைகளுண்டாகி போகிறதென்றும், ஆகையாலே நிலையில்லாதது என்றும், இளப்பம் என்றும் ஏற்படுகிறது.

3. சுலோகத்தில் ''மூன்று வகையான வஸ்துக்களாலே மயங்கி'' என்று சொல்லியிருக்கிறது. அவைகளில் ஸத்வகுணம் மேலிட்டவைகள் ஒருவகை. ஸத்வகுணத்தால் அறிவன்றோ உண்டாகிறது. அதினுலே எப்படி மயக்கமுண்டாகும் என்றுல், பதில்--விஷம்கலந்த அன்னத்தில தேனைச்சொட்டவிட்டால் முட்டாளுக்கு அதைச் சாப்பிடவேணுமெ ன்று ஆசைஉண்டாகும். அப்படியே அவனவன் கர்மத்துக்குத் தகுந்த படி துக்கத்தைக்கொடுக்கக் கூடிய வஸ்துக்களில் துளி ஸுகமிருப்ப தாலே, அந்தஸுகத்தின ஆசையாலே ஜனங்கள் மயங்கக்கூடும். ஸத்வம என்பது ஸுகத்தில் ஆசையை யுண்டு பண்ணும் குணம.

ஷ்வபி ரேஷு ஶரீரேஷு ஸர்வஸ்ய போக்த்ருவர்கஸ்ய மோ ஹநிவ்ருத்திருபஜாயத இத்யத்ராஹ —

தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா ॥ ॥௧௩½॥

மமைஷா குணமயீ-ஸத்த்வரஜஸ்தமோமயீ, மாயா யஸ்மாத்தைவீ-தேவேந க்ரீடாப்ரவ்ருத்தேந மயைவ நிர்மிதா । தஸ்மாத் தேவைரபி துரத்யயா-துரதிக்ரமா । அஸ்யா: மாயாஶப்தவாச்யத்வம் ஆஸுரராக்ஷஸாஸ்த்ராதிஷ்விவ விசித்ரகார்யகரத்வேந ; யதா "ததோ பகவதா தஸ்ய ரக்ஷார்த்தம் சக்ரமுத்தமம் । ஆஜகாம ஸமாஜ்ஞப்தம் ஜ்வாலாமாலி ஸுதர்ஶநம் ॥ தேந மாயாஸஹஸ்ரம் தச்சம்பரஸ்யாஶுகாமிநா । பாலஸ்ய ரக்ஷதா தேஹமேகைகஶ்யேந ஸூதிதம்" இத்யாதௌ । அதோ மாயா ஶப்தோ ந மித்யார்த்தவாசீ । ஐந்த்ரஜாலிகாதிஷ்வபி கேநசிந்மந்த்ரௌஷதாதிநா மித்யார்த்தவிஷயாயா: புத்தேருத்பாதகத்வேந மாயாவீதி ப்ரயோக: । ததா மந்த்ரௌஷதாதிரேவ ச தத்ர மாயா, ஸர்வப்ரயோகேஷு அநுகதஸ்யைகஸ்யைவ ஶப்தார்த்தத்வயுக்தத்வாத் । தத்ர மித்யார்த்தேஷு மாயாஶப்தப்ரயோகோ மாயாகார்யபுத்திவிஷயத்வேந ஔபசாரிக: । மஞ்சா: க்ரோஶந்தீதிவத் । ஸைஷா குணமயீ பாரமார்த்திகீ பகவந்மாயைவ "மாயாம் து ப்ரக்ருதிம் வித்யாந்மாயிநம் து மஹேஶ்வரம்" இத்யாதிஷ்வபிதீயதே । அஸ்யா: கார்யம் பகவத்ஸ்வரூபதிரோதாநம், ஸ்வஸ்வரூபே போக்யத்வபுத்திஶ்ச । அதோ பகவந்மாயயா மோஹிதம் ஸர்வம் ஜகத் பகவந்தம் நிரதிஶயாநந்தஸ்வரூபம் நாபிஜாநாதி ॥ ॥௧௩½॥

அவ— தேவரீர் இருக்கும்போது எல்லா ஜனங்களுக்கும் மற்ற வஸ்துக்கள் எப்படிப் பிடிக்கின்றன. தேவரீரோ, இயற்கையாகவே அளவில்லாமல், உயர்ந்த ஆநந்தத்தைக் கொடுக்கிறவர், அழிவில்லாதவர். எப்போதும் ஒரே விதமாயிருப்பவர். உலகத்திலுள்ள வஸ்துக்களைக் காட்டிலும் மிகவும் இன்பமானவர். உலகத்திலுள்ள வஸ்துக்களோ மூன்று குணமுள்ளவைகள். ஆதலால்

துக்கம் கலந்த ஸுகத்தைக் கொடுக்குமவைகள். இளப்பமானவை கள் நிலையில்லாதவைகள் என்றால், பதில் சொல்லுகிறார்—

உலகத்தை யுண்டு பண்ணுவது முதலான வேலைகளை விளையாட்டாகச் செய்து கொண்டிருக்கிற நான் ஸத்வம் முதலான மூன்று குணங்களோடுகூடிய பிரகிருதி என்கிற 1 என்னுடைய வஸ்துவை ஜீவன்களை மயக்கும்படி 2 செய்திருக்கிறேன். ஆகை

---

1. மாயை என்பது, பிரகிருதி. அதை வைத்துக்கொண்டு வேலை செய்கிறவன் மாயீ. கிருஷ்ணபகவான்தான் மாயீ. மாயீ வேறு, கிருஷ்ணபகவான் வேறு என்று உண்டாகும் ஸந்தேஹத்தைத் தீர்ப்பதற்காக சுலோகத்தில் "மம மாயா" (என்னுடைய மாயை) என்கிற சொல் இருக்கிறது.

2. பகவான் மிகுந்த இரக்கமுள்ளவனல்லவா? எல்லாரையும் காப்பாற்ற வேண்டியவன் எப்படி பிரகிருதியைக் கொண்டு மயக்கலாம்—என்றால், பதில்—உலகத்தில் ஒருகுழந்தை நடக்க ஆரம்பிக்கும்போது? அதற்கு நடை பழக்குவதற்காக ஒரு பொம்மையை முன்னாலே வைக்கிறார்கள். அதை எடுப்பதற்காக ஆசைப்பட்டு குழந்தைத் தட்டுத்தடுமாறி நடந்து வருகிறது. அப்படியே பகவானும் ஜீவன்கள் தன்னைத்தியாகம் செய்வதற்காக வேண்டிய சில குணங்களைப் பழக்கத்தினாலே ஸம்பாதிக்கும்படி உலகத்திலுள்ள வஸ்துக்களை நம் மனதையும், இந்திரியங்களையும் இழுக்கும்படி செய்திருக்கிறான். அவர்கள் அவைகளால் இழுக்கப்பட்டு அந்தவஸ்துக்களை ஸம்பாதிக்கப் பிரயத்தினப்படுகிறார்கள். இப்படி வேண்டிய குணங்களைப் பழக்கத்தினாலே அடைகிறார்கள். அந்த குணங்களாவன—கட்டாயம் செய்யவேண்டிய வேலையைச் செய்யும்போது உண்டாகும் வருத்தத்தைப் பொறுத்துக் கொள்ளுதல். இதை வடமொழியில் "திதிக்ஷா" என்று சொல்லுகிறது. இரண்டாவது குணம் விடாமுயற்சி. ஒரு வேலையைச் செய்து பலன் பெறாவிட்டாலும், பலன் வருகிறவரையில் திருப்பித் திருப்பி அந்த வேலையைச் செய்வது. இதை "த்ருதி" என்று வடமொழியில் சொல்லுகிறது. செய்யவேண்டிய வேலையில் மனதை வைத்து, வேறொன்றிலும் அதை விடாதிருப்பது. இதை வடமொழியில் "ஐகாக்ரியம்" என்று சொல்லுகிறது. இது மூன்றாவது குணம். இன்னொரு குணம் உத்ஸாஹம். இவை முதலானவை. இவைகளைப் பிச்சைக்குப் போகிறவனிடம் பார்க்கலாம். பிச்சை கேட்கும்போது அவனை வைதால், அதைப் பொறுத்துக் கொள்கிறான். சிலவிடங்களில் ஒரு தடவையில் பிச்சை கிடைக்

யாலே 1 ஒருவனும் அதைத்தாண்ட முடியாது. ஆகையால் என்னுடையமாயையினால்மயங்கிக்கிடக்கிற எல்லா ஜகத்தும்“நான் எல்லையில்லாத ஆநந்தத்தைக் கொடுக்கிறவன்” என்று தெரிந்து கொள்ளவில்லை.

இந்த சுலோகத்தில் இருக்கும் “மாயா”என்கிற சொல்லுக்கு ஆச்சரியமான வேலையைச் செய்கிற வஸ்து என்று பொருள். ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் “சம்பரன் என்கிற அஸுரனுடைய ஆயிரம் மாயைகளை பெருமாளுடைய சக்கிரம் அறுத்து விட்டது.” என்று சொல்லி யிருக்கிறது. அந்த இடத்தில் மாயா என்பதற்கு ஆச்ச ரியமான வேலைகளைச் செய்யும் ஆயுதம் என்று பொருள். ஆகை யால் அந்த சொல்லுக்குப் பொய் என்று பொருள் இல்லை. இந்திர ஜாலம் செய்கிறவனை மாயாவி (மாயையுள்ளவன்) என்று சொல்வ துண்டு.பார்க்கிறவர்களுக்குஉண்மையிலில்லாதவஸ்துக்களைத்தோ ன்றும்படி பண்ணுகிறமந்திரம்,பச்சிலை முதலானவைகளைவைத்துக் கொண்டிருப்பதாலே அவனுக்கு இந்தப் பெயர் வருகிறது. மந் திரம், பச்சிலை முதலானவைகளை அந்த விடத்தில் மாயை. அவைகள் பொய்யன்று அவைகளால் உண்டாகும் புத்தியும் பொய் யன்று. மாயை என்கிற சொல்லை உபயோகப்படுத்துகிற எல்லா

---

காவிட்டாலும் உறுதியுடன் பலதடவை அதே இடங்களுக்குப் போகி றான். பிச்சை வாங்குவதிலேயே அவன் மனது நிற்கிறது. அவன் உத் ஸாஹத்தைச் சொல்ல வேண்டியதில்லை. என்ன மழை பெய்தாலும், என்ன இடி இடித்தாலும், அவன் வேலை நிற்கிறதில்லை.

இப்படிப் பிரகிருதியிலிருந்து உண்டான வஸ்துக்களை ஜீவன்களை இழுக்கும்படி செய்வதாலே அவர்கள் அவைகளிலேயே மூழ்கிப் போவார் கள் என்று அவைகளில் துக்கத்தையும் கலந்து வைத்திருக்கிறான். அவைகளை ஸம்பாதிக்கும்போதும் அநுபவிக்கும்போதும் அவைகளில் உண்டாகும் துக்கத்தைப் பார்த்து, ஜீவன்கள் அவைகளை விட்டுவிட வேணுமென்று பகவானுடைய கருத்து.

1. பகவான் தன் இஷ்டப்படி நடக்கிறவன். அவன் ஒருவரா லும் செய்ய முடியாத வேலைகளை செய்யும் சக்தியுள்ளவன். அவன் விளை யாட்டுக்காகப்பிரகிருதியை எல்லாரையும் இழுக்கும்படி செய்திருக்கி றான். எல்லா ஜீவன்களும் அவனுக்குள்பட்டவர்கள். எவன் அதைத் தாண்டக்கூடும்?

விடங்களுக்கும் பொருத்தமான ஒரே பொருளைச் சொல்ல வேண்டியது. சில இடங்களில் பொய்யான ஸங்கதியை மாயை என்று சொல்வதுண்டு. அந்த இடங்களில் அந்தப் பொய்யான வஸ்துக்கள் மாயையல்ல. மாயையினால் தோன்றுகின்றன. அதனால் அவைகளை மாயை என்று சொல்லுகிறது. ஒருவன் ஒருவீட்டு ஜனங்களால் தொந்திரவை அடையும்போது, அந்த வீட்டுத்தொந்திரவு தாங்கமுடியவில்லை என்று சொல்லுகிறான். அந்த வீடா தொந்திரவு பண்ணிற்று? அல்ல. வீடு என்கிற சொல்லுக்கு வீட்டிலுள்ள ஜனங்கள் என்று பொருள். அதுபோல் மாயை என்பதற்கு மாயையினால் தோன்றுகிறது என்று பொருள். எல்லா சொற்களுக்கும் இன்ன இன்ன பொருளென்று ஏற்பட்டிருக்கிறது. வீடு என்கிற சொல்லுக்கு வீடுதான் பொருள். அதை முக்கியமான பொருள் என்று சொல்லுகிறது. வீடு என்கிற சொல்லுக்கு வீட்டிலிருப்பவர்களைப் பொருளாகக் கொண்டால், அந்தப் பொருளை கௌணம் என்று சொல்லுகிறது. அவைகளை தோன்றப் பண்ணுகிற மாயை என்கிற வஸ்து உண்மைதான். உபநிஷத்துக்களில் இந்த சொல்லானது பிரகிருதியைச் சொல்லுகிறது. அதை அடக்கி ஆளுகிற பகவானை "மாயி" (மாயையுடையவன்) என்று சொல்லுகிறது. இது என்ன ஆச்சரியமான வேலையைச் செய்வதுஎன்றால்,நாம் பகவானுடைய ஸ்வரூபத்தை அறியவொட்டாமல் பண்ணுறதும், பிரகிருதியினால் உண்டான பல தொந்தரவுகளைக்கொடுக்கிற பிள்ளை பெண்டாட்டி முதலான வஸ்துக்களை இன்பமென்று நினைக்கும்படி செய்வதும், இதுமுதலானபல வேலைகளைச் செய்கிறது. (13½)

அத—மாயாவிமோசநோபாயமாஹ—

மாமேவ யெ ப்ரபத்யந்தெ மாயாமேதாம் தரந்தி தெ ||௧௪||

மாமேவ-ஸத்யஸங்கல்பம் பரமகாருணிகம் அநாலோசிதவிஶேஷாஶேஷலோகஶரண்யம் யெ ஶரணம் ப்ரபத்யந்தெ, தெ மதீயாம் குணமயீம் மாயாம் தரந்தி-மாயாமுத்ஸ்ருஜ்ய மாமெவோபாஸதஇத்யர்த்த: || ||௧௪||

அவ— இந்த மாயையைப் போக்குவதற்கு வழி சொல்லு கிறார்—

1 நினைத்த வேலையை முடிக்கிறவனும் அளவில்லாத தயை யுள்ளவனும், தாரதம்மியம் பார்க்காமல் எல்லாப்பிராணிகளையும் காப்பாற்றுகிறவனுமான 2 என்னையே எவர்கள் கெஞ்சிக்கேட் டுக் கொள்ளுகிறார்களோ, அவர்கள் இந்தப் பிரகிருதியால் மயங் காமல் என்னையே தியானம் செய்கிறார்கள். [14]

அவ—கிதி கி ஸமவடிவாஸநாவாநீம் ஸமவதீவகிம் ஸவெ ந கவதிஜநாஸ—

ந ஶாம் ஷூஷூதிஜெநா உஷாஃ வுவஜெ நாயாஃ।
ஶாயயாzவஹ்ரதஜ்ஞாநா ஆஸுரம் ஹாவஶாஶ்ரிதாஃ ॥௧௫॥

---

1. நான்போட்ட விலங்கை நான்தான் தறிக்கவேணும். எனக்கு விலங்கு போடுவதில் மாத்திரம் எண்ணமில்லை. கெஞ்சிக்கேட்டுக்கொ ண்டால், முன் எண்ணத்தை மாற்றி விலங்கைத்தறித்து விடுவேன். ஆகையால் என்னைத்தான் கெஞ்சவேணும். என்னைக்கெஞ்சினால் பிர யோஜனமுண்டு. மயக்கத்தைத் தீர்க்கும் சக்தி மாத்திரமிருந்தால், போதாது. தயையும் கூட இருக்கவேணும். இல்லாவிட்டால் அவனைக் கெஞ்சிக்கேட்டுக் கொள்ளுவதில் பிரயோஜனமில்லை தயையிருந்தாலும் "இவனைச்சேர்த்துக் கொள்ளலாம், இவனைச்சேர்த்துக் கொள்ளக் கூடாது" என்று லோகத்தாரைப்போல் கட்டுப்பாடு பண்ணினால், பொறுக்கமுடியாத குற்றங்களைச் செய்த சிலர் அவனிடம் போகமுடி யாது. ஆகையால் தாரதம்மியம் பாராமல் எல்லாரையும் ரக்ஷிக்கிறவனாய் இருக்கவேண்டும். இந்த குணம் பகவானுக்கு இருக்கிறதென்று காக் கை, குரங்கு (ஸுக்ரீவன்) ராக்ஷஸன் (விபீஷணன்,) த்ரௌபதி முத லானவர்கள் சரித்திரத்தால் நன்றாய் தெரிந்து கொள்ளலாம். "ராவ ணனே வந்தாலும் சேர்த்துக்கொள்வேன்" என்றுசொல்லியிருக்கிறான்.

2. பகவானுடைய ஸ்வரூபத்தை மறைக்கிறபடியால். பிரகிருதி ஒரு திரைபோல் இருக்கிறது. அவனைக்கெஞ்சி கேட்டுக் கொள்ளுகிற வனுக்கு அது மறைக்கிறதில்லை. மறைக்காததும் தவிர அந்தப்பிரகி ருதியே கண்ணாடிபோல் இருந்து பகவானுடைய குணங்களையும் தன் னுடைய கெடுதிகளையும் காட்டுகிறது.

மாம் துஷ்க்ருதிந꞉ - பாபகர்மாணோ மாம் ந ப்ரபத்யந்தே| துஷ்க்ருததாரதம்யேந தே சதுர்விதா꞉ - மூடா꞉ - நராதமா꞉ - மாயயாபஹ்ருதஜ்ஞாநா꞉ - ஆஸுரம் பாவமாஸ்ரிதா꞉ இதி| மூடா꞉ - விபரீதஜ்ஞாநா꞉ பூர்வோக்தப்ரகாரேண பகவச்சேஷதைகரஸமாத்மாநம் போக்யஜாதம் ச ஸ்வஶேஷதயா மந்யமாநா꞉| நராதமா꞉ - ஸாமாந்யேந ஜ்ஞாதேऽபி மத்விஷயே ஜ்ஞாநே தது³ந்முகத்வாநர்ஹா꞉| மாயயாபஹ்ருதஜ்ஞாநா꞉ - மத்விஷயம் மதஸாதாரணஸ்வபாவவிஷயம் ச ஜ்ஞாநம் யேஷாம் ததஸம்பாவநாபாதிபி꞉ குதர்கைரபஹ்ருதம், தே ததோக்தா꞉| ஆஸுரம் பாவமாஸ்ரிதா꞉ - மத்விஷயம் மதஸாதாரணஸ்வபாவவிஷயம் ச ஜ்ஞாநம் ஸுத்ருடமுத்பந்நம் யேஷாம் த்வேஷாயைவ பவதி, தே ஆஸுரம் பாவமாஸ்ரிதா꞉| உத்தரோத்தரா꞉ பாபிஷ்டதமா꞉||

அவ—இப்படியிருந்தால் பகவானுடைய தியானத்தை உண்டு பண்ணக்கூடிய பிரபத்தியை அவனிடத்தில் ஏன் எல்லாரும் செய்கிறதில்லை என்றால், சொல்லுகிறார்—

பாபம் பண்ணினவர்கள் என்னிடத்தில் வந்து கெஞ்சிக் கேட்டுக் கொள்வதில்லை. அவர்கள் பாபத்தின் தாரதம்மியத்தாலே நாலுவகைப்பட்டவர்கள். (1) மூடர்கள். அதாவது முன் சொன்னபடி நமக்கு யஜமாநனாக பகவான் என்று ஒருவன் இருக்கிறானென்று அறியாமல், இயற்கையாக அவனுக்குச்சேஷமாயிருக்கிற தன்னையும், மற்ற எல்லா வஸ்துக்களையும் தனக்காகவே இருப்பதாக நினைக்கிறவர்கள். (2) நராதமர்கள் 1 (மனிதர்களுக்குள்ளே மிகவும் தாழ்ந்தவர்கள்.) அதாவது—தைவம் என்று ஒன்று

1. அறிவில்லாதவர்களுக்கும் கெட்டயுக்திகளால் அறிவைக்கெடுக்கிறவர்களுக்கும் நடுவில்நராதமன்என்ற சொல்லினாலேபகவானுடைய அறிவுவர்தவரைத்தான் சொல்லவேணும். உபநிஷத்துக்களின் அர்த்தத்தைஸந்தேஹமில்லாமல் தெரியாவிட்டாலும்,எல்லா லோகங்களிலும் பிரஸித்தமான புராணக்கதைகளாலேபகவானைப் பொதுவாகத் தெரியும். ஆனால் அவனுடைய நல்ல குணங்கள் நன்றாய் தெரியாது. அதனால்அவனிடம் போக வேணுமென்று எண்ணமுண்டாக வில்லை. த்வேஷமுமில்லை.

இருப்பதாகப்பொதுவாகத்தெரிந்தாலும், அவனிடம் போகவே ணும், அவனை நினைக்கவேணும் என்று எண்ணமில்லாதவர்கள். (3) சாஸ்திரங்களைக் கொண்டு தைவத்தையும், அது எல்லா உலகங்களுக்கும் யஜமானன் என்பதையும் அறியும்போது, "அது எப்படியிருக்கக்கூடும்" என்கிற தப்பு யுக்திகளைக் கொண்டு அதைத் தூஷிக்கிறவர்கள். (4) தைவம் எல்லா உலகத்துக்கும் யஜமானன், எல்லாவற்றையு மூண்டு பண்ணுகிறவன் என்று தீர்மானமாய் தெரிந்தும், அவனிடத்தில் த்வேஷம் பண்ணுகிறவர்கள். இவர்களில் முதல் வகுப்பைக் காட்டிலும் இரண்டாவது வகுப்பார்கெட்டவர். இரண்டாவது வகுப்பாரைக் காட்டிலும் மூன்றாவது வகுப்பார் இன்னும் கெட்டவர்கள். நாலாவது வகுப்பார் எல்லாரையும் காட்டிலும் கெட்டவர்கள். 1 [15]

சதுர்விதா பஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதிநோ(அ)ர்ஜுந।
ஆர்தோ ஜிஜ்ஞாஸுரர்தார்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப ॥

ஸுக்ருதிந:-புண்யகர்மாண:, மாம் ஶரணமுபகம்ய மாமேவ பஜந்தே। தே ச ஸுக்ருததாரதம்யேந சதுர்விதா:। ஸுக்ருதகரீயஸ்த்வேந ப்ரதிபத்திவைஶேஷ்யாச்ச உத்தரோத்தராதிகதமா பவந்தி। ஆர்த:-ப்ரதிஷ்டாஹீந: ப்ரஷ்டைஶ்வர்ய: புநஸ்தத்ப்ராப்திகாம:। அர்தார்தீ-அப்ராப்தைஶ்வர்யதயா ஐஶ்வர்யகாம:। தயோர்முகபேதமாத்ரம், ஐஶ்வர்யவிஷயதயா ஐகரூப்யாதேகத்வேநாதிகார:। ஜிஜ்ஞாஸு:-ப்ரக்ருதிவியுக்தாத்மஸ்வரூபாவாப்தீச்சு:। ஜ்ஞாநமேவாஸ்ய ஸ்வரூபமிதி ஜிஜ்ஞாஸுரித்யுக்தம்। ஜ்ஞாநீ ச "இதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம்" இத்யாரப்தநாதிஷ்டபகவ

---

1. அறியாதவன் குற்றம் பண்ணுவதைக் காட்டிலும் அறிந்தவன் குற்றம் பண்ணினால், அவனுக்கு அதிக தண்டனை உண்டு. இந்த நியாயப்படி இவர்களுக்கு நல்ல ஞானமிருப்பதே அவர்களை மிகுந்த பாபிகள் என்று சொல்லுவதற்குக் காரணம். ஏனென்றால் அறிவு த்வேஷத்துக்கு மாத்திரம் உதவுகிறது. நன்றாக பகவானை அறிந்தும் அவனை த்வேஷிப்பதற்குக் காரணம் முன்செய்த பாபத்தின் கொடுமை.

[illegible] | [illegible]
[illegible]
[illegible] ‖ ‖ கசு ‖

புண்ணியம் பண்ணினவர்கள் என்னிடத்தில் பிரபத்தி பண்ணி, அதாவது என்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டு, என்னையே தியானம் பண்ணுகிறார்கள். அவர்களும் புண்ணியத்தின் தாரதம்மியத்தினாலே நாலுவகைப் பட்டவர்கள். (1) பணம் ஏராளமாய் இருந்து, அது போய், மறுபடியும் அது வேணும் என்று ஆசைப்படுகிறவர்கள். (2) மிகவும் ஏழையாகவே யிருந்து, புதிதாகப் பணம் வேணுமென்று ஆசைப்படுகிறவர்கள். இந்த இரண்டு வகுப்பாரும் ஒரே வகுப்புதான். அவர்களுக்கு வேண்டிய பிரயோஜநம் பணம் மாத்திரம் தான். பணம் என்கிற சொல்லாலே பிரும்மப்பட்டம் வரையிலுள்ள ஸம்பத்தைச் சொல்லுகிறது. (3) உடம்பை விட்டு 1 ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை மாத்திரம் பார்த்துக் கொண்டிருக்க வேணுமென்று ஆசைப்படுகிறவர்கள். (4) ஞானிகள். அதாவது—தாங்கள் பகவானுக்காகவே ஏற்பட்டவர்கள் என்று அறிந்து பகவானையே யடையவேணும் என்றும், அவனே எல்லாப் பிரயோஜநங்களுக்கும் மேல்பட்ட பிரயோஜநம் என்றும் எண்ணுகிறவர்கள். அவர்கள் ஜீவாத்மஸ்வரூபத்தை

1. முதலிரண்டு வகுப்பார்கள் வெளியிலிருக்கும் பிரயோஜநங்களை ஆசைப்பட்டவர்கள். ஞானி என்பவர்கள் பகவானை ஆசைப்பட்டவர்கள். ஆகையால் மூன்றாவது வகுப்பார் ஜீவாத்மஸ்வரூபத்தைமாத்திரம் பார்க்கிறவர்கள் என்றே கொள்ளவேணும். ஜீவாத்மஸ்வரூபத்தை மாத்திரம் பார்ப்பது விஷயங்களைக்காட்டிலும் மிகுந்த ஆனந்தத்தை கொடுக்கக்கூடியது. அதுவும் ஜீவன் அடையவேண்டிய வஸ்து. பணம் வேண்டுகிறவர்களைஒரு வகுப்பாக சொன்னபடியாலே, மூன்றே வகுப்பு ஏற்படுகிறது. இந்த மூன்று வகுப்பைப்பற்றியே எட்டாவது அத்தியாயத்தில் பேசப்போகிறார்.

ஜீவாத்மஸ்வரூபத்தை மாத்திரம் பார்ப்பதற்கு ஒரு இடம் ஏற்பட்டிருக்கிறது, சிலர் அதற்கு வேண்டிய வேலைகளைச்செய்து, அந்த இடத்திற்குப் போய், கொஞ்சகாலம் ஜீவாத்மஸ்வரூபத்தைப் பார்த்து மறுபடியும் பிறக்கிறார்கள். அவர்களன்று இந்த சுலோகத்தில் சொல்லப்பட்டவர்கள். வேறுசிலர் மோக்ஷத்தை அடைவதற்காக, மோக்ஷத்

மாத்திரம் பார்ப்பதில் நிற்காதவர்கள். இவர்களில் முதல் இரண்டாவது வகுப்பாரைக் காட்டிலும் மூன்றாவது வகுப்பார் உயர்ந்தவர். நாலாவது வகுப்பார் எல்லாரைக்காட்டிலு முயர்ந்தவர்] ஏனென்றால், பிரபத்திக்கு வேண்டிய நம்பிக்கை முதலானவைகள் எல்லாருக்கும் இருந்தாலும், அவர்கள் ஆசைப்படும் பலத்தின் பேதத்தால் பிரபத்திகளுக்கு பேதமும், அவைகளைச் செய்தவர்களின் பேதமும் ஏற்படுகிறது. [16]

தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகபக்திர் விஶிஷ்யதே।
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த²மஹம் ஸ ச மம ப்ரிய:॥

தேஷாம் ஜ்ஞாநீ விஶிஷ்யதே, குத: ? நித்யயுக்தத்வாத் ஏகபக்தித்வாச்ச। தஸ்ய ஹி மதேகப்ராப்யஸ்ய அயமேவ யோகோ நித்ய:॥ இதரயோஸ்து யாவத்ஸ்வாபிலஷிதப்ராப்தி மயா யோக:। ததா ஜ்ஞாநிநோ மய்யேகஸ்மிந்நேவ பக்தி:। இதரயோஸ்து ஸ்வாபில

---

ஷைக்கொடுக்கக்கூடிய வேலைகளை செய்கிறார்கள். அவர்கள் சிலகாரணத்தால் முன் சொன்ன இடத்துக்குப்போய்,கொஞ்சகாலம் ஜீவாத்மஸ்வரூபத்தை மாத்திரம் பார்த்து, பிறகு ஸம்ஸாரத்துக்குத்திரும்பாமல் மோக்ஷத்தை அடைகிறார்கள். அவர்கள்தான் இங்கே சொல்லப்பட்டவர்கள். இவர்களும் ஞானிகளும் மோக்ஷத்தை அடைகிறபடியால், இவர்களை இரண்டுவகுப்பாகப் பிரிக்கலாமோ வென்றால்,பதில்—ஒருவர் கொஞ்சகாலம் பகவானை அனுபவிக்காமல் தன்னைமாத்திரம் பார்த்துக் துக் கொண்டிருக்கிறார். இந்த இளப்பத்தைப்பற்றி இவர்களைத் தனியாக பிரித்தது. இவர்கள் சாஸ்திரத்தினால் ஜீவஸ்வரூபத்தை அறிந்து கர்மயோகத்தையும் ஞானயோகத்தையும் செய்து, ஜீவஸ்வரூபத்தை உள்ளபடி பார்த்தார்கள். அதை அனுபவிப்பதில் ஆசை உண்டாயிற்று. அதினால் நான் பிரும்மத்துக்கு உடம்பு என்று தன்னை முக்கியமாகவைத்துத்தியானம்செய்தார்கள்.பிரும்மத்தைச் சேர்த்துத்தியானம்பண்ணினதால், பகவான்ஸந்தோஷத்தைஅடைந்துஅவர்களுக்குமோக்ஷத்தைக் கொடுக்கிறான். தன்ஸ்வரூபத்தைஅனுபவிப்பதில் ஆசையினாலே “நான்” ‘நான்’என்று தன்னை முக்கியமாகத்தியானம் செய்ததற்குதண்டனையாகவும்,தன்னைஅனுபவிப்பதில்ஆவலிருந்ததால்அதைகொடுப்பதற்காகவும் கைவல்லியத்தில் கொஞ்சம்காலம் வைத்து, பிறகு மோக்ஷத்தை கொடுக்கிறான்.

𑌷𑌿𑌤𑍇 𑌤𑌤𑍍𑌸𑌾𑌧𑌨𑌤𑍍𑌵𑍇𑌨 𑌮𑌯𑌿 𑌚। 𑌅𑌤𑌸𑍍𑌸 𑌏𑌵 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇। 𑌕𑌿𑌂𑌚
𑌪𑍍𑌰𑌿𑌯𑍋 𑌹𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑍋𑌽𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌮𑌹𑌮𑍍-𑌅𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌶𑌬𑍍𑌦𑍋𑌽𑌤𑌿
𑌶𑌯𑌵𑌚𑌨𑌃। 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑍋𑌽𑌹𑌂 𑌯𑌥𑌾 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃, 𑌤𑌥𑌾𑌽𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵
𑌜𑍍𑌞𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌶𑌕𑍍𑌤𑌿𑌨𑌾𑌪𑍍𑌯𑌭𑌿𑌧𑌾𑌤𑍁𑌂 𑌨 𑌶𑌕𑍍𑌯𑌤 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃, 𑌪𑍍𑌰𑌿
𑌯𑌤𑍍𑌵𑌸𑍍𑌯𑍇𑌯𑌤𑍍𑌤𑌾𑌰𑌹𑌿𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍। 𑌯𑌥𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌾𑌮𑌗𑍍𑌰𑍇𑌸𑌰𑌸𑍍𑌯
𑌪𑍍𑌰𑌹𑍍𑌲𑌾𑌦𑌸𑍍𑌯 "𑌸𑌤𑍍𑌵𑌾𑌸𑌕𑍍𑌤𑌮𑌤𑌿𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑍇 𑌦𑌶𑍍𑌯𑌮𑌾𑌨𑍋 𑌮𑌹𑍋𑌰
𑌗𑍈𑌃। 𑌨 𑌵𑌿𑌵𑍇𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑍋 𑌗𑌾𑌤𑍍𑌰𑌂 𑌤𑌤𑍍𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯𑌾𑌹𑍍𑌲𑌾𑌦𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌃"
𑌇𑌤𑌿। 𑌸𑍋𑌽𑌪𑌿 𑌤𑌥𑍈𑌵 𑌮𑌮 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 ॥ ॥ ௧௭ ॥

இந்த வகுப்புகளுக்குள் ஞானீ என்பவன் மிகவும் உயர்ந்தவன். ஏனென்றால், என்னை அறிந்தது முதல் ஒருநாளும் அவன் என்னை விடவில்லை. என்னைக்கொஞ்சகாலம் தியானம் செய்தான். பிறகு என்னையே அடைந்தான். மற்ற இரண்டு வகுப்பார்களும் பணம் முதலானவை கைக்கு வந்தவுடன், என்னை விட்டு விடுகிறார்கள். அவர்களுக்குப் பணம் முதலானவைகளிலும், அதைக் கொடுப்பதாலே என்னிடத்திலும் பிரீதி இருக்கிறது. அதுவும்நான் கொடுக்கும்வரையில். ஞானிக்குப் பிரீதிமுழுமையும்என்னிடத்தில் தான் இருக்கிறது. அவனுக்கு என்னைத்தவிர வேறுபிரயோஜநத்தில் ஆசையில்லை. எல்லாம் தெரிந்த என்னாலும் ஞானிக்கு என்னிடத்திலிருக்கிற பிரீதியை இவ்வளவுஎன்று சொல்லமுடியாது. ஏனென்றால், அந்தப் பிரீதிக்கு அளவில்லை. அதைப் பார்க்கும்போது எனக்கு அவனிடத்தில்இருக்கும் பிரீதி மிகவும் கொஞ்சம் என்று தோன்றுகிறது. ஞானிகளுக்குள் மிகவுமுயர்ந்த[1]பிரஹ்லாதன் என்னைநினைத்து ஸந்தோஷப்பட்டுக் கொண்டிருந்ததாலே, பெரிய பாம்பு கடித்ததைக்கூட அறியவி

1. பிறந்ததுமுதலே உயர்ந்தஞானமுடையவன். பகவான் எல்லா லோகத்துக்கும் ராஜா அல்லஎன்று தன் தகப்பன் சொன்னதையும் கேட்காதவன். ஆயிரம் வழியாக பயமுறுத்தியும் மனது கலங்காதவன். கொடுமையான துக்கத்திற்குக் காரணம் இருந்தபோதிலும், துக்கத்தை அநுபவிக்கவில்லை. இதற்குக் காரணம் பகவானிடத்தில் இருந்த எல்லையில்லாத ப்ரீதி.

ல்லையாம். ஞானியிடத்தில் எனக்கும் அப்படியே 1 அளவில்லாத ப்ரீதி இருக்கிறது. [17]

உதாராஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம் ।
ஆஸ்தித: ஸ ஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் கதிம் ॥௧௮॥

ஸர்வே ஏதே மாமேவாஶ்ரயந்தீதி உதாரா:-வதாந்யா:, யே மத்தோ யத்கிஞ்சித் அபி க்ருஹ்ணந்தி தே ஹி மம ஸர்வஸ்வதாயிந:। ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்-ததாயத்தாத்மதாரணோ-ஹமிதி மந்யே। கஸ்மாதேவம்-யஸ்மாதயம் மயா விநா ஆத்மதாரணாஸம்பாவநயா மாமேவ அநுத்தமம் ப்ராப்யம் ஆஸ்தித:। அதஸ்தேந விநா மமாப்யாத்மதாரணம் ந ஸம்பவதி, ததோ மமாத்மா ஹி ஸ: ॥ ॥௧௮॥

இவர்கள் எல்லாரும் எனக்கு 2 தங்கள் ஸொத்து முழுமையும் மிகவும் ப்ரீதியுடன் கொடுக்கிறவர்கள். ஏனென்றால் என்னைத் தியானம் செய்து, என்னிடமிருந்து ஏதாவது ஒன்றை வாங்கிக் கொள்கிறவர்களை எனக்கு எல்லாவற்றையும் கொடுக்கிறவர்களாக நினைக்கிறேன். ஆனால் ஞானிதான் எனக்கு ஆத்மா. நான் அவனுக்கு உடம்பு என்று என் எண்ணம். அதாவது—ஆத்மாவாலே தான் உடம்பு நிற்கிறது. அப்படியே அவனாலேதான் நான் இருக்கிறேன். அவனால் என்னை விட்டுப்பிரிந்து அரைவினாடி கூடத் தாங்கமுடியாது. ஆதலால் என்னையே எல்லாவற்றைக் காட்டிலும் உயர்ந்த ப்ரயோஜநமாக நினைத்திருக்கிறான். நானும்

1. ஞானீ பகவானிடத்தில் அவன் ஸ்வரூபத்தையும் அவனுடைய கணக்கில்லாத குணங்களையும், ஸொத்துக்களையும் பார்த்து, ப்ரீதி பண்ணுகிறான். பகவானுக்கோவென்றால் அவ்வளவு ப்ரீதியும் ஞானி ஒருவனிடத்திலேயெ உண்டாகிறது.

2. என்னை அடைந்தவர்களுக்கு எல்லாபலன்களையும் கொடுப்பது (பரமௌதார்யம்) என்கிற ஒரு ஸங்கதியைத்தான் நான் எனக்கு எல்லா ஸொத்தாகவும் நினைத்திருக்கிறேன். அந்த ஸொத்து என்னிடமிருந்து வாஙகுகிறவர்கள் இல்லாமல் போனால், எனக்கு எப்படிக் கிடைக்கும் ஆகையால் என்னிடமிருந்து வாங்கிக் கொள்ளுகிறவர்கள் எனக்குஎல்லாஸொத்தையும் கொடுக்கிறவர்கள்.

அவன் இல்லாமல் போனால் அரைநிமிஷங்கூட தாங்க மாட்டேன். ஆகையால் அவன் எனக்கு ஆத்மா. [18]

बहूनां जन्मनामन्ते ज्ञानवान्मां प्रपद्यते ।
वासुदेवस्सर्वमिति स महात्मा सुदुर्लभः ॥ १९ ॥

न बहूनां संख्यासंख्यातानां पुण्यजन्मनां फलमि-दम् - यन्मच्छेषैकरसतायाथात्म्यज्ञानपूर्वकं म-त्प्रपदनम् । अपि तु बहूनां जन्मनां-पुण्यजन्मनाम-न्ते- अवसाने वासुदेवशेषैकरसोऽहं त-दायत्तस्वरूपस्थितिप्रवृत्तिश्च, स च सर्वेभ्यः कल्या-णगुणेभ्यः परतर इति ज्ञानवान् भूत्वा, वासुदे-व एव मम परं प्राप्यं-प्रापकं चान्यदपि यन्मनोर-थवर्ति-सर्वं च स एवेति मां प्रपद्यते-मामुपास्ते-स महात्मा-महामनाः सुदुर्लभः-दुर्लभतरो लोके।

वासुदेवस्सर्वमित्यस्यायमर्थः, “प्रियो हि ज्ञानिनोऽत्यर्थमहम्” “आस्थितः स हि युक्तात्मा मामेवा-नुत्तमां गति”मिति प्रकृतम् । ज्ञानवान् स्वायत्तलक्ष-णस्य । अशेषस्य वशेऽस्य ज्ञानिनः । “भूमिरापः” इत्यारभ्य “अहंकार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा । अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे परां जीवभूता” मिति हि चेतनाचेतनस्य प्रकृतिद्वयस्य परमपुरु-षशेषैकरसतोक्ता ॥ “अहं कृत्स्नस्य जगतः प्र-भवः प्रलयस्तथा । मत्तः परतरं नान्यत्किंचिदस्ति धन-ञ्जये” त्यारभ्य “ये चैव सात्त्विका भावा राजसास्ता-मसाश्च ये । मत्त एवेति तान्विद्धि न त्वहं तेषु ते मयी” ति प्रकृतिद्वयस्य कार्यकारणोभयावस्थस्य पर-मपुरुषायत्तस्वरूपस्थितिप्रवृत्तित्वं परमपुरुष-स्य च सर्वैः प्रकारैरवस्थितस्य परतरत्वं चोक्तम् । [illegible] ज्ञानीत्युच्यते ॥ ॥ १९ ॥

ஜீவன் என்னுடைய உபயோகத்திற்காகவே தான் ஏற்பட்டவன் என்று தன்னுடைய ஸ்வரூபத்தைஉள்ளபடிஅறிந்து,என்னை அடைந்து, என் வேலைகளைத்தான் செய்ய வேணுமென்று எண்ணி, என்னை அடைவதற்கு உதவியான என் தியானத்தை பண்ணுகிறது என்பதற்கு சில ஜந்மங்களில் மாத்திரம் செய்த புண்ணியங்கள் போதாது.1 அநேக ஜந்மங்களில்பண்ணின புண்ணியங்களாலேஅந்தஜந்மங்களின் கடைசியில் "நான்பகவானுக்குவேலை செய்வதற்காகவே ஏற்பட்டவன்.என்ஸ்வரூபமும்,இருப்பும்,வேலைகளும் எல்லாம் அவன் அதீநம். அவனிடத்தில் கணக்கில்லாத நல்ல குணங்கள் கூட்டம் கூட்டமாக இருப்பதாலே, அவனே மிகவும் உயர்ந்தவன்'' என்கிற 2 எண்ணம் உண்டாகி, "வாஸுதேவன்தான் நான் அடைய வேண்டிய வஸ்து, அவன்தான் என்னைத் தன்னிடம் அழைத்துக் கொண்டு போகக்கூடியவன். அவன்தான் இன்னும் எனக்கு வேண்டிய எல்லா வஸ்துக்களும்" என்று எண்ணி, என்னைத்தியானம் செய்கிறான். இப்படிப்பட்ட பெரிய மனதை உடையவன் உலகத்தில் அகப்படுவது மிகவும் அரிது.

1. சுலோகத்தில் அநேகஜந்மங்கள் என்று பொதுவாகச்சொன்ன போதிலும், நல்ல அநேகஜன்மங்கள் என்றுதான் பொருள். ஜந்மங்கள் அதிகமாயிருப்பதாலே ஞானம் வந்துவிடாது. அப்படி வருவதாயிருந்தால், எல்லாரும் பிரயாஸமில்லாமல், ஞானியாக ஆய்விடுவார்களே.

2. ஒருவன் இங்கே சொல்லுகிறபடி ஞானியாவதற்கு இடஞ்சல் அவன் முன்செய்த பாபம். இந்தப் பாபமானது அனேக ஜந்மங்களில் செய்த புண்ணியங்களாலே போக வேண்டும். இங்கு ஓர் கேள்வி— பாபம் என்பது அதின் பலனை அனுபவிப்பதாலும், அதற்கு ஏற்பட்ட பிராயச்சித்தங்களாலும் போகுமே ஒழிய, புண்ணியத்தினால் எப்படி போகும்—என்று. பதில்—இங்கு புண்ணியம் என்பது பணம் பிள்ளை பெண்டாட்டி முதலானபலன்களுக்காக பகவானுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணக் கூடிய சிலவேலைகள். இந்த வேலைகளைச் செய்தவர்களுக்கு பகவான் அந்தவேலைகளால்ஸந்தோஷத்தை அடைந்து,அந்தந்த பலன்களைக் கொடுப்பதுமன்றி,மிகுந்த தயையினால் தன்னுடையஉண்மையானஅறிவுக்கு இடஞ்சலான முன்னேசெய்தபாபங்களையும் போக்குகிறான்.இதைப் பற்றித்தான் புண்ணியங்களால் பாபம் போகுமென்று சொன்னது. இதற்கு வெகு காலம் ஆகும். அதனாலேதான் வெகு ஜன்மங்களின் கடைசியுமென்று சொல்லி யிருக்கிறது.

“வாஸுதேவன்தான் எல்லாம்” என்று சுலோகத்திலிருப்பதற்குக் கீழ் சொன்னதுதான் பொருள். எல்லா உலகமும் வாஸுதேவன்தான், அதாவது—அவனைத்தவிர வேறு வஸ்து கிடையாது—என்று பொருள் அல்ல. ஏனென்றால் முன் இரண்டு சுலோகங்களில் “ஞானிக்கு என்னிடத்தில் அளவில்லாத ப்ரீதி இருக்கிறதெ”ன்றும், “அவன் என்னைத்தான் மிகவும் உயர்ந்த பிரயோஜநமாக நினைத்துக் கொண்டிருக்கிறான்” என்றும் சொல்லப்பட்டது. இந்த சுலோகத்தில் “ஜ்ஞாநவான்” (ஞானமுடையவன்) என்று சொன்னது முன் சுலோகங்களில் சொன்ன ஞானியைத்தான். மேலும், இந்த அத்தியாயம் 4-வது சுலோகம் முதல் 12-வது சுலோகம் வரையில் அறிவில்லாத பிரகிருதியும், அறிவுள்ள ஜீவன்களும் பகவானுடைய ஸொத்துக்கள், பகவானுக்காகவே ஏற்பட்டவைகள் என்றும், இந்த இரண்டு பிரகிருதியினுடையவும், அவைகளால் உண்டு பண்ணப்பட்ட உலகத்தினுடையவும் ஸ்வரூபமும், இருப்பும், வேலைகளும் பகவானுக்கு அதீநம் என்றும், அவன்தான் எல்லாவிதத்தாலும் உயர்ந்தவன் என்றும் சொல்லப்பட்டது. ஆகையாலே பகவானும் உலகமும் ஒன்றன்று.

[illegible] ‖ 20 ‖

அவ—கீழ்ச்சொன்ன ஞானி அகப்படுவது அரிது என்பதற்கு காரணம் சொல்லுகிறார்.

உலகத்திலிருக்கும் எல்லாப்பிராணிகளும் நெடுநாளாய் வந்த பாபவாஸனையோடு சேர்ந்திருக்கிறார்கள். ஒருவனாவது அதை விட்டவனில்லை. அந்த வாஸனையினால் எல்லாருக்கும் என்னைத்தவிர மற்றஸங்கதிகளிலேயே ஆசையுண்டாகிறது. அந்த ஆசை வலிமையுள்ளதாயிருப்பதாலே, என் ஸ்வரூபத்தைப் பற்றி அவர்களால் அறிய முடியவில்லை. ஆசைப்பட்ட அந்தந்த வஸ்துக்கள் கிடைப்பதற்காக, என்னைக்காட்டிலும் வேறான இந்திரன்முதலான தேவர்களை, என்னைச் சேர்க்காமல், சாஸ்திரங்களில் சொலலியபடி, அந்தந்த தேவதைகளுக்கு மாத்திரம் ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதற்காக வேலைகளைச்செய்து, அவர்களையே ஸந்தோஷப்படுத்துகிறார்கள். ஆகையால் என்னிடத்தில் ஆசையுள்ளவன் மிகவும் அரிது. (20)

யோ யோ யாம் யாம் தநும் ஭க்த: ஶ்ரத்தயார்சிதுமிச்சதி ।
தஸ்ய தஸ்யாசலாம் ஶ்ரத்தாம் தாமேவ விதயாம்யஹம் ॥௨௧॥

தா அபி தேவதா மதீயாஸ் தநவ: "ய ஆதித்யே திஷ்டந் யஸ்யாதித்ய: ஶரீரம்" இத்யாதிஶ்ருதிபி: அப்ரதிபந்நா அபி மதீயதநுத்வேந யோ யோ யாம் யாம் மதீயாம் தநும் ஭க்த: ஶ்ரத்தயார்சிதுமிச்சதி, தஸ்ய தஸ்யாஜாநதோऽபி மதீயதநுவிஷயேயம் ஶ்ரத்தேதி அநுஸந்தாய தாமேவாசலாம் நிர்விக்நாம் விதயாம்யஹம் ।

இப்படி அவர்களால் ஸந்தோஷப்படுத்தப்பட்ட இந்திரன் முதலான தேவதைகள் என்னுடைய உடம்புகள் என்று வேதம் சொல்லுகிறது. இந்த ஸங்கதியை அவர்கள் அறியாவிட்டாலும், எவனெவன் எந்த எந்த என்னுடைய உடம்பான அந்தந்த தேவதைகளைப் பிரீதியுடனும் சிரத்தையுடனும் பூஜிப்பதற்கு ஆசைப்படுகிறானோ, அவனுடைய அந்தப்பிரீதியையும் சிரத்தையையும் என் உடம்பைப்பற்றினவையென்று நினைத்து, நானே அவைகளை இடைஞ்சலில்லாமலும், நிலையாகவும் செய்கிறேன். (21)

ஸ தயா ஶ்ரத்தயா யுக்தஸ்தஸ்யாராதநமீஹதே ।
லபதே ச தத: காமாந் மயைவ விஹிதாந் ஹி தாந் ॥௨௨॥

ஸ தயா நிவிஷ்டயா ஶ்ரத்தயா யுக்தஸ்தஸ்ய இந்த்ராதே: ஆராதநம் ப்ரதி ஸமீஹதே | தத: தேநாராதிதாத் இந்த்ராதிதேவதாராதநாத், தாநேவ ஹி ஸ்வாபிமதாந் காமாந் மயைவ விஹிதாந் லபதே | யத்யப்யாராதநகாலே இந்த்ராதயோ மதீயாஸ்தநவ:, ததவஸ்தாநம் ச மதாராதநமிதி ந ஜாநாதி, ததாபி தஸ்ய வஸ்துதோ மதாராதநரூபாராதநகாலே ஹ்யபிமதம் தத் மயைவ விஹிதாநி || ||௨௨||

அவ—என்னைத்தவிர வேறுபலன்களில் ஆசைப்பட்டு, வேறு தேவதையினிடம் ஒருவன் போனாலும், அந்த தேவதையைப்பூஜிப்பது ஸரியாய் நடக்காமல், பலன் கிடைக்காவிட்டால், சாஸ்திரத்தில் கூடாது என்று சொல்லப்பட்டு மிகுந்த துக்கத்தைக் கொடுக்கக்கூடிய பாபங்களைச்செய்து, கெட்டுப்போய் விடுவார்களே என்று பயந்து, மிகுந்த கருணையாலே நானே அந்த தேவதைகளைப்பூஜிப்பதற்கு சிரத்தையைக் கொடுத்து, அதின் இடஞ்சலைத்தீர்த்து, ஸரியாய் நடத்தி, அந்தந்த பலன்களையும் கொடுக்கிறேன் என்று சொல்லுகிறார்—

அவன் தடங்கலில்லாத அந்த சிரத்தையோடு கூடினவனாய் என்னுடைய உடம்புகளான அந்தந்த தேவதைகளைப்பூஜிக்கிறான். அதினால் அவன் வேண்டின பலனையும் அடைகிறான். அதை நானே கொடுக்கிறேன். பூஜை செய்யுங்காலத்தில் பூஜை செய்யப்பட்டவர்கள் என் உடம்புகள் என்றும், ஆகையால் அவர்களைப் பூஜைசெய்வது என்னுடைய பூஜையென்றும், அவனுக்குத் தெரியாத போதிலும், உண்மையில் அது என் பூஜையானதால், நான் தான் அவர்களுக்கு பலனைக் கொடுக்கிறேன். (22)

அந்தவத்து ஃபலம் தேஷாம் தத்பவத்யல்பமேதஸாம் |
தேவாந் தேவயஜோ யாந்தி மத்பக்தா யாந்தி மாமபி || ||௨௩||

தேஷாமல்பமேதஸாம் அல்பபுத்தீநாமிந்த்ராதிமாத்ரயாஜிநாம் ததாராதநபலமல்பமந்தவச்ச பவதி| குத:- தேவாந் தேவயஜோ யாந்தி- யத இந்த்ராதீந் தேவாந் தத்யாஜிநோ யாந்தி- இந்த்ராதயோ ஹி பரிச்சிந்நபோகா: பரிமிதகாலவர்திநஶ்ச|

தத்தத்தேவதாஸாயுஜ்யம் ப்ராப்ய தைரேவ ஸஹ ப்ரச்யவந்தே ॥ மத்பக்தா அபி தேஷாமேவ கர்மணாம் மதாராதநதாம் ஜ்ஞாத்வா பரிமிதபலஸங்கம் த்யக்த்வா, மத்ப்ரீணநைகப்ரயோஜநா: மாம் ப்ராப்நுவந்தி, ந ச புநர் நிவர்த்தந்தே । "மாமுபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வித்யதே" இதி ஹி வக்ஷ்யதே ॥

*அவ*—இந்திரன் முதலான தேவதைகளைமாத்திரம் பூஜை செய்கிறவர்களுக்கு தேவரீரே பலன் கொடுத்தால், அவர்களைக் காட்டிலும் தேவரீரையே பூஜிக்கிறவர்களுக்கு என்ன விசேஷம் என்றால், சொல்லுகிறார்—

ஆனால், இந்திரன் முதலானவர்களை மாத்திரம் பூஜை செய்கிறவர்கள் கட்டாயம் அறியவேண்டியதான—அவர்கள் என் உடம்புகள் என்பதை 1 தெரிந்து கொள்ளாதபடியால், அந்தப் பூஜையால் வரப்பட்டப் பிரயோஜநம் கொஞ்சமாயிருக்கும். சீக்கிரமும் போய் விடும். ஏனென்றால், இந்திரன் முதலானவர்களை மாத்திரம் பூஜிக்கிறவர்கள் அவர்கள் இருக்குமிடம் போகிறார்கள். அந்த தேவர்கள் அநுபவிக்கும் ஸுகம் கொஞ்சம். அவர்கள் கொஞ்சகாலம் தானிருப்பார்கள். அவர்கள் இருக்கிறவரைக்கும் இருந்து அவர்களுடன் கூட அவர்களைப்போல் கொஞ்சம் ஸுகத்தை அனுபவித்து, அவர்கள் போகும்போது போய்விடுகிறார்கள். என்னிடத்தில் பிரீதியுள்ளவர்களாய் அந்த கர்மங்கள்தானே எனக்குத் திருப்தியுண்டுபண்ணுகிறது என்று அறிந்து, அவைகளுக்கு ஏற்பட்ட ஸ்வர்க்கம் முதலான கொஞ்சமான பிரயோஜநங்களை

---

1. சுலோகத்தில் "அல்பமேதஸாம்" என்று சொல்லி யிருக்கிறது. அதின் பொருள்—அல்பமான இந்திரன் முதலானவர் களிடத்திலும், அவர்கள் கொடுக்கும் பலன்களிலும் மேதை-(எண்ணம்) உள்ளவர்கள்—என்று. தேவர்களிடத்தில் அறிவு (எண்ணம்) என்றால், அவர்களே பலன் கொடுக்கிறார்கள் என்கிற அறிவும், அவர்களுக்கு பகவான் ஆத்மாவாயிருந்து பலனைக் கொடுக்கிறான் என்கிற அறிவில்லாமையும். அவர்கள் கொடுக்கும் பலன்களில் அறிவு (எண்ணம்) என்றால், அவைகளை ஆசைப்படுவதும், அவைகளுக்கு மேற்பட்ட நிலையான ஸுகத்தை அறியாமையும்.

விரும்பாமல், என் ஸந்தோஷத்தை மாத்திரம் ஆசைப்பட்டு, அந்த கர்மங்களைச் செய்கிறவர்கள் என்னிடம் வந்து சேருகிறார்கள். என்னுடையஇருப்பிடத்திற்கு அழிவில்லாமையால்,அவர்கள்என்னிடம் நிலையாயிருப்பார்கள். திரும்பி வருகிறதில்லை. இந்த ஸங்கதியை மேலே எட்டாவதுஅத்தியாயத்தில் 16-வது சுலோகத்தில் சொல்லப்போகிறது. ( 23 )

[illegible]

𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌪𑌨𑍍𑌨𑌂 𑌮𑌨𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌮𑌾𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑌃 ।
𑌪𑌰𑌂 𑌭𑌾𑌵𑌮𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑍋 𑌮𑌮𑌾𑌵𑍍𑌯𑌯𑌮𑌨𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ॥ ॥௨௪॥

[illegible] ॥௨௪॥

அவ—எல்லோரும் என்னிடம் வரவேண்டுமென்றுதான் நான் மனிதன் முதலான உருவத்துடன் வந்திருக்கிறேன். இப்படிச்செய்தும், சிலருக்கு அது 1 உபயோகப்படவில்லை என்று சொல்லுகிறார்.

1. ஜனங்கள் இந்திரன் முதலான தேவதைகளைப் பூஜிப்பதனால் உண்டான வாஸனையினால், உம்மைப் பற்றித் தெரிந்து கொள்ளவில்லை. தேவரீர் நேராக வராதிருக்கும்போது அந்த வாஸனை இப்படி இடைஞ்சல் பண்ணலாம். தேவரீரே மனித உருவமாக வந்து எல்லாருடைய கண்களில் படும்போது, தேவரீரை விட்டு விட்டு இந்திரன் முதலானவர்களிடம் ஏன்போகிறார்கள்என்றால், அதற்குப் பதில்இந்த சுலோகத்தில் சொல்லுகிறது.

சாஸ்திரத்தில் சொல்லிய 1 எல்லா கர்மங்களும் என்னை ஸந்தோஷப்படுத்துவதற்காகத்தான் ஏற்பட்டிருக்கின்றன. நான் எல்லா லோகங்களுக்கும் யஜமானன். என்னையும் என்னுடைய ஸ்வபாவங்களையும் இவ்வளவென்று நினைக்கவும் சொல்லவும் முடியாது. இப்படி உயர்ந்தவனாயிருந்தாலும், மிகுந்த தயையினாலேயும் எல்லோரும் என்னுடைய ஜனங்களாகையாலே—அவர்கள் எப்படி இருந்தாலும் இருக்கட்டும், நான் அவர்களிடம் போக வேண்டியது என்கிற பிரீதியினாலேயும், எல்லோரும் என்னிடம் வருவதற்காகவும் தைவத்தன்மையை விடாமலே நான் வஸுதேவருக்குப் பிள்ளையாக வந்திருக்கிறேன். இந்த ஸங்கதியை அறியாமல், உலகத்தில் ராஜாக்களுக்கு பிள்ளை பிறக்கிறதுபோல் ஏதோ ஒரு கர்மத்தாலே இப்போது வந்து பிறந்திருக்கிறேன் என்று 2 முட்டாள்கள் நினைக்கிறார்கள் அதனாலே என்னிடம் வருகிறதில்லை. என்னைப்பூஜை செய்வதுமில்லை. (24)

அத ஸ்வஸ்ய ந ப்ரகாஶ்யத இத்யாஹ —

நாஹம் ப்ரகாஶ: ஸர்வஸ்ய யோகமாயாஸமாவ்ருத: |
மூடோऽயம் நாபிஜாநாதி லோகோ மாமஜமவ்யயம் ||௨௫||

க்ஷேத்ரஜ்ஞஸாதாரணமநுஷ்யத்வாதிஸம்ஸ்தாநயோகமாயயா ஸமாவ்ருதோऽஹம் ந ஸர்வஸ்ய ப்ரகாஶ: | மயி மநுஷ்யத்வாதிஸம்ஸ்தாநதர்ஶநமாத்ரேண மூடோऽயம் லோகோ மாம் அதிவாய்வாதிப்ரகாஶநிரதிஶயஶீலதேஜ

---

1. சுலோகத்தில் "பரம் பாவம்" (உயர்ந்த ஸ்வபாவம்) என்ற சொற்கள் இருக்கின்றன. அந்த ஸ்வபாவமாவது—எல்லையில்லாத உயர்த்தியும், எவனும் கிட்ட வரும்படி ஸுலபனாயிருக்கையும். இந்த உயர்த்தியானது சாஸ்திரத்தில்...சொல்லவும் முடியாது" என்கிற வரையில் சொல்லப்பட்டது. கிட்ட வரும்படியான தன்மையானது "மிகுந்த...பிரீதியினாலேயும்" என்கிற வரையில் சொல்லப்பட்டது.

2. "முட்டாள்" என்கிற சொல்லாலே பகவானுடைய அவதாரத்தின் உண்மையைப் பற்றிக் கேட்பதும், நினைப்பதுமில்லையென்றும், மற்றவர்களைக் காட்டிலும் பகவான் வேறு என்று தெரிந்து கொள்ளக்கூடிய அடையாளங்களைக் கண்ணாலே பார்க்கும்போதும் அதை கண்டுபிடிக்க சக்தியில்லையென்றும் சொல்லப்பட்டது.

ஸர்வோ(அ)யம் லோகோ மூட: அஜமவ்யயம் நிகிலஜகதேககாரணம்
ஸர்வேஶ்வரம் மாம் ஸர்வஸமாஶ்ரயணீயத்வாய மநுஷ்யத்வஸம்
ஸ்தாநமாஸ்திதம் நாபிஜாநாதி ॥ ॥௨௫॥

அவ—உம்முடைய இந்தஸ்வபாவத்தைத்தேவரீர் ஏன்ஜனங்களுக்குக் காண்பிக்கிறதில்லை. அதாவது—எல்லாரும் நம்மிடம் வரவேண்டுமென்றுதானே தேவரீர் அவதாரம் செய்கிறீர். தேவரீரோ ஒரு தடங்கலில்லாமல் நினைத்தபடி முடிக்கிறவர் அல்லவா உம்முடைய எண்ணம் ஏன் நிறைவேறுகிறதில்லை-என்றால்,சொல்லுகிறார்.—

1நான் ஜீவன்களுக்கு மாத்திரம் ஏற்பட்டிருக்கிற மனிதன். முதலான உருவமாய் வந்திருப்பதால், எல்லாருக்கும் நான் தை

1. சுலோகத்தில் "யோகமாயா" என்றசொல் இருக்கிறது. மாயா என்கிற சொல்லுக்கு ஆச்சரியமான வேலையைச் செய்கிறவஸ்து என்று பொருள். அந்தவஸ்து இங்கே எது என்றால், யோகம்என்கிற சொல்லாலே சொல்லப்பட்ட—மனிதஉருவமும், மனிதன்போல் அலங்காரமும்,பேச்சும். இது ஆச்சரியமான வேலையைச் செய்கிறது. அந்தவேலையாவது—கோவர்த்தனமலையை ஒரு சுண்டுவிரல் நுனியாலே ஏழுநாள் தூக்கியும், சிரமமில்லாமல் இருந்தார் என்பதைத்தவிர, தைவம் என்று தீர்மானிப்பதற்கு வேறு அடையாளம் வேணுமா? அந்த அடையாளத்தையும் தீர்மானிக்க வொட்டாதே பண்ணுகிறதே இந்த மனிதஉருவம். இதுதான் இது செய்கிற ஆச்சரியமான வேலை. மேலும் இது சிலர்க்கு மறைக்கிறது. சிலர்க்கு மறைக்கிறதில்லை. இதுவும் ஒரு ஆச்சரியம். மாயா என்ற சொல்லிற்கு 4—வது அத்தியாயம் 6-வது சுலோகத்தில் எண்ணம் என்றும், 7—வது அத்தியாயம்—17—வது சுலோகத்தில் முக்குணமுள்ள பிரகிருதி என்றும் பொருள் சொல்லப்பட்டது. இந்த அர்த்தங்கள் இங்கே பொருந்தாது. ஏனென்றால், பிரகிருதியால் மறைக்கப்பட்டிருப்பது பகவானுடைய எல்லா இருப்புக்கும் பொதுவானது. அவதாரத்தில் மாத்திரமுள்ளதை இங்கே சொல்லவேண்டியது. அது கீழேசொன்ன மனித உருவம் முதலானவை. எண்ணமும் பகவானுக்கு எப்போது முள்ளது. யோகம் என்கிற சொல்லானது சேர்க்கையைச் சொல்லுகிறது. எதின்சேர்க்கை யென்றால், மனித உருவத்தின் சேர்க்கை என்று இந்த இடத்தால் ஏற்படுகிறது,

வத்தன்மையுள்ளவன் என்று தெரியவில்லை. 1 முட்டாள் ஜனங்கள் வாயு இந்திரன் முதலானவர்களாலே செய்யமுடியாத வேலைகளை நான் செய்வதையும், ஸூரியனையும் அக்கினியையும் காட்டிலும் அதிக பளபளப்பாய் நான் இருப்பதையும் பார்த்தும், என் மனித உருவத்தை மாத்திரம் நினைத்து, நானும் மனிதன் தான் என்று தீர்மானித்து, "நான் எல்லா உலகங்களுக்கும் 2 ஒரே காரணம். நான் எல்லாருக்கும் யஜமானன், எல்லாரும் என்னிடம் வருவதற்காக நான் மனித உருவத்துடன் வந்திருக்கிறேன்" என்று 3 அறியவில்லை. (25)

வேதாஹம் ஸமதீதாநி வர்த்தமாநாநி சார்ஜுந ।
ப⁴விஷ்யாணி ச பூ⁴தாநி மாம் து வேத³ ந கஶ்சந ॥ ௨௬ ॥

அதீதாநி வர்த்தமாநாந்யநாக³தாநி ச ஸர்வாணி பூ⁴தாந்யஹம் வேத³ஜாநாமி । மாம் து வேத³ ந கஶ்சந யோ நா

---

1. பகவான் எல்லாரும் தன்னிடம் வருவதற்காக எடுத்துக்கொண்ட மனித உருவமே, அவனை விடுவதற்குக் காரணமானல், இது எவருடைய குற்றம்? என்றால், "முட்டாள் ஜனங்கள்" என்கிற சொல்லாலே பதில் சொல்லப்படுகிறது. பகவான் தன்னுடைய ஸ்வபாவத்தை முழுவதும் மறைக்கவில்லை. மற்றவர்களாலே செய்யக்கூடாத வேலைகளைச் செய்து, மற்றவர்களுக்கில்லாத பளபளப்பைக் காட்டினார். முட்டாள்கள் மனித உருவம் என்கிற சின்ன ஒரு ஸங்கதியை மாத்திரம் கவனித்து, பகவான் என்று அறியவில்லை. மேகத்தினால் மறைக்கப்பட்ட ஸூரியனை மினி மினிப்பூச்சியாக எண்ணுவதுபோல் இது இருக்கிறது.

2. சுலோகத்தில் "அஜம் (பிறப்பில்லாதவன்)" அவ்யயம் (குறைவில்லாதவன்) என்று இரண்டு சொற்கள் இருக்கின்றன. எல்லா உலகங்களுக்கும் காரணமாயிருப்பதாலே,பகவான் மற்றவர்களைப்போல் கர்மத்தால் பிறப்பில்லாதவன். குறைவில்லை என்பது ஸ்வரூபத்திலும், குணங்களிலும் மாறுதலில்லாமை. மஹாராஜா வாகையாலே தான் அவதாரம் செய்யும் போதும், ஈசுவரத்தன்மையில் ஒன்றையும் விடாமல் வருகிறான்

3. பின்னை எப்படி அறிகிறார்கள் என்றால், மற்ற மனிதர்களைப் போல கர்மத்தினால் பிறப்பும், அறிவுக் குறைவும் உள்ளவனாக எண்ணுகிறார்கள்.

வ்யதீதேஷு காலத்ரயவர்திஷு பூதேஷு மாம் வஸுதேவஸூநும் வாஸுதேவம் ஸர்வஸமாஶ்ரயணீயத்வாயாவதீர்ணம் விதித்வா மாமேவ ஸமாஶ்ரயந் கஶ்சிதேவ மஹாத்மா ஸுதுர்லப: | அதோ ஜ்ஞாநீ ஸுதுர்லப ஏவ || ||26||

இதற்கு முன்னாலே 1 செத்துப்போன எல்லாப் பிராணிகளையும், இப்போது இருக்கிற எல்லாரையும், நாளைக்கு வரப்போகிற எல்லாரையும் எனக்குத் தெரியும். இப்படி என்றால் அறியப்பட்ட மூன்று காலத்திலுள்ள எல்லாப் பிராணிகளுக்குள்ளே ஒருவனாவது என்னுடைய சொத்தான எல்லாரும் என்னிடம் வருவதற்காகப்பகவானான நான் வஸுதேவருக்குப் பிள்ளையாக வந்திருக்கிறேன் என்று அறிந்து, என்னிடத்திலேயே வருகிறவன் அகப்படவில்லை. ஆகையால் ஞானீ அகப்படுவது மிகவும் அரிது. (26)

ததாஹ,

இச்சாத்வேஷஸமுத்தேந த்வந்த்வமோஹேந பாரத |
ஸர்வபூதாநி ஸம்மோஹம் ஸர்கே யாந்தி பரந்தப ||27||

இச்சாத்வேஷாப்யாம் ஸமுத்திதேந ஶீதோஷ்ணாதித்வந்த்வாக்யேந மோஹேந ஸர்வபூதாநி ஸர்கே ஜநநகால ஏவ ஸம்மோஹம் யாந்தி | ஏததுக்தம் பவதி- மணிமுக்தாதிஷு ஸுகது:காதித்வந்த்வேஷு பூர்வபூர்வஜந்மநி யத்விஷயாவிச்சாத்வேஷாவப்யஸ்தௌ, தத்வாஸநயா புநரபி ஜந்மகால ஏவ ததேவ த்வந்த்வமிச்சாத்வேஷவிஷயத்வேந ஸமுத்திதம் பூதாநாம் மோஹநம் பவதி | தேந மோஹேந ஸர்வபூதாநி ஸம்மோஹம் யாந்தி | ததிச்சாத்வேஷைகஸ்வபாவாநி பவந்தி, ந மத்ஸம்ஶ்லேஷவியோகஸுகது:கைகஸ்வபாவாநி | ஜ்ஞாநீ

---

1. பகவான் தனக்கு எல்லாம் தெரியுமென்று சொன்னது-பகவானைத்தெரிந்து கொள்ளவில்லை என்பது இப்போது மாத்திரமன்று. முன் காலத்திலும் அப்படித்தான் இருந்தது. இனிமேலும் அப்படித்தான் ஆகப்போகிறது—என்பதைக் காட்டுவதற்காக.

[illegible] ||

||௨௭||

அவ—1 உலகத்தில் அப்படித்தானே இருக்கிறது பாரென்கிறார்.

ஆசையாலும் த்வேஷத்தாலும் 2 உண்டாகிற குளுமை, சூடு முதலான இரண்டு வகைகளாலே எல்லாப் பிராணிகளும் பிறக்கும்போதே 3 மயங்குகிறார்கள். அதாவது—போன ஜன்மத்தில் எந்த வஸ்து பிடித்ததோ, எந்தவஸ்து அலுத்ததோ, அதேமாதிரி வாஸனையாலே பிறக்கிற காலத்திலேயே ஆசையும் அலுப்பும் உண்டாகிறது. அதினாலே ஜனங்கள் மயங்கி, அந்த விஷயங்களில் ஆசையும், அலுப்புமுள்ளவர்களாய் இருக்கிறார்கள். அந்த வாஸனை எல்லாருக்கும் என்னைத்தவிர மற்ற விஷயங்களிலேயே இருக்கிறது. ஆகையால் ஒருவனும் என்னைவிட்டு வருத்தப்படவுமில்லை. என்னோடு சேர்ந்து ஸந்தோஷப்படவுமில்லை. ஞானியோ என்னோடு சேர்ந்தால்,ஸந்தோஷத்தையும், என்னை விட்டுப் பிரிந்தால், துக்கத்தையும் அடைகிறான். இவ்விதமான தன்மையுடையவன் ஒருவனாவது பிறப்பது மிகவும் அரிது. (27)

---

1. மூன்று காலங்களிலும் எல்லாரும் பகவானை அறியாமலிருப்பதற்குக் காரணம் சொல்லுகிறார்.

2. ஒருவன் பிறக்கும்போதே ஒரு வஸ்துவில் ஆசையும், மற்றொரு வஸ்துவில் அலுப்பும் எப்படி உண்டாகும். குழந்தைக்கு பிறந்த உடனே ஒன்றுமே தெரியாதே. ஆகையால் அப்படி உண்டாவதற்குக் காரணமில்லையே. அப்படி உண்டானாலும், பகவான் விஷயத்தில் ஏன் ஆசை வரக்கூடாது? என்றால், பதில் சொல்லுகிறார். முன் ஜன்மத்தில் உண்டான வாஸனை ஜீவனுடன்கூட வருகிறது. அதனாலே ஆசையும் அலுப்பும் பிறந்த உடனேயே வருகின்றன. வாஸனை எந்த வஸ்துவில் இருக்கிறதோ, அதிலேதான் ஆசையுண்டாகும். பகவானிடத்தில் முன் ஜன்மத்தில் ஆசை யில்லாததினால், அந்த விஷயமான வாஸனை உண்டாகவில்லை. இந்த ஜந்மத்தில் எப்படி பகவானிடத்தில் ஆசை உண்டாகக் கூடும்.

3. இங்கே மயக்கமாவது—இன்பமில்லாதவைகளை இன்பமாக எண்ணுவதும், அலுப்பு வரக்கூடாத வஸ்துவில் அலுப்பு வருவதும்.

𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍍𑌵𑌨𑍍𑌤𑌗𑌤𑌂 𑌪𑌾𑌪𑌂 𑌜𑌨𑌾𑌨𑌾𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑍍 ।
𑌤𑍇 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌮𑍋𑌹𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌾 𑌭𑌜𑌨𑍍𑌤𑍇 𑌮𑌾𑌂 𑌦𑍃𑌢𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 ॥௨௮॥

𑌯𑍇𑌷𑌾𑌂 𑌤𑍁 𑌅𑌨𑍇𑌕𑌜𑌨𑍍𑌮𑌾𑌰𑍍𑌜𑌿𑌤𑍇𑌨𑍋𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌟𑌪𑍁𑌣𑍍𑌯𑌸𑌂𑌚𑌯𑍇𑌨 𑌗𑍁𑌣𑌮𑌯𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑍇𑌚𑍍𑌛𑌾𑌦𑍍𑌵𑍇𑌷𑌹𑍇𑌤𑍁𑌭𑌤𑌂 𑌮𑌦𑍌𑌨𑍍𑌮𑍁𑌖𑍍𑌯𑌵𑌿𑌰𑍋𑌧𑌿 𑌅𑌨𑌾𑌦𑌿𑌕𑌾𑌲𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 𑌪𑌾𑌪𑌂, 𑌅𑌨𑍍𑌤𑌗𑌤𑌂-𑌕𑍍𑌷𑍀𑌣𑌂 । 𑌤𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌃 𑌸𑍁𑌕𑍃𑌤𑌤𑌾𑌰𑌤𑌮𑍍𑌯𑍇𑌨 𑌮𑌾𑌂 𑌶𑌰𑌣𑌮𑍁𑌪𑌾𑌗𑌮𑍍𑌯 𑌗𑍁𑌣𑌮𑌯𑌾𑌨𑍍𑌮𑍋𑌹𑌾𑌦𑍍𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌜𑌰𑌾𑌮𑌰𑌣𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌯 𑌮𑌹𑌤𑍇 𑌐𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌾𑌯 𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌯𑍇 𑌚 𑌦𑍃𑌢𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 - 𑌦𑍃𑌢𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌾𑌃 𑌮𑌾𑌮𑍇𑌵 𑌭𑌜𑌨𑍍𑌤𑍇 ॥ ॥௨௮॥

*அ-வ—எல்லாரும் இப்படி மயங்கினால், எவன் பகவானைத் தியானம் செய்வன்? இந்த அத்தியாயம் 16-வது சுலோகத்தில் நாலு வகுப்பார் பகவானைத் தியானம் பண்ணுவர்கள் என்று சொன்னது எப்படி ஒட்டும் என்றால், சொல்லுகிறார்.—*

*எவர்களுக்கு 1 வெகு ஜன்மங்களில் பண்ணின உயர்ந்த புண்ணியங்களாலே என்னைத்தவிர மற்ற வஸ்துக்களில் ஆசையையும், என்னிடத்தில் அருவருப்பையும் உண்டுபண்ணக்கூடிய நெடுநாளாய் வந்த பாபம் போய்விட்டதோ, அவர்கள் என்னைக் கெஞ்சிக்கேட்டுக்கொண்டு, மயக்கம் தெளிந்து, அவரவர்கள் பண்ணின புண்ணியத்துக்குத் தகுந்தபடி சிலர் பணத்துக்காகவும், சிலர் ஸம்ஸாரம்போய் ஜீவஸ்வரூபத்தை உள்ளபடி அநுபவிப்பதற்காகவும், சிலர் என்னிடம் வருவதற்காகவும் உறுதியுடன் என்னையே தியானம் செய்கிறார்கள்.* (28)

---

1. *சுலோகத்தில் புண்ணிய கர்மங்களைச் செய்தவர்கள் என்று பொதுவாய் சொல்லியிருந்தபோதிலும், பகவானை அறிவதற்கு இடஞ்சலான பாபத்தைப் போக்குவதற்கு உயர்ந்த புண்ணியம் வேண்டுமென்றும், அது ஒரேஜன்மத்தில் பண்ணினது போதாது என்றும், காட்டுவதற்காக "வெகுஜன்மங்களிலே பண்ணின உயர்ந்த" என்று பாஷ்யத்தில் சொல்லப்படுகிறது. இந்த ஸங்கதியை இந்த அத்தியாயம் 19-வது சுலோகத்திலும் சொல்லியிருக்கிறது. அதின் கீழே இருக்கும் குறிப்பைப் பார்க்க.*

அத² — த்ரயாணாம் ஸமவேதம் ஸஜேதராணாம் ஜ்ஞாதவ்யவிஶேஷாநநுஷ்டே²யாம்ஶ்ச ப்ரஸ்தௌதி —

ஜராமரணமோக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தி யே ।
தே ப்³ரஹ்ம தத்³விது³: க்ருத்ஸ்நமத்⁴யாத்மம் கர்ம சாகி²லம் ॥ ௨௯ ॥

ஜராமரணமோக்ஷாய — ப்ரக்ருதிவியுக்தாத்மஸ்வரூபத³ர்ஶநாய மாமாஶ்ரித்ய யே யதந்தே । தே தத்³ ப்³ரஹ்ம விது³:, அத்⁴யாத்மம் ச க்ருத்ஸ்நம் விது³: । கர்ம சாகி²லம் விது³: ॥ ॥ ௨௯ ॥

அவ—பகவானைத்தியானம் பண்ணுகிற மூன்று வகுப்பார்களும், அறியவேண்டிய ஸங்கதிகளையும், நினைக்கவேண்டிய ஸங்கதிகளையும், செய்யவேண்டியவைகளையும் சொல்ல ஆரம்பிக்கிறார்.—

கிழத்தனமும் சாவும் போவதற்காக-அதாவது-உடம்பு முதலான நினைவு இல்லாமல் ஜீவஸ்வரூபத்தை மாத்திரம் நீடித்துப் பார்த்துக்கொண்டிருப்பதற்காக, (கைவல்யத்திற் காக)எவர்கள் என்னைத்தியானம் செய்கிறார்களோ, அவர்கள் அந்த1ப்ரும்மத்தையும்,எல்லா அத்யாத்மத்தையும், எல்லாகர்மங்களையும் அறியவேண்டியது. (29)

ஸாதி⁴பூ⁴தாதி⁴தை³வம் மாம் ஸாதி⁴யஜ்ஞம் ச யே விது³: ।
ப்ரயாணகாலே(அ)பி ச மாம் தே விது³ர்யுக்தசேதஸ: ॥ ௩௦ ॥

இதி ஶ்ரீமத்³ப⁴க³வத்³கீ³தாஸூபநிஷத்ஸு ப்³ரஹ்மவித்³யாயாம் யோக³ஶாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே³ விஜ்ஞாநயோகோ³ நாம ஸப்தமோ(அ)த்⁴யாய: ॥

அத்ர ய இதி வ்யபதி³ஷ்டேஷ்வாத்மஸ்வரூபநிஷ்டே²ஷு ஜ்யேஷ்டோ²(அ)த்⁴யாத்மாதி⁴காரிணோ ஜ்ஞாயந்தே । ஸாதி⁴பூ⁴தம் ஸாதி⁴தை³வம் மாமைஶ்வர்யார்தி²நோ யே விது³ரித்யத்ர ஜநநவாத்மஸ்வரூபவ்யாப்தாத்மகாதி⁴யாபகமேவ । ததா² ஸாதி⁴யஜ்ஞமித்யபி த்ரயாணாமதி⁴காரிணாமவிஶேஷணவிஷயமேத, அத² ஸாமாந்யாத் । த்ரயாணாம் ஹி நித்யநைமித்திககர்மவை

1. இந்த சுலோகத்திலும் அடுத்த சுலோகத்திலும் வருகிற சொற்களுக்கு அடுத்த அத்தியாயத்தின் முதலிலே பகவானே அர்த்தம் சொல்லப்போகிறார்.

ஸாதியஜ்ஞாநுஸந்தாநீயம் | தே ச ப்ரயாணகாலே(அ)பி மத்ப்ராப்யப்ராபணம் மாம் விது꞉ | தே சேதி சகாராத் பூர்வே ஜராமரணமோக்ஷாய யதமாநாஶ்ச ப்ரயாணகாலே விதந்தீதி ஸமுச்சீயதே | ஸர்வேஷாம் ஜ்ஞாநிநாம் த்ரயாணாம் ஸ்வஸ்வப்ராப்யாநுகுணம் மாம் விது꞉ ப்ரயாணகாலே(அ)பி ஸ்வப்ராப்யப்ராபணம் மாம் விதுரித்யர்த்த꞉ ||

இதி ஶ்ரீபகவத்ராமாநுஜவிரசிதே ஶ்ரீமத்கீதாபாஷ்யே
ஸப்தமோ(அ)த்யாய꞉
ஶ்ரீமதே ராமாநுஜாய நம꞉

பணத்தை விரும்பித்தியானம் பண்ணுகிறவர்கள், அதிபூதத்தோடும், அதிதைவத்தோடும் கூடிய என்னை அறியவேண்டியது. கீழ்ச்சொன்ன மூன்று வகுப்பார்களும் அதியஜ்ஞத்தோடுகூடிய என்னை அறியவேண்டும். மூன்று வகுப்பார்களும் இறந்துபோகிறகாலத்தில் அவரவர்கள் ஆசைப்படுகிற பிரயோஜனத்துக்குத்தகுந்தபடி என்னை நினைக்கவேண்டும்.

இந்த சுலோகத்தில் பின்பாதியில் இருக்கிற " ச '; என்கிற சொல்லை " தே ', என்கிற சொல்லுடன் சேர்க்கவேண்டியது. அப்போது அவைகளின் பொருள்—அவர்களும்—என்று. அதனாலே 29-வது சுலோகத்தில் சொன்ன ஸம்ஸாரம் போய் ஜீவஸ்வரூபத்தைப் பார்க்கவேண்டுமென்று ஆசைப் படுகிறவர்களையும் சேர்த்து, அவர்களும் இறந்துபோகிற காலத்தில் பகவானைத்தாங்கள் விரும்புகிற பிரயோஜனத்துக்குத் தகுந்தபடி நினைக்க வேணுமென்று சொல்லப் படுகிறது. பகவானிடம் போக வேணுமென்று ஆசைப்படுகிறவர்களுக்கும் இந்த இரண்டு எண்ணங்களும் வேண்டியபடியால் அவர்களையும் சேர்த்துக் கொள்ளவேண்டியது. அந்த இரண்டு எண்ணங்களாவன—பகவான் அதியஜ்ஞத்துடனே கூடினவன் என்று நினைப்பதும், இறந்துபோகிறகாலத்தில் தாங்கள்விரும்புகிற பிரயோஜனத்துக்குத்தகுந்தபடி பகவானை நினைப்பதும். பகவானைஅதியஜ்ஞத்தோடு கூடியவராக ஏன் நினைக்கவேண்டும்—என்றால், மூன்று வகுப்பார்களும், மஹா யஜ்ஞம் முதலான நித்திய கர்மங்களையும், நைமித்திக கர்மங்களையும் கட்டாயம் செய்யவேண்டியதாகையால்.(30)

# 𑌅𑌷𑍍𑌟𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

𑌅𑌥— 𑌸𑌪𑍍𑌤𑌮𑍇 𑌪𑌰𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌉𑌪𑌾𑌸𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨𑌿𑌖𑌿𑌲𑌚𑍇𑌤𑌨𑌾𑌚𑍇𑌤𑌨𑌵𑌸𑍍𑌤𑍁𑌶𑍇𑌷𑌿𑌤𑍍𑌵𑌂, 𑌕𑌾𑌰𑌣𑌤𑍍𑌵𑌂, 𑌆𑌧𑌾𑌰𑌤𑍍𑌵𑌂, 𑌸𑌰𑍍𑌵𑌶𑌰𑍀𑌰𑌤𑌯𑌾 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌤𑍍𑌵𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌶𑌬𑍍𑌦𑌵𑌾𑌚𑍍𑌯𑌤𑍍𑌵𑌂, 𑌸𑌰𑍍𑌵𑌨𑌿𑌯𑌨𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂, 𑌸𑌰𑍍𑌵𑍈𑌶𑍍𑌚 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌗𑌣𑍈𑌸𑍍𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌪𑌰𑌤𑌰𑌤𑍍𑌵𑌂, 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌰𑌜𑌸𑍍𑌤𑌮𑍋𑌮𑌯𑍈𑌰𑍍𑌦𑍇𑌹𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑍇𑌨 𑌭𑍋𑌗𑍍𑌯𑌤𑍍𑌵𑍇𑌨 𑌚𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍈𑌰𑍍𑌭𑌾𑌵𑍈𑌰𑌨𑌾𑌦𑌿𑌕𑌾𑌲𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌪𑍍𑌰𑌵𑌾𑌹𑌹𑍇𑌤𑍁𑌕𑍈𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌤𑌿𑌰𑍋𑌧𑌾𑌨𑌂, 𑌅𑌤𑍍𑌯𑍁𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌟𑌸𑍁𑌕𑍃𑌤𑌹𑍇𑌤𑍁𑌕𑌭𑌗𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌪𑌤𑍍𑌤𑍍𑌯𑌾 𑌚 𑌤𑌨𑍍𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂, 𑌸𑍁𑌕𑍃𑌤𑌤𑌾𑌰𑌤𑌮𑍍𑌯𑍇𑌨 𑌚 𑌪𑍍𑌰𑌪𑌤𑍍𑌤𑌿𑌵𑍈𑌶𑍇𑌷𑍍𑌯𑌾𑌦𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌾𑌕𑍍𑌷𑌰𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯 𑌭𑌗𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑌪𑍇𑌕𑍍𑌷𑌯𑍋𑌪𑌾𑌸𑌕𑌭𑍇𑌦𑌂, 𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌂 𑌪𑍍𑌰𑍇𑌪𑍍𑌸𑍋𑌰𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌤𑌯𑍈𑌕𑌭𑌕𑍍𑌤𑌿𑌤𑌯𑌾 𑌚𑌾𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌪𑌰𑌮𑌪𑍁𑌰𑍁𑌷𑌪𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑍇𑌨 𑌶𑍍𑌰𑍈𑌷𑍍𑌠𑍍𑌯𑌂, 𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑍍𑌯, 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌤𑍍𑌰𑌯𑌾𑌣𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑌵𑍍𑌯𑍋𑌪𑌾𑌦𑍇𑌯𑌭𑍇𑌦𑌾𑌂𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑍌𑌷𑍀𑌤𑍍 । 𑌇𑌦𑌾𑌨𑍀𑌮𑌷𑍍𑌟𑌮𑍇 𑌪𑍍𑌰𑌸𑍍𑌤𑍁𑌤𑌾𑌨𑍍 𑌜𑍍𑌞𑌾𑌤𑌵𑍍𑌯𑍋𑌪𑌾𑌦𑍇𑌯𑌭𑍇𑌦𑌾𑌨𑍍𑌵𑌿𑌵𑌿𑌨𑌕𑍍𑌤𑌿 ।

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚

𑌕𑌿𑌂 𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌕𑌿𑌮𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌂 𑌕𑌿𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮 ।
𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂 𑌚 𑌕𑌿𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌮𑌧𑌿𑌦𑍈𑌵𑌂 𑌕𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ ॥௧॥

𑌅𑌧𑌿𑌯𑌜𑍍𑌞𑌃 𑌕𑌥𑌂 𑌕𑍋𑌽𑌤𑍍𑌰 𑌦𑍇𑌹𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨 ।
𑌪𑍍𑌰𑌯𑌾𑌣𑌕𑌾𑌲𑍇 𑌚 𑌕𑌥𑌂 𑌜𑍍𑌞𑍇𑌯𑍋𑌽𑌸𑌿 𑌨𑌿𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌭𑌿𑌃 ॥ ॥௨॥

𑌜𑌰𑌾𑌮𑌰𑌣𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌯 𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌯𑌤𑌮𑌾𑌨𑌾𑌨𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑌵𑍍𑌯𑌤𑌯𑍋𑌕𑍍𑌤𑌂 𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌂 𑌚 𑌕𑌰𑍍𑌮 𑌚 𑌕𑌿𑌮𑌿𑌤𑌿 𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍 । 𑌐𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌿𑌨𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑌵𑍍𑌯𑌮𑌧𑌿𑌭𑍂𑌤𑌮𑌧𑌿𑌦𑍈𑌵𑌂 𑌚 𑌕𑌿𑌮𑍍 । 𑌤𑍍𑌰𑌯𑌾𑌣𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑌵𑍍𑌯𑍋𑌽𑌧𑌿𑌯𑌜𑍍𑌞𑌶𑌬𑍍𑌦𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑌶𑍍𑌚 𑌕𑌃 । 𑌤𑌸𑍍𑌯 𑌚𑌾𑌧𑌿𑌯𑌜𑍍𑌞𑌭𑌾𑌵𑌃 𑌕𑌥𑌮𑍍 । 𑌪𑍍𑌰𑌯𑌾𑌣𑌕𑌾𑌲𑍇 𑌚 𑌏𑌭𑌿𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑌿𑌰𑍍𑌨𑌿𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌭𑌿𑌃 𑌕𑌥𑌂 𑌜𑍍𑌞𑍇𑌯𑍋𑌽𑌸𑌿 ॥ ॥௨॥

அவ—ஏழாவது அத்தியாயத்தில் பரப்பிரும்மமான வாஸுதேவன் தியானம் செய்யத்தருந்தவன்; அவன் அறிவுள்ளதும், அறிவில்லாததுமான எல்லா உலகத்துக்கும் சேஷி; எல்லாவற்றையு முண்டுபண்ணுகிறவன்; எல்லாவற்றையும் தூக்குகிறவன்; எல்லாம் அவனுக்கு உடம்பாயிருப்பதாலே, எல்லாம் அவனுக்கு பிரகாரம்; அதினால் எல்லா சொற்களும் அவனையே சொல்லுகின்றன; எல்லாவற்றையும் அவன் ஏவுகிறான்; கூட்டம் கூட்டமான எல்லா நல்லகுணங்களாலும் அவனே மிகவுமுயர்ந்தவன்; ஸத்வம் முதலானகுணங்களோடு கூடியஉடம்புகளாகவும்,கண் முதலான இந்திரியங்களாகவும்,அவைகளால் அநுபவிக்கத்தகுந்தவைகளாகவும் நெடுநாளாய் வந்த பாபவரிசைகளினாலே உண்டான வஸ்துக்கள் அவனைஉள்ளபடிபார்க்கவொட்டாமல் மறைக்கின்றன; மிகவும் உயர்ந்த புண்ணியத்தாலே அவனைப்பிரபத்தி பண்ணி, அந்த மறைவைப் போக்கவேண்டும்; போக்கி அவனைத் தியானம் பண்ணுகிறவர்கள் புண்ணியங்களின் தாரதம்மியத்தாலே மூன்று விதமான பிரயோஜனங்களை விரும்புவதாலே, மூன்றுவிதமாயிருக்கிறார்கள்; அவர்களுக்குள்ளே பகவானை மாத்திரம் ஆசைப்படுகிறவன் அவனை ஒருக்காலும் விடாதபடியாலும், அவனிடத்தில்மாத்திரம் ஆசையுள்ளவனகையாலும், அவனுக்கு மிகவும் வேண்டியவனயிருப்பதாலும், மிகவும் உயர்ந்தவன்; அப்படிப்பட்டவன் அகப்படுவது மிகவும் அரிது—என்று இவைகளைச்சொல்லி, இந்த மூன்றுபேர்களுக்கும், அறிய வேண்டியவைகளிலும், செய்யவேண்டியவைகளிலும் வேறுபாடு இருக்கிறது என்பதைப் பிரஸ்தாபித்தார். இப்போது எட்டாவது அத்தியாயத்தில் கீழ்ப்பிரஸ்தாபித்த ஸங்கதிகளை விரிவாகச் சொல்லுகிறார்—

அர்ஜுநன் கேட்கிறான்.

கிழத்தனமும், சாவும் போவதற்காக—அதாவது—உடம்பு முதலானவைகளை நினையாமல் ஆத்மஸ்வரூபத்தை மாத்திரம் அநுபவிப்பதற்காக உம்மைத்தியானம்செய்கிறவர்களால் அறியவேண்டியதாகச் சொன்ன பிரும்மமும்,அத்யாத்மமும், கர்மமும் என்ன? பணத்தை ஆசைப்பட்டவன் அறியவேண்டிய அதிபூதமும்,அதிதைவமும் என்ன ? மூன்றுபேர்களும் அறியவேண்டிய அதியக்

ஞன் என்பவன் யார்? அவன் எதினால் அதியக்ஞன் என்று சொல்லப்படுகிறான்? மூன்று பேர்களும் சாகும் காலத்தில் மனதை அடக்கிக் கொண்டு உம்மை எப்படி அறியவேண்டும்? இவைகளைச் சொல்லவேண்டும் என்று. [1–2]

ஸ்ரீபகவாநுவாச—

அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோऽத்யாத்மமுச்யதே |
பூதபாவோத்பவகரோ விஸர்க: கர்மஸம்ஜ்ஞித: ||௩||

தத் ப்ரஹ்மேதி நிர்திஷ்டம் பரமமக்ஷரம் — ந க்ஷரதீத்யக்ஷரம் க்ஷேத்ரஜ்ஞஸமஷ்டிரூபம் | ததா ச ச்ருதி: 'அவ்யக்தமக்ஷரே லீயதே அக்ஷரம் தமஸி லீயதே' இத்யாதிகா | பரமமக்ஷரம் ப்ரக்ருதிவிநிர்முக்தாத்மஸ்வரூபம் | ஸ்வபாவோऽத்யாத்மமுச்யதே — ஸ்வபாவ: ப்ரக்ருதி: | அநாத்மபூதம் ஆத்மநி ஸம்பத்யமாநம் பூதஸூக்ஷ்மதத்வாஸநாதிகம் பஞ்சாக்நிவித்யாயாம் ஜ்ஞாதவ்யதயோக்தம் | தது³ப⁴யம் ஜ்ஞாதவ்யதயா த்யாஜ்யதயா ச முமுக்ஷுபிர்ஜ்ஞாதவ்யம் | பூதபாவோத்பவகரோ விஸர்க: கர்மஸம்ஜ்ஞித: — பூதபாவ: மநுஷ்யாதிபாவ: — தது³த்³ப⁴வகரோ யோ விஸர்க: 'பஞ்சம்யாமாஹுதாவாப: புருஷவசஸோ பவந்தி' இதி ச்ருதிஸித்தோ யோஷித்ஸம்பந்தஜ: ஸ கர்மஸம்ஜ்ஞித: | தத்விஷயம் ஸர்வம் ஸமுத்வேஜநீயதயா பரிஹரணீயதயா ச முமுக்ஷுபிர்ஜ்ஞாதவ்யம் | பரிஹரணீயதா சாநந்தரமேவ வக்ஷ்யதே 'யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி' இதி || ||௩||

பகவான் சொல்லுகிறார்—

பிரும்மம் என்று சொன்னது உயர்ந்ததான 1 அக்ஷரம், அதாவது—உடம்பைக் காட்டிலும் வேறான ஆத்மஸ்வரூபம்.

1. அக்ஷரம் என்றால், ஒருவிதமான மாறுபாடில்லாத ஜீவனுடைய பொதுவான ஸ்வரூபம். ஜீவன் கர்மத்தாலே தேவன் முதலான பலவித உடம்புகளை அடைந்து, தேவன் என்றும், மனிதன் என்றும், வெவ்வேறாகச் சொல்லப் படுகிறான். அந்தக் கர்மம் போய்விட்டால், அவனு

அத்யாத்மம் என்பது ஸ்வபாவம்—பிரகிருதி, அதாவது—ஆத்மாவைக் காட்டிலும் வேறாயும், ஆத்மாவுடன் சேர்ந்துமிருக்கிற உடம்பும், அதுடன் கூடியிருப்பதாலே உண்டாகும் அக்ஞானமும், கர்மமும், வாஸனை முதலானதும். இது 1 பஞ்சாக்கினி (ஐந்து அக்கினி) தியானத்தில் அறிய வேண்டியதாகச் சொல்லப்படுகிறது. இவை இரண்டில் ஒன்றை அடைய வேண்டியதென்றும், ஒன்றைத் தள்ள வேண்டியதென்றும், மோக்ஷத்தை ஆசைப்

---

க்கு உடம்பு கிடையாது. கர்மம் இருக்கும் காலத்திலும், இன்ன உடம்பில்தான் இருக்க வேணுமென்று கட்டுப் பாடுமில்லை. உதாரணம்—கடையில் கத்திரிக்காய் இருக்கிறது. அதைக்கரியாகவும், துகையலாகவும், பச்சடியாகவும், பலவிதமாய்ச் செய்யலாம். கத்திரிக்காய் முன்னாலே எல்லாவற்றிற்கும் பொதுவாயிருந்தது. அதுபோல ஜீவன் பொதுவாயிருக்கிறான். கர்மத்தினால் அந்தந்த உடம்பில் நுழைந்து, அதற்குத் தகுந்த பெயரையடைந்து, அதற்கு உரிய வேலைகளைச் செய்கிறான். கத்திரிக்காயின் உருவம் மாறுகிறது. ஜீவனுக்கு உருவத்தில் மாறுபாடில்லை.

1. வேதத்தில் பஞ்சாக்கினி வித்யையென்று ஒரு தியானம் சொல்லப்படுகிறது. அதில் ஜீவன் சாகிறபோது பெரிய உடம்பைவிட்டுச் சின்ன உடம்புடன் போய், திரும்பி பெரிய உடம்புடன் பிறப்பதை விரிவாய்ச் சொல்லுகிறது. அவன் முதலில் தேவலோகத்திற்குப் போய், உயர்ந்த ஸுகத்தை அநுபவிப்பதற்குத் தகுந்த அழகான உடம்பை அடைகிறான். அங்கு சில காலம் ஸுகத்தை அநுபவித்து, அந்த ஸுகத்தை உண்டுபண்ணின புண்ணியம் செலவழிந்த பிறகு, அந்த உடம்பு போய், சின்ன உடம்புடன்மேகத்திற்கு வந்து சேருகிறான். அப்போது இது மேகம், இது அவன் உடம்பு என்று பிரிக்கக்கூடாதபடி அத்துடன் சேர்ந்திருக்கிறான். இதன் பிறகு மழையுடன் கூட பூமிக்கு வந்து தானியங்களுடன் சேருகிறான். அந்த தானியம் சமைக்கப்பட்டுச் சாப்பிடும்போது, ஒரு ஆணுடைய உடம்பில் வந்து சேருகிறான். பிறகு அவனுடைய ரேதஸ்ஸாக ஆகி, ஒரு பெண்ணுடைய கர்ப்பத்தில் வந்து சேருகிறான். அப்போதுதான் அவனுக்கு மனிதன் (புருஷன்) முதலான பெயர் உண்டாகிறது. ஜீவன் வரிசையாக தேவலோகத்தையும், மேகத்தையும், தானியத்தையும், ஆணையும், பெண்ணையும் வந்துசேருகிறான். இந்த ஐந்தையும் ஐந்து அக்கினியாகச் சொல்லி இவன் அவைகளைச் சேருவதை ஐந்து ஹோமங்களாகச் சொல்லியிருக்கிறது. ஐந்தாவது ஹோமத்தில் அவனுக்குப்புருஷன் என்று பெயர்

*படுகிறவன் அறியவேண்டியது. கர்மம்என்பது—ஆத்மாவை மனிதன் என்று சொல்லும்படி பண்ணுகிற விஸர்க்கம். அதாவது—ஆணும் பெண்ணும் சேரும்போது, பெண்ணின் உடம்பில் ரேதஸ்ஸை விடுவது. அதுவும், அதைச்சேர்ந்தவைகளும் அருவருக்கக்கூடியதாகையால், விடவேண்டியதென்று அவன் அறியவேண்டியது. விடவேண்டியது என்பதை 11-வது சுலோகத்தில் சொல்லப்போகிறார்.* [ 3 ]

अधिभूतं क्षरो भावः पुरुषश्चाधिदैवतम् ।
अधियज्ञोऽहमेवात्र देहे देहभृतां वर ॥ ४॥

ऐश्वर्यार्थिनां ज्ञातव्यतया निर्दिष्टम् अधिभूतं क्षरो भावः- वियदादिभूतेषु वर्तमानस्तत्परिणामविशेषः क्षरणस्वभावः विलक्षणशब्दस्पर्शादिः साश्रयः । विलक्षणास्साश्रयाश्शब्दस्पर्शादयः ऐश्वर्यार्थिभिः प्राप्या अनुसन्धेयाः। पुरुषश्चाधिदैवतम्- अधिदैवतशब्दनिर्दिष्टः पुरुषः। अधिदैवतम्-देवतोपरि वर्तमानः, इन्द्रप्रजापति प्रभृतिकृत्स्नदेवतोपरि वर्तमानः, इन्द्रप्रजापतिप्रभृतीनां भोग्यजाताद्विलक्षणशब्दादेर्भोक्ता पुरुषः। स च भोक्तृत्वावस्थ ऐश्वर्यार्थिभिः प्राप्यतयानुसन्धेयः । अधियज्ञोऽहमेव- अधियज्ञशब्दनिर्दिष्टोऽहमेव । अधियज्ञः- यज्ञैराराध्यतयावस्थितः । अत्र इन्द्रादौ मम देहभूते आत्मतयाऽवस्थितोऽहमेव यज्ञैराराध्य इति महायज्ञादिनित्य

---

*வருகிறது என்றும் சொல்லியிருக்கிறது. தேவலோகத்தை விட்டுக் கர்ப்பத்தில் வந்துசேருகிற வரையில், ஜீவனுக்கு அறிவில்லாத்தினால் ஸுகமும் துக்கமுமில்லை. இந்த ஸங்கதியைத் தெரிந்துகொண்டு, ஒருவன் பெரிய உடம்போடும், சின்ன உடம்போடும் சேர்ந்திருப்பதில் வெறுப்புண்டாகி, உடம்பை அடியோடு தொலைப்பதற்கு முயற்சி செய்ய வேண்டியது. இதைத்தான் இந்த சுலோகத்தில் சொல்லியிருக்கிறது.*

நைத்யிகாநுஷ்டாநவேலாயாம் த்ரயாணாமதிகாரிணாம் அநுஸந்தேயமேதத் ॥ ॥௪॥

பணத்தை ஆசைப்படுகிறவன் அறியவேண்டியதாகச் சொல்லப்பட்ட அதிபூதமென்பது—பிரகிருதி என்கிற அறிவில்லாத வஸ்துவாலுண்டான—அழிவு முதலான மாறுபாட்டை அடையக்கூடிய—உயர்ந்த வர்ணம், வாஸனை, ரஸம் முதலானவைகளும், அவைகளையுடைய வஸ்துக்களும். அவன் இவைகளை அடைய வேண்டுமென்றிருப்பதால், அவைகளைத்தான் நினைக்க வேண்டியது. அதிதைவம் என்பது—இந்திரன், பிரும்மா, முதலானவர்களைக்காட்டிலும் உயர்ந்தலோகங்களை அநுபவிக்கிறவனைதான். இவன் அந்த லோகங்களை அநுபவிக்கப் போகிறவனுகத் தன்னை நினைக்கவேண்டியது. அதியக்ஞம் என்பது—நான்தான் (பகவான்). ஏனென்றால், யக்ஞம் முதலான நல்ல கருமங்களினுலே பூஜிக்கப்படுகிறவன். என்னுடைய உடம்புகளான இந்திரன் முதலான எல்லா ஜீவன்களுக்கும் ஆத்மாவாயிருந்து, நான்தான் யக்ஞங்களால்பூஜிக்கப்படுகிறேன்—என்பதை மஹாயக்ஞம்முதலானநித்தியம், நைமித்திகம் என்கிற கர்மங்களைச் செய்யும்போது மூன்றுபேர்களும் நினைக்கவேண்டியது. (4)

அந்தகாலே ச மாமேவ ஸ்மரந்முக்த்வா கலேபரம் ।
ய: ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி நாஸ்த்யத்ர ஸம்ஶய: ॥ ॥௫॥

இதமபி த்ரயாணாம் ஸாதாரணம் । அந்தகாலே ச மாமேவ ஸ்மரந் கலேபரம் த்யக்த்வா ய: ப்ரயாதி, ஸ மத்பாவம் யாதி— மம யோ பாவ: ஸ்வபாவ: தம் யாதி, ததாநீம் யதா மாம் அநுஸந்தத்தே, ததாவிதாகாரோ பவதீத்யர்த:, யதா ஆதிபரதாதயஸ்ததாநீம் ஸ்மர்யமாணம்ருகஸஜாதீயாகாராஸ்ஸம்பூதா: ॥ ॥௫॥

இப்போது சொல்லப் போகிறதும் மூன்றுபேர்களுக்கும் பொது. எவனுக்குச்செத்துப் போகிறகாலத்தில் வேறு நினைவுவராமல் என் நினைவுமாத்திரம் வருகிறதோ, அவன்தான் 1 என்மாதிரி

1. சுலோகத்தில் "மத்பாவம்" என்ற சொல் இருக்கிறது. அதில் பாவசப்தத்திற்கு ஸ்பாவம் (தன்மை)என்று பொருள். அதாவது—

ஆகிறான். என்னைப் பெரியபணக்காரன் என்று நினைத்தால், பணக்காரனாக ஆகிறான். என்னையே அடையவேணுமென்றுநினைத்தால், என்னையே அடைகிறான். தனக்குவேண்டிய என்னிடத்திலிருக்கிற ஸங்கதியை நினைப்பதினால், அது அவனுக்கு வருகிறது, ஆதிபாதன் (ஜடபாதர்) என்பவர் ஒருமானை வளர்த்துக் கொண்டு வந்து, செத்துப்போகிறகாலத்தில் அதையே நினைத்து, அடுத்தஜந்மத்தில் மானாகப் பிறந்தாராம். ( 5 )

அவ — ஸ்ம்ருதவிஷயஸஜாதீயாகாரதாவாப்திநிதர்ஶநத்வேந ஸ்வாபாவதி ஸந்நிவேஶநம்—

யம் யம் வாபி ஸ்மரந் பாவம் த்யஜத்யந்தே களேபரம் ।
தம் தமேவைதி கௌந்தேய ஸதா தத்பாவபாவித: ॥ ॥௬॥

---

எனக்குஎன்ன தன்மையிருக்கிறதோ,அதேமாதிரி தன்மையைஅடைகிறான்.இந்தசொல்லிற்கு பகவானாகவேஆய்விடுகிறான் என்று பொருளன்று. அப்படிப் பொருள் சொல்வது வேதத்திற்கு விரோதம். இந்தசொல்லிற்கு பகவான் மாதிரியாயிருக்கிறான் என்று பொருள்கொள்ளாமல் வேறு பொருள் சொல்லமுடியாது. ஏனென்றால்—பகவானுடைய தன்மையை அடைகிறது என்றால் என்ன? குளவியின் கூட்டில் வைக்கப்பட்ட புழு குளவிஜாதியாக ஆய்விடுகிறதே. அதுபோல பகவான் எப்படி ஈசுவரனோ (அடக்கி ஆளுகிறவனோ) அப்படி இவனும் இன்னொரு ஈசுவரனாக ஆய்விடுகிறான் என்றால், அப்போது இரண்டு ஈசுவரன் இருப்பதாக ஏற்படுமே. மேலும், மூன்றுபேர்கள் பகவானைத்தியானம் பண்ணுகிறார்கள்—பணத்தை ஆசைப்படுகிறவன்; தன்னுடைய உண்மையான ஸ்வரூபத்தை மாத்திரம் பார்க்க ஆசைப்படுகிறவன்; பகவானுடனே எப்போதும் கூடஇருக்கவேணும் என்று ஆசைப்படுகிறவன். இவர்கள் மூன்றுபேர்களும் தியானம் பண்ணி வெவ்வேறு ஈசுவரனாகப்போய்விட்டால், இந்த மூன்றுபேர்களுக்கும் பலனில் என்ன வித்தியாஸம். பலன் ஒன்றாயிருந்தால், தியானம் பண்ணுகிறவர்களுக்கு மூன்றுபிரிவு சொன்னதுதான் எப்படிக்கூடும். ஆகையால் எவன் பகவானை எந்த ஸங்கதியோடு நினைக்கிறானோ, அதேமாதிரி ஸங்கதிதான் வரும். அவனையும் பகவானையும் வேறாகக் காட்டக்கூடிய குணங்கள் இருக்கவே இருக்கின்றன. அவைகள் போகிறவையல்ல. இந்தஸங்கதி பாஷ்யத்தில் காட்டிய உதாரணத்தாலும் ஏற்படுகிறது. ஜடபாதர் எந்தமானை நினைத்தாரோ,அந்தமானாக ஆய்விடவில்லை,அதுபோல உருவம் வந்தது

அந்த்ய-அந்த்யகாலே யம் யம் வாபி பாவம் ஸ்மரந் களேவரம் த்யஜதி, தம் தம் பாவமேவ மரணாநந்தரமேதி। அந்த்யப்ரத்யயஶ்ச பூர்வபூர்வபாவிதவிஷய ஏவ ஜாயதே ॥ ॥௬॥

அவ—செத்துப் போகிறகாலத்தில் உண்டாகும் நினைவுக்கு ஒரு சக்தி இருக்கிறது. அதாவது-ஒருவன் எந்த ஸங்கதியை நினைக்கிறானோ, அதேமாதிரி ஸங்கதியை அவனுக்கு வரும்படி செய்கிறது-என்று, அதைத் தெளிவாய்ச் சொல்லுகிறார்—

ஒருவன் செத்துப்போகிற காலத்தில் எந்த எநத ஸங்கதியை நினைத்து சாகிறானோ, அதேமாதிரி ஸங்கதியையே செத்தபிறகு அடைகிறான். இருக்கும் காலத்தில் எதை எப்போதும் நினைத்துக்கொண்டிருகிறானோ, அதின் நினைவுதான் செத்துப்போகிற காலத்தில் வரும். [6]

தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாமநுஸ்மர யுத்ய ச ।
மய்யர்பிதமநோபுத்திர்மாமேவைஷ்யஸ்யஸம்ஶய: ॥ ॥௭॥

யஸ்மாத் பூர்வபூர்வகாலாப்யஸ்தவிஷய ஏவாந்த்யப்ரத்யயோ ஜாயதே, தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு-ஆப்ரயாணாதஹரஹ: மாமநுஸ்மர। ஶாஸ்த்ரீயாஹரஹரநுஷ்டீயமாநவர்ணாஶ்ரமாநுபந்தி ஸ்ம்ருதிஸந்ததிவாஸிதம் நித்யநைமித்திகம் ச குரு। ஏவம் வர்தமாநோ மய்யர்பிதமநோபுத்திரந்தகாலே ச மாமேவ ஸ்மரந் யதாபிலஷிதப்ரகாரம் மாம் ப்ராப்ஸ்யஸி। நாத்ர ஸம்ஶய: ॥ ॥௭॥

ஆகையால், செத்துப் போகிறவரையில் ஒவ்வொருநாளும் என்னையே நினை. 1 எப்பொழுதும் அந்த நினைவை உண்டுபண்

1. சுலோகததில் "என்னை நினை, சண்டைப்படு" என்று சொல்லியிருக்கிறது. நினைப்பதற்கு பலன் சொல்லியிருக்கிறது. அதாவது கடைசியில் அந்தநினைவுவருகிறது என்று. சண்டைப்படு என்பதற்குப்பலன் சொல்லவில்லை. இரண்டுவேலைகளைச் சேர்த்துச் சொல்லி, ஒன்றுக்கு மாததிரம பலனைச் சொன்னால், மற்றொன்று அதற்கு அங்கம், அதாவது—அதறகு உதவிசெய்கிறது—என்று ஒருநியாயம். இந்தநியாயப்படி சண்டைப்படுவது நினைப்பதற்கு அங்கம். அதைக்காட்டுவதற்காகத தான் "நினைவைஉண்டுபண்ணக்கூடிய" என்று சொல்லியிருக்கிறது.

ணக்கூடிய—நீ செய்யவேண்டியதாகச் சாஸ்திரத்தில் சொல்லிய—சண்டை முதலான நித்திய கர்மங்களையும், நைமித்திக கர்மங்களையும் முறைப்படி செய், இந்த மாதிரி உன் மனதையும் எண்ணத்தையும் 1 என்னிடத்தில் கொடுத்து, செத்துப்போகிற காலத்தில் என்னையே நினைத்தால், நீ வேண்டிய பலனை அடைவாய். இதில் ஸந்தேஹமில்லை. [7]

அவ— ஸவம் ஸாமாெநூ ஸஹாவாவஹாஜெ௱ஷு த௱யாயிெநத௱ஷூா, அஷயம் த௱யாணாஜெவாஸநவுகாா ெவஷம் வக்ஷு௰ஜெவக௱ ஜெத தெெதயாவயாெஷா ஜெவாஸநவுகாாஷு, யெயாவாஸநஜும் த௱வுத௱யவுகாாம் வாஹ—

அஷ௱ாஸயொமயுக்ஷேந ெசதஸா நாநூமாமிநா ।
வாஜம் வுாஷம் திவ௱ம் யாதி வாயாநுவிஷயநு ॥ அ ॥

அஹாஹாஷ௱ாஸயொமாஷ௱ம் யுக்தயா நாநூமாமிநா ெசதஸா அஜகாெவ வாஜம் வுாஷம் திவ௱ம் ஜாம் வக்ஷு௱ஜாணவுகாாம் விஷயநு ஜாெஜவ யாதி । ஆதிஹாதஜூம கவாவிவெஷயவிலிஷ்தயா ஜக்ஜாநாகாெராஷவதி । அஷ௱ாஸ:- நித௱ெநதிதிகாவிாெஷஷ ஸெவஷ கா ெஷு ஜநெஸாவுஷ௱ஸம்யோஜநஷு । யொமஹுஹாஹயெஜா மகாெஜநுவுீயஜாநம் யெயாக்ஷகூணஜெவாஸநஷு ॥ ॥ அ ॥

அவ—கீழ்ச் சொன்ன மூன்று பேர்களும் செத்துப்போகிற காலத்தில் வரும் நினைவினால் தான் தங்களுக்கு வேண்டிய ஸங்கதிகளை அடைகிறார்கள் என்று பொதுவாகச் சொல்லி, அவர்கள் செய்கிற தியானத்தில் உள்ள வேறுபாட்டைச் சொல்ல ஆரம்பிக்கிறார். பணத்தைவிரும்புகிறவன் நினைக்கவேண்டிய விதத்தையும், அந்த நினைவுக்குத் தகுந்தபடி செத்துப்போகிற காலத்தில் நினைக்க வேண்டிய விதத்தையும் சொல்லுகிறார்.

---

1. மனதைக் கொடுப்பது—நினைப்பது. புத்தியைக் கொடுப்பது பகவான் நினைத்தஸங்கதியைக் கொடுப்பார் என்கிற தீர்மானம்.

நாள்தோறும் அப்யாஸத்தையும், யோகத்தையும் செய்வதால், என்னைத்தவிர வேறொன்றையும் நினைக்காத மனதால், செத்துப்போகிற ஸமயத்தில் மேலே சொல்லுகிறபடி என்னையே அடைகிறான். அதாவது—ஜடபரதர் மான் உருவத்தை அடைந்தது போல், ஐசுவரியத்தை யுடையவனாக என்னை நினைத்து, என்னைப் போல் ஐசுவரியத்தை அடைகிறான். அப்யாஸம் என்றால், பழக்கம். அதாவது—யோகம் செய்யாத காலத்திலும், சாஸ்திரத்தில் சொல்லியவேலைகளைச் செய்து மீந்த காலத்திலும் என்னையே நினைத்துக்கொண்டிருப்பது. யோகம் என்றால், ஒரு காலத்தில் தியானம் செய்ய வேண்டிய முறைப்படி என்னை இடைவிடாமல் நினைப்பது. [8]

கவிம் புராணமநுஶாஸிதாரமணோரணீயாம்ஸமநுஸ்மரேத்ய: | ஸர்வஸ்ய தாதாரமசிந்த்யரூபமாதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் || ௯ ||

ப்ரயாணகாலே மநஸாऽசலேந பக்த்யா யுக்தோ யோகபலேந சைவ | ப்ருவோர்மத்யே ப்ராணமாவேஶ்ய ஸம்யக் ஸ தம் பரம் புருஷமுபைதி திவ்யம் || ௧௦ ||

கவிம்-ஸர்வஜ்ஞம் | புராணம்-புராதநம் | அநுஶாஸிதாரம்-விஶ்வஸ்ய ப்ரஶாஸிதாரம் | அணோரணீயாம்ஸம்-ஜீவாதபி ஸூக்ஷ்மதரம் | ஸர்வஸ்ய தாதாரம்-ஸர்வஸ்ய ஸ்ரஷ்டாரம் | அசிந்த்யரூபம்-ஸகலேதரவிஸஜாதீயஸ்வரூபம் | ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்-அப்ராக்ருதஸ்வாஸாதாரணதிவ்யரூபம் | தமேவம்பூதமஹரஹரப்யஸ்யமாநபக்தியுக்தயோகபலேநாஹிதஸம்ஸ்காரதயா அசலேந மநஸா ப்ரயாணகாலே ப்ருவோர்மத்யே ப்ராணமாவேஶ்ய-ஸம்ஸ்தாப்ய தத்ர ப்ருவோர்மத்யே திவ்யம் புருஷம் யோऽநுஸ்மரேத் | ஸ தமேவோபைதி - தத்பாவம் யாதி - தத்ஸமாநைஶ்வர்யோ பவதீத்யர்த: || ௧௦ ||

பணத்தை வேண்டுகிறவன் பகவானை எல்லாம் தெரிந்தவராகவும், எப்பொழுதுமிருக்கிறவராகவும், எல்லா லோகங்களையும் அட

விஸ்தாரமாகக் கேட்டேன். 1 தாமரை யிதழ்போன்ற கண்களை உடையவரே! எல்லா உலகமும் எப்பொழுதும் உம்முடைய உபயோகத்துக்காகவே இருக்கிறது. ஞானம், பலம் முதலான நல்ல குணங்களின் கூட்டங்களாலே நீர் தான் மிகவும் உயர்ந்தவர். எல்லா உலகத்தையும் தாங்குகிறீர். உம்மால் தான் எல்லா உலகமும் ஒரு ஸங்கதியை நினைப்பது, இமைக் கொட்டுவது முதலான எல்லா வேலைகளையும் செய்கிறது. இது முதலான 2 எப்பொழுது மிருக்கிற அளவில்லாத உம்முடைய பெருமைகளையும் கேட்டேன் இவைகளைக் கேட்டேனே [2]

ஏவமேதத்யதாத்த த்வமாத்மாநம் பரமேஶ்வர ।
த்ரஷ்டுமிச்சாமி தே ரூபமைஶ்வரம் புருஷோத்தம ॥

ஹே பரமேஶ்வர! ஏவமேதத் யதாத்த த்வம், யதாத்மாநம் ப்ரவீஷி । புருஷோத்தம! ஶ்ரிதவாத்ஸல்ய ஜலதே! தவைஶ்வரம்-[illegible] ஸர்வஸ்ய ப்ரஶாஸித்ருத்வ பாலயித்ருத்வ ஸ்ரஷ்ட்ருத்வ ஸம்ஹர்த்ருத்வ பர்த்ருத்வ கல்யாணகுணாகரத்வ பரதரத்வ ஸகலேதர விஸஜாதீயத்வப்ரப்ருதி ரூபம் த்ரஷ்டும் ஸாக்ஷாத்கர்தும் இச்சாமி ॥ ॥ 3 ॥

(முன் பக்கத்தின் குறிப்பு.) 1 அர்ஜுனனுக்குச் சண்டையில் உத்ஸாஹத்தை உண்டுபண்ணுவதற்காக மாத்திரம் சொன்னதல்ல என்று கருத்து.

1. இதனால் தாமரைக்கண்ணோடு கூடிய அப்ராக்ருதமான திருமேனி க்ருஷ்ணாவதாரத்திலும் இருந்ததென்று தெளிவாய்க் காணப்பட்டதாக ஏற்படுகிறது

2 ச்லோகத்தில் பெருமையை 'அவ்யயம்' என்று சொல்லியிருக்கிறது. அதற்கு 'குறைவில்லாத'' என்று பொருள். காலத்தினாலும், விஷயத்தினாலும், கணக்காலும், உயர்த்தியாலும் அந்தப்பெருமைக்கு அளவில்லை அதாவது—பகவானுடைய பெருமை எப்போதுமிருக்கிறது. அறிவு, அழகு, ஸொத்து முதலிய எல்லா விஷயங்களிலும் பெருமையுள்ளவன். இத்தனை விஷயங்களில்தான் பெருமையிருக்கிறதென்று விஷயங்களுக்குக் கணக்கில்லை. பெருமைக்கு அளவுமில்லை—என்று கருத்து.

வராகவும், ஒவ்வொரு நாளும் பிரீதியுடன் தியானம் செய்யவேண்டியது. அந்தப் பழக்கத்தாலே ஸம்ஸ்காரம் [1] வலுத்து வேறொன்றையும் நினையாத மனதால் செத்துப் போகும் காலத்தில் புருவங்களுக்கு நடுவில் பிராணனை வைத்து, அந்த இடத்திலேயே [2] பகவானை அப்படியே நினைத்து உடம்பை விட்டால், என்னைப் போல [3] ஐசுவரியத்தை அடைகிறான். [9—10]

அத² கைவல்யார்தி²நாம் ஸ்மரணீயமாஹ—

யத³க்ஷரம் வேத³விதோ³ வத³ந்தி விஶந்தி யத்³யதயோ வீதராகா³꞉ । யதி³ச்ச²ந்தோ ப்³ரஹ்மசர்யம் சரந்தி தத்தே பத³ம் ஸங்க்³ரஹேண ப்ரவக்ஷ்யே ॥ ௧௧ ॥

யத³க்ஷரம் அஸ்தூ²லத்வாதி³கு³ணகம் வேத³விதோ³ வத³ந்தி। வீதராகா³ஶ்ச யதயோ யத³க்ஷரம் விஶந்தி। யத³க்ஷரம் ப்ராப்துமிச்ச²ந்தோ ப்³ரஹ்மசர்யம் சரந்தி। தத்பத³ம் ஸங்க்³ரஹேண தே ப்ரவக்ஷ்யே। பத்³யதே க³ம்யதே சேதஸேதி பத³ம்- தந்நிகி²லவேதா³ந்தவேத்³யம் ஶ்ரீமத³க்ஷரம் யதோ²பாஸ்யம் ததா² ஸங்க்ஷேபேண ப்ரவக்ஷ்யாமீத்யர்த²꞉ ॥ ௧௧ ॥

---

வஸ்துக்களுக்கும் காரணமான பிரகிருதி என்கிற திரவியத்தைச் சொல்லுகிறது. அதைக்காட்டிலும் மேலான என்றால் சுத்தஸத்வம் என்ற திரவியத்தாலுண்டானது என்று ஏற்படுகிறது. அதிலிருந்து உண்டான திருமேனியானது கர்மத்துக்கு உட்பட்டதன்று. அழிவில்லாதது. ஒருவிதக் குற்றமுமில்லாதது. அது அநேக ஸூரியர்கள் சேர்ந்தது போல் அளவில்லாத பிரகாசத்தை யுடையது.

1. யோகத்தைச் சொல்லுகிற இடங்களில் புருவங்களுக்கு நடுவில் பிராணனை அசையாமல் வைக்கவேணும் என்று சொல்லியிருக்கையால், அதை இங்கே சொல்லி இருக்கிறது.

2. புருவங்களின் நடுவில்தான் பகவானையும் இருப்பதாக நினைக்கவேணும். பகவானுக்கு வேறு இடத்தைச் சொல்லாததினாலும், யோகத்தைச் சொல்லுமிடங்களில் இந்த இடத்தையே சொல்லியிருப்பதாலும், பகவானுக்கும் இதுவே இடம்.

3. ஐசுவரியத்துக்காகக் கீழ்ச்சொன்ன குணங்களோடு பகவானைத் தியானம் பண்ணுகிறவனுக்கு பகவானைப் போல ஐசுவரியம் மாத்திரம் வருமே ஒழிய, பகவானுடைய குணங்கள் வாராது. மோக்ஷத்திற்காக பகவானைத் தியானம் பண்ணுகிறவனுக்கு குணங்களும் வரும்.

அவ—ஆத்மஸ்வரூபத்தை மாத்திரம் பார்க்க ஆசைப்படுகிறவர்கள் நினைக்கவேண்டிய விதத்தைச் சொல்லுகிறார்—

1 அஸ்தூலத்வம் (பெருமனு யில்லாமை) முதலான குணங்களுள்ளதாக எந்த அக்ஷரத்தை (பிரும்மத்தை) வேதமறிந்தவர்கள் சொல்லுகிறார்களோ, மற்ற வஸ்துக்களில் ஆசை யில்லாதவர்கள் எந்த அக்ஷரத்தை அடைகிறார்களோ, எந்த அக்ஷரத்தை அடைய வேணுமென்று ஆசைப்பட்டு, ஸ்திரீயை நினைப்பது முதலியவைகளைச்செய்யாமலிருக்கிறார்களோ, அந்த நானுகிற- எல்லா வேதாந்தங்களாலும் அறியத் தகுந்த— 2 அக்ஷரத்தை எப்படித் தியானம் செய்யவேண்டுமோ, அப்படிச் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன். [11]

ஸர்வத்வாராணி ஸம்யம்ய மனோ ஹ்ருதி நிருத்ய ச ।
மூர்த்ந்யாதாயாத்மன: ப்ராணமாஸ்திதோ யோகதாரணாம் ॥ ௧௨ ॥
ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந்மாமநுஸ்மரன் ।
ய: ப்ரயாதி த்யஜந் தேஹம் ஸ யாதி பரமாம் கதிம் ॥ ௧௩ ॥

ஸர்வாணி ச்ரோத்ராதீநீந்த்ரியாணி ஜ்ஞாநத்வாரபூதாநி ஸம்யம்ய- ஸ்வவ்யாபாரேப்யோ விநிவர்த்ய, ஹ்ருதயகமலநிவிஷ்டே மய்யக்ஷரே மனோ நிருத்ய, யோகாக்யாம் தாரணாமாஸ்தித: மய்யேவ நிச்சலாம் ஸ்திதிமாஸ்தித:, ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம மத்வாசகம் வ்யாஹரந், வாச்யம் மாமநுஸ்மரந், ஆத்மந: ப்ராணம் மூர்த்ந்யாதாய, தேஹம் த்யஜந் ய: ப்ரயாதி, ஸ யாதி பரமாம் கதிம் - ப்ரக்ருதிவியுக்தம் மத்ஸமாநாகாரமபுநராவ்ருத்திமாத்மாநம் ப்ராப்நோதீத்யர்த்த: । ஏவம் ஸவெ

---

1. தன் (ஆத்ம) ஸ்வரூபத்தை மாத்திரம் பார்க்கவேணு மென்று ஆசைப்படுகிறவன் தியானம் செய்யவேண்டிய பகவானுடைய குணங்கள்—முண்டக உபநிஷத்தில் முதல் முண்டகத்தில் சொன்ன இது பருத்ததுமன்று, இது சின்னதுமன்று, இதுமுதலான குணங்கள்.

2. இங்கே ஸ்வரூபத்தில் ஒருவிதமான மாறுதலில்லாத பகவானுடைய ஸ்வரூபத்தின் தியானம் சொன்னது--ஸ்வரூபத்தில் மாறுதலில்லாத ஜீவனுடைய ஸ்வரூபத்தை அடைவதற்காக.

ஷு ஸர்வேஷு நஶ்யத்ஸு ந விநஶ்யதி | அவ்யக்தோऽக்ஷர இத்யுக்தஸ்தமாஹு: பரமாம் கதி’’மித்யநந்தரமேவ வக்ஷ்யதே ॥

அறிவுக்கு வழிகளான காது முதலான இந்திரியங்களை அவைகளின் விஷயங்களில் போகாமல் 1 அடக்கி, ஹிருதயகமலத்தில் இருக்கும் அக்ஷரமாகிய என்னிடத்தில் மனதை 2 நிறுத்தி, என்னையே 3 நிலையாய் தியானம் பண்ணுகிறவன் என்னைச் சொல்லுகிற ஒற்றை எழுத்தான பிரணவத்தைச் சொல்லிக் கொண்டு, அந்த எழுத்துக்குப் பொருளான என்னை நினைத்துக் கொண்டு, தன் 4 பிராணனைத் தலையில் வைத்து, உடம்பைவிடவேண்டியது. அவன் உயர்ந்த இடத்தை அடைகிறான். அதாவது—பிரகிருதியின் நினைவில்லாமல் என்னைப் போலிருக்கிற மறுபடியும் திரும்பி வருவது இல்லாத 5 ஜீவஸ்வரூபத்தை அடைகிறான். அதாவது

---

1. இப்படி அடக்குவதை பிரத்யாஹாரம் என்று சொல்லுகிறது.

2. சுலோகத்தில் மனதை ஹிருதயத்தில் வைத்து என்றிருக்கிறது. அதற்கு மனது என்கிற இந்திரியத்தை ஹ்ருதயம் என்கிற இடத்தில்வைத்து—அதாவது மனதால்ஹிருதயத்தைநினைத்து—என்று தான்பொருளாகும். பகவானுடைய தியானத்தைசொல்லவந்தஇடத்தில் ஹிருதயத்தைத் தியானம்பண்ணும்படி சொல்லுவதுஸரியன்று. ஆகையால் மனதை ஹிருதயத்திலிருக்கும் பகவானிடத்தில் வைத்து என்று பொருள்கொள்ள வேணும்.

3. பிரத்யாஹாரம், தாரணை, தியானம் என்று யோகத்தின் படிகள் சொல்லியிருக்கின்றன. பிரத்யாஹாரம் என்பது கண்முதலான இந்திரியங்களை அடக்குவது. தாரணை என்பது மனதைத் தியானிக்க வேண்டியவஸ்துவைத் தவிர வெளியில்போகாதபடி அதில் நிறுத்துவது. தியானம் என்பது வேறுவஸ்துவின் நினைவு கலக்காமல் ஒன்றையே நினைப்பது. இந்தஇடத்தில் தாரணம் என்று சொன்னது இரண்டாவதான தாரணையைச் சொல்லவில்லை. அதற்கு அடுத்தபடியான தியானத்தைச் சொல்லுகிறது.

4. மோக்ஷத்தை ஆசைப்பட்டவனுடைய பிராணன் உடம்பை விட்டுப் போகும் காலத்தில் தலைவழியாய் போகவேண்டியதாகையால், “பிராணனைத்தலையில்வைத்து’’ என்று சொல்லியிருக்கிறது.

5. ஆத்மாவை மாத்திரம் பார்க்கவேணுமென்று ஆசைப்பட்டவன் அடையவேண்டியது தன் ஸ்வரூபம் மாத்திரம்தான். ஆனால்இவன் தன்

பார்க்கிறான். அடியோடு கர்மம்போன ஜீவஸ்வரூபத்தை உயர்ந்த அடையவேண்டிய வஸ்துவாக மேலே 24-வது சுலோகத்தில் சொல்லப் போகிறது. (12—13)

அவ.— ஏவமைஶ்வர்யார்தி²ந꞉ கைவல்யார்தி²நஶ்ச ஸ்வப்ராப்யாநுகு³ணம் ப⁴க³வது³பாஸநப்ரகார உக்த꞉ | அத² ஜ்ஞாநிநோ ப⁴க³வது³பாஸநப்ரகாரம் ப்ராப்திப்ரகாரம் சாஹ —

அநந்யசேதா꞉ ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ꞉ |
தஸ்யாஹம் ஸுலப⁴꞉ பார்த² நித்யயுக்தஸ்ய யோகி³ந꞉ ||14||

நித்யஶ꞉ ஸர்வகாலம் ஸததம் ஸர்வதா³ அநந்யசேதா꞉ யோ மாம் ஸ்மரதி, அத்யர்த²மத்ப்ரியத்வேந மத்ஸ்ம்ருத்யா விநா ஆத்மதா⁴ரணமலப⁴மாநோ நிரதிஶயப்ரியாம் ஸ்ம்ருதிம் ய꞉ கரோதி, தஸ்ய நித்யயுக்தஸ்ய நித்யயோக³ம் காங்க்ஷமாணஸ்ய யோகி³நோ(அ)ஹம் ஸுலப⁴꞉, அஹமேவ ப்ராப்ய꞉, ந மத்³பா⁴வ ஐஶ்வர்யாதி³க꞉; ஸுலப⁴ஶ்ச தத்³வியோகா³ஸஹமாநோ(அ)ஹமேவ தம் வ்ருணே | மத்ப்ராப்த்யநுகு³ணோபாஸநவிபாகம் தத்³விரோதி⁴நிரஸநம் அத்யர்த²ப்ரியத்வாதி³கம் அஹமேவ த³தா³மீத்யர்த²꞉ | "யமேவைஷ வ்ருணுதே தேந லப்⁴ய꞉" இதி ஹி ஶ்ரூயதே | வக்ஷ்யதி ச "தேஷாம் ஸததயுக்தாநாம் ப⁴ஜதாம் ப்ரீதிபூர்வகம் | த³தா³மி பு³த்³தி⁴யோக³ம் தம் யேந மாமுபயாந்தி தே || தேஷாமேவாநுகம்பார்த²மஹமஜ்ஞாநஜம் தம꞉ | நாஶயாம்யாத்மபா⁴வஸ்தோ² ஜ்ஞாநதீ³பேந பா⁴ஸ்வதா" இதி || ||14||

அவ—இப்படி பணத்தையும், தன் ஸ்வரூபத்தை மாத்திரம் அநுபவிப்பதையும் அடைய வேண்டியவர்கள் பகவானைத் தியானம் பண்ணவேண்டிய விதம் சொல்லப் பட்டது. இப்போது ஞானி பகவானைத் தியானம் செய்யும் விதத்தையும், பிரயோஜனத்தை அடைகிற விதத்தையும் சொல்லுகிறார்—

ஸ்வரூபத்தைமாத்திரம் கொஞ்சகாலம் அநுபவித்து, பிறகுபகவானிடம் போகிறான். ஸம்ஸாரத்துக்கு இவன் திரும்பி வருகிறதில்லை. ஆகையாலே ஜீவஸ்வரூபத்தையும் உயர்ந்த இடமாகச்சொல்லிற்று.

ஆரம்பித்தது முதல் பிறகு ஒருக்காலமும் விடாமல், அதாவது—பணம், தன்னைமாத்திரம் அநுபவிப்பது ஆகியபிரயோஜனங்களை விரும்பாமல்,பகவானைத் தவிர இன்னொரு இடத்தில் மனதை வைக்காமல்—என்னிடத்தில் அளவில்லாத ஆசையிருப்பதனுல், என்னை அரைக்ஷணம் நினைக்காத போனுல் தாங்கமுடியாமல், எவன் அளவில்லாத பிரீதியுடன் தியானம்செய்கிறுனே, எப்போதும் என்னுடனே இருக்கவேணுமென்று ஆசைப் பட்டுக்கொண்டிருக்கிற அந்த யோகி என்னைத் தான் அடைகிறுன். கீழேசொன்ன இரண்டு பேர்களைப் போல் என் மாதிரியான ஐசுவரியம் முதலானவைகளை அடைகிறதில்லை. பிரயாஸமில்லாமலும் என்னை அடைகிறுன். என்னை ஆசைப்படாமல் ஐசுவரியம் முதலானவைகளை ஆசைப் படுகிறவர்களுக்குப் பிரயாஸம் அதிகம். என்னையே அடையவேணுமென்று தியானம் பண்ணுகிறவனைவிட்டு என்னுல் பிரியமுடியவில்லை. ஆகையால் அவனுடைய தியானத்தை ச்சீக்கிரம் 1 பழுக்கும்படி செய்கிறேன். அதற்கு 2 இடஞ்சலையும் போக்குகிறேன். அவனுக்கு என்னிடத்தில் அளவில்லாத பிரீதியையும் கொடுக்கிறேன். என்னேடுகூட பரமபதத்தில் ஒரு கட்டிலில் அவன் உட்காருகிறவரையில் நடுவில் அவனுல் செய்ய முடியாத—செய்யவேண்டிய—எல்லா வேலைகளையும் செய்கிறேன். இந்த வேலையை என்னுடைய சுமையாக நினைத்துக் கொண்டிருக்கிறேன். 3 (14)

1. பழுக்கும்படிசெய்வதாவது—நினைவு வேறு எண்ணங்கலக்காமல் ஒரே கம்பிபோலிருக்கும்படியும், கண்ணுல் பார்ப்பதுபோல் தெளிவாயிருக்கும்படியும் செய்வது, பகவானைப் பார்க்க வேணுமென்று அதிகமான ஆவலை யுண்டுபண்ணுவது முதலானவைகளைச் செய்வது.

2. இடஞ்சல்கள்—கெட்ட கர்மங்கள், ரஜோகுணம்—தமோகுணம்மேலிடுதல், ஆசையும், த்வேஷமும், மயக்கமுமுண்டாவது முதலானவைகள்.

3. இங்கே சொன்னவைகளெல்லாம் வெறும் ஸ்தோத்திரமன்று, அப்படியே வேதம் சொல்லுகிறது. இதே ஸங்கதியை 10-வது அத்தியாயத்தில் 10-வது சுலோகத்தில் சொல்லப் போகிறது. பணத்தையும ஆத்மஸ்வரூபம் மாத்திரத்தின் பார்வையையும் ஆசைப்படுகிறவர்கள் தியானம் பண்ண வேண்டிய பகவானுடைய குணங்கள் இன்னது

𑌅𑌥 — 𑌅𑌤𑌃 𑌪𑌰𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌿𑌣 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌃 𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌿𑌨𑌶𑍍𑌚 𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂, 𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌵𑌤𑌃 𑌪𑍁𑌨𑌰𑌨𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌚𑌾𑌹—

𑌮𑌾𑌮𑍁𑌪𑍇𑌤𑍍𑌯 𑌪𑍁𑌨𑌰𑍍𑌜𑌨𑍍𑌮 𑌦𑍁𑌃𑌖𑌾𑌲𑌯𑌮𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌮𑍍 ।
𑌨𑌾𑌪𑍍𑌨𑍁𑌵𑌨𑍍𑌤𑌿 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑌰𑌮𑌾𑌂 𑌗𑌤𑌾𑌃 ॥ ॥௧௫॥

𑌮𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌪𑍁𑌨𑌰𑍍𑌨𑌿𑌖𑌿𑌲𑌦𑍁𑌃𑌖𑌾𑌲𑌯𑌮𑌸𑍍𑌥𑌿𑌰𑌂 𑌜𑌨𑍍𑌮 𑌨 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌵𑌨𑍍𑌤𑌿 । 𑌯𑌤 𑌏𑌤𑍇 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃- 𑌮𑌹𑌾𑌮𑌨𑌸𑌃, 𑌯𑌥𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑌤𑍍𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾 𑌅𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑍇𑌨 𑌮𑌯𑌾 𑌵𑌿𑌨𑌾 𑌆𑌤𑍍𑌮𑌧𑌾𑌰𑌣𑌮𑌲𑌭𑌮𑌾𑌨𑌾 𑌮𑌯𑍍𑌯𑌾𑌸𑌕𑍍𑌤𑌮𑌨𑌸𑍋 𑌮𑌦𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌃, 𑌮𑌾𑌮𑍁𑌪𑌾𑌸𑍍𑌯 𑌪𑌰𑌮𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌰𑍂𑌪𑌂 𑌮𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌾𑌃 ॥ ॥௧௫॥

அவ—அவரவர்கள் அந்தந்த வேலைகளைச் செய்ய ஆரம்பிப்பதற்குமுன் அவைகளால் வரும் பிரயோஜனங்களின் ஸங்கதிகளை அவசியம் அறியவேண்டியது. ஆகையால் இதன் பிறகு இந்த அத்தியாயத்தின் மேல்பாகத்தில் ஞானியும், ஆத்மாநுபவத்தை மாத்திரம் ஆசைப் படுகிறவனும் தங்கள் பிரயோஜனங்களை அடைந்த பிறகு திரும்பி வருகிறதில்லை என்றும், பணத்தை ஆசைப்பட்டவன், அதை அடைந்து மறுபடியும் பிறக்கிறானென்றும் சொல்லுகிறார்—

என்னை அடைந்தவர்கள் எல்லா துக்கங்களுக்கும் இருப்பிடமாயும் நிலையில்லாததுமான பிறப்பை மறுபடியும் அடைகிறதில்லை.

---

என்று கீழே சொல்லப்பட்டது. பகவானையே ஆசைப்படுகிறவர்கள் இன்ன குணங்களுடன் தியானம் பண்ணவேண்டியது என்று இங்கே சொல்லவில்லை. உபநிஷத்துக்களில் அனேக விதமான தியானங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்தந்தத்தியானத்தைச் செய்யும்போது, அததற்கு ஏற்பட்ட குணங்களுடன் தியானம்செய்யவேண்டியது என்று நினைத்து, அவைகளைஇங்கே தனியாகச்சொல்லவில்லை என்றுதோன்றுகிறது. இந்தசுலோகத்தின்அவதாரிகையில், "பகவானைத்தியானம்செய்யும் விதத்தையும்" என்று சொன்னது எது வென்றால், தியானத்தை ஆரம்பித்ததுமுதல் எப்போதும் பகவானையே நினைத்துக் கொண்டிருப்பது, மற்றதையும், மற்றப் பிரயோஜனங்களையும் நினைக்கக்கூடாது என்பது முதலானவை.

ஏனென்றால், அவர்கள் பெரிய மனதுடையவர்கள்; என்னை உள்ளபடி அறிந்தவர்கள்; என்னிடத்தில் அளவில்லாத ப்ரீதியினாலே என்னைவிட்டிருந்தால், ஒரு நிமிஷம்கூடத் தாங்க முடியாதவர்கள்; இவர்கள் என்னிடத்திலேயே மனதை வைத்து, என்னையே தியானம் செய்து, உயர்ந்த ப்ரயோஜனமான என்னை அடைந்திருக்கிறார்கள். [15]

[illegible]

[illegible] ‖௧௬‖

[illegible] ‖௧௬‖

அவ—ஐசுவரியத்தை அடைந்தவர்கள் மறுபடியும் பிறக்கிறார்கள் என்பதற்கும், பகவானை அடைந்தவர்கள் மறுபடியும் பிறக்கிறதில்லை என்பதற்கும் காரணத்தைச் சொல்லுகிறார்—

1 பிரும்மலோகம் உள்பட 2 பிரும்மாண்டத்தின் நடுவிலுள்ள—ஸுகத்திற்கும் ஐசுவரியத்திற்கு மிருப்பிடமான—எல்

---

1. பிரும்மலோகம் உள்பட என்பது சலோகத்திலிருக்கிற "ஆ" என்ற சொல்லுக்குப் பொருள்.

2. பிரும்மாண்டம் என்பது பிரும்மாவின் வீடு. பிரகிருதி பெரிய ஸமுத்திரம், பிரும்மாண்டங்கள் அதிலுண்டாகும் குமிழிகள். இப்படியானால் அதற்குள் இருப்பவர்கள் அழிந்து போவார்கள் என்று சொல்ல வேண்டுமோ.

லா லோகங்களும் ஒரு காலத்தில் அழிந்துவிடுகின்றன. அதனால் அவைகளை அடைந்தவர்கள் மறுபடியும் பிறக்கிறார்கள். வீடு இருந்த விடம்தெரியாமல் அழிந்துபோனால், அதிலிருந்தவர்கள் இன்னொருஇடம் போகமாட்டார்களோ. என்னுடைய இடமான பரமபதம் நிலையானது. அதற்கு ஒருக்காலும் அழிவில்லை. அந்தஇடத்தில் 1 எல்லாம் தெரிந்த—நினைத்தபடி தவறாமல் நடத்துகிற—எல்லாலோகங்களையு முண்டுபண்ணி, காப்பாற்றி, அழிப்பதை விளையாட்டாகச் செய்கிற—அளவில்லாத தயையுள்ள—எப்போதும் ஒருமாதிரியாயிருக்கிற—என்னை அடைந்தவர்களுக்கு அழிவுக்குப் பேச்சேயில்லாமையாலே, மறுபடியும் பிறப்பே கிடையாது. [ 16 ]

ஸ ப்ரஹ்மலோகபர்யந்தாநாம் லோகாநாம் தத்வர்திநாம் ச வஸ்தூநாம் ப்ரஹ்மணஶ்ச காலவ்யவஸ்தாமாஹ—

ஸஹஸ்ரயுகபர்யந்தமஹர்யத் ப்ரஹ்மணோ விது: ।
ராத்ரிம் யுகஸஹஸ்ராந்தாம் தேऽஹோராத்ரவிதோ ஜநா: ॥

அவ்யக்தாத் வ்யக்தய: ஸர்வா: ப்ரபவந்த்யஹராகமே ।
ராத்ர்யாகமே ப்ரலீயந்தே தத்ரைவாவ்யக்தஸம்ஜ்ஞகே ॥௧௭॥

பூதக்ராம: ஸ ஏவாயம் பூத்வா பூத்வா ப்ரலீயதே ।
ராத்ர்யாகமேऽவஶ: பார்த ப்ரபவத்யஹராகமே ॥௧௮॥

யே மநுஷ்யாதிசதுர்முகாந்தாநாம் ஸர்வேஷாம் அஹோராத்ரவ்யவஸ்தாவிதோ ஜநா:, தே ப்ரஹ்மண: சதுர்

1. பகவானிடம் போனவன் மறுபடி பிறக்கிறதில்லை என்பதற்கு காரணங்கள் இந்த சொற்களாலே சொல்லப்படுகின்றன. பகவானைத்த விரமற்றவர்களுக்கு எல்லாம் தெரியாது. நினைத்தபடி செய்யமுடியாது. பகவானாலுண்டு பண்ணப் பட்டவர்கள். இரக்கமில்லாதவர்கள். ரஜஸ் ஸும் தமஸ்ஸு முள்ளவர்களாய், அதனால் ஆசையும்த்வேஷமும் உள்ள வர் களாயிருப்பார்கள். அவர்கள் ஒரேமாதிரியாய் இருக்கமாட்டார்கள். இப்படிப்பட்ட தாழ்ந்த தேவதையை யடைந்தவன் அந்ததேவதையா லேயோ, மற்றவர்களாலேயோ அந்தவிடம் விட்டுத் திரும்பிவரக்கூடும். இடமும் நிலையில்லை, அவர்களும் நிலையில்லை.

[illegible] ||௧௭—௧௮—௧௯||

அவ—பிரும்மலோகம் உள்பட எல்லா லோகங்களும், அவைகளிலிருக்கிறவர்களும் இத்தனை இத்தனை காலமிருந்து அழிய வேண்டியதென்று பகவான் ஏற்பாடு செய்திருக்கிறான் என்று சொல்லுகிறார்—

மனிதன் முதல் பிரும்மா வரையிலுள்ளவர்களுக்கு என்னாலே ஏற்படுத்தப்பட்ட நாள் கணக்கை அறிந்தவர்கள், பிரும்மாவின் ஒரு பகல் ஆயிரம் சதுர்யுகம் (நாலுயுகங்கள்) என்று அறிகிறார்கள். ராத்திரியும் அதேமாதிரி. பூலோகம், புவர்லோகம், ஸ்வர்லோகம் என்கிற லோகங்களில் 1 உடம்புகளாகவும், இந்திரியங்க

1. சுலோகத்தில் "அவியக்தாத்" என்றும், "வ்யக்தய:" என்றும் இரண்டு வடமொழிச்சொற்கள் இருக்கின்றன. இவைகளில் 'அவ்யக்த" என்றசொல்லுக்கு மூலப்பிரகிருதி யென்றும், "வியக்தய:" என்றசொல்லுக்கு அதிலிருந்து உண்டான மஹத் முதலானவைகள் என்றும் பொருள் ஏற்பட்டிருக்கிறது. இந்த இடத்தில் அப்படிப்பொரு

ளாகவும், அநுபவிக்கக்கூடிய வஸ்துக்களாகவும், அநுபவத்துக்கு வேண்டிய இடங்களாகவும் இருக்கிற எல்லா வஸ்துக்களும் பிரும்மாவுக்குப் பொழுது விடிகிற காலத்தில் பிரகிருதியினால் ஏற்பட்ட அவனுடைய உடம்பிலிருந்து உண்டாகின்றன. அஸ்தமன காலத்தில் அந்த உடம்பிலேயே அடங்கிவிடுகின்றன. இந்த மூன்றுலோகத்திலிருக்கும்-காமத்துக்கு உட்பட்ட-1எல்லாப்பிராணிகளும் பிரும்ம வுக்கு பொழுதுவிடியும் போது உண்டாகி, அஸ்தமன் காலத்தில் செத்து, மறுபடியும் பொழுதுவிடியும்போது உண்டாகிறார்கள். இவையெல்லாம் இப்படி உண்டாகிறதும் போகிறதுமாயிருக்கின்றன. பிரும்மாவுக்கு 2 நூறுவர்ஷமான பிறகு, பிரும்மலோகம் வரையிலுள்ள லோகங்களும், 3 அதைத

---

ல்ல. ஏனென்றால், இந்த இடம் பிரும்மாவுக்குப் பொழுது விடிகிற காலத்தில் உண்டாகிறவைகளைச் சொல்லுகிறது. மஹத் முதலானவைகள் பிரும்மா உண்டாவதற்கு முன்பே உண்டானவைகள். அவ்யக்த என்பது—பிரும்மாவின் உடம்பாக ஆகியிருக்கிற பிரகிருதியையும், "வ்யக்தய:" என்பது பிரும்மாவினால் உண்டுபண்ணப்பட்ட எல்லாவஸ்துக்களையும் சொல்லுகின்றன.

1. இங்கு "அவச." என்ற சொல்லுக்கு ஒருவருக்கும் உட்படாதவனென்று பொருளல்ல. பிறக்கிறான், சாகிறான் என்று சொல்லுகையால், தன அதீனமில்லை—காமத்துக்கு உட்பட்டவன் என்றுபொருள்.

2. கீழ்சொன்னபடி, உலகமுண்டாவதையும் அழிவதையும் நைமித்திகப்பிரளயம் என்று சொல்லுகிறது. இதைச்சொன்னவருக்கு பிராகிருதப்பிரளயத்தையும் சொல்வதில் கருத்து. பிராகிருதப்பிரளயம் என்றால் பிரும்மாண்டமும் அழிந்துபோவது. அப்போது பிரும்மாவினுடைய இடத்துக்கும் பிரும்மாவுக்கும் அழிவு ஏற்படும். இதுவே கீழ் 16-வதுசுலோகத்தில் சொல்லப்பட்டது.

3. பூமியானது ஜலமாக ஆகிறது. ஜலம் நெருப்பாகவும், நெருப்பு காற்றாகவும் ஆகின்றன. இந்தவரிசையாய் எல்லாம் பிரகிருதியாக ஆகி, அதுவும், ஜீவன்களும் பகவானிடத்தில் சேர்ந்துவிடுகின்றன. மண் ஜலமாவதுபோல பிரகிருதிக்கும் ஜீவன்களுக்கும் அழிவில்லை. அவைகளுக்கு பகவானிடம் சேர்க்கைதான். அப்போது அவைகளைத் தனி உருவாக அறியமுடியாது. இப்படி பூமிமுதலானவைகளே அழிந்தால், அவைகளின் சேர்க்கையாலுண்டான பிரும்மாண்டத்திறகும், பிரும்மாவினுடைய உடம்புக்கும் அழிவுண்டென்று சொல்லவேண்டுமோ.

யுண்டாக்கும் வஸ்துக்களில் வரிசையாய் அடங்கி, கடைசியில் என்னிடம் வந்து சேருகின்றன. பிரும்மாவும் போய்விடுகிறார். இப்படி என்னைத்தவிர எல்லா வஸ்துக்களுக்கும் ஒரு காலத்தில் என்னிடத்திலிருந்து பிறப்பும், என்னிடத்தில் வந்து அடங்குவதும் இருக்கிறபடியாலே, அவர்களுக்கு அழிவு கட்டாயம் வந்தே தீரும். ஆகையால் ஐசுவரியத்தை அடைந்தவர்கள் மறுபடியும் பிறக்காமலிருக்க முடியாது. எனக்கும் என்னிடத்துக்கும் இப்படி அழிவில்லாமையாலே, என்னிடம் வந்தவர்களுக்கு மறு பிறப்பில்லை. [17-18-19]

அத² — அத² கைவல்யம் ப்ராப்தாநாமபி அநாவ்ருத்திம் விஶிநஷ்டி இத்யாஹ —

பரஸ்தஸ்மாத்து பா⁴வோऽந்யோऽவ்யக்தோऽவ்யக்தாத்ஸநாதந: ।
ய: ஸ ஸர்வேஷு பூ⁴தேஷு நஶ்யத்ஸு ந விநஶ்யதி ॥

அவ்யக்தோऽக்ஷர இத்யுக்தஸ்தமாஹு: பரமாம் க³திம் ।
யம் ப்ராப்ய ந நிவர்தந்தே தத்³தா⁴ம பரமம் மம ॥ ॥௨௧॥

தஸ்மாத் அவ்யக்தாத் அசேதநப்ரக்ருதே: புருஷார்த²தயா பர: உத்க்ருஷ்ட: பா⁴வ: அந்ய: ஜ்ஞாநைகாகாரதயா தஸ்மாத்³விஸஜாதீய: । அவ்யக்த: கேநசித் ப்ரமாணேந ந வ்யஜ்யத இத்யவ்யக்த: ஸ்வஸம்வேத்³யாஸாதா⁴ரணாகார இத்யர்த²: । ஸநாதந: உத்பத்திவிநாஶாநர்ஹதயா நித்ய: । ய: ஸர்வேஷு வியதா³தி³ஷு பூ⁴தேஷு ஸகாரணேஷு ஸகார்யேஷு விநஶ்யத்ஸு தத்ர தத்ர ஸ்தி²தோऽபி ந விநஶ்யதி । யோऽவ்யக்தோऽக்ஷர இத்யுக்த: "யே த்வக்ஷரமநிர்தே³ஶ்யமவ்யக்தம் பர்யுபாஸதே, கூடஸ்தோ²ऽக்ஷர உச்யதே" இத்யாதி³ஷு । தம் வேத³வித³: பரமாம் க³திமாஹு: । அயமேவ "ய: ப்ரயாதி த்யஜந் தே³ஹம் ஸ யாதி பரமாம் க³திம்" இத்யத்ர பரமக³திஶப்³தா³பி⁴ஹிதோऽக்ஷர: । ப்ரக்ருதிஸம்ஸர்க³வியுக்த: ஸ்வரூபேணாவஸ்தி²த ஆத்மேத்யர்த²: । யமேவம்ஸ்தி²தம் ஸ்வரூபேணாவஸ்தி²தம்

ப்ராப்ய ந நிவர்தந்தே | தத்³ தா⁴ம பரமம் மம - பரம் நியமந ஸ்தா²நம் | அசேதநப்ரக்ருதிரேகம் நியமநஸ்தா²நம் | தத்ஸம்ஸ்ருஷ்டரூபா ஜீவப்ரக்ருதிர்த்³விதீயம் நியமநஸ்தா²நம் | அசித்ஸம்ஸர்க³வியுக்தம் ஸ்வரூபேணாவஸ்தி²தம் முக்தஸ்வரூபம் பரமம் நியமநஸ்தா²நம் இத்யர்த²: | ததா²பி நாவ்ருத்திரூபம் | அத்ர ப்ரகாரஸாமாந்யாத் யாத³ர்ஶ்யம்: ப்ரகாரவிஶேஷ ஜ்ஞாநமேவ தத் ப்ரக்ருதிஸம்ஸ்ருஷ்டாத் பரிஶுத்³த⁴ஜ்ஞாநரூபாத் அநாவ பரிஶுத்³த⁴ஜ்ஞாநரூபதயா முக்தஸ்வரூபம் பரம் யாத் || ௨௧ ||

அவ—கைவல்லியத்தை (ஜீவாத்மாமாத்திரத்தின் அநுபவத்தை) அடைந்தவர்களும் மறுபடியும் பிறக்கிறதில்லை என்று சொல்லுகிருர்—

கீழே அவியக்தம் என்று சொல்லப்பட்ட அறிவில்லாத பிரகிருதியைக் காட்டிலும் ஜீவன் என்கிற வஸ்து உயர்ந்தப் பிரயோஜநமாயிருப்பதாலே, உயர்ந்தது. எப்போதும் அறிவுள்ளதாயிருக்கையாலே பிரகிருதியைக்காட்டிலும் அது வேறுஜாதி. சப்தம் முதலிய பிரமாணங்களால் ஜீவன் என்று ஒன்று ஏற்பட்டாலும், நான் என்று தன்னுலே தான் தனக்குத் தோன்றுகிறது. பிறப்புக்கும் அழிவுக்கும் தகுதியில்லாமையால், நித்தியம் என்று சொல்லப்படுகிறது. அது அக்ஷரம்-அதாவது 1 எல்லா உடம்புகளிலிருந்தாலும் அவைகள் அழியும்போது அது

1. சுலோகத்தில் "பூதேஷு" என்கிற சொல் இருக்கிறது. அது பூமி முதலான ஐந்து மஹாபூதங்களைச் சொல்லி, அவைகளால் உண்டான உடம்புகளைச்சொல்லுகிறது. உடம்புகள் எல்லாம் அழியும்போதும், அதிலிருக்கும் ஜீவனுக்கு அழிவில்லை. ஜீவன் அழிவில்லைஎன்று இங்கேசொல்லுவானேன் என்ருல், பதில்—எள்ளில் எண்ணெயிருக்கிறது. எள்ளை நெருப்பில்போட்டால், எள்ளும் எண்ணெயும் சாம்பலாய் விடுகிறது. அதுபோல உடம்புகளில் ஜீவனிருப்பதாலே, ஒரு உயிர் பிராணியை நெருப்பில்போட்டால், உடம்புகள் சாம்பலாவதுபோல—அதிலுள்ள ஜீவனுக்கும் அழிவுண்டோவென்று ஸந்தேஹம் உண்டாகக் கூடும். அதைத்தீர்ப்பதற்காக அதற்கு அழிவில்லை என்று இங்கே சொல்லப்பட்டது.

க்கு அழிவில்லை. 12-வது அத்தியாயம் 3-வது சுலோகத்திலும், 15-வது அத்தியாயம் 16-வது சுலோகத்திலும், இது அக்ஷரம் என்று சொல்லப்படுகிறது. வேதம்தெரிந்தவர்கள் இதைப் பரமகதியாக (உயர்ந்த அடையத்தகுந்த வஸ்துவாக)ச் சொல்லுகிறார்கள். இந்த அத்தியாயம் 13-வது சுலோகத்தில் இதையே "பரமகதி" என்கிற சொல்லாலே சொல்லியிருக்கிறது. அதாவது—பிரகிருதியை விட்டுப் பிரிந்த சுத்தமான ஜீவ ஸ்வரூபம். இப்படிப்பட்ட ஆத்ம ஸ்வரூபத்தை அடைந்தவர்கள் மறுபடியும் பிறக்கிறதில்லை. அது என்னுடைய ஸொத்துக்களில்மிகவுமுயர்ந்தது அதாவது—அறிவில்லாத பிரகிருதி என்பது ஒரு ஸொத்து. அத்துடன் சேர்ந்திருக்கிற ஜீவன் இரண்டாவது. 2 முக்தன்--அதை விட்டுப் பிரிந்த ஜீவன் மூன்றாவது. இவன் இவைகளுக்குள் மிகவும் உயர்ந்தவன். ஏனென்றால், இவன் மறுபடியும் பிறக்கிறதில்லை.

---

1. மோக்ஷத்தை அடைந்தவனும் பகவானுக்கு உட்பட்டவன்தானே. ஒருவருக்கு முட்படாதபகவான் அவனைமறுபடியும் ஸம்ஸாரத்தில் தள்ளக்கூடாதோ? ஸ்வர்க்கத்துக்குப்போனவர்களை இந்திரன் மறுபடியும் பூமியில் தள்ளிவிடுகிறானென்று சொல்லியிருக்கிறதே. ஒருவருக்குட்பட்ட இந்திரனே இப்படிச்செய்தால்,ஒருவருக்கு முட்படாத பகவான் என்னசெய்யக்கூடாதுஎன்றுஸந்தேஹமுண்டாகலாம். அதைத்தீர்ப்பதற்காகசுலோகத்தில் "மறுபடியும் பிறக்கிறதில்லை" என்றுசொல்லியிருக்கிறது. ஒருவன் ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவருவதற்கு கர்மம் தான்காரணம். பகவானுக்கு உட்பட்டிருப்பது அல்ல. கர்மமோ அடியோடுபோய்விட்டது. பகவானுடைய தயையோ அளவில்லாதது. அது அவனுக்கு இயற்கையாக உள்ளது. அவன் எப்படி ஜீவனை ஸம்ஸாரத்திற்கு அனுப்புவன். இந்தஸந்தேஹத்தை இன்னொருவிதமாயும் தீர்க்கலாம்—ஒருவன் ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவராமலிருப்பதற்குக் காரணம்—பகவானை அடைவது மாத்திரமன்று. ஜீவன் ஜீவனுடையஸ்வரூபத்தை அடைவதும் காரணம், அதை அடைந்தவனுக்குத்திரும்பி வருகிற பேச்சே கிடையாது.

2. ஏழாவது அத்தியாயம் 5—வது சுலோகத்தில் ஜீவன் பகவானுடையஸொத்து என்று சொல்லப்பட்டதே. அதை இங்கேமறுபடியும் சொல்லுவானேன்? என்றால், பதில்—அந்தஇடத்தில் ஸமஷ்டி ஜீவனைச்சொன்னது.அதாவது— தேவன் முதலான உடம்புகளில் நுழையாமல் பிரகிருதியுடன் சேர்ந்த ஜீவனைச்சொன்னது. இந்த இடத்தில் மோக்ஷத்தை அடைந்தவனும் பகவானுக்கு ஸொத்து என்று சொல்லுகிறது.

சுலோகத்தில் “பரமம் தாம” என்கிற சொற்கள் இருக்கின்றன. அவைகளுக்கு மிகவுமுயர்ந்த ஸொத்து என்று அர்த்தம் பண்ணி, ஸ்லேஷியாக்கியானம் பண்ணப்பட்டது. “தாம” என்கிற சொல்லானது வெளிச்சத்தையும் சொல்லுகிறது. அந்த வெளிச்சம் என்பது இங்கே அறிவு. பிருகிருதியுடன் சேர்ந்திருக்கும் ஜீவனுக்கு அறிவு கொஞ்சமாயிருக்கிறது. மோக்ஷத்தை அடைந்தவனுடைய அறிவுக்கு அளவில்லை. ஆகையால் அளவில்லாத வெளிச்சமுடையவன் என்றும்சொல்லலாம். [20-21]

அவ— 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌂 𑌤𑍁 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌵𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌹 ॥—

𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌸 𑌪𑌰𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌲𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑌨𑍍𑌯𑌯𑌾 ।
𑌯𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌃𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌯𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌤𑌮𑍍 ॥௨௨॥

“𑌮𑌤𑍍𑌤𑌃 𑌪𑌰𑌤𑌰𑌂 𑌨𑌾𑌨𑍍𑌯𑌤𑍍𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌸𑍍𑌤𑌿 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯 । 𑌮𑌯𑌿 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌪𑍍𑌰𑍋𑌤𑌂 𑌸𑍂𑌤𑍍𑌰𑍇 𑌮𑌣𑌿𑌗𑌣𑌾 𑌇𑌵, 𑌅𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌭𑌵” 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑌸𑍍𑌯 𑌯𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌃𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿, 𑌯𑍇𑌨 𑌚 𑌪𑌰𑌮𑌪𑍁𑌰𑍁𑌷𑌣 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌤𑌮𑍍, 𑌸 𑌪𑌰𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 “𑌅𑌨𑌨𑍍𑌯𑌚𑍇𑌤𑌾𑌸𑍍𑌸𑌤𑌤𑌮𑍍” 𑌇𑌤𑍍𑌯𑌨𑌨𑍍𑌯𑌯𑌾 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌲𑌭𑍍𑌯𑌃 ॥ ॥௨௨॥

அவ—ஞானி அடையும் வஸ்து முன்னே சொல்லப்பட்ட ஜீவனைக்காட்டிலும் மிகவும் உயர்ந்ததென்று சொல்லுகிறார்.—

“என்னைக் காட்டிலுமுயர்ந்த வஸ்து இல்லை” என்றும் (7-வது அத். 7-வது சு)“எல்லாவற்றைக்காட்டிலும் நான்[1] உயர்ந்தவன்” என்றும் (7-வது அத். 13-வது சு.) சொல்லப்பட்ட

1. சுலோகத்தில் “து” என்கிற சொல் இருக்கிறது. அது முன் சொன்னதைக் காட்டிலும் சொல்லப்போவது வேறு என்று காட்டுகிறது. முன் இரண்டு சுலோகங்களில் ஜீவஸ்வரூபம் சொல்லப்பட்டது. இந்த சுலோகம் பகவானைச்சொல்லுகிறது. ஜீவஸ்வரூபத்தைக் காட்டிலும் பகவான் மிகவுமுயர்ந்தபிரயோஜனம் என்று ஏற்படுகிறது. “து” என்கிற சொல் வேறு என்று தானே சொல்லும். அது உயர்ந்தது என்றுசொல்லுமோ என்றால்,உயர்ந்ததுஎன்பதற்குஅடையாளங்கள் சுலோகத்தில் இருக்கின்றன-(1) வேறொருபிரயோஜனத்தையும்ஆசை

யாதொரு பகவானுக்கு உள்ளேயிருக்கிறதோ எல்லாவுலகமும்; எந்த பகவானால் எல்லா உலகமும் நிரம்பியிருக்கிறதோ, இப்படிப்பட்ட உயர்ந்த பகவானை என்னை 8-வது அத்தியாயம் 14-வது சுலோகத்தில் சொன்னபடி வேறொரு பிரயோஜநத்தையும் ஆசைப்படாதவர்கள் அடைகிறார்கள். [22]

ஸ்வ— ஸ்வாத்யாயாத்ருவிஷ: [illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

---

ப்படாமல் செய்த பக்தியாலே அடையக்கூடியது என்று சொல்லியிருப்பது. (2) புருஷன் என்கிற சொல். அது பகவானைத்தான் சொல்லுகிறது. எப்படியென்றால், ஹிருதயத்திலிருக்கிறவன், எல்லா வஸ்துக்களாலும் நிறைந்தவன். அவனுக்கு ஒரு வஸ்து இல்லையென்று கிடையாது, எப்போது மிருப்பவன், அளவில்லாத பதார்த்தங்களைக் கொடுக்கிறவன்" என்று அந்தச்சொல்லுக்குப் பொருள். இப்படிப்பட்டவன் பகவான்தான். சுலோகத்தில் "யஸ்யாந்த:" "யேநஸர்வம்" என்று சொல்லியிருக்கிறது. அதற்கு "எந்த உயர்ந்தவனுக்குள் எல்லா உலகமுமிருக்கிறதோ, எவனால் எல்லா உலகமும் நிறைந்திருக்கிறதோ" என்று பொருள். எந்தனவே தெரிந்தவனைத்தான் யாதொருவன் என்று சொல்லுகிறது வழக்கம். பகவானிடத்தில்தான் எல்லா உலகமுமிருக்கிறதென்றும், அவனால் தான் எல்லாஉலகமும் நிறைந்திருக்கிறதென்றும் உபநிஷத்துக்களிலும் 7-வது அத்தியாயம் 7-வதுசலோகத்திலும் சொல்லியிருக்கிறது.

வித்யாயாம் ச "இதி து பஞ்சம்யாமாஹுதாவாப: புரு-
ஷவசஸோ பவந்தீ"தி, "ரமணீயசரணா: கபூயசர-
ணா:" இதி புண்யபாபஹேதுகோ [illegible]
[illegible] ஶ்ருத்யந்தரே ச தத்ர
[illegible] "தத்ய இத்தம்
விது:—தேऽர்சிஷமபிஸம்பவந்தி, இமம் மாநவமாவர்த்தம்
நாவர்த்தந்தே" இதி விவிக்தாத்மவிதோऽர்சிராதிநா த்யாஜ்யதயா
ப்ராப்யதயா ச இதம் அர்சிராதிநா கச்சந்தி ந ச
புநராவர்த்தந்த இத்யுக்தமிதி கம்யதே। ஶ்ருதயாऽத்ரவி
த: ப்ரஹ்மப்ராப்திநிர்தேஶஸ்ய ச "ஸ ஏநாந் ப்ரஹ்ம கமயதீ"தி
ப்ரஹ்மப்ராப்திவசநாதாத்மப்ராப்தேஶ்ச ப்ரஹ்மாத்மகதயா
ப்ரஹ்மசேஷதைகரஸத்வாநுஸந்தாநம் - தச்ச ஆத்மந
ஸ்ஸ்வரூபசேஷதைகரஸத்வம் ச "ய ஆத்மநி திஷ்டந்—யஸ்யா
த்மா ஶரீரம்" இத்யாதிஶ்ருதிஸித்தம் ॥

யத்ர காலே த்வநாவ்ருத்திமாவ்ருத்திம் சைவ யோகிந: ।
ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப ॥ 23 ॥
அக்நிர்ஜ்யோதிரஹஶ்ஶுக்ல: ஷண்மாஸா உத்தராயணம் ।
தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜநா: ॥ 24 ॥

அத்ர காலஶப்தோ மார்கஸ்யாஹ:ப்ரப்ருதிஸம்வத்ஸராந்த
காலாபிமாநிதேவதாபூயஸ்தயா மார்கமுபலக்ஷயதி। ய
ஸ்மிந் மார்கே ப்ரயாதா யோகிநோऽநாவ்ருத்திம், புண்யகர்மா
ணஶ்சாவ்ருத்திம் யாந்தி, தம் மார்கம் வக்ஷ்யாமீத்யர்த்த:। அக்நிர்ஜ்யோ
திரஹஶ்ஶுக்ல: ஷண்மாஸா உத்தராயணமிதி ஸம்வத்ஸராதீநா
முபலக்ஷணம் ॥

அவ—ஜீவாத்மாவின் உண்மையை அறிந்தவனும், பகவானைத்தி
யானம் செய்கிற ஞானியும் போகிற-அந்த 1 அர்ச்சிராதி என்கிற-
வழியைச் சொல்லுகிறார். அர்ச்சிராதி (வெளிச்சம் முதலான) வழி

1. வெளிச்சம் முதலான வழியைச்சொன்னது பிரும்மத்தைத்
தியானம் பண்ணுகிறவர்கள் தினம்தோறும் நினைத்துக்கொண்டிருப்ப

பகவானுடையஇடம் போகிறவனுக்கு எப்படி உண்டோ, அப்படியேஆத்மஸ்வரூபத்தை மாத்திரம் அடைகிறவனுக்குமுண்டு. அந்த வழியால்போனவன் திரும்பிவருகிறதில்லை. இந்த இரண்டு ஸங்கதிகளையும் வேதமே பஞ்சாக்கினி வித்யையைச்சொல்லுகிற இடத்தில் சொல்லியிருக்கிறது. (இந்த அத்தியாயம் 3-வது சுலோகம் 2—வது குறிப்பைப் பார்க்க). ஜீவன் உடம்பை விட்டுப் புறப்பட்டு ஸ்வர்க்கதிற்குப் போய், திரும்பி வந்து, பிறக்கிற விதத்தைச் சொல்லி, மேலே ஜீவனுடையவும், பிரகிருதியினுடையவும் உண்மையைச்சொல்லி, அவைகளில் பிரகிருதியை விடவேண்டியதென்றும், உண்மையான ஜீவஸ்வரூபத்தை அடைய வேண்டுமென்றும் அறிந்து, எவர்கள் தியானம் பண்ணுகிறார்களோ—அவர்களையும், "எவர்கள் காட்டிலிருந்து கொண்டு பகவானைச் சிரத்தையுடன் தியானம் செய்கிறார்களோ, அவர்களையும்-அமாநவன் இந்த வழியால் பகவானிடம் சேர்க்கிறான். அவர்கள் ஸம்ஸாரமாகிய சுழலுக்குத் திரும்பி வருகிறதில்லை." என்று சொல்லியிருக்கிறது. இவர்களில் முதலில் சொன்னவர்கள் ஜீவாத்மஸ்வரூபத்தை தியானம் செய்கிறவர்கள். அவர்களையும், பகவானைத் தியானம் பண்ணுகிறவர்களையும் வேதம் பிரித்தே சொல்லுகிறது. ஜீவாத்மஸ்ரூபத்தை த்தியானம் பண்ணுகிறவர்கள் தங்களைப் பகவானுடைய உடம்புகளாகவும் தியானம் செய்யவேண்டியது. இல்லாவிட்டால் இந்த வழியும், இதுவழியால் பகவானை அடைவதும் கிடைக்காது. இவையிரண்டும் இவர்களுக்கு இருக்கிறதாக வேதத்தில் சொல்லியிருக்கிறது. அந்தத் தியானத்தில் பகவானும் சேர்ந்திருப்பதால், தங்கள் ஸ்வரூபத்தை மாத்திரம் கொஞ்சகாலம் அநுபவித்தபிறகு பகவானிடம் போகிறார்கள். பகவானுக்கு ஜீவன்கள் உடம்புகள் என்பதுதான் ஜீவனுடைய உண்மையான ஸ்வரூபம். இப்படியே வேதம் அந்தர்யாமி பிராம்மணத்தில் சொல்லியிருக்கிறது.

---

தற்காக. மற்றொருவழியைச் சொன்னது—அது இளப்பமானது; அந்த வழி நாம் போகக்கூடாது என்று எண்ணுவதற்காக.

எந்த 1 வழியால் போகிற யோகிகள் ஸம்ஸாரத்தையடைய மாட்டார்களோ, அந்த வழியையும், எந்த வழியால் போன 2 புண்ணியம் செய்தவர்கள் இந்தஉலகத்துக்கு திரும்பி வருகிறார்களோ, அந்தவழியையும் சொல்லுகிறேன். அதாவது—நெருப்பாகிய வெளிச்சம், பகல், சுக்லபக்ஷம், (வளர்பிறை) உத்தராயணம்—இந்தவழியால் போகிற யோகிகள் திரும்புகிறதில்லை. பிரும்மத்தைத்தியானம் பண்ணுகிறவர்கள் தான் இந்த வழியில் போவார்கள். பிரும்மத்தைக்கட்டாயம் அடைவார்கள். பிரும்மத்தை அடையாதிருக்கமாட்டார்கள். நெருப்பின் வெளிச்சம் முதலான நான்கைச் சொன்னதைக் கொண்டு அவைளுக்கு மேலே யிருக்கிற 3 வர்ஷம் முதலானவைகளைச் சொன்னதாக வைத்துக் கொள்ள வேண்டியது. [23–24]

தூமோ ராத்ரிஸ்ததா க்ருஷ்ண: ஷண்மாஸா தக்ஷிணாயநம் ।
தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர்யோகீ ப்ராப்ய நிவர்த்ததே ॥
ஏதச்ச தூமாதிமார்கஸ்த்தபித்ருலோகாதே: ப்ராப்யா-
நந்தரம் । அத்ர யோகிஶப்த: புண்யகர்மஸம்பந்திவிஷய: ॥ ௨௫ ॥

---

1. 23-வது சுலோகத்தில் "காலே" என்ற சொல் இருக்கிறது. அது வழியைத்தான் சொல்லுகிறது. காலத்தைச் சொல்லவில்லை. ஏனென்றால், 24-வது சுலோகத்தில் நெருப்பாகிய வெளிச்சம் என்று ஆரம்பித்து 27-வது சுலோகத்தில் "ஸ்ருதீ" (வழி) என்று முடிக்கிறது. அதைக்காலம் என்று சொல்லுவானேன் என்றால், இந்தவழியில் காலத்துக்கு அபிமானியான தேவதைகள் பலர் இதில் போகிறவனை நடத்துகிறார்கள். அதனால் அந்தச்சொல்லை உபயோகித்தது.

2. சுலோகத்தில் "யோகின:" என்ற சொல்லிற்கு ஞானிகள் என்றும், புண்ணியகர்மத்தின் ஸம்பந்தமுள்ளவர்கள் என்றும் பொருள்.

3. உத்தராயணத்துக்குமேலே, வர்ஷம், வாயு, ஸூரியன், சந்திரன், மின்னல், வருணன், இந்திரன், பிரஜாபதி. இவர்கள் பகவானாலே ஏவப்பட்டு அவரிடம் போகிறவர்களை அழைத்துக்கொண்டு போகிறார்கள். அவர்களுக்கு வடமொழியில் "ஆதிவாஹிகர்கள்" என்றுபெயர். அவர்களில் மின்னல்என்பவனை வைகுண்டத்திலிருக்கும் நித்தியஸூரி என்று வேதமே சொல்லுகிறது. அவனுக்கு அமானவன் என்றுபெயர். அவனோடு சேர்த்துச்சொல்லியிருப்பதாலே, மற்றவர்களும்நித்தியஸூரிகள். சிலர் அல்லவென்றும் சொல்லுகிறார்கள்.

புண்ணியம் செய்து புகை, ராத்திரி, கிருஷ்ணபக்ஷம், 1 தக்ஷிணாயநம், இந்த வழியால் போகிறவன் சந்திரனை அடைந்து திரும்பி வருகிறான். (25)

𑌶𑍁𑌕𑍍𑌲𑌕𑍃𑌷𑍍𑌣𑍇 𑌗𑌤𑍀 𑌹𑍍𑌯𑍇𑌤𑍇 𑌜𑌗𑌤𑌃 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍇 𑌮𑌤𑍇 ।
𑌏𑌕𑌯𑌾 𑌯𑌾𑌤𑍍𑌯𑌨𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌮𑌨𑍍𑌯𑌯𑌾𑌽𑌽𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌪𑍁𑌨𑌃 ॥௨௬॥

𑌶𑍁𑌕𑍍𑌲𑌾 𑌗𑌤𑌿𑌃 𑌅𑌰𑍍𑌚𑌿𑌰𑌾𑌦𑌿𑌕𑌾, 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾 𑌧𑍂𑌮𑌾𑌦𑌿𑌕𑌾 । 𑌶𑍁𑌕𑍍𑌲𑌯𑌾𑌽𑌨𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌯𑌾𑌤𑌿 । 𑌕𑍃𑌷𑍍𑌣𑌯𑌾 𑌤𑍁 𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 । 𑌏𑌤𑍇 𑌶𑍁𑌕𑍍𑌲𑌕𑍃𑌷𑍍𑌣𑍇 𑌗𑌤𑍀 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌾𑌂 𑌵𑌿𑌵𑌿𑌧𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌿𑌣𑌾𑌂 𑌚 𑌶𑍍𑌰𑍁𑌤𑍌 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍇 𑌮𑌤𑍇 । “𑌤𑌦𑍍𑌯 𑌇𑌤𑍍𑌥𑌂 𑌵𑌿𑌦𑍁𑌃 𑌯𑍇 𑌚𑍇𑌮𑍇𑌽𑌰𑌣𑍍𑌯𑍇 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾 𑌤𑌪 𑌇𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 𑌤𑍇𑌽𑌰𑍍𑌚𑌿𑌷𑌮𑌭𑌿𑌸𑌂𑌭𑌵𑌨𑍍𑌤𑌿, 𑌅𑌥 𑌯 𑌇𑌮𑍇 𑌗𑍍𑌰𑌾𑌮 𑌇𑌷𑍍𑌟𑌾𑌪𑍂𑌰𑍍𑌤𑍇 𑌦𑌤𑍍𑌤𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 𑌤𑍇 𑌧𑍂𑌮𑌮𑌭𑌿𑌸𑌂𑌭𑌵𑌨𑍍𑌤𑍀”𑌤𑌿 ॥ ॥௨௬॥

இந்த இரண்டு வழிகளில் ஒன்று 2. வெளுப்பு. ஒன்று கருப்பு. நெருப்பு முதலான வழி வெளுப்பு. புகை முதலான வழி கருப்பு. வெளுப்பு வழியால் போனவன் திரும்பி வருகிறதில்லை. இது ஜீவனுடைய உண்மையை அறிந்து, அவனை பகவானுடைய உடம்பென்று தியானம் பண்ணுகிறவர்களுக்கும், பகவானை ஜீவன்களுக்கு ஆத்மாவென்று தியானம்பண்ணுகிறவர்களுக்கும் ஏற்பட்டது. கருப்பு வழியால் போனவன் திரும்பிவருகிறான். இது ஸ்வர்க்கம் முதலான லோகங்களை அடைவதற்காக புண்ணியம் செய்தவர்களுக்கு ஏற்பட்டது. இந்த இரண்டுவழிகளும் அழிவில்லாதவைகள். அதாவது உலகத்துடன் உண்டாகின்றன-உலகத்துடன் போகின்றன என்று வேதம் சொல்லுகிறது. (26)

---

1. இவைகளுக்குமேலே பித்ருலோகமும் ஆகாசமும் இருக்கின்றன.

2. இந்த வழிகளை வெளுப்பு என்றும், கருப்பு என்றும் சொல்வதற்குக் காரணம்—ஒன்றில் சுக்லபக்ஷமிருப்பதும், மற்ற ஒன்றில் கிருஷ்ணபக்ஷம் இருப்பதும். ஒன்று சுத்தமாயிருப்பதும், மற்றொன்று அசுத்தமாயிருப்பதும் என்றும் சொல்லலாம்.

𑌨𑍈𑌤𑍇 𑌸𑍃𑌤𑍀 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌜𑌾𑌨𑌨𑍍 𑌯𑍋𑌗𑍀 𑌮𑍁𑌹𑍍𑌯𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌨 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌕𑌾𑌲𑍇𑌷𑍁 𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌭𑌵𑌾
𑌰𑍍𑌜𑍁𑌨 ॥ ॥௨௭॥

𑌏𑌤𑍇 𑌸𑍃𑌤𑍀 𑌮𑌾𑌰𑍍𑌗𑍌 𑌜𑌾𑌨𑌨𑍍 𑌯𑍋𑌗𑍀 𑌪𑍍𑌰𑌯𑌾𑌣𑌕𑌾𑌲𑍇 𑌚 𑌨 𑌮𑍁𑌹𑍍𑌯𑌤𑌿 । 𑌅𑌪𑌿 𑌤𑍁 𑌸𑍍𑌵𑍇𑌨𑍈𑌵 𑌦𑍇𑌵𑌯𑌾𑌨𑍇𑌨 𑌪𑌥𑌾 𑌯𑌾𑌤𑌿 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌹𑌰𑌹𑌰𑌰𑍍𑌚𑌿𑌰𑌾𑌦𑌿𑌗𑌤𑌿𑌚𑌿𑌨𑍍𑌤𑌨𑌾𑌖𑍍𑌯𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌭𑌵 ॥ ॥௨௭॥

இந்த இரண்டு வழிகளில் ஒன்று இளப்பமானது, தள்ளவேண்டியதென்றும், மற்றொன்று உயர்ந்தது எடுத்துக்கொள்ளவேண்டியதென்றும் அறிந்து, உயர்ந்தவழியை எப்பொழுதும் தியானம் பண்ணுகிறவன் செத்துப் போகிறகாலத்தில் மயங்குகிறதில்லை. அதாவது அவன் தனக்கு ஏற்பட்ட தேவயாநம் என்று சொல்லப்பட்ட வெளுப்பு வழியை அறிந்து அதாலேயே போகிறான். ஆகையால் ஒவ்வொருநாளும் வெளுப்பான வழியைத் தியானம் செய்துகொண்டிரு. (27)

𑌅𑌥—𑌅𑌧𑍍𑌯𑌾𑌯𑌦𑍍𑌵𑌯𑍋𑌦𑌿𑌤𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌵𑍇𑌦𑌨𑌫𑌲𑌮𑌾𑌹—

𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 𑌯𑌜𑍍𑌞𑍇𑌷𑍁 𑌤𑌪𑌃𑌸𑍁 𑌚𑍈𑌵 𑌦𑌾𑌨𑍇𑌷𑍁
𑌯𑌤𑍍𑌪𑍁𑌣𑍍𑌯𑌫𑌲𑌂 𑌪𑍍𑌰𑌦𑌿𑌷𑍍𑌟𑌮𑍍 । 𑌅𑌤𑍍𑌯𑍇𑌤𑌿 𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾
𑌯𑍋𑌗𑍀 𑌪𑌰𑌂 𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑍁𑌪𑍈𑌤𑌿 𑌚𑌾𑌦𑍍𑌯𑌮𑍍 ॥ ௨௮ ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍂𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌯𑍋𑌗
𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇 𑌅𑌕𑍍𑌷𑌰
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌮𑌾𑌷𑍍𑌟𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

𑌋𑌗𑍍𑌯𑌜𑍁𑌸𑍍𑌸𑌾𑌮𑌾𑌥𑌰𑍍𑌵𑌰𑍂𑌪𑌵𑍇𑌦𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌯𑌜𑍍𑌞𑌤𑌪𑍋𑌦𑌾𑌨𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌿𑌷𑍁 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌪𑍁𑌣𑍍𑌯𑍇𑌷𑍁 𑌯𑌤𑍍𑌫𑌲𑌂 𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑌮𑍍 । 𑌇𑌦𑌮𑌧𑍍𑌯𑌾𑌯𑌦𑍍𑌵𑌯𑍋𑌦𑌿𑌤𑌂 𑌭𑌗𑌵𑌨𑍍𑌮𑌾𑌹𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌂 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾 𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌮𑌤𑍍𑌯𑍇𑌤𑌿-𑌏𑌤𑌦𑍍𑌵𑍇𑌦𑌨𑌸𑍁𑌖𑌾𑌤𑌿𑌰𑍇𑌕𑍇𑌣 𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑍃

𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾 । 𑌯𑍋𑌗𑍀 𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌚 𑌸𑌂𑌜𑍍𑌞𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌂
𑌪𑌰𑌮𑌂 𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑍁𑌪𑍈𑌤𑌿 ॥ ॥௨அ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌵𑌿𑌰𑌚𑌿𑌤𑍇 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌭𑌾𑌷𑍍𑌯𑍇
𑌅𑌷𑍍𑌟𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

---

அவ—7-வது அத்தியாயத்திலும், இந்த அத்தியாயத்திலும் சொல்லப்பட்ட ஸங்கதிகளை அறிவதற்குப் பிரயோஜநம் சொல்லுகிறார்—

இந்த இரண்டு அத்தியாயங்களில் சொன்ன பகவானுடைய பெருமையை அறிவதால் வரும் பிரயோஜநம்—நாலுவேதங்களை ஒவ்வொருநாளும் சொல்வதாலும், யக்ஞத்தையும் தபஸ்ஸையும் தானத்தையும் இவைபோன்ற புண்ணியகர்மங்களைச் செய்வதாலும் என்ன பிரயோஜநங்கள் கிடைக்குமென்று சாஸ்திரம் சொல்லுகிறதோ, அவைகளைக்காட்டிலும் கோடிபங்கு உயர்ந்தது. இதை அறிவதே உயர்ந்த ஸுகம். அதை அநுபவிக்கிறவன் மற்றப்பிரயோஜநங்களைத் திருணமாக எண்ணுவன். அவன் ஞானியாக ஆகி, ஞானிகள் அடையும்படியான உயர்ந்ததும் எப்பொழுதுமிருப்பதுமான ஸ்ரீவைகுண்டத்தை அடைகிறான். (28)

---

## குறிப்பு.

கீழே 24—வது சுலோகத்தில் தன் ஸ்வரூபத்தை மாத்திரம் அநுபவிக்க வேணுமென்று ஆசைப்பட்டுப் பகவானைத் தியானம் செய்கிறவன் வெளிச்சம் முதலான வழியால் பகவானிடம் போகிறானென்றும், அவன் ஸம்ஸாரத்திற்குத் திரும்பி வருகிறதில்லையென்றும் சொல்லப்பட்டது. அவன் தன் ஸ்வரூபத்தை மாத்திரம் அநுபவிக்கவேண்டும் என்று ஆசைப்பட்டபடியால், பகவானிடம் நேராகப் போகிறதில்லை. நடுவில் தங்கியிருந்து, கொஞ்சகாலம் தன் ஸ்வரூபத்தை மாத்திரம் பார்த்து ஸுகத்தை அநுபவித்து, பிறகு பகவானிடம்போகிறான். இந்த அநுபவத்துக்குக் கைவல்லியம் என்று பெயர். அதாவது—பகவானையும் பிரகிருதியையும் நினையாமல் தன் ஸ்வரூபத்தைமாத்திரம் அநுபவிப்பது.

2. இந்த அநுபவம் தூக்கத்தில் அநுபவிக்கும் ஸுகத்தைப்போல் இருக்கிறது. தூங்கி எழுந்தவன் மிகவும் ஸுகமாய் தூங்கினேன் என்றுசொல்லுகிறான். அப்போது தன்னைமாத்திரம் அறிகிறான். வேறொன்றையும் அறிகிறதில்லை. கைவல்யத்தை அநுபவிக்கிறவனும் தன்னை மாத்திரம் பார்க்கிறான். வேறொன்றையும் பார்க்கிறதில்லை. தூங்குகிற ஸுகத்துக்கும் கைவல்ய ஸுகத்துக்கும் கொஞ்சம் வித்தியாசமுண்டு. தூக்கத்தினால் வரும் ஸுகம் தெளிவில்லாததும், கொஞ்சகாலமும் தானிருக்கும். கைவல்ய ஸுகம் தெளிவாயும் நீடித்துமிருக்கும். அது 6--வது அத்தியாயம் 20-வது முதல் நாலு சுலோகங்களில் சொல்லப்பட்ட ஸுகம்போல் அளவில்லாததாயிருக்கும். தூக்கத்தில் வரும் ஸுகம் இவ்வளவு உயர்ந்ததன்று.

3. அந்த கைவல்ய ஸுகமும் பகவானை இரண்டு விபூதிகளுடனும் சேர்த்து அநுபவிப்பதைக்காட்டிலும் மிகவும் தாழ்ந்தது. ஆகையாலே வெளிச்சமான வழியால் போனவனுக்கு இந்த ஸுகம் நீடித்திருக்காது. அவனைப் பகவான் சீக்கிரம் தன்னிடம் அழைத்துக்கொள்வன்.

4. எவன் தன் ஸ்வரூபத்தைமாத்திரம் அனுபவிக்கவேணுமென்று ஆசைப்பட்டு, தான் பகவானுக்காக இருக்கிறவன் என்றும், பகவானுக்குட்பட்டவனென்றும் தன் ஸ்வரூபத்தை முழுவதும் அறியாமல், உடம்பைக்காட்டிலும் வேறான தன் ஸ்வரூபத்தைமாத்திரம் தியானம் பண்ணுகிறானோ, அவனுக்கும் கைவல்யானுபவம் வருகிறது. ஆனால் அவன் தியானத்தில் பகவானைச்சேர்த்து கொள்ளாததினாலே, வெளிச்சம் முதலான வழி அவனுக்குக்கிடையாது. ஆகையாலே அவன் இந்த அநுபவம் ஆனபிறகு மறுபடியும் பிறக்கிறான்.

5. தியானத்தில் பகவானைச் சேர்க்கிறவனுக்கும், பகவானைச்சேர்க்காதவனுக்கும் உண்டாகும் கைவல்யானுபவம் வைகுண்டமென்கிற தேசத்தில் இருக்கக்கூடாது. ஏனென்றால், பரமபதம்என்பது அளவில்லாத உயர்ந்த இடம். ஒருவன் அந்த இடத்தில் மட்டமான ஸுகத்தை, நிலையாக அநுபவிக்கிறதாக இருந்தால், அந்த இடத்திற்கு உயர்த்தி எப்படி? அங்கும் ஸுகங்களுக்குத்தாரதம்மியமிருந்தால், பிரகிருதி மண்டலத்திற்கும், அதற்கும் வித்தியாஸம் என்ன? மேலும், அதை அநுபவித்து ஒருவன் ஸம்ஸாரத்துக்குத்திரும்பிவரவேண்டியது. வைகுண்டலோகத்துக்குப் போனவனோ திரும்பிவருகிறதில்லை. ஆதலால் கைவல்யாநுபவமானது பிரகிருதி மண்டலத்திலேயே இருக்கவேண்டியது.

6. இப்படியிருக்க, ஸ்ரீ பாஷ்யகாரர் ம[illegible]தைச் சேர்ந்த சிலர் கைவல்யமென்கிற அநுபவம் நிலையாயிருக்கும் என்றும், அதை அநுப

விக்குமிடம் வைகுண்டமென்றும் சொல்லுகிறார்கள். மேலே சொன்ன காரணங்களாலே இது பிசகு. இது தவிர, தத்வத்தையும், ஹிதத்தையும் அவர்கள் வேறாக எண்ணுகிறார்கள். தத்வம் என்றால், அந்தந்த வஸ்துக்களின் உண்மை. ஹிதமென்றால், அடையவேண்டிய பிரயோஜநங்களுக்காகச்செய்யவேண்டிய வேலை. ஸ்ரீபாஷ்யகாரர் மதத்தில் பகவானை நாராயணன் எல்லாருக்கும் தகப்பன் என்றும், மஹாலக்ஷ்மீ தாயாரென்றும், ஜீவன்களை அவர்களுக்குப் பிள்ளையென்றும் சொல்லியிருக்கிறது. மஹாலக்ஷ்மியைத் தைவகுப்பில் சேர்த்திருக்கிறது. இது வேதத்துக்கும், ருஷிகளுடைய வார்த்தைகளுக்கும், நம்முடைய பெரியோர்களின் வார்த்தைகளுக்கும் பொருந்தியிருக்கிறது. அப்படியிருக்க அவர்கள் மஹாலெக்ஷ்மியை ஜீவனென்று சொல்லி, பிள்ளை வகுப்பில் சேர்க்கிறார்கள். மேலும் நாம் பகவானிடத்தில் போவதற்காகச் செய்யவேண்டிய வேலை சரணாகதி. இதையே சடைசி சுலோகத்தில்இதை செய்யவேண்டியதாக ஸ்ரீபகவான் சொல்லுகிறார். அவர்கள் "இதைச் செய்யவேண்டியதில்லை, பகவானே தன்னுடைய ஸ்வாதந்தர நம்மைத்தானேகாப்பாற்றுவான்"என்றசொல்லுகிறார்கள். அவர்களில் சிலர் சரணாகதி செய்யவேண்டியதை ஏட்டச்சொண்டு, டன்சலம் காரம் செய்யும்போதே (சங்கு சக்கிரங்களை தரித்துக்கொள்வது மேதலானது) இது செய்யப்படுகிறதென்றும், இன்னும் சிலர் ஸ்ரீ பாஷ்யகாரர் நமக்காக முன்னேயே செய்துவிட்டாரென்றும் சொல்லுகிறார்கள்.

7. வேதத்துக்கு வெவ்வேறாக அர்த்தம்சொல்வதாலே மூன்று மதங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளில் ஒன்றானவிசிஷ்டாத்வைத மதம் என்பது ஸ்ரீ பாஷ்யகாரரால் நன்றாய் வெளியிடப்பட்டது. அதைச்சேர்ந்த எல்லாரும் ஒரேமாதிரியாக இருக்கவேண்டியது. இப்படியிருக்க, இதிலேயே இரண்டு மதங்கள் ஏற்பட்டிருக்கிறது வருத்தத்தைக் கொடுக்கிறது. இப்படி அனேக மதங்கள் உலகத்தில் ஏற்படுவதற்குக்காரணம்-எந்தமதம் நல்லது என்று கவனிக்காமலிருப்பதுதான்.அதற்கும் காரணம் ஆத்மாவின் ஸௌக்கியத்தைப்பற்றி சிரத்தைக்குறைவு. அதுவும்தவிர, ஒருவன் ஒருமதத்தின் உண்மையை அறிந்து, அதனால் ஸுகத்தை அநுபவித்தால், அவனுக்கு மற்றவர்களும் இப்படியநுபவிக்கவில்லையே யென்று அவர்களிடத்தில் தடுக்கமுடியாத-அளவில்லாத-தயையுண்டாகும். ஆகையால் நல்லமதத்தை அடைந்தும், அதின் உண்மையை அறிந்து ஸுகப்பட்டு, மற்றவர்களிடத்தில் எல்லையில்லாத தயை யுள்ளவர்கள் இப்போது அரிதாயிருக்கிறார்கள். இரண்டு மதக்காரர்கள் சேர்ந்து வார்த்தை சொல்வது முடியவில்லை. கலியுகத்தில் நல்

ஸஸங்கதிகள் நடப்பது மிகவும் அரிது. ஆனாலும் அடியோடு இல்லையென்றும் சொல்லமுடியாது. நல்லவர்களும் இருப்பார்கள். நல்லஸங்கதிகளை விசாரித்து அறிந்து நிலையான ஸுகத்தை அடைவார்கள். அப்படி ஸ்ரீ ஆசார்யர்களும் பகவானும் கிருபை பண்ணவேணும்.

---

ஸ்ரீமதே பகவதே பாஷ்யகாராய மஹாதேசிகாய நம:

---

## எட்டாவது அத்தியாயம்
## முற்றிற்று

---

𑌉𑌪𑌾𑌸𑌕𑌭𑍇𑌦𑌨𑌿𑌬𑌨𑍍𑌧𑌨𑌾 𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌿𑌤𑌾𑌃 । 𑌇𑌦𑌾𑌨𑍀𑌮𑍁𑌪𑌾𑌸𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 𑌮𑌾𑌹𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌂, 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌾𑌂 𑌚 𑌵𑌿𑌶𑍇𑌷𑌂 𑌵𑌿𑌶𑍋𑌧𑍍𑌯, 𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑍂𑌪𑌸𑍍𑌯𑍋𑌪𑌾𑌸𑌨𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚—

𑌇𑌦𑌂 𑌤𑍁 𑌤𑍇 𑌗𑍁𑌹𑍍𑌯𑌤𑌮𑌂 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑍍𑌯𑌨𑌸𑍂𑌯𑌵𑍇 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌹𑌿𑌤𑌂 𑌯𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇𑌽𑌶𑍁𑌭𑌾𑌤𑍍 ॥

॥ ௧ ॥

𑌇𑌦𑌂 𑌤𑍁 𑌤𑍇 𑌗𑍁𑌹𑍍𑌯𑌤𑌮𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑍂𑌪𑌮𑍁𑌪𑌾𑌸𑌨𑌾𑌖𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌹𑌿𑌤𑌂-𑌉𑌪𑌾𑌸𑌨𑌗𑌤𑌵𑌿𑌶𑍇𑌷𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌹𑌿𑌤𑌂 𑌅𑌨𑌸𑍂𑌯𑌵𑍇 𑌤𑍇 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 । 𑌮𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑌂 𑌸𑌕𑌲𑍇𑌤𑌰𑌵𑌿𑌸𑌜𑌾𑌤𑍀𑌯𑌮𑌪𑌰𑌿𑌮𑌿𑌤𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌂 𑌮𑌾𑌹𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾 𑌏𑌵𑌮𑍇𑌵 𑌸𑌂𑌭𑌵𑌤𑍀𑌤𑌿 𑌮𑌨𑍍𑌵𑌾𑌨𑌾𑌯 𑌤𑍇 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌯𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌮𑌾𑌦𑌶𑍁𑌭𑌾𑌨𑍍𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 ॥ ॥௧॥

தியானம் செய்கிறவர்களுடைய பிரிவுக்குத் தகுந்தபடி அவர்கள் அறியவேண்டியவைகளும், செய்யவேண்டியவைகளும் சொல்லப்பட்டன. இப்போது, தியானம் செய்யத் தகுந்த பகவானுடைய பெருமையையும், ஞானியினுடைய உயர்த்தியையும் தெளிவாகச் சொல்லி, பக்தி யென்கிற தியானத்தினுடைய ஸ்வரூபம் சொல்லப்படுகிறது.

பகவான் சொல்லுகிறார்—

மிகவும் 1 ரஹஸ்யமான பக்தி யென்கிற தியானத்தை அதின் எல்லா ஸங்கதிகளுடன் பொறாமைப்படாதவனான உனக்

---

1. கீழே சொன்ன கர்மயோகம் ரஹஸ்யமானது. ஞானயோகம் அதைக்காட்டிலும் ரஹஸ்யமானது. சொல்லப்போகிற தியானம் இவையிரண்டைக்காட்டிலும் மிகவும் ரஹஸ்யமானது இந்த ஸங்கதி சுலோகத்தில் "து" என்றசொல்லால் காட்டப்பட்டது. இதைக் கேட்க வேண்டுமென்று மிகுந்த ஆவலுண்டாவதற்காகவும், இதைக் கண்டவர்

குச் சொல்லுகிறேன். என்னைத் தவிர வேறொருவருக்கும் இல்லாத—அனேக விதமான—என்னுடைய பெருமையைக் கேட்டு, இப்படி இருக்குமா என்று ஸந்தேஹப்படாமல் நீ நம்புகிறாய்: ஆகையால் நீ இதைக் கேட்பதற்குத் தகுந்தவன். எல்லாவற்றையும் ஸுகமாக உனக்குப் புரியும்படி சொல்லுகிறேன். எந்த ஸங்கதியையறிந்து, அறிந்தபடி செய்து, 1 என்னை அடைவதற்கு இடைஞ்சலான 2 எல்லாப்பாபங்களையும் போக்கப்போகிறாயோ.[1]

ராஜவித்3யா ராஜகு3ஹ்யம் பவித்ரமித3முத்தமம் ।
ப்ரத்யக்ஷாவக3மம் த4ர்ம்யம் ஸுஸுக2ம் கர்துமவ்யயம் ॥

ராஜவித்3யா-வித்3யாநாம் ராஜா। ராஜகு3ஹ்யம்-கு3ஹ்யாநாம் ராஜா। ராஜ்ஞாம் வித்3யேதி வா ராஜவித்3யா। ராஜாநோ ஹி விஸ்தீர்ணாகா3த4மநஸ:; மஹாமநஸாமியம் வித்3யேத்யர்த2:। மஹாமநஸ ஏவ ஹி கோ3பநீயகோ3பநகுஶலா இதி தேஷாமித3ம் கு3ஹ்யம்। உத்தமம் பவித்ரம்-மத்ப்ராப்திவிரோத்4யஶேஷகல்மஷாபஹம்। ப்ரத்யக்ஷாவக3மம்-அவக3ம்யத இத்யவக3மோ விஷய:; ப்ரத்யக்ஷபூ4தோऽவக3மோ விஷயோ யஸ்ய ஜ்ஞாநஸ்ய தத் ப்ரத்யக்ஷாவக3மம்; ப4க்திரூபேணோபாஸ்யமாநோபாஸ்யமாநோऽஹம் ததா3நீமேவோபாஸிது: ப்ரத்யக்ஷதாமுபக3தோ ப4வாமீத்யர்த2:। ததா2பி த4ர்ம்யம்-த4ர்மாத3நபேதம்। த4ர்மம் ஹி பரநி:ஶ்ரேயஸஸாத4நம் | ஸ்வரூபேணைவாத்யர்த2ப்ரியத்வேந ததா3நீமேவ ஸுக2ரூபாபாத3நதயா ஸ்வயம் நிரதிஶயப்ரியம் நிரதிஶயநி:ஶ்ரேயஸரூபாத்யந்தி

களுக்குச் சொல்லாமல் காப்பாற்ற வேண்டுமென்பதற்காகவும் இது சொல்லப்படுகிறது.

1. பக்தி உண்டாவதற்கு விரோதியான பாபங்களைப் போக்குவது கர்மயோகம் முதலானவை. பகவானை அடைவதற்கு விரோதியான பாபங்களைப் போக்குவது சொல்லப்போகிற பக்தி.

2. பாபம் என்கிற சொல்லாலே ஸ்வர்க்கம் முதலானதைக்கொடுக்கும் புண்ணியமும் சொல்லப்படுகிறது. இதை 58—வது பக்கத்துக் குறிப்பில் பார்க்க.

[illegible] ||௨||

சொல்லப்போகிற தியானமானது எல்லாத் தியானங்களுக்குள்ளே 1 உயர்ந்தது. எல்லா ரஹஸ்யங்களுக்குள்ளும் 2 உயர்ந்தது. என்னை அடைவதற்கு இடைஞ்சலான எல்லாப்பாபங்களையும் போக்கக்கூடியது. இந்தத் தியானத்தைச செய்யும்போது, செய்கிறவனுக்கு அப்போதே கண்ணால் காணப்படுவதுபோல் தியானம் செய்யப்பட்ட நான் தோன்றுகிறேன். அது தியான காலத்தில் மிகுந்த ஸுகமாயிருப்பதும் தவிர, அளவில்லாத ஸுகமான மோக்ஷத்தையும் கொடுக்கிறது. இந்த ஸங்கதிகளாலே அதைச் செய்வது மிகவும் இன்பமாயிருக்கும். பலனைக் கொடுத்தும், அழிந்து போகிறதில்லை 3 அதாவது—என்னைத் தியானம் செய்தவனுக்கு

---

1. சுலோகத்தில் "ராஜவித்யா" என்கிற சொல்லுக்கு இது பொருள். ராஜாக்களுடைய வித்யை என்றும பொருள் கொள்ளலாம். ராஜாக்களுடைய வித்யை என்று சொன்னதாலே, மற்ற இரண்டு வர்ணத்தாரும இதைச் செய்யக் கூடாதென்று கருத்தன்று. இதைப் பெரிய ஆழமான மனதுடையவர்களாலேதான செய்யமுடியும். ராஜாக்கள்தான் அப்படிப்பட்டவர்கள். அதனாலேதான் இதை அவர்களுடைய தென்று சொல்லிறறு அப்பேர்ப்பட்ட மனதுடைய மற்ற இரண்டு வர்ணத்தாரும் இதைச் செய்யலாம்.

2. இங்கும் ராஜாக்களுடைய ரஹஸ்யம் என்றும பொருள் கொள்ளலாம். பெரிய ஆழமான மனதுடையவர்கள்தான் நல்ல ஸங்கதிகளைக் கண்டவர்களுக்குச் சொல்லாமல் ரக்ஷிப்பார்கள். இவவிதமான மனதில்லாதவர்கள் நல்லதோ—பொல்லாததோ—மனதில்பட்டால், தாங்காமல் அதைச் சீக்கிரம் வெளியிடுவார்கள்.

3. எந்தக்கர்மமும் அதின் பலனைக் கொடுத்ததும் போய்விடும். இந்தத்தியானமோ பலன் கொடுத்த பிறகும போகிறதில்லை. அதாவது மோக்ஷமாகிற பலனும் இதற்குப் போதாதென்று கருத்து.

நான் மோக்ஷத்தைக் கொடுத்தும், "ஐயோ! இவனுக்குத்தகுந்த படி நான் ஒன்றும் செய்யவில்லையே" என்று எனக்குத் தோன்று கிறது. [2]

அஶ்ரத்³த³தா⁴நா: புருஷா த⁴ர்மஸ்யாஸ்ய பரந்தப ।
அப்ராப்ய மாம் நிவர்தந்தே ம்ருத்யுஸம்ஸாரவர்த்மநி ||௩||

அஸ்ய-உபாஸநாக்²யஸ்ய த⁴ர்மஸ்ய-நிரதிஶயப்ரியமத்³வி ஷயதயா ஸ்வயம் நிரதிஶயப்ரியரூபஸ்ய பரமநி:ஶ்ரேயஸ ரூபஸ்ய ப்ரத்யக்ஷாவக³மஸ்ய ஸுகோ²பாதா³நஸ்ய அஶ்ரத்³த³தா⁴நா: - விஶ்வாஸபூர்வகத்வராரஹிதா: புருஷா: மாமப்ராப்ய ம்ருத்யுரூபே ஸம்ஸாரவர்த்மநி நிதராம் வர்தந்தே। அஹோ மஹதி³த³மாஶ்சர்யமித்யர்த²: ||௩||

என்னைப்பற்றின இந்தத்தியானமென்கிற தர்மமானது-அதை செய்கிறவர்களுக்கு என்னிடத்தில் அளவில்லாத பிரீதியிருப்ப தால்-மிகவும் இன்பமாயும், அளவில்லாத ஸுகமான மோக்ஷத் தைக் கொடுப்பதாயும், பலனைக் கொடுத்தும் அழிவில்லாததாயு மிருக்கிறது. இதைச் செய்யத் 1தகுந்த நிலைமையை யடைந்தும், நம்புதலோடு இதைச் செய்யவேணுமென்று பரபரப்பில்லாதவர் கள் என்னை அடையாமல், யமனைப்போல் நடுக்கத்தைக்கொடுக்கக் கூடிய ஸம்ஸாரத்தில் முழுகிக் கிடக்கிறார்கள். 2 இந்த ஆச்சரி யத்தை என்ன என்று சொல்லுவேன். [3]

---

1. இந்த புத்தகளத்தில் லக்ஷக்கணக்காய் இருக்கிற ஜனங்களுக் குள்ளே இதைச்செய்யக்கூடியவர்கள் இருந்தாலும், பெரியோர்களிடம் இதைக் கேட்கவில்லை. கேட்டாலும், கவனிக்கவில்லை. கவனித்தா லும், நம்புதலில்லை. நம்பிக்கையிருந்தாலும், இதைச் செய்வதில் பர பரப்பில்லை.

2. இந்தத்தியானம் செய்யும்போதே அளவில்லாத ஸுகத்தைக் கொடுக்கிறது. பிறகு அளவில்லாத ஸுகமான மோக்ஷத்தையும் கொ டுக்கிறது. செய்வதில் கஷ்டமுமில்லை. ஸம்ஸாரமோ அளவில்லாத துக்கத்தைக் கொடுக்கிறது. இந்த இரண்டுக்கு மிருக்கும் வித்தியா ஸத்தைத் தெரிந்தும், தியானத்தைவிட்டு, ஸம்ஸாரத்தையே மிகவும் ஆசையுடனேபற்றுகிறார்களேயென்றுபகவானுக்கே ஆச்சரியமுண்டாகி,

ஶ்ருணு தாவதீஶ்வரஸ்ய மமாதிஶயிதமைஶ்வர்யம் ஸ்தாவர ஜங்கமாத்மகேஷு—

மயா ததமிதம் ஸர்வம் ஜகதவ்யக்தமூர்த்திநா |
மத்ஸ்தாநி ஸர்வபூதாநி ந சாஹம் தேஷ்வவஸ்தித: ||4||

ந ச மத்ஸ்தாநி பூதாநி பஶ்ய மே யோகமைஶ்வரம் |
பூதப்ருந்ந ச பூதஸ்தோ மமாத்மா பூதபாவந: ||5||

ஜகத்-சேதநாசேதநாத்மகம் க்ருத்ஸ்நம் ஜகத், அவ்யக்தமூர்த்திநா-அப்ரகாஶிதஸ்வரூபேண மயாந்தர்யாமிணா ததம்-அஸ்ய ஜகதோ தாரணார்த்தம் நியமநார்த்தம் ச ஶேஷித்வேந வ்யாப்தமித்யர்த்த: | யதாந்தர்யாமிப்ராஹ்மணே "ய: ப்ருதிவ்யாம் திஷ்டந்-யம் ப்ருதிவீ ந வேத, ய ஆத்மநி திஷ்டந்—யமாத்மா ந வேத" இதி சேதநாசேதநவஸ்துஜாதேஷ்வந்தர்யாமிணா தத்தத்வ்யாப்திருக்தா | ததோ மத்ஸ்தாநி ஸர்வபூதாநி-ஸர்வாணி பூதாநி மயி அந்தர்யாமிணி ஸ்திதாநி | தத்ரைவ ப்ராஹ்மணே "யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்—ய: ப்ருதிவீமந்தரோ யமயதி, யஸ்யாத்மா ஶரீரம்-ய ஆத்மாநமந்தரோ யமயதீ"தி ஶரீரத்வேந நியாம்யத்வப்ரதிபாதநாத் ததாயத்தே ஸ்திதிநியமநே ப்ரதிபாதிதே, ஶேஷித்வம் ச | ந சாஹம் தேஷ்வவஸ்தித:-அஹம் து ந ததாயத்தஸ்திதி: | மத்ஸ்திதௌ தைர்ந கஶ்சிதுபகார இத்யர்த்த: | ந ச மத்ஸ்தாநி பூதாநி-ந கடாதீநாம் ஜலாதேரிவ மம தாரகத்வம் | கதம்? மத்ஸங்கல்பேந | பஶ்ய மம ஐஶ்வரம் யோகம்-அந்யத்ர அஸம்பாவநீயம் மதஸாதாரணமாஶ்சர்யம் யோகம் பஶ்ய |

---

இப்படிச் சொன்னது. இது பாபத்தின் பெருமை. சுலோகத்தில் "பரம்தப" என்ற சொல் இருக்கிறது. அதற்குச் சத்துருக்களைக் கொளுத்துகிறவன் என்று பொருள். நீ வெளியேயிருக்கிற உன் சத்துருக்களைக் கொளுத்துவதுபோல்,, உள்ளேயிருக்கிற—பரபரப்பில்லாமைக்குக் காரணமான—உன் சத்துருக்களையும் நீ கொளுத்தவேணுமென்று கருத்து.

கோऽஸௌ யோக: ? பூதப்ருந்ந ச பூதஸ்தோ மமாத்மா பூதபாவந:—ஸர்வேஷாம் பூதாநாம் பர்தாஹம்; ந ச தை: கஶ்சிதபி மமோபகார: । மமாத்மைவ பூதபாவந: மம ஸங்கல்ப ஏவ பூதாநாம் பாவயிதா தாரயிதா நியந்தா ச ॥ ॥ச—ரு॥

அவ—அடைய வேண்டியவனை என்னுடைய நினைக்கமுடியாத பெருமையைச் சொல்லுகிறேன். கேள்—

அறிவுள்ளது, அறிவில்லாதது என்று இருவகையான இந்த எல்லா உலகத்துக்குள்ளும், நான் ஒருவனுக்கும் தெரியாமல், அதை த்தூக்குவதற்காகவும்,ஏவுகிறதற்காகவும் யஜமானனுயிருந்து 1 நிறைந்திருக்கிறேன். ஆகையால் எல்லா வஸ்துக்களும் உள்ளேயிருந்து ஏவுகிற என்னிடத்தில் இருக்கின்றன. அதாவது—என் அதீனமாயிருக்கின்றன. நான் அவைகளில் இல்லை. அதாவது—அவைகளின் அதீநமாயில்லை. என் இருப்புக்கு அவைகளால் துளிக்கூட உபகாரமில்லை. (4)

ஆனால் அவைகள் என்னிடத்தில் இல்லை. அதாவது—ஜலத்தைக் குடம் தூக்குவதுபோல், அவைகளை நான் 2 தூக்கவில்லை.

---

1. ஆகாசம் என்பது எங்கும் நிறைந்திருக்கிறது. ஆனால் அது ஒன்றையும் ஏவுகிறதில்லை. ராஜா தன் ஜனங்களை ஏவுகிறான் ஆனால் அவன் எங்கும் நிறைந்திருக்கவில்லை. பகவானே ஆகாசம்போல் எங்கும்நிறைந்து, ராஜாவைப்போல் எல்லாரையும் ஏவுகிறான். இப்படியே உபநிஷத்து ஒருவஸ்துவாலும் அறியப்படாமல் அதற்குள்ளேயிருந்து அதை ஏவுகிறானென்று சொல்லுகிறது. இப்படியே எல்லாம் பகவானுக்கு உடம்பென்றும், அவனால் ஏவப்படுகிறதென்றும், சொல்லுவதாலே, அவைகளுடைய இருப்பும் பகவானுக்கு அதீநமென்று சொன்னதாக ஆகிறது.

2. முதல் சுலோகத்தில் என்னிடத்தில் எல்லா வஸ்துக்களுமிருக்கின்றன என்று சொன்னதால், பகவான் எல்லாவற்றையும் தூக்குகிறானென்றும்,இரண்டாவது சுலோகத்தில் அவைகள் என்னிடத்தில் இருக்கவில்லையென்றும் சொன்னதால், அவன் தூக்கவில்லையென்றும் ஏற்படுகிறது.இவைகள் ஒன்றுக்கொன்றுவிரோதியாதோவென்றால்,பதில்-

பின்னை யெப்படி யென்றால்-எல்லாவற்றையும் நினைவினால் தாங்கு கிறேன். என்னைத் தவிர இன்னொருவனிடத்தில் இருக்குமோ என்று நினைக்க முடியாத-என்னிடத்தில் மாத்திரமுள்ள—ஆச்சரியமான நினைவைப்பார். அந்த நினைவு என்னவென்றால் - உண்டாகிற எல்லா வஸ்துக்களும் உண்டாகட்டும்; அவைகள் இருக்கும்வரையில் ஒரு குறைவுமில்லாமலிருக்கட்டும்; அவைகளுக்கு ஏற்பட்ட வேலைகளை அவைகள் ஸரியானபடி செய்யட்டும்; ஸூரியன் முதலான வஸ்துக்கள் கீழே விழாமல் அங்கேயே இருக்கட்டும்—இவைமுதலான எண்ணங்கள். அந்த நினைவுகளின்படி எல்லா வேலைகளும் நடக்கின்றன. என் நினைவுக்கு அவ்வளவு சக்தி இருக்கிறது. [4–5]

அத—ஸர்வஸ்ய ஸங்கல்பாயத்த ஸ்திதி ப்ரவ்ருத்தித்வே நிதர்சனமாஹ—

யதாகாசஸ்திதோ நித்யம் வாயுஸ்ஸர்வத்ரகோ மஹாந்।
ததா ஸர்வாணி பூதாநி மத்ஸ்தாநீத்யுபதாரய ॥ ௬ ॥

யதா ஆகாசே அநாலம்பநே மஹாந் வாயு: ஸ்திதஸ்ஸர்வத்ர கச்சதி। ஸ து வாயுர் நிராலம்பநோ மதாயத்தஸ்திதிரிதி அவச்யாப்யுபகமநீய:- ஏவமேவ ஸர்வாணி பூதாநி விஜ்ஞாயதே। ஏவமேவ ஸர்வாணி பூதாநி அசேதநேஷு மயி ஸ்திதாநி மயைவ த்ருதாநீத்யவதாரய। யதாஹுர்வேதவித: "மேகோதய: ஸாகரஸந்நிவ்ருத்திரிந்தோர்விபாகஸ் ஸ்புரிதாநி வாயோ:। வித்யுத்விபங்கோ கதிருஷ்ணரச்மேர்விஷ்ணோர்

---

குடம் ஜலத்தைத் தூக்குவதுபோல் நான் தூக்கவில்லை. நினைவினால் தூக்குகிறேன். மேலும், குடம்போல் ஒருவனுக்கு உட்பட்டுத் தூக்கவில்லை. ஒருவனுக்கும் உட்படாமல் தூக்குகிறேன். அதாவது-ஒரு குடத்தில் ஜலத்தை வைத்தால், அந்தக் குடத்தினால் ஜலத்தைத் தூக்காமலிருக்க முடியாது. அதுபோலல்ல நான். வேணுமென்றால் தூக்குவேன். வேண்டாமென்றால் நினைத்தபோதே கீழேபோட்டுவிடுவேன். நான் ஒருவனுக்கும் உட்படாதவன். ஆகையால் முன்சொன்ன விரோதமில்லை.

விதிருதா: ப்ரபவந்தி காவ:" இதி | விஷ்ணோரநந்தஸ்யாபாரணாநி ஸஹஸ்ராண்யயுதாநி ச | ஶ்ருதிரபி "ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநே கார்கி ஸூர்யாசந்த்ரமஸௌ விதிருதௌ திஷ்டத:, பீஷாஸ்மாத்வாத: பவதே | பீஷோதேதி ஸூர்ய: | பீஷாஸ்மாதக்நிஶ்சேந்த்ரஶ்ச" இத்யாதிகா ||௬||

*அவ—நினைவினால் எல்லா வேலையும் செய்யப்படுகிறது என்பதற்கு உதாரணம் சொல்லுகிறார்—*

ஒருவிதமான 1 பிடிப்பில்லாத இடத்தில், அதாவது ஆகாசத்தில், ஒருபெரியகாற்று இருந்துகொண்டு எங்கும் போகிறதே. அதை யார் தூக்குகிறார்கள். ஒருவனும் தூக்காமல் ஒருபிடிப்புமில்லாமல் எப்படி நிற்கும். ஆகையால் அதை நான்தான் தூக்குகிறேன்; என்னால்தான் நிற்கிறது என்று ஒப்புக்கொள்ளவேணும். அதுபோல 2 எல்லா உலகத்தையும் நான்தான் தூக்குகிறேன். ஆனால் என்னை ஒருவனுக்கும் தெரியாது. இப்படியே வேதத்தை நன்றாய் அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள்:— "ஆகாசத்தில் திடீரென்று ஒரு நிமிஷத்தில் ஜலம் நிறைந்த மேகங்கள் வருகின்றன. ஸமுத்திரத்தில் பெரிய பெரிய அலைகள் ஓயாமல் வந்துகொண்டிருந்தாலும், கரைக்கு வந்து திரும்பி விடுகின்றன. சந்திரன் வரவர வளர்ந்து நிறைந்து, பிறகு கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைந்து போகிறது. ஒரு விநாடிக்கு முன் இலைகூட

---

1. இந்த சுலோகத்தில் "வாயு: ஆகாசஸ்தித:" என்று இரண்டு சொற்கள் இருக்கின்றன. அவைகளுக்கு ஆகாசத்திலிருக்கும் காற்றுஎன்று ஏற்பட்டபொருள். இவ்விடத்தில் அப்படிப்பொருளல்ல. பின்னை என்னவென்றால்-ஒருவிதமான பிடிப்புமில்லாத காற்று என்று பொருள். வேறு ஒன்றால் தூக்கப்படாமலும், ஏவப்படாமலும் உம்மாலேயே தூக்கப்படுவதும் ஏவப்படுவதுமான ஒருபொருளைக்காட்டும் என்ற கேள்விக்குப்பதிலாக அப்படிப்பட்ட பொருளைக் காட்டுகிறது இந்த சுலோகம். ஆகையால் காற்றை ஆகாசம் தூக்குகிறது என்று சொல்வது ஒட்டாது.

2. ஒரு பெரிய பக்ஷியின் உடம்பு ஒரு விதமான பிடிப்பில்லாத இடத்தில் இருந்துகொண்டு பறக்கிறது. அதின் உடம்பில் ஜீவாத்மா இல்லாவிட்டால், அது நிற்குமோ? பறக்குமோ? அதுபோல.

அச்சங்கவில்லை; திடீரென்று பெருங்காற்று அடிக்கிறது. திடீரென்று மின்னல் உண்டாகிறது. ஒருநாள்கூடத் தவறாமல் காலையில் ஸூரியன் கிளம்புகிறான். இவையெல்லாம் ஸ்ரீமானுண நாராயணனுடைய ஆச்சரியமான சக்தியினாலுண்டாகின்றன" என்று. இப்படியே வேதத்திலும் "எல்லா லோகங்களும் பகவானுடைய ஆக்ஞையினால் இருக்கின்றன" என்றும், "ஸூரியன், இந்திரன், அக்கினி, காற்று, யமன் முதலானவர்கள் எந்த வேளையில் எந்தக் குற்றம் வருமோவென்று பகவானுக்கு நடுங்கி, தங்கள் தங்கள் வேலைகளைச் செய்கிறார்கள்" என்றும் சொல்லியிருக்கிறது. 1 [6]

ஏவம் ஸகலேதரநிரபேக்ஷஸ்ய ஸ்வஸங்கல்பாத் ஸர்வேஷாம் ஸ்திதி: ப்ரவ்ருத்திஶ்சோக்தா। ததா ஸ்வஸங்கல்பாதேவ ஸர்வேஷாமுத்பத்திப்ரலயாவபீத்யாஹ—

ஸர்வபூதாநி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம்।
கல்பக்ஷயே புநஸ்தாநி கல்பாதௌ விஸ்ருஜாம்யஹம்॥ [7]

ஸ்தாவரஜங்கமாத்மகாநி ஸர்வாணி பூதாநி மாமிகாம் மச்சரீரபூதாம் ப்ரக்ருதிம் தமஶ்ஶப்தவாச்யாம் நாமரூபவிபாகாநர்ஹாம் கல்பக்ஷயே சதுர்முகாவஸாநஸமயே மத்ஸங்கல்பாத் யாந்தி। தாந்யேவ பூதாநி கல்பாதௌ புநர்விஸ்ருஜாம்யஹம்। யதாஹ மநு: "ஆஸீதிதம் தமோபூதம்," "ஸோऽபித்யாய ஶரீராத்ஸ்வாத்" இதி। ஶ்ருதிரபி "யஸ்யாவ்யக்தம் ஶரீரம்" இத்யாதிகா। "அவ்யக்தமக்ஷரே லீயதே - அக்ஷரம் தமஸி லீயதே, தம: பரே தேவ ஏகீபவதி" இதி॥ [7]

---

1. 7-வது அத்தியாயம் 7-வது சுலோகத்தில் பகவான் எங்கும் நிறைந்து, எல்லாவற்றையும் தாங்குகிறானென்று சொல்லப்பட்டது. அதையே இங்கே சொல்லி, இரண்டு ஸங்கதிகளைப் புதிதாகச் சொல்லுகிறார். அவையாவன—(1) பகவான் எல்லாவற்றையும் எண்ணத்தினால் தான் தாங்குகிறான். (2) அவனை ஒருவனுக்கும் தெரியாது-என்று. இந்த இரண்டாவது ஸங்கதி நூலில் கோத்த மணி உதாரணத்தாலும் ஏற்படும். ஆனால் அதை இங்கே வெளிப்படையாகச் சொல்லுகிறது.

அவ—தன்னைத்தவிர வேறொன்றை எதிர்பார்க்கவேண்டாமல் இருக்கிற பகவானுடைய நினைவினால் எல்லாம் இருக்கிறதென்றும், அந்தந்த வேலையைச்செய்கிறதென்றும் சொல்லப்பட்டது. அப்படியே அவருடைய நினைவினாலேதான் எல்லாஉலகங்களும் உண்டாகி, அழிகின்றன என்றும் சொல்லுகிறார்—

1 குந்தியின்பிள்ளையே! பிரும்மாவுக்கு நூறுவயதாகி முடிகிற்காலத்தில் அசைகிறது, அசையாதது என்று இருவகைப்பட்ட இப்போதிருக்கும் எல்லாவஸ்துக்களும், இப்போதிருக்கும் உருவங்களையும் பெயர்களையும் விட்டு, என் எண்ணத்தால் என்னுடைய உடம்பாயும்—தமஸ் என்று சொல்லப்பட்டதுமான பிரகிருதி என்கிற வஸ்துவாக ஆய்விடுகிறது. மறுபடியும் பிரும்மாவை உண்டுபண்ணுவதாகிற ஸ்ருஷ்டிகாலம் வரும்போது, அந்தப்பிரகிருதியிலிருந்தே முன்னிருந்ததுபோலவே வெவ்வேறு உருவங்களையும் பெயர்களையும் உள்ளவஸ்துக்களை உண்டுபண்ணுகிறேன். இந்தஸங்கதி மநுஸ்மிருதியிலும்வேதத்திலும்சொல்லியிருக்கிறது.(7)

ப்ரக்ருதிம் ஸ்வாமவஷ்டப்ய விஸ்ருஜாமி புந: புந: ।
பூதக்ராமமிமம் க்ருத்ஸ்நமவஶம் ப்ரக்ருதேர்வஶாத் ॥ ॥௮॥

ஸ்வகீயாம் விசித்ரபரிணாமிநீம் ப்ரக்ருதிமவஷ்டப்ய- அஷ்டதா பரிணமய்ய இமம்-சதுர்விதம் தேவதிர்யங்மநுஷ்யஸ்தாவராத்மகம் பூதக்ராமம் மதீயயா மோஹிந்யா குணமய்யா: ப்ரக்ருதேர்வஶாதவஶம் புந:புந: காலேகாலே விஸ்ருஜாமி ॥ ॥௮॥

ஆச்சரியங்களான வெவ்வேறு பதார்த்தங்களாக ஆகிற பிரகிருதி என்கிற என்னுடையதான வஸ்துவை 2 எட்டு

1. நீ குந்தியின் உடம்பிலிருந்துஉண்டானதை நீ அறியாவிட்டாலும், வேண்டியவர்கள் சொல்லைக்கேட்டு நீ நம்புகிறாய். அப்படியே என் உடம்பிலிருந்து இந்த உலகம் உண்டானதென்று என் சொல்லைக்கேட்டு நீ நம்பு என்று கருத்து.

2. 7-வது அத்தியாயம் 4-வது ச்லோகத்தில் சொன்னபடி எட்டுவிதம் இதினால் ஸமஷ்டி வ்யஷ்டி செய்வது சொல்லப்பட்டது.

விதமாக முதலில் ஆக்குகிறேன். அவைகளிலிருந்து காணப் படுகிற தேவன்—பக்ஷி—மனிதன்—மரம்—என்று நாலுவிதமான எல்லாப்பிராணிகளையும் வெவ்வேறு உருவம், பெயர், இடம், காலம், அநுபவம், இவைகளுள்ளவைகளாக அப்போதப்போது திரும்பத் திரும்ப உண்டுபண்ணுகிறேன். ஸத்வம் முதலான மூன்று குணங்களோடு கூடியதும், எல்லாரையும் மயக்குகிறதுமான என்னுடைய பிரகிருதிக்கு அவைகள் உட்பட்டிருக்கின்றன. அவைகளால் அதை மீறமுடியாது. (8)

அத—ஏவம் தர்ஹி விஷமஸ்ருஷ்ட்யாதீநி கர்மாணி நைர்க்ருண்யாத்யாவஹாநி ந ஸம்பவந்தீத்யாஹ—

ந ச மாம் தாநி கர்மாணி நிபத்நந்தி தநஞ்ஜய |
உதாஸீநவதாஸீநமஸக்தம் தேஷு கர்மஸு || ||௯||

ந ச தாநி விஷமஸ்ருஷ்ட்யாதீநி கர்மாணி மாம் நிபத்நந்தி - மயி நைர்க்ருண்யாதிகம் நாவஹந்தி| யத: க்ஷேத்ரஜ்ஞாநாம் பூர்வக்ருதாந்யேவ கர்மாணி தேவாதிவிஷமபாவஹேதவ:, அஹம் து தத்ர வைஷம்யே அஸங்க: தத்ரோதாஸீநவதாஸீந: | யதாஹ ஸூத்ரகார: "வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்", "ந கர்மாவிபாகாதிதி சேந்நாநாதித்வாத்" இதி || ||௯||

அவ—இந்த உலகமானது பேசத்தெரிந்ததும், பேசத்தெரியாததும், ஏழையும், பணக்காரனும், வியாதியும், உடம்பு ஸௌக்கியமும், அழகும், கண்ணுக்குப்பிடிக்காமையும்— இவையுள்ளதாயும் என்று இப்படிப்பலவிதமாயிருக்கிறது. இவைகளைப் பகவான் உண்டு பண்ணுகிறான் என்றால், அவனுக்குச்சிலரிடத்தில் ஸ்நேஹமும், சிலரிடத்தில் த்வேஷமும், சிலரிடத்தில் தயையில்லாமையும் ஆகியகெடுதல்கள் இருப்பதாகஏற்படுமே என்றால், சொல்லுகிறார்—

கீழ்ச்சொன்னபடி உலகத்தைப் பலமாதிரியாக நான் உண்டு பண்ணுவதால், என்னிடத்தில் இரக்கமில்லாமை, பக்ஷபாதம் பண்ணுகை என்கிற குற்றங்கள் வாரா. ஏனென்றால், ஜீவன்கள்

நெடுநாளாய் ஒன்றின்பின் ஒன்றாக வரிசையாகச் செய்துவந்த கர்மங்களே அந்த தாரதம்மியங்களுக்குக் காரணம். நானாகச்செய்யவில்லை. ஒருவனை இளப்பமாகவோ, உயர்ந்தவனாகவோ பண்ணவேண்டு மென்று எனக்கு ஆசை யில்லை. [1] யார் எப்படியிருந்தாலெனக்குஎன்ன? என்றுஇருப்பவன்போல் இருக்கிறேன். வேதத்திற்கு அர்த்தமான பிரும்மஸூத்ரங்களிலும் இந்த ஸங்கதி சொல்லியிருக்கிறது. (9)

मयाध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।
हेतुनानेन कौन्तेय जगद्विपरिवर्तते ॥ ॥१०॥

तस्मात् क्षेत्रज्ञकर्मानुगुणं मदीया प्रकृतिः सत्यसङ्कल्पेन मया अध्यक्षेणेक्षिता सचराचरं जगत् सूयते । अनेन क्षेत्रज्ञकर्मानुगुणमदीक्षणेन हेतुना जगत् परिवर्तत इति । ऐश्वर्यं सत्यसङ्कल्पत्वं नैर्घृण्यादिदोषरहितत्वमित्यादिकं अत्र [illegible] पश्य । यथाह श्रुतिः "अस्मान्मायी सृजते विश्वमेतत्तस्मिंश्चान्यो मायया सन्निरुद्धः, मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तु महेश्वरम्" इति ॥ ॥१०॥

அவ—உண்டாகும் வஸ்துக்களின் தாரதம்மியங்கள் கர்மத்தால் ஏற்படுகிறதென்றால், எப்போதும் மாறுகிற தன்மையுள்ள பிரகிருதி தானாகவே கர்மத்தினாலே அந்தந்த வஸ்துக்களாக ஆகட்டுமே; அதில்உம்முடையவேலை எதற்கு? என்றால்,சொல்லுகிறார்—

நினைத்தபடி நடத்துகிற யஜமானனை என்னால் ஜீவன்களுடைய கர்மத்துக்குத் தகுந்தபடி—என்னுடைய உடம்பான-பிர

1. ஒருவன் ஒருவேலையைச் செய்யும்போது மற்றொருவன் அதைக் கவனிக்காமல் இருந்தால், அவன் அந்த வேலையைச் செய்ததாகவும் செய்வித்ததாகவும்எப்படிஏற்படாதோ, அப்படியே பகவான் உலகத்தை உண்டுபண்ணுகிறபோது, அதின் தாரதம்மியத்தை உண்டுபண்ணவேண்டுமென்று அவனுக்கு எண்ணமில்லாமையால், அவன் உதாஸீனன். அதாவது—அவன் செய்தவனுமல்ல. செய்வித்தவனுமல்ல.

கிருதியானது இன்னின்ன வஸ்துக்களை யுண்டுபண்ணட்டுமே
ன்று நினைக்கப்பட்ட எல்லா உலகத்தையும் உண்டுபண்ணுகிறது.
உலகத்தில் ஒருவேலைக்காரன் நல்லது பண்ணினாலும், கெட்டது
பண்ணினாலும். அதைப்பார்த்து யஜமானன் தானே பலனைக் கொ
டுக்கிறான். அதுபோல உலகத்திலிருக்கும் தாரதம்மியங்கள் கர்
மங்களினால் உண்டானதாயிருந்தாலும், அவைகளை அறிவுள்ள
ஒருவன்தானே உண்டுபண்ணவேணும். ஆதலால் நான்தான் அ
வைகளை உண்டுபண்ணினேன். அறிவில்லாத கர்மமே யுண்டுபண்
ணுமா? இப்படி என் நினைவினால் இந்த உலகமானது திரும்பித் தி
ரும்பி வருகிறது. ஆதலால் நான்உலகத்திற்கு யஜமானன், நினைத்த
படி நடத்துகிறவன். பக்ஷபாதம் முதலான குற்றமில்லாதவன்.
இவைமுதலான என்னுடைய ஈசுவரத் தன்மையைப்பார்[1]. 7-வது
சுலோகத்தில் நான்தான் உலகத்தை உண்டுபண்ணுகிறேன்
என்று சொன்னதை இங்கே முடிக்கிறார். (10)

𑌅𑌵𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌮𑍂𑌢𑌾 𑌮𑌾𑌨𑍁𑌷𑍀𑌂 𑌤𑌨𑍁𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌮𑍍 ।
𑌪𑌰𑌂 𑌭𑌾𑌵𑌮𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑍋 𑌮𑌮 𑌭𑍂𑌤𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ॥ ॥௧௧॥

𑌏𑌵𑌂 𑌮𑌾𑌂 𑌭𑍂𑌤𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌂 𑌸𑌤𑍍𑌯𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌂
𑌨𑌿𑌖𑌿𑌲𑌜𑌗𑌦𑍇𑌕𑌕𑌾𑌰𑌣𑌂 𑌪𑌰𑌮𑌕𑌾𑌰𑍁𑌣𑌿𑌕𑌤𑌯𑌾 𑌸𑌰𑍍𑌵𑌸𑌮𑌾𑌶𑍍𑌰
𑌯𑌣𑍀𑌯𑌤𑍍𑌵𑌾𑌯 𑌮𑌾𑌨𑍁𑌷𑍀𑌂 𑌤𑌨𑍁𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌂 𑌸𑍍𑌵𑌕𑍃𑌤𑍈𑌃 𑌪𑌾𑌪𑌕
𑌮𑌰𑍍𑌭𑌿𑌰𑍍𑌮𑍂𑌢𑌾𑌃 𑌅𑌵𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌸𑌮𑌂 𑌮𑌨𑍍𑌯𑌨𑍍𑌤𑍇।
𑌭𑍂𑌤𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 𑌮𑌮𑌾𑌪𑌾𑌰𑌕𑌾𑌰𑍁𑌣𑍍𑌯𑍌𑌦𑌾𑌰𑍍𑌯𑌸𑍌𑌶𑍀

1. 7-வது அத்தியாயத்தில் 6-வது சுலோகத்தில் உலகமானது
பகவானிடமிருந்து உண்டாகி, அவனிடத்திலேயே பிரளயகாலத்தில்
வந்துஅடங்குகிறது என்று சொல்லப்பட்டது. அதையேஇந்த இடத்
தில் 7-வது சுலோகம் முதல் நான்கு சுலோகங்களால் சொல்லுகிறார்.
இங்கே அதிகமாய் சொல்லுகிறவைகளாவன.—உலகம் பகவானுடைய
உடம்பான பிரகிருதியிலிருந்து உண்டாகிறது. முதலில் ஆகாசம் மு
தலான ஸமஷ்டிகள் உண்டாகின்றன. அவைகளிலிருந்து வியஷ்டி
யான வெவ்வேறு வஸ்துக்கள் உண்டாகின்றன. உண்டாகும் தாரதம்
மியங்களுக்குப் பகவான் காரணமன்று. ஜீவன்களுடைய கர்மங்கள்தான்
காரணம். அப்படியிருந்த போதிலும், பகவானுடைய ஸங்கல்பமில்லா
விட்டால் உலகம் உண்டாகாது—என்று.

ஸர்வலோகமஹேஶ்வரம் மநுஷ்யத்வஸமாஶ்ரயணமவஜாநந்தி பரம் பாவமஜாநந்தோ மநுஷ்யத்வஸமாஶ்ரயணமாத்ரேண மாமிதரஸஜாதீயம் மத்வா திரஸ்குர்வந்தீத்யர்த: ‖ ‖௧௧‖

அவ—ஞானிகளுடைய பெருமையைச் சொல்லுவதற்சாக, பகவானை உள்ளபடி அறியாதவர்களுடைய ஸ்வபாவத்தைச் சொல்லுகிறார்—

இப்படி எல்லா உலகங்களுக்கும் நான் பெரிய ராஜவாயும், எல்லாம் தெரிந்தவனாயும், நினைத்தபடி நடத்துகிறவனாயும், எல்லா உலகங்களையும் ஒருவனாய் உண்டுபண்ணுகிறவனாயும், அளவில்லா ததயையினாலே எல்லாரும் என்னிடம் வருவதற்காக 1 மனித உருவத்தை உடையவனாயு மிருக்கிற என்னை மூடர்கள் தாங்கள் பண்ணின பாபங்களினாலே உலகத்திலிருக்கும் மனிதர்களுக்குள் நானும் ஒருவன் என்று நினைத்து, என்னுடைய உயர்ந்த தன்மையை அறியாமல், மனித உருவத்தை மாத்திரம்பார்த்து, 2 அலக்ஷியம் பண்ணுகிறார்கள். என்னுடைய உயர்ந்த தன்மையாவது—கேட்டதைக் கொடுப்பது, தாழ்ந்தவர்களுடனும் இடைவிடாமல் பழகுவது, குற்றங்களைப்பார்க்காமல் ஜனங்களிடத்தில் ஆசையுள்ளவனாயிருப்பது. என் ஸொத்தான எல்லாமனிதர்களும் என்னிடம் வருவதற்காக மனித உருவத்துடன் லோகத்தில் வந்திருப்பதும். கீழ்ச்சொன்ன குணங்கள்என்னை இப்படிவரும்படி செய்தது. (11)

மோகாஶா மோககர்மாணோ மோகஜ்ஞாநா விசேதஸ: |
ராக்ஷஸீமாஸுரீம் சைவ ப்ரக்ருதிம் மோஹிநீம் ஶ்ரிதா: ‖

---

1. பகவானுடைய திருமேனி மனித உருவம் போலிருந்த போதிலும், அதுவேறுஜாதியானவஸ்துவி (சுத்தஸத்வத்தி) லிருந்துஉண்டானது. ஒருகுடம்மண்ணால்செய்யப்பட்டது. ஒன்று தங்கத்தால்செய்யப்பட்டது. இவையிரண்டுக்கும்உருவமும் பெயரும் ஒரேமாதிரியாயிருந்தாலும், அவைகள் வெவ்வேறு ஜாதியான வஸ்துக்களால் செய்யப்பட்டன. அதுபோல.

2. பகவானுடைய உருவம் மனித உருவம் போலிருக்கிறது. அதினால் அவனிடம் காணப்படுகிற-மற்றவர்களைக் காட்டிலும் உயர்த்திக்கு அடையாளங்கள் மனதில் படாமல், அவனை மற்றவர்களைப் போல் எண்ணுவது. இது தான் அலக்ஷியம் பண்ணுவது.

[illegible] ॥ ௧௨ ॥

நான் மனிதஉருவமாக இருக்கச்செய்தேயும், என்னிடத்தில் காணப்படும் அளவில்லாத தயை முதலான பெருமையை அறியவொட்டாமல் செய்கிற ரஜோகுணமும், தமோகுணமும் மேலிட்டிருக்கிறஸ்வபாவத்தைச்சிலர் அடைந்திருக்கிறார்கள். அவர்களுக்கு ஆசைப்படும் பலன்கள் கிடைக்கிறதில்லை. அவர்கள் ஆரம்பித்த வேலைகள் நடக்கிறதில்லை. என்னுடையதான எல்லா உலகங்களையும் பற்றி உள்ளபடி அறியாமல் 1 தப்பாக நினைக்கிறபடியால், அவர்களுக்கு அறிவு இருந்தும் பிரயோஜநமில்லை. அப்படியே எல்லா விஷயத்திலும் உண்மையை யறியாதவர்கள், எல்லா லோகங்களுக்கும் ராஜாவான என்னை மற்றவர்களைப்போல நினைத்து, என்விஷயத்தில் என்னவேலைகளைச் செய்ய நினைக்கிறார்களோ, பொதுவாய் எந்த பலனைக் குறித்து வேலையை ஆரம்பிக்கிறார்களோ, 2 அவைகள் எல்லாம் வீணாய்ப்போகின்றன. (12)

---

1. தப்பாக நினைப்பதாவது—பகவானுக்கு உட்பட்டதை அவனுக்குஉட்படாததென்றும்,பகவானுடைய சொத்தைத் தன்னதென்றும், ஸ்வயம்பிரகாசமாயும் அழிவில்லாததுமான ஜீவஸ்வரூபத்தைத் தானாய்த்தோன்றாத அழிவுள்ளஉடம்பாகஎண்ணுவதும், நிலையில்லாத பலனை நிலையுள்ளதாக எண்ணுவதும்.

2. பகவான் ராமாவதாரம்பண்ணினபோது, ராவணன் பகவானைக் கொல்லவேணுமென்று நினைத்தான். அவன் நினைவெல்லாம் தப்பாயிருந்தபடியால், அவனுடைய ஒரு வேலையும் அவன் நினைத்தபடி நடக்க

மஹாத்மாநஸ்து மாம் பார்த்த தைவீம் ப்ரக்ருதிமாச்ரிதா: ।
பஜந்த்யநந்யமநஸோ ஜ்ஞாத்வா பூதாதிமவ்யயம் ॥ ॥௧௩॥

யே து ஸ்வக்ருதை: புண்யஸஞ்சயை: மாம் ஶரணமுபாகம்ய வித்வஸ்தஸமஸ்தபந்தா: தைவீம் ப்ரக்ருதிமாச்ரிதா: மஹாத்மாந:, தே பூதாதிமவ்யயம் வாங்மநஸாகோசரநாமகர்மஸ்வரூபம் பரமகாருணிகதயா ஸாதுபரித்ராணாய மநுஷ்யத்வேநாவதீர்ணம் மாம் ஜ்ஞாத்வா அநந்யமநஸோ மாம் பஜந்தே, அத்யர்த்தமத்ப்ரியத்வேந மயா விநா மநஸ ஆத்மந: பாஹ்யகரணாநாம் ச தாரணமலபமாநா மதேகப்ரயோஜநா பஜந்தே ॥ ॥௧௩॥

அவ— இப்படி உம்மைஅவமானம் செய்கிறமூடர்கள் நிறைந்த உலகத்தில் நீர் ஏன்அவதாரம் பண்ணினீர்; ஒரு பிரயோஜநமும் இல்லையேஎன்று கேட்டால், என்னையுள்ளபடி அறிந்த சில பெரியோர்கள் இருக்கிறார்கள்; அவர்களுக்காக நான் அவதாரம் செய்திருப்பதாலே, அதற்குப் பிரயோஜநமுண்டென்றுகாட்டி, அவர்களின் நடவடிக்கையைச் சொல்லி, பக்தியைச் சொல்லுகிறார்—

அநேக ஜந்மங்களிலே பண்ணின கணக்கில்லாத புண்ணியங்களால் என்னைத் தைவம் என்று அறிந்து, என்னைப் பிரபத்திபண்ணி (கெஞ்சிக் கேட்டுக்கொண்டு), எல்லா பாபங்களும் நீங்கி, ஸத்வகுணம் மேலிட்ட சில பெரியோர்களுமிருக்கிறார்கள். அவர்கள் எல்லா உலகத்தை உண்டு பண்ணினவனும், ஒருவித 1 கெடுதியில்லாதவனும், மனதாலே நினைக்கவும், வாயால் சொல்லவும் முடியாத குணங்களையும், வேலைகளையும் உடையவனும் ஆயிருந்தும், அளவில்லாத தயையினால் ஸாதுக்களைக்கா

இல்லை. உண்மையான அறிவில்லாமையாலே தப்பான எண்ணமுண்டாகிறது. அதினால் ஆரம்பித்த வேலை நடக்கிறதில்லை. நடந்தாலும், ஆசைப்பட்ட பலன் கிடைக்கிறதில்லை.

1. அவதாரத்திற்குக்காரணம் தயை. சர்மமுன்று. ஆகையால் ஞானத்தின் குறைவு முதலான கெடுதல்களில்லை.

ப்பாற்றுவதற்காக நான் மனிதனுகப் பிறந்திருக்கிறேனென்று அறிந்து, என்னிடத்தில் இருக்கும் அளவில்லாத பிரீதியினுலே என்னை ஒரு விநாடி நினையாவிட்டால், கண் முதலான இந்திரியங்களும், மனதும், ஆத்மாவும் தாங்கமுடியாமல், என்னை நினைப்பதையே பிரயோஜனமாக எண்ணித் தியானம் செய்கிருர்கள் (13)

ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தஶ்ச த்ருடவ்ரதா: ।
நமஸ்யந்தஶ்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே ॥௧௪॥

அத்யர்த்தமத்ப்ரியத்வேந மத்கீர்த்தநயதநநமஸ்காரைர்விநா க்ஷணமாத்ரேऽபி ஆத்மதாரணமலபமாநா: மத்குணவிஶேஷவாசீநி மந்நாமாநி ஸ்ம்ருத்வா புலகாஞ்சிதஸர்வாங்கா: ஹர்ஷகத்கதகண்டா: நாராயண-க்ருஷ்ண-வாஸுதேவேத்யேவமாதீநி ஸததம் கீர்த்தயந்த:, ததைவ யதந்த:-மதர்ச்சநாதிகேஷு ததுபகாரகேஷு பவநநந்தநவநகரணாதிகேஷு ச த்ருடஸங்கல்பா யதமாநா:, பக்திபாரநம்ரதநுமநோவாக்காயா அவநிதலவிந்யஸ்தாஷ்டாங்கா: மாம் நமஸ்யந்த: ஸததம் நித்யயுக்தா:-நித்யயோகம் காங்க்ஷமாணா: க்ருதாஞ்ஜலய: தாஸ்யவ்யவஸாயிந உபாஸதே ॥ ॥௧௪॥

[1] என்னிடத்தில்அளவில்லாத பிரீதியிருப்பதனுலே, என் பெயர்களைச் சொல்லுவது, என் வேலைகளைச செய்யப்பிரயத்தினப்படுவது, என்னைவணங்குவது—இவைகள் இல்லாவிட்டால் ஒருவிநாடியில் எத்தனையோ ஒரு பாகங்கூட ஆதமா தாங்காமல், என்னுடைய உயர்ந்தகுணங்களைச சொல்லுகிற பெயர்களை நினைத்து, உடம்பெல்லாம் மயிர்க்கூச்சலறைந்து, ஸந்தோஷத்தினுல் தொண்டைதழுத்தழுத்து, நாராயண! கிருஷ்ண! வாஸுதேவ! இவை முதலான

1, கீழ் சுலோகததில் தியானம் செய்கிருர்கள் என்று தியானத்தைச் சொன்னுர். அதுவே அளவில்லாத பிரீதியுடனே செய்யப்படுகிறதென்றும், அதுவே பகவானுடைய திருநாமங்களைச் சொல்லவும், அவனுடைய வேலைகளைச் செய்யவும், அவனை வணங்கவும் தூண்டுகிறது என்று இந்த சுலோகம சொல்லுகிறது.

என் பெயர்களை [1] எப்பொழுதும் சொல்லுகிறார்கள். அப்படியே
என்னைப் பூஜிப்பது, அதற்கு உதவியான—கோவில் கட்டுவது, பு
ஷ்பத் தோட்டம் போடுவது—முதலான வேலைகளில் மிகவும்
உறுதியோடு பிரயத்நம் பண்ணுகிறார்கள். மிகுந்த பக்தியாலே
மனதோடும், கட்டாயம் ஸேவிக்கவேணுமென்கிற எண்ணத்தோ
டும், தாங்கள் பகவானைச் சேர்ந்தவர்கள் என்கிற நினைவோடும், இ
ரண்டு கால்களையும், இரண்டு கைகளையும் நீட்டி, தலையையும் பூமி
யில் வைத்து, இப்படி எட்டு அங்கங்களோடு புழுதி, சேறு, கல்,
பூமியிலிருப்பதைக் கவனிக்காமல், ஒருகனமுள்ள கம்பைப் பூமியி
ல் போட்டால் போல், முழுஉடம்பையும் தரையில் போட்டு நமஸ்
காரம் செய்கிறார்கள். இப்படி என்னுடன் எப்போதுமிருக்க வே
ணுமென்று ஆசைப்பட்டு, ஆத்மா இருக்கிற வரையில் எனக்கு
வேலை செய்ய வேண்டுமென்று உறுதியோடு என்னை எப்போதும்
தியானம் செய்கிறார்கள். (14)

ஜ்ஞாநயஜ்ஞேந சாப்யந்யே யஜந்தோ மாமுபாஸதே ।
ஏகத்வேந ப்ருதக்த்வேந பஹுதா விஶ்வதோமுகம் ॥ ௧௫ ॥

அந்யேऽபி மஹாத்மாந: பூர்வோக்தை: கீர்த்தநாதிபி:,
ஜ்ஞாநாக்யேந யஜ்ஞேந ச யஜந்தோ மாமுபாஸதே । கதம்,
பஹுதா ப்ருதக்த்வேந - ஜகதாகாரேண விஶ்வதோமுகம்
விஶ்வப்ரகாரமவஸ்திதம், மாமேகத்வேநோபாஸதே । ஏதது
க்தம் பவதி பகவாந் வாஸுதேவ ஏவ நாமரூபவிபாகாந
ர்ஹாதிஸூக்ஷ்மசிதசித்வஸ்துஶரீரஸ்ஸந் ஸத்யஸங்கல்போ விவி
தவிபக்தநாமரூபஸ்தூலசிதசித்வஸ்துஶரீரஸ்யாமிதி ஸங்க
ல்ப்ய, ஸ ஏக ஏவ தேவதிர்யங்மநுஷ்யஸ்தாவரரூபவிசித்ர
ஜகச்சரீரஸ்திஷ்டதீத்யநுஸந்தாநேந மாமுபாஸத
இதி ॥ ॥ ௧௫ ॥

---

1. எப்பொழுதும்—தனியாய் இருக்கும்போதும், ஜனங்கள் கிட்
டிருக்கும் பொழுதும். இதனால் பகவானுடைய திருநாமங்களைச்
சொல்லுவதற்கு வெட்கப்படவில்லை என்றும், ஒருவனுக்காகச் சொல்ல
வில்லையென்றும் காட்டப்படுகிறது.

1 வேறு சில பெரியோர்கள் கீழ் சுலோகத்தில் சொன்னபடி யும், 2 நினைவு ரூபமான யக்ஞத்தினாலும் என்னை ஸந்தோஷப் படுத்திக் கொண்டு, தியானம் செய்கிறார்கள். எப்படி யென்றால், எல்லா உலக உருவமாகப் பல விதமாயிருக்கிற என்னை ஒரேவித மாகத் தியானம் பண்ணுகிறார்கள். அதாவது—பிரளய காலத்தில் பகவானான வாஸுதேவன் தான், 3 தனித்து இருப்பதாகச் சொல் லமுடியாத பிரகிருதி-ஜீவன்கள் ஆகிய இரண்டு உருவமுள்ளவனா யிருந்தான். அப்போது அவைகளுக்கு வெவ்வேறான உருவம் களும் பெயர்களும் இல்லை. அவைகள் மிகவும் ஸூக்ஷ்மமாய் (சின்னதாய்) இருந்தன. பிறகு, பலவிதமான உருவங்களுங் பெயர்களுமுடைய உலக உருவமாக ஆகவேணுமென்று நினைத்து, நினைத்தபடி நடத்துகிறவனாகையாலே, அவன் ஒருவனே தேவன்-பக்ஷி-மனிதன்-மரம்-என்று சொல்லப்படுகிற ஆச்சரியமான உல கவடிவாக இருக்கிறான்—என்று நினைத்து, அவர்கள் தியானம் செய்கிறார்கள். (15)

[illegible]

அஹம் க்ரதுரஹம் யஜ்ஞ: ஸ்வதாஹமஹமௌஷதம் ।
மந்த்ரோஹமஹமேவாஜ்யமஹமக்நிரஹம் ஹுதம் ॥ ௧௬ ॥

---

1. இந்த சுலோகத்தில் சொல்லுகிறவர்கள் பகவானைப் பூர்ண மாகத் தியானம் பண்ணுகிறவர்கள். அதாவது—எல்லா உலக உருவ மாக இருக்கிறானென்று தியானம்செய்கிறார்கள்.

2. 13-வது சுலோகத்தில் பகவானை நினைப்பதையே பிரயோஜ னம் என்றும், 14-வது சுலோகத்தில், பகவானுடைய திருநாமங்களைச் சொல்லுவது முதலான பக்திக்குக்கிட்டினவைகளோடு தியானத்தைச் செய்யவேண்டுமென்றும்சொல்லி, இந்தசுலோகத்தில்தியானம் பண்ண ப்பட்ட பகவானைத்தியானம்பண்ணவேண்டியவிதம்சொல்லப்படுகிறது.

3. பிரகிருதியும், ஜீவன்களும் அழிவில்லாதவைகள். பிரளயகா லத்தில் அவைகள் பகவானிடம் சேர்ந்திருக்கின்றன. ஆனால், சேர்ந் திருக்கின்றன என்று சாஸ்திரத்தைக் கொண்டு அறியவேணுமேயொ ழிய, பாலில் சேர்ந்த ஜலத்தைப் போலத் தனித்துக் காணமுடியாது.

अहं क्रतुः अहं ज्योतिष्टोमादिकः क्रतुः। अहं महायज्ञः पञ्चमहायज्ञः। अहमेव पितृगणपोषिणी स्वधा। औषधं हविरहमेव। अहमेव च मन्त्रः। अहमेवाज्यम्। प्रदर्शनार्थमिदं सोमादिकं च हविरहमेवेत्यर्थः। अहमाहवनीयादिकोऽग्निः। होमोऽप्यहमेव॥ ॥१६॥

அவ.—நானே எல்லா உலக வடிவாகவும் இருக்கிறேன் என்று சொல்லுகிறார்—

ஜ்யோதிஷ்டோமம் முதலான யாகங்களும் நான்தான் ஐந்து மஹாயக்ஞங்களும் நான்தான். பித்ருதேவதைகளை வளர்க்கிற ஸ்வதை என்பதும் நான்தான். பயிர் முதலானவைகளிலிருந்து உண்டாகிற மாவு-சோறு முதலான ஹவிஸ்ஸும் நான்தான். ஹவிஸ்ஸைக் கொடுக்கும் காலத்தில் சொல்லுகிற மந்திரம் என்கிற சொற்களும் நான்தான். நெய்யும் நான்தான. ஸோமம் முதலான ஹவிஸ்ஸும் நான்தான். இந்த ஹவிஸ்ஸை வாங்கிக் கொள்ளுகிற ஆஹவநீயம் என்கிற நெருப்பும் நான்தான். நெருப்பில் ஹவிஸ்ஸைப் போடுவதென்கிற ஹோமமும் நான்தான். [ 16 ]

पिताहमस्य जगतो माता धाता पितामहः।
वेद्यं पवित्रमोंकार ऋक्साम यजुरेव च॥ ॥१७॥

अस्य स्थावरजङ्गमात्मकस्य जगतः तत्र तत्र पितृत्वेन मातृत्वेन धातृत्वेन पितामहत्वेन च वर्तमानोऽहमेव। अत्र धातृशब्दो मातापितृव्यतिरिक्ते उत्पत्तिप्रयोजके चेतनविशेषे वर्तते। यत्किञ्चिद्वेदवेद्यं पवित्रं पावनं तदहमेव। वेदबीजभूतः प्रणवोऽहमेव। ऋक्सामयजुरात्मको वेदोऽप्यहमेव॥ ॥१७॥

அசைகிறது—அசையாதது என்று இருவகையான இந்த உலகத்தில் 1 தகப்பன், தாய், இவர்களைத் தவிர ஒருவன் உண்டாவத

1. தகப்பன், தாய் முதலானவர்களுக்குள்ளே அந்தர்யாமி (உள்ளேயிருந்துகொண்டு நியமிக்கிறவன்) ஆய் இருந்துகொண்டு நான்தான் [illegible]

ற்கு உதவியானவன், பாட்டன் எல்லாரும் நான்தான். ஜீவன்களுடைய தோஷத்தைப் போக்குவதாக வேதத்தாலே அறியப்படுகிறதும் நான்தான் வேதத்துக்கு ஆதாரமான பிரணவமும் நான்தான் ருக்-ஸாம-யஜுஸ்-என்கிற வேதத்தின் பிரிவுகளும் நான்தான்

गतिर्भर्ता प्रभुः साक्षी निवासः शरणं सुहृत् ।
प्रभवः प्रलयः स्थानं निधानं बीजमव्ययम् ॥ ॥௧௮॥

[illegible] ॥௧௮॥

அவரவர்களுக்கு ஒவ்வொரு காலத்தில் அடையவேண்டிய இடமும் நான்தான். எல்லா வஸ்துக்களைத் தாங்குகிறவனும், எல்லாவற்றையும் அடக்கி ஆளுகிறவனும், எல்லாஸங்கதிகளையும் நேராகப் பார்க்கிறவனும், வீடு முதலான இருப்பிடமும [illegible] வைகளை ஸம்பாதித்துக் கொடுப்பதற்காகவும், [illegible]வுகளைப் போக்குவதற்காகவும் ஜனங்களால் அடையப்படுகிற ஜீவனும் நான்தான். உலகத்துக்கு க்ஷேமத்தை நினைக்கிறவனும் நான்தான். உலகம் உண்டாகுமிடமும், அடங்குகிற இடமும் நான்தான். உண்டாகிற வஸ்துக்களும், அழியும் வஸ்துக்களும் நான்தான். எல்லா வஸ்துக்களையும் அழிவில்லாமலிருந்து உண்டு பண்ணுகிறதும் நான்தான். (18)

तपाम्यहमहं वर्षं निगृह्णाम्युत्सृजामि च ।
अमृतं चैव मृत्युश्च सदसच्चाहमर्जुन ॥ ॥௧௯॥

---

ளையும் செய்கிறான். அதாவது— தகப்பனயிருந்து உண்டுபண்ணுகிறான், சோறாகவும், தண்ணீராகவும் இருந்து அவர்களை வளர்க்கிறான்.

[illegible] ||கக||

அவ—கீழ் மூன்று சுலோகங்களாலே உலகத்தில் உயர்ந்ததாகச் சொல்லப்படுகிற யாகம் முதலான வஸ்துக்கள் பகவானுடைய அதீநம் என்று சொல்லப்பட்டது. இந்தசுலோகத்தில் அவைகளுடைய வேலைகளும் பகவானுடைய அதீந மென்று சொல்லப்படுகிறது—

நெருப்பு, ஸூரியன் முதலான வடிவாயிருந்து நானே எல்லா உலகங்களையும் தபிக்கும்படி செய்கிறேன். கோடை முதலான காலத்தில் அடியோடு மழையில்லாமல் செய்வதும் நான்தான். மழைகாலத்தில் மழைபெய்கிறதும் நான்தான். பிராணிகளுக்குப் பிழைப்பை யுண்டுபண்ணுவதும், சாவை யுண்டுபண்ணுவதும் இந்த இரண்டும் நான்தான். ஒவ்வொன்றாகச் சொல்லுவானேன். இப்போதிருக்கிற எல்லா வஸ்துக்களும் நான்தான். சென்றகாலத்தில் போனவைகளும், வருங்காலத்தில் வரப்போகிறவைகளும் நான்தான். அறிவுள்ளது அறிவில்லாதது என்று இருவகைப்பட்டவைகள் எல்லாம் எப்போதும் என் உடம்பாகையாலே, எல்லாம் எனக்குப் பிரகாரங்களாயிருக்கின்றன. இந்தமாதிரி நான்ஒருவனே பல வடிவாக இருப்பதால், எல்லாமாக இருப்பவன் நான் ஒருவன் என்று நினைத்துத் தியானம் செய்கிறார்கள். (19)

அவ—[illegible]

த்ரைவித்யா மாம் ஸோமபா: பூதபாபா யஜ்ஞைரிஷ்ட்வா
ஸ்வர்கதிம் ப்ரார்த்தயந்தே । தே புண்யமாஸாத்ய ஸுரேந்த்ர
லோகமச்நந்தி திவ்யாந் திவி தேவபோகாந் ॥ ॥௨௦॥

தே தம் புக்த்வா ஸ்வர்கலோகம் விசாலம் க்ஷீணே பு
ண்யே மர்த்யலோகம் விசந்தி । ஏவம் த்ரயீதர்மமநுப்ர
பந்நா கதாகதம் காமகாமா லபந்தே ॥ ॥௨௧॥

ருக்யஜுஸ்ஸாமரூபாஸ் திஸ்ரோ வித்யாஸ் த்ரிவித்யம்। கேவலம்
த்ரிவித்யநிஷ்டாஸ் த்ரைவித்யா:, ந து த்ரய்யந்தநிஷ்டா:। த்ரய்யந்த
நிஷ்டா ஹி மஹாத்மாந: பூர்வோக்தப்ரகாரேண நிகிலவேத
வேத்யம் மாமேவ ஜ்ஞாத்வாऽதிமாத்ரப்ரியகீர்த்தநாதிபிர்
ஜ்ஞாநயஜ்ஞேந ச மதேகப்ராப்யா மாமேவோபாஸதே ।
த்ரைவித்யாஸ்து வேதோதிதாந் கேவலமிந்த்ராதியாகவிஷ
யாந் விபவஞ்ச ஸோமபா: ஸ்வர்காதிப்ராப்திவிரோதி
பாபாத் பூதாஸ் ஸந்த: கேவலம் இந்த்ராதிதேவதாரூபேண
ஸம்ஸ்திதம் மாமஜாநந்தோऽபி வஸ்துதோ மாமேவேஷ்ட்வா, ததா
வஸ்திதம் மாமஜாநந்த: ஸ்வர்கதிம் ப்ராரத்யந்தே । தே புண்யம்
துக்காஸம்பிந்நம் ஸுரேந்த்ரலோகம் ப்ராப்ய, தத்ர
திவ்யாந் தேவபோகாநச்நந்தி। தே தம் விசாலம் ஸ்வர்கலோகம்
புக்த்வா ததநுபவஹேதுபூதே புண்யே க்ஷீணே புந
ரபி மர்த்யலோகம் விசந்தி । ஏவம் த்ரய்யந்தவிஜ்ஞாந
விரஹிணா: காம்யஸ்வர்காதிகாமா: கேவலம் த்ரயீதர்மமநுப்ர
பந்நா: கதாகதம் லபந்தே । அல்பாஸ்திரஸ்வர்காதீநநுபூ
ய புந:புநர்நிவர்த்தந்த இத்யர்த்த: ॥ ॥௨௦-௨௧॥

*அவ—பகவானை அநுபவிப்பது ஒன்றினாலே மாத்திரம் ஸு
கத்தை அடைகிற—மிகவும் பெரியவர்களான—ஞானிகளுடைய நட
வடிக்கையை இப்படிச் சொல்லி, அவர்கள் மிகவும் உயர்ந்தவர்கள்
என்பதைத் தெரிவிப்பதற்காக, இளப்பமான பலன்களை ஆசைப்படு
கிற மூடர்களுடைய நடவடிக்கையைச் சொல்லுகிறார்—*

உலகத்தில் அநேகம்பேர்கள் வேதத்தில் முன்பாகத்தில் சொல்லப்படுகிற இந்திரன் முதலான தேவதைகளை மாத்திரம் குறித்துச் செய்கிற ஸோமயாகங்களில், அவர்களுக்கு ஸோம ரஸத்தைக் கொடுத்து, அதின் மீதியைத்தாங்கள் சாப்பிட்டு, அதினால் ஸ்வர்க்கம் முதலானவைகளை அடைவதற்கு இடைஞ்சலான பாபங்களைப் போக்கி, ஸ்வர்க்கம் முதலான பலன்களைக் கொடுக்க வேண்டுமென்று கேட்கிறார்கள் உண்மையில் அந்த தேவதைகளுக்கு ஆத்மாவாக இருக்கிற நான்தான் அந்த யாகங்களால் ஸந்தோஷமடைந்தேன் ஆனால் நான் ஆத்மா என்றும், நான்தான் ஸந்தோஷமடைந்தேன் என்றும், யாகம் செய்கிறவர்கள் அறிந்துகொள்ளவில்லை அவர்கள் ஒருவித துக்கம் கலப்பில்லாத ஸுகமுள்ள தேவலோகத்தை அடைந்து, தேவதைகள் அநுபவிக்கிற உயர்ந்த ஸுகங்களை முன்செய்த புண்ணியங்களுக்குப் பலனாகஅநுபவிக்கிறார்கள் இப்படி ஸ்வர்க்கலோகத்திலகிடைக்கும் பெரிதான ஸுகங்களை அநுபவித்து, அந்தஅநுபவத்துக்குக் காரணமான புண்ணியம்செலவழிந்த பிறகு மறுபடியும் இந்த மனிதலோகத்திற்கே வருகிறார்கள் வேதத்தின் கடைசியான உபநிஷத்துக்களில் சொன்ன ஸங்கதிகளை அறியாமல், இப்படிமிகவும் இளப்பமான ஸ்வர்க்கம் முதலான பலன்களை ஆசைப்பட்டு, வேதத்தில் முன்பாகத்தில் சொன்ன தர்மங்களை மாத்திரம் செய்து, [1] அல்பமாயும் நிலையில்லாததுமான ஸ்வர்க்கம் முதலான ஸுகங்களை அநுபவித்து, திரும்பித் திரும்பி வருகிறார்கள் [20–21]

கூ௨— மஹாத்மநஸ்து நிரதிஶயப்ரியமச்சிந்தந க்ருதார்த்தமத்வ்யதிரிக்தாஸ்யாநம் ப்ராப்ய நஸ்வாநாவத இதி தேஷாம் விஶேஷம் ஆஹ—

---

1 தேவலோகத்தில் ஸுகத்தை அநுபவிக்கும்போது, அது அதைக்காட்டிலும் மேலான பிரும்மா முதலானவர்களுடைய ஸுகங்களை நினைக்கும்போது, கொஞ்சமாயிருப்பதாலே, துக்கமாகத் தோன்றும் அது நிலையில்லாதிருப்பதை நினைக்கும்போது, இன்னம் துக்கமாயிருக்கும் அது முடியும்போது மிகவும் துக்கமாயிருக்கும் பிறகு ஏற்றக்கால்போல போவது வருவது, திரும்பிவந்து கர்ப்பத்தில் இருப்பது, வியாதியினால் கஷ்டப்படுவது, நரகத்தில் கஷ்டத்தைஅநுபவிப்பது இவை முதலான கஷ்டங்களைச் சொல்லிமுடியாது.

𑌅𑌨𑌨𑍍𑌯𑌾𑌶𑍍𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌨𑍍𑌤𑍋 𑌮𑌾𑌂 𑌯𑍇 𑌜𑌨𑌾𑌃 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 |
𑌤𑍇𑌷𑌾𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌭𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌯𑍋𑌗𑌕𑍍𑌷𑍇𑌮𑌂 𑌵𑌹𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ||

𑌅𑌨𑌨𑍍𑌯𑌾𑌃-𑌅𑌨𑌨𑍍𑌯𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌾𑌃- 𑌮𑌚𑍍𑌚𑌿𑌨𑍍𑌤𑌨𑍇𑌨 𑌵𑌿𑌨𑌾 𑌆𑌤𑍍𑌮𑌧𑌾𑌰𑌣𑌾𑌸𑌂𑌭𑌾𑌵𑌨𑌾𑌨𑍍𑌮𑌚𑍍𑌚𑌿𑌨𑍍𑌤𑌨𑍈𑌕𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌾 𑌮𑌾𑌂 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌨𑍍𑌤𑍋 𑌯𑍇 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑍋 𑌜𑌨𑌾𑌃 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 - 𑌸𑌰𑍍𑌵𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌮𑌾𑌂 𑌪𑌰𑌿𑌤 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇-𑌅𑌨𑍂𑌨𑌮𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 | 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌭𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂-𑌮𑌯𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌭𑌿𑌯𑍋𑌗𑌂 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌮𑌾𑌣𑌾𑌨𑌾𑌮𑍍, 𑌅𑌹𑌂 𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌯𑍋𑌗𑌮𑍍, 𑌅𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍂𑌪𑌂 𑌕𑍍𑌷𑍇𑌮𑌂 𑌚 𑌵𑌹𑌾𑌮𑌿 || ||௨௨||

அவ—கீழ்ச் சொன்ன பெரியோர்களேவென்றால், அளவில்லாத ஸுகமான என்னுடைய தியானத்தைச் செய்து, அளவில்லாத ஆநந்தமான என்னை அடைந்து, மறுபடியும் இந்த ஸம்ஸாரத்திற்குத் திரும்பி வருகிறதில்லை என்று அவர்களுடைய 1 பெருமையைக் காண்பிக்கிறார்—

பெரியோர்கள் ஒரு விநாடிகூட என்னை நினைக்காத போனால் தாங்காமல், என்னை நினைப்பதையே எல்லாவற்றைக் காட்டிலும் உயர்ந்தப் பிரயோஜநமாக எண்ணி, எல்லா உயர்ந்த குணங்களோடும், எல்லா ஸொத்துக்களோடும்கூடின என்னை ஒன்றையும் விடாமல் தியானம் செய்கிறார்கள். எப்போதும் என்னுடனே இருக்கவேணுமென்று ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிற அவர்களை நான் என்னிடம் 2 அழைத்துக் கொண்டு, அளவில்லாத ஸுகத்தைக் கொடுத்து, அந்த ஸுகத்திற்கு ஒரு குறைவும் வாராதபடி பண்ணுகிறேன். [ 22 ]

---

1. அந்தப்பெருமைக்கு இரண்டு காரணம்—1 அவர்கள் செய்யும் உபாயமும் ஸுகமாயிருப்பது. 2 அவர்கள் அடையும் பலனும் அறிவில்லாததும், ஒருவிதக்குற்றமில்லாததும், அளவில்லாததுமான ஆநந்தமாயிருப்பது.

2. சுலோகத்தில் "யோகக்ஷேமம்" என்று சொல் இருக்கிறது. யோகம் என்றால் புதிதாய் ஒன்றைக் கொடுப்பது. க்ஷேமம் என்றால், அதைக் குறைவில்லாமல் காப்பாற்றுகிறது. மோக்ஷத்தை ஆசைப்பட்ட

[illegible] ॥ ௨௩ ॥

[illegible] ॥ ௨௩ ॥

அவ—எல்லா தேவதைகளும் பகவானுக்கு உடம்புகள் தானே. ஆகையால் 20-வது சுலோகத்தில் சொன்னபடி யாகம் செய்கிறவர்கள் பகவானைத்தானே ஸந்தோஷப் படுத்துகிறார்கள். இது பகவானுக்குத் தெரியுமே. அவர்களுக்கும் ஏன் பகவான் மோக்ஷத்தைக் கொடுத்து, அதைக் குறைவில்லாமல் காப்பாற்றக் கூடாது? என்றால், பதில் சொல்லுகிறார்—

இந்திரன் முதலான தேவதைகளிடத்தில் பக்தியுள்ளவர்களாய், வேதத்தில் முன் பாகத்தில் சொல்லிய கர்மங்களை மாத்தி

---

வர்களுக்கு வேறு ஸுகங்களைக் கொடுத்து,அவைகளைக்காப்பாற்றுவது நியாயமில்லை. ஆகையால் இங்கே யோகம் என்கிற சொல்லுக்கு பகவானை அடையும்படி செய்வதும், க்ஷேமம் என்கிற சொல்லுக்கு அதற்குக் குறைவு வாராமல் செய்வதும்--என்றுதான் பொருள் கொள்ளவேணும்.

ரிம் சிரத்தையோடு செய்து, அவர்களை மாத்திரம் எவர்கள் ஸந்தோஷப்படுத்துகிறார்களோ, அவர்களும் என்னைத்தான் ஸந்தோஷப்படுத்துகிறார்கள். ஏனென்றால், அந்த இந்திரன் முதலான தேவதைகள் என்னுடைய உடம்புகள். நான் அவர்களுக்கு ஆத்மா. அவர்களைச் சொல்லும் சொற்களுக்கும் நானே பொருள். ஆனால் அந்தக் கர்மங்கள் எனக்குப் பூஜை யென்றும், அவைகளால் நானே தான் ஸந்தோஷப்படுகிறேன் என்றும் அவர்கள் அறியவில்லை. உபநிஷத்து இந்திரன் முதலான தேவதைகளுக்கு கர்மங்கள் பூஜையாகும் விதத்தை எப்படிச் சொல்லுகின்றனவோ, அதைத் தெரிந்து அவர்கள் பூஜை செய்யவில்லை. உபநிஷத்துக்கள்-அந்தக் கர்மங்கள் பகவானுக்கு உடம்பான இந்திரன் முதலானவர்களுக்குப் பூஜையாயிருக்கின்றன; ஆகையால் அவர்களுக்கு ஆத்மாவான பகவானுடைய 1 பூஜையாகத்தான் ஆகிறது—என்று சொல்லுகிறது. [23]

अव— अतस्त्रैविद्या इन्द्रादिशरीरस्य परमपुरुषस्य आराधनभूतानि कर्माणि आराध्यश्च स एवेति न जानन्ति, ते च परिमितफलभागिनश्च्यवनस्वभावाश्च भवन्ति । तथाह—

अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च ।
न तु मामभिजानन्ति तत्त्वेनातश्च्यवन्ति ते ॥ ॥२४॥

प्रभुरेव च-तत्र तत्र फलप्रदाता चाहमेवेत्यर्थः ॥ ॥२४॥

அவ—ஆகையால் கீழ்ச்சொல்லியபடி வேதத்தினுடைய முன் பாகத்தில் சொல்லிய கர்மங்களைச் செய்கிறவர்கள் ஜ்யோதிஷ்டோமம் முதலான கர்மங்கள் இந்திரன் முதலான தேவதைகளுக்கு ஆத்மாவாயிருக்கிற பகவானுடைய பிரீதியை யுண்டுபண்ணுகிறவைகள்; இந்தக் கர்மங்களால் பகவான் தான் பிரீதியை அடைகிறான் என்று அறியவில்லை. அதனால் அந்தக் கர்மங்களால்

1. கலெக்டர் சேவகன் நம்முடைய வீட்டிற்கு வந்தால், அவனுக்கு மரியாதை கலெக்டரிடத்தில் கௌரவத்தினால் பண்ணுகிறோம். அவனுக்குப் பண்ணுகிற மரியாதை கலெக்டருடையதுதான். அதுபோல.

கொஞ்சமாயும் நிலையில்லாதவைகளாயுமிருக்கிற பலன்களை அடைகிறார்கள் அடிக்கடி ஸம்ஸாரத்திற்குத் திரும்பியும் வருகிறார்கள் என்று சொல்லுகிறார்—

இந்திரன் முதலானவர்களை மாத்திரம் உத்தேசித்துப் பண்ணப்பட்ட யாகங்களுக்கும் 1 நான்தான் பலன் கொடுக்கிறேன். அவைகளால் ஸந்தோஷமடைகிறவனும் நான்தான். [24]

[illegible]

[illegible]

[illegible]

---

1. இந்திரன் முதலானவர்களை மாத்திரம் ஸந்தோஷப் படுத்துகிறோமென்று நினைத்துச் செய்யப்பட்ட கர்மங்களுக்கும், என்னுடைய ஆராதனம் என்று நினைத்துச் செய்யப்பட்ட கர்மங்களுக்கும் நான்தான் பலன் கொடுக்கிறேன். அவைகளுக்குப் பலன் கொடுக்கிறவன் வேறு; இவைகளுக்குப் பலன் கொடுக்கிறவன் வேறு என்று எண்ணக்கூடாது.

[illegible] ॥ ௨௫ ॥

அவ—இதென்ன பெரிய ஆச்சரியம்! ஒரே வேலையை இரண்டு பேர்கள் செய்கிறார்கள். அவர்களுடைய நினைவின் தாரதம்மியத்தினால், ஒருவன் மிகவும் கொஞ்சமான நிலையில்லாத பலனை அடைந்து, மறுபடியும் பூமியில் பிறக்கிறான். மற்றொருவன் எல்லையில்லாமல் உயர்த்தியுள்ள—அழிவில்லாத—மஹாநந்தமான பரமபுருஷனாகிற பிரயோஜநத்தை அடைந்து, மறுபிறப்பில்லாமல் இருக்கிறானென்று சொல்லுகிறார்—

தர்சம், பூர்ணமாஸம் முதலான கர்மங்களாலே இந்திரன் முதலான தேவதைகளை ஸந்தோஷப் படுத்துகிறேன் என்று நினைத்து, எவர்கள் அந்தக் கர்மங்களைச் செய்கிறார்களோ, அவர்கள் இந்திரன் முதலான தேவதைகளிடம் போகிறார்கள். அதே மாதிரி பித்ருக்களையும், யக்ஷர்கள், ரக்ஷஸ்ஸுக்கள், பிசாசங்கள் முதலான பிராணிகளையும் உத்தேசித்து, அந்தந்தக் கர்மங்களைச் செய்கிறவர்கள் அவரவர்களிடம் போகிறார்கள். எவர்கள் அந்தக் கர்மங்களாலேயே இந்திரன் முதலான தேவதைகளுக்கும், பிதருக்களுக்கும், யக்ஷஸ்ஸு முதலான பூதங்களுக்கும் ஆத்மாவான பகவானான வாஸுதேவனை ஸந்தோஷப் படுத்துகிறோம் என்று நினைத்து, அந்தக்கர்மங்களைச் செய்கிறார்களோ, அவர்கள் என்னிடம் வருகிறார்கள். தேவர் முதலானவர்களை அடைந்தவர்கள் அவர்களுடனேகூட கொஞ்ச ஸுகத்தை அநுபவித்து, அவர்கள் சாகிறபோது அவர்களுடன்கூடச் சாகிறார்கள். என்னை ஸந்தோஷப்படுத்துகிறவர்கள் 1 பிறப்பும் சாவுமில்லாத—எல்லாம்

1. மற்றவர்கள் ஏன் திரும்பிவருகிறார்கள் என்றால், அவர்கள்அடையும் தேவதைகளுக்கு அழிவுண்டு. அவர்களுக்குத் தங்கள் இடத்தில் நிலையாயிருப்பதற்கு இடஞ்சல் இன்னதென்று தெரியாது. தெரிந்தாலன்றோ போக்கலாம். போக்க சக்தியும் கிடையாது. பகவானுக்கோ அழிவில்லை. அவன் எல்லாம் அறிந்தவன். அவனுக்கு ஒரு கஷ்ட

தெரிந்த— நினைத்தபடி நடத்துகிற-ஸமுத்திரத்தில் ரத்னங்கள் போல அளவில்லாமல் உயர்ந்த-கணக்கில்லாத-நல்ல குணங்கள் கூட்டம் கூட்டமாய் இருக்கிற-அளவில்லாத ஆநந்தமான-என்னை அநுபவித்துத் திருப்புகிறதில்லை. [ 25 ]

𑌅𑌵— 𑌮𑌦𑍍𑌯𑌾𑌜𑌿𑌨𑌾𑌮𑌯𑌮𑌪𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑍋𑌽𑌸𑍍𑌤𑍀𑌤𑍍𑌯𑌾𑌹—

𑌪𑌤𑍍𑌰𑌂 𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌫𑌲𑌂 𑌤𑍋𑌯𑌂 𑌯𑍋 𑌮𑍇 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌪𑍍𑌰𑌯𑌚𑍍𑌛𑌤𑌿 ।
𑌤𑌦𑌹𑌂 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌹𑍃𑌤𑌮𑌶𑍍𑌨𑌾𑌮𑌿 𑌪𑍍𑌰𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥ ॥௨௬॥

𑌸𑌰𑍍𑌵𑌸𑍁𑌲𑌭𑌂 𑌪𑌤𑍍𑌰𑌂 𑌵𑌾 𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌵𑌾 𑌫𑌲𑌂 𑌵𑌾 𑌤𑍋𑌯𑌂 𑌵𑌾 𑌯𑍋 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌮𑍇 𑌪𑍍𑌰𑌯𑌚𑍍𑌛𑌤𑌿-𑌅𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌿𑌯𑌤𑍍𑌵𑍇𑌨 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌦𑌾𑌨𑍇𑌨 𑌵𑌿𑌨𑌾𑌽𑌽𑌤𑍍𑌮𑌧𑌾𑌰𑌣𑌾𑌲𑌾𑌭𑌤𑌯𑌾 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌦𑌾𑌨𑍈𑌕𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑍋 𑌯𑍋 𑌮𑍇 𑌪𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌕𑌂 𑌦𑌦𑌾𑌤𑌿, 𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌸𑍍𑌤𑌦𑍍𑌦𑌾𑌨𑍈𑌕𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌤𑌯𑌾 𑌶𑍁𑌦𑍍𑌧𑌮𑌨𑌸𑌃 𑌤𑌤𑍍--𑌤𑌥𑌾𑌵𑌿𑌧𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌹𑍃𑌤𑌮𑍍, 𑌅𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑍋 𑌨𑌿𑌖𑌿𑌲𑌜𑌗𑌦𑍁𑌦𑌯𑌵𑌿𑌭𑌵𑌲𑌯𑌲𑍀𑌲𑌃 𑌅𑌵𑌾𑌪𑍍𑌤𑌸𑌮𑌸𑍍𑌤𑌕𑌾𑌮𑌃 𑌸𑌤𑍍𑌯𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑍋𑌽𑌨𑌵𑌧𑌿𑌕𑌾𑌤𑌿𑌶𑌯𑌾𑌸𑌙𑍍𑌖𑍍𑌯𑍇𑌯𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌗𑌣𑌃 𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌿𑌕𑌾𑌨𑌵𑌧𑌿𑌕𑌾𑌤𑌿𑌶𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑌸𑍍𑌵𑌾𑌨𑍁𑌭𑌵𑍇𑌽𑌪𑌿 𑌮𑌨𑍋𑌰𑌥𑌪𑌥𑌦𑍂𑌰𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑍇𑌵𑌾𑌶𑍍𑌨𑌾𑌮𑌿 । 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑌧𑌰𑍍𑌮𑍇 "𑌯𑌾𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌸𑌂𑌪𑍍𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌸𑍍𑌯𑍁𑌰𑍇𑌕𑌾𑌨𑍍𑌤𑌗𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌭𑌿𑌃। 𑌤𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 𑌶𑌿𑌰𑌸𑌾 𑌦𑍇𑌵𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌤𑌿 𑌵𑍈 𑌸𑍍𑌵𑌯𑌮𑍍" 𑌇𑌤𑌿 ॥

அவ—என்னைப் பூஜிப்பவர்களுக்கு இன்னொரு விசேஷமும் இருக்கிறதென்று சொல்லுகிறார்—

எல்லாருக்கும் ஸுலபமாக அகப்படக் கூடியதான இலையையோ, அல்லது பூவையோ, அல்லது பழத்தையோ, அல்லது ஜலத்

---

த்தையும் போக்க சக்தியுள்ளவன். ஆகையால் அவனிடம் போனவர்கள் திரும்பி வருவதில்லை. அவனிடத்தில் போனவர்கள் அடையும் ஸுகத்திற்கு அளவில்லை. பகவான் ஒருவனுக்கும் உட்படாதவனாகையாலே, திருப்பி விடுவனோவென்கிற ஸந்தேஹமும் வேண்டியதில்லை. "பக்தர்களைத் திருப்பி அனுப்புகிறதில்லை" என்கிற எண்ணத்தையும் தவறாமல் நிறைவேற்றுகிறவன்.

தையோ, 1 எவன் 2 பக்தியுடன் கொடுக்கிறானோ, 3 நல்ல மனதுடன் மிகுந்த பிரீதியோடு கொடுக்கப்பட்ட அதை எனக்கு நெடுநாளாய் ஆசைப்பட்டுக்கிடைக்காமலிருந்து கிடைத்ததுபோலும், ஒருக்காலும் கிடைக்காதது கிடைத்ததுபோலும் ஸந்தோஷப்பட்டு, சாப்பிடுகிறேன். அதாவது-அதைத் தகுந்தபடி அநுபவிக்கிறேன். பக்தியோடு கொடுப்பதாவது—என்னிடத்தில் அளவில்லாத பிரீதியாலே அதை எனக்குக் கொடுக்காவிட்டால் ஆத்மா தாங்காமல், அதினால் ஒரு காரியம் ஆகவேணுமென்று நினைக்காமல், கொடுப்பதையே பிரயோஜநமாக எண்ணிக் கொடுப்பது. 4 நான் எல்லா உலகங்களுக்கும் மஹாராஜாவாயும், எல்லா உல

---

1. "எவன்" என்று பொதுவாய்ச் சொன்னதாலே, குற்றம்பண்ணினவனோ, குற்றம் பண்ணாதவனோ, கெட்டிக்காரனோ, முட்டாளோ என்கிற பிரிவுகளைப் பகவான் பார்க்கிறதில்லையென்று காட்டப்படுகிறது.

2 இதனால் ஒரு பலனை அடைவதையும், ஒரு தோஷத்தைப் போக்குவதையும் நினைக்காமல் கொடுக்க வேண்டியதென்று காட்டப்பட்டது.

3 மனதுக்கு நன்மையாவது—அவைகளைக் கொடுப்பதையே பிரயோஜநமாக நினைக்கையாகிற தெளிவுள்ளதாயிருக்கை. சுலோகத்தில் "பிரயத" என்ற சொல் இருக்கிறது. அதற்கு சுத்தமான என்று பொருள். சுத்தியாவது—புண்ணியமான வேலைகளைச் செய்யும்போதும், அவைகளால் மோக்ஷம் தவிர வேறு பலனை அடைய வேணுமென்று எண்ணாமை.

4 மிகவும் இளப்பமான இலைமுதலான வஸ்துக்கள்பகவானுக்குத் தகுந்தவைகளன்று என்று காட்டுவதற்காக, சுலோகத்தில் "நான்"என்கிற சொல் அவன்பெருமையைச் சொல்லுகிறதென்று ஸ்ரீபாஷ்யகாரர் சொல்லுகிறார்.(1)இந்திரன் முதலான தேவதைகள் தங்களுடைய சக்தி வளருவதற்காக யாகங்களில் கொடுக்கிற ஹவிஸ்ஸுக்களைப்பெற்றுக் கொள்ளுகிறார்கள்; மனிதன் சோறு தின்பதுபோல பகவான் அப்படியன்று. அவன் எல்லா லோகங்களையும் எப்போதும் அடக்கி ஆளுகிற சக்தியுள்ளவன். அதை வளர்க்க வேண்டியதில்லை. இயற்கையாகவே இருக்கிறது. (2) யாரும் அவனால் உண்டுபண்ணப்பட்டவைகளைத்தான் அவனுக்குக் கொடுக்கிறார்கள். கொடுப்பதற்கு முன்பும் அவனதுதான்

கங்களையும் நினைத்த மாத்திரத்தாலே விளையாட்டாக உண்டு பண்ணி, காப்பாற்றி, அழிக்கிறவனும், நினைத்தமாத்திரத்தில் எல்லா பதார்த்தங்களையும் அடையக் கூடியவனும், நினைத்தபடி நடத்துகிறவனும், அளவில்லாமல் உயர்ந்த கணக்கில்லாத நல்ல குணங்களைக்கூட்டம் கூட்டமாயுடையவனும், அளவில்லாமல் உயர்ந்த-இயற்கையாயிருக்கிற-ஆநந்த ரூபமான-என்னை அநுபவித்துக் கொண்டிருப்பவனா யிருந்தபோதிலும், அவன் கொடுத்ததைப் பெற்றுக் கொண்டு அளவில்லாத ஸந்தோஷத்தை யடைகிறேன் மஹாபாரதத்தில் மோக்ஷதர்மத்தில் அப்படியே சொல்லியிருக்கிறது—பகவானைத் தவிர வேறு தேவதையையும், பகவானிடத்திலும் அவனைத் தவிர வேறு பிரயோஜநத்தையும் நினைக்காதவர்கள் அவனை உத்தேசித்து எந்த வேலைகளைச்செய்தாலும்,

---

அவைகள். (3) யார் எதைக் கொடுத்தாலும், அது அவனுக்கு வேண்டியதில்லை. அவன் எல்லாம் நிறைந்தவன். (4) உலகத்தில் ஒருவனால் அடையமுடியாத வஸ்துவை அவனுக்கு மற்றொருவன் கொடுத்தால், அதை ஸந்தோஷமாக வாங்கிக் கொள்ளுவான். நினைத்தமாத்திரத்தில் எல்லா காரியத்தையும் முடிக்கக்கூடிய பகவானால் அடைய முடியாதது ஒன்றுமில்லை. (5) ஒருவனுக்கு ஸந்தோஷக் குறைவு இருந்தால், ஒன்றைக்கொடுத்து அந்த ஸந்தோஷக் குறையைத்தீர்க்கலாம். பகவானோ, அவனுடைய ஸ்வரூபத்தையும், குணங்களையும் பார்த்து, அளவில்லாத ஆநந்தத்தை அநுபவிக்கிறான். அவனுக்கு ஒருவர் கொடுக்கிற பதார்த்தங்களால் என்ன அதிக ஸந்தோஷமுண்டாகப் போகிறது (6) பகவானுக்கு இவ்விதமான ஆநந்தம் நேற்று இருந்தது, இன்றைக்கு இல்லையென்றால், அதை மறுபடியும் வருவிப்பதற்காக ஏதாவதொன்றைச் செய்ய வேண்டும் அவனுக்கு இருக்கும் ஆநந்தமோ ஒரு நாளும் போகக் கூடியதல்ல. இயற்கையாகவே யிருக்கிறது. இப்படி எந்த விதத்தாலும் ஒரு பதார்த்தத்தாலும் பகவானுக்கு ஆகவேண்டியதொன்றுமில்லை. இப்படி யிருந்த போதிலும், கையாலாகாத பசித்தவன் எங்கே கஞ்சி வருகிறதென்று எதிர்பார்த்து, வந்ததை ஆவலுடன் எப்படி வாங்கிக் கொள்ளுவானோ, அப்படி பக்தன் கொடுத்த எதையும் ஆவலுடன் பகவான் பெற்றுக் கொள்ளுகிறான். அவனுக்குப் பதார்த்தம் பெரிதன்று. பக்திதான் வேண்டியது—என்று "நான்" என்கிற சொல்லாலே காட்டப்பட்டது.

அந்த வேலைகளை அவன் 5 தானாகவே தலையாலே வணங்கிப் பெற்றுக்கொள்ளுகிறான்—என்று. 6 [26]

---

5 பகவானுக்குக் கொடுக்கவுயர்ந்தவஸ்துக்கள் அகப்படாமல், ஒருவன் இலைமுதலானவைகளைச் சாப்பிடவேணுமென்று கொடுத்தால், அதைப் பகவான் அமிருதத்துக்கு மேற்பட்டதாக நினைத்துச்சாப்பிடுவன். இப்படி பகவான்செய்வதற்கு பக்தன் "சாப்பிடத்தகுந்தவஸ்துக்கள் கொடுப்பதற்குஇல்லையே, இலையைச்சாப்பிடச் சொல்லவேண்டியிருக்கிறதே" என்று அளவில்லாமல் வருத்தப் படவேண்டியது. துர்வாஸ மஹருஷி இருபத்தைந்து நாழிகைக்குப்பலபேர்களுடன் வந்து, தர்மபுத்திரனை ஆஹாரம் போடவேணுமென்று கேட்டபோது, திரௌபதி பகவானைப் பிரார்த்திக்க, அக்ஷயபாத்திரத்தில் ஒட்டியிருந்த சிறு கீரையினால் பகவான் ஸந்தோஷமடைந்தானும். அப்படியே கஜேந்த்ராழ்வான் கொடுத்த புஷ்பத்தினாலும், சபரியென்ற வேடச்சி கொடுத்த பழத்தாலும், குசேலர் கொடுத்த அவலினாலும் அளவில்லாத ஸந்தோஷத்தை அடைந்தான்.

6 11-வது சுலோகம் முதல் இந்த சுலோகம் வரையில் ஞானிகளின் பெருமையைக் காட்டுவதற்காக, மற்றவர்களின் இளப்பம் சொல்லப் பட்டது. அவர்கள் மூன்று ஸங்கதிகளால் இளப்பமானவர்கள். (1) பகவானை உள்ளபடி அறியாமல், அவனுடைய மனித உருவத்தைப்பார்த்து அலக்ஷியம் பண்ணுகிறார்கள். இது 7-வது அத்தியாயம் 24-வது சுலோகத்தில் சொல்லப்பட்டது. இங்கே அதிகமாய்ச் சொல்லுவது என்னவென்றால், அவர்கள் என்ன வேலைகளை ஆரம்பித்தாலும், முடிவிற்கு வரமாட்டாது. முடிவுக்கு வந்தாலும், பலன் கிடைக்காது—என்பது. இது 12-வது சுலோகத்தில் சொல்லப்பட்டது (2) அவர்கள் ஸ்வர்க்கம் முதலான தாழ்ந்தபலன்களை அடையவேணுமென்று ஆசைப்பட்டு, பகவானுடைய உடம்புகளான தேவதைகளை மாத்திரம் ஸந்தோஷப்படுத்துகிறார்கள் என்றும், அவர்கள் அடையும் பலன்கள் கொஞ்சம் என்றும் 7-வது அத்தியாயத்தில் 20-வது சுலோகம் முதல் நான்கு சுலோகங்களால் சொல்லப்பட்டது. இங்கே அதுவே 20—21-வது சுலோகங்களில் சொல்லப்பட்டது. இவர்கள் செய்யும் யாகங்களையே ஞானிகள் செய்து பகவானிடம்போய், ஸம்ஸாரத்திற்குத் திரும்பி வருகிறதில்லையென்றும், இப்படிபகவான் அவரவர்களின் நினைவுக்குத் தக்கபடி ஒரே மாதிரி கர்மங்களுக்கே வெவ்வேறு பலன்களைக் கொடுக்கிறான் என்றும் காட்டுவது அதிகமான ஸங்கதி. (23–24–25 சுலோகம்) (3) ஞானிகளைத் தவிர மற்றவர்கள்-வேதத்தில் எந்த எந்த பதார்த்தங்களைக்கொண்டு தேவதைகளை ஸந்தோஷப்படுத்த வேணுமென்று சொல்லியிருக்கிறதோ, அவைகளையே தேடிக்கொடுக்க வேண்டியது. அவைகள்

ஏவம்— யஸ்ய ஜ்ஞாநிநாம் ப்ரதாநாம் ஸாதநஸாமக்ர்யம் விஶேஷ:, தஸ்மாத் த்வம் ஜ்ஞாநீ பூத்வா உக்தலக்ஷணஸங்கீர்த்தநாராதநநிரதாத்மீய: க்ருதநியதநாவநமநபூர்வணாதிகம் ஸததம் கர்மணோ லௌகிகம் வைதிகம் ச நித்யநைமித்திகம் கர்ம ச ததர்ப்பணம் குர்வித்யாஹ—

யத்கரோஷி யதஶ்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத் ।
யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மதர்ப்பணம் ॥ ॥உஎ॥

யத் தேஹயாத்ராஶேஷபூதம் லௌகிகம் கர்ம கரோஷி, யச்ச தேஹதாரணாயாஶ்நாஸி, யச்ச வைதிகம் ஹோமதாநதப:ப்ரப்ருதி நித்யநைமித்திகம் கர்ம கரோஷி, தத் ஸர்வம் மதர்ப்பணம் குருஷ்வ— அர்ப்யத இத்யர்ப்பணம், ஸர்வஸ்ய லௌகிகஸ்ய வைதிகஸ்ய ச கர்மண: கர்த்ருத்வம் போக்த்ருத்வம் ஆராத்யத்வம் ச யதா மயி ஸமர்ப்பிதம் பவதி, ததா குரு। யஜ்ஞதாநாதிஷு ஆராத்யதயா ப்ரதீயமாநாநாம் தேவாதீநாம் கர்மகர்த்ருத்வபோக்த்ருத்வஸ்ய ச மதீயதயா மத்ஸங்கல்பாயத்தஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்திதயா ச ம

---

அகப்படாவிட்டால், எந்தப் பதார்த்தங்களை அவைகளுக்குப் பதிலாக (பிரதிநிதி) வைத்துக் கொள்ளலாம் என்று சொல்லி யிருக்கிறதோ, அவைகளையே ஸம்பாதிக்க வேணும். ஞானிகளுக்கு அப்படி ஒருவிதக் கட்டுப்பாடில்லை. அவர்கள் எதைக் கொடுத்தாலும், பகவான் பெற்றுக் கொள்ளுகிறான். சுலோகத்தில் சொன்ன இலை முதலானவைகளையெல்லாம் சேர்த்துக் கொடுக்க வேண்டியது என்று பொருளல்ல. ஏதாவதொன்றைக் கொடுத்தால் போதும். இப்படியே—பூர்ண கும்பத்தை (ஜலம் நிறைந்த குடத்தை)க்காட்டுவதையும், திருவடியில் தீர்த்தத்தைச் சேர்ப்பதையும், "ஸௌக்கியமாய்வந்தீரா" என்று கேட்பதையும் தவிர, பகவான் வேறொன்றையும் விரும்புகிறதில்லை என்று சொல்லி யிருக்கிறது. பகவான் அவ்வளவு ஸுலபனாயிருக்கிறான். ஞானிகளுக்கும் மற்றவர்களுக்கும் அடைய வேண்டிய பலன்களில் வித்தியாஸமிருப்பது போல, செய்ய வேண்டிய உபாயத்திலும்வித்தியாஸம் இருக்கிறதென்று இந்த சுலோகம் சொல்லுகிறது. ஞானிகளுக்கு வரும் பலன் எல்லா விதத்தாலும் உயர்ந்தது. மற்றவர்களுக்கு வரும் பலன் எல்லா விதத்தாலும் தாழ்ந்தது. ஞானிகள் செய்யும் உபாயம் மிகவும் லகுவானது. மற்றவர்கள் செய்யும் உபாயம் மிகவும் கஷ்டமானது.

[illegible] ||௨௭||

அவ—ஞானிகள் என்கிற பெரியோர்களுடைய பெருமையை என்னுல கூட மனதால் நினைக்கவும், வாயால் சொல்லவும் முடியாது. ஆகையால் நீயும் ஞானியாக ஆகி, கீழே சொன்னபடி பக்தி தாமதியாமல், நீயும் உன்னைச்சேர்ந்தவர்களும் என்னை வணங்கி, வாயால் என் பெயர்களைச்சொல்லி, உடம்பினுல் என்னை நமஸ்காரம் பண்ணுவது முதலான வேலைகளைச் செய்துகொண்டு, சாப்பிடுவது முதலானஉலகத்தைச்சேர்ந்த வேலையையோ, வேதத்தில் சொல்லிய ஸந்தியாவந்தநம் முதலான நித்தியம்-நைமித்திகம் என்று சொல்லப்படுகிற கர்மங்களையோ, எல்லாவற்றையும் நான் மேல்சொல்லப் போகிறபடி செய் என்று சொல்லுகிறுர்—

1 சாப்பாட்டுக்காக பணம் ஸம்பாதிப்பது முதலான வேலைகளையும், உடம்பு இருப்பதற்காகச் சாப்பிடுவது முதலான வேலைகளையும், வேதத்தில் சொல்லிய ஹோமம், தானம், தபஸ்ஸு முதலான நித்திய நைமித்திகங்களையும், அதாவது எல்லாவற்றையும், நீ என்னிடத்தில் கொடு. யாகம்-தானம் முதலான கர்மங்களினுலே ஸந்தோஷத்தை அடைகிற தேவதைகளும், கர்மங்களைச் செய்து ஸுகத்தை அநுபவிக்கிற நீயும் என்னுடைய ஸொத்து. எல்லாஉலகங்களுடைய ஸ்வரூபமும், இருப்பும், வேலைகளும்என் அதீனமாய் இருக்கின்றன. ஆகையால் எல்லா உலகங்களுக்கும் உயர்ந்தசேஷி (பாத்யஸ்தன்) ஆயும், எல்லா வேலைகளையும் நடத்திவைக்கிறவனுயும் இருக்கிறேன். வேலை செய்து தேவதைகளை

1. ஞானிகளுடைய பெருமை சொல்லப்பட்டது. மேலே பக்தி யோகத்தைச் சொல்லுவதற்காக அதற்கு உதவியான நினைவு விதிக்கப் படுகிறது. இது 3-வது அத்தியாயத்தில் 30-வது சுலோகத்தில் முன்பே சொல்லப்பட்டது. அந்த இடத்தில் கர்மயோகத்திற்கு உதவியாகச் சொல்லிற்று. இங்கே பக்தியோகத்துக்குஉதவியாகச்சொல்லப்படுகிறது.

ஸந்தோஷப்படுத்தி. ஸுகத்தை அநுபவிக்கிற உன்னையும், ஸந்தோ ஷப்படுத்தப்பட்ட எல்லா தேவதைகளையும், ஸந்தோஷத்தையு ண்டுபண்ணுகிற எல்லாவேலைகளையும் என்னிடத்தில் கொடு. அதாவது- எல்லாம் என் அதீநம் என்றும், என்னுடைய உபயோ கத்திற்காகவே இருக்கிறதென்றும் மிகுந்த பிரீதியுடன் நினை [27]

ஶுபாஶுபபலைரேவம் மோக்ஷ்யஸே கர்மபந்தனை: ।
ஸந்ந்யாஸயோகயுக்தாத்மா விமுக்தோ மாமுபைஷ்யஸி ॥

ஏவம் ஸந்ந்யாஸாக்யயோகயுக்தமநா: த்வம் ஸர்வம் ஷ்டாத்ருதியார்த்தைகரஸம் கர்ம ச ஸர்வம் மதாராதனரூபம் ஸந்யோஜ்ய லௌகிகம் வைதிகம் ச கர்ம குர்வந். ஶுபாஶுபபலைரநந்தை: ப்ராசீநகர்மபந்தைர் ப்ராப்திவிரோதிபிஸ்ஸர்வைர்மோக்ஷ்யஸே । தைர்விமுக்தோ மாமேவோபைஷ்யஸி ॥ ॥உஅ॥

கீழ்ச்சொன்னபடி எப்பொழுதும் உன்னை என் அதீநமாக வும், என்னுடைய உபயோகத்துக்காகவே இருக்கிறவனாகவும், நீ செய்கிற எல்லாவேலைகளும் என் பிரீதிக்காகத்தான் என்றும் 1 நினைத்து, உலகத்து வேலைகளையும், சாஸ்திரத்தில் சொல்லிய வேலை களையும் நீ செய்தால், துக்கத்தையும், மட்டமான ஸுகத்தையும் கொடுக்கக்கூடியவைகளாயும், நெடுநாளாய் வந்தவைகளாயும், கணக்கில்லாதவைகளாயும், என்னிடத்தில் வரவொட்டாமல் பண் ணுகிறவைகளுமான புண்ணியம்-பாபம் என்று சொல்லப்படுகிற

---

1. சுலோகத்தில் "ஸந்யாஸயோக" என்கிற சொல் இருக்கி றது. இதில் "ஸந்யாஸ" என்கிற சொல் ஞானயோகத்தையும், "யோக" என்கிற சொல் கர்மயோகத்தையும் சொல்லவில்லை "யோக" என்கிற சொல்லுக்கு இந்த இடத்தில் நினைவு என்று பொருள் எந்த நினைவு என்றால் கீழ் சுலோகத்தில் சொல்லப்பட்ட ஸமர்ப்பணமாகிற நினைவு-அதாவது-செய்யப்படும் வேலையையும், வேலை செய்வதையும் அ தின் பலனையும் பகவானிடத்தில் கொடுப்பது இதுதான் "ஸந்யாஸ" என்கிற சொல்லால் சொல்லப்படுகிறது.

எல்லா கர்மங்களும் உன்னைத் தன்னடையே விட்டுப்போய்விடும். அவைகள் போய்விட்டால், 1 என்னையே அடைவாய். [28]

அவ— இமமபரம் அஸாதாரணம் ஸ்வபாவம் ஶ்ருணு—
ஸமோऽஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோऽஸ்தி ந ப்ரிய:। யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம்॥

தேவதிர்யங்மநுஷ்யஸ்தாவராத்மநாவஸ்திதேஷு ஜாத்யாகாரஸ்வபாவஜ்ஞாநாதிபி: அத்யுத்க்ருஷ்டாபக்ருஷ்டரூபேண வர்த்தமாநேஷு ஸர்வேஷு பூதேஷு ஸமாஶ்ரயணீயத்வே ஸமோऽஹம்। அயம் ஜாத்யாகாரஸ்வபாவஜ்ஞாநாதிபி: நிக்ருஷ்ட இதி ஸமாஶ்ரயணே ந மே த்வேஷ்யோऽஸ்தி- உத்வேஜநீயதயா ந த்யாஜ்யோऽஸ்தி। ததா ஸமாஶ்ரிதத்வாதிரேகேண ஜாத்யாதிபிரத்யர்த்தோத்க்ருஷ்ட இதி ததாவித: ஸமாஶ்ரயணே ந கஶ்சித் ப்ரியோऽஸ்தி- ந ஸங்க்ராஹ்யோऽஸ்தி। அபி த்வத்யர்த்தமத்ப்ரியத்வேந மத்பஜநேந விநா ஆத்மதாரணாலாபாத் மத்பஜநைகப்ரயோஜநா யே மாம் பஜந்தே, தே ஜாத்யாதிபிருத்க்ருஷ்டா அபக்ருஷ்டா வா மத்ஸமாநகுணவத் யதாஸுகம் மய்யேவ வர்த்தந்தே। அஹமபி தேஷு மதுத்க்ருஷ்டேஷ்விவ வர்த்தே॥

அவ—உலகத்தில் என்னைத் தவிர வேறு ஒருவரிடத்திலும் இல்லாமல், எனக்கு மாத்திரமுள்ள-மிகவுமுயர்ந்த-2 ஒரு ஸ்வபாவத்தைச் சொல்லுகிறேன் கேள்—

உலகத்தில்—தேவர்கள்—மனிதர்கள்—மாடு முதலானவைகள்—மரம் முதலானவைகள்—இப்படி நாலுவகைப்பட்ட பிராணிகளுக்

---

1. பகவான்-வேலைகளைச் செய்விப்பதுபோலும், பலனைக்கொடுப்பதுபோலும் பலனாகவுமிருக்கிறான் என்று இத்தால் காட்டப்படுகிறது. இதற்கு வேறு விதமாயும் அர்த்தம் பண்ணலாம். அதாவது—வேறு பலனை நடுவில் அநுபவித்து, தாமதமில்லாமல் நேராகவே அவனிடம் போவது—என்று.

2. 26-வது ச்லோகத்தில்—இலை முதலான வஸ்துக்களை இது கிடைக்கக் கூடியது, இது கிடைக்கக்கூடாதது. இது உயர்ந்தது-இது

குள்ளே சிலர் 1 பிறப்பினாலும், உருவத்தினாலும், ஸ்வபாவத்தினாலும், அறிவினாலும் மிகவும் உயர்ந்தவர்களாயும், சிலர் இளப்பமானவர்களாயும் இருக்கிறார்கள். அவர்கள் 2 என்கிட்ட வரும் விஷயத்தில் அவர்களெல்லாரிடத்திலும் நான் ஒரேமாதிரியாயிருக்கிறேன். அதாவது—இவன் பிறப்பு முதலானவைகளாலே மிகவும் இளப்பம். என்னிடம் வரக்கூடாது, என்று நினைத்து என்னிடம் வந்தவனை அருவருப்புப் பட்டு நான் விடமாட்டேன் அப்படியே என்னிடம் வந்தான் என்கிறது தவிர, இவன் பிறப்பு முதலானவைகளாலே மிகவுமுயர்ந்தவன் என்று அவனுடைய உயர்த்தியைப்பார்த்து,அவனை நான் சேர்த்துக்கொள்ளுகிறதில்லை

தாழ்ந்தது-என்று தாரதம்மியங்களைப் பார்க்காமல் பெற்றுக் கொள்ளுகிறான் பகவான்—என்று சொல்லப்பட்டது. இதனால் பகவான் ஸுலபனென்று சொன்னதாயிற்று. அதாவது அவனை ஸ்வாதீனப்படுத்துவது வருத்தமன்று என்று. அடுத்த சுலோகத்தில் ஒருவித நினைவைச் சொல்லி, அதனால் பகவான் அதிகமாய் ஸந்தோஷப்படுகிறான் என்று சொல்லப்பட்டது. அதனால் பகவான் ஸுலபனாயிருக்கிறான் என்றுகீழ்ச் சொன்னது உறுதிப்படுத்தப் பட்டது. 29-வது சுலோகத்தில்பக்தியண்ணுகிறவர்களுடைய பிறப்பு முதலானவைகளாலே உண்டாகும் தாரதம்மியங்களைக் கவனிக்காமல், பக்தர்களுடன்கலந்திருக்கிறானென்று சொல்லப்படுகிறது. இதனால் ஸௌசீல்யம்என்ற குணம் சொல்லப்பட்டதாக ஆகிறது. ஸௌசீல்யம் என்பது-மிகவும் தாழ்ந்தவர்களுடன் இடைவிடாமல் அருவருப்பில்லாமல் கலந்திருப்பது.

1. பிறப்பினால் உயர்ந்தவன் தேவன். மட்டமானவன் மனிதன்; மனிதர்களுக்குள் பிராம்மணன் உயர்ந்தவன், சண்டாளன் தாழ்ந்தவன்; உருவத்தினால் உயர்ந்தவன் அழகுள்ளவன்; தாழ்ந்தவன் குரூபி; ஸ்வபாவத்தினால் உயர்ந்தவன் ஸத்வகுணம் மேலிட்டவன்; ரஜோகுணமும் தமோகுணமும் மேலிட்டவன் தாழ்ந்தவன்.

2. தேவர்களும் பக்தியோகம் பண்ணலாம் என்று வேதாந்தத்தில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. மாடு முதலானவைகளுக்குள், கஜேந்திராழ்வான் (யானை), ஸுக்ரீவன் (குரங்கு) முதலான மிகுந்த புண்ணியமுள்ளவர்கள் பகவானை அறிந்து அடைந்தார்கள் என்று பிரஸித்தம். சாபத்தால் மரமாகப் பிறந்தவைகளுக்கு அறிவு இருந்ததாகப் புராணங்கள் சொல்லுகின்றன. ஆகையால் பகவானை அடைவது எல்லா வகுப்பிலும் கூடும். அடைவது (ஸமாச்ரயணம்) என்பது மனதின் வேலை. அதாவது-நினைப்பது.

அந்த உயர்த்திக்காக அவனைக் கௌரவிக்கமாட்டேன். பின்னை என்னவென்றால், என்னிடத்தில் அளவில்லாத பிரீதியாலே என்னை நினைக்காமல் போனால் ஆத்மா தாங்காமல், என்னை நினைப்பதையே பிரயோஜநமாக நினைத்து, எவன் பிரீதியுடன் என்னை நினைக்கிறானோ, அவன் எல்லாவிதத்தாலும் உயர்ந்திருந்தாலும், தாழ்ப்பமாயிருந்தாலும், [1]எனக்கு ஸமானனானவன் போல் கூச்சமில்லாமல் என்னிடத்திலேயே இருக்கிறான். நானும் அவன் விஷயத்தில் என்னைக் காட்டிலும் உயர்ந்தவனிடத்தில் போலே (தகப்பனிடத்தில் நல்ல பிள்ளை இருப்பது போல) இருப்பேன் [ 29

ஸ்வ— தத்ராவி—

ஸவி வெத—ஊ—ரா உாரொ ஹஜதெ மாஉ ந் ஹாகூ [illegible]
ஸாயு—ரொவ ஸ உஜவு ஸஉவ்வ ஸபெ தா ஹு ஸஃ ॥ ॥ங ॥

தத்ர தத்ர ஜாதிவிஶேஷ [illegible]
வாஷெபஃ வரிஹரணீயஸ்ய, [illegible]
காரண உ உந்ந ஹாக்—ஹஜநெநக்ய யாஜ ஹஜதெ
வெஜ; ஸாபு—ரொவ ஸஃ- [illegible] ஸாவல [illegible] ஸ உஜ
வஃ-வஹா உஜவஃ, வடுவெதகெகஸ உஜ [illegible]
தவதக? ஸஉஷ்வஸிதொ ஹி ஸஃ-பதொஸஃ [illegible] ஸாய

---

1. இங்கே ஒரு கேள்வி—பகவானை எல்லா விதத்தாலும் உயர்ந்தவனாகவும், யஜமானனாகவும் நினைத்து தியானம் [illegible] பகவானிடத்தில தோழன்போல் எப்படி யிருக்கக்கூடும்—என்று. இதற்குப் பதில்—"நானும் இருப்பேன்" என்று. அசாதாரணமான [illegible] திரியால் அவனிடத்தில் அவர்கள் தோழர்கள் [illegible]. தனனுடைய உயர்த்தியை நினைதது அவர்கள் பயப்பட [illegible] அவன் இருக்கிறான். பகவான் இருக்கிற இருப்பிலே [illegible] முண்டாகிறதில்லை. பகவான கோகுலத்தில் [illegible]. இடைச்சிகளால் கட்டுப்பட்டு அடிபட்டான. [illegible] யோட்டினான். ஆகையால் அவர்கள் பயப்படவில்லை. [illegible] ட்டினால் நடுங்குகின்றன. கொண்டாடும்போது [illegible] வர்களிடத்தில் பயமில்லாதிருக்கின்றன. கொண்டாட்டத்திலே பயம் போய்விடும்.

ஸ்வாஶ்ரிதா:, ஸர்வ து நிகிலஜகதேககாரணபூத: ப [illegible]

---

எல்லாவிதத்தாலும் உயர்ந்த பகவான் ராமன்கிருஷ்ணன்முதலான அவதாரங்களில் இந்தமாதிரி இருந்தான். அவன் அப்படியிருந்தது-நாம் பகவானுடைய இந்த குணத்தைக் கண்டு ஆச்சரியப்பட்டு, அவனிடத்தில் அளவில்லாத பக்தி பண்ணுவதற்காகவும், நாமும் தாழ்ந்தவர்களிடத்தில் இப்படி இருப்பதற்காகவும் தான். பகவான் அப்படியிருந்ததை சொல்லுகிறோமேயொழிய கவனிக்கவில்லை. கவனித்தால் ஆழ்வார்கள் போல் தபிக்க மாட்டோமா? நாம் இருக்க வேண்டியதையும் கவனிக்கவில்லை. எல்லா விதத்திலும் உயர்ந்த பகவான் இப்படி இருக்கும்போது, ஒருவித உயர்த்தியுமில்லாமலிருக்கிற நாம் கர்வப்படுவதற்கு என்ன நியாயம். நம்மை இளப்பமென்று நாம் தெரிந்து கொள்ளாதவரையில், நமக்கு இந்த லோகத்திலும் பரலோகத்திலும் ஸுகமில்லை. நம்மால் பிறருக்கும் ஸுகத்தை யுண்டுபண்ண முடியாது. வித்வான் என்ற சொல்லுக்கு தன்இளப்பத்தை அறிந்தவன் என்றுதான்பொருள். இந்த நினைவைப் பகவானும் ஆசாரியர்களும் தான் உண்டுபண்ண வேண்டும்.

என்னுடைய பக்தர்களை என்னைக் காட்டிலும் உயர்ந்தவர்களாக நினைக்கிறேன் என்று பகவான் சொல்லுகிறபடியால், அவர்களுக்குள்ளே ஜாதி முதலியவைகளாலே தாரதம்மியம் வைப்பதுபகவானுக்கு இஷ்டமாகுமா? என்றால், பதில்—இவ்விடம் பக்தியின் பெருமையையும், பக்தியினால் பகவானுக்கு எல்லாரிடத்திலும் ஒரே மாதிரி ஸந்தோஷமுண்டாகிற தென்பதையும் மாத்திரம் சொல்ல வந்ததே யொழிய, அவரவர்களுக்கு ஜாதி முதலியவைகளும், அததற்குத் தகுந்த நடவடிக்கைகளும் போய், எல்லாரும் ஒரேமாதிரியாக ஆகிறார்கள் என்று சொல்ல வந்ததன்று.

அவ—1 இன்னுமொரு ஸங்கதி.

ஒவ்வொரு ஜாதிக்காரர்கள் 2. இன்னின்னதைச் செய்யவேண்டும், இன்னின்னதைச் செய்யக்கூடாது என்று ஏற்பட்டிருக்கிறது. அந்தப்படி நடக்காமலிருக்கிற ஒருவன் 3. கீழ்ச்சொன்னபடி என்னிடத்தில் அளவில்லாத பிரீதியுடனே என்னைத் தியானம் பண்ணுவதொன்றையே பிரயோஜனமாக எண்ணித் தியானம் செய்தால், அவன் எனக்கு வேண்டியவர்களுக்குள் மிகவுமுயர்ந்தவன். அவனை யாரும் மரியாதை செய்யவேண்டும். அவன் முன்னால் சொல்லப்பட்ட ஞானிகளுக்கு ஸமானமானவன். தப்பாக நடக்கிறவனிடத்தில் உமக்கு எப்படி உயர்ந்த பிரீதி உண்டாயிற்று? நாங்கள் அவனைக் கொண்டாடுவது எப்படி? என்றால், பதில் சொல்லுகிறார். அவனுடைய எண்ணம் மிகவும் நல்லதாயிருக்கிறதன்றோ? அதாவது—பகவான் எல்லா உலகத்தையும் ஒருவனாகவே உண்டுபண்ணுகிறான். அளவில்லாமல் உயர்ந்தவன். அவன் நாராயணன்தான் என்று வேதம் சொல்லுகிறது. எல்லா லோகங்களும் அவன் ஸொத்து. அவன் எனக்கு 4 யஜமானன்.

---

1. பகவானிடம் யாரும் போகலாம். அவன் யாரையும் சேர்த்துக் கொள்ளுவன். அவன் பக்தியைத்தான் பார்ப்பன். பிறப்பு முதலான தாரதம்மியங்களைக் கவனிக்கிறதில்லை என்று சொல்லப்பட்டது. நடத்தைப் பிசகையும் அவன் கவனிக்கிறதில்லையென்று இந்த சுலோகம் சொல்லுகிறது.

2. பிராமணனுக்கு மாம்ஸத்தைச் சாப்பிடுவதும், கள்ளைக் குடிப்பதும் கூடாது. சூத்திரனுக்கு அவைகள் குற்றமன்று. சூத்திரனுக்கு காராம்பசுவின் பாலைச் சாப்பிடுவது கூடாது. பிராம்மணனுக்கு அது நல்லது.

3. கீழ்ச் சொன்னபடி—16-வது சுலோகத்தில் சொன்னபடி.

4. மிகுந்த பாபியான என்னைத் தள்ளாமல், தன் ஸொத்துக்களில் சேர்த்துக் கொண்டு, தன் ஸொத்தான என்னைத் தன்னிடம் கொண்டு போவதற்கு, அவன்தானே வேலை செய்ய ஆரம்பித்திருக்கிறான் என்று கருத்து.

அவன் எனக்கு 1 ஆசாரியன். அவன் எனக்கு ஸுஹ்ருத். அதுவரை நான் கணக்கில்லாத குற்றங்களைப் பண்ணினாலும், கொஞ்சங்கூட மனதில் நினைக்காமல், எல்லாஸுகங்களையும் எனக்குக் கொடுக்கவேணுமென்று நினைத்துக்கொண்டிருக்கிறான். 2 அவன்தான் எனக்கு உயர்ந்த இன்பம். அவனைத்தவிர வேறு எந்தபதார்த்தமும் இன்பமன்று. இப்படி எண்ணுகிறான் அவன். இந்த எண்ணம் ஒருநாளும் 3 அடையமுடியாதது. அதனால் என்னை நினைப்பதையே பிரயோஜனமாக எண்ணி இடைவிடாமல் நினைக்கிறான். ஆகையாலே அவன் நல்லவன்தான். கௌரவம்பண்ணவேண்டியவன்தான். இவ்விதமான எண்ணமும் அதனாலுண்டான இடைவிடாத தியானமும் உண்டானபிறகு, நடத்தைப் பிசகு என்பது மிகவும் சிறிய குற்றம். அதைக்கொண்டு அவனை 4 அலக்ஷியம் பண்ணக்கூடாது. அவன் மரியாதைபண்ணத்தகுந்தவன்தான்.[30]

---

1. மிகுந்த மூர்க்கனான எனக்கு நல்ல அறிவைக் கொடுத்து, பெரிய உபகாரத்தைச் செய்திருக்கிறானென்று கருத்து.

2. நான் முன்பு மிகவும் இளப்பமான-துக்கத்துடன் கலந்த-நிலையில்லாத-துளி ஸுகத்தில் பற்றுள்ளவனாயிருந்தேன். அப்படியிருந்த எனக்கு அளவில்லாமல் உயர்ந்த-ஒரு குற்றமுமில்லாத-நிலையான-ஸுக ஸமுத்திரமாகிய தன்னைக் காட்டித்தன்னை இன்பமாகப் பண்ணினான் என்று கருத்து. பகவான் ஆசாரியனென்றும், தன்னிடத்தில் நல்ல எண்ணமுள்ளவன் என்றும் சொன்னதாலே, அவன் என்னைத் தன்னிடம் அழைத்துக் கொண்டு போகிறவன் என்று சொல்லப்பட்டது. அவனை இன்பம் என்று சொன்னதாலே, அடையவேண்டிய பலனும் அவனே என்று காட்டப்பட்டது.

3 மிகவும் உயர்ந்த அநுஷ்டானம் பண்ணுகிறவர்களும் இவ்விதமான எண்ணமில்லாமலிருக்கிறார்கள். மிகவும் கெட்ட நடவடிக்கை உள்ளவர்களுக்கும் இந்த எண்ணமிருக்கிறது. எண்ணம் பெரிதேயல்லாமல் நடத்தை பெரிதல்ல. சீமைக்கமலம் விளைகிற இடமாயிருந்தாலும், அங்கு இருக்கும் கருங்கல் சல்லியை எடுப்போமா? குப்பையிலிருக்கும் ரத்னத்தை விடுவோமா? எண்ணம் ரத்னம்போல். நடத்தையில்லாதவன் குப்பைபோல். அநுஷ்டானம் பண்ணுகிறவன் சீமைக்கமலமிருக்குமிடம்போல். நல்ல எண்ணமில்லாமை கருங்கல் சல்லிபோல்.

4. அலக்ஷியம் பண்ணுவது பெரிய குற்றமாகும். பகவானுடைய மனது புண்ணாய்விடும்.

[illegible]

[illegible] ‖ ௩௧ ‖

[illegible] ‖ ௩௧ ‖

அவ—உபநிஷத்தில் "எவன் கெட்டசெய்கைகளை நிறுத்த வில்லையோ, எவன் ஆசையினுடையவும், கோபத்தினுடையவும் வேகத்தைத் தடுக்கவில்லையோ, எவன் மனது பலவிஷயங்களில் அலைந்துகொண்டிருக்கிறதோ, இவைகளாலே எவனுடையமனது தியானம்பண்ணவேண்டிய விஷயத்தில் நிலையாய் நிற்கவில்லையோ, அவனாலே தியானம்பண்ணி பகவானை அடையமுடியாது" என்று சொல்லியிருக்கிறது ஆகையாலே 1 நடவடிக்கைக் குறைவானது பகவானுடைய தியானத்தை வளரவொட்டாமல் செய்யுமே? அவனுக்குக் குறைவு வந்துவிடுமே? என்றால். பதில் சொல்லுகிறார்—

1. கீழ் சுலோகம் பகவானிடத்தில் பக்தியுள்ளவன் கெட்ட காரியங்களைச் செய்தாலும், அவனை மற்றவர்கள் கௌரவம் பண்ணவேணுமென்று சொல்லிற்று. அவன் காரியத்திற்கு (தியானத்திற்கு) குறையில்லை என்று சொல்லுகிறது இந்த சுலோகம்.

என்னிடத்தில் மிகுந்த பிரீதியாலே என்னைத் தியானம் செய்ய ஆரம்பித்து, அந்தத்தியானத்தையே உயர்ந்த பிரயோஜநமாக அவன் எண்ணுகிறான். அவனுக்கு அந்தத்தியானத்தாலே எல்லா பாபங்களும் 1 போய், ரஜஸ்ஸு, தமஸ்ஸு என்கிற குணங்களும் அடியோடுபோய், வெகு சீக்கிரத்தில் 2 ஒருவித இடைஞ்சலில்லாமல், எல்லா அங்கங்களுடன் என்னைத்தியானம் பண்ணவேணுமென்கிற எண்ணம் வந்துவிடும். என்னை அடைவதற்கு இடைஞ்சலான நடவடிக்கையும் 3 போய்விடும். மறுபடியும் ஒருக்காலும் வராது. இந்த விஷயத்தில் 4 நீயே பிரதிக்ஞைபண்ணு—பகவானைத்தியா

---

1. தியானத்தாலே தியானத்திற்கு இடைஞ்சல்கள் போகும்என்று சொன்னது எப்படிக்கூடும்? என்றால், பதில்—எல்லா அங்கங்களுடன் கூடிய தியானத்தை அடையவேண்டியது. ஆரம்பிக்கிற காலத்தில் இருந்த கொஞ்சமான பக்தியானது பூர்ணமான பக்தியையுண்டாக்குகிறது. கொஞ்சபக்தி காரணம். பூர்ணபக்தி காரியம்.

2. சுலோகத்தில் "தர்ம ஆத்மா" என்ற இரண்டுசொற்கள் இருக்கின்றன. தர்மம் என்ற சொல்லிற்கு "ஒருவித இடைஞ்சலில்லாமல் எல்லா அங்கங்களுடன் தியானம்" என்றுதான் பொருள். இதையே இந்த அத்தியாயம் 3-வது சுலோகத்தில் "தர்ம" என்ற சொல்லாலே சொல்லியிருக்கிறது. இந்த அத்தியாயமும் இவ்விதமான தியானத்தைத்தான் சொல்லுகிறது. ஆத்மா என்ற சொல்லும் தியானத்திற்கு உதவியான மனதைச் சொல்லுகிறது. 13-வது சுலோகத்தில் "(அநந்யமநஸ:) வேறொன்றிலும் மனதை வைக்காதவர்கள்" என்றும், கடைசி சுலோகத்தில் (மந்மநாபவ) "என்னிடத்திலேயே மனதைவை" என்றும் முன்பும் பின்பும்சொல்லியிருக்கிறது.

3. உம்மை தியானம்பண்ண ஆரம்பிப்பதின் பெருமையாலே அதற்கு இடைஞ்சலான பாபம் போகட்டும். கெட்ட நடவடிக்கைகள், தொடர்ந்து வந்துகொண்டிருக்கையாலும், "ஐயோ! இவைகளைச் செய்கிறேனே" என்கிற வருத்தமில்லாமையாலும், அவைகளைத் தெரிந்தே செய்கையாலும், அவைகள் என் இடைஞ்சல்களாக ஆகமாட்டாது என்றால், பதில் சொல்லுகிறார்—அவைகளும் போய்விடும் என்று. பக்தி பாபத்தையும், அதனாலுண்டாகிற கெட்ட காரியங்களையும் போக்கும்.

4. பகவான் நான் பிரதிக்ஞை பண்ணுகிறேன் என்று சொல்லாமல், "நீ பிரதிக்ஞைபண்ணு, என்று சொன்னதின் கருத்து —தான்

னம் பண்ண ஆரம்பித்தவன் அதற்கு இடைஞ்சலான கெட்டகாரியங்களைச் செய்தாலும், அவனுக்கு ஒரு குறைவும் வராது; அவனுக்கிருக்கும் பக்தியானது எல்லா இடைஞ்சல்களையும் ... மறுபடியும் வரவொட்டாமலும் செய்து,1 பக்தியைப்பூர்ணமாக்கிவிடும்—என்று. அது அந்த பக்தியின் பெருமை. [31]

> மாம் ஹி பார்த்த வ்யபாஶ்ரித்ய யே'பி ஸ்யு: பாபயோநய: । ஸ்த்ரியோ வைஶ்யாஸ்ததா ஶூத்ராஸ்தே'பி யாந்தி பராம் கதிம் ॥௩௨॥ கிம் புநர்ப்ராஹ்மணா: புண்யா பக்தா ராஜர்ஷயஸ்ததா । அநித்யமஸுகம் லோகமிமம் ப்ராப்ய பஜஸ்வ மாம் ॥ ॥௩௩॥

---

பண்ணுவதைக் காட்டிலும் இதைக்கேட்கிற அர்ஜுநன் பிரதிக்ஞை செய்தால், ஜனங்களுக்கு மிகுந்த நம்பிக்கை வரும்—என்று. பகவான் சொல்லாமலே "உம்மைச் சேர்ந்தவர்களுக்கு ஒருகுறைவும் வராது" என்று அர்ஜுநன் தானாகவே தன்னுடைய அநுபவத்தைக் கொண்டு சொல்லியிருக்க வேண்டும். அவனுக்கு அப்படிச் சொல்லத் தெரியாமல் வாய்திறக்காமலிருந்தான். பகவான் அவனுக்குச் சொல்லிக்கொடுக்கிறான்.

1. மிகவும் பகவத்பக்தர்கள் கெட்ட காரியங்களைச்செய்து—அந்த பக்தியின் பெருமையால் மறுபடியும் ஸௌக்கியத்தை அடைந்தார்கள். உதாரணம் (1) உபரிசரவஸு என்ற ராஜா ஆகாசத்தில் விமாநத்துடன் போகும்சக்தியுள்ளவனாயிருந்தான். தேவதைகளுக்கும் ருஷிகளுக்கும் உண்டாயிருந்த சண்டையில் தேவதை பக்ஷியில் சேர்ந்து பொய் சொன்னானென்று ருஷிகளால் சபிக்கப்பட்டு கீழே விழுந்து விட்டான். முன் பண்ணின தியானத்தின் பெருமையால் முன்போலானான் என்று பாரதத்தில் சொல்லியிருக்கிறது. (2) பிரஹ்லாதன் பகவானிடத்தில் உயர்ந்த பக்தியுள்ளவர்களுக்கு உதாரணமாகச் சொல்லப்படுகிறவன். அவன்ஒருக்கால் பகவானிடம் சண்டைக்குப்போனான். மறுபடியும் சீக்கிரம்நல்லஅறிவு வந்தது. (3) க்ஷத்ரபந்து என்பவன் மிகுந்த பாபங்களைச் செய்துகொண்டிருந்தான். பகவானுடைய திருநாமத்தை ஒரு பெரியவர் உபதேசித்தார். அதைச் சொல்லிக்கொண்டேயிருந்ததனால், மறுபிறப்பில் முன்பிறப்பையும் அப்போது பண்ணின பாபத்தையும் நினைத்து, வருத்தப்பட்டு, பகவானிடத்தில் பிரபத்திபண்ணி அவனிடம்போய்ச் சேர்ந்தான்.

மாம் ஹி பார்த² வ்யபாஶ்ரித்ய யே(அ)பி ஸ்யு: பாபயோநய: | ஸ்த்ரியோ வைஶ்யாஸ்ததா² ஶூத்³ராஸ்தே(அ)பி யாந்தி பராம் க³திம் || கிம் புநர்ப்³ராஹ்மணா: புண்யா ப⁴க்தா ராஜர்ஷயஸ்ததா² | அநித்யமஸுக²ம் லோகமிமம் ப்ராப்ய ப⁴ஜஸ்வ மாம் || ௩௨–௩௩ ||

அவ—கீழிரண்டு சுலோகங்களால் நடுவில் வந்த பாபமும் பகவானை அடைவதற்கு இடைஞ்சலன்று என்று சொல்லப்பட்டது. இப்போது பிறப்பாலேயே மிகுந்த பாபிகளானவர்களும், பகவானை நினைப்பதனால் அவனை அடையலாம் என்று முன் சொன்னதை விரிவாய்ச் சொல்லி, பிறப்பு முதலியவைகளால் உயர்த்தியையும், நிறைந்த பக்தியையும் உடையவர்களுக்குப் பகவானை அடைவதற்குக் கேட்பானேன் என்றும் சொல்லி, பிறப்பு முதலானவைகளால் உயர்ந்த நீ பலனை அடைவதில் ஸந்தேஹமில்லாமல், பக்தி யோகத்தைச் செய் என்று சொல்லுகிறார்—

ஸ்திரீகளும், 1 வைசியர்களும், சூத்திரர்களும், இளப்பமான பிறப்பை யுடையவர்கள். ஆனபோதிலும் என்னை அடைந்து உயர்ந்த பதவியை அடைகிறார்கள். நல்ல பிறப்புகளையுடைய பிராம்மணர்களும், நல்ல தபஸ்ஸு பண்ணுகிற ராஜாக்களும் என்னை தியானம் செய்து நல்ல கதியை அடைகிறார்கள் என்பதற்குக் கேட்பானேன். நீ நல்ல தபஸ்ஸு உள்ள ராஜாவாக இருக்கிறாய். ஆகையால் 2 நிலையில்லாமலும், மூன்று விதமான தொந்தரவுகளுடன் கூடியும் இருப்பதால், ஸுகமில்லாததாயும் தாழ்ந்ததாயும் மிகவும் இளப்பமாயிருக்கிற இந்த லோகத்தை அடைந்திருக்கிற நீ என்னைத் தியானம் பண்ணு [32–33]

---

1. பிராமணன் முதலான மூன்று ஜாதியில் சேர்ந்த வைசியர்கள் பகவானை தியானம்பண்ணுவதற்குத் தகுந்தவர்களாயிருந்தாலும், ஸத்ரம் என்கிற யாகங்களைச் செய்வதற்குத் தகாதவர்களானதால் சூத்திரர்களுடன் அவர்களைச் சேர்த்துச் சொல்லியிருக்கிறது.

2. இங்கே மூன்று தோஷங்கள் காட்டப்படுகின்றன—நிலையில்லாமை, துக்கத்தோடு கூடியிருக்கை, கொஞ்ச ஸுகமுள்ளதாயிருக்கை. இவைகளை நினைத்தால், பகவானைத் தியானம் பண்ணுவதில் ஆசையுண்டாகும் என்று கருத்து.

ஶ்லோ — பக்திஸ்வரூபோபதேஶ: —

மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு |
மாமேவைஷ்யஸி யுக்த்வைவமாத்மாநம் மத்பராயண: ॥ ௩௪ ॥

இதி ஶ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம் யோகஶாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே ராஜவித்யா ராஜகுஹ்யயோகோ நாம நவமோऽத்யாய: ॥

மந்மநா பவ — மயி ஸர்வேஶ்வரே நிகிலஹேயப்ரத்யநீககல்யாணைகதாநே ஸர்வஜ்ஞே ஸத்யஸங்கல்பே நிகிலஜகதேககாரணே பரஸ்மிந் ப்ரஹ்மணி புருஷோத்தமே புண்டரீகதளாமலாயதாக்ஷே ஸ்வச்சநீலஜீமூதஸங்காஶே யுகபதுதிததிநகரஸஹஸ்ரஸத்ருஶதேஜஸி லாவண்யாம்ருதமஹோததௌ உதாரபீவரசதுர்பாஹௌ அத்யுஜ்ஜ்வலபீதாம்பரே அமலகிரீடமகரகுண்டலஹாரகேயூரகடகபூஷிதே அபாரகாருண்யஸௌஶீல்யஸௌந்தர்யமாதுர்யகாம்பீர்யௌதார்யவாத்ஸல்யஜலதௌ அநாலோசிதவிஶேஷாஶேஷலோகஶரண்யே ஸர்வஸ்வாமிநி தைலதாராவதவிச்சேதேந நிவிஷ்டமநா பவ | ததேவ விஶிநஷ்டி — மத்பக்த: — அத்யர்த்தமத்ப்ரியத்வேந யுக்தோ மந்மநா பவேத்யர்த்த:| புநரபி விஶிநஷ்டி — மத்யாஜீ — அநவதிகாதிஶயப்ரியமதநுபவகாரிதமத்யஜநபரோ பவ | யஜநம் நாம பரிபூர்ணஶேஷவ்ருத்தி: | ஔபசாரிகஸாம்ஸ்பர்ஶிகாப்யவஹாரிகாதி ஸகலபோகப்ரதாநரூபோ ஹி யாக: | யதா மதநுபவஜநிதநிரவதிகாதிஶயப்ரீதிகாரிதமத்யஜநபரோ பவஸி, ததா மந்மநா பவேத்யுக்தம் பவதி | புநரபி ததேவ விஶிநஷ்டி — மாம் நமஸ்குரு — அநவதிகாதிஶயப்ரியமதநுபவகாரிதாத்யர்த்தப்ரியாஶேஷஶேஷவ்ருத்தாவபர்யவஸ்யந் மயி ஸர்வாத்மநாபி அதிமாத்ரப்ரஹ்வீபாவவ்யவஸாயம் குரு | மத்பராயண: — அஹமேவ பரமயநம் யஸ்யாஸௌ மத்பராயண:| மயா விநாத்மதாரணாஸம்

[illegible]

அவ—தியானம் (பக்தி) என்பது இன்னதென்று சொல்லு கிறார்—

என்னை இடைவிடாமல் நினை. அதாவது—எண்ணெயைக் காண்டியினால் தூக்கிவிட்டால் ஒரே சம்பியாய் விழுவதுபோல், இன்னொரு வஸ்துவின் நினைவு கலக்காமல், என்னையே நினை நினைக்கும்போது என்னிடத்தில் அளவில்லாத பிரீதியோடு நினை. இந்த நினைவினால் அளவில்லாத பிரீதியுண்டாகி, அந்தப் பிரீதி உள்ளடங்காமல், என்னை ஸந்தோஷப்படுத்துவதற்காக 1 எப்படிப்பல வேலைகளைச் செய்வா

1. சுலோகத்தில் "மத்யாஜீ" என்கிற சொல் இருக்கிறது. அதற்கு என்னுடைய யாகத்தைச் செய் என்று பொருள். யாகம் என்பது தேவதையை ஸந்தோஷப் படுத்துவதற்காக பதார்த்தங்களைக் கொடுப்பது. இங்கே பகவானுக்கு சந்தனம் புஷ்பம் முதலானவைகளையும், ஆறு ரஸங்களோடுகூடிய அன்னத்தையும், விசிறி, சாமரம் முதலானவைகளையும் கொடுத்து ஸந்தோஷப்படுத்துவது.

யோ, அப்படி என்னை நினை. இப்படிச்செய்தும் திருப்தி அடையா மல்,உனக்குள் இருந்து உன்னையேவுகிற என்னுடைய அளவில்லா த உயர்த்தியையும், உன்னுடைய அளவில்லாத இளப்பத்தையும் மனதார நினை. என்னை விட்டு க்ஷணகாலம்கூட இருக்க உன்னால் தாங்கமுடியாதவனாக இரு. இப்படி மனது ஏற்பட்டால், என்னி டமே வந்து சேருவாய். இடைவிடாமல் என்னை நினைத்து, என்னிடத்தில் அளவில்லாத பிரீதியைப் பண்ணி, உயர்ந்தபதார்த் தங்களை எனக்குக் கொடுத்து ஸந்தோஷப்படுத்தி, என்னை வணங் கி, 1 என்னைவிட்டுத் தாங்கமுடியாமல் இருந்து என்னையே அடை வாய்.

2 ஆகையாலே 3 சாப்பாடு முதலான உலகத்து வேலை களையும், ஸந்தியாவந்தனம் முதலிய நித்திய நைமித்திக கர்ம ங்களையும், என்பிரீதிக்காக, என்னுடைய வேலைகளைச் செய்வத ற்கு கிடைத்ததே என்று ஸந்தோஷத்துடனும், நான்தான் அந்த வேலைகளைச் செய்கிறேன் என்றும் நினைத்து செய்து கொண்டு, எப்போதும் பிரீதியுடனே என்னை மனதால் நினைத்து, வாயால் என் பெயர்களைச் சொல்லி, உடம்பால் என் வேலைகளைச்செய்து கொண்டு, எல்லா உலகங்களும் என் 4 அதீநம் என்றும், என்னு

1. இப்படி இருப்பது பக்தியின் உயர்ந்தபடி. இதற்குமேல் பக வானை அடையவேண்டியதுதான்.

2. பக்தி இன்னதென்றும், அதற்கு உதவிகள் இன்னவையென் றும், உதவிகளுக்கு உதவி செய்கிறது இன்னதென்றும், அதின் பலன் இன்னதென்றும் இந்த அத்தியாயத்தில் சொல்லப்பட்ட முக்கியமான அர்த்தங்களை வருத்தமில்லாமல் தெரிந்துகொள்ளுகைக்காகச் சுருக்கமா ய்ச் சொல்லி, அத்தியாயத்தை முடிக்கிறார். ஆகையாலே—துக்கம் நிறைந்த ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தில் நீ விழுந்திருப்பதினாலும், நான் ஸௌலப்யம் முதலான குணங்களோடு கூடியவனாய்,உன்னை ஸம் ஸார ஸமுத்திரத்திலிருந்து தூக்குகிறவனாயிருப்பதாலும், நீ செய்ய வேண்டிய பக்தியாகிய உபாயம் மிகவும் ஸுலபமாய் ஏற்பட்டிருக்கிற தா கையாலும்.

3. இது 27-வது சுலோகத்தின் பொருள்.

4. இது 4-வது சுலோகத்தின் கருத்து.

டைய உபயோகத்திற்காகவே ஏற்பட்டன என்றும், நினைத்து என்னிடத்திலிருக்கும் அளவில்லாமல் உயர்ந்த குணங்களின் கூட்டங்களை மிகவும் 1 இன்பமாக நினைத்து,2 நாள்தோறும் கீழே சொன்னபடி என்னைத்தியானம் செய்து வந்தாயேயானல், அழி வில்லாத அளவில்லாத ஸுகமான என்னிடம் வந்து சேருவாய்.

உபநிஷத்துக்களில் தியானம் பண்ண வேண்டியவைகளாகவும், அதற்கு உதவி செய்கிறவைகளாகவும் சொல்லப்பட்ட பகவானுடைய ஸ்வரூபம், திருமேனி, குணங்கள், இவைமுதலானவைகளும் சுலோகத்திலிருக்கிற "நான்" என்கிற சொல்லாலே காட்டப்பட்டன என்று ஸ்ரீ பாஷியகாரர் திருவுள்ளம் பற்றி, அவைகளை அருளிச் செய்கிறார். அவைகளாவன—3 பகவான் லோகங்களுக்கு யஜமானர்களாயிருக்கிற எல்லாருக்கும் யஜமானன். 4 ஒருவித குற்றங்களும் கிட்டவர முடியாதவன். எல்லா நல்ல குணங்களுக்கும் ஒரே இருப்பிடம். 5 எல்லாம் தெரிந்தவன். நினைத்தபடி நடத்துகிறவன். எல்லா உலகங்களையும் ஒருவனாகவே உண்டுபண்ணுகிறவன். அவனைத்தான் பரம்பிரும்மமென்றும், புருஷோத்தமன் என்றும் உபநிஷத்துக்கள் சொல்லுகின்றன. அவனுடைய கண்கள் பெரிய ஆழமுள்ள தண்ணீர் நிறைந்த

---

1. இது 26—29-வது சுலோகங்களின் பொருள்.

2. நாள்தோறும்—கடைசி உடம்பைவிட்டுப் போகிறவரையில்.

3. சக்தியில்லாதவனுக்கு வேலை செய்வதனுல்ஒருபிரயோஜநமும் கிடைக்காது. இந்தப் பிரும்மாண்டத்திலிருக்கிற பிரும்மா முதலானவர்களுக்கு வேறு பிரும்மாண்டங்களில் அதிகாரம் கிடையாதே. அப்படிப்பட்ட பிரும்மா முதலானவர்கள் எல்லாருக்கும் எப்படி மோக்ஷம் கொடுக்கக் கூடும்.

4. குற்றமுள்ளவனும்குணமில்லாதவனுமான ஒருவனைநினைத்துப் பிரயோஜநமில்லை. ஒரு குற்றமில்லாதவனும், எல்லாகுணங்கள் உள்ளவனும், தொந்தரவுகளில்லாதவனும், அவைகளைப்போக்குமவனும், அளவில்லாத இன்பமா யிருப்பவனுமானவனைத்தான் தியானம் செய்ய வேண்டியது.

5. பகவானுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. அவனுக்கு ஒத்தாசை செய்ய ஒருவனும் வேண்டியதில்லை. இந்த இரண்டு குணங்களும் மோக்ஷத்தைக் கொடுக்க உபயோகமானவைகள்.

குளத்தில் அப்பொழுது மலர்ந்த தாமரைப்பூவின் இதழ்போல் நீண்டும் சுத்தமாயுமிருக்கின்றன. திருமேனி நீருண்ட மேகம்போல் 1 தள தளவென்று இருக்கிறது. ஒரே காலத்தில் 2 ஆயிரம் ஸூரியன்கள் கிளம்பினால் போல் அவனுடைய திருமேனியின் காந்தி இருக்கிறது. 3 அழகினால் நிறைந்த அம்ருத ஸமுத்திரம் போலிருக்கிறது அவன் திருமேனி. கேட்ட பலனைக் கொடுப்பதற்குத் துடித்துக் கொண்டிருக்கிற பருத்த நான்கு திருக்கைகளை உடையது. மிகுந்த காந்தியுடைய பீதாம்பரத்துடன் கூடினது. ஒருவித தோஷமில்லாத கிரீடம், மகரகுண்டலம், ஹாரம், தோள் வளை, வளை இவை முதலான பல நகைகளையுடையது. அளவில்லாமல் உயர்ந்த—தயை, தாழ்ந்தவர்களுடன் இடைவிடாமல் கலந்திருக்கும் தன்மை, அவயவங்களின் அழகு, மிகவும் இன்பமாயிருக்கை, ஆழமான மனதுள்ளவனாயிருக்கை, கேட்டதைக் கொடுக்கும் தன்மை, குற்றம் பார்க்காமல் பிரீதிபண்ணும் தன்மை-இவ்விதமான குணங்கள் அவனிடம் கணக்கில்லாமல் இருக்கின்றன. உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்று பாராமல் எல்லாரையும் காப்பாற்றுகிறவன். 4 அவன் எல்லாருக்கும் யஜமானன்—என்று. [34]

---

1. ரத்னம்-கண்ணாடி, ஜலம்-இவைகளில் கிட்டஇருக்கும் வஸ்துக்கள் பிரதிபலிப்பது (தோன்றுவதுபோல) பகவானுடைய திருமேனியில் கிட்டஇருக்கும் வஸ்துக்கள் பிரதிபலிக்கும்படியான ஒருவித தெளிவை "தள தள" என்று சொல்லியிருக்கிறது.

2. காந்தி நிறைந்திருக்கிறதென்றும, விரோதிகளால் பார்க்க முடியாதென்றும கருத்து.

3. இப்படி விரோதிகளுக்குப் பார்க்கக் கூடாதிருக்கும் திருமேனியே வேண்டியவர்களுக்கு மிகவும இன்பமாயிருக்குமென்றும், அவர்களின் கண்ணை இழுக்குமென்றும் கருத்து. அழகு (லாவண்யம்)என்பது கண்ணுக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கக்கூடிய ஒருபளபளப்பு.

4. தன்னை அடைந்தவர்களை காப்பாற்றுவதைத தன் லாபமாக எண்ணி பகவான் வேலை செய்கிறானென்று கருத்து.

ஸ்ரீமதே பகவதே பாஷ்யகாராய மஹாதேசிகாய நம:

ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று

## தஶமோऽத்யாய:

"உக்த: — ஸபரிகரோ பக்தியோக: । இதானீம் பக்த்யுத்பத்தயே தத்விவ்ருத்தயே ச பகவதோ நிரங்குஶைஶ்வர்யாதிகல்யாண குணானந்த்யம், க்ருத்ஸ்னஸ்ய ஜகதஸ்தச்சரீரதயா ததாத்மகத்வேன தத்ப்ரவர்த்யத்வம் ச ப்ரபஞ்ச்யதே —

ஶ்ரீபகவானுவாச —

> பூய ஏவ மஹாபாஹோ ஶ்ருணு மே பரமம் வச: ।
> யத்தேऽஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா ॥ ॥க॥

மம மாஹாத்ம்யம் ஶ்ருத்வா ப்ரீயமாணாய தே மத்பக்த்யுத்பத்திவிவ்ருத்திரூபஹிதகாமனயா பூய ஏவ மன்மாஹாத்ம்யப்ரபஞ்சவிஷயமேவ பரமம் வசோ யத் வக்ஷ்யாமி, ததவஹிதமனா: ஶ்ருணு ॥ ॥க॥

அவ—அங்கங்களோடு பக்தியோகம் சொல்லப்பட்டது. இப்போது பக்தி உண்டாவதற்கும், வளருவதற்கும், பகவான் தடங்கலில்லாமல் எல்லா உலகங்களையும் அடக்கி ஆளுவது முதலான—கணக்கில்லாத-நல்ல குணங்களுள்ளவன் என்றும், எல்லாலோகங்களும் அவனுக்கு உடம்புகளாகவும், அவன் அவைகளுக்கு ஆத்மாவாகவும் இருப்பதால், எல்லாம் அவனால் ஏவத்தகுந்தது என்றும் விரிவாய்ச் சொல்லுகிறார்.

பகவான் சொல்லுகிறார்—

என்னுடைய பெருமையைக் கேட்டு 1 ஸந்தோஷப்படுகிற உனக்கு என்னிடத்தில் பக்தி உண்டாகி, வளர்ந்து, நீ க்ஷேமத்தை

---

1. சுலோகத்தில் "மஹாபாஹோ" (வலிமையுள்ள கையையுடையவன்) என்ற சொல் இருக்கிறது. உலகத்தில் வலிமையுள்ளவர்கள் [illegible]லாருடைய பெருமையைக் கேட்டுப் பொறுக்க மாட்டார்கள். நீ [illegible] சிசுபாலன் முதலானவர்களால் நிறைந்த இந்த உலகத்தில் பாக்கியத்தினால் என் பெருமையைக் கேட்டு ஸந்தோஷப்படுகிறாய் என்று கருத்து.

அடையவேண்டுமென்று நினைத்து, இன்னமும் என்னுடைய பெருமையை விரிவாகச் சொல்லுகிறேன். அந்த உயர்ந்த வார்த்தையை ஜாக்கிரதையாய்க் கேள்.

न मे विदुः सुरगणाः प्रभवं न महर्षयः ।
अहमादिर्हि देवानां महर्षीणां च सर्वशः ॥ २ ॥

सुराणां गणा महर्षयश्च अतीन्द्रियार्थदर्शिनोऽधिकज्ञाना अपि मे प्रभवं प्रभावं न विदुः मम नामकर्मस्वरूपस्वभावादिकं न जानन्ति । यतो देवानां महर्षीणां च सर्वशोऽहमादिः । तेषां स्वरूपस्य ज्ञानशक्त्यादेश्चाहमादिः । तेषां देवत्वदेवर्षित्वादिहेतुभूतपुण्यानुगुणं मया दत्तं ज्ञानं परिमितम्, अतस्ते परिमितज्ञाना मत्स्वरूपादिकं यथावन्न जानन्ति ॥ ॥२॥

பிரும்மா முதலான தேவர்களும், பெரிய ருஷிகளும், ஒருவனும் அறியமுடியாத ஸங்கதிகள் எல்லாவற்றையும் அறியக் கூடிய ஞானமுள்ளவர்களாயிருந்தாலும், என்னுடைய பெயர்களையும், என் வேலைகளையும், நான் இன்னான் என்பதையும், என்ஸ்வபாவங்களையும் இன்னும்மற்ற என் பெருமைகளையும் அறியவில்லை. ஏனென்றால், அவர்களுடைய ஸ்வரூபம், அறிவு, சக்தி, முதலானவைகளை நான்தான் உண்டுபண்ணினேன். அதாவது—தேவர்களாகவும், தேவருஷிகளாகவும் ஆவதற்குக் காரணமான அவர்களுடைய புண்ணியத்துக்குத் தகுந்தபடி நான் அவர்களுக்குக் கொடுத்த அறிவு மிகவும் கொஞ்சமானது. ஆகையாலே அவர்களாலே என் ஸ்வரூபம் முதலானவைகளை உள்ளபடி அறியமுடியாது. [2]

अव— तदेतद्देवाद्यविज्ञेयत्वविषयज्ञानं भक्त्युत्पत्तिविरोधिपापविनाशोपायमाह—

यो मामजमनादिं च वेत्ति लोकमहेश्वरम् ।
असंमूढः स मर्त्येषु सर्वपापैः प्रमुच्यते ॥

நஜாயத இத்யஜ:, அநேந விகாரித்ரவ்யாதசேதநாத் தத்ஸம்ஸ்ருஷ்டாத் ஸம்ஸாரிசேதநாச்ச விஜாதீயத்வமுக்தம் । ஸம்ஸாரிசேதநஸ்ய ஹி கர்மக்ருதாசித்ஸம்ஸர்கரூபம் ஜந்ம | அநாதிமித்யநேந பதேந முக்தாத்மநோ விஜாதீயத்வமுக்தம் | முக்தாத்மநோ ஹ்யஜத்வமாதிமத், தஸ்ய ஹேயஸம்பந்தஸ்ய பூர்வவ்ருத்தத்வாத் ததர்ஹதாzஸ்தி । அதோzநாதித்வேந ததநர்ஹதயா தத்ப்ரத்யநீகதயா, "நிரவத்ய" மித்யாதிஶ்ருத்யா ச | ஏவம் ஹேயஸம்பந்தப்ரத்யநீகஸ்வரூபதயா ததநர்ஹம் மாம் லோகமஹேஶ்வரம்-லோகேஶ்வராணாமபீஶ்வரம் மநுஷ்யேஷ்வஸம்மூடோ யோ வேத்தி| இதரஸஜாதீயதயைக்யபுத்திமோஹஸம்மோஹ:, தத்ரஹிதோzஸம்மூட:, ஸ மத்பக்திவிரோதிபி: ஸர்வை: பாபை: ப்ரமுச்யதே । ஏததுக்தம் பவதி--லோகே மநுஷ்யாணாம் ராஜா இதரமநுஷ்யஸஜாதீய: கேநசித் கர்மணா ததாதிபத்யம் ப்ராப்த: । ததா தேவாநாமதிபதிரபி, ததாzண்டாதிபதிரபி ஸம்ஸாரிஸஜாதீய:, தஸ்யாபி பாவநாத்ரயாந்தர்கதத்வாத், "யோ ப்ரஹ்மாணம் விததாதி" இதி ஶ்ருதேஶ்ச । அந்யோzபி யே கேசந அணிமாத்யைஶ்வர்யம் ப்ராப்தா: । அயம் து லோகமஹேஶ்வர: கார்யகாரணாவஸ்தாதசேதநாத் பத்தாந் முக்தாச்ச சேதநாந்நிகிலஹேயப்ரத்யநீகாநவதிகாதிஶயாஸங்க்யேயகல்யாணகுணகணதயா நியமநைகஸ்வபாவதயா ச விஜாதீய இதரஸஜாதீயதாமோஹரஹிதோ யோ மாம் வேத்தி, ஸ ஸர்வை: பாபை: ப்ரமுச்யத இதி ॥ ॥௩॥

அவ—என்னுடைய பெருமையை பிரும்மா முதலான தேவர்களாலும் அறியமுடியாது என்று அறிந்தால், என்னிடத்தில் பக்தியுண்டாவதற்கு இடஞ்சலான எல்லாபாபங்களும் போய் விடுமென்று சொல்லுகிறார்—

அறிவில்லாத வஸ்துக்களைப்போல எனக்கு மாறுதலில்லை. கர்மத்தினால் அடிக்கடி பிறந்து சாகிறஜீவன்களைப்போல், எனக்கு

ப்பிறப்பு முதலியவை கிடையாது. எனக்கு இப்படிப்பிறப்பில்லாதிருப்பது ஸம்ஸாரத்தைவிட்டுக் கிளம்பின முக்தர்களுக்குப் போல்புதிதாய் உண்டானதன்று. லோகங்களுக்கு ஈசுவரனாயிருக்கிற பிரும்மா முதலானவர்களுக்கும் நான் யஜமானன். மனிதர்களுக்குள் எவன் என்னை மற்றவர்கள் வகுப்பில் சேர்ந்தவன் என்று எண்ணாமல், கீழ்ச்சொன்னபடி அறிகிறானோ, அவனுக்கு என்னிடத்தில் பக்திஉண்டாவதற்கு இடைஞ்சலான எல்லாபாபங்களும் போய்விடும். அதாவது—உலகத்தில் ராஜாவாக இருப்பவனும் ஒருமனிதன்தான். அவன் ஏதோ ஒரு புண்ணியத்தாலே மனிதர்களுக்கு 1 ராஜாவாக ஆகிறான். அப்படியே தேவர்களுக்கு ராஜாவான இந்திரனும், பிரும்மாண்டத்துக்கு ராஜாவான பிரும்மாவும் ஸம்ஸாரி ஜீவன்கள்தான். இப்படியே எட்டு ஐசுவரியங்களை அடைந்தவர்களும். பகவானோ உலகத்துக்கு ஈசுவரனாயிருக்கிறவர்கள் எல்லாருக்கும் யஜமானன். அவனிடத்தில் ஒருக்காலத்திலும் ஒருவித கெடுதல்கள் கிடையாது. அவன் அளவில்லாமல் உயர்ந்த—கணக்கில்லாத—நல்லகுணங்களுக்கு இருப்பிடம். அவன் இயற்கையாகவே எல்லாரையும் அடக்கி ஆளுகிறவன். ஆகையாலே பிரகிருதியைக்காட்டிலும், அதிலிருந்து உண்டான அறிவில்லாத வஸ்துக்களைக் காட்டிலும், கர்மத்தால் கட்டுப்பட்ட ஜீவன்களைக்காட்டிலும், கட்டிலிருந்து விடுபட்ட முக்தர்களைக்காட்டிலும், எல்லாரைக்காட்டிலும் வேறுஜாதி. ஆகையாலே பகவானை மற்றவர்கள் வகையராவென்று எண்ணாமல் அவனை உள்ளபடி எவன் அறிகிறானோ, அவனுக்கு எல்லாபாபங்களும் போய்விடும் (3)

[illegible]
[illegible]

---

1. உலகத்தில் மாம்பழ ஜாதியில் சில புளிப்பும், பெரியகொட்டையும், தோலும், காரலும் உள்ளவைகளாயிருக்கின்றன. ஒட்டு மாம்பழத்துக்கு இந்தக் குற்றங்களில்லை. அது மற்றவைகளைக் காட்டிலும் உயர்ந்ததாயிருந்தாலும், மாம்பழ ஜாதிதான். அதுபோல, மனிதர்களுக்குள் ராஜாவும், தேவர்களுக்குள்ளே இந்திரனும் பிரும்மாவும் ஜீவஜாதிதான். ஆனால் உயர்ந்தவர்கள். எப்படி மாம்பழத்தைக் காட்டிலும் வாழைப்பழம் வேறு ஜாதியோ, அப்படியே பகவான் பிரகிருதியைக் காட்டிலும், எல்லா ஜீவன்களைக் காட்டிலும் வேறு ஜாதி.

குணங்களை ஒருவருக்கொருவர் 1 தெரியப்படுத்துகிறார்கள். என்னுடைய உயர்ந்த இன்பமான சேஷ்டைகளை ஒருவருக்கொருவர் சொல்லுகிறார்கள். சொல்லுகிறவர்கள் அப்படிச் சொல்லுவதையே 2 பிரயோஜநமாக எண்ணி ஸந்தோஷப்படுகிறார்கள். அதைக் கேட்கிறவர்களும் அளவில்லாதப் பிரீதியோடு கேட்டு ஸந்தோஷப்படுகிறார்கள். [9]

தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம் ।
ததாமி புத்தியோகம் தம் யேந மாமுபயாந்தி தே ॥ ௧௦ ॥

தேஷாம் ஸததயுக்தாநாம் - மயி ஸததயோகம் காங்க்ஷமாணாநாம் மாம் பஜமாநாநாம் தமேவ புத்தியோகம் விபாகதசாபந்நம் ப்ரீதிபூர்வகம் ததாமி, யேந தே மாமுபயாந்தி ॥

அவ—இதுவரையில் பகவானுடைய குணங்களையும், ஆளுகையையும் அறிந்தால் பக்தி உண்டாகுமென்றும், வளரும் என்றும் சொல்லப்பட்டது. இப்படி வளர்ந்த பக்தியினால் அவனை அடைவதற்கு முன்னாலே மிகவும் தெளிவான அவனுடைய பார்வையுண்டாகும். அது பகவான் கிருபையுடன் நடுவில் செய்யும் வேலையென்றும் சொல்லுகிறார்—

அவர்கள் என்னோடு எப்பொழுதும் இருக்கவேணுமென்று ஆசைப்பட்டு, பிரீதியுடன் என்னைத்தியானம் பண்ணுகிறார்கள். மிகுந்தஸந்தோஷத்துடன் அவர்களுக்கு அந்தபக்தி முற்றும்படி

1. தெரியப்படுத்துவது என்பது-முன்னால் அறியப்படாத ஸங்கதியைச் சொல்லுவது. பகவானை நினைக்கும்போது அவனுடைய அனுக்கிரகத்தினால் அவனுடைய சிலஸங்கதிகள் புதிதாய் தோன்றுகின்றன. அவைகளைச் சொல்லுதல். சொல்லுவது என்பது பகவானுடைய நடந்த கதைகளைச் சொல்லுவது.

2. உலகத்தில் ஜனங்கள் ஒருவனை ஸந்தோஷப்படுத்தி, சிலபிரயோஜநங்களை அடைவதற்காக அவனிடத்தில் சில கதைகளைச் சொல்லுவார்கள். இங்கே அப்படியல்ல. பகவானுடைய கதைகளைச் சொல்லுவதே பிரயோஜநமாயிருக்கிறது.

தல்.(17); தன்னுடையதான நல்லவஸ்துக்களை பிறருக்குக் கொடுக்க வேணுமென்று எண்ணுகை(18); எல்லாரும் மிகவும் நல்ல குணமுள்ளவனென்று கொண்டாடும்படியான செய்கைக்குத் தகுந்த எண்ணம்(19); மிகவும் கெட்டவனென்று எல்லாரும் வெறுக்கும்படியான செய்கைக்குத் தகுந்த எண்ணம் (20) இவைகளை யெல்லாம் நான்தான் ஜனங்களுக்கு உண்டு பண்ணுகிறேன். அவைகளால் அவர்கள் சில வேலைகளைச் செய்கிறார்கள். சில வேலைகளை நிறுத்துகிறார்கள்.1

(4–5)

௬.— ஸர்வஸ்ய பூதஜாதஸ்ய ஸ்ருஷ்டிஸ்தித்யோ꞉ ப்ரவர்த்தயிதாரஶ்ச மத்ஸங்கல்பாயத்தப்ரவ்ருத்தய இத்யாஹ—

மஹர்ஷய꞉ ஸப்த பூர்வே சத்வாரோ மனவஸ்ததா |
மத்பாவா மானஸா ஜாதா யேஷாம் லோக இமா꞉ ப்ரஜா꞉ ||௬||

பூர்வே ஸப்தமஹர்ஷய꞉—அதீதமன்வந்தரே யே ஸாவர்ணஸ்ய ஸப்த மஹர்ஷயோ நித்யஸ்ருஷ்டிப்ரவர்த்தனாய ப்ரஹ்மணா மனஸா ஸம்ஸ்ருஷ்டா꞉; நித்யஸ்திதிப்ரவர்த்தனாய யே ச ஸாவர்ணிகா நாம சத்வாரோ மனவ꞉ ஸ்ருதா꞉; யேஷாம் ஸந்தானே லோகே ஜாதா இமாஸ்ஸர்வா꞉ ப்ரஜா꞉ ப்ரதிக்ஷணமாப்ரளயாத் வர்த்தமானாதிகா꞉ யாகாஶ்ச ஸம்பவந்தி; தே ஸப்தமஹர்ஷயோ மனவஶ்ச மத்பாவா꞉—மம யோ பாவ꞉ ஸ பாவ யேஷாம் தே மத்பாவா꞉—மனஸைவ ஸ்ருஷ்டா꞉ மத்ஸங்கல்பானுவர்த்தின இத்யர்த்த꞉ ||௬||

---

1. இந்த சுலோகங்களில் சொன்ன இருபது ஸங்கதிகளையும் பகவான் ஜனங்களுடைய க்ஷேமத்திற்காகவே கொடுக்கிறான். முதல் ஏழும் நல்ல ஸங்கதிகள். 14-வது முதல் 19-வது வரையிலும் நல்ல ஸங்கதிகள். ஆகையால் நடுவிலிருக்கிற ஆறும், இருபதாவதும் நல்ல ஸங்கதிகளாகவே இருக்கவேண்டியது. ஆகையாலே சுலோகத்திலுள்ள துக்கம் என்பது கெட்ட ஸங்கதிகளில் துக்கம் பயம் என்பது கெட்டகாரியங்களில்பயம். அயசஸ்ஸு என்பது கெட்ட காரியங்களைச் செய்து பலபேர்களால் தூஷிக்கப்படுவது. இதை பகவான் கெட்ட காரியங்களில்பயமுண்டாவதற்காகத்தான் கொடுக்கிறான். அவனால்தான் அது போகவேண்டும் என்று எண்ணி அவனைக் கெஞ்ச வேண்டியது. இந்த இருபது ஸங்கதிகளும் பகவானால் உண்டாகிறது என்று ஒருவன் தன அநுபவத்தைப் பார்த்து நினைத்தால், பகவானிடத்தில் பக்தி அளவில்லாமல் வளரும்.

*அவ— எல்லாப் பிராணிகளையும் உண்டு பண்ணுவதற்கும், காப்பாற்றுவதற்கும், சில பேர்களை நான் ஏற்படுத்தியிருக்கிறேன். அவர்கள் என் எண்ணப்படி அந்த வேலைகளைச் செய்கிறார்கள் என்று சொல்லுகிறார்—*

*முன் மந்வந்தரத்தில் பிருகு முதலிய ஏழுபெரியருஷிகளை நாலு முகமுடைய பிரும்மா மனதினால் உண்டாக்கினார். அவர்கள் 1 நித்திய ஸ்ருஷ்டிகளை நடத்துகிறார்கள். ஸாவர்ணிகர்கள் என்கிற நாலு மனுக்கள் நித்திய ஸ்திதியை நடத்துகிறார்கள், இப்போது உலகத்திலிருக்கிறவெல்லா ஜனங்களும் அவர்களுடைய வம்சத்திலதான் உண்டானவர்கள் அவர்கள் ஒவ்வொரு க்ஷணமும் பிரளயகாலம்வரையில்குழந்தைகளை உண்டுபண்ணிக்காப்பாற்றுகிறார்கள். அந்தபிருகு முதலான ஏழு பேர்களும், அந்த நாலு மனுக்களும் என்எண்ணப்படி நடக்கிறார்கள். அதாவது என்எண்ணமில்லாமலொரு வேலையும் செய்கிறதில்லை. என் உடம்பு மாதிரி. 2* [6]

𑌮𑌹𑌰𑍍𑌷𑌯𑌃 𑌸𑌪𑍍𑌤 𑌪𑍂𑌰𑍍𑌵𑍇 𑌚𑌤𑍍𑌵𑌾𑌰𑍋 𑌮𑌨𑌵𑌸𑍍𑌤𑌥𑌾 ।
𑌮𑌦𑍍𑌭𑌾𑌵𑌾 𑌮𑌾𑌨𑌸𑌾 𑌜𑌾𑌤𑌾 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌲𑍋𑌕 𑌇𑌮𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 ॥

---

1. *நித்தியஸ்ருஷ்டி என்றால்,நாள்தோறும் எவ்வளவோ பிராணிகள் உண்டாகிறதே-அது. நித்தியஸ்திதி என்றால், அப்படியே நடக்கிற அவைகளுடைய காப்பாற்றல். நித்தியப் பிரளயம் என்றால் அநேகமாதிரி நடக்கிற சாவு. இந்தமாதிரி பிரும்மாவின் தினம் தோறும் பொழுது விடியும்போது, சில உலகங்கள் உண்டாகி, பகல் முழுதிலும் இருந்து, அஸ்தமனகாலத்தில் அழிந்து விடுகிறது. இதை நைமித்திக ஸ்ருஷ்டி, ஸ்திதி, பிரளயம் என்று சொல்லுகிறது. பெருமாள் எல்லா உலகங்களையும் உண்டாக்கி, கொஞ்சகாலம் வைத்திருந்து, பிறகு அவைகளை அடியோடு அழித்து விடுகிறார்.இதைப் பிராகிருதஸ்ருஷ்டி, பிராகிருத ஸ்திதி, பிராகிருத பிரளயம் என்று சொல்லுகிறது.*

2. *உலகத்தில் இரண்டு தோழர்கள் ஒரே மாதிரி அபிப்பிராயமுள்ளவர்களாயிருப்பார்கள். அது போலன்று. நம்முடைய வேலைக்காரர்கள் நம்முடைய வீட்டு வேலைகளை நம்மிஷ்டப்படி செய்கிறார்கள். அவர்கள் சொந்த வேலைகளைத் தங்களிஷ்டப்படி செய்கிறார்கள். அப்படிப் போலவுமன்று. இவர்கள் செய்கிற வேலைகள் எல்லாம் என்னிஷ்டப்படியே நடக்கின்றன. இவர்களேஇப்படிஇருக்கும்போது,மற்றவர்களைப் பற்றி கேட்பானேன்?*

𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌃-𑌐𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌮𑍍, 𑌤𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌮𑌦𑌾𑌯𑌤𑍍𑌤𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍂𑌪𑌾𑌂 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌮𑍍, 𑌤𑌤𑍍 𑌹𑍇𑌯𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌨𑍀𑌕𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌰𑍂𑌪𑌂 𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌯𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑍋 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿, 𑌸𑍋𑌽𑌵𑌿𑌕𑌮𑍍𑌪𑍇𑌨-𑌅𑌵𑌿𑌚𑌲𑍇𑌨 𑌭𑌕𑍍𑌤𑌿𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍁𑌜𑍍𑌯𑌤𑍇, 𑌨𑌾𑌤𑍍𑌰 𑌸𑌂𑌶𑌯𑌃 । 𑌮𑌦𑍍𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌵𑌿𑌷𑌯𑌂 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌵𑌿𑌷𑌯𑌂 𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌯𑍋𑌗𑌵𑌰𑍍𑌧𑌨𑌮𑌿𑌤𑌿 𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌵 𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍀𑌤𑍍𑌯𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑌃 ॥ ॥௭॥

இந்த என்னுடைய ஆளுகையையும், அதாவது—எல்லாம் என்னால் உண்டு பண்ணப்பட்டு, காப்பாற்றப்பட்டு, ஏவப்படுவதையும், ஒருவித கெடுதியும் ஒருக்காலத்திலுமில்லாமல், எல்லா நல்ல குணங்களும் என்னிடம் சேர்ந்திருப்பதையும், எவன் உள்ளபடி அறிகிறானோ, அவனுக்கு ஒருவிததாலும், ஒருவராலும் கலக்கமுடியாத பக்தியானது என்னிடத்தில் உண்டாகி வளருகிறது. இதில் ஸந்தேஹமில்லை. நீ இந்த ஸங்கதிகளை அறிந்தால், அந்த மாதிரி பக்தி உனக்கு வளரும் என்பதை நீயே பார்க்கப் போகிறாய். [7]

𑌅𑌥— 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌪𑌾𑌕𑌰𑍂𑌪𑌾𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌵𑍃𑌦𑍍𑌧𑌿𑌂 𑌦𑌰𑍍𑌶𑌯𑌤𑌿—

𑌅𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌭𑌵𑍋 𑌮𑌤𑍍𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ।
𑌇𑌤𑌿 𑌮𑌤𑍍𑌵𑌾 𑌭𑌜𑌨𑍍𑌤𑍇 𑌮𑌾𑌂 𑌬𑍁𑌧𑌾 𑌭𑌾𑌵𑌸𑌮𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 ॥ ॥௮॥

𑌅𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯-𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑌚𑌿𑌦𑌚𑌿𑌦𑍍𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌃-𑌉𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌕𑌾𑌰𑌣𑌮𑍍, 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌮𑌤𑍍𑌤 𑌏𑌵 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤 𑌇𑌤𑍀𑌦𑌂 𑌪𑌾𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌿𑌕𑌂 𑌨𑌿𑌰𑌙𑍍𑌕𑍁𑌶𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌂, 𑌸𑍌𑌶𑍀𑌲𑍍𑌯𑌸𑍌𑌨𑍍𑌦𑌰𑍍𑌯𑌵𑌾𑌤𑍍𑌸𑌲𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌗𑌣𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌮𑌤𑍍𑌵𑌾, 𑌬𑍁𑌧𑌾𑌃-𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌃 𑌮𑌾𑌂-𑌸𑌰𑍍𑌵𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌂 𑌭𑌜𑌨𑍍𑌤𑍇।𑌭𑌾𑌵𑌃-𑌮𑌨𑍋𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌵𑌿𑌶𑍇𑌷𑌃 । 𑌮𑌯𑌿 𑌸𑍍𑌪𑍃𑌹𑌯𑌾𑌲𑌵𑍋 𑌮𑌾𑌂 𑌭𑌜𑌨𑍍𑌤𑍇 ॥ ॥௮॥

அவ—கீழ்ச்சொன்னபடி அறிந்து, பக்தி வளர்ந்திருப்பதைக் காண்பிக்கிறார்—

ஆச்சரியமாயும் பலவிதமாயும் ஆன இந்த உலகத்தை நான் தான் உண்டுபண்ணுகிறேன். இந்த எல்லா உலகமும் என்னால்தான் ஏவப்பட்டு, எல்லா வேலைகளையும் செய்கிறது—என்கிற-எனக்கு இயற்கையாக ஏற்பட்ட-ஒருதடங்கலுமில்லாத-என்னுடைய ஆளுகையையும், மிகவும் இளப்பமானவர்களுடன் ஸந்தோஷமாகப் பழகுவது, அளவில்லாத அழகு, குற்றங்களைப் பார்க்காமல் ஜனங்களிடத்தில் ஆசை இவை முதலான என்னுடைய கூட்டங் கூட்டமான நல்ல குணங்களையும் நினைத்து, ஞானிகள் என்னிடத்தில் வெகு ஆசையோடு எல்லா நல்ல குணங்களோடு சேர்ந்த என்னைத் தியானம் செய்கிறார்கள். [ 8 ]

தே:— கதம்?—

மச்சித்தா மத்கதப்ராணா போதயந்த: பரஸ்பரம் ।
கதயந்தஶ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச ॥ ॥ ௯ ॥

மச்சித்தா:-மயி நிவிஷ்டமநஸ:, மத்கதப்ராணா:-மத்கதஜீவிதா:, மயா விநா ஆத்மதாரணம் அலபமாநா இத்யர்த்த: । ஸ்வஸ்வாநுபூதாந் மதீயாந் குணாந் பரஸ்பரம் போதயந்த: மதீயாநி திவ்யாநி ரமணீயாநி கர்மாணி ச கதயந்தஸ்துஷ்யந்தி ச ரமந்தி ச - வக்தாரஸ்தத்வசநேநாநந்யப்ரயோஜநேந துஷ்யந்தி, ஶ்ரோதாரஶ்ச தச்ச்ரவணேநாநவதிகாதிஶயப்ரியேண ரமந்தே ॥ ॥ ௯ ॥

அவ—அவர்கள் பக்தி பண்ணுகிறவிதம் எப்படி என்றால் சொல்லுகிறார்—

என்னிடத்தில் மனதுமுழுவதும் 1 பதிந்து, என்னிடத்திலேயே உயிரைவைத்து, அதாவது என்னை ஒரு விநாடிகூடப் பிரிந்தாலும் தாங்காமல், அவரவர்கள் அநுபவிக்கிற என்னுடைய

---

1. பக்தி வளருகையில் வருகிற ஸங்கதிகள் இங்கே காட்டப்படுகின்றன. முதலில் மனது பகவானிடம் பதிகிறது. பிறகு அவனை விடமுடியவில்லை; விட்டால் தாங்கவில்லை. அதின்பிறகு பகவானைப்பற்றி பேசாமலும், கேட்காமலும் இருக்கமுடியாது.

குணங்களை ஒருவருக்கொருவர் 1 தெரியப்படுத்துகிறார்கள். என்னுடைய உயர்ந்த இன்பமான வேலைகளை ஒருவருக்கொருவர் சொல்லுகிறார்கள். சொல்லுகிறவர்கள் அப்படிச் சொல்லுவதையே 2 பிரயோஜனமாக எண்ணி ஸந்தோஷப்படுகிறார்கள். அதைக் கேட்கிறவர்களும் அளவில்லாதப் பிரீதியோடு கேட்டு ஸந்தோஷப்படுகிறார்கள். [9]

தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம் ।
ததாமி புத்தியோகம் தம் யேந மாமுபயாந்தி தே ॥௰॥

தேஷாம் ஸததயுக்தாநாம் - மயி ஸததயோககாமாநாம் மாம் பஜமாநாநாம் தமேவ புத்தியோகம் விபாகதசாபந்நம் ப்ரீதிபூர்வகம் ததாமி, யேந தே மாமுபயாந்தி ॥

அவ—இதுவரையில் பகவானுடைய குணங்களையும், ஆளுகையையும் அறிந்தால் பக்தி உண்டாகுமென்றும், வளரும் என்றும் சொல்லப்பட்டது. இப்படி வளர்ந்த பக்தியினால் அவனை அடைவதற்கு முன்னாலே மிகவும் தெளிவான அவனுடைய பார்வையுண்டாகும். அது பகவான் கிருபையுடன் நடுவில் செய்யும் வேலையென்றும் சொல்லுகிறார்—

அவர்கள் என்னோடு எப்பொழுதும் இருக்கவேணுமென்று ஆசைப்பட்டு, பிரீதியுடன் என்னைத்தியானம் பண்ணுகிறார்கள். மிகுந்தஸந்தோஷத்துடன் அவர்களுக்கு அந்தபக்தி முற்றும்படி

---

1. தெரியப்படுத்துவது என்பது-முன்னால் அறியப்படாத ஸங்கதியைச் சொல்லுவது. பகவானை நினைக்கும்போது அவனுடைய அனுக்கிரகத்தினால் அவனுடைய சிலஸங்கதிகள் புதிதாய் தோன்றுகின்றன. அவைகளைச் சொல்லுதல். சொல்லுவது என்பது பகவானுடைய நடந்த கதைகளைச் சொல்லுவது.

2. உலகத்தில் ஜனங்கள் ஒருவனை ஸந்தோஷப்படுத்தி, சிலபிரயோஜநங்களை அடைவதற்காக அவனிடத்தில் சில கதைகளைச் சொல்லுவார்கள். இங்கே அப்படியல்ல. பகவானுடைய கதைகளைச் சொல்லுவதே பிரயோஜநமாயிருக்கிறது.

யாகச் செய்கிறேன். அதாவது—எப்படியிருந்தால் உடனே என்னிடம் வந்துசேருவார்களோ, அப்படிச் செய்கிறேன் 1 (10)

𑌅𑌵— 𑌕𑌿𑌂𑌚—

𑌤𑍇𑌷𑌾𑌮𑍇𑌵𑌾𑌨𑍁𑌕𑌮𑍍𑌪𑌾𑌰𑍍𑌥𑌮𑌹𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑌂 𑌤𑌮𑌃 ।
𑌨𑌾𑌶𑌯𑌾𑌮𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌭𑌾𑌵𑌸𑍍𑌥𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌦𑍀𑌪𑍇𑌨 𑌭𑌾𑌸𑍍𑌵𑌤𑌾 ॥ ௧௧॥

𑌤𑍇𑌷𑌾𑌮𑍇𑌵𑌾𑌨𑍁𑌕𑌮𑍍𑌪𑌾𑌰𑍍𑌥𑌮𑌹𑌮𑌾𑌤𑍍𑌮𑌭𑌾𑌵𑌸𑍍𑌥𑌃 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌮𑌨𑍋𑌵𑍃𑌤𑍍𑌤𑍌 𑌵𑌿𑌷𑌯𑌤𑌯𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌮𑌦𑍀𑌯𑌾𑌨𑍍 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌗𑌣𑌾𑌨𑌾𑌵𑌿𑌷𑍍𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌮𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌖𑍍𑌯𑍇𑌨 𑌭𑌾𑌸𑍍𑌵𑌤𑌾 𑌦𑍀𑌪𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌪𑍍𑌰𑌾𑌚𑍀𑌨𑌕𑌰𑍍𑌮𑌰𑍂𑌪𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑌂 𑌮𑌦𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌵𑌿𑌷𑌯𑌪𑍍𑌰𑌾𑌵𑌣𑍍𑌯𑌰𑍂𑌪𑌂 𑌵𑌾𑌸𑌨𑌾𑌮𑌯𑌂 𑌤𑌮𑌃 𑌨𑌾𑌶𑌯𑌾𑌮𑌿 ॥ ॥௧௧॥

அவ—இன்னமும்—

அவர்களுக்கு எல்லா க்ஷேமங்களையும் கொடுப்பதற்காக எப்போதும் அவர்கள் நினைவில் இருந்து, அதாவது, எப்பொழுதும் அவர்களை என்னை நினைக்கும்படி செய்து, கூட்டங்கூட்டமான என்னுடைய எல்லா நல்ல குணங்களையும் புதிது புதிதாகவும்

---

1. ஒருவன் இன்னது என்று சொல்ல முடியாத உயர்ந்த புண்ணியத்தாலே மஹான்களைக்கொண்டு சாஸ்திரத்தாலே ஜீவன் தைவம் இவை முதலானவைகளைத் தெளிவாய் அறிகிறான். பிறகு சாஸ்திரத்தில் சொல்லியபடி பகவானைத் தியானம் பண்ணுகிறான். அந்த தியானம் வளரும்போது பகவானைப் பார்க்கவேணுமென்று ஆசைப்பட்டுக் கெஞ்சுகிறான். பகவான் இதுவரையில் இவனால் மனதால் மாத்திரம் நினைத்த ஸங்கதிகளையும், நினையாதவைகளையும், பார்க்கக் கூடிய கண்ணைக் கொடுத்து, உள்ளபடி அவைகளைப் பார்க்கும்படி செய்கிறான். பிறகு இவனுக்கு ஆசை தாங்காமல் இப்பொழுதே என்னை உம்மிடம் அழைத்துக்கொள்ள வேணுமென்று தபிக்கிறான். உடனே அழைத்துக் கொள்ளாவிட்டால் ஆணையிடுகிறான். பிறகு உடனே பகவான் இவனை அழைத்துக்கொள்ளுகிறான் என்று சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. கீழே சொன்ன தன் பார்வையைக் கொடுப்பது இந்த சுலோகத்தில் சொல்லப்படுகிறது. இந்தப்பார்வைக்கு பரஞானம் என்று பெயர். பிற்பாடுவரும் தவிப்புக்கு பரமபக்தி யென்று பெயர்.

தெளிவாகவும் அவர்களுக்குக் காண்பிக்கிறேன். என்னைப்பற்றின இந்த அறிவு என்கிற பிரகாசமுள்ள விளக்கினாலே என்னை நினைப்பதற்கு இடைஞ்சலான—நெடுநாளாய் வந்த கர்மங்களாலுண்டான—என்னைத்தவிர 1 மற்ற விஷயங்களில் இருக்கும்—மிகுந்த ஆசையான—நெடுநாள் பழக்கப்பட்ட—இருட்டைப்போக்குகிறேன். அதாவது—என்னை விட்டுப் பிரிந்திருக்கத் தாங்கமுடியாமல், அவர்கள் என்னிடம் சீக்கிரம் வரும்படியாகச் செய்கிறேன். [11]

ஶ்ரீ-- ஏவம் ஸ்வேதரவிஸஜாதீயம் ஸ்வபாவஸாதாரணம் புண்யதமம் நிரதிஶயாநந்தஜநகம் கல்யாணகுணகணைஶ்வர்யம் தவைஶ்வர்யவிததிம் ச ஶ்ருத்வா தத்விஸ்தரம் ஶ்ரோதுகாம: அர்ஜுந உவாச—

அர்ஜுந உவாச—

பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவாந் |
புருஷம் ஶாஶ்வதம் திவ்யமாதிதேவமஜம் விபும் || ௧௨ ||
ஆஹுஸ்த்வாம்ருஷய: ஸர்வே தேவர்ஷிர்நாரதஸ்ததா |
அஸிதோ தேவலோ வ்யாஸ: ஸ்வயம் சைவ ப்ரவீஷி மே || ௧௩ ||

"பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம்" இதி யம் ஶ்ருதயோ வதந்தி, ஸ ஹி பவாந் | "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே | யேந ஜாதாநி ஜீவந்தி | யத்ப்ரயந்த்யபி

---

1. ஒருவன் விஷயங்களைப்பற்றின ஆசை போன பிறகு தானே தியானம் செய்கிறான். அப்படியிருக்க, தியானத்தினால் போகக்கூடிய ஆசை ஏது, அதுதான் தியானத்துக்குமுந்தியே போய் விட்டதே என்றால்; பதில்—விஷயங்களைப் பற்றின ஆசை ஸ்தூலம் (பெரிது) ஸூக்ஷ்மம் (சின்னது) என்று இருவகை. ஸ்தூலத்தினால் ஸூக்ஷ்மம் உண்டாகிறது. ஸ்தூலம்போய் தியானம் செய்தான். அப்போது ஸூக்ஷ்மம் இருந்தது. செய்த தியானத்தினால் அது போகிறது. உதாரணம்:—ஒருவன் ஸம்ஸாரத்தை வெறுத்து ஸந்நியாஸி ஆனான். ராத்திரியில் ஸ்வப்னத்தில் குழந்தை கிட்டவருகிறது போலிருக்கிறது. அப்போதும் நடுங்கினான். கொஞ்சகாலம் ஆனபிறகு அதுவும் போய் விடுகிறது.

[illegible] யத்ராஸ்தே [illegible] | [illegible]
[illegible] ஸம்ஸயோ [illegible] ॥ க்ருஷ்ண
ஏவ ஹி லோகாநாமுத்பத்திரபி சாவ்யய: | க்ருஷ்ணஸ்ய ஹி
க்ருதே பூ⁴தமித³ம் விஸ்²வம் சராசரம்" இதி ॥ [illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥ ||௧௩||

அவ—இப்படி பகவானைத்தவிர மற்ற ஒருவருக்கும் இல்லாத தாய் பகவானுக்கு மாத்திரம் இருப்பதும், இதைக்கேட்கிற காலத்தில் யாருக்கும் அளவில்லாத ஆநந்தத்தைக் கொக்கக் கூடியது மான பகவான் எல்லா உலகங்களையும் ஆளுவதின் விரிவையும், அவனுடைய உயர்ந்த குணங்களையும் கேட்டு, அதை இன்னும் விரிவாகக் கேட்க வேணுமென்று ஆசையினால் அர்ஜுநன் சொல்லுகிறான்—

வேதங்களில் பரம் பிரும்ம என்றும், பரம்தாம என்றும், பரமம் பவித்திரம் என்றும்சொல்லப்படுகிறவர் தேவரீர்தான். பரம் பிரும்ம என்றால், மிகவும் உயர்ந்த வஸ்து. பரம்தாம என்றால், மிகவும் உயர்ந்தபிரகாசமுடைய வஸ்து. பரமம் பவித்திரம்என்றால், எல்லாருடைய எல்லாதோஷங்களையும் தன்னை நினைத்தமாத்திரத்தால் போக்கக்கூடிய வஸ்து. இது உயர்ந்தது, இது இளப்பம் என்று வஸ்துக்களுடைய உண்மையை அறிந்த எல்லா ருஷிகளும் தேவரீரைத்தான் அழிவில்லாதவராகவும், பரமபதத்திலிருப்பவராகவும், எல்லா உலகங்களாகிற பெண்களை ஆளக் கூடிய ஆண்மையை யுடையவராகவும், எல்லா லோகங்களையும் விளையாட்டாக உண்டு பண்ணுகிறவராகவும், ஒருக்காலும் பிறப்பில்லாதவராகவும், எங்கும் நிறைந்தவராகவும் சொல்லுகிறார்கள். அப்படியே தேவருஷியான நாரதர், அஸிதர், தேவலர், வியாஸர், இவர்களும் சொல்லுகிறார்கள். தேவரீரும் அப்படியே சொல்லுகிறீர்.

ஸர்வமேதத்ருதம் மந்யே யந்மாம் வதஸி கேஶவ।
ந ஹி தே பகவந் வ்யக்திம் விதுர்தேவா ந தாநவா: ॥௧௪॥

அதஸ்ஸர்வமேதத்யதாவஸ்திதவஸ்துகதநம் மந்யே, ந ப்ரஶம்ஸாரூபமிதி| யந்மாம் ப்ரத்யநந்யஸாதாரணமநவதிகாதிஶயம் ஸ்வாபாவிகம் த்வதைஶ்வர்யம் கல்யாணகுணாநந்த்யம் ச வதஸி| அதோ பகவந் - நிரதிஶயஜ்ஞாநஶக்த்யைஶ்வர்யவீர்யதேஜஸாம் நிதே தே வ்யக்திம் வ்யஞ்ஜநப்ரகாரம், ந ஹி பரிமிதஜ்ஞாநா தேவா தாநவாஶ்ச விது: ॥௧௪॥

ஆகையாலே, நீர் இதுவரையில் உம்மிடத்திலிருப்பதாகச் சொன்ன எல்லா ஸங்கதிகளும் உண்மையில் உம்மிடத்தில் இருக்கின்றன. நீர் தப்பாக உம்மை ஸ்தோத்திரம் பண்ணிக் கொள்ளவில்லை என்று எனக்கு மனதாரத் தோன்றுகிறது. ஆகையாலே அளவில்லாத-ஞானம்-சக்தி-பலம்-ஐசுவரியம்-வீர்யம்-தேஜஸ்ஸு இவைகளுக்கு இருப்பிடமானவரே! நீர் உம்முடைய ஸங்கதிகளை எப்படித் தெளிவாய் எடுத்துச் சொல்லுகிறீரோ, அப்படி மிகவும் கொஞ்சமான அறிவுள்ள தேவர்களாலும், அஸுரர்களாலும் சொல்லமுடியாது. அவர்களுக்கு உம்மைப்பற்றித் தெளிவான அறிவில்லை. ஆகையால் உம்முடைய ஸங்கதிகளை இன்னொருவரைக் கொண்டு அறியமுடியாது. [14]

ஸ்வயமேவாத்மநாத்மாநம் வேத்த த்வம் புருஷோத்தம।
பூதபாவந பூதேஶ தேவதேவ ஜகத்பதே ॥ ॥௧௫॥

ஹே புருஷோத்தம! ஆத்மநாத்மாநம்-த்வாம் ஸ்வயமேவ-ஸ்வேநைவ ஜ்ஞாநேந வேத்த| பூதபாவந-ஸர்வேஷாம் பூதாநாமுத்பாதயித:! பூதேஶ-ஸர்வேஷாம் பூதாநாம் நியந்த:! தேவதேவ-தேவதாநாமபி பரமதேவத-யதா மநுஷ்யேப்ய: பஶுபக்ஷிஸரீஸ்ருபாதிப்யஶ்ச ஸௌந்தர்யாதிகல்யாணகுணகணைர்தேவா அதீத்ய வர்த்தந்தே; ததா தாந் ஸர்வாந் தேவாநபி தைஸ்தைர்குணகணைரதீத்ய வர்த்தமாந! ஜகத்பதே-ஜகத்ஸ்வாமிந் ॥ ॥௧௫॥

ஏ உயர்ந்த புருஷனே! நீர் உம்மை உம்முடைய ஞானத்தாலே தானாகவே அறிகிறீர். மற்றவர்கள் உம்முடைய அனுக்ரஹத்தால் அறிய வேணும். எல்லா உலகங்களையு முண்டுபண்ணுகிறவரே! எல்லா உலகங்களையும் அடக்கி ஆளுகிறவரே! தேவதைகளுக்கெல்லாம் உயர்ந்த தேவதையானவரே! அதாவது—மனிதர் மாடு, பறவை, முதலியவைகளுக்கும், தேவதைகளுக்கும் அழகு முதலிய குணங்களால் எவ்வளவு வாசியிருக்கிறதோ, அவ்வளவு தேவதைகளுக்கும், தேவரீருக்கும் இருக்கிறது. எல்லா உலகத்துக்கும் ராஜாவே! [15]

வக்துமர்ஹஸ்யசேஷேண திவ்யா ஹ்யாத்மவிபூதய: ||
யாபிர்விபூதிபிர்லோகாநிமாம்ஸ்த்வம் வ்யாப்ய திஷ்டஸி ||

திவ்யா:-அஸாதாரணா ஹ்யாத்மவிபூதயோ யா:, தாஸ்த்வமசேஷேண வக்துமர்ஹஸ்யேவ வ்யஞ்ஜயித்வா:| யாபிராத்மவிபூதிபி: - ஐச்வர்யவிசேஷை: யுக்த:, இமாந் லோகாந் த்வம் நியந்த்ருத்வேந வ்யாப்ய திஷ்டஸி||

எந்த சக்தியினாலே இந்த எல்லா லோகங்களையும் ஏவிக்கொண்டு, எங்கும் நிறைந்திருக்கிறீரோ, மற்ற ஒருவனுக்குமில்லாத உமக்கு மாத்திரமுள்ள அந்த விபூதிகளை (அடக்கி ஆளுகிற சக்திகளை) எல்லாவற்றையும் மீதியில்லாமல் தேவரீராலே தான் சொல்ல முடியும். ஆகையால் அவைகளைச் சொல்லவேண்டும்.[16]

கதம் வித்யாமஹம் யோகீம்ஸ்த்வாம் ஸதா பரிசிந்தயந் ।
கேஷு கேஷு ச பாவேஷு சிந்த்யோஸி பகவந்மயா||

அஹம் யோகீ-பக்தியோகநிஷ்டஸ்ஸந் ஸதா த்வாம் பரிசிந்தயந்-விஜயிதவ்ய ப்ருத்ருத்ஸ்வித்யம் த்வாம் பரிபூர்ணைச்வர்யாதிகல்யாணகுணகணம் கதம் வித்யாம்। வஸ்துவ்யதிரிக்தாநாதி ஸாவ்யதிரிக்தேஷு கேஷு கேஷு ச பாவேஷு மயா நியந்த்ருத்வேந சிந்த்யோஸி||

நான் பக்தியோகம் என்கிற உம்முடையத் தியானத்தைச் செய்ய ஆரம்பிக்கும்போது, எல்லா லோகங்களையும் தனிககூட

விடாமல் அடக்கி ஆளுகிறது முதலான உம்முடைய உயர்ந்த குணங்களைப்பற்றி பூர்ணமான தெளிவுஎப்படி வருமோ, அப்படியும், கீழ்ச்சொன்ன புத்தி முதலானவைகள் தவிர, இன்னும் என்னென்ன ஸங்கதிகள் தேவரீரால் ஏற்படுகின்றனவென்று நான் தெரிந்து கொள்ளவேணுமோ, அவைகளை அறியும்படியும் சொல்லவேண்டும். [ 17

விஸ்தரேணாத்மநோ யோக³ம் விபூ⁴திம் ச ஜநார்த³ந ।
பூ⁴ய: கத²ய த்ருப்திர்ஹி ஶ்ருண்வதோ நாஸ்தி மேऽம்ருதம் ॥

"ஸர்வம் ஸமாப்நோஷி ததோऽஸி ஸர்வ:" இதி ஸம்க்ஷேபேணோக்தம் தவ ஸ்ருஷ்ட்யாதியோக³ம் விபூ⁴திம் நியமநம் ச பூ⁴யோ விஸ்தரேண கத²ய । த்வயோச்யமாநம் த்வந்மாஹாத்ம்யாம்ருதம் ஶ்ருண்வதோ மே த்ருப்திர்நாஸ்தி ஹி அத்யந்தம் த்ருப்திஜநகமேவ விஷயத்வமிதியர்த²: ॥ ॥ 17 ॥

எல்லா உலகங்களையும் உண்டுபண்ணுவதையும், எல்லா உலகங்களையும் அடக்கி ஆளுவதையும் சுருக்கமாகச் சொன்னீர். அவைகளை விரிவாகச் சொல்லும். தேவரீராலே சொல்லப்படுகிற தேவரீருடைய பெருமையாகிற அமிருதத்தைக் கேட்டு, எனக்கு திருப்திவரவில்லையே. ஆசையடங்கவில்லையே. அது தேவரீருக்குத் தெரியுமே. [ 18 ]

ஶ்ரீப⁴க³வாநுவாச—

ஹந்த தே கத²யிஷ்யாமி விபூ⁴தீராத்மநஶ்ஶுபா⁴: ।
ப்ராதா⁴ந்யத: குருஶ்ரேஷ்ட² நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே ॥

ஹே குருஶ்ரேஷ்ட²! மதீ³யா: கல்யாணீர்விபூ⁴தீ: ப்ராதா⁴ந்யதஸ்தே கத²யிஷ்யாமி । ப்ராதா⁴ந்யமுபேக்ஷ்யாவஶிஷ்டம் ஸர்வ "ஸர்வோऽயமாத்மா ச" இதி வக்ஷ்யதே । ஜக³த்யுத்க்ருஷ்டா: கஶ்சந விபூ⁴தயோக்ஷ்யாமி । விஸ்தரேண வக்தும் ஶ்ரோதும் ச ந ஶக்யதே, ஆநந்த்யாச்ச । விபூ⁴திஶப்³தோ நியாமகத்வம் । ஸர்வேஷாம் ஸ்வநா நியாமகத்வம் ஸர்வம் ஸர்வ ப்ரியோ ஹாவா மத்தேவ ஸமஸ்த்ய

யம்யத்யம்ருத:'' இதி, ''ய ஆத்மநி திஷ்டந்நாத்மநோऽந்தரோ யமாத்மா ந வேத³ யஸ்யாத்மா ஶரீரம் ய ஆத்மாநமந்தரோ யமயதி ஸ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:'' இதி ச । ஏவம் ஸர்வபூ⁴தாநாமாத்மதயாவஸ்தி²தோऽஹம் தேஷாமாதி³ர்மத்⁴யம் சாந்தஶ்ச — தேஷாமுத்பத்திஸ்தி²திப்ரளயஹேதுரித்யர்த²: ॥ ௨௦॥

அவ—பகவான் எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருந்து, எல்லாப் பிராணிகளையும் நியமிக்கிறான் (அந்தந்த வேலைகளைச் செய்விக்கிறான்) என்பதையும், யோகம் என்று சொல்லப்பட்ட—எல்லா லோகங்களையும் உண்டுபண்ணுகிறது, காப்பாற்றுகிறது, அழிக்கிறது—என்பதையும் தெளிவாகச் சொல்லுகிறார்—

என்னுடைய உடம்புகளான எல்லாப் பிராணிகளுடைய ஹிருதயத்தில் நான் ஆத்மாவாய் இருக்கிறேன். ஆத்மாவென்பது உடம்பை இருக்கிறவரையில் தவறாமல் எப்பொழுதும் தாங்குகிறது, எப்பொழுதும் ஏவுகிறது, எப்பொழுதும் உபயோகித்துக் கொள்ளுகிறது. இப்படி ஹிருதயத்தில் இருப்பதை மேலே சொல்லப் போகிறது. வேதங்களிலும் சொல்லி இருக்கிறது. இந்த நான் எல்லாப் பிராணிகளையும் உண்டு பண்ணுகிறவனும், காப்பாற்றுகிறவனும், அழிக்கிறவனும் இருக்கிறேன். [20]

அவ— ஏவம் ப⁴க³வத: ஸ்வவிபூ⁴திபூ⁴தேஷு ஸர்வேஷ்வாத்மதயாவஸ்தா²நம் தத்தச்ச²ப்³த³ஸாமாநாதி⁴கரண்யநிர்தே³ஶஹேதும் ப்ரதிபாத்³ய, விபூ⁴திவிஶேஷாந் ஸாமாநாதி⁴கரண்யேந வ்யபதி³ஶதி । ஸர்வத்ராத்மதயாவஸ்தி²தே ஹி ஸர்வே ஶப்³தா³ஸ்தஸ்மிந்நேவ பர்யவஸ்யந்தி, யதா² 'தே³வோ மநுஷ்ய: பக்ஷீ வ்ருக்ஷ:'' இத்யாத³ய: ஶப்³தா³: ஶரீராணி ப்ரதிபாத³யந்த: ததா³த்மநி பர்யவஸ்யந்தி। ஸர்வத்ராத்மதயாவஸ்தா²நமேவ தத்தச்ச²ப்³த³ஸாமாநாதி⁴கரண்யநிர்தே³ஶஹேதுரிதி விபூ⁴த்யுபஸம்ஹாரே வக்ஷ்யதி—''ந தத³ஸ்தி விநா யத் ஸ்யாத்

[illegible] —

𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑌹𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌾𑌂 𑌰𑌵𑌿𑌰𑌂𑌶𑍁𑌮𑌾𑌨𑍍 ।
𑌮𑌰𑍀𑌚𑌿𑌰𑍍𑌮𑌰𑍁𑌤𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌮𑌹𑌂 𑌶𑌶𑍀 ॥ ॥௨௧॥

𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌸𑌙𑍍𑌖𑍍𑌯𑌾𑌸𑌙𑍍𑌖𑍍𑌯𑌾𑌤𑌾𑌨𑌾𑌮𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑍋 𑌯 𑌉𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌟𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍍𑌨𑌾𑌮𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌃, 𑌸𑍋𑌽𑌹𑌮𑍍 । 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌾𑌂-𑌜𑌗𑌤𑌿 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌾𑌨𑌾𑌂 𑌯𑍋𑌽𑌂𑌶𑍁𑌮𑌾𑌨𑍍 𑌰𑌵𑌿𑌃-𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌗𑌣𑌃, 𑌸𑍋𑌽𑌹𑌮𑍍 । 𑌮𑌰𑍁𑌤𑌾𑌮𑍁𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌟𑍋 𑌮𑌰𑍀𑌚𑌿𑌰𑍍𑌯𑌃, 𑌸𑍋𑌽𑌹𑌮𑌸𑍍𑌮𑌿 । 𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌮𑌹𑌂 𑌶𑌶𑍀। 𑌨𑌾𑌯𑌂 𑌨𑌿𑌰𑍍𑌧𑌾𑌰𑌣𑍇 𑌷𑌷𑍍𑌠𑍀, "𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌚𑍇𑌤𑌨𑌾" 𑌇𑌤𑌿𑌵𑌤𑍍 । 𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌪𑌤𑌿𑌰𑍍𑌯𑌶𑍍𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌃 𑌸𑍋𑌽𑌹𑌮𑌸𑍍𑌮𑌿 ॥ ॥௨௧॥

அவ—உலகத்தில் உடம்பையும், ஆத்மாவையும் ஒன்றாகச் சொல்லுவது வழக்கம். "அவன் பெருத்து இருக்கிறான்" என்கிறார்கள். "அவன்" என்பது ஆத்மா. அது சின்னது. பெருத்து இருக்கிறது உடம்பு. ஆத்மாவில் பெருமன் இல்லை. பெருத்து இருக்கிறானென்றால், பெருத்த உடம்பில் இருக்கிறான் என்று தான் பொருள். உலகமெல்லாம் பகவானுக்கு உடம்பாகையால், பகவானே உலகமென்று சொல்லலாம். உலகம் என்கிற சொல்லுக்கு உலகத்துக்கு ஆத்மாவென்றுதான் பொருள். பகவானையும், உலகத்தையும் ஒன்றாகச் சொல்லுவதற்குக் காரணமான-பகவான் உலகத்துக்கு ஆத்மா என்பதைச் சொல்லி, பகவானையும் உலகத்தில் உயர்ந்த வஸ்துக்களையும் ஒன்றாகச் சொல்லுகிறார். ஒன்றாகச் சொல்லுவதற்குக் காரணம் ஆத்மாவாயிருப்பதுதான் என்பதை இந்த அத்தியாயத்தின் முடிவிலே (ச்லோகம்-39) சொல்லுகிறார்—'நான் இல்லாமல் உலகத்தில் ஒரு வஸ்துவுமில்லை' என்று. அதாவது—ஆத்மாவான என்னாலே ஏவப்படாதது ஒன்றுமில்லை என்று அதின் பொருள். இந்த ஸங்கதி "என்னாலே தான் எல்லாம் நடக்கிறது" என்று ஆரம்பத்தில் 8-வது ச்லோகத்தில் சொன்னதால் ஏற்படுகிறது—

சூரியர்கள் பன்னிரெண்டு பேர்கள் இருக்கிறார்கள். நான் அவர்களுக்குள் உயர்ந்த பன்னிரெண்டாவதான விஷ்ணு என்கிற ஸூர்யனாக இருக்கிறேன். உலகத்தில் இருட்டைப் போக்குகிற வஸ்துக்களுக்குள் ஸூர்யன்கள் என்கிற கூட்டமாயிருக்கிறேன். காற்றுக்களுக்குள் மரீசி என்கிற காற்றாக இருக்கிறேன். நக்ஷத்திரங்களுக்குத் தலைவனான சந்திரனாக இருக்கிறேன் [21]

வேதாநாம் ஸாமவேதோऽஸ்மி தேவாநாமஸ்மி வாஸவ: ।
இந்த்ரியாணாம் மநஶ்சாஸ்மி பூதாநாமஸ்மி சேதநா ॥ ௨௨ ॥

வேதாநாம்-ருக்யஜுஸ்ஸாமாதர்வணாம் ய உத்க்ருஷ்ட: ஸாமவேத:, ஸோऽஹம் । தேவாநாமிந்த்ரோऽஹமஸ்மி । ஏகாதஶாநாமிந்த்ரியாணாம், யதுத்க்ருஷ்டம் மநஸ்தத், தத் அஹமஸ்மி । பூதாநாமஸ்மி சேதநா-ஜ்ஞாநமிதி யாவத் । பூதாநாம் சேதநாவதாம் யா சேதநா, ஸாऽஹமஸ்மி ॥ ॥ ௨௨ ॥

வேதங்களுக்குள் மிகவும் உயர்ந்த ஸாமவேதமாயிருக்கிறேன் பாட்டு (கானம்) ஆயிருப்பதாலும், ஆயிரம் கிளைகள் உள்ளதாய் இருப்பதாலும் அது உயர்ந்தது ஸ்வர்க்கத்தில் இருக்கும் தேவர்களுக்குள் இந்திரனாக இருக்கிறேன் பதினொன்று இந்திரியங்களுக்குள் உயர்ந்ததான மனதாக இருக்கிறேன். ஜீவன்களுக்கு உயர்த்தியைக் கொடுக்கிற அறிவாக இருக்கிறேன். [22]

ருத்ராணாம் ஶங்கரஶ்சாஸ்மி வித்தேஶோ யக்ஷரக்ஷஸாம் ।
வஸூநாம் பாவகஶ்சாஸ்மி மேரு: ஶிகரிணாமஹம் ॥ ௨௩ ॥

ருத்ராணாமேகாதஶாநாம் ஶங்கரோऽஹமஸ்மி । யக்ஷரக்ஷஸாம் வைஶ்ரவணோऽஹம் । வஸூநாமஷ்டாநாம் பாவகோऽஹம் । ஶிகரிணாம்-ஶிகரவதாம் பர்வதாநாம் மேருரஹம் ॥ ॥ ௨௩ ॥

பதினொன்று ருத்திரர்களுக்குள் சங்கரன் என்கிறவராக இருக்கிறேன் யக்ஷர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் தலைவனான குபேரனாக இருக்கிறேன் எட்டு வஸுக்களுக்குள் பாவகன் என

*பவனுக இருக்கிறேன். அழகான சிகரமுள்ள (நுனியுள்ள) மலை களுக்குள் மேரு என்கிற மலையாக இருக்கிறேன். மேருவின் நுனி தங்கமாயும், உயர்ந்த ரத்தினங்கள் இழைத்ததாயுமிருக் கிறதாம்.* [ 23 ]

புரோதஸாஞ்ச முக்யம் மாம் வித்தி பார்த்த ப்ருஹஸ்பதிம்
ஸேநாநீநாமஹம் ஸ்கந்த: ஸரஸாமஸ்மி ஸாகர: ॥ ௨௪॥

புரோதஸாம் முக்யோ ப்ருஹஸ்பதி:, ஸோऽஹமஸ்மி | ஸேநாநீநாம்—ஸேநாபதீநாம் ஸ்கந்தோऽஹமஸ்மி | ஸரஸாம் ஸாகரோऽஹமஸ்மி ॥ ॥௨௪॥

*வாத்தியார்களுக்குள் இந்திரனுக்குக் குருவான பிருஹஸ்பதி யாக இருக்கிறேன். அவர் பெரிய வித்துவானும். கர்மத்துக்குட் பட்ட ஸேனுபதிகளுக்குள் சுப்பிரமணியனுக இருக்கிறேன். ஓட்ட மில்லாமல் தேங்கி இருக்கும் ஜலங்களுக்குள் ஸமுத்திரமாக இருக் கிறேன்.* [ 24 ]

மஹர்ஷீணாம் ப்ருகுரஹம் கிராமஸ்ம்யேகமக்ஷரம் |
யஜ்ஞாநாம் ஜபயஜ்ஞோऽஸ்மி ஸ்தாவராணாம் ஹிமாலய: ॥௨௫

மஹர்ஷீணாம்— மரீச்யாதீநாம் ப்ருகுரஹம் | அர்த்தாபிதாயிநீநாம் கிராம் ஏகமக்ஷரம்— ப்ரணவோऽஹமஸ்மி | யஜ்ஞாநாம் முக்யோ ஜபயஜ்ஞோऽஸ்மி | ஸ்தாவராணாம் ஹிமவாநஹம் ॥ ॥௨௫॥

*மரீசிமுதலான பெரிய ருஷிகளுக்குள்ளே பிருகுஎன்பவராக இருக்கிறேன். சிலபேர்களை பெரிய ருஷிகள் என்று சொல்லி இருக்கிறது. பொருள்களுள்ள சொற்களுக்குள் ஒற்றை எழுத் தான பிரணவமாக இருக்கிறேன். யக்ஞங்களுக்குள் ஜபம்என்கிற யக்ஞமாக இருக்கிறேன். பிரும்மசாரிமுதலான எல்லா ஆசிரமக் காரர்களுக்கும்பொதுவாகஇருப்பதிஞலும், ஆடுமுதலான உயிர்ப் பிராணிகளுக்கு ஹிம்ஸை இல்லாத்திஞலும், சீக்கிரத்தில் தியான த்தை உண்டுபண்ணுகிறதாகையாலும், அது உயர்ந்தது. மலை களுக்குள் ஹிமவான் என்கிற மலையாக இருக்கிறேன்.* [ 25 ]

𑌅𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌵𑍃𑌕𑍍𑌷𑌾𑌣𑌾𑌂 𑌦𑍇𑌵𑌰𑍍𑌷𑍀𑌣𑌾𑌂 𑌚 𑌨𑌾𑌰𑌦𑌃 ।
𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌾𑌣𑌾𑌂 𑌚𑌿𑌤𑍍𑌰𑌰𑌥𑌸𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑌾𑌂 𑌕𑌪𑌿𑌲𑍋 𑌮𑍁𑌨𑌿𑌃 ॥௨௬॥

𑌵𑍃𑌕𑍍𑌷𑌾𑌣𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌮𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 । 𑌦𑍇𑌵𑌰𑍍𑌷𑍀𑌣𑌾𑌂 𑌨𑌾𑌰𑌦𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 ॥ ॥௨௬॥

மரங்களுக்குள் எல்லாரும் பூஜிக்கத்தகுந்த அரசமரமாக இருக்கிறேன். தேவ ருஷிகளென்று சொல்லப்படுமவர்களுக்குள் நாரதர் என்பவராக இருக்கிறேன். கந்தர்வர்களுக்கு ராஜாவான சித்திரரதன் என்பவனாக இருக்கிறேன், பிறந்தது முதல் எட்டு ஐசுவரியங்களை அடைந்தவர்களுக்குள் கபில ருஷியாக இருக்கிறேன்.

𑌉𑌚𑍍𑌚𑍈𑌃𑌶𑍍𑌰𑌵𑌸𑌮𑌶𑍍𑌵𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑌾𑌮𑌮𑍃𑌤𑍋𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 ।
𑌐𑌰𑌾𑌵𑌤𑌂 𑌗𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌨𑌰𑌾𑌣𑌾𑌂 𑌚 𑌨𑌰𑌾𑌧𑌿𑌪𑌮𑍍 ॥

𑌆𑌯𑍁𑌧𑌾𑌨𑌾𑌮𑌹𑌂 𑌵𑌜𑍍𑌰𑌂 𑌧𑍇𑌨𑍂𑌨𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌕𑌾𑌮𑌧𑍁𑌕𑍍 ।
𑌪𑍍𑌰𑌜𑌨𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌕𑌨𑍍𑌦𑌰𑍍𑌪𑌸𑍍𑌸𑌰𑍍𑌪𑌾𑌣𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌵𑌾𑌸𑍁𑌕𑌿𑌃 ॥ ॥௨௮॥

𑌕𑌾𑌮𑌧𑍁𑌕𑍍-𑌦𑌿𑌵𑍍𑌯𑌾 𑌸𑍁𑌰𑌭𑌿𑌃 । 𑌪𑍍𑌰𑌜𑌨𑌨𑌹𑍇𑌤𑍁𑌃 𑌕𑌨𑍍𑌦𑌰𑍍𑌪𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 । 𑌸𑌰𑍍𑌪𑌾𑌃-𑌏𑌕𑌶𑌿𑌰𑌸𑌃 । 𑌨𑌾𑌗𑌾𑌃-𑌬𑌹𑍁𑌶𑌿𑌰𑌸𑌃 ॥

குதிரைகளுக்குள் உச்சைசிரவஸு என்கிற - அமிருதத்தில் பிறந்த-இந்திரனுடைய வெள்ளைக் குதிரையாக இருக்கிறேன். திக்குக்களில் இருக்கிற யானைகளுக்குள் ஐராவதம் என்கிற இந்திரனுடைய-அமிருதத்தில் பிறந்த-வெள்ளை யானையாக இருக்கிறேன். மனிதர்களுக்குள் ராஜாவாக இருக்கிறேன். [ 27 ]

பகவானைத்தவிர மற்றவர்களின் ஆயுதங்களுக்குள் வஜ்ராயுதமாயிருக்கிறேன். பசுமாடுகளுக்குள் காமதேனுவாயிருக்கிறேன். ஜனங்களை உண்டு பண்ணுகிற மன்மதனாக இருக்கிறேன். ஒருதலைப் பாம்புகளுக்குள் வாஸுகி என்பவனாக இருக்கிறேன்.

𑌅𑌨𑌨𑍍𑌤𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌨𑌾𑌗𑌾𑌨𑌾𑌂 𑌵𑌰𑍁𑌣𑍋 𑌯𑌾𑌦𑌸𑌾𑌮𑌹𑌮𑍍 ।
𑌪𑌿𑌤𑍄𑌣𑌾𑌮𑌰𑍍𑌯𑌮𑌾 𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌯𑌮𑌸𑌂𑌯𑌮𑌤𑌾𑌮𑌹𑌮𑍍 । ॥௨௯॥

𑌯𑌾𑌦𑌾𑌂𑌸𑌿-𑌜𑌲𑌚𑌾𑌰𑌿𑌣𑌃, 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌵𑌰𑍁𑌣𑍋𑌽𑌹𑌮𑍍 । 𑌦𑌣𑍍𑌡𑌯𑌤𑌾𑌂 𑌵𑍈𑌵𑌸𑍍𑌵𑌤𑍋𑌽𑌹𑌮𑍍 ॥ ॥௨௯॥

அநேகம் தலைகள் உள்ள பாம்புகளுக்குள் ஆதிசேஷனுயி ருக்கிறேன். ஜலத்தில் இருக்கிற பிராணிகளுக்குள் வருணனாக இருக்கிறேன் பிதாரு தேவதைகளுக்கு ராஜாவான அரியமா என்பவனாக இருக்கிறேன். தண்டிக்கிறவர்களுக்குள் யமனாக இருக்கிறேன். [29]

𑌪𑍍𑌰𑌹𑍍𑌲𑌾𑌦𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌦𑍈𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌾𑌲𑌃 𑌕𑌲𑌯𑌤𑌾𑌮𑌹𑌮𑍍 |
𑌮𑍃𑌗𑌾𑌣𑌾𑌂 𑌚 𑌮𑍃𑌗𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑍋𑌽𑌹𑌂 𑌵𑍈𑌨𑌤𑍇𑌯𑌶𑍍𑌚 𑌪𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌮𑍍 ||

𑌕𑌲𑌯𑌤𑌾𑌂 𑌗𑌣𑌯𑌤𑌾𑌂 𑌮𑌧𑍍𑌯𑍇 𑌕𑌾𑌲𑌃 - 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑌹𑌮𑍍 | ||௩௦||

அஸுரர்களுக்குள் பிரஹ்லாதனாக இருக்கிறேன் கொலைக் குக்காலங் குறிக்கிறவர்களுக்குள்ளே காலன் என்றும், மிருத்தியு என்றும் சொல்லுகிற புருஷனாக இருக்கிறேன். நாலுகாலுள்ள பிராணிகளுக்குள் ஸிம்மமாக இருக்கிறேன். பக்ஷிகளுக்குள் அதிக வேகமுள்ள-வேதஸ்வரூபமென்று சொல்லப்படுகிற-கருடனாக இருக்கிறேன். [30]

𑌪𑌵𑌨𑌃 𑌪𑌵𑌤𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌰𑌾𑌮𑌃 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌭𑍃𑌤𑌾𑌮𑌹𑌮𑍍 |
𑌝𑌷𑌾𑌣𑌾𑌂 𑌮𑌕𑌰𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌸𑍍𑌰𑍋𑌤𑌸𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌜𑌾𑌹𑍍𑌨𑌵𑍀 ||௩௧||

𑌪𑌵𑌤𑌾𑌂 - 𑌗𑌮𑌨𑌸𑌾𑌧𑌨𑌾𑌨𑌾𑌂 𑌪𑌵𑌨𑍋𑌽𑌹𑌮𑍍 | 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌭𑍃𑌤𑌾𑌂 𑌰𑌾𑌮𑍋𑌽𑌹𑌮𑍍 | 𑌅𑌤𑍍𑌰 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌭𑍃𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌃, 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌨𑍁𑌪𑍍𑌰𑌵𑍇𑌶𑍋 𑌵𑌾𑌸𑌃 | 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌕𑍃𑌤𑌕𑍇𑌵𑌨𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌤𑌸𑍍𑌶𑌰𑍀𑌰𑌤𑌯𑌾 𑌯𑌦𑍍𑌵𑌿𑌭𑍂𑌤𑌾𑌦𑌿 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌭𑍃𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌨𑍀𑌯𑌾𑌃 ||

எப்போதும் போகிற வஸ்துக்களுக்குள் காற்றாக இருக்கிறேன். [1] திரேதாயுகத்தில் ராமனாக அவதரித்து, பரசுராமனை

1. இங்கு ராமன் என்பது முன்னையும் பின்னையும் சொன்னவை களைப் போல, பகவானைக் காட்டிலும் வேறான பகவானுடைய விபூதி (ஸொத்து)அன்று."சஸ்த்ரப்ருத"(ஆயுதத்தைத்தரிக்கிறது)என்கிறசொல்லினால்சொல்லப்படுகிற-அறிவில்லாதவஸ்துவோ, அறிவுள்ளஜீவனோ பகவானைக்காட்டிலும் வேறானராமன் என்றுஒருவஸ்துஉலகத்தில் வழங்குவதில்லை. ஆகையாலே ஆயுதத்தைத் தரிப்பது என்பது தான் பகவானுடைய விபூதி. இந்த இடத்தில் பகவானைக் காட்டிலும் வேறானவை களை ஒவ்வொன்றாக எடுத்து,நான் அது என்று சொல்லும்போது, அவ

ஜயித்த-ராவணனைக் கொன்ற-வீறைப் போக்காத ஆயுதங்களையுடையவன் நான். மீன்களுக்கு ராஜாவான மகரம் என்கிற மீனாக இருக்கிறேன். ஆறுகளுக்குள் கங்கையாக இருக்கிறேன். [31]

ஸர்காணாமாதிரந்தஶ்ச மத்யம் சைவாஹமர்ஜுந ।
அத்யாத்மவித்யா வித்யாநாம் வாத: ப்ரவததாமஹம் ॥௩௨॥

ஸ்ருஜ்யந்த இதி ஸர்கா: தேஷாமாதி:-காரணம்-ஸம்ஹர்தா ஸ்ருஜ்யமாநாநாம் ஸர்வேஷாம் ஸ்ரஷ்டா தத்ர தத்ர ஸ ஏவாஹமேவேத்யர்த: । ததா அந்த:-ஸம்ஹர்தா ஸம்ஹார்யாணாம் தத்ர தத்ர ஸம்ஹர்தா அஹமேவ । ததா மத்யம்-பாலநம்-ஸம்பால்யாநாம் பாலயிதா அஹமேவேத்யர்த: । ஜல்பவிதண்டாதி கதாவ்ருத்தாம் தத்த்வநிர்ணயாய ப்ரவ்ருத்தோ வாதோ ய: ஸோऽஹம் ॥ ॥௩௨॥

எப்போதுமுண்டாகிறப் பிராணிகளை உண்டு பண்ணுகிறவர்களும், எப்போதும் அழிக்கப்படுமவர்களை அழிக்கிறவர்களும், எப்போதும் காப்பாற்றப்படுகிறவர்களைக் காப்பாற்றுகிறவர்களும் நான்தான். அறிவுகளுக்குள் ஜீவன், தைவம் இவை முதலானவைகளைப் பற்றின உண்மையான அறிவாக இருக்கிறேன். ஒருவருக்கொருவருடைய பேச்சுக்களுக்குள் உண்மையைக் கண்டுபிடிக்கிறதற்காக ஏற்பட்ட 1 பேச்சாக இருக்கிறேன் [32]

---

னுடைய குணத்தையே எடுத்துச் சொல்லுகை சொல்லிக்கொண்டு வருகிற மாதிரிக்கு ஒத்ததா? என்றால், பதில்,—ஆதித்தியன் முதலான ஜீவன்கள் எப்படிப் பகவானைக் காட்டிலும் வேறோ, அப்படியே சஸ்திரப்ருத்தாயிருப்பது என்கிற குணமும், அதையுடைய பகவானைக் காட்டிலும் வேறுதானே. வேறான வஸ்து ஜீவனாக இருந்தாலென்ன? தன்னிடத்திலேயேயிருப்பதொரு குணமாயிருந்தாலென்ன? ஆகையாலே ஒத்ததாகவே இருக்கிறது. சஸ்த்ரபிருத என்ற சொல்லுக்கு வீணாகப் போகாத ஆயுதமுள்ளவன் என்று பொருள்.

1. இன்னொருவனைத் தோற்கடித்துத் தனக்கக்ஷியை ஸ்தாபிப்பது என்று ஒன்று. தன்கக்ஷியை ஸ்தாபிக்காமல், எதிரியின் கக்ஷியை மாத்திரம் கண்டிப்பது என்று ஒன்று. அவைகளைக்காட்டிலும் சு[illegible]தில் சொன்னது உயர்ந்தது. இதில் கோபம் கிடையாது.

அக்ஷராணாமகாரோ(அ)ஸ்மி த்வந்த்வ: ஸாமாஸிகஸ்ய ச ।
அஹமேவாக்ஷய: காலோ தாதா(அ)ஹம் விச்வதோமுக: ॥௩௩॥

அக்ஷராணாம் மத்யே 'அகாரோ வை ஸர்வா வாக்' இதி ச்ருதிஸித்தஸர்வவர்ணாநாம் ப்ரக்ருதிரகாரோ(அ)ஹம் । ஸாமாஸிக: ஸமாஸஸமூஹ:, தஸ்ய மத்யே த்வந்த்வஸமாஸோ(அ)ஹம் । ஸ ஹ்யுபயபதார்த்தப்ரதாநத்வேநோத்க்ருஷ்ட: । கலாமுஹூர்த்தாதிமயோ(அ)க்ஷய: காலோ(அ)ஹமேவ । ஸர்வஸ்ய ஸ்ரஷ்டா ஹிரண்யகர்ப்பச்சதுர்முகோ(அ)ஹம் ॥ ॥௩௩॥

எழுத்துக்களுக்குள்ளே எல்லா எழுத்துக்களுக்கும் மூலம் என்று சொல்லப்படுகிற "அ" என்கிற எழுத்தாயிருக்கிறேன். ஒரு சொல்லோடு இன்னொரு சொல் சேருவதை ஸமாஸம் என்று சொல்லுகிறது. அவைகளுக்குள் 1 த்வந்த்வம் என்கிற சேர்க்கையாக இருக்கிறேன். விநாடி நாழிகை முதலான அழிவில்லாத காலமென்கிற வஸ்துவும் நான்தான். எல்லாவற்றையும் உண்டு பண்ணுகிற நாலு முகமுடைய பிரும்மாவும் நான்தான். [ 33 ]

ம்ருத்யு: ஸர்வஹரச்சாஹமுத்பவச்ச பவிஷ்யதாம் ।
கீர்த்தி: ஸ்ரீர்வாக்ச நாரீணாம் ஸ்ம்ருதிர்மேதா த்ருதி: க்ஷமா ॥

ஸர்வப்ராணஹரோ ம்ருத்யுச்சாஹம் । உத்பத்ஸ்யமாநாநாமுத்பவாக்யம் கர்மாஹம் । நாரீணாம் ஸ்ரீரஹம் । கீர்த்திச்சாஹம் । வாக்சாஹம் । ஸ்ம்ருதிச்சாஹம் । மேதாசாஹம் । த்ருதிச்சாஹம் । க்ஷமா சாஹம் ॥ ॥௩௪॥

எல்லாருடைய உயிர்களையும் கொண்டுபோகிற மிருத்தியு என்பவனும் நான்தான். உண்டாகிற வஸ்துக்களுடைய உண்டாகிறது என்கிற ஸங்கதியும் நான்தான். ஸ்திரீகளுக்குள் மஹாலக்ஷ்மியாக

---

1. உதாரணம்—ராமலக்ஷ்மணௌ (ராமனும் லக்ஷ்மணனும்) இந்த இரண்டு சொற்களின் சேர்க்கையை த்வந்த்வஸமாஸமென்று சொல்லுகிறது. இந்த சேர்க்கையில் ஒவ்வொரு சொல்லின்பொருளும் முக்கியமானது. ஒன்று மற்றொன்றுக்கு உட்பட்டதன்று. ஆகையாலே இந்த சேர்க்கை உயர்ந்தது.

இருக்கிறேன். கீர்த்தியாக இருக்கிறேன். நல்ல வார்த்தை சொல்லுகிற வாக்காக இருக்கிறேன். நல்ல நினைவாக இருக்கிறேன். நல்ல ஸங்கதிகளை மறக்காமலிருக்கிற நல்ல புத்தியாக இருக்கிறேன். நல்ல காரியங்களில் உறுதியாக இருக்கிறேன். பொறுமையாக இருக்கிறேன். [ 34 ]

𑌬𑍃𑌹𑌤𑍍𑌸𑌾𑌮 𑌤𑌥𑌾 𑌸𑌾𑌮𑍍𑌨𑌾𑌂 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍀 𑌛𑌨𑍍𑌦𑌸𑌾𑌮𑌹𑌮𑍍 ।
𑌮𑌾𑌸𑌾𑌨𑌾𑌂 𑌮𑌾𑌰𑍍𑌗𑌶𑍀𑌰𑍍𑌷𑍋𑌽𑌹𑌮𑍃𑌤𑍂𑌨𑌾𑌂 𑌕𑍁𑌸𑍁𑌮𑌾𑌕𑌰𑌃 ॥

𑌸𑌾𑌮𑍍𑌨𑌾𑌂 𑌬𑍃𑌹𑌤𑍍𑌸𑌾𑌮𑌾𑌹𑌮𑍍 । 𑌛𑌨𑍍𑌦𑌸𑌾𑌂 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍍𑌯𑌹𑌮𑍍 । 𑌕𑍁𑌸𑍁𑌮𑌾𑌕𑌰𑌃- 𑌵𑌸𑌨𑍍𑌤𑌃 ॥ ௩௫ ॥

ஸாமங்களுக்குள்ளே பிருஹத் என்கிற ஸாமமாக இருக்கிறேன். சந்தஸ்ஸுக்களுக்குள் 1 காயத்திரீ என்கிற சந்தஸ்ஸாக இருக்கிறேன். பனிரெண்டு மாதங்களுக்குள் 2 மார்கழி மாதமாயிருக்கிறேன். ருதுக்களுக்குள் வஸந்தருதுவாக இருக்கிறேன். அது எல்லாப் பிராணிகளுக்கும் ஸுகமாயிருக்கும் (35)

1. காயத்திரியின் உயர்த்திக்குக் காரணம்-ஸுபர்ணி என்கிற தன் தாயாரின் ஏவுதலின்பேரில் காயத்திரீ என்கிற சந்தஸ்ஸு தேவலோகம் போய், ஸோமம் என்கிற கொடியைப் பூமிக்குக் கொண்டு வந்தது முதலில் அதைக் கொண்டுவருவதற்குப்போன-ஒரு பாதத்தில் 14-எழுத்துள்ள-ஜகதீ என்கிற சந்தஸ்ஸு அதைக் கொண்டுவர முடியாமல், இரண்டு எழுத்துக்களை இழந்து விட்டுத் திரும்பி வந்தது. ஒரு பாதத்தில் 13-எழுத்துள்ள த்ரிஷ்டுப் சந்தஸ்ஸு போய், ஜகதியைப் போலவே வேலையை முடிக்காமல் இரண்டு எழுத்துக்களை இழந்து விட்டுத் திரும்பி வந்தது. காயத்திரீபோய் ஸோமக் கொடியையும், மற்ற இரண்டுமிழந்த எழுத்துக்களையும் கொண்டு வந்தது. முன்பு அதற்கு ஒருபாதத்தில் நாலுஎழுத்துக்கள் தானிருந்தன இப்போது எட்டெழுத்தாயிற்று. மற்ற இரண்டும், 12–11–எழுத்துள்ளவைகளாக ஆயிற்று, (யஜுர்வேதம்—6—வதுகாண்டம்—முதல் ப்ரச்நம்-6-வது-அநுவாகம்)

2. மார்கழி மாதத்தின் உயர்த்திக்குக் காரணம்—(1) மழை என்கிற குழந்தையைக் கர்ப்பத்தில் வைக்கிறகாலம். அதாவது—இந்த மாதத்தில் மேகங்கள் ஸஞ்சரிப்பதைப் பார்த்து, அடுத்த வர்ஷத்தில் மழை பொழிவதை ஜனங்கள் அறிகிறார்கள். (2) கேசவன் முதலான பனிரெண்டு அவதாரங்களுக்குள் முதலான கேசவனுடைய மாதமாக இருக்கிறது. அப்போது தேவதைகளுக்கு ராத்திரி முடியும் காலம். விரதங்களை ஆரம்பிக்கும் காலம்.

த்யூதம் சலயதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்விநாமஹம் ।
ஜயோ஽ஸ்மி வ்யவஸாயோ஽ஸ்மி ஸத்த்வம் ஸத்த்வவதாமஹம் ॥௩௬॥

சலயதாம் சலாஸ்பதேஷ்வக்ஷாதிலக்ஷணம் த்யூதமஸ்மி । ஜேத்ரூணாம் ஜயோ஽ஸ்மி । வ்யவஸாயிநாம் வ்யவஸாயோ஽ஸ்மி । ஸத்த்வவதாம் ஸத்த்வம்-மஹாமநஸ்த்வம் ॥ [௩௬॥

மோசம்பண்ணுகிறவர்களுடைய வேலைகளுக்குள் சொக்கட்டான் ஆட்டமாக இருக்கிறேன் தேஜஸ்ஸை யுடையவர்களுடைய தேஜஸ்ஸு என்கிற குணமாயிருக்கிறேன். தேஜஸ்ஸு என்பது சத்துருக்களை அவமானம் பண்ணும்படியான ஸாமர்த்தியம். ஜயிக்கிறவர்களுடைய ஜயம் என்கிற குணமாயிருக்கிறேன் நல்ல காரியத்தைச் செய்யவேணுமென்று தீர்மானிக்கிறவர்களுடைய தீர்மானமாக இருக்கிறேன். பெரிய மனதுள்ளவர்களுடைய பெரிய மனதாக இருக்கை என்கிற குணமாக இருக்கிறேன். (36)

வ்ருஷ்ணீநாம் வாஸுதேவோ஽ஸ்மி பாண்டவாநாம் தநஞ்ஜய:।
முநீநாமப்யஹம் வ்யாஸ: கவீநாமுஶநா கவி: ॥ ॥௩௭॥

வஸுதேவஸூநுத்வம் விபூதி:, [illegible]ஸாவாதேவ | பாண்டவாநாம் தநஞ்ஜய:-த்வமேவாஹம்| முநய: - மநநேநாத்மயாதாத்ம்யதர்ஶிந:, தேஷாம் வ்யாஸோ஽ஹம்| கவய:-விபஶ்சித: ॥ [௩௭॥

1வ்ருஷ்ணிகளுக்குள் வஸுதேவர் பிள்ளையாக இருக்கிறேன் அதாவது—வஸுதேவர் வீட்டில் நாலு கைகளுடன அவதாரம் செய்தது முதல் மனிதர்களுக்குள் காணக்கூடாத குணங்களையும்,

---

1. 31-வது சுலோகத்தில் "சஸ்த்ரப்ருதாம" என்கிற சொல்லைப்பற்றி எழுதியிருக்கும் குறிப்பைப் பார்க்க. வஸுதேவர் பிள்ளையாயிருப்பது இங்கே விபூதி. இது அர்ஜுநனுக்குத தெரியும். ஆகையால் அதைச் சொன்னது உதாரணமாக. எப்படி வஸுதேவர் வீட்டில பிறந்து பகவான் செயததெல்லாம உணமையோ, அப்படியே இங்கே சொல்லுவதெல்லாம் உண்மையென்று அர்ஜுநன் எண்ணவேணுமென்பதற்காகச சொன்னது.

திருமேனியையும், சக்தியையும் உடையவனாய் எல்லாருக்கும் தெரியும்படி இருக்கை என்பது என்னுடைய விபூதி. பாண்டுமஹாராஜாவின் பிள்ளைகளுக்குள் (உங்களுக்குள்) அர்ஜுநனாக (நீயாக) இருக்கிறேன். யோசித்துப்பார்த்து உண்மையைக் கண்டு பிடிக்கிறவர்களுக்குள் வியாஸராக இருக்கிறேன். நீதி சாஸ்திரம் தெரிந்தவர்களுக்குள் சுக்கிராசாரியாராக இருக்கிறேன். (37)

தண்டோ தமயதாமஸ்மி நீதிரஸ்மி ஜிகீஷதாம் | மௌநம்
சைவாஸ்மி குஹ்யாநாம் ஜ்ஞாநம் ஜ்ஞாநவதாமஹம் ||

நியமாதிக்ரமணே தண்டம் குர்வதாம் தண்டோऽஹம் | விஜிகீஷூணாம் ஜயோபாயபூதா நீதிரஸ்மி | குஹ்யாநாம் ஸம்பந்திஷு கோபநேஷு மௌநமஸ்மி | ஜ்ஞாநவதாம் ஜ்ஞாநம் சாஹம் || ||௩௮||

தப்புப்பண்ணுகிறவர்களைத் தண்டிக்கிறவர்களுடைய தண்டிக்கிறது என்கிற குணமாக இருக்கிறேன். சத்துருக்களை ஜயிக்கிறதற்கு உதவியான நியாயமாக இருக்கிறேன். மறைக்கவேண்டிய ஸங்கதிகளை மறைக்கிற வேலைகளுக்குள் பேசாமலிருப்பதாக இருக்கிறேன். அறிவுள்ளவர்களுடைய உயர்ந்த ஸுகத்தைக் கொடுக்கக் கூடிய அறிவாக இருக்கிறேன். [38]

யச்சாபி ஸர்வபூதாநாம் பீஜம் ததஹமர்ஜுந |
ந ததஸ்தி விநா யத்ஸ்யாந்மயா பூதம் சராசரம் ||௩௯||

ஸர்வபூதாநாம் ஸர்வாவஸ்தாவஸ்திதாநாம் தத்ததவஸ்தாபீஜபூதம் யச்சேதநமசேதநம் வா தததஹமேவ | மயா விநா யத்ஸ்யாத், ந ததஸ்தி | 'ஸர்வம் ஸமாப்நோஷி ததோऽஸி ஸர்வ:' இதிவக்ஷ்யமாணத்வாத் 'ந ததஸ்தி விநா யத்ஸ்யாந்மயா பூதம் சராசர' மிதி த்ருஷ்டாந்தத்வேந ஸர்வாவஸ்தாநம் விவக்ஷிதம் | ஸர்வம் வஸ்துஜாதம் ஸர்வாவஸ்தம் மதாத்மகமித்யர்த: || கேந ஸர்வஸ்ய ஸாமாநாதிகரண்ய நிர்தேசஸ்ய ஹேதுர்வ்யாப்திரேவ இதி த்ருஷ்டவ்யம் || ||௩௯||

உலகத்தில் நாள்தோறும் உண்டாகிற எல்லாவஸ்துக்களுக்கும் ஜனங்களாலே அறியப்பட்டதும், அறியப்படாததுமான காரணமாயிருக்கிறேன். ஆத்மாவாயிருந்து என்றால் ஏற்படாத வஸ்து உலகத்தில் கிடையாது. ஆரம்பமான 20-வது சுலோகத்தில் எல்லாப் பிராணிகளுடைய ஹிருதயத்தில் இருக்கிறேனென்று சொன்னபடியால், இந்த சுலோகத்துக்கு இப்படித்தான் பொருள் கொள்ளவேணும். உலகத்தில் என்னைத்தவிர வேறுபொருளில்லை; நான் ஒன்றுதான் பொருள் என்று அர்த்தம் சொல்லக்கூடாது அது இந்த இடத்துக்கு ஒட்டாது. "நான்தான் உலகத்திலுள்ள எல்லா வஸ்துக்களாக இருக்கிறேன்" என்று இதுவரையில் சொன்னது நான் அவைகளுக்கு ஆத்மாவாக இருப்பதைப் பற்றி-என்று இந்த சுலோகத்தினால் நன்றாகக் காண்பிக்கிறார். [39]

நாந்தோऽஸ்தி மம திவ்யாநாம் விபூதீநாம் பரந்தப ।
ஏஷ தூத்தேஶத: ப்ரோக்தோ விபூதேர்விஸ்தரோ மயா ॥

மம திவ்யாநாம்—கல்யாணீநாம் விபூதீநாமந்தோ நாஸ்தி । ஏஷ து விபூதேர்விஸ்தரோ மயா [illegible] ஸங்க்ஷேபத: ப்ரோக்த: ॥ ॥௪0॥

அவ—பகவானுடைய விபூதிகளை முழுவதும் சொல்லிமுடியாது என்று 19-வது சுலோகத்தில் சொன்னதையே நினைப்பூட்டுகிறார்—

என்னுடைய நல்லதான ஸொத்துக்களுக்கு கணக்குக் கிடையாது. அநேகவஸ்துக்களைச்சொன்னபடியால்,விரிவாகவும் சொன்னேன். வகையாருக்கு ஒன்றைச் சொன்னபடியால், சுருக்கமாகவும் சொன்னேன். [40]

யத்யத்விபூதிமத்ஸத்த்வம் ஶ்ரீமதூர்ஜிதமேவ வா ।
தத்ததேவாவகச்ச த்வம் மம தேஜோம்ஶஸம்பவம் ॥ ॥௪௧॥

யத்யத்விபூதிமத்-ஐஶ்வர்யவத்ஸத்த்வம் பூதஜாதம், ஶ்ரீமத்-காந்திமத், தநதாந்யஸம்ருத்தம் வா. ஊர்ஜிதம்-கல்யாணாரம்பேஷு உத்யுக்தம் । தத்ததேவ மம தேஜோம்ஶஸம்பவமித்யவக

ஹ | தேஜ:-பராபிபவநஸாமர்த்யம் | ஶாஸிதும்ஸமர்த்தநியமநஸாமர்த்ய ஸம்பவமிதி த்ருஷ்ட: || ||௪௧||

அவ—முக்கியமான விபூதிகளைச் சொல்லுகிறேனென்று ஆரம்பித்து, அநேக விபூதிகளைச் சொன்னார். இன்னும் சொல்லப்படாத முக்கியமான விபூதிகள் எவ்வளவோ இருக்கின்றன. அவைகளையும் சேர்த்துக்கொள்ள வேணுமென்ற கருத்துடன் விபூதியின் உபதேசத்தை முடிக்கிறார்—

உலகத்தில் எந்தெந்த பிராணிகள் அநேக வஸ்துக்களை ஆளுகின்றனவோ; அழகுள்ளவையாயிருக்கின்றனவோ; பணம், நெல் முதலான எல்லாப் பண்டங்களாலும் நிறைந்திருக்கின்றனவோ; சேஷ்மகாரியங்களை ஆரம்பிப்பதற்கு உத்ஸாஹமுள்ளனவோ; அவைகளெல்லாம் லோகத்தை அடக்கி ஆளுகிற—ஒருவராலும் 1 நினைக்கமுடியாத சக்தியுள்ள என்னுடைய கொஞ்ச சக்தியினால் உண்டானவைகளாக அறி. (41)

அதவா பஹுநைதேந கிம் ஜ்ஞாதேந தவார்ஜுந |
விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்நமேகாம்ஶேந ஸ்திதோ ஜகத் ||௪௨||

இதி ஶ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகஶாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே
விபூதிவிஸ்தரயோகோ நாம தஶமோऽத்யாய: ||

---

பஹுநைதேந நாதிஸாரேண ஜ்ஞாதேந கிம் ப்ரயோஜநம் | இதம்—சிதசிதாத்மகம் க்ருத்ஸ்நம் ஜகத் கார்யாவஸ்தம் காரணாவஸ்தம் ஸ்தூலம் ஸூக்ஷ்மம் ச ஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்திபேதேந,

1. எந்த வேலையையும் செய்யப் பகவானுக்குச் சக்தி இருக்கிறது. அவனுடைய சக்திக்கு ஒரு இடத்திலும் தடங்கலில்லை. அதுஒருவராலும் செய்ய முடியாத வேலைகளைச் செய்யக்கூடியது. அதில் எத்தனையோ கோடியில் ஒரு பங்கினால் சுலோகத்தில் சொன்ன ஸங்கதிகள் உண்டாகின்றன. மலையைப் புரட்டும்படியான கடுங்காற்றுக்கு ஒரு செத்தையை நகத்துவது ஒரு வேலையா, அப்படியே பகவானுக்கும்.

ப்ரவ்ருத்திபேதச்ச யதா ஸங்கல்பம் நாதிவர்த்ததே. ததா மம ஸம்பிண்டிதாயுதாயுதாம்சேந விஷ்டப்யாஹமவஸ்தித: । யதோக்தம் பகவதா பராசரேண "யஸ்யாயுதாயுதாம்சாம்சே விச்வசக்திரியம் ஸ்திதா" இதி ॥ ॥௪௨॥

இதி ஸ்ரீபகவத்ராமாநுஜவிரசிதே ஸ்ரீமத்கீதாபாஷ்யே தசமோऽத்யாய: ॥

1 எதற்கு அதிகமாகச் சொல்லவேணும். இந்த உலகம் அறிவுள்ளதென்றும், அறிவில்லாததென்றும், உண்டானதென்றும், உண்டாக்குகிற தென்றும், பெரியது (ஸ்தூலம்) என்றும், சின்னது (ஸூக்ஷ்மம்) என்றும் இரண்டு வகையாயிருக்கிறது. என்னுடைய சக்தியைப் பதினாயிரம் பங்குகளாகப்பண்ணி, அவைகளில் ஒரு பங்கைப் பதினாயிரம் பங்குகளாகப்பண்ணி, அவைகளில் ஒரு பங்காலே, எல்லா உலகத்திற்கு 2 ஸ்வரூபம் கிடைப்பதும், அதின் இருப்பும், அவைகளின் வேலைகளும் என்னுடைய எண்ணத்தை மீறாதபடி அவைகளை என் வசப்படுத்திக்கொண்டு இருக்கிறேன்.3 [ 42 ]

1. முக்கியமான விபூதிகளைச் சொல்லி முடித்தாய் விட்டது இந்த சுலோகத்தாலே முக்கியமானதோ, முக்கியமில்லாததோ, எல்லா விபூதியும் சுருக்கமாகச் சொல்லப்படுகிறது.

2. அழிவுள்ள வஸ்துக்களுக்கு ஸ்வரூபம் கிடைப்பதாவது-உண்டாவது. அழிவில்லாத வஸ்துக்களுக்கு அழிவில்லாமை. அதுவும் பகவானுடைய எண்ணத்தாலே தான் ஏற்படுகிறது. அந்த எண்ணத்துக்கு ஒருநாளும் மாறுதல் கிடையாது.

3. இப்படிப்பட்ட பகவான் தன்னை நினைப்பதற்கு வேண்டிய பலவித ஒத்தாசைகளைச்செய்து கொடுத்து, என்னை எப்போது நினைக்கப்போகிறானென்று, பெரிய பணக்காரன் வீட்டில் மிகவும் ஏழையானவன் காத்துக்கொண்டிருப்பவன்போல், மிகவும்இளப்பமான நம்முடைய உடம்புக்குள் வந்திருப்பது முதலான வேலைகளைச் செய்து, காத்துக் கொண்டிருக்கிறான். இந்த ஸங்கதியை படித்தவர்களோ, படிக்காதவர்களோ பெரும்பாலும் துளிக்கூட அறியவில்லை என்றே சொல்லலாம்.

ஸ்ரீமதே பகவதே பாஷ்யகாராய மஹாதேசிகாய நம:

பத்தாவது அத்தியாயம் முற்றிற்று.

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

அவ—இப்படிப் பகவானிடத்தில் பக்தி உண்டாவதற்கும், அது வளருகிறதற்கும்—மற்ற ஒருவருக்குமில்லாத உயர்ந்த நல்ல குணங்கள் கூட்டங் கூட்டங்களாய் பகவானுக்கு ஸ்வபாவமாயிருக்கின்றன என்றும்; அவன் அறிவுள்ளது, அறிவில்லாதது என்று இரண்டு வகையான எல்லாவற்றிற்கும் ஆத்மா; எல்லா உலகமும் அவனுக்கு உடம்பு; ஆதலால் அவைகளின் ஸ்வரூபமும்,

இருப்பும், வேலைகளும் அவனதீனமென்றும்—சொல்லப்பட்டது. இந்த ஸங்கதிகளை அர்ஜுநன் பகவானிடத்திலிருந்து கேட்டு, இது உண்மைதான், ஸந்தேஹமில்லையென்று நம்பி, பகவானை கீழ்ச்சொன்ன ஸங்கதிகளுடன் கண்ணால் பார்க்க வேணுமென்று ஆசை உண்டாகி, சொல்லுகிறான் —

உடம்பே ஆத்மா என்று தப்பாக நினைத்து மயங்கினவென்னை அனுக்கிரஹிக்கிறது என்கிற ஒரே பிரயோஜனத்திற்காகத் தான், 1 மிகுந்த தயையினாலே, மிகவும் ரஹஸ்யமான, (ஒருவனாலும் அறியமுடியாத) ஆத்மாவைப் பற்றின வார்த்தைகளை 2-வது அத்தியாயம் 11-வது சுலோகம் முதல் 6-வது அத்தியாயம் 46-வது சுலோகம் வரையில் சொன்னீர். அதனால் எனக்கு இருந்த ஆத்மாவைப் பற்றின மயக்கங்கள் எல்லாம் இருந்த விடம் தெரியாமல் போய் விட்டன. [ 1 ]

[illegible]

भवाप्ययौ हि भूतानां श्रुतौ विस्तरशो मया।
त्वत्तः कमलपत्राक्ष माहात्म्यमपि चाव्ययम् ॥ २॥

[illegible] नां सर्वेषां भूतानां त्वत्तः परमात्मनो भवाप्ययौ-उत्पत्तिप्रलयौ विस्तरशो मया श्रुतौ हि। कमलपत्राक्ष! तवाव्ययं-नित्यं सर्वचेतनाचेतनवस्तुशेषित्वं ज्ञानबलादिकल्याणगुणगणैस्सर्वपरत्वं सर्वाधारत्वं चिन्तितनिमिषितादिसर्वप्रवृत्तिषु तस्यैव प्रवर्तयितृत्वाद्यपरिमितं माहात्म्यं च श्रुतम्। [illegible] ॥ २॥

அவ—அப்படி மயக்கம் தெளிந்தபோது—
உம்மிடத்தில் ஆத்ம விஷயங்களைக் கேட்டது போல, 7-வது அத்தியாயம் முதல் 10-வது அத்தியாயம் வரையில்—உம்மைத் தவிரஎல்லா உலகங்களும் பரமாத்மாவான உம்மால் உண்டாகி,

விஸ்தாரமாகக் கேட்டேன். 1 தாமரை யிதழ்போன்ற கண்களை உடையவரே! எல்லா உலகமும் எப்பொழுதும் உம்முடைய உபயோகத்துக்காகவே இருக்கிறது. ஞானம், பலம் முதலான நல்ல குணங்களின் கூட்டங்களாலே நீர் தான் மிகவும் உயர்ந்தவர். எல்லா உலகத்தையும் தூக்குகிறீர். உம்மால் தான் எல்லா உலகமும் ஒரு ஸங்கதியை நினைப்பது, இமைக் கொட்டுவது முதலான எல்லா வேலைகளையும் செய்கிறது. இது முதலான 2 எப்பொழுது மிருக்கிற அளவில்லாத உம்முடைய பெருமைகளையும் கேட்டேன். இவைகளைக் கேட்டேனே. [2]

ஏவமேதத்யதாத்த த்வமாத்மாநம் பரமேஶ்வர |
த்ரஷ்டுமிச்சாமி தே ரூபமைஶ்வரம் புருஷோத்தம ||

ஹே பரமேஶ்வர! ஏவமேததிதி த்வயோக்தம், யதா த்வமாத்மாநம் ப்ரவீஷி | புருஷோத்தம! ஆஶ்ரிதவாத்ஸல்யஜலதே! தவைஶ்வரம் = அஸாதாரணம் ஸர்வஸ்ய ப்ரஶாஸித்ருத்வே பாலயித்ருத்வே ஸ்ரஷ்ட்ருத்வே ஸம்ஹர்த்ருத்வே பர்த்ருத்வே கல்யாணகுணாகரத்வே பரதரத்வே ஸகலேதரவிஸஜாதீயத்வே அவஸ்திதம் ரூபம் த்ரஷ்டும் ஸாக்ஷாத்கர்தும் இச்சாமி || ||௩||

---

(முன் பக்கத்தின் குறிப்பு.) 1. அர்ஜுனனுக்குச் சண்டையில் உத்ஸாஹத்தை உண்டுபண்ணுவதற்காக மாத்திரம் சொன்னதல்ல என்று கருத்து.

1. இதனால் தாமரைக்கண்ணோடு கூடிய அப்பிராகிருதமான திருமேனி கிருஷ்ணாவதாரத்திலும் இருந்ததென்று தெளிவாய் காணப்பட்டதாக ஏற்படுகிறது.

2. சுலோகத்தில் பெருமையை 'அவ்யயம்' என்றுசொல்லியிருக்கிறது. அதற்கு "குறைவில்லாத" என்று பொருள். காலத்தினாலும், விஷயத்தினாலும், கணக்காலும், உயர்த்தியாலும் அந்தப்பெருமைக்கு அளவில்லை. அதாவது—பகவானுடைய பெருமை எப்போதுமிருக்கிறது. அறிவு, அழகு, சொத்து முதலிய எல்லா விஷயங்களிலும் பெருமையுள்ளவன். இத்தனை விஷயங்களில்தான் பெருமையிருக்கிறதென்று விஷயங்களுக்குக் கணக்கில்லை. பெருமைக்கு அளவுமில்லை—என்று கருத்து.

எல்லா லோகத்துக்கும் பெரிய ராஜாவே ! உம்மைப்பற்றி எப்படிச் சொன்னீரோ, அது ஸரிதான் என்று எனக்கு உறுதியாய்த் தோன்றுகிறது. தன்னை அடைந்தவர்களிடத்தில் குற்றத்தை லக்ஷியம் பண்ணாமல், அளவில்லாமல் பிரீதி பண்ணுகிறவரே ! கீழ்ச் சொன்ன உமக்கு மாத்திரமுள்ள எல்லா ஸங்கதிகளுடன் கூடிய உம்முடைய உடம்பைப் பார்க்கவேணுமென்று ஆசைப்படுகிறேன். அதாவது—கீழ்ச்சொன்ன எல்லா ஸங்கதிகளையும் 1 உடம்பால் நீர்நடத்தி2காட்டவேணும்—என்று ஆசைப்

1. உதாரணம்—பந்தயக்குதிரையில் ஏறி ஆச்சரியமாய் ஸவாரிபண்ணுவேன் என்று ராமன் என்பவனோடு கிருஷ்ணன் என்பவன் சொன்னால், ராமன்—அப்படி நீங்கள் ஸவாரி பண்ணுவதைப் பார்க்க ஆசையாயிருக்கிறது; அப்படிப் பண்ணிக் காண்பிக்கவேணும் என்று—கிருஷ்ணனிடம் சொல்லுவதுபோல இருக்கிறது இங்கே அர்ஜுனன் கேட்பது.

2. இவைகளை உடம்பால் காட்டுவதாவது--உடம்பைப்பார்க்கும்போது தோன்றுகிற குணங்கள்,உடம்பினுடைய இருப்பு,செய்யும் வேலைகள் இவைகளால் கீழ்ச்சொன்ன ஸங்கதிகள் பகவானுக்கு இருக்கின்றன என்று தோன்றப் பண்ணுகை. (1) உடம்பைக் காட்டினமாத்திரத்திலேயே கெட்ட எண்ணத்தைப் போக்கி நல்லவேலையை செய்யும் படி செய்கை. (2) பகவான் தன் திருமேனியைக் காண்பித்த மாத்திரத்தால், ஸத்வகுணத்தை வளர்த்து, அதற்குத் தகுந்தவேலைகளைச் செய்விப்பது.(3) தன்தொப்புளிலிருந்து பிரும்மாவையும்,முகம்முதலான அவயவங்களிலிருந்து பிராமணன் முதலான ஜாதிகளையும் உண்டுபண்ணுவதைக்காட்டுவது. (4)அழிப்பதை—சண்டைக்கு வந்திருக்கும் சிலராஜாக்களைவாயில் போட்டுக் கடிப்பதாகக் காண்பிப்பது. (5)தாங்குகிறதை—தன் திருமேனியில்ஒருமூலையில்எல்லாஉலகமுமிருப்பதாகக்காண்பிப்பது.(6) உயர்ந்த நல்ல குணங்களுக்கு இருப்பிடமாயிருப்பதை ராமன் முதலான அவதாரங்களில் லீலையைக் காணாதபோது அழுதது முதலான வேலைகளால் குணங்களை மறைத்தது போலில்லாமல் குணங்களை உள்ளபடி காட்டுகை. (7) பிரும்மாமுதலான எல்லா லோகங்களும் தன்திருமேனியில் ஒரு மூலையில் அடங்கி இருப்பதாகக் காட்டுவதாலே,தான் எல்லாரைக் காட்டிலும் எல்லா விதத்தாலும் மிகவும் உயர்ந்தவனென்று தோன்றப்பண்ணுவது.(8) இது கீழ்ச்சொன்ன எல்லாவற்றையும் (ஏழையும்) சேர்த்துச்சொன்னது. அல்லது அவைகளால் ஏற்பட்டது. அல்லது ஈலோகத்திலுள்ள "பரமேசுவர, புருஷோத்தம" என்கிற சொற்களின் கருத்தாகவுமாம்.

படுகிறேன். ஸங்கதிகளாவன:—(1) எல்லா லோகத்தையும் அடக்கி ஆளுவது; (2) காப்பாற்றுவது; (3) உண்டுபண்ணுவது; (4) அழிப்பது; (5) தூக்குவது; (6) உயர்ந்த குணங்களுடன் கூடியிருப்பது; (7) எல்லாரைக் காட்டிலும் எல்லாவிதத்தாலும் மிகவும் உயர்ந்தவராக இருப்பது; (8) இந்த எல்லா ஸங்கதிகளாலும் பிரும்மா முதலான எல்லா வஸ்துக்களைக் காட்டிலும் வேறு ஜாதியாக இருப்பது 1. [3]

मन्यसे यदि तच्छक्यं मया द्रष्टुमिति प्रभो ।
योगेश्वर ततो मे त्वं दर्शयात्मानमव्ययम् ॥ ४ ॥

प्रभो — सर्वस्य स्रष्टः, सर्वस्य प्रशासितः, सर्वस्याधारभूतं त्वद्रूपं मया द्रष्टुं शक्यमिति यदि मन्यसे । ततो योगेश्वर ! योगः ज्ञानादिकल्याणगुणयोगः, "पश्य मे योगमैश्वरम्" इति हि वक्ष्यते । त्वद्व्यतिरिक्तस्य कस्याप्यसंभावितानां ज्ञानबलैश्वर्यवीर्यशक्तितेजसां निधे ! आत्मानं — सर्वं मे दर्शय । अव्ययमिति क्रियाविशेषणम्, त्वां सकलं मे दर्शयेत्यर्थः ॥ ४ ॥

2 ஹே பிரபோ! உம்மைத் தவிர மற்றொருவருக்கு ஸம்பவிக்கலாமோ என்று நினைக்கவும் முடியாத—ஞானம், பலம் முதலான மிகவுமுயர்ந்த—நல்ல குணங்களுக்கு இருப்பிடமானவரே! கீழ்ச் சொன்ன எல்லா ஸங்கதிகளுடன் கூடிய தேவரீருடைய திருமேனியை என்னால் பார்க்கமுடியுமென்று தேவரீர் திருவுள்ளத்தில் பட்டால், அதைத் தேவரீருடைய ஸங்கதிகளில் துளிக்கூட விடாமல் காண்பிக்கவேணும். [4]

---

1. இந்த மூன்று சுலோகங்களாலே மூன்று ஸங்கதிகள் காட்டப்படுகின்றன—(1) பகவான் செய்த உபகாரத்தை அறிந்தது. (2) அவன் சொன்ன வார்த்தையை நம்பினது. (3) அவனிடத்தில் பக்தியுள்ளவனாக இருந்தது—என்று.

2. இந்தச் சொல்லாலே பகவான் ஒன்றை எண்ணினால், அதை அவன் கட்டாயம் செய்து முடிப்பனென்று காட்டப்படுகிறது.

अव — एवं कौतूहलान्वितेन हर्षोत्फुल्लनयनेन पार्थेन प्रार्थितो भगवानुवाच —

श्रीभगवानुवाच —

पश्य मे पार्थ रूपाणि शतशोऽथ सहस्रशः ।
नानाविधानि दिव्यानि नानावर्णाकृतीनि च ॥ ॥௫॥

पश्य मे सर्वाश्रयाणि रूपाणि । अथ शतशः सहस्रशः नानाविधानि — नानाप्रकाराणि, दिव्यानि — अप्राकृतानि, नानावर्णाकृतीनि — शुक्लकृष्णादिनानावर्णानि नानाकाराणि च पश्य ॥ ॥௫॥

அவ—இந்தமாதிரி மிகுந்த ஆசையுடன், ஸந்தோஷத்தினால் தொண்டை தழதழுத்து, அர்ஜுனன் வணங்கிக்கேட்டுக்கொள்ள பகவான் சொல்லுகிறார்—

எல்லா உலகங்களுக்குமிருப்பிடமான என்னுடைய உருவங்களைப்பார். பிரகிருதியினால் செய்யப்படாத—அநேக விதங்களான—வெளுப்பு கருப்பு முதலான பல வர்ணங்களோடு கூடிய—அநேக காலங்களில் தேவதையாகவும், மனிதனாகவும், மிருகங்களாகவும் நான் செய்த—அவதார ரூபங்களை நூற்றுக்கணக்காகவும், ஆயிரக்கணக்காகவும் காண்பிக்கிறேன். பார். [5]

पश्यादित्यान्वसून्रुद्रानश्विनौ मरुतस्तथा ।
बहून्यदृष्टपूर्वाणि पश्याश्चर्याणि भारत ॥

मय्येकस्मिन्नेव पश्य आदित्यान्, वसून्, रुद्रान्, अश्विनौ, मरुतः, तथा उपलक्षणमेतत् । इह जगति प्रत्यक्षदृष्टानि शास्त्रदृष्टानि च यानि वस्तूनि तानि सर्वाण्यन्यान्यपि सर्वेषु लोकेषु सर्वेषु शास्त्रेष्वदृष्टपूर्वाणि बहून्याश्चर्याणि पश्य ॥ ॥௬॥

அவைகளில் என்னுடைய ஒரு உடம்பில் பன்னிரண்டு ஆதித்தியர்களையும், எட்டு வஸுக்களையும், பதினொரு ருத்திரர்களையும், இரண்டு அச்வினீ தேவதைகளையும், நாற்பத்தொன்பது மருத்துக்களையும் பார், பிரதானமான சிலர்களை மட்டும் சொன்னேன். இன்னும் இந்த உலகத்தில் கண்ணால் எவைகளைப் பார்க்கிறாயோ, சாஸ்திரத்தினால் எவைகளைக் கேட்கிறாயோ, அவைகள் எல்லாவற்றையும், எந்த லோகங்களிலும் முன்பு காணப்படாதவைகளும், எந்த சாஸ்திரங்களிலும் முன்பு கேட்கப்படாதவைகளுமான அநேக ஆச்சரியங்களையும் பார். 1 [ 6 ]

𑌇𑌹𑍈𑌕𑌸𑍍𑌥𑌂 𑌜𑌗𑌤𑍍𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌾𑌦𑍍𑌯 𑌸𑌚𑌰𑌾𑌚𑌰𑌮𑍍 ।
𑌮𑌮 𑌦𑍇𑌹𑍇 𑌗𑍁𑌡𑌾𑌕𑍇𑌶 𑌯𑌚𑍍𑌚𑌾𑌨𑍍𑌯𑌦𑍍𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌸𑌿 ॥ ௭ ॥

𑌇𑌹-𑌮𑌮 𑌏𑌕𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑍇𑌹𑍇 𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌏𑌕𑌸𑍍𑌥𑌮𑍍-𑌏𑌕𑌦𑍇𑌶𑌸𑍍𑌥𑌂 𑌸𑌚𑌰𑌾𑌚𑌰𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂 𑌜𑌗𑌤𑍍 𑌪𑌶𑍍𑌯 । 𑌯𑌚𑍍𑌚𑌾𑌨𑍍𑌯𑌦𑍍𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌸𑌿, 𑌤𑌦𑌪𑍍𑌯𑍇𑌕𑌦𑍇𑌹𑍈𑌕𑌦𑍇𑌶𑌵𑌰𑍍𑌤𑌿 𑌪𑌶𑍍𑌯 ॥ ௭ ॥

இந்த என்னுடைய உடம்பில், அதிலும் ஒரு மூலையில், ஜங்கமம் (அசைகிறது), ஸ்தாவரம் (அசையாதது) என்று இருவகையான எல்லா உலகங்களையும் பார். இன்னும் உனக்கு எவைகளைப் பார்க்க வேணுமென்று ஆசையிருக்கிறதோ, அவைகளையும் நாளைக்கு உனக்கு வரப்போகிற ஜயம் முதலானவைகளையும் பார்.

𑌨 𑌤𑍁 𑌮𑌾𑌂 𑌶𑌕𑍍𑌯𑌸𑍇 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌮𑌨𑍇𑌨𑍈𑌵 𑌸𑍍𑌵𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾 ।
𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌦𑌦𑌾𑌮𑌿 𑌤𑍇 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌯𑍋𑌗𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ॥ ௮ ॥

𑌅𑌹𑌂 𑌮𑌮 𑌦𑍇𑌹𑍈𑌕𑌦𑍇𑌶𑍇 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌜𑌗𑌦𑍍𑌦𑌰𑍍𑌶𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 । 𑌤𑍍𑌵𑌂 𑌤𑍁 𑌅𑌨𑍇𑌨-𑌨𑌿𑌯𑌤𑌪𑌰𑌿𑌮𑌿𑌤𑌵𑌸𑍍𑌤𑍁𑌗𑍍𑌰𑌾𑌹𑌿𑌣𑌾 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑍇𑌨 𑌸𑍍𑌵𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾 𑌮𑌾𑌂-𑌤𑌥𑌾𑌭𑍂𑌤𑌂 𑌸𑌕𑌲𑍇𑌤𑌰𑌵𑌿𑌸𑌜𑌾𑌤𑍀𑌯𑌮𑌪𑌰𑌿𑌮𑍇𑌯𑌂 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂 𑌨 𑌶𑌕𑍍𑌯𑌸𑍇 । 𑌤𑌵 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑍍-𑌅𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌂 𑌮𑌦𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌸𑌾𑌧𑌨𑌂 𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑍍𑌦𑌦𑌾𑌮𑌿 । 𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌯𑍋𑌗𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌮𑍍-𑌮𑌦𑌸𑌾𑌧𑌾𑌰𑌣𑌂 𑌯𑍋𑌗𑌂 𑌪𑌶𑍍𑌯 । 𑌮𑌮𑌾𑌨𑌨𑍍𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑌿𑌯𑍋𑌗𑌮𑌨𑌨𑍍𑌤𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ௮ ॥

---

1. அநேக விதமான உடம்புகளைக் காட்டுவதாகச் சொன்னபோதிலும், அவைகள் எல்லாவற்றையும் ஒரே உடம்பில் காட்டுகிறார்.

நான் என்னுடைய இந்த உடம்பின் ஒரு மூலையில் எல்லா உலகங்களையும் காண்பிக்கப் போகிறேன். அவைகளை இப்போதிருக்கிற உன் கண்ணால் பார்க்கமுடியாது. இந்தக் கண்ணுக்கு அவ்வளவு சக்தி கிடையாது. அதற்கு இன்ன ஜாதியைத்தான் பார்க்கலாம் என்று கட்டுப்பாடும், பார்க்கக்கூடியவைகளிலும் இவ்வளவைத்தான் பார்க்கலாம் என்று கணக்கும் உண்டு. இப்போது நான் காண்பிக்கப்போகிற உடம்போ கணக்கில்லாத எல்லா உலகங்களோடும் கூடியிருக்கிறது. உலகத்திலிருக்கிற எல்லா வஸ்துக்களைக் காட்டிலும் வேறுமாதிரியாயிருக்கிறது. அதற்காக, என்னைப் பார்க்கத் தகுந்ததாயும், சுத்த ஸத்வம் என்கிற திரவியத்தினால் செய்யப்பட்டதுமான கண்ணைக் கொடுக்கிறேன். அதனால் எனக்கு மாத்திரமுள்ள எல்லா குணங்களையும், எல்லாவுலகங்களையும் நான் ஆளுவதையும் பார். [8]

𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚—

𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌤𑌤𑍋 𑌰𑌾𑌜𑌨𑍍 𑌮𑌹𑌾𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰𑍋 𑌹𑌰𑌿𑌃 ।
𑌦𑌰𑍍𑌶𑌯𑌾𑌮𑌾𑌸 𑌪𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌪𑌰𑌮𑌂 𑌰𑍂𑌪𑌮𑌐𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ॥ ௯ ॥

𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌸𑌾𑌰𑌥𑍍𑌯𑍇𑌽𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥𑌮𑌾𑌤𑍁𑌲𑌜𑍋 𑌮𑌹𑌾𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰𑍋 𑌹𑌰𑌿𑌃—𑌮𑌹𑌾𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌯𑍋𑌗𑌾𑌨𑌾𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌃 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌸𑌹𑌸𑍍𑌰𑌿𑌤𑍋 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃, 𑌪𑌰𑌮𑌐𑌶𑍍𑌵𑌰𑌂—𑌸𑍍𑌵𑌾𑌸𑌾𑌧𑌾𑌰𑌣𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥𑌾𑌯—𑌪𑌿𑌤𑍃𑌷𑍍𑌵𑌸𑍁𑌃 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌯 𑌦𑌰𑍍𑌶𑌯𑌾𑌮𑌾𑌸, 𑌤𑌦𑌿𑌦𑌂 𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑌨𑌿𑌖𑌿𑌲𑌜𑌗𑌦𑌾𑌶𑍍𑌰𑌯𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌶𑌾𑌸𑌿𑌤𑍃 𑌚 𑌰𑍂𑌪𑌮𑍍 ॥ ॥ ௯ ॥

ஸஞ்ஜயன் சொல்லுகிறார்—

இந்தமாதிரி சொல்லி, வண்டியோட்டிக்கொண்டிருந்த—அர்ஜுனனுக்கு அம்மான் பிள்ளையான—கிருஷ்ணன் உருவமான—எல்லா ஆச்சரியங்களையும் நடத்தக்கூடியவனான—பரப்ரும்மமான நாராயணன் மிகவும் உயர்ந்த ஈச்வரன் என்று காட்டக் கூடியதும், தனக்கு மாத்திரம் ஏற்பட்டதுமான ஒரு உடம்பைத் தன் அத்தை பிள்ளையான அர்ஜுனனுக்குக் காண்பித்தான், அந்த

உடம்பில் அநேகவிதமான ஆச்சரியமான எல்லாஉலகங்கள் இருக்கின்றன. அது எல்லா உலகங்களையும் அடக்கி ஆளுகிறது. [9]

அவ— ததேவ ரூபம்—

அநேகவக்த்ரநயநமநேகாத்புததர்ஶநம் |
அநேகதிவ்யாபரணம் திவ்யாநேகோத்யதாயுதம் || ||௧௦||
திவ்யமால்யாம்பரதரம் திவ்யகந்தாநுலேபநம் |
ஸர்வாஶ்சர்யமயம் தேவமநந்தம் விஶ்வதோமுகம் || ||௧௧||

தேவம்-த்யோதமாநம்| அநந்தம்-காலத்ரயவர்த்திநிகிலஜக தாஶ்ரயதயா தேஶகாலபரிச்சேதாநர்ஹம்| விஶ்வதோமுகம்-விஶ்வதிக்வர்த்திமுகம் | ஸ்வோசிததிவ்யாம்பரகந்தமால்யாபரணாயுதாநி ஸ்பஷ்டம் || ||௧௧||

அவ—அந்த உருவம் சொல்லப்போகிற மாதிரி இருக்கிறது—

அதின் பளபளப்பைச் சொல்லி முடியாது. மிகவும் அளவில்லாத ஆச்சரியமானதாயிருக்கிறது. மூன்று காலத்திலுமிருக்கிற எல்லா உலகங்களுக்கும் இருப்பிடமாகையால், அது இடத்தாலும், காலத்தாலும், அளவிடத் தகுந்ததன்று. அந்த உடம்புக்கு எல்லா திக்குக்களிலும் முகங்கள் இருக்கின்றன. முகங்கள்தோறும் கண்கள், அதற்குத்தகுந்த உயர்ந்த வஸ்திரங்கள், சந்தனம் முதலிய வாஸனைத் திரவியங்கள், மாலைகள், நகைகள், ஆயுதங்கள் இவைகளோடுகூடியிருக்கிறது அந்த உடம்பு. [10,11]

அவ— ததேவ தேவஸ்வரூபநிர்திஷ்டம் த்யோதமாநதாம் விஶிநஷ்டி—

திவி ஸூர்யஸஹஸ்ரஸ்ய பவேத்யுகபதுத்திதா |
யதி பா: ஸத்ருஶீ ஸா ஸ்யாத் பாஸஸ்தஸ்ய மஹாத்மந: || ||௧௨||

தேஜஸோऽபரிமிதத்வம் தர்ஶயிதுமிதம்| அக்ஷயதேஜஸ்ஸம்பவிதத்வயுக்தி: || ||௧௨||

அவ—பளபளப்பு என்பதை விரிவாய்ச் சொல்லுகிறார்—

ஆயிரம் சூரியன்கள் ஒரேகாலத்தில் ஆகாசத்தில் கிளம்பினால், அவைகளின் பளபளப்பு எப்படி இருக்குமோ, அப்படி

இருக்கிறது. இதுவும் ஒரு வார்த்தைக்குச் சொன்னதே யொழிய, அதின் பளபளப்புக்கு அளவில்லை. [12]

𑌤𑌤𑍍𑌰𑍈𑌕𑌸𑍍𑌥𑌂 𑌜𑌗𑌤𑍍𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌮𑌨𑍇𑌕𑌧𑌾 ।
𑌅𑌪𑌶𑍍𑌯𑌦𑍍𑌦𑍇𑌵𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌶𑌰𑍀𑌰𑍇 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌸𑍍𑌤𑌦𑌾 ॥ ॥௧௩॥

𑌤𑌤𑍍𑌰 — 𑌅𑌨𑌨𑍍𑌤𑌾𑌯𑌾𑌮𑌵𑌿𑌸𑍍𑌤𑌾𑌰𑍇 𑌅𑌨𑌨𑍍𑌤𑌭𑍁𑌜𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌨𑍇𑌤𑍍𑌰𑍇 𑌅𑌪𑌰𑌿𑌮𑌿𑌤𑌤𑍇𑌜𑌸𑍍𑌕𑍇 𑌅𑌪𑌰𑌿𑌮𑌿𑌤𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌯𑍁𑌧𑍋𑌪𑍇𑌤𑍇 𑌸𑍍𑌵𑍋𑌚𑌿𑌤𑌾𑌪𑌰𑌿𑌮𑌿𑌤𑌦𑌿𑌵𑍍𑌯𑌭𑍂𑌷𑌣𑍇 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑌾𑌲𑍍𑌯𑌾𑌮𑍍𑌬𑌰𑌧𑌰𑍇 𑌦𑌿𑌵𑍍𑌯𑌗𑌨𑍍𑌧𑌾𑌨𑍁𑌲𑍇𑌪𑌨𑍇 𑌅𑌨𑌨𑍍𑌤𑌾𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌮𑌯𑍇 𑌦𑍇𑌵𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌦𑌿𑌵𑍍𑌯𑍇 𑌶𑌰𑍀𑌰𑍇, 𑌅𑌨𑍇𑌕𑌧𑌾 𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌂—𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑌿𑌵𑌿𑌵𑌿𑌧𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰 [illegible] ॥ ।௧௩।

எல்லையில்லாத நீளமும் அகலமுமுடையதும், கணக்கில்லாத திருக்கைகள், முகங்கள், கண்கள், வயிறுகள் இவைகளை உடையதும், அளவில்லாத பளபளப்புள்ளதும், கணக்கில்லாத உயர்ந்த ஆயுதங்களோடு கூடியதும், தனக்குத்தகுந்த கணக்கில்லாத உயர்ந்த நகைகள், மாலைகள், வஸ்திரங்கள், சந்தனம் முதலான வாஸனைத்திரவியங்கள் இவைகளுள்ளதும், அளவில்லாத ஆச்சரியமாயிருக்கிற பகவானுடைய மிகவுமுயர்ந்த அந்தத் திருமேனியிலே பிரும்மா முதலான—அநேகவிதமாயும் ஆச்சரியமுமான—தேவன், மனிதன், மாடுமுதலானது, மரம்முதலானது—என்று

பிரிவுள்ள அநுபவிக்கிற ஜீவன்கள், ப்ருதிவீ, அந்தரிக்ஷம், ஸுவர்க்கம், பாதாளம், அதலம், விதலம், ஸுதலம் முதலான அநுபவத்துக்கு ஏற்பட்ட இடங்கள், அநுபவிக்கத்தகுந்த வஸ்துக்கள், அநுபவத்துக்கு உதவிகள்—இந்தமாதிரி பிரிவுள்ள ப்ரக்ருதி, ஜீவன்கள் இரண்டும் கலந்த எல்லா லோகங்களையும் 10—வது அத்தியாயத்தில் சொன்னபடி ஒரு மூலையிலே இருப்பதாக பகவானுடைய அநுக்கிரஹத்தாலே அவரைப் பார்க்கும்படியான உயர்ந்த கண்ணை அடைந்த அர்ஜுநன் பார்த்தான் [13]

தத: ஸ விஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்டரோமா தநஞ்ஜய: |
ப்ரணம்ய ஶிரஸா தேவம் க்ருதாஞ்ஜலிரபாஷத || ||௧௪||

ததோ தநஞ்ஜயோ மஹாஶ்சர்யஸ்ய க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ஸ்வதேஹைகதேஶேநாஶ்ரயபூதம் க்ருத்ஸ்நஸ்ய ப்ரவர்த்தயிதாரம் சாஶ்சர்யதமாநந்தஜ்ஞாநாதிகல்யாணகுணகணம் தேவம் த்ருஷ்ட்வா விஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்டரோமா ஶிரஸா தண்டவத் ப்ரணம்ய க்ருதாஞ்ஜலிரபாஷத || ||௧௪||

பிறகு அர்ஜுநன் மிகவும் ஆச்சரியமான எல்லா உலகங்களையும் தன்னுடைய திருமேனியின் ஒருமூலையிலே வைத்துக்கொண்டும், எல்லா உலகங்களையும் நடத்திக் கொண்டும், மிகவும் ஆச்சரியமான—கணக்கில்லாத—ஞானம் முதலான நல்ல குணங்களை கூட்டங் கூட்டமாய் தன்னிடத்தில் வைத்துக் கொண்டும் இருக்கிற பகவானைப்பார்த்து, திகைத்து, மயிர்க்கூச்சல் அடைந்து, கீழே விழுந்து, ஸேவித்து, கைகளைக் கூப்பிக்கொண்டு சொல்லுகிறான்.

அர்ஜுந உவாச.—

பஶ்யாமி தேவாம்ஸ்தவ தேவ தேஹே ஸர்வாம்ஸ்ததா பூதவிஶேஷஸங்காந் | ப்ரஹ்மாணமீஶம் கமலாஸநஸ்தம் ருஷீம்ஶ்ச ஸர்வாநுரகாம்ஶ்ச திவ்யாந் || ||௧௫||

தேவ தவ தேஹே ஸர்வாந் தேவாந் பஶ்யாமி । ததா ஸர்வாந் ப்ராணிவிஶேஷாணாம் ஸங்காந்। ததா ப்ரஹ்மாணம் சதுர்முகமண்டாதிபதிம் | ததேஶம் கமலாஸநஸ்தம் கமலா

ஸர்வாந் ப்³ரஹ்மாணம் ஸ்ருஷ்டிகர்த்தாரம் -- தத்³தே³ஹவர்த்திநம் | ததா² தே³வர்ஷீந் வஸிஷ்டா²தீ³ந் ஸர்வாந் உரகா³ம்ஶ்ச வாஸுகிதக்ஷக ப்ரப்⁴ருதீந் தீ³ப்யமாநாந் || ||௧௫||

ஏ பிரபுவே! உம்முடைய திருமேனியில் எல்லா தேவர்களேயும், கூட்டம் கூட்டமாய் எல்லாப் பிராணிகளேயும், பதினன்கு லோகங்கள் அடங்கியபிரும்மாண்டத்துக்குத்தலைவனை நான்முகனேயும், அந்தப்பிரும்மாவின் இஷ்டப்படி நடக்கிற சிவனேயும், தேவருஷி முதலான எல்லா ருஷிகளேயும், வாஸுகி தக்ஷகன் முதலான ஜ்வலித்துக் கொண்டிருக்கிற பாம்புகளேயும் பார்க்கிறேன்.

அநேகபா³ஹூத³ரவக்த்ரநேத்ரம் பஶ்யாமி த்வாம் ஸர்வதோ(அ)நந்தரூபம் | நாந்தம் ந மத்⁴யம் ந புநஸ்தவாதி³ம் பஶ்யாமி விஶ்வேஶ்வர விஶ்வரூப || ||௧௬||

அநேகபா³ஹூத³ரவக்த்ரநேத்ரம் அநந்தரூபம் த்வாம் ஸர்வத: பஶ்யாமி | விஶ்வேஶ்வர-விஶ்வஸ்ய நியந்த: | விஶ்வரூப-விஶ்வஶரீர! யதஸ்த்வமநந்த:, அதஸ்தவ நாந்தம் ந மத்⁴யம் ந புநராதி³ம் ச பஶ்யாமி || ||௧௬||

கைகளும், வயிறுகளும், முகங்களும், கண்களும், எத்தனேயோ உள்ளவரும், எல்லேயில்லாத திருமேனி உள்ளவருமான உம்மை எங்கும் பார்க்கிறேன். எல்லா லோகத்தையும் அடக்கி ஆளுகிறவரே! எல்லா உலகத்தையும் உடம்பாக உடையவரே! உமக்கு அளவில்லாதபடியாலே, உமக்குஇதுமுதல் என்றும், இது நடுவு என்றும், இது முடிவு என்றும் தெரியவில்லே. இவைகள் இருந்தால், நீர் கொடுத்த கண்ணல் பார்க்கமுடியும். [16]

கிரீடிநம் க³தி³நம் சக்ரிணம் ச தேஜோராஶிம் ஸர்வதோ தீ³ப்திமந்தம் | பஶ்யாமி த்வாம் து³ர்நிரீக்ஷ்யம் ஸமந்தாத் தீ³ப்தாநலார்கத்³யுதிமப்ரமேயம் || ||௧௭||

தேஜோராஶிம் ஸர்வதோ தீ³ப்திமந்தம் து³ர்நிரீக்ஷ்யம் தீ³ப்தாநலார்கத்³யுதிமப்ரமேயம் த்வாம் கிரீடிநம் க³தி³நம் சக்ரிணம் ச பஶ்யாமி || ||௧௭||

ஓரே தேஜஸ்ஸாகவும், எங்கும் பரவியிருக்கும் காந்தியுள்ளவராகவும், பதினைந்து நாழிகையில் இருக்கும் ஸூர்யனைப்போல பார்க்கமுடியாத திருமேனியை உடையவராயும், ஜ்வலித்துக் கொண்டிருக்கிற அக்கினிபோன்றவராயும், இன்ன விதமென்றும் இவ்வளவு என்றும் அளவிட முடியாதவராயுமிருக்கிற உம்மைக் கிரீடங்களையும், கதைகளையும், சக்கிரங்களையும் உடையவராயும் பார்க்கிறேன். உம்மிடத்தில் முன்னே பார்த்த சக்கிரம் முதலான ஆயுதங்களைப் பார்த்தபடியால், நீ கிருஷ்ணன்தான் என்று தோன்றுகிறது. உம்முடைய கிரீடத்தைப் பார்க்கிறபோது எல்லா உலகங்களுக்கும் ராஜாவென்றும் தெரிகிறது [ 17 ]

த்வமக்ஷரம் பரமம் வேதிதவ்யம் த்வமஸ்ய விஶ்வஸ்ய பரம்
நிதாநம் | த்வமவ்யய: ஶாஶ்வததர்மகோப்தா ஸநாதநஸ்த்வம்
புருஷோ மதோ மே || ||௧௮||

உபநிஷத்ஸு "த்வே வித்யே வேதிதவ்யே" இத்யாதிஷு வேதிதவ்யதயா நிர்திஷ்டம் பரமக்ஷரம் த்வமேவ | த்வமஸ்ய விஶ்வஸ்ய பரம் நிதாநம் - விஶ்வஸ்யாஸ்ய பரமாதாரபூதஸ்த்வமேவ | த்வமவ்யய:- வ்யயரஹித:- யத்ஸ்வரூபோ யத்குணோ யத்விபவஶ்ச த்வம், தேநைவ ரூபேண ஸர்வதாவதிஷ்டஸே | ஶாஶ்வததர்மகோப்தா ஶாஶ்வதஸ்ய-நித்யஸ்ய வேதிகஸ்ய தர்மஸ்யாவதாராதிபிர்கோப்தா த்வமேவ கோப்தா | ஸநாதநஸ்த்வம் புருஷோ மதோ மே:- "வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்", "பராத்பரம் புருஷம்" இத்யாதிஷூதித: ஸநாதந: புருஷஸ்த்வமேவேதி மே மத: - ஜ்ஞாத: | யதுகுலதிலக: த்வமேவம்பூத இதாநீம் ஸாக்ஷாத்க்ருதோ மயேத்யர்த: ||௧௮||

உபநிஷத்துக்களில் அறியவேண்டியதாகச் சொல்லப்பட்ட உயர்ந்த அக்ஷரம் என்பவர் நீர்தான். இந்த எல்லா உலகங்களையும் நீர்தான் முக்கியமாகத்தாங்குகிறீர். (அதாவது உடம்பை ஜீவன் தாங்குகிறான். அவனையும் நீர் தாங்குகிறீர்) உமக்கு ஒருவிதமான மாறுதலும் கிடையாது. அதாவது—உம்முடைய

1 ஸ்வரூபத்துக்கும், உம்முடைய குணங்களுக்கும், உம்முடைய 2 ஸொத்துக்களுக்கும் ஒருக்காலும் அழிவில்லை. அநாதியான வேதத்தில் சொன்ன தர்மங்களை இதுபோன்ற அவதாரங்களாலே நீர்தான் காப்பாற்றுகிறீர். உபநிஷத்துக்களில் நித்தியனாகவும், பெரியவனாகவும் சொல்லப்பட்டவர் நீர்தான் என்று எனக்குத் தோன்றுகிறது. முன்னை கிருஷ்ணனாக இருந்தவர்தான் இப்போது இந்த மாதிரி இருக்கிறீர் என்று இந்தக்கண்ணாலே பார்க்கிறேன். [18]

𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑌨𑍍𑌤𑌵𑍀𑌰𑍍𑌯𑌮𑌨𑌨𑍍𑌤𑌬𑌾𑌹𑍁𑌂 𑌶𑌶𑌿𑌸𑍂𑌰𑍍-
𑌯𑌨𑍇𑌤𑍍𑌰𑌮𑍍। 𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌦𑍀𑌪𑍍𑌤𑌹𑍁𑌤𑌾𑌶𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌂 𑌸𑍍𑌵𑌤𑍇-
𑌜𑌸𑌾 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌪𑌨𑍍𑌤𑌮𑍍 ॥ ॥௧௯॥

𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌮𑍍-𑌆𑌦𑌿𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌹𑌿𑌤𑌮𑍍, 𑌅𑌨𑌨𑍍𑌤𑌵𑍀𑌰𑍍𑌯𑌮𑍍-𑌅𑌨𑌵𑌧𑌿𑌕𑌾𑌤𑌿𑌶𑌯𑌵𑍀𑌰𑍍𑌯𑌮𑍍। 𑌵𑍀𑌰𑍍𑌯𑌶𑌬𑍍𑌦𑌃 𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌰𑍍𑌥𑌃। 𑌅𑌨𑌵𑌧𑌿𑌕𑌾𑌤𑌿𑌶𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌬𑌲𑌐𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌵𑍀𑌰𑍍𑌯𑌶𑌕𑍍𑌤𑌿𑌤𑍇𑌜𑌸𑌾𑌂 𑌨𑌿𑌧𑌿𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃। 𑌅𑌨𑌨𑍍𑌤𑌬𑌾𑌹𑍁𑌮𑍍-𑌅𑌸𑌙𑍍𑌖𑍍𑌯𑍇𑌯𑌬𑌾𑌹𑍁𑌮𑍍। 𑌬𑌾𑌹𑍍𑌵𑌾𑌦𑌿 𑌪𑍍𑌰𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌰𑍍𑌥𑌮𑍍। 𑌅𑌨𑌨𑍍𑌤𑌬𑌾𑌹𑍂𑌦𑌰𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌕𑌮𑍍। 𑌶𑌶𑌿𑌸𑍂𑌰𑍍𑌯𑌨𑍇𑌤𑍍𑌰𑌮𑍍-𑌶𑌶𑌿𑌵𑌤𑍍𑌸𑍂𑌰𑍍𑌯𑌵𑌚𑍍𑌚 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌪𑍍𑌰𑌤𑌾𑌪𑌯𑍁𑌕𑍍𑌤𑌨𑍇𑌤𑍍𑌰𑌮𑍍। 𑌦𑍇𑌵𑌾𑌦𑍀𑌨𑌨𑍁𑌕𑍂𑌲𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌃; 𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌾𑌨𑌸𑍁𑌰𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌾𑌦𑍀𑌨𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑌾𑌪𑌃। "𑌰𑌕𑍍𑌷𑌾𑌂𑌸𑌿 𑌭𑍀𑌤𑌾𑌨𑌿 𑌦𑌿𑌶𑍋 𑌦𑍍𑌰𑌵𑌨𑍍𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌨𑌮𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌚 𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌙𑍍𑌘𑌾𑌃" 𑌇𑌤𑌿 𑌹𑌿 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍇। 𑌦𑍀𑌪𑍍𑌤𑌹𑍁𑌤𑌾𑌶𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌮𑍍-𑌦𑍀𑌪𑍍𑌤𑌕𑌾𑌲𑌾𑌨𑌲𑌵𑌤𑍍𑌸𑌂𑌹𑌾𑌰𑌾𑌨𑍁𑌗𑍁𑌣𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌮𑍍। 𑌸𑍍𑌵𑌤𑍇𑌜𑌸𑌾𑌵𑌿𑌶𑍍𑌵

1. ஒருமாம்பழத்தை நாலுநாள் கூட வைத்திருந்தால், அது அழுகிப்போகிறது. ஒரு ஜீவன் ஒருக்கால் உயர்ந்த அறிவும், உயர்ந்த ஸொத்துக்களும் உள்ளவனாக இருக்கிறான். அவனுக்கே இன்னொரு ஸமயத்தில் அறிவு, பலம், ஸொத்துக்கள் எல்லாம் போய்விடுகின்றன. உமக்கு அப்படியில்லை.

2. பாஷ்யத்தில் 'விபவ' (ஸொத்து) என்கிற சொல் இருக்கிறது. ஸொத்துக்கு அழிவில்லையென்று சொல்லுவதால், அது நித்திய விபூதியாயிருக்கவேண்டும். இரண்டு விபூதியையும் சொல்லுவதானால், அழிவில்லையென்பதற்குத் திரவியத்தின் ஸ்வரூபத்திற்கு அழிவில்லையென்று பொருள்.

[illegible] ॥௧௯॥

நீர் முதலும், நடுவும், முடிவுமில்லாதவர். அளவில்லாமல் உயர்ந்தஅறிவு, பலம் முதலான குணங்களுக்கு இருப்பிடம். உம்முடைய கைகள் முதலான அவயவங்களுக்குக் கணக்கில்லை. உம்முடைய கண்கள் சந்திரன்போல வணங்குகிறவர்களுக்கு குளிர்ந்தும், வணங்காதவர்களுக்கு ஸூர்யன்போல கடுமையாகவுமிருக்கின்றன. உம்முடைய முகங்கள் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற பிரளயகாலாக்கினிபோல் உலகத்தை அழிக்கும்போலிருக்கின்றன. எல்லா உலகத்தையும் அவமானப்படுத்தும்படியான ஸாமர்த்தியத்தாலே, உலகத்தைக் கொளுத்துகிறீர்போலிருக்கிறது. இப்படி உம்மைப் பார்க்கிறேன். கீழே எந்தஸங்கதிகளைப்பார்க்கவேணுமென்று ஆசைப்பட்டேனோ, அந்தஸங்கதிகளை எல்லாம் நீர் சொன்னபடியே கண்ணால் பார்க்கிறேன். அதாவது- எல்லா உலகங்களையும் உண்டு பண்ணுபவரும், தூக்குகிறவரும், அடக்கியாளுகிறவரும், அழிக்கிறவரும், அறிவு முதலான கணக்கில்லாத- அளவில்லாத குணங்களுக்கு ஸமுத்திரம் போன்றவருமான உம்மைப்பார்க்கிறேன். ஒரு உடம்பிலே அநேக வயிறு முதலானவைகள் என்னமாக இருக்கும் என்றால்—எல்லையில்லாமல்பெரிதான ஒரே இடுப்பிலிருந்து அநேக வயிறுகள் மேலே கிளைத்து இருக்கின்றன. கீழேயும் அநேக கால்கள் இருக்கின்றன. ஒவ்வொரு முகத்துக்கும் இரண்டு கண்கள் இருக்கின்றன.

[illegible] ॥௧௦॥

அவ—நெடுநாளாய் பழகினதும், கண்ணாலே பார்க்கக் கூடியதும், சீக்கிரம் அடையக் கூடியதுமான-இப்போது இன்பமாகத் தோன்றுகிற-வஸ்துக்களில் மனது படிந்திருக்கிறதே; அவைகளை விட்டு இழுக்க முடியுமா ? நீர் குற்றமில்லாதவராயும், குணமுள்ளவராயும் இருந்த போதிலும், நீர் சொன்னபடி நினைத்துப் பழக்கம் பண்ணமுடியாது. மனதுக்கு வேலைகளைச் செய்வதில்தான் வாஸனை உண்டாயிருக்கிறது. ஆகையால் வேலைகளில்தான் மனது செல்லும். இப்படி அர்ஜுநனுக்கு எண்ணமிருப்பதை அறிந்து, பழக்கம் பண்ணுவதற்கு வழி சொல்லுகிறார்—

இப்படி அளவில்லாத பிரீதியுடன் நினைத்துப் பழக்குவதற்கு முடியாமல் போனால், கோவில் கட்டுவது, புஷ்பத் தோட்டம் போடுவது, கோவிலுக்கு விளக்குப் போடுவது, கோவில்களைப் பெருக்கி, தெளித்து, மெழுகுவது, புஷ்பங்கள் கொண்டுவருவது, என்னுடைய பூஜையை ஸரியாக நடத்துவது, என் பெயர்களைச் சொல்லுவது, பிரதக்ஷிணம்—ஸ்தோத்திரம்—நமஸ்காரம் முதலானவைகளைச் செய்வது—இவை முதலான என் வேலைகளை அளவில்லாத பிரீதியுடன் செய். இப்படிச் செய்தால், சீக்கிரத்தில் கீழ்ச் சொன்ன 1 பழக்கம் பண்ணமுடியும். பிறகு படிப்படியாய் என்னை அடையலாம். [ 10 ]

---

1. இப்படிச் செய்யும் வேலைகளில் ஒவ்வொன்றும் பாபத்தைப் போக்கக்கூடியதாகையாலும், ஒவ்வொரு வேலையிலும் பகவானை நினைப்பதாலும், பகவானுடைய தியானத்தின் (நினைவின்) பழக்கம் சீக்கிரம் வந்து விடுமென்று கருத்து.

अथैतदप्यशक्तोऽसि कर्तुं मद्योगमाश्रितः ।
सर्वकर्मफलत्यागं ततः कुरु यतात्मवान् ॥११॥

अथ मद्योगमाश्रित्य एतदपि कर्तुं न शक्नोषि — मद्गुणानुसन्धानकृतमदेकप्रियत्वाकारं भक्तियोगमाश्रित्य भक्तियोगारम्भरूपमदेकान्तकर्माण्यपि कर्तुं न शक्नोषि? ततोऽक्षरयोगमात्मस्वभावानुसन्धानरूपं परभक्तिजननं पूर्वषट्कोदितमाश्रित्य तदुपायतया सर्वकर्मफलत्यागं कुरु । [illegible] क्षीणाशेषपापस्यैव जायते । यतात्मवान् - यतमनस्कः - [illegible] अनभिसंहितफलेन कर्मणा [illegible] निवृत्ताविद्यादिसर्वतिरोधाने शेषतैकस्वरूपे प्रत्यगात्मनि साक्षात्कृते सति मयि पराभक्तिः स्वयमेवोत्पद्यते । तथा वक्ष्यते "स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः" इत्यारभ्य "विमुच्य निर्ममः शान्तो ब्रह्मभूयाय कल्पते । ब्रह्मभूतः प्रसन्नात्मा न शोचति न काङ्क्षति । समः सर्वेषु भूतेषु मद्भक्तिं लभते पराम्" इति ॥

॥११॥

அவ—ஸம்ஸாரிகளுக்கு தன் பிரயோஜநத்துக்காகவே காரியங்களைச் செய்யத் தோன்றுகிறது; அவன் உமக்காக எப்படி வேலை செய்யக் கூடும். அதுவும் அளவில்லாத பிரீதியுடன் எப்படிச் செய்ய முடியும் என்றால், அதற்கு ஸாதாவரிசைகளில் ஆரம்பத்திலிருக்கும் எல்லா உபாயத்திற்கும் அடிப்படியான கர்மயோகத்தை நினைப்பு மூட்டுகிறார்—

என்னுடைய உயர்ந்த குணங்களை நினைத்து, என்னிடத்தில் மாத்திரம் பிரீதி பண்ணுவதான பக்தியோகத்தைச் செய்ய ஆரம்பித்து, அந்த தியானமென்கிற மாத்துக்கு 1 முளைபோன்ற இந்த

1. பக்தி யோகத்திற்கு உதவிகள் அநேகம் படிகள் இருக்கின்றன. அவைகளில் இதற்குக் கீழ்படி கிடையாதென்று கருத்து.

என் வேலைகளையும் மிகுந்த பிரீதியுடன் செய்ய முடியாமல் போனால், என்னுடைய தியானத்துக்கு உதவியாக உன் ஆத்ம ஸ்வரூபத்தை முதல் ஆறு அத்தியாயங்களில் சொன்னபடி உள்ளபடி பார்க்க வேணுமென்று நினைத்து, அதற்கு உபாயமாகக் கர்மயோகத்தைச் செய். அதாவது—பலன்களை விரும்பாமல், மனதை அடக்கி, என் பிரீதிக்காகவே கர்மங்களைச் செய். அப்படிச் செய்தால்தான் எல்லாப்பாபங்களும் போகும். அப்போதுதான் என்னிடத்தில் அளவில்லாத பிரீதிவந்து, என்னையே அடையவேண்டுமென்று நினைவு உண்டாகும். இல்லாதுபோனால் உண்டாகாது. அந்த நினைவு வருவது லேசா? அந்தக் கர்மங்களால் ஆத்மத்தியானம் வரும். தியானத்தால் அறியாமை முதலான எல்லா மறைவுகளும் நீங்கி, எனக்கு வேலை செய்வதற்காகவே ஏற்பட்டிருக்கிற உன் (ஜீவ) ஸ்வரூபத்தை உள்ளபடி பார்க்கலாம். பார்த்ததும் என்னுடைய தியானம் தன்னடையாகவே வரும். இந்த ஸங்கதியை 18-வது அத்தியாயம் 54-வது சுலோகத்தில் சொல்லப் போகிறார். [11]

ஶ்ரேயோ ஹி ஜ்ஞாநமப்⁴யாஸாஜ் ஜ்ஞாநாத்³த்⁴யாநம் விஶிஷ்யதே । த்⁴யாநாத் கர்மப²லத்யாக³ஸ் த்யாகா³ச்சா²ந்திரநந்தரம் ॥

அப்ரீதிவிரஹிதாத³ஶக்யாரம்பா⁴த் ஸ்ம்ருத்யப்⁴யாஸாத³க்ஷரயாதா³த்⁴யாநாப்⁴யாஸநிவந்த⁴கம் ஆத்மாபரோக்ஷ்யஜ்ஞாநமேவாத்மஹிததமமேவ விஶிஷ்யதே । ஆத்மாபரோக்ஷ்யஜ்ஞாநாத³பி நிஷ்பந்நாத் ததுபாயபூ⁴தமாத்மத்⁴யாநமேவாத்மஹிததமமேவ விஶிஷ்யதே । தஸ்மாத³பி நிஷ்பந்நாத் ததுபாயபூ⁴தம் ப²லத்யாகே³நாநுஷ்டி²தம் கர்மைவ விஶிஷ்யதே । அநபி⁴ஸம்ஹிதப²லாநுஷ்டி²தஸ்ய கர்மணோ நிரஸ்தஸமஸ்தபாபதயா மந:ப்ரஶாந்திர்ப⁴விஷ்யதி । ஶாந்தே மநஸி ஆத்மத்⁴யாநம் ஸம்பத்ஸ்யதே । த்⁴யாநாச்ச ததா³பரோக்ஷ்யம் । ததா³பரோக்ஷ்யாத் பரா ப⁴க்திரிதி ப⁴க்தியோகா³ப்⁴யாஸாஶக்தஸ்யாத்மநிஷ்டை²வ ஶ்ரேயஸீ । ஆத்மநிஷ்ட²ஸ்யாப்யஶாந்தமநஸோ நிஷ்டா²ப்ராப்தயேzஶமபூ⁴தாத் ஜ்ஞாநாத³நபி⁴ஸம்ஹிதப²லகர்மநிஷ்டை²வ ஶ்ரேயஸீத்யர்த²: ॥ ॥௧௨॥

அவ—பக்தியைப்பண்ண முடியவில்லையே என்கிற வருத்தத்தைப் போக்குவதற்காகவும், அப்புலியானைப் பிடிப்பதற்காகக் கையைத் தூக்கும் குழந்தைகள் போல், முடியாத வேலையை ஆரம்பிப்பதைத் தடுப்பதற்காகவும், பக்திக்கு உதவியான ஸாதநங்களில் அவனவனுக்குத் தகுந்ததைக் கஷ்டமில்லாமல் செய்யலாம் என்று ஸ்தோத்திரம் பண்ணி, கீழ்ச் சொன்னதை உறுதிப்படுத்துகிறார்—

அளவில்லாத பிரீதி இல்லாமல் வருந்தப்பட்டு, என்னுடைய நினைவைப் பழக்குவதைக்காட்டிலும்.[1] ஜீவாத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி நினைத்து அதை உள்ளபடி பார்ப்பதே ஒருவனுக்கு மிகவும் நல்லது. இந்தப் பார்வை வாராமல் போனால், அதற்கு ஸாதநமான ஜீவாத்மத்தியானம் செய்வதே நல்லது. அந்தத் தியானமும் வாராமல்போனால், பலன்களை விரும்பாமல் என்னுடைய பிரீதிதான் வேண்டுமென்று நினைத்து கர்மங்களைச் செய்தால், எல்லா பாபங்களும் போய், மனது அடங்கும். மனது அடங்கினால், ஜீவாத்மாவைத் தியானம் பண்ணலாம். தியானத்தால் அதைப் பார்க்கலாம். பார்த்தால் என்னைத் தியானம் செய்யலாம். ஆகையால் என்னுடைய தியானத்தைப் பழக்க முடியாதவனுக்கு ஜீவாத்மாவைத் தியானம் செய்வதே மிகவும் நல்லது. மனது அடங்காதிருந்தால், அதுவும் முடியாதவனுக்கு ஆத்மத்தியானத்துக்காக ஆத்மாவின் நினைவுடன் பலன்களை விரும்பாமல் கர்மம் செய்வதே நல்லது.

[12]

ஸ்வ— அநபி4ஸம்ஹிதப2லகர்மநிஷ்ட2ஸ்யோபாதே3யாந் கு3ணாநாஹ—

அத்3வேஷ்டா ஸர்வபூ4தாநாம் மைத்ர: கருண ஏவ ச |
நிர்மமோ நிரஹங்கார: ஸமது3:க2ஸுக2: க்ஷமீ || ௧௩ ||

---

1. முதல் ஆறு அத்தியாயங்களில் ஜீவாத்ம ஸ்வரூபத்தைப் பார்ப்பதும், ஏழாவது அத்தியாயம் முதல் பத்தாவது அத்தியாயம் வரையில் பகவானைத் தியானம் செய்வதும் சொல்லப்பட்டன. ஒன்று மற்றொன்றுக்கு உதவி என்று மூலத்தில் சொல்லப்படவில்லை. அது இங்கே சொல்லப்படுகிறது.

𑌸𑌂𑌤𑍁𑌷𑍍𑌟𑌃 𑌸𑌤𑌤𑌂 𑌯𑍋𑌗𑍀 𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌦𑍃𑌢𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃 ।
𑌮𑌯𑍍𑌯𑌰𑍍𑌪𑌿𑌤𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌯𑍋 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃 𑌸 𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 ॥௧௪॥

[illegible] ॥௧௩-௧௪॥

அவ—பலன்களை விரும்பாமல் கர்மம் செய்கிறவனுக்கு வேண்டிய குணங்களைச் சொல்லுகிறார்—

(1) மனதால் த்வேஷம் செய்கிறவர்கள், வாயாலும், உடம்பாலும் தொந்தரவு பண்ணுகிறவர்கள் எல்லாரிடத்திலும், நம்முடைய பாபங்களுக்காகப் பகவான் அவர்களைக்கொண்டு நமக்கு இப்படிச் செய்கிறானென்று நினைத்து, த்வேஷம் பண்ணாமலிருப்பது. (2) இதுவும் தவிர அவர்கள் க்ஷேமத்தை நினைப்பது. (3) அவர்களுக்கு ஏதாவது தொந்தரவு வந்தால், ஐயோ! என்று

இரங்கி நம்மால் ஆனவரையில் உதவி செய்வது. (4) உடம்பையும், இந்திரியங்களையும், அவைகளைச்சேர்ந்த பிள்ளை பெண்டாட்டி முதலானவைகளையும் தன்னுடையவைகள் என்று நினைக்காமை. அதாவது—ஒருவனுக்கு இவைகளைப் பகவான் 1 இரவலாகக் கொடுத்திருக்கிறனென்று நினைப்பது (5) உடம்பை ஆத்மாவாக எண்ணுமை, உடம்பு வேறு, அதிலிருக்கும் நான் என்கிற ஆத்மா வேறு என்கிற நினைவு வேணும். சொல்லுவது போதாது. (6) நினைவினுல் உண்டாகும் ஸுகத்திலும், துக்கத்திலும், ஸந்தோஷமும், வருத்தமும் இல்லாமை. அதாவது—இந்த ஸுகமும் துக்கமும் நினைவால் ஏற்படுகிறவைகள். அதாவது—ஒரு ரூபாய் கெட்டுப் போனுல், மனது புண்ணுக ஆகிறது. ஒரு ரூபாய் வந்தால், ஸந்தோஷமாயிருக்கிறது. இந்த இரண்டும் உடம்பில் சிரங்கு வெடித்தது போலும், சந்தனம் பூசினது போலுமில்லை. ஆகையால் இந்த இரண்டும் நினைவினுல் உண்டாகிறது. இந்த ஆருவது குணம் கீழ்ச் சொன்ன 4-5-வது குணங்கள் வந்தால் வரும் (7) உடம்பில் காயம் படுவது முதலானவைகளால் உண்டாகும் துக்கத்தினுல் ஓச்சலும், சந்தனம் பூசுவது முதலானவைகளால் உண்டாகும் மனதுக்கு இருமாப்பும் (கொழுப்பும்) இல்லாமை. (8) தற்செயலாய் கிடைத்தவைகளைக் கொண்டு உடம்பை வளர்த்து, அது கொஞ்சமென்றும், அதிகம் என்றும், ரஸமுள்ளதென்றும், ரஸமில்லாததென்றும் பாராமல் ஸந்தோஷப்படுவது. (9) எப்பொழுதும் உடம்பைக் காட்டிலும் வேருன ஆத்மாவை நினைத்துக் கொண்டிருப்பது. இதினுல் வாஸனை பலப்பட்டு யோகத்துக்கு உதவியுண்டாகும். (10) எப்பொழுதும் ஆத்மாவைத்தவிர வேறு விஷயத்தில் போகாதபடி மனதை அடக்குவது. இதுவும் யோகத்துக்கு உதவி. (11) உபநிஷத்துக்களில் சொல்லுகிற ஸங்கதிகளில் நல்ல நம்புதல். (12) பலன்களை விரும்பாமல் கர்மங்களைச் செய்தால், அவைகளால் பகவான் ஸந்தோஷத்தை அடைந்து,

---

1. இப்படி நினைத்தால், தனக்குப் பண்டங்கள் கெட்டுப்போனுல் துக்கம் வராது. ஒருவன் நம்முடைய வீட்டில் ஒரு பெட்டியை வைத்து, மறுபடியும் எடுத்துக்கொண்டு போனுல், நமக்குத் துக்கம் வருமோ. அது போலு,

நமக்கு ஆத்மாவின் உள்ளபடி பார்வையைக் கட்டாயம் கொடுப்பன் என்ற எண்ணமும், நம்புதலும்—இவை முதலான குணங்கள் உள்ளவனாய் எவன் கர்மயோகம் செய்து என்னிடத்தில் பக்தி பண்ணுகிறானோ; அவனிடத்தில் எனக்குப் பிரீதி. [13-14]

𑌯𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑍋𑌦𑍍𑌵𑌿𑌜𑌤𑍇 𑌲𑍋𑌕𑍋 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍𑌨𑍋𑌦𑍍𑌵𑌿𑌜𑌤𑍇 𑌚 𑌯𑌃।
𑌹𑌰𑍍𑌷𑌾𑌮𑌰𑍍𑌷𑌭𑌯𑍋𑌦𑍍𑌵𑍇𑌗𑍈𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌯𑌃 𑌸 𑌚 𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃॥

𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌨𑍍𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌭𑍂𑌤𑌾𑌲𑍍𑌲𑍋𑌕𑍋 𑌨𑍋𑌦𑍍𑌵𑌿𑌜𑌤𑍇; 𑌯𑍋 𑌲𑍋𑌕𑍋𑌦𑍍𑌵𑍇𑌗𑌕𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌿𑌂𑌚𑌿𑌦𑌪𑌿 𑌨 𑌕𑌰𑍋𑌤𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃। 𑌲𑍋𑌕𑌾𑌚𑍍𑌚 𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌭𑍂𑌤𑌾𑌦𑍍𑌯𑍋 𑌨𑍋𑌦𑍍𑌵𑌿𑌜𑌤𑍇, 𑌯𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑍋 𑌲𑍋𑌕𑍋 𑌨𑍋𑌦𑍍𑌵𑍇𑌗𑌕𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍋𑌤𑌿, 𑌸𑌰𑍍𑌵𑌾𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌤𑍍𑌵𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌾𑌤𑍍। 𑌅𑌤 𑌏𑌵 𑌕𑌂𑌚𑌨 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌹𑌰𑍍𑌷𑍋 𑌨 𑌕𑌂𑌚𑌨 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌮𑌰𑍍𑌷𑍋 𑌨 𑌕𑌂𑌚𑌨 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌭𑌯𑌂 𑌨 𑌕𑌂𑌚𑌨 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌦𑍍𑌵𑍇𑌗𑍇𑌨 𑌮𑍁𑌕𑍍𑌤𑌃। 𑌏𑌵𑌂𑌭𑍂𑌤𑍋 𑌯𑌃, 𑌸𑍋𑌽𑌪𑌿 𑌮𑌮 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃॥ ॥௧௫॥

(13) 1 உலகத்திற்கு மனவருத்தத்தைக் கொடுக்கக்கூடிய ஒருவேலையையும் செய்யாமை. இவன் இப்படி இருந்தால், இவனால் ஒருவனுக்கும் ஒருவித இடைஞ்சலுமில்லை என்று எண்ணி, உலகத்தார் இவனுக்கு மனவருத்தத்தைக் கொடுக்கக் கூடிய ஒரு வேலையை எப்படிச் செய்யாமலிருப்பார்களோ, அப்படி இருக்கை. ஒருவனிடத்தில் ஸந்தோஷமும்,ஒருவனிடத்தில் பொறாமையும், ஒருவனிடத்தில் பயமும்,ஒருவனிடத்தில் அருவருப்புமில்லாமை2. இப்பேர்ப்பட்டவனிடத்திலும் எனக்குப் பிரீதி. (15)

𑌅𑌨𑌪𑍇𑌕𑍍𑌷𑌃 𑌶𑍁𑌚𑌿𑌰𑍍𑌦𑌕𑍍𑌷 𑌉𑌦𑌾𑌸𑍀𑌨𑍋 𑌗𑌤𑌵𑍍𑌯𑌥𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑌮𑍍𑌭𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 𑌯𑍋 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃 𑌸 𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃॥ ॥௧௬॥

𑌅𑌨𑌪𑍇𑌕𑍍𑌷𑌃—𑌆𑌤𑍍𑌮𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑍇 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑍇 𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑍍𑌯𑌨𑌪𑍇𑌕𑍍𑌷𑌃 । 𑌶𑍁𑌚𑌿𑌃—𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌹𑌿𑌤𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌵𑌰𑍍𑌧𑌿𑌤𑌕𑌾𑌯𑌃 । 𑌦𑌕𑍍𑌷𑌃—𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌯

1. 4-வது குணம் முதலானவைகளின் பலன் 13-வது குணம்.

2. 13-வது குணத்திற்கு [illegible].

க்ரியோபாதாந ஸமர்த:| உதாஸீந:| கதவ்யத:-ஶாஸ்த்ரீயக்ரியாநிர்வ்ருத்தாவவர்ஜநீயஶீதோஷ்ணபருஷஸ்பர்ஶாதிது:கேஷு வ்யதாரஹித:| ஸர்வாரம்பபரித்யாகீ-ஶாஸ்த்ரீயவ்யதிரிக்தஸர்வகர்மாரம்பபரித்யாகீ| ய ஏவம்பூதோ மத்பக்த: ஸ மே ப்ரிய: || ||௧௬||

அவ:—தன் ஸ்வரூபத்தை உள்ளபடி பார்ப்பதில் மாத்திரம் ஆசையிருப்பதால், சாஸ்திரத்தில் சொல்லிய வேலைகளை மாத்திரம் நன்றாய் கவனிக்கிறானென்றும், மற்ற வேலைகளில் கொஞ்சமேனும் ஆசையில்லை என்றும் சொல்லுகிறார்—

(14) ஆத்மாவைத் தவிர வேறு ஒரு வஸ்துவிலும் ஆசையில்லாமை. (15) சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட வஸ்துக்களைச் சாப்பிட்டு உடம்பை வளர்க்கை. (16) சாஸ்திரத்தில் சொல்லுகிற வேலைகளைச் செய்வதில் கெட்டிக்காரத்தனம். (17) சாஸ்திரத்தில் செய்யவேண்டுமென்றும், செய்யக் கூடாதென்றும் சொன்ன வேலைகளைத்தவிர மற்ற வேலைகளைக் கவனிக்காமலிருப்பது. (18) சாஸ்திரத்தில் சொல்லியவேலைகளைச் செய்யும் பொழுது, நடுவில் கட்டாயம் வரக்கூடிய குளிர்—சூடு—உடம்புக்குக் காயம் முதலானவைகளைப்பற்றி வருத்தப்படாமை. (19) சாஸ்திரத்தில் சொல்லிய வேலைகளைத் தவிரமற்ற ஒரு வேலையையும் கவனித்தாலும், செய்ய ஆரம்பிக்காமை. இந்த குணங்களுள்ளவனாய் எவன் என்னிடம் பக்தி பண்ணுகிறானோ; அவனும் எனக்கு வேண்டியவன். [16]

யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி ந ஶோசதி ந காங்க்ஷதி|
ஶுபாஶுபபரித்யாகீ பக்திமாந் ய: ஸ மே ப்ரிய: ||௧௭||

யோ ந ஹ்ருஷ்யதி-யந்மநுஷ்யாணாம் ஹர்ஷநிமித்தம் ப்ரியஜாதம் தத்ப்ராப்ய ய: கஶ்சிதபி ந ஹ்ருஷ்யதி| யதப்ரியம், தத்ப்ராப்ய ந த்வேஷ்டி| யச்ச மநுஷ்யாணாம் ஶோகநிமித்தம் பார்யாபுத்ரவித்தக்ஷயாதிகம் தத்ப்ராப்ய ந ஶோசதி| ததாவிதமப்ராப்தம் ச ந காங்க்ஷதி| ஶுபாஶுபபரித்யாகீ-பாபவத்புண்யஸ்யாபி பந்தஹேதுத்வாவிஶேஷாதுபயபரித்யாகீ| ய ஏவம்பூதோ பக்திமாந் ஸ மே ப்ரிய:|| ||௧௭||

(20) மனிதர்கள் எந்த வஸ்துவை அடைந்து, ஸந்தோஷப்படுவார்களோ, அது தற்செயலாய் வந்தாலும், ஸந்தோஷப்படாமை. (21) எந்த வஸ்துவைக்கண்டு பொறுக்க மாட்டார்களோ, அது வந்தாலும் பொறுமையில்லாமை. (22) பிள்ளை, பெண்டாட்டி சாகிறது, பணம் போகிறது முதலானவைகள் நேர்ந்தால், துக்கப்படாமை. (23) அந்தப் பிள்ளை பெண்டாட்டி முதலானவைகள் இல்லாதபோது அவைகளை ஆசைப்படாமை. (24) ஆத்மாவைப் பார்ப்பதற்கு இடஞ்சலாயிருப்பதினால், பாபமும் புண்ணியமும் ஒரே மாதிரியென்று நினைத்து, பாபத்தைப்போல் ஸுகத்தைக் கொடுக்கக்கூடிய புண்ணியங்களையும் செய்யாமை. எப்படிப் பாபம் பண்ணுவதில்லையோ; அப்படியே பிள்ளை முதலான பலன்களைக் கொடுக்கக்கூடிய புண்ணியங்களையும் ஆத்மாவைப் பார்ப்பதற்கு இடஞ்சல் என்கிற எண்ணத்தினாலே பண்ணாமை. இந்த குணங்களுள்ளவனாய் எவன் என்னிடத்தில் பக்தியுள்ளவனோ; அவனும் எனக்கு வேண்டியவன். [17]

समः शत्रौ च मित्रे च तथा मानापमानयोः ।
शीतोष्णसुखदुःखेषु समः सङ्गविवर्जितः ॥ १८ ॥

तुल्यनिन्दास्तुतिर्मौनी सन्तुष्टो येन केनचित् ।
अनिकेतः स्थिरमतिर्भक्तिमान्मे प्रियो नरः ॥ १९ ॥

"अद्वेष्टा सर्वभूतानाम्" इत्यादिना शत्रुमित्रादिषु द्वेषादिरहितत्वमुक्तम् । अत्र तेषु संनिहितेष्वपि समचित्तत्वं ततोऽतिरेको विशेष उच्यते । स्थितिमत्सु निकेतनादिष्वसक्त उक्तोऽनिकेतः । तदेवं मानावमानादिष्वपि समः भक्तिमान्यः स मे प्रियः ॥ [१८-१९]

(25) ஒன்றிலும் பற்றில்லாமையாலே, சத்ருக்களும், ஸ்நேஹிதர்களும் கௌரவம் பண்ணினாலும், இளப்பம் பண்ணினாலும், குளிரிலும், சூட்டிலும், ஸுகத்திலும், துக்கத்திலும் ஒரேமாதிரியாயிருக்கை. (26) ஆத்மாவின் நினைவு நிலையாய் இருப்பதால்,

வீடு முதலானவைகளில் பற்று இல்லாமை (27) ஒருவன் வைதாலும், ஸ்தோத்திரம் பண்ணினாலும், பேசாமல் இருப்பது. (28) உலகத்தாரைப்போல, ஸ்தோத்திரம் பண்ணுகிறவர்களை ஸ்தோத்திரம் பண்ணுவதும், வைகிறவர்களை வைவது மில்லாமை. (தற்செயலாய்) கிடைத்ததைக்கொண்டு ஸந்தோஷப்படுவதால், ஒரு வஸ்துவுக்காக ஸ்தோத்திரம் செய்வதும், கொடுக்காவிட்டால வைகிறதுமில்லாமை இந்த குணங்களுள்ளவனாய் எவன் என்னிடத்தில் பக்தி பண்ணுகிறானோ; அவனோ எனக்கு வேண்டியவன். 1

---

1. 13-வது ச்லோகம் முதல் எட்டு ச்லோகங்களும் பக்தனைச் சொல்லுகின்றன. அவைகளில ஏழு ச்லோகங்கள் கர்மயோகம் பண்ணுகிறவனைச் சொல்லுகின்றன. அவனும் பக்தன்தான். பக்தியில்லாமல் ஞான யோகமும், கர்ம யோகமும் செய்ய முடியாது. எட்டாவது ச்லோகம் அவனைக்காட்டிலும் வேறான பக்தியோகம் செய்கிறவனைச் சொல்லுகிறது. இவன் வேறு என்பது அந்த ச்லோகத்திலிருக்கிற-வேற்றுமையைக்காட்டுகிற—"து" என்கிற சொல்லாலும், பக்தர்களை "மத்பரமா:" (என்னையே உயர்ந்தப் பிரயோஜநமாக எண்ணுகிறவர்கள்) என்றும், எனக்கு மிகவும் வேண்டியவர்கள் என்றும் சொல்லுவதாலும், ஏற்படுகிறது.

கர்மயோகம் செய்கிறவன் தன்னை (1) உடம்பைக்காட்டிலும் வேறு; (2) பகவானுக்கு உட்பட்டவன்; (3) அவனுக்காகவே இருக்கிறவன்—என்று அறிந்து, பகவானைத்தவிர வேறொன்றிலும் ஆசையில்லாமல், கர்மங்களை அவன் ஸந்தோஷத்துக்காகவே செய்யவேண்டியது. தான் உடம்பைக்காட்டிலும் வேறு என்கிற நினைவு ஐந்தாவது குணம். இந்த நினைவு யோகம் செய்யும்காலத்தில் நிலையாயிருப்பதற்காக, யோகம் செய்யாத வேளைகளிலும் இதை நினைத்துக்கொண்டிருப்பது 9-வது குணம். இதற்காகவே மனதை வெளியே விடாமையாகிய 10-வது குணம். ஆத்மாவின் நினைவு நிலையாயிருந்தால், வீடு முதலானவைகளிலும், தன் உடம்பு, இந்திரியங்கள், உடம்பைச் சேர்ந்தவைகள் இவைகளிலும் பற்றில்லாமையாகிய 4-வது, 26-வது குணங்கள் வரும். நல்லதும் பொல்லாததுமான விஷயங்களில் ஒரேமாதிரியாயிருப்பதாகிய 6, 7, 20—23, 25, 27-வது குணங்கள் தானே வரும். உடம்பு இருப்பதற்காக மாத்திரம் சாப்பாடு வேண்டுமானதால், 8-வது குணம் வரும். அதினால் 28-வது குணமும் வந்துவிடும். தானும் மற்றவர்களும் பகவானுக்கு உட்பட்டவர்கள், அவன் உடம்புகள் என்று அறிவதனால், 1-2-3-வது குணங்களும், 13-வது குணமும் வந்துவிடும். இவைகள் எல்லாவற்றிற்கும் காரணம்

அத — அக்ஷராத்மநிஷ்டாத் பக்திநிஷ்டஸ்ய ஶ்ரைஷ்ட்யம் ப்ரீதிவிஷயத்வம் ச ப்ரதிபாதயந் யதோபக்ரமம் உபஸம்ஹரதி—

யே து தர்ம்யாம்ருதமிதம் யதோக்தம் பர்யுபாஸதே।
ஶ்ரத்ததாநா மத்பரமா பக்தாஸ்தே(அ)தீவ மே ப்ரியா: ॥ ௨௦॥

ஓம் தத்ஸதிதி ஶ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம் யோகஶாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே பக்தியோகோ நாம த்வாதஶோ(அ)த்யாய:॥

தர்ம்யம் சாம்ருதம் சேதி தர்ம்யாம்ருதம், யே து ப்ராப்யஸமம் ப்ராபகம் பக்தியோகம் "அத்வேஷ்டா ஸர்வபூதாநாம்" இத்யாதிநோக்தேந ப்ரகாரேணோபாஸதே, தே பக்தா: அதீவ மம ப்ரியா: ॥ ௨௦॥

இதி ஶ்ரீமத்பகவத்ராமாநுஜவிரசிதே ஶ்ரீமத்கீதாபாஷ்யே த்வாதஶோ(அ)த்யாய: ॥

---

சாஸ்திரத்தில் நம்பிக்கை—11-வது குணம். இதிலேயே சாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டு, 16-வது சுலோகத்தில் சொன்ன 14-வது முதல் 19-வது வரையில் உள்ள குணங்களைத் தேடுவன். பகவானுக்காகவே தான் இருப்பதை அறிந்தால், அவனிடத்திலேயே மனதும், எண்ணமும் வைக்கப்படும்—12-வது குணம். ஸ்வர்க்கம் முதலானவைகளுக்கு வேலை செய்யமாட்டான்—24-வது குணம். இப்படி இந்த சுலோகங்களில் சொல்லப்பட்ட 28 குணங்களும் கர்ம யோகத்திற்கு உதவியானவைகள்.

முதல்படியான கர்மயோகம் செய்கிறவனுக்குங்கூட இவைகள் வேண்டுமானால், மோக்ஷத்திற்காக பக்தி பிரபத்தி செய்கிறவனுக்கு இவை வேண்டாமோ? இவர்களுக்கு இவைகள் இருக்கின்றனவா? இல்லையா என்று தாங்களாவது, பிறர்களாவது பார்த்தார்களோ? பார்த்து இல்லையென்று அறிந்தார்களோ? வருத்தம் கிடக்கட்டும். நல்ல ஆசாரியர்களும் தாயார் பெருமாளும் காப்பாற்ற வேணும்.

*அவ—ஆத்மாவைத் தியானிப்பவனைக் காட்டிலும் என்னை (பகவானை)த் தியானம் செய்கிறவன் உயர்ந்தவன் என்று சொல்ல ஆரம்பித்தார். 1 அதை இப்போது முடிக்கிறார்—*

*2 என்னை அடைவதற்கு உதவியான என்னுடையத் தியானத்தை என்னை அடைவதை (மோக்ஷத்தை)ப் போல் நினைத்து, இந்த அத்தியாயம் 2-வது ச்லோகத்தில் சொன்னபடி எவர்கள் செய்கிறார்களோ; அவர்கள் எனக்கு அளவில்லாமல்3 வேண்டியவர்கள்.*

*ஸ்ரீ மதே பகவதே பாஷ்யகாராய மஹாதேசிகாய நம:*

*பனிரெண்டாவது அத்தியாயம் முற்றிற்று.*

---

1. *அத்தியாயத்தின் ஆரம்பத்தில் அர்ஜுனன் ஒரு கேள்வி கேட்டான். அதற்குப் பதில் 2-வது முதல் ஏழு ச்லோகங்களாலே பக்தி யோகமே உயர்ந்தது என்று பகவான் சொன்னார். அதை இங்கே முடிக்கிறார். நடுவில் பதினொன்று ச்லோகங்கள் பக்தி யோகம் செய்யமுடியாமையின் பிரஸ்தாபத்தால் வந்தவைகள்.*

2. *இந்த ச்லோகம் 2-வது ச்லோகம் சொன்னதையே சொல்லுகிறது.*

3. *கர்மயோகம் செய்கிறவர்கள் பகவானுக்கு வேண்டியவர்களானது 7-வது அத்தியாயம் 18-வது ச்லோகத்தில் சொன்ன உதாரத்வத்தைப்பற்றி. அதாவது பக்தனுக்கு வேண்டியதைக் கொடுத்ததினால். பக்தியோகம் பண்ணுகிறவன் மிகவும் வேண்டியவனாயிருப்பது அதே ச்லோகத்தில் சொன்ன பகவானுக்கு ஆத்மாவாயிருப்பதால்,*

தமிழ் அர்த்தத்துடன் கூடிய

# ஸ்ரீமத்கீதாபாஷியம்.

## மூன்றாவது பாகம்.

(13-வது முதல் 18-வது அத்தியாயம் உள்பட)

கும்பகோணம்
ஸ்ரீ ஜனார்த்தன பிரிண்டிங் ஒர்க்ஸில்
பதிப்பிக்கப் பெற்றது.

விலை ] 1929 [ ரூ. 0—12—0

# 18-வது அத்தியாயம், 16-வது சுலோகத்தின் குறிப்பின் கடைசியில் (பக்கம் 626) இதைச் சேர்க்கவேண்டியது.

இங்கே ஒரு கேள்வி—ஜீவனுக்கு நல்லதோ, பொல்லாததோ, தன் இஷ்டப்படி ஒரு வேலையைச் செய்ய சக்தி இருக்கிறது. பகவான் அவனைத் தடுக்கிறதில்லை. தடுக்காமலிருப்பதோடு, அந்தந்த வேலைகளுக்கு உத்திரவும் கொடுத்து, அதைக்கூடஇருந்து நடத்துகிறார் என்று சொல்லுகிறீர். அப்படியானால், ஒரு ஜீவன் நல்ல வேலையைச் செய்வானேன். ஒரு ஜீவன் கெட்ட வேலையைச் செய்வானேன்? என்று.

பதில்.—அவனவன் முன்னாலே செய்த கர்மங்களினாலே பகவானுக்குக்கோபமும்,ஸந்தோஷமும் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளாலே ஒருவன் நல்லதையும், ஒருவன் பொல்லாததையும் செய்கிறான்—என்று.

(பகவானுடைய கோபத்துக்கும் ஸந்தோஷத்துக்கும் அதிருஷ்டமென்றும், கர்மமென்றும் பெயர். ஸந்தோஷத்தை நல்ல அதிருஷ்டமென்றும், நல்ல கர்மமென்றும், கோபத்தைத் துரதிருஷ்டமென்றும், துஷ்கர்மமென்றும் சொல்லுகிறது.)

2. இன்னொருகேள்வி—(1) அதிருஷ்டங்களினால் ஜீவன்களுக்கு நல்ல வேலையும், பொல்லாத வேலையும் ஏற்படுமேயானால், ஜீவனுக்கு இஷ்டப்படி நல்லதோ, பொல்லாததோ, ஒரு வேலையைச் செய்ய சக்தி இருக்கிறது என்பது எப்படி? (2)அதிருஷ்டங்களினாலே ஜீவனகள் ஏவப்படுவார்களேயானால், செய்யென்று விதிப்பதும், செய்யாதே என்று தடுப்பதுமானசாஸ்திரம்எதற்கு? ஏனென்றால், நல்லதைச்செய்கிறவனை செய் என்றுசாஸ்திரம் ஏவவேண்டாம்;கெட்டதைச் செய்கிறவனை செய்யாதே என்கிற சாஸ்திரத்தினால் தடுக்கமுடியாது—என்று.

(1) பதில்.—அதிருஷ்டத்தினால் ஜீவனுக்கு நல்லதோ, பொல்லாததோ இரண்டிலொன்றைச் செய்யத் தோன்றுகிறது. அதனால் அவனுடைய சக்திக்கு என்ன குறைவு; சக்தி குறைந்தால், எப்படிச செய்ய முடியும். (2) சாஸ்திரமெனபது ஒரு யஜமானனுடைய உத்திரவு. அது 'செய்' என்றும், 'செய்யாதே' என்றும் இருவகையாக இருக்கிறது. 'செய்' என்பதைச் செய்தால், ஸுகம் கிடைக்கும். 'செய்யாதே' என்பதைச் செய்தால், துக்கம் கிடைக்கும். இந்த இரண்டு ஸங்கதிகளும சாஸ்திரம் இல்லாமல் போனால் எப்படித் தெரியும். இவைகளைத் தெரிவிப்பதுதான் சாஸ்திரத்திற்குப் பிரயோஜனம். சாஸ்திரம் ஏவுகிறதுமில்லை. தடுக்கிறதுமில்லை. துரதிருஷ்டத்தினால் கெட்டவேலையைச் செய்கிறவனுக்கு சாஸ்திரம் வேண்டியதில்லை. நல்ல அதிருஷ்டத்தினால் நல்ல வேலையைச் செய்கிறவனுக்குச் சாஸ்திரம் கட்டாயம் வேண்டும.

நல்ல அதிருஷ்டம் ஒருவனை ஸோமயாகத்தைச் செய்விக்கிறது. இப்படிச் செய; இப்படிச் செய்யாதே என்கிற சாஸ்திரத்தை அறிந்து தானே, அவன் அதைச் செய்யவேண்டும். அதற்காகவும் சாஸ்திரம் வேண்டும்.

உலகத்தில் ஒரு யஜமானன் வேலைக்காரர்களுக்கு இதைச் செய்; இதைச் செய்யாதே என்று உத்திரவு பண்ணுகிறான். நல்ல வேலைக்கா ரன் செய்யென்பதைச் சொன்னபடி செய்து, யஜமானனை ஸந்தோஷப் படுத்தி, அதனால் ஸுகத்தை அடைகிறான். கெட்ட வேலைக்காரன் செய் யாதே என்பதைச் செய்து, யஜமானனுக்குக் கோபத்தை உண்டாக்கி, அதனால் கஷ்டங்களை அனுபவிக்கிறான். உத்திரவினால்தான் யஜமான னுடைய இஷ்டமும், வருத்தமும் வேலைக்காரனுக்குத் தெரிகின்றன. இது போல்தான் யஜமானனாகிய தெய்வம் ஜீவன்களாகிய வேலைக்காரர்களுக் கு உத்திரவு செய்திருக்கிறது. அதற்குத்தான் சாஸ்திரம் என்று பெயர்.

உலகத்து யஜமானனுக்கும், தெய்வத்திற்கும் வித்தியாஸம் என்ன வென்றால்—உலகத்தில் வேலைக்காரன் செய்கிற தப்புக்கள் யஜமானனுக் குத் தெரியாது. வேலைக்காரனுடைய தப்பினால் யஜமானனுக்குக் கெடு தியுண்டு. அதனால் வேலைக்காரனுடைய தப்பு யஜமானனுக்குத் தெரிந் தால், அந்த வேலையை நிறுத்திவிடுவான். தெய்வத்துக்கு ஜீவன்கள் செய்கிற எல்லா வேலைகளும் தெரியும். அவர்களுடைய தப்புக்களினால் தெய்வத்திற்கு ஒரு கெடுதியுமில்லை. அதனால் இவர்களைத் தடுக்கிற தில்லை. ஜீவன்களுடைய நன்மைக்காகத்தான் தெய்வம் உத்திரவு பண் ணியிருக்கிறது, தன் லாபத்துக்காக இல்லை. உலகத்து வியாபாரத்தை நன்றாய் கவனித்தால், கீழ்ச்சொன்ன கேள்விகளுக்கெல்லாம் பதில் நன்றாய் ஏற்படும். உலகமும் சாஸ்திரமும் ஒன்று.

3. மறுபடியும் ஒரு கேள்வி—சாஸ்திரமே வேண்டியதில்லை. ஒரு அதிருஷ்டம் முன் அதிருஷ்டத்தினால் உண்டாகிறது. அது அதற்கு முன் அதிருஷ்டத்தினால் என்று ஏன் சொல்லக்கூடாது—என்று.

பதில்.—இப்படியானால், உலகத்து வேலைகளிலும் "இதைச் செய், இதைச் செய்யாதே" என்று சொல்லாமலே ஒருவன் ஒரு வேலையைச் செய்யலாம். உதாரணம்—ஒரு வேலைக்காரனை யஜமானன் மாட்டைக் கொண்டுவா என்று சொல்லாமலே, வேலைக்காரன் தன் அதிருஷ்டத் தினாலோ, யஜமானன் அதிருஷ்டத்தினாலோ மாட்டைத் தானே கொண் டுவரலாமே?

4. இன்னுமொரு கேள்வி—அதிருஷ்டமே யஜமானனை மாட்டைக் கொண்டுவா என்று ஏவப்பண்ணுகிறது; வேலைக்காரனையும் உத்திரவைக் கேட்டு, மாட்டைக் கொண்டுவரும்படி செய்கிறது என்று ஏன் சொல் லக்கூடாது—என்று.

பதில்.—அப்படியே அதிருஷ்டம்தான் வைதிகமான வேலைகளி லும் 'இதைச் செய; இதைச் செய்யவேண்டாம்' என்று சாஸ்திரம் சொ ல்லும்படியும், அதைக் கேட்டு அதின்படி ஒருவன் வேலை செய்யும்படி யும் செய்கிறது. ஆகையால் ஒருவன் அதிருஷ்டத்தினால் வேலை செய் தாலும், சாஸ்திரத்திற்கு இடம் உண்டாகிறது.

# அட்டவணை.

## 17—வது அத்தியாயம்.



## 18—வது அத்தியாயம்.

## த்ரயோத³ஶோத்⁴யாய:

பூர்வஸ்மிந் ஷட்கே பரமப்ராப்யஸ்ய பரஸ்ய ப்³ரஹ்மணோ ப⁴க³வதோ வாஸுதே³வஸ்ய ப்ராப்த்யுபாயபூ⁴தப⁴க்திரூபப⁴க³வது³பாஸநாங்க³பூ⁴தம் ப்ராப்து: ப்ரத்யகா³த்மநோ யாதா²த்ம்யத³ர்ஶநம் ஜ்ஞாநயோக³கர்மயோக³லக்ஷணநிஷ்டா²த்³வயஸாத்⁴யமுக்தம் | மத்⁴யமே ச பரமப்ராப்யபூ⁴தப⁴க³வத்தத்த்வயாதா²த்ம்யதந்மாஹாத்ம்யஜ்ஞாநபூர்வகைகாந்திகாத்யந்திகப⁴க்தியோக³நிஷ்டா² ப்ரதிபாதி³தா | அதிஶயிதைஶ்வர்யாபேக்ஷாணாமாத்மகைவல்யமாத்ராபேக்ஷாணாம் ச ப⁴க்தியோக³ஸ்தத்தத³பேக்ஷிதஸாத⁴நமிதி சோக்தம் | இதா³நீமுபரிதநஷட்கே ப்ரக்ருதிபுருஷதத்ஸம்ஸர்க³ரூபப்ரபஞ்சேஶ்வரயாதா²த்ம்யகர்மஜ்ஞாநப⁴க்திஸ்வரூபதது³பாதா³நப்ரகாராஶ்ச ஷட்கத்³வயோதி³தா விஶோத்⁴யந்தே | தத்ர தாவத் த்ரயோத³ஶே தே³ஹாத்மநோ: ஸ்வரூபம், தே³ஹயாதா²த்ம்யஶோத⁴நம், தே³ஹவியுக்தாத்மப்ராப்த்யுபாய:, விவிக்தாத்மஸ்வரூபஸம்ஶோத⁴நம், ததா²வித⁴ஸ்யாத்மநஶ்சாசித்ஸம்ப³ந்த⁴ஹேது:, ததோ விவேகாநுஸந்தா⁴நப்ரகாரஶ்சோச்யதே—

ஶ்ரீப⁴க³வாநுவாச—

இத³ம் ஶரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபி⁴தீ⁴யதே |
ஏதத்³யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்³வித³: ||

இத³ம் ஶரீரம்—"தே³வோ(அ)ஹம் மநுஷ்யோ(அ)ஹம் ஸ்தூ²லோ(அ)ஹம் க்ருஶோ(அ)ஹமிதி" ஆத்மநா ஸஹ ஸாமாநாதி⁴கரண்யேந ப்ரதீயமாநம்-போ⁴க்துராத்மநோ(அ)ர்தா²ந்தரபூ⁴தம் தஸ்ய போ⁴க³க்ஷேத்ரமிதி ஶரீரயாதா²த்ம்யவித்³பி⁴ரபி⁴தீ⁴யதே | ஏதத்-அவயவஶ: ஸங்கா⁴தரூபேண ச "இத³மஹம் வேத்³மீ"தி யோ வேத்தி, தம்-வேத்³யபூ⁴தாத³ஸ்மாத்³வேதி³த்ருத்வேநார்தா²ந்தரபூ⁴தம் க்ஷேத்ரஜ்ஞ இதி தத்³வித³:-ஆத்மயாதா²த்ம்ய

[illegible]

||௧||

அவ— முதல் ஆறு அத்தியாயங்களில்—அடைய வேண்டியவைகளுக்குள் மிகவும் உயர்ந்த பரப்பிரும்மமும் பகவானுமான வாஸுதேவனை அடைவதற்காகச் செய்யவேண்டிய பக்தி என்கிற உபாஸநத்திற்கு அங்கமான (உதவியான) ஜீவனை உள்ளபடி பார்ப்பதை ஞானயோகத்தாலும், கர்மயோகத்தாலும் அடையலாம் என்று சொன்னார். நடு ஆறு அத்தியாயங்களில்,—அந்த பகவானின் உண்மையையும், அவனுடைய பெருமையையும் அறிந்து, அவனைத்தவிர வேறு தேவதையையும், பிரயோஜநத்தையும் நினைக்காமல், அவனையே தியானம் செய்யவேண்டுமென்று சொன்னார். பிரும்மபட்டத்தைக்காட்டிலும் உயர்ந்த பணத்தையும், தன்னை மாத்திரம் அநுபவிப்பது ஆகிய கைவல்லியம் என்பதையும் பக்தியோகத்தினாலே அடையலாம் என்றும் சொன்னார். இப்பொழுது கடைசி ஆறு அத்தியாயங்களில், கீழ் பனிரண்டு அத்தியாயங்களில் சொல்லிய ஸங்கதிகளைத் தெளிவாய் விசாரிக்கிறார். அவைக

ள்ளவன—பிரகிருதி, ஜீவன்—இவைகளின் சேர்க்கையான உலகம், ஈசுவரன்—இவர்களுடைய உண்மை; கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம்—இவைகளின் ஸ்வரூபம்; இவைகளைச் செய்யும் வழி—என்று.

அவைகளில் 13-வது அத்தியாயத்தில், உடம்பு, ஆத்மா இவைகளின் ஸ்வரூபமும், உடம்பினுடைய உண்மையும், உடம்பைக்காட்டிலும் வேறான ஆத்மாவை உள்ளபடி பார்ப்பதற்குச் செய்யவேண்டியவைகளும், அந்த ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபமும், இயற்கையில் குற்றமில்லாத ஆத்மா உடம்புடன்சேர்ந்ததற்குக் காரணமும், ஆத்மா உடம்பைக்காட்டிலும் வேறு என்று அறியும் வழியும் சொல்லப்படுகின்றன—

பகவான் சொல்லுகிறார்—

உலகத்தில் ஜனங்கள் 'நான் தேவன், நான் மனிதன், நான் பெருத்தவன், நான் இளைத்தவன்' என்று ஸுகத்தையும், துக்கத்தையும் அநுபவிக்கிற ஆத்மாவோடு ஒன்றாக உடம்பைச் சொல்லுகிறார்கள். இந்த உடம்பை—அதின் உண்மையை அறிந்தவர்கள் அந்த ஆத்மாவைக்காட்டிலும் 1 வேறு என்றும், அது அவனுக்கு ஸுகத்தையும், துக்கத்தையும் அநுபவிப்பதற்கு 2 க்ஷேத்திரம்(இடம்) ஆயிருக்கிறதென்றும் சொல்லுகிறார்கள். ஆத்மாவின் உண்மையை அறிந்தவர்கள் அந்த உடம்பை "என் உடம்பு" என்று முழுவதையும், "என் தலை, என் கை" என்று ஒவ்வொரு பாகத்தையும் 3

1 ஒரு வீட்டிலிருந்து ஸுகத்தை அநுபவிப்பவன் எப்படி அந்த வீட்டைக்காட்டிலும் வேறோ, அப்படியே உடம்பிலிருந்து ஸுகத்தை அநுபவிப்பவனும் உடம்பைக்காட்டிலும் வேறு.

2 க்ஷேத்திரம் என்ற சொல்லுக்கு வயல் என்றும் பொருள் கொள்ளலாம். எப்படி வயலில் நெல் விளைகிறதோ, அப்படியே உடம்பு கர்மங்களின் பலன்களும், மேல்கர்மங்களுக்கு விதையான வாஸனைகளும் உண்டாகும் இடமானதால், அதைக்ஷேத்திரம் (வயல்) என்றுசொல்லலாம்.

3 ஆத்மா அறிகிறது; உடம்பு அறியப்படுகிறது. ஆகையால் இவையிரண்டும் வேறு. ஒருவன் எதிரே நிற்கும் பொருளை அறியும் பொழுது, 'மனிதனான நான் இதைப்பார்க்கிறேன்." என்று என்னுகிறான். அப்பொழுது மனிதன் என்கிற உடம்புக்கும், 'நான் என்கிற

''நான் அறிகிறேன்'' என்று நான் என்கிற அறிகிறவனை அறிகிறபடியால், அறியப்படும் உடம்பைக்காட்டிலும் வேறானவன் என்றும், க்ஷேத்திரக்ஞன் (உடம்பை அறிகிறவன்) என்றும் சொல்லுகிறார்கள். [1]

க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்³தி⁴ ஸர்வக்ஷேத்ரேஷு பா⁴ரத।
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோர்ஜ்ஞாநம் யத்தஜ்ஜ்ஞாநம் மதம் மம ॥௨॥

தே³வமநுஷ்யாதி³ஸர்வக்ஷேத்ரேஷு வேதி³த்ருʼத்வைகாகாரம் க்ஷேத்ரஜ்ஞம் ச மாம் வித்³தி⁴—மதா³த்மகம் வித்³தி⁴। "க்ஷேத்ரஜ்ஞம் சாபி" இத்யபிஶப்³தா³த் க்ஷேத்ரமபி மாம் வித்³தீ⁴த்யுக்தமிதி க³ம்யதே। யதா² க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞவிஶேஷணதைகஸ்வபா⁴வதயா தத³ப்ருʼத²க்ஸித்³தே⁴ஸ்தத்ஸாமாநாதி⁴கரண்யேநைவ நிர்தே³ஶ்யம், ததா² க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞம் ச மத்³விஶேஷணதைகஸ்வபா⁴வதயா மத³ப்ருʼத²க்ஸித்³தே⁴ர்மத்ஸாமாநாதி⁴கரண்யேநைவ நிர்தே³ஶ்யௌ வித்³தி⁴। வக்ஷ்யதி ஹி க்ஷேத்ரஜ்ஞாத்ம ஸ்தா²வரஜங்க³மாத்மகயாவத்ஸாத்³ க்ஷராக்ஷரஶப்³த³நிர்தி³ஷ்டாத்³ த்³வயாத³ர்தா²ந்தரத்வம் பரஸ்ய ஸ்வரூபேண ஸ்வாமித்வேந ச ப⁴ரணாதி³பா⁴வாபத்தேஶ்ச பரஸ்ய "த்³வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஶ்சாக்ஷர ஏவ ச। க்ஷர: ஸர்வாணி பூ⁴தாநி கூடஸ்தோ²(அ)க்ஷர உச்யதே ॥ உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதா³ஹ்ருʼத:। யோ லோகத்ரயமாவிஶ்ய பி³ப⁴ர்த்யவ்யய ஈஶ்வர: ॥ யஸ்மாத் க்ஷரமதீதோ(அ)ஹமக்ஷராத³பி சோத்தம:। அதோ(அ)ஸ்மி லோகே வேதே³ ச ப்ரதி²த: புருஷோத்தம:" இதி। ப்ருʼதி²வ்யாதி³ஸங்கா⁴தரூபஸ்ய க்ஷேத்ரஸ்ய க்ஷேத்ரஜ்ஞஸ்ய ச ப⁴க³வச்ச²ரீரைகஸ்வபா⁴வஸ்வரூபதயா ப⁴க³வதா³த்மகத்வம் ஶ்ருதயோ வத³ந்தி—"ய: ப்ருʼதி²வ்யாம் திஷ்ட²ந் ப்ருʼதி²வ்யா அந்தரோ யம் ப்ருʼதி²வீ ந வேத³ யஸ்ய ப்ருʼதி²வீ ஶரீரம் ய: ப்ருʼதி²வீம்

---

ஆத்மாவுக்கும் வேற்றுமை தோன்றாது. ஆனாலும் மனிதன் என்கிற என் உடம்பை நான் பார்க்கிறேன் என்கிறபொழுது, உடம்பு வேறாகவும், ஆத்மா வேறாகவும் தோன்றுகிறது. அப்பொழுதுதான் அந்த வேற்றுமை தோன்றும். ஆகையால் அவையிரண்டும் வேறுதான்.

[illegible]

அத்ரேதம் தத்த்வம்—அசித்தத்த்வஸ்ய சித்தத்த்வஸ்ய பரஸ்ய ச ப்ரஹ்மணோ போக்யத்வேந போக்த்ருத்வேந சேஶித்ருத்வேந ச ஸ்வரூபவிவேகமாஹு: காஶ்சந ஶ்ருதய: “அஸ்மாந்மாயீ ஸ்ருஜதே விஶ்வமேதத் தஸ்மிம்ஶ்சாந்யோ மாயயா ஸந்நிருத்த:, மாயாம் து ப்ரக்ருதிம் வித்யாந்மாயிநம் து மஹேஶ்வரம், க்ஷரம் ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவீஶதே தேவ ஏக:”। அம்ருதாக்ஷரம் ஹர இதி போக்தா நிர்திஶ்யதே। ப்ரதாநம் போக்யத்வேந ஹரதீதி ஹர:। “ஸ காரணம் கரணாதிபாதிபோ ந சாஸ்ய கஶ்சிஜ்ஜநிதா ந சாதிப:, ப்ரதாநக்ஷேத்ரஜ்ஞபதிர்குணேஶ:, பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரம் ஶாஶ்வதம் ஶிவமச்யுதம், ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீஶநீஶௌ, நித்யோ நித்யாநாம் சேதநஶ்சேதநாநாமேகோ பஹூநாம் யோ விததாதி காமாந், போக்தா போக்யம் ப்ரேரிதாரம் ச மத்வா, ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரம் ச மத்வா ஜுஷ்டஸ்ததஸ்தேநாம்ருதத்வமேதி, தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்த்யநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி, அஜாமேகாம் லோஹிதஶுக்லக்ருஷ்ணாம் பஹ்வீம் ப்ரஜாம் ஜநயந்தீம் ஸரூபாம்। அஜோ ஹ்யேகோ ஜுஷமாணோऽநுஶேதே ஜஹாத்யேநாம் புக்தபோகாமஜோऽந்ய:, கௌரநாத்யந்தவதீ ஸா ஜநித்ரீ பூதபாவிநீ, ஸமாநே வ்ருக்ஷே புருஷோ நிமக்நோऽநீஶயா ஶோசதி முஹ்யமாந:। ஜுஷ்டம் யதா பஶ்யத்யந்யமீஶமஸ்ய மஹிமாநமிதி வீதஶோக:” இத்யாத்யா:॥

அத்ராபி “அஹங்கார இதீயம் மே பிந்நா ப்ரக்ருதிரஷ்டதா। அபரேயமிதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம்। ஜீவபூதாம், ஸர்வபூதாநி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம்। கல்பக்ஷயே புநஸ்தாநி கல்பாதௌ விஸ்ருஜாம்யஹம்॥ ப்ரக்ருதிம் ஸ்வாமவஷ்டப்ய விஸ்ருஜாமி புந: புந:। பூதக்ராமமிமம் க்ருத்ஸ்நமவஶம் ப்ரக்ருதேர்வஶாத்। மயாத்யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸசராசரம்। ஹேதுநாநேந கௌந்தேய ஜகத்விபரிவர்த்ததே। ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்த்யநாதீ உபாவபி।

𑌤𑌤𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌵𑌸𑍍𑌥𑌂 𑌕𑌾𑌰𑌣𑌾𑌵𑌸𑍍𑌥𑌂 𑌚 𑌜𑌗𑌤𑍍𑌸 𑌏𑌵𑍇𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌃 "𑌸𑌦𑍇𑌵 𑌸𑍋𑌮𑍍𑌯𑍇𑌦𑌮𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌦𑍇𑌕𑌮𑍇𑌵𑌾𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌮𑍍, 𑌤𑌦𑍈𑌕𑍍𑌷𑌤 𑌬𑌹𑍁 𑌸𑍍𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑍇𑌯𑍇𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍇𑌜𑍋𑌽𑌸𑍃𑌜𑌤" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌰𑌭𑍍𑌯, "𑌸𑌨𑍍𑌮𑍂𑌲𑌾𑌸𑍍𑌸𑍋𑌮𑍍𑌯𑍇𑌮𑌾𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌸𑍍𑌸𑌦𑌾𑌯𑌤𑌨𑌾𑌸𑍍𑌸𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌃 𑌐𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌮𑌿𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑌤𑍍𑌸𑌤𑍍𑌯𑌂 𑌸 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑌿 𑌶𑍍𑌵𑍇𑌤𑌕𑍇𑌤𑍋" 𑌇𑌤𑌿। 𑌤𑌥𑌾 "𑌸𑍋𑌽𑌕𑌾𑌮𑌯𑌤 𑌬𑌹𑍁 𑌸𑍍𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑍇𑌯𑍇𑌤𑌿 𑌸 𑌤𑌪𑍋𑌽𑌤𑌪𑍍𑌯𑌤 𑌸 𑌤𑌪𑌸𑍍𑌤𑌪𑍍𑌤𑍍𑌵𑌾 𑌇𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑌸𑍃𑌜𑌤" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌰𑌭𑍍𑌯, "𑌸𑌤𑍍𑌯𑌂 𑌚𑌾𑌨𑍃𑌤𑌂 𑌚 𑌸𑌤𑍍𑌯𑌮𑌭𑌵𑌤𑍍" 𑌇𑌤𑌿। 𑌅𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌚𑌿𑌦𑌚𑌿𑌤𑍋𑌃 𑌪𑌰𑌮𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌚 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌵𑌿𑌵𑍇𑌕𑌃 𑌸𑍍𑌮𑌾𑌰𑌿𑌤𑌃। "𑌹𑌨𑍍𑌤𑌾𑌹𑌮𑌿𑌮𑌾𑌸𑍍𑌤𑌿𑌸𑍍𑌰𑍋 𑌦𑍇𑌵𑌤𑌾 𑌅𑌨𑍇𑌨 𑌜𑍀𑌵𑍇𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌨𑍁𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑍍𑌯 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑍇 𑌵𑍍𑌯𑌾𑌕𑌰𑌵𑌾𑌣𑌿", "𑌤𑌤𑍍𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌤𑌦𑍇𑌵𑌾𑌨𑍁𑌪𑍍𑌰𑌾𑌵𑌿𑌶𑌤𑍍 𑌤𑌦𑌨𑍁𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑍍𑌯 𑌸𑌚𑍍𑌚 𑌤𑍍𑌯𑌚𑍍𑌚𑌾𑌭𑌵𑌤𑍍, 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌚𑌾𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌚 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌚𑌾𑌨𑍃𑌤𑌂 𑌚 𑌸𑌤𑍍𑌯𑌮𑌭𑌵𑌤𑍍" 𑌇𑌤𑌿 𑌚। "𑌅𑌨𑍇𑌨 𑌜𑍀𑌵𑍇𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌨𑍁𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑍍𑌯" 𑌇𑌤𑌿 𑌜𑍀𑌵𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌕𑌤𑍍𑌵𑌮𑍍 "𑌤𑌦𑌨𑍁𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑍍𑌯 𑌸𑌚𑍍𑌚 𑌤𑍍𑌯𑌚𑍍𑌚𑌾𑌭𑌵𑌤𑍍 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌚𑌾𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌚" 𑌇𑌤𑍍𑌯𑌨𑍇𑌨𑍈𑌕𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌾𑌤𑍍 𑌶𑌰𑍀𑌰𑌾𑌤𑍍𑌮𑌭𑌾𑌵𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌯𑌤𑍇। 𑌏𑌵𑌂 𑌚 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌵𑍍𑌯𑌾𑌕𑌰𑌣𑌂 "𑌤𑌦𑍍𑌧𑍇𑌦𑌂 𑌤𑌰𑍍𑌹𑍍𑌯𑌵𑍍𑌯𑌾𑌕𑍃𑌤𑌮𑌾𑌸𑍀𑌤𑍍 𑌤𑌨𑍍𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌵𑍍𑌯𑌾𑌕𑍍𑌰𑌿𑌯𑌤" 𑌇𑌤𑍍𑌯𑌤𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍। 𑌅𑌤𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌵𑌸𑍍𑌥𑌃 𑌕𑌾𑌰𑌣𑌾𑌵𑌸𑍍𑌥𑌶𑍍𑌚 𑌸𑍍𑌥𑍂𑌲𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌚𑌿𑌦𑌚𑌿𑌦𑍍𑌵𑌸𑍍𑌤𑍁𑌶𑌰𑍀𑌰𑌃 𑌪𑌰𑌮𑌪𑍁𑌰𑍁𑌷 𑌏𑌵𑍇𑌤𑌿 𑌕𑌾𑌰𑌣𑌾𑌤𑍍 𑌕𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌯𑌤𑍍𑌵𑍇𑌨 𑌕𑌾𑌰𑌣𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌕𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌤𑌤𑌯𑍈𑌕𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌚 𑌸𑌮𑍀𑌹𑌿𑌤𑌮𑍁𑌪𑌪𑌨𑍍𑌨𑌤𑌰𑌮𑍍॥

"𑌹𑌨𑍍𑌤𑌾𑌹𑌮𑌿𑌮𑌾𑌸𑍍𑌤𑌿𑌸𑍍𑌰𑍋 𑌦𑍇𑌵𑌤𑌾 𑌅𑌨𑍇𑌨 𑌜𑍀𑌵𑍇𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌨𑍁𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑍍𑌯 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑍇 𑌵𑍍𑌯𑌾𑌕𑌰𑌵𑌾𑌣𑌿" 𑌇𑌤𑌿 𑌤𑌿𑌸𑍍𑌰𑍋 𑌦𑍇𑌵𑌤𑌾 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌮𑌚𑌿𑌦𑍍𑌵𑌸𑍍𑌤𑍁 𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌶𑍍𑌯 𑌤𑌤𑍍𑌰 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌕𑌜𑍀𑌵𑌾𑌨𑍁𑌪𑍍𑌰𑌵𑍇𑌶𑍇𑌨 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌵𑍍𑌯𑌾𑌕𑌰𑌣𑌵𑌚𑌨𑌾𑌤𑍍, 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌵𑌾𑌚𑌕𑌾𑌶𑍍𑌶𑌬𑍍𑌦𑌾𑌃 𑌅𑌚𑌿𑌜𑍍𑌜𑍀𑌵𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨 𑌏𑌵 𑌵𑌾𑌚𑌕𑌾 𑌇𑌤𑌿 𑌕𑌾𑌰𑌣𑌾𑌵𑌸𑍍𑌥𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌵𑌾𑌚𑌿𑌨𑌾 𑌶𑌬𑍍𑌦𑍇𑌨 𑌕𑌾𑌰𑍍𑌯𑌵𑌾𑌚𑌿𑌨𑌶𑍍𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌯

𑌸𑌾𑌮𑌾𑌨𑌾𑌧𑌿𑌕𑌰𑌣𑍍𑌯𑌂 𑌚𑌾𑌵𑍍𑌯𑌾𑌹𑌤𑌮𑍍 । 𑌅𑌤𑌃 𑌸𑍍𑌥𑍂𑌲𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌚𑌿𑌦𑌚𑌿𑌤𑍍𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌚𑍇𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌪𑌾𑌦𑌾𑌨𑌂 𑌜𑌗𑌤𑍍 । 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌚𑌿𑌦𑌚𑌿𑌦𑍍𑌵𑌸𑍍𑌤𑍁𑌶𑌰𑍀𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌕𑌾𑌰𑌣𑌮𑌿𑌤𑌿 𑌜𑌗𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌪𑌾𑌦𑌾𑌨𑌤𑍍𑌵𑍇𑌽𑌪𑌿 𑌸𑌂𑌘𑌾𑌤𑌸𑍍𑌯𑍋𑌪𑌾𑌦𑌾𑌨𑌤𑍍𑌵𑍇𑌨 𑌚𑌿𑌦𑌚𑌿𑌤𑍋𑌰𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌶𑍍𑌚 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌾𑌸𑌂𑌕𑌰𑍋𑌽𑌪𑍍𑌯𑍁𑌪𑌪𑌨𑍍𑌨𑌤𑌰𑌃 । 𑌯𑌥𑌾 𑌶𑍁𑌕𑍍𑌲𑌕𑍃𑌷𑍍𑌣𑌰𑌕𑍍𑌤𑌤𑌨𑍍𑌤𑍁𑌸𑌂𑌘𑌾𑌤𑍋𑌪𑌾𑌦𑌾𑌨𑌤𑍍𑌵𑍇𑌽𑌪𑌿 𑌚𑌿𑌤𑍍𑌰𑌪𑌟𑌸𑍍𑌯 𑌤𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑌨𑍍𑌤𑍁𑌪𑍍𑌰𑌦𑍇𑌶 𑌏𑌵 𑌶𑍌𑌕𑍍𑌲𑍍𑌯𑌾𑌦𑌿𑌸𑌂𑌬𑌨𑍍𑌧 𑌇𑌤𑌿 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌯𑌾𑌮𑌪𑌿 𑌨 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌵𑌰𑍍𑌣𑌸𑌂𑌕𑌰𑌃; 𑌤𑌥𑌾 𑌚𑌿𑌦𑌚𑌿𑌦𑍀𑌶𑍍𑌵𑌰𑌸𑌂𑌘𑌾𑌤𑍋𑌪𑌾𑌦𑌾𑌨𑌤𑍍𑌵𑍇𑌽𑌪𑌿 𑌜𑌗𑌤𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌯𑌾𑌮𑌪𑌿 𑌭𑍋𑌕𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌭𑍋𑌗𑍍𑌯𑌤𑍍𑌵𑌨𑌿𑌯𑌨𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌯𑌸𑌂𑌕𑌰𑌃 । 𑌤𑌨𑍍𑌤𑍂𑌨𑌾𑌂 𑌪𑍃𑌥𑌕𑍍𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌯𑍋𑌗𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑍇𑌵 𑌪𑍁𑌰𑍁𑌷𑍇𑌚𑍍𑌛𑌯𑌾 𑌕𑌦𑌾𑌚𑌿𑌤𑍍𑌸𑌂𑌹𑌤𑌾𑌨𑌾𑌂 𑌕𑌾𑌰𑌣𑌤𑍍𑌵𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌚 । 𑌇𑌹 𑌤𑍁 𑌚𑌿𑌦𑌚𑌿𑌤𑍋𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌵𑌸𑍍𑌥𑌯𑍋𑌃 𑌪𑌰𑌮𑌪𑍁𑌰𑍁𑌷𑌶𑌰𑍀𑌰𑌤𑍍𑌵𑍇𑌨 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌤𑌯𑍈𑌵 𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌃 𑌪𑌰𑌮𑌪𑍁𑌰𑍁𑌷 𑌏𑌵 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌚, 𑌸 𑌏𑌵 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 𑌸𑌰𑍍𑌵𑌶𑌬𑍍𑌦𑌵𑌾𑌚𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑌃 । 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌭𑍇𑌦𑌸𑍍𑌤𑌦𑌸𑌂𑌕𑌰𑌶𑍍𑌚 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌰 𑌚 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌃 । 𑌏𑌵𑌂 𑌚 𑌸𑌤𑌿 𑌪𑌰𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌨𑍁𑌪𑍍𑌰𑌵𑍇𑌶𑍇𑌽𑌪𑌿 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌨𑍍𑌯𑌥𑌾𑌭𑌾𑌵𑌾𑌭𑌾𑌵𑌾𑌚𑍍𑌚𑌾𑌵𑌿𑌕𑍃𑌤𑌤𑍍𑌵𑌮𑍁𑌪𑌪𑌨𑍍𑌨𑌤𑌰𑌮𑍍 । 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌵𑌸𑍍𑌥𑌸𑍍𑌯 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌵𑌿𑌭𑌾𑌗𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌚𑌿𑌦𑌚𑌿𑌦𑍍𑌵𑌸𑍍𑌤𑍁𑌨 𑌆𑌤𑍍𑌮𑌤𑌯𑌾𑌽𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌤𑍍 𑌕𑌾𑌰𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑌪𑍍𑌯𑍁𑌪𑌪𑌨𑍍𑌨𑌮𑍍 । 𑌅𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌪𑌤𑍍𑌤𑌿𑌰𑍇𑌵 𑌹𑌿 𑌕𑌾𑌰𑍍𑌯𑌤𑌾 ॥

𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌵𑌾𑌦𑌾𑌶𑍍𑌚 𑌪𑌰𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌹𑍇𑌯𑌗𑍁𑌣𑌾𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌾𑌦𑍁𑌪𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 । “𑌅𑌪𑌹𑌤𑌪𑌾𑌪𑍍𑌮𑌾 𑌵𑌿𑌜𑌰𑍋 𑌵𑌿𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌵𑌿𑌶𑍋𑌕𑍋 𑌵𑌿𑌜𑌿𑌘𑌤𑍍𑌸𑍋𑌽𑌪𑌿𑌪𑌾𑌸𑌃” 𑌇𑌤𑌿 𑌹𑍇𑌯𑌗𑍁𑌣𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌧𑍍𑌯, “𑌸𑌤𑍍𑌯𑌕𑌾𑌮𑌃 𑌸𑌤𑍍𑌯𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌃” 𑌇𑌤𑌿 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌾𑌨𑍍𑌵𑌿𑌦𑌧𑌤𑍀𑌯𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌰𑍇𑌵𑌾𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑍇𑌨𑌾𑌵𑌗𑌤𑌂 𑌗𑍁𑌣𑌨𑌿𑌷𑍇𑌧𑌂 𑌹𑍇𑌯𑌗𑍁𑌣𑌵𑌿𑌷𑌯𑌂 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾𑌪𑌯𑌤𑌿 । 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿𑌵𑌾𑌦𑌾𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌶𑌕𑍍𑌤𑍇𑌰𑍍𑌨𑌿𑌖𑌿𑌲𑌹𑍇𑌯𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌨𑍀𑌕𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌾𑌕𑌰𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 𑌸𑍍𑌵-

ராஜஸ்ய நக்ஷயம் விபவ்யக்ஷாபோ ஜ்ஞாஸ்யதஜ்ஞத்யமதிவி
ஹுமேரண ॥ ॥ ௨ ॥

தேவன்—மனிதன் முதலான எல்லா உடம்புகளிலும் இருக்கும்—அறிவையே இயற்கையாகவுடைய-க்ஷேத்திரக்ஞர்களையும், அந்த உடம்புகளையும நான் என்று நினை. அதாவது—அந்த இரண்டும் எனக்கு உடம்புகள் என்று எண்ணு. "க்ஷேத்திரக்ஞர்களையும்" என்பதில் "உம்" என்கிற சொல்லாலே, க்ஷேத்திரங்களையும், (உடம்புகளையும்) நினை என்று ஏற்படுகிறது. உடம்பானது ஜீவனைவிட்டுப் பிரிந்திருக்காமலும், அவனுக்குப் பிரகாரமாகவேயுமிருக்கிறது. ஆகையாலே இந்த இரண்டையும் ஒன்ருகச் சொல்லுவது வழக்கம். அப்படியே உடம்புகளும், ஜீவன்களும் பகவானை விட்டு ஒருக்காலும் பிரிகிறதில்லை. அவனுக்குப்பிரகாரமாகவேயும் இருக்கின்றன [1] ஆகையாலே அவைகளையும் பகவானையும் ஒன்ருகச் சொல்லுகிறது. இப்படிச் சொல்லாமல், ஜீவனும், பகவானும் ஒன்று என்று பொருள் கொண்டால், 15-வது அத்தியாயத்தில் 16-வது சுலோகம் முதல் மூன்று சுலோகங்களில் பத்தர், முக்தர் என்று இருவகைப்பட்ட ஜீவன்களைக்காட்டிலும் நான் வேறுபட்டவன் என்று பகவான் சொல்லியிருப்பது விரோதிக்கும். ஐந்து பூதங்கள் சேர்ந்து உண்டான உடம்புகளும், அவைகளுக்கு ஆத்மாவான ஜீவன்களும் பகவானுக்கு எப்பொழுதும் உடம்பாகவே

1 உடம்பையும் அதிலிருக்கும் ஜீவனையும் ஒன்ருகச் சொல்லுவதற்கு எது காரணமோ, அதுவே இந்த இரண்டையும் பகவானையும ஒன்ருகச் சொல்லுவதற்குக் காரணம். அந்தக் காரணமாவது—உடம்பு ஜீவனை விட்டுப்பிரிந்திருக்காது. அப்படியே உடம்பும் ஜீவனும் பகவானைவிட்டுப் பிரிந்திருக்கமுடியாது. நம்முடைய உடம்பு ஒருக்கால் ஜீவனை விட்டுப்பிரிகிறது. இந்த இரண்டும் பகவானை விட்டு ஒருக்காலும் பிரிகிறதில்லை.

ஒரு வீட்டில் ஒரு மனிதன் இருந்தபோது அவனையும், வீட்டையும் கண்ணாலே வெவ்வேருகப் பார்க்கிறோம். வீடுபோலிருக்கிற உடம்பு கண்ணுக்குத் தோன்றுகிறது. அதற்குள் இருக்கும் ஆத்மா கண்ணுக்குத் தெரியவில்லை. அதனால் ஆத்மாவை உடம்பாகவே நினைக்கிரும். எப்பொழுதும் வீட்டையும், அதிலிருப்பவனையும் வேறென்று

இருக்கின்றன என்று வேதங்கள் சொல்லுகின்றன. அதனால் தான் எல்லா உலகத்தையும், பகவானையும் ஒன்றாகச் சொல்லுகிறது. இந்த கீதையிலேயே 10-வது அத்தியாயத்தில் முதலில் 20 வது சுலோகத்தில், பகவான் "நான் எல்லாவற்றிற்கும் ஆத்மா" என்று சொல்லி, கடைசியிலும் (39,42-சு) "எல்லாவற்றையும் நான் தாங்கிக்கொண்டிருக்கிறேன்" என்று சொல்லி, நடுவில் "நான் சூரியன், நான் சந்திரன், நான் மலை, நான் ஸமுத்திரம்" என்று உலகத்தையும் தன்னையும் ஒன்றாகச் சொல்லியிருக்கிறார். உடம்பும், ஜீவனும் வேறென்றும், அந்த இரண்டும் என்னுடைய உடம்பென்றும் நினைப்பதுதான் ஸரியானதென்றும் 1 அவசியம் வரவேண்டியதென்றும் என்னுடைய அபிப்பிராயம்.

இந்த சுலோகத்துக்குச் சிலபேர் சொல்லுகிறார்கள்—என்னை ஜீவனாக நினையென்று சொன்னபடியால், ஜீவனும் பிரும்மமும் ஒன்றென்று ஏற்படுகிறது. எப்படி ஒன்றாகும் என்றால்—பிரும்மமானது, ஈசுவரனாயிருக்கும்போதே, தன்னை அறியாமையாலே ஜீவனாக ஆகிறது. அந்த அக்ஞானம் போவதற்காக ஒன்றென்று உபதேசம் பண்ணுகிறார். உலகத்தில் கயிற்றைப் பாம்பாக நினைத்தவனுக்கு உண்மையை அறிந்தவனும், பொய் சொல்லாதவனுமான ஒருவன் "அப்பா! இது கயிறு, பாம்பு அன்று" என்று சொன்னால், அந்த தப்பு நினைவுபோகிறது. அதுபோல உண்

பல தடவை கண்டு, வேறென்று தீர்மானித்திருக்கிறபடியால், ஒரு வீட்டில் கண்ணால் காணமுடியாத ஒரு ஜாலக்காரனோ, அல்லது பிசாசோ உள்ளேயிருந்து கத்தினால், அந்த வீடு கத்துகிறதென்று ஒருவரும் சொல்லுகிறதில்லை. உடம்பில் இருக்கும் ஆத்மாவை ஒருவரும் ஒருக்காலும் பார்க்காதபடியால், உடம்பே பேசுகிறது, அதுவே அறிகிறது, அதுவே சாப்பிடுகிறது என்று சொல்லுகிறார்கள். உடம்பு அடியோடு கீழே விழுந்தால், அதற்கு இருந்த அறிவு போய்விட்டது என்றும் சொல்லுகிறார்கள்.

1 இந்த அறிவே சாஸ்திரத்தில் சொல்லிய எல்லா வேலைகளுக்கும் உதவியானது. ஆகையாலே எல்லாருக்கும் க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியது. ஆதலால் இதுவே எல்லாருக்கும் வரவேண்டியது என்று எல்லாருடைய க்ஷேமத்தையும் நினைக்கிறபகவானுடைய எண்ணமென்று கருத்து.

ஷமையை அறிந்தவனும், பொய் சொல்லாதவனுமான பகவானுடைய உபதேசத்தினால், பிரும்மத்தினுடைய அக்ஞானம் போகிறது—என்று.

அவர்களைக் கேட்கவேணும்—இப்போது உபதேசம் பண்ணுகிற-பகவானும், எல்லா உலகத்துக்கும் மஹாராஜாவாயுமான—வாஸுதேவன் ஆத்மாவை உள்ளபடி பார்த்து, அக்ஞானம் போனவனா, இல்லையா?—என்று. அக்ஞானம் போயிருந்தால், 'நான் ஒருவன்தான் இருக்கிறேன், வேறொன்றும் கிடையாது' என்று தன்னை அறிந்திருக்கும்போது, தன்னைக்காட்டிலும் வேறாக அர்ஜுநன் முதலானவர்களைப் பார்ப்பதும், அவர்களுக்கு உபதேசிப்பதும் நடக்காது. அக்ஞானம் இருந்தால்தானே இன்னொருவர் இருப்பதாகத் தோன்றும். இவருக்குத்தான் அக்ஞானம் போய்விட்டதே. அக்ஞானம் போகாமலிருந்தால், உள்ளபடி அறியாத இவர் இன்னொருவருக்கு எப்படி உபதேசம் பண்ணுகிறது. 4-வது அத்தியாயம் 34-வது சுலோகத்தில் "உண்மை அறிந்தவர்கள் உபதேசிப்பார்கள்" என்று சொல்லியிருக்கிறாரே. ஆகையாலே கீழ்ச்சொன்ன வார்த்தைகள் வேதம் ஸ்மிருதி, இதிஹாஸம், புராணம், யுக்தி, தங்களுடைய முன் பின் வார்த்தைகளுக்குவிரோதம்—இவைகளைக்கவனியாமல் சொல்லப்பட்டவை1.

1. பகவான் உலகத்தில் பலபேர்களைக் கொண்டு பல மதங்களை ஏற்படுத்தியிருக்கிறார். எதற்காக என்றால், உண்மையைக் கண்டு பிடிக்கும் சக்தி எந்த ஜீவன்களுக்கு இருக்கிறதென்றுபார்ப்பதற்காக.உதாரணம். உலகததில் வழுக்குமரம் என்று ஒன்றை ஏற்படுத்தி, அதின் நுனியில் கால் ரூபாயைக்கட்டி வைக்கிறது. அந்த மரத்தை முதலில் ஸக்கமாய் இழைத்து, அதின்மேல் ஆமணக்கெண்ணெயைத்தடவி, அதின்பேரில் புளியங்கொட்டைப் பசையைத்தடவி, அதில் ஒருவன் ஏறும்போது ஜலத்தை வாரி இறைப்பது வழக்கம். அப்படிச் செய்யும்போதும், ஒரு கெட்டிக்காரன் அதில் ஏறி அநத ரூபாயைக்கொண்டுவநது விடுகிறான். அவன் படுகிறபாடு அந்தக் கொஞ்ச ரூபாய்க்கா? அன்று. தன் ஸாமர்த்தியததைக் காண்பிப்பதற்காக. அதுபோல. மிகவுமுயர்ந்த புத்திமான்களுக்கு உதாரணமாகச்சொல்லப்படுகிற பிருஹஸ்பதி உடம்பைத்தவிர வேறொன்றும கிடையாது என்கிற சார்வாகமதத்தை ஏற்படுததினார். அவ்வளவு புத்தியில்லாவிட்டால், இந்த மதத்தை ஏற்படுத்த முடியாது.

வேதம் முதலானவைகளுக்கு விரோதமில்லாத உண்மையான அர்த்தம் எதுவென்றால்—(1) அறிவில்லாதது, (2) அறிவுள்ள ஜீவன்கள், (3) இந்த இரண்டிற்கும் யஜமானனை பிரும்மம், இந்த மூன்றையும், முறையே அநுபவிக்கத்தகுந்தது, அநுபவிக்கிறவர்கள், இந்த இரண்டையும் அடக்கி ஆளுகிறவன்—என்று வெவ்வேறாக சில வேதவாக்கியங்கள் சொல்லுகின்றன. இந்த கீதையிலும் சொல்லியிருக்கிறது. (7-அ,4-5-சு;9-வது அத்,7-8-10-சு; 13-வது அத்-19-சு;14-வது அத்,3-சு). அந்த இரண்டும் பகவானுக்கு உடம்பாயிருப்பதால் அவனுக்கு அதீநமாயிருப்பதாலே, அவனைவிட்டுப் பிரியாமலிருக்கிறதென்றும், அவன் அவைகளுக்கு ஆத்மாவென்றும் சில வேத வாக்கியங்கள் சொல்லுகின்றன. ஒரு ஸமயத்தில் அறிவில்லாத வஸ்துக்களும், அறிவுள்ள ஜீவன்களும் ஒன்றோடொன்று சேர்ந்து, தேவன்-மனிதன்-மாடு முதலானது-மரம் முதலானது-என்று இந்த நான்கு பிரிவோடு இப்போது காணப்படுகிற உலகமாக ஆகிறது. இதை ஸிருஷ்டிகாலம் என்று சொல்லுகிறது. இன்னொரு காலத்தில் அறிவில்லாத வஸ்துக்கள் பிரகிருதி என்கிற ஒரே வஸ்துவாயும், ஜீவன்கள் தேவன் முதலான உடம்புகளும், இந்திரியங்களுமில்லாமல் பிரகிருதியோடு சேர்ந்து, அறிவில்லாதவைகள் போலவும் இருக்கின்றன. இவையிரண்டும் தனித்துச் சொல்ல முடியாதபடி பிரும்மத்துடன் சேர்ந்திருக்கிறது. இதைப் பிரளயகாலம் என்று சொல்லுகிறது. உலகமாயிருந்த அந்த இரண்டை காரியம் (உண்டானது) என்றும், பிரகிருதியும்,: உடம்பில்லாத ஜீவன்களுமாயிருந்த அந்த இரண்டை காரணம் (உண்டுபண்ணுகிறது) என்றும் சொல்லுகிறது. காரியமாயிருக்கும்போது அவைகள் ஸ்தூலமாயும் (பெரிதாயும்), காரணமாயிருக்கும்போது ஸூக்ஷ்மமா (சின்

---

இந்த மாதிரி மதங்களுக்குள் உண்மையான மதம் இன்னதென்பதைத் தைவத்தினுடையவும், தைவத்தை நன்றாய் அறிந்து, ஸூகத்தை அடைந்த பெரியோர்களுடையவும் பெரிய அருளினாலும், உபதேசத்தாலும் அறியவேணும். அறிவது மிகவும் வருத்தம். அதை அறியவிரும்புகிறவனுக்குத் துளியேனும் கோபம், பிடிவாதம் முதலான கெட்டகுணங்கள் கூடாது,

னதா)யுமிருக்கின்றன. இவையிரண்டும் எப்போதும் (அதாவது சின்னதாயிருக்கும்போதும், பெரிதாயிருக்கும்போதும்) பகவானுக்கு உடம்பாயிருக்கிறது என்றும், பகவான் அவைகளுக்கு ஆத்மாவென்றும் சில வாக்கியங்கள் சொல்லுகின்றன. அதாவது— இப்போது பலவிதமாய் காணப்படும் உலகம் பிரளய காலத்தில் இன்னொரு வஸ்துவோடு சேர்ந்திருக்கச் செய்தேயும், சேர்ந்திருக்கிறதென்று அறியமுடியாத பிரும்மமாயிருந்தது. அப்படியிருந்த பிரும்மம் "நான் 1 பலவிதமான உலகமாக ஆகவேணுமென்று ஒரு ஸமயத்தில் எண்ணி, உடனே தேஜஸ்ஸை உண்டுபண்ணிற்று" என்று சொல்லியிருக்கிறது. முதலில் இந்த உலகம்

---

1 பிரும்மம் தன் உடம்புகளைக் கொண்டு தானே உலகத்தை உண்டுபண்ணுகிறது என்பதை ஜீவன்கள் அறிவதற்காக வேதம் உதாரணமாகச் சிலந்தைப் (எட்டுக்கால்) பூச்சியைச் சொல்லுகிறது. அந்தப் பூச்சி தன் வாயில் வருகிற நூலைக் கொண்டு தன் கால்களாலே சாப்பாட்டுக்காகவும், தன் இருப்பிடத்துக்காகவும் ஒரு பெரியவலை பின்னுகிறது. பிறகு ஒருசமயத்தில் அந்த நூலை விழுங்கி விடுகிறது. எப்படியென்றால், சின்னப் பூச்சிகள் அந்த வலையில் விழுகின்றன. நூலில் பிசுக்குஇருப்பதால், அந்தப் பூச்சிகள் மாட்டிக்கொள்ளுகின்றன. அந்த வலையின் நடுவிலிருக்கிற சிலந்தைப் பூச்சி உடனேவந்து, தன்வாயிலிருக்கும் நூல்களைக் கொண்டு காலால் அந்தப் பூச்சியை மூடிவிட்டு, பிறகு அதைச் சாப்பிடுகிறது. அந்த வலைக்கு வேண்டியதிரவியமும்(உபாதாநகாரணம்), உண்டு பண்ணுகிற அறிவுள்ளதும் (நிமித்தகாரணமும்) அந்தப் பூச்சியே. அது தன் உடம்பினால் தானே வலைபின்னுவது போல், பிரும்மமும் தன் உடம்பைக் கொண்டே தானே இந்த உலகத்தை உண்டுபண்ணிற்று. ஒரு உதாரணத்தின் ஸங்கதி முழுவதையும் எடுத்துக் கொள்ளக் கூடாது. சிலவற்றைத்தான் எடுத்துக் கொள்ளவேணும். அந்தப் பூச்சியிலிருக்கும் ஜீவன் அந்தப் பூச்சி உடம்பைவிட்டுப் பிரியக் கூடியது. இந்தப் பிரகிருதி, ஜீவன்—ஆகிய தன் உடம்பான இந்த இரண்டையும் விட்டு பிரும்மம் ஒருக்காலும் பிரிகிறதில்லை. அந்தப் பூச்சி வலையை ஒரு இடத்தில் மாட்டிப் பின்னுகிறது. உலகத்தை உண்டு பண்ணுவதற்கு பிரும்மத்துக்கு தன் உடம்புகளைத் தவிர வேறொரு வஸ்துவும் வேண்டாம். தன்உடம்பைக்கொண்டேதானே ஒருவஸ்துவை உண்டு பண்ணுவதற்கு மாத்திரம் அந்தப் பூச்சி உதாரணம். பகவான் தன் உண்மையை ஜீவன்கள் அறியவேணுமென்று கவலைப் படுவதற்கு அளவில்லை.

பிரும்மமாயிருந்தது என்றும், பிறகு நான் உலகமாக ஆகவேணு மென்று எண்ணி, அப்படி எண்ணின பிரும்மம் தேஜஸ்ஸை உண்டு பண்ணிற்று என்றும் சொன்னால், அது தேஜஸ்ஸாக ஆயிற்று என்று தான் பொருள். அதாவது தேஜஸ்ஸின் உருவமாக ஆயிற்று. அந்தப் பிரும்மம் “ஜீவனாகிய நான் உடம்புகளில் நுழைந்து, உருவங்களையும், பெயர்களையும் அடையவேணும்” என்று நினைத்தது என்றும் சொல்லியிருக்கிறது. இதனால் உடம்பு வேறு; அதில் நுழைந்த ஜீவன் வேறு; இவையிரண்டுக்கும் ஆத்மாவான தைவம் வேறு—ஆக மூன்று வஸ்து இருக்கிறதாக ஏற்படுகிறது. மனிதன் என்கிற உடம்பில் ஜீவன் நுழைந்திருப்பதால், மனிதன் என்கிற பெயர் ஜீவனுக்கு வந்தது. இவையிரண்டிலும் தைவம் நுழைந்திருப்பதால், மனிதன் என்கிற பெயர் தைவத்துக்கும் வந்தது. இந்த உருவமும், இந்தப் பெயரும் தைவத்தினுடையது. இதுமாதிரியே எல்லா உருவங்களும் எல்லாப் பெயர்களும் தைவத்தினுடையது. ஆகையால் “தைவமே உலகமாக இருக்கிறது” என்பதற்கு இதுதான் பொருள்.

ஒரு பெரியவர் ஒருவரைப் பார்த்து, “எந்த ஒருவஸ்துவை அறிந்தால், இந்த எல்லா உலகமும் அறியப்பட்டதாக ஆகுமோ, அதை உன் குருவினிடத்தில் கேட்டாயா! என்று கேட்டார். பிரும்மத்தை அறிந்தால் உலகத்தை அறிந்ததாக எப்படி ஆகுமென்றால் ஸூக்ஷ்மமாக (சின்னதாக) இருந்த பிரும்மமே ஸ்தூலமாக (பெரிதான உலகமாக) ஆனபடியால், பிரும்மத்தை அறிந்தால், உலகத்தையும் அறிந்ததாக ஆகிறது. இப்படி ஆகிறபடியால் தான் அந்தப் பெரியவர் அப்படி கேட்டார். உலகத்தில் சட்டிப்பானைக்கு மண்ணை உபாதானகாரணம் என்று சொல்லுகிறது. அதாவது எந்தவஸ்து எந்தவஸ்துவாக ஆகிறதோ, அது அதற்கு உபாதானகாரணம். கட்டியாக இருந்த மண் தான் சட்டிப்பானையாக ஆயிற்று.

---

எந்த உதாரணத்தைக் காட்டுவோம். எந்த வேலையைச் செய்வோம எந்தக் கதையை எழுதுவோம. வேதத்தில் சொல்லியபடி எந்தப் பூச்சியைக் காண்பிப்போம், இன்னும் எந்த அநுபவத்தைக் கொடுப்போம், என்று நினைத்து, எல்லாவேலைகளையும் செய்கிறான். வேதம் இந்த உதாரணத்தைக் காட்டியதால் இது தோன்றுகிறது.

அந்த கட்டியான மண்ணைச் சட்டிப்பானையாகப் பண்ணின குயவனை அதற்கு நிமித்தகாரணம் என்று சொல்லுகிறது. இந்த இடத்தில் மண்ணுக்குப் குயவனுக்கும் தொட்டுப்பண்ணினது தவிர வேறு உறவு கிடையாது. ஆகையால் சட்டிப்பானைக்கு உபாதான காரணம் வேறு; நிமித்தகாரணம் வேறு. காணப்படும் உலகத்தை யுண்டுபண்ணுகிறதான பிரகிருதியும், ஜீவனும் தைவத்துக்கு எப்பொழுதும் உடம்பாயிருந்து, தைவத்தைவிட்டு ஒருக்காலும் பிரியாதிருப்பதாலும், அந்த தைவமே உலகத்துக்குக் குயவன் ஸ்தானத்திலிருப்பதாலும், உண்டான உலகமும் தைவத்துக்கு உடம்பாக இருப்பதாலும், உலகத்துக்கு உபாதானகாரணமும், நிமித்தகாரணமும் பிரும்மமே உண்டானதும் பிரும்மம்; உண்டு பண்ணினதும் பிரும்மம்.

பிரகிருதி அறிவில்லாதது. ஜீவன்கள் தைவத்தினால் கொடுக்கப்பட்ட அறிவுள்ளவர்கள். தைவத்திற்கு எப்பொழுதும் அறிவு இருக்கிறது. ஜீவனுக்குப்போல் அது ஒருக்கால் சுருங்கி, ஒருக்கால் விரிவையடைகிறது என்று கிடையாது. தைவத்தின் அறிவு எப்போதும் சுருங்காமலே இருக்கிறது. அந்த அறிவு ஒருவரால் கொடுக்கப்பட்டதுமன்று இப்படிப்பட்ட மூன்று வஸ்துக்களும் எப்போதும் சேர்ந்திருந்து, பெரிதான உலகமாக ஆனால், ஒன்றின் குணம் இன்னொன்றுக்கு வந்துவிடாதோ? சிகப்புச்சாயமுள்ள நூலோடு வெள்ளை நூலைச் சேர்த்துத் தண்ணீரில் நனைத்தால், சிகப்புச்சாயம் வெள்ளை நூலில் வரவில்லையோ; அதுபோல்—என்றால்—கொஞ்சம் தண்ணீரில் உப்பு—புளி—மிளகாய்—மூன்றைச் சேர்த்துக் கரைத்தால், இந்த மூன்றையும் அந்தத் தண்ணீரைவிட்டு எப்போதாவது பிரிக்கமுடியுமா; அப்படிப் பிரிக்கமுடியாமல் சேர்ந்திருக்கிற இவை மூன்றில் உப்பு புளியாகுமா? புளி உப்பாகுமா? ஒரு ரஸம் இன்னொரு ரஸமாகுமோ? நன்றாகச் சாயம் ஏற்றப்பட்ட வெள்ளை—சிகப்பு—கருப்பு—என்கிற மூன்றுவித நூற்களால் ஒரு துணியை நெய்தால், இந்த மூன்று நூல்களும் ஒன்றோடொன்று சேர்ந்திருந்தாலும், ஒருவித நூல் இன்னொருவித நூலாகுமோ? ஆகாது. அதுபோலவும். கீழ்ச்சொன்ன மூன்று வஸ்துக்களிலும் ஒன்றின் ஸ்வபாவம் இன்னொன்றுக்குவருகிறதில்லை

லை. உதாரணத்தில் மூன்று வஸ்துக்கள் ஒரு ஸமயம் தனியாக இருக்கும். ஒரு ஸமயம் சேரும். கீழ்ச்சொன்ன இந்த மூன்றும் எப்பொழுதும் சேர்ந்தே இருக்கின்றன. இதுதான் உதாரணத்துக்கும் இதுக்கும் வித்தியாஸம்.

குழந்தையாயிருந்த ஜீவன் ஆளாகவும், கிழவனாகவும் ஆகிற போது, மாறுபாடு உடம்பில்தானே ஒழிய, ஜீவஸ்வரூபத்தில் எப்படி இல்லையோ, அதுபோல் பிரகிருதியாயிருந்த பிரும்மம் உலகமாக ஆனாலும், பிரும்மத்தில் மாறுபாடு இல்லை. ஆகையால் பிரும்மத்துக்கு மாறுபாடில்லை என்கிற வேதத்துக்கு விரோதமில்லை. பிரகிருதியாயிருந்த பிரும்மம் உலகமாக ஆனதால், பிரும்மம் உண்டாயிற்று என்றும் சொல்லலாம். பிரும்மம் உண்டாயிற்று என்பதற்கு பிரகிருதி உருவமான பிரும்மம் உலக உருவமாயிற்று என்று பொருள்.

பிரும்மத்துக்குக் குணமில்லையென்று ஒரு இடத்திலும், இன்னொரு இடத்தில் பாபம், கிழத்தனம், சாவு, துக்கம், பசி, தாஹம் இவைகள் இல்லையென்று சொல்லி, ஸத்தியகாமன் (நிலையான அநுபவிக்கத்தகுந்த வஸ்துக்களையுடையவன்) என்றும், ஸத்தியஸங்கல்பன் (நினைத்தவேலையைத் தவராமல் நடத்துபவன்) என்றும் இரண்டு ஸங்கதிகள் சொல்லியிருக்கின்றன. இந்த இடத்தில் கெட்ட குணங்களை இல்லையென்று சொல்லி, நல்ல குணங்களைச் சொன்னதினாலே, குணமில்லை என்கிற சொல்லுக்கு கெட்ட குணங்கள் இல்லை என்று தான் பொருள் கொள்ளவேணுமென்று வேதத்தினாலேயே ஏற்படுகிறது ஒரு இடத்தில் பிரும்மம் அறிவு என்று சொல்லியிருக்கிறது. அதற்கு அறிவு உள்ளவன் என்றுதான் பொருள். பிரும்மத்திற்கு அறிவு என்கிற குணம் மிகவும் உயர்ந்ததாயும் முக்கியமாயுமிருப்பதால், அதை அந்த குணமாகவே சொல்லிற்று; அதற்கு உதாரணம்—உயர்ந்த ஒட்டு மாம்பழத்தை இது நல்ல தித்திப்பு என்றும், உயர்ந்த அழகுள்ள ஒருவனை இவன் நல்ல அழகு என்றும், மாழியம் அய்யங்காரைப் பார்த்து லா (சட்டம்) போகிறது என்றும் சொல்வதுபோல. உலகத்தில் யாரிடத்தில் எந்த குணம் மிகவும் உயர்ந்ததாக இருக்கிறதோ, அவரை அந்த குணமாகவே சொல்வது வழக்கம் இன்னொரு

விதம்—ஞானம் என்பதற்கு தானாகத்தோன்றுகிறது என்றும் பொருள். இசனுலேயும் அனாத ஞானம் (அறிவு) என்று சொல்லி யிருக்கிறது. அதைத் தவிர பிரும்மத்துக்கு அறிவு இல்லையென்று சொல்லமுடியாது. ஏனென்றால் வேதம் முழுமையும் பிரும்மத்தை "அறிவுள்ளது" என்றும், "ஆசைப்பட்டது" என்றும், "பார்த்து" என்றும் சொல்லுகிறது.

உலகத்தில் பிரும்மத்தைக்காட்டிலும் வேறான வஸ்து இல்லையென்று ஒரு இடத்தில் சொல்லியிருக்கிறது. அதற்கு-எல்லாம் பிரும்மத்துக்கு உருவமாகையால், பிரும்மம் நுழையாதவஸ்து இல்லையென்று பொருள். உதாரணம்:—பத்து பிராமணர்கள் இருக்கும்போது, இதில் ஒருவன் பிராமணர்கள்மாத்திரம் கேட்கத்தக்க ஸங்கதியை சொல்ல ஆரம்பிக்கும் ஸமயத்தில், நாலுபக்கமும் பார்த்து, இங்கே அன்னியர்கள் ஒருவரும் இல்லையே என்று கேட்கிறான். இந்த இடத்தில் அன்னியர்கள் என்பதற்கு வேறு என்று பொருள்கொள்ளக்கூடாது. ஏனென்றால்வெவ்வேறானபத்துப்பேர்கள் இருக்கிறார்களே. ஆகையால் அன்னியர்கள் என்பதற்கு பிராமணரல்லாதவர்கள் என்று பொருள். அதுபோல. எல்லா உலகத்தையும் பிரும்மத்தின் உருவம் என்கிற ஸங்கதியால் ஒன்றாகப் பார்க்கவேணும். வேறாகப் பார்த்தால், ஸம்ஸாரியாவன் என்று சொல்லியிருக்கிறது. இதே ஸங்கதியை இனனொரு இடத்திலும் சொல்லியிருக்கிறது. அதாவது-எந்த வஸ்துவைப் பிரும்மத்தைக் காட்டிலும் வேறாகஒருவன் நினைத்தானே, அது அவனை அவமானம் செய்துவிடும். அதாவது-அந்த நினைவு தப்பானதால், அவமானம் வந்துவிடும். ஆகையால் அறிவுள்ளது. அறிவில்லாதது, தைவம் என்கிற மூன்றும் வெவ்வேறென்றும், இவைகளுடைய ஸ்வபாவம் வெவ்வேறென்றும், பிரும்மம் உண்டுபண்ணுகிறது, மறறவைகள் உண்டாகிறவைகளென்றும், உண்டுபண்ணினதும் உண்டானதும் ஒன்றென்றும் சொல்லுகிற எல்லா வேதங்களுக்கும் ஒருவிதமான விரோதமுமில்லையென்று வேதங்களாலேயே ஏற்படுகிறபடியால், பிரும்மத்துக்கு அறிவில்லையென்றும், சிலவஸ்துக்களின் சேர்க்கையால் பிரும்மமே வேறாகிறதென்றும்—இவைமுதலான வார்த்தைகளுக்கு இடமேயில்லை. வேதங்கள் ஒன்றோடொன்று பொருந்த

வில்லையென்று எண்ணி, பொருத்தம் பண்ணுவதற்காகத் தான் இந்தமாதிரி பெரியோர்கள் சொல்லுகிறார்கள். [2]

𑌤𑌤𑍍𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌯𑌚𑍍𑌚 𑌯𑌾𑌦𑍃𑌕𑍍𑌚 𑌯𑌦𑍍𑌵𑌿𑌕𑌾𑌰𑌿 𑌯𑌤𑌶𑍍𑌚 𑌯𑌤𑍍 ।
𑌸 𑌚 𑌯𑍋 𑌯𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑌶𑍍𑌚 𑌤𑌤𑍍𑌸𑌮𑌾𑌸𑍇𑌨 𑌮𑍇 𑌶𑍃𑌣𑍁 ॥௩॥

𑌤𑌤𑍍𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌯𑌚𑍍𑌚-𑌯𑌦𑍍𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌂। 𑌯𑌾𑌦𑍃𑌕𑍍𑌚-𑌯𑍇𑌷𑌾𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑌭𑍂𑌤𑌂। 𑌯𑌦𑍍𑌵𑌿𑌕𑌾𑌰𑌿-𑌯𑍇 𑌚𑌾𑌸𑍍𑌯 𑌵𑌿𑌕𑌾𑌰𑌾𑌃। 𑌯𑌤𑌶𑍍𑌚-𑌯𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌧𑍇𑌤𑍋𑌰𑌿𑌦𑌮𑍁𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌂। 𑌯𑌸𑍍𑌮𑍈 𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌾𑌯𑍋𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃। 𑌯𑌚𑍍𑌚-𑌯𑌤𑍍𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌚𑍇𑌦𑌂। 𑌸 𑌚 𑌯𑌃-𑌸 𑌚 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑍋 𑌯𑌃-𑌯𑌤𑍍𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌃। 𑌯𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑌶𑍍𑌚-𑌯𑍇 𑌚𑌾𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑌾𑌃। 𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌸𑌮𑌾𑌸𑍇𑌨-𑌸𑌂𑌕𑍍𑌷𑍇𑌪𑍇𑌣 𑌮𑍇 𑌶𑍃𑌣𑍁 ॥ ௩ ॥

க்ஷேத்திரம் (இடம்) என்று சொல்லப்பட்ட அந்த உடம்பு என்ன திரவியம்? அதில் இருக்கப்பட்ட வஸ்துக்கள் என்ன? அதனால் என்ன உண்டாகின்றன? என்ன பிரயோஜனத்துக்காக உண்டாயிற்று? அதின் ஸ்வரூபம் என்ன? க்ஷேத்திரக்ஞன் (இடத்தை அறிந்தவன்) என்று சொல்லப்பட்ட அதற்கு ஆத்மாவான ஜீவனுடைய ஸ்வரூபம் என்ன? அவனுடைய உயர்ந்த ஸக்திகள் என்ன? இவை எல்லாவற்றையும் சுருக்கமாகச் சொல்லுகிறேன் 1 [3]

அவ— தான் சொல்லப்போகிற ஸங்கதிகள் இதிஹாஸம், ராணம், மீமாம்ஸை (அதாவது யுக்தி)-இவைகளுக்கு ஒத்ததான தங்களால் சொல்லப்படுகின்றன என்று சொல்லுகிறார்—

𑌋𑌷𑌿𑌭𑌿𑌰𑍍𑌬𑌹𑍁𑌧𑌾 𑌗𑍀𑌤𑌂 𑌛𑌨𑍍𑌦𑍋𑌭𑌿𑌰𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑍈𑌃 𑌪𑍃𑌥𑌕𑍍 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌸𑍂𑌤𑍍𑌰𑌪𑌦𑍈𑌶𑍍𑌚𑍈𑌵 𑌹𑍇𑌤𑍁𑌮𑌦𑍍𑌭𑌿𑌰𑍍𑌵𑌿𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑍈𑌃 ॥

𑌤𑌦𑌿𑌦𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌂 𑌋𑌷𑌿𑌭𑌿𑌃-𑌪𑌰𑌾𑌶𑌰𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌬𑌹𑍁𑌧𑌾-𑌬𑌹𑍁𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌂 𑌗𑍀𑌤𑌂 [illegible] 𑌤𑌯𑌾

1. இரண்டாவது அத்தியாயத்தில் உடம்புவேறு ஜீவன்வேறு என்றும், ஏழாவது அத்தியாயம் ஆரம்பத்தில் இரண்டும் பகவானுக்கு உடம்புகள் என்றும் சொல்லப்பட்டது. அந்தஸங்கதிகளையே இந்த அத்தியாயம் முதல் இரண்டுசுலோகங்களாலே சொல்லி, உடம்புவேறு ஜீவன் வேறு என்பதை இந்த அத்தியாயத்திலும், இந்தஇரண்டைக்காட்டிலும், பகவான் வேறு என்பதை 15-வது அத்தியாயத்திலும் விரிவாய்ச்சொல்லப்போகிறது.

நிரூபயாஞ்சக்ரு:। "நவியதச்ருதே"ரித்யாரப்ய க்ஷேத்ரப்ர காரம் நிரூப்ய உக்த:। "நாத்மா ச்ருதேர்நித்யத்வாச்ச தாப்ய:" இத்யாரப்ய "ஜ்ஞோऽத ஏவ" இத்யாதிபி: க்ஷேத்ரஜ்ஞயாதாத்ம்யம் நிரூப்ய உக்த:। "பராத்து தச்ச்ருதே"ரிதி பகவத்ப்ரவர்த்யத்வேந ஸஹவத்த்வாத்கைர்நிர்ணீதம்। ஸர்வம் ஸஹேதுகம் நிர்ணீதம்। க்ஷேத்ரஜ்ஞயாதாத்ம்யம் யை: ஸம்க்ஷேபேண ஸுவ்யக்தமுக்தம் ச்ருணு தந்மே ஸ்ருணு இத்யர்த:॥ ॥ச॥

கீழ்ச்சொன்னதும் சொல்லப்போகிறதுமான உடம்பினு டையவும் ஜீவனுடையவும் உண்மையைப்பற்றி, பராசரர் முதலா ன அநேகருஷிகள் அநேகவிதமாக, அதாவது-பலவிதமான உதார ணங்களைக்காட்டி, சொல்லியிருக்கிறார்கள். ஒரு ஜீவன் உடம்பையும் இந்திரியங்கள் முதலானவைகளையும் கொண்டு, உயர்ந்த ஸ்தானத் தை அடையவேண்டுமென்பதற்கு உதாரணமாக ஒருவன் வண் டி, குதிரை, கடிவாளம், வண்டிக்காரன், நல்லசாலை—இவைகளைக் கொண்டு சேரவேண்டிய இடத்துக்குப் போகுவதைச் சொல்லுகி றார்கள். உடம்பை வண்டியாகவும், ஜீவனை வண்டிக்கு யஜமான னாகவும், புத்தியை வண்டிஓட்டுகிறவனாகவும், மனதைக்கடிவாள மாகவும், இந்திரியங்களைக் குதிரைகளாகவும் இந்திரியங்களால் அறியப்படும் விஷயங்களைச் சாலைகளாகவும் சொல்லுகிறார்கள். ருக்வேதம் முதலான நான்கு வேதங்களும் உடம்பையும் ஆத்மா வையும் வெவ்வேறாகச் சொல்லுகின்றன. ஒருராஜாவைப் பார்த் து ஜடபரதர் என்பவர் "காணப்படுகிற உன் உடம்பு வேறு. அதில் இருக்கும் நீ என்கிற ஜீவன் வேறு" என்று சொன்னார். இந்த வெவ்வேறான உடம்பும் ஜீவனும் பகவானுடைய உடம்பென்றும் சொன்னார்கள். ஒரு இடத்தில் முதலில் உடம்பைச் சொல்லி, பிறகு அதற்குள்ளிருக்கும் பிராணனைச்சொல்லி, பிறகு மனதைச் சொல்லி, பிறகு ஜீவனைச்சொல்லி, இவைவெல்லாவற்றிற்கும் ஆத் மாவாகப் பகவானைச் சொல்லியிருக்கிறது. வேதங்களின் அர்த்தத் தை நன்றாய் காட்டுவதற்காக வியாஸரால் செய்யப்பட்ட பிரும்ம ஸூத்ரங்களாலும் யுக்திகளால் நன்றாக விசாரித்து இந்தஸங்கதி கள் தீர்மானிக்கப் பட்டிருக்கின்றன. இப்படிப் பலவிதமாய்ச் சொ

ல்லப்பட்ட உடம்பினுடையவும், ஜீவனுடையவும் உண்மையை 1 நான் சுருக்கமாகவும், மிகவும் தெளிவாகவும் சொல்லப்போகிறேன். அதைக் கேள். [ 4 ]

மஹாபூ⁴தாந்யஹங்காரோ பு³த்³தி⁴ரவ்யக்தமேவ ச |
இந்த்³ரியாணி த³ஶைகம் ச பஞ்ச சேந்த்³ரியகோ³சரா: ||5||

இச்சா² த்³வேஷ: ஸுக²ம் து³:க²ம் ஸங்கா⁴தஶ்சேதநா த்⁴ருதி: |
ஏதத் க்ஷேத்ரம் ஸமாஸேந ஸவிகாரமுதா³ஹ்ருதம் ||6||

மஹாபூ⁴தாந்யஹங்காரோ பு³த்³தி⁴ரவ்யக்தமேவேதி க்ஷேத்ராரம்ப⁴கத்³ரவ்யாணி| ப்ருதி²வ்யப்தேஜோவாய்வாகாஶா:- மஹாபூ⁴தாநி| அஹங்கார:- பூ⁴தாதி³: | பு³த்³தி⁴:- மஹாந்| அவ்யக்தம்- ப்ரக்ருதி:| இந்த்³ரியாணி த³ஶைகம் ச பஞ்ச சேந்த்³ரியகோ³சரா இதி- க்ஷேத்ராஶ்ரிதாநி தத்த்வாநி| ஶ்ரோத்ரத்வக்சக்ஷுர்ஜிஹ்வாக்⁴ராணாநி பஞ்ச ஜ்ஞாநேந்த்³ரியாணி| வாக்பாணிபாத³பாயூபஸ்தா²நி பஞ்ச கர்மேந்த்³ரியாணீதி தாநி த³ஶ| ஏகமிதி மந:| இந்த்³ரியகோ³சராஶ்ச பஞ்ச ஶப்³த³ஸ்பர்ஶரூபரஸக³ந்தா⁴:| இச்சா²த்³வேஷ: ஸுக²ம் து³:க²மிதி க்ஷேத்ரகார்யாணி க்ஷேத்ரவிகாரா உச்யந்தே|யத்³யபீச்சா²த்³வேஷஸுக²து³:கா²நி ஆத்மத⁴ர்மபூ⁴தாநி- ததா²ப்யாத்மந: க்ஷேத்ரஸம்ப³ந்த⁴ப்ரயுக்தாநீதி க்ஷேத்ரகார்யதயா க்ஷேத்ரவிகாரா உச்யந்தே| தேஷாம் புருஷத⁴ர்மத்வம் "புருஷ: ஸுக²து³:கா²நாம் போ⁴க்த்ருத்வே ஹேதுருச்யதே" இதி வக்ஷ்யதே| ஸங்கா⁴தஶ்சேதநா த்⁴ருதி:- ஆத்⁴ருதிராயர:, ஸுக²து³:கே² ஜ்ஞாநஸ்ய ஹோமாவஸ்யாயாஸதஶ்சேதநஸ்யாதா⁴ரதயா ஸம்ஹதி ஸங்கா⁴த: | ப்ருதி²வ்யாதி³வ்யதிஷங்க³ரூபாரம்ப⁴ ஸர்வேந்த்³ரியாஶ்ரயஸ்யேதரேச்சா²த்³வேஷஸுக²து³:க² ஸவிகாரிபூ⁴த

---

1 வேதம் முதலானவைகள் இதை மிகவும் விரிவாய்ச் சொல்லியிருக்கிறபடியால், கொஞ்சம் தெரிந்தவர்களால் இதைத் தெளிவாய் அறியமுடியாது. ஆகையால் எல்லாம் தெரிந்த நான் அதைச் சுருக்கமாயும், மிகவும் தெளிவாயும் சொல்லுகிறேன் என்று கருத்து.

[illegible]

பிருதிவீ முதலான ஐந்து பூதங்கள், தாமஸ அஹங்காரம், மஹத், பிரகிருதி என்கிற த்ரவியங்களால் உடம்பு செய்யப்பட்டது. பதினொரு இந்திரியங்களும், ஐந்து ஞான இந்திரியங்களால் அறியப்படுமதான ரூபம் முதலான ஐந்து வஸ்துக்களும், அந்த உடம்பில் இருப்பவைகள். ஆசை, த்வேஷம், ஸுகம் துக்கம் இவைகள் உடம்பின் சேர்க்கையால் ஆத்மாவுக்கு உண்டாகின்றன. ஜீவன் இந்தலோகத்தில் ஸுகதுக்கங்களை அநுபவிப்பதற்கும், மோக்ஷத்தை அடைவதற்கும் உதவியாக அவனுக்கு உடம்பு இருப்பிடமாக இருக்கிறது. இது கீழ்ச்சொன்ன பிருத்வீ முதலானவைகளுடைய சேர்க்கை. இப்படி உடம்பினுடைய உண்மையைச் சுருக்கமாகச் சொன்னேன்.

[5–6]

[illegible]

[illegible]

[illegible]

|| எ ||

அவ — உடம்பினுடைய சேர்க்கையால் ஜீவனுக்கு அநேக குணங்கள் உண்டாகின்றன. அவைகளுக்குள் ஆத்மாவை அறிவதற்கு உதவியான குணங்களைச் சொல்லுகிறார்—

(1)உயர்ந்தவர்களை அலட்சியம் 1 செய்யாமலிருப்பது; (2) நல்லகாரியங்களைக்கீர்த்திக்காக 2 செய்யாமலிருப்பது; (3)மனஸ்ஸு, வாக்கு, உடம்பு-இவைகளால்பிறருக்குதொந்தரவு3பண்ணாமலிருப்பது;(4) பிறர்தொந்தரவு பண்ணினாலும், அவர்களிடத்தில் மனது கலங்காமலிருப்பது; (5) பிறர்கள் விஷயத்தில் மனஸ்ஸு, வாக்கு, உடம்பு-மூன்றும4ஒத்திருப்பது; அதாவது-வாயினாலும், உடம்பினாலும், ஒருவனைக்கொண்டாடும்போது,மனதும் அந்த வேலைகளுக்கு ஒத்திருக்கவேண்டியது; (6) ஆத்மாவின் உண்மையைத் தெரிவிக்கிற ஆசாரியனிடத்தில் ஸேவிப்பது, வணக்கத்துடன் தெ

1. நான்படித்தவன், நல்லகுலத்தில்பிறந்தவன், பணக்காரன்.என்று ஒருவன் தன்னை எண்ணுவதாலே கர்வமுண்டாகும். அதனால் பெரியவர்களை அலக்ஷியம் செய்ய நேரிடும். இந்தக்கர்வமும், அதின்வேலையான அலக்ஷியம் செய்வதுமில்லாமை.

2. நல்லகாரியங்களை வேதம் செய்யும்படியாகச் சொல்லுகிறது, ஆனகயாலே அவைகளைச் செய்யவேண்டியது என்கிற எண்ணத்துடன் அவைகளைச்செய்ய வேண்டியது. நாலுபேர்என்னைக்கொண்டாடவேணுமென்று எண்ணிச்செய்யாமலிருக்கை.

3. தொந்தரவு (ஹிம்ஸை)என்ற சொல்லுக்கு தொந்தரவை உண்டுபண்ணுவதற்காகவேசெய்யும்வேலை என்று பொருள். வைத்தியன் கொஞ்சம் தொந்தரவைக் கொடுத்து, ஸுகத்தை உண்டுபண்ணுகிறபடியாலே, அந்த தொந்தரவு ஹிம்ஸையன்று. இங்கே "பிறருக்கு" என்று சொன்னபோதிலும், சாஸ்திரத்தில் சொல்லாத விதமாய் ஒருவன் தனக்குச் செய்யும் தொந்தரவும் ஹிம்ஸைதான். அதுவும்கூடாது.

4 மனது இருக்கவேண்டிய விதம்—ஆசைமுதலானவை இல்லாமை. வாக்கு இருக்கவேண்டிய விதம்—பொய்சொல்லாமை முதலானவைகள். உடம்பு இருக்கவேண்டிய விதம்—சாஸ்திரம் சாப்பிடக்கூடாதென்று சொன்னவைகளைச் சாப்பிடாமலிருப்பது முதலானவைகள். மனது, வாக்கு, உடம்பு இப்படி இருக்கவேணுமென்று பிரத்யக்ஷத்தாலும், யுக்தியாலும் கண்டுபிடிக்கமுடியாது. சாஸ்திரத்தைக்கொண்டுதான் அறியவேண்டியது,

ரியாத ஸங்கதிகளைக் கேட்பது, அவருக்கு வேலைசெய்வது. இவைமுதலானவைகளில் ஆசை; (7) ஆத்மாவை அறிவதற்கும், அந்த அறிவுக்கு உதவியான காரியங்களைச்செய்வதற்கும் மனதும், வாக்கும், உடம்பும் எப்படி இருக்கவேணுமென்று சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறதோ அப்படி இருப்பது; (8) ஆத்மாவைப்பற்றி சாஸ்திரத்தில் சொல்லிய ஸங்கதிகளை நன்றாய் அறிந்து, அதில் ஸந்தேஹமில்லாமல் 1 உறுதியாய் நம்புவது; (9) ஆத்மாவைத் தவிர மற்றஸங்கதிகளிலிருந்து மனதைத் திருப்புவது. [7]

இந்த்³ரியார்தே²ஷு வைராக்³யமநஹங்கார ஏவ ச।
ஜந்மம்ருத்யுஜராவ்யாதி⁴து:³க²தோ³ஷாநுத³ர்ஶநம் ॥ 8 ॥

இந்த்³ரியார்தே²ஷு வைராக்³யம் — ஶப்³தா³தி³ஷு ஆத்மவ்யதிரிக்தேஷு விஷயேஷு ஸதோ³ஷதாநுஸந்தா⁴நேந உத்³வேஜநம்। அநஹங்கார: — அநாத்மநி தே³ஹே ஆத்மாபி⁴மாநரஹிதத்வம்। ப்ரத³ர்ஶநார்த²மித³ம் — அநாத்மீயேஷு ஆத்மீயாபி⁴மாநரஹிதத்வம் ச விவக்ஷிதம்। ஜந்மம்ருத்யுஜராவ்யாதி⁴து:³க²தோ³ஷாநுத³ர்ஶநம் — ஸஶரீரத்வே ஜந்மம்ருத்யுஜராவ்யாதி⁴து:³க²ரூபஸ்ய தோ³ஷஸ்ய அவர்ஜநீயத்வாநுஸந்தா⁴நம் ॥ ॥ 8 ॥

(10) ஆத்மாவைத்தவிர மற்றவிஷயங்களில் இருக்கும் 2குற்றங்களைப்பார்த்து 3 அருவருப்புப்படுகை; (11) உடம்பை ஆத்மாவாக எண்ணுகையும், உடம்பைச்சேர்ந்த வஸ்துக்களை தன்னுடையவைகளென்று எண்ணுகையும்; (12) ஜீவனுக்கு உடம்பு இருக்கும்போது,

---

1. வேதத்தை ஒப்புக்கொள்ளாதவர்களுடையவும், வேதத்தை ஒப்புக்கொண்டு தப்பாக அர்த்தம் சொல்லுகிறவர்களுடையவும் பேச்சுக்களைக் கேட்டு கலங்காமலிருப்பது.

2. குற்றங்களாவன—அவைகளால் வரும் ஸுகமானது நிலையில்லாதது; வருத்தப்பட்டுத் தேடவேண்டியது; துக்கத்தோடு கலந்திருப்பது முதலானவைகள்.

3. இப்படி எண்ணுவதாலே உடம்பின் சேர்க்கை அடியோடு போகவேணுமென்கிற எண்ணம்வந்து வலுப்படும்.

பிறப்பு, சாவு, கிழத்தனம், வியாதி, இன்னும் பலதுக்கங்கள் - இவை முதலானதொந்தரவுகள்[1] வராமலிருக்காது என்றெண்ணுகை [8]

அஸக்திரநபிஷ்வங்க: புத்ரதாரக்ருஹாதிஷு |
நித்யஞ்ச ஸமசித்தத்வமிஷ்டாநிஷ்டோபபத்திஷு || ௯ ||

அஸக்தி: - ஆத்மவ்யதிரிக்தவஸ்துஷு ஸங்கராஹித்யம் | அநபிஷ்வங்க: புத்ரதாரக்ருஹாதிஷு - தேஷு ஶாஸ்த்ரீயகர்மோபகரணத்வாதிரேகேண ஶ்லேஷராஹித்யம் | ஸங்கல்பப்ரபவேஷ்டாநிஷ்டோபபத்திஷு ச தேஷு ஹர்ஷோத்வேகராஹித்யம் || ௯ ||

(13) ஆத்மாவைத்தவிர மற்றவஸ்துக்களில்[2] ஆசையில்லாமை; (14) பிள்ளை, பெண்டாட்டி, வீடுமுதலானவைகளில்[3] சாஸ்திரத்தில் சொன்னவேலைகளுக்கு உதவியாக வைத்துக்கொள்ளுவது தவிர, அதிகப்பிடிப்பில்லாமை; (15) மனதுக்குப் பிடித்தஸங்கதிகள் வந்

1. சுலோகத்தில் தொந்தரவுகளை எண்ணுவது என்று சொல்லியிருந்தபோதிலும், அரிசியை எடுத்துக்கொண்டு உமியைத்தள்ளுவது போல, உடம்பை வைத்துக்கொண்டுதொந்தரவுகளைத் தள்ளமுடியாதென்று காட்டுவதற்காக, பாஷ்யத்தில் "வராமலிருக்காது" என்று சொல்லியிருக்கிறது. எண்ணுவது (அநுதர்சநம்) என்பது-அடிக்கடி நினைப்பது.

2. கண்முதலான இந்திரியங்களுக்கும் விஷயங்களுக்கும் சேர்க்கையினால் வரும் ஸுகங்களில் ஆசையில்லாமை 10-வது குணமாகச் சொல்லப்பட்டது. இங்கே நினைவினால் வருகிற ஸுகங்கள் சொல்லப்படுகின்றன. 202-வது பக்கம் 1-வது குறிப்பைப்பார்க்க.

3. நினைவினால்வரும் ஸுகங்களில் ஆசையை (பிள்ளை, பெண்டாட்டி, வீடுமுதலானவைகளில் ஸங்கத்தை) விடவேண்டுமென்றால், கிருஹஸ்தாசிரமத்திலிருக்கிறவனுக்கு அவைகளில் ஆசையைவிட வேண்டியதாக நேரிடுமே. விட்டால், அவன் வேலைகள் எப்படி நடக்கும் என்றால், பதில்—செய்யவேண்டிய வேலைகளுக்கு உதவியான வஸ்துக்களை அடியோடு விடவேண்டியதென்று கருத்து அல்ல. அந்த வேலைகளைச் செய்வதற்காக அவைகளிடத்தில் நமக்கு எவ்வளவு பிரீதி வேணுமோ, அவ்வளவுதான் அவைகளில் பிரீதிவைத்துக் கொள்ளவேணும். அதற்குமேல் வைத்துக்கொள்ளக் கூடாது. இதைக்காட்டுவதற்காக சுலோ

தால், ஸந்தோஷமில்லாமையும், மனதுக்குப் பிடிக்காத ஸங்கதிகள் வந்தால், வருத்தமில்லாமையும்1; [ 9 ]

மயி சாநந்யயோகேந பக்திரவ்யபிசாரிணீ |
மயி-ஸர்வேச்வரே சைகாந்த்யயோகேந த்ருடா பக்தி:॥
விவிக்ததேசஸேவித்வமரதிர்ஜநஸம்ஸதி ॥ ॥௰॥
ஜநவர்ஜிததேசவாஸித்வம் ஜநஸம்ஸதி சாப்ரீதி: ॥௰॥

(16) வேறு ஒருவரை 2 நினைக்காமல், எல்லா உலகத்துக்கும் ராஜாவான என்னிடத்தில் நிலையான பக்தி; (17) ஜனங்களில்லாத இடத்தில் வஸிப்பது; (18) ஆத்மாவைப்பற்றி நினைவில்லாத பத்துப் பேர் கூடியிருக்கிற இடத்தில் அருப்பு. [ 10 ]

அத்யாத்மஜ்ஞாநநித்யத்வம் தத்த்வஜ்ஞாநார்த்ததர்சநம் |
ஏதஜ்ஜ்ஞாநமிதி ப்ரோக்தமஜ்ஞாநம் யததோ(அ)ந்யதா ॥௧௧॥
ஆத்மநி ஜ்ஞாநமத்யாத்மஜ்ஞாநம் தந்நிஷ்டத்வம்| தத்த்வஜ்ஞாநார்த்ததர்சநம்-தத்த்வஜ்ஞாநப்ரயோஜநம் யஜ்ஜ்ஞாநம் தந்நிரதத்வமித்யர்த்த:॥

---

கத்தில் "அநபிஷ்வங்க:" (அதிகப் பிரீதியில்லாமை) என்று சொல்லப்பட்டது.

1. வீதியில் போகிறபோது, ஒருவரைக்கண்டால், அவர் நம்மை மரியாதை பண்ணவேணுமென்று தோன்றுகிறது. அதனால் உடம்புக்கு என்ன? ஒன்றுமில்லை. பண்ணினால் ஸந்தோஷப்படுவது; இல்லாவிட்டால், வருத்தப்படுவது—இவை முதலானவைகள் இல்லாமலிருப்பது. இங்கேகினைவினால் வரும் ஸுகங்களிலும், துக்கங்களிலும் மனது கலங்காமை சொல்லப்படுகிறது. உடம்பில் வஸ்துக்களின் சேர்க்கையாலுண்டாகும் ஸுகங்களும் துக்கங்களும் கட்டாயம் வருத்தத்தையுண்டாக்கும். அதனால் மனது கலங்காமலிருக்கமுடியாது. ஆதலால் அவைகளை இங்கே சொல்லவில்லை. இந்த சுலோகத்தில் பிள்ளை, பெண்டாட்டிகளைச் சொல்லியிருப்பதால், இப்படித்தான் பொருள்கொள்ளவேணும்.

2. பகவானைத்தவிர மற்ற தேவதைகளிடத்தில் இருக்கும் பக்தி அடியோடு போவதற்கும், அது பகவானிடத்தில் நிலையாய் நிற்பதற்கும் உபயோகமான பகவானுடைய குணம் "என்னிடத்தில்" என்கிற சொல்லால் சொல்லப்படுகிறதென்று கருத்து. வேறு தேவதைகளிடத்தில் பக்தி இல்லாமலிருந்தால் தான் பகவானிடத்தில் பக்தி நிலையாய் நிற்கும்.

ஜ்ஞாயதே(அ)நேநேதி ஜ்ஞாநம் - ஆத்மஜ்ஞாநஸாதந மித்யர்த்த:| க்ஷேத்ரஸம்பந்தி ந: புருஷஸ்ய அமாநித்வாதிகம் குணப்ருந்தமேவாத்மஜ்ஞாநோபயோகி | ஏதத்வ்யதிரிக்தம் ஸர்வம் க்ஷேத்ர கார்யமாத்மஜ்ஞாநவிரோதித்வாத் அஜ்ஞாநம் ||௧௧||

(19) ஆத்மாவின் அறிவு எப்பொழுதும் இடைவிடாமல் இருந்துவருவது; (20) ஆத்மாவின் உண்மையை அறிவிக்கக்கூடிய விசாரத்திலேயே ஆசையுள்ளவனாக இருப்பது. இவைஎல்லாம் ஆத்மாவைப்பார்ப்பதற்கு உதவியானவை. ஆத்மாவுக்குஉடம்பின் சேர்க்கையால் உண்டாகின்றன. இவைதவிர மற்றவைகள் அதற்கு இடஞ்சல். 1 [ 11 ]

1. 7—வது சுலோகம் முதல் இந்த சுலோகம் வரையில் ஆத்மாவைப் பார்ப்பதற்கு உதவியாக 20 குணங்கள் சொல்லப்பட்டன. அவைகளில் ஆத்மா உடம்பைக் காட்டிலும் வேறு என்கிற நினைவு 11-வது குணம். இந்த நினைவு வலுத்து, உடம்பை அடியோடு விட்டுவிடவேணுமென்று பறபறப்பு உண்டாவதற்காக உடம்புடன் சேர்ந்திருக்கிற வரையில் பிறப்பு முதலான தொந்தரவுகள் கட்டாயம் இருக்குமென்று அடிக்கடி நினைக்கவேண்டியது. இது 12—வது குணம். ஆத்மாவின் உள்ளபடி அறிவு மாத்திரம் போதாது. அதை எப்போதும் இடைவிடாமல் நினைத்துக் கொண்டிருக்கவேணும். இது 19—வது குணம். வேறொன்றை நினைப்பது இதற்கு இடஞ்சல். இதில்லாமலிருப்பது 9—வது குணம். ஆத்மாவை நினைத்துக் கொண்டிருப்பதற்கு ஜனக்கூட்டமும் இடஞ்சல். அதற்காக ஜனமில்லாத இடத்தில் இருக்கவேண்டியது. இது 17—வது குணம். ஜனங்கள் ஸத்வகுணம் மேலிட்டவர்களாயிருந்தால், அவர்களுடன சேர்க்கையால் ஆத்மாவின் நினைவுக்குஉதவி உண்டாகும். அவர்களுடன் மாத்திரம சேர்ந்திருப்பது 18—வது குணம். எந்த நினைவும் ஆத்மாவினுடைய உண்மையான அறிவு நிலையாய் நிற்பதற்கு உதவியாயிருக்க வேண்டியது. வேறு நினைவு கூடாது. இது 20—வது குணம். ஆத்மாதவிர மற்றவைகளில் ஆசையை விடவேண்டியது. இது 10, 13, 14, 15-வது குணங்களாகச் சொல்லப்பட்டது. நல்ல காரியங்களைச் செய்கிறுனென்று நாலுபேர் கொண்டாடுவதை ஆசைப்படக் கூடாது. கொண்டாடுவதும் ஒரு பலன்தான. இந்த ஆசையில்லாமையை 2-வது குணமாகச சொல்லியிருக்கிறது. எல்லாரும் பகவானுடைய உடம்பாயிருப்பதாலே, அவர்களுக்கு அநுகூலமாயிருக்கவேண்டியது. ஆனகயால் நமக்கு ஒருவன தொந்தரவு செயதாலும், அவனுக்குத் தொந்

அவ — அத "ஏதத்யோ வேத்தீ"தி வேதித்ருத்வலக்ஷணேனோக்தஸ்ய க்ஷேத்ரஜ்ஞஸ்ய ஸ்வரூபம் விசோதயதி —

ஜ்ஞேயம் யத்தத்ப்ரவக்ஷ்யாமி யஜ்ஜ்ஞாத்வாऽம்ருதமச்னுதே ।
அநாதி மத்பரம் ப்ரஹ்ம ந ஸத்தந்நாஸதுச்யதே ॥ ॥௧௨॥

அமாநித்வாதிபிஸ்ஸாதனைர் ஜ்ஞேயம் — ப்ராப்யம் யத் ப்ரத்யகாத்மஸ்வரூபம் தத் ப்ரவக்ஷ்யாமி । யஜ்ஜ்ஞாத்வா ஜந்மஜராமரணாதிப்ராக்ருததர்மரஹிதம் அம்ருதம் ப்ராப்நோதி । அநாதி — ஆதிர்யஸ்ய ந வித்யதே தத் அநாதி । அஸ்ய ஹி ப்ரத்யகாத்மன உத்பத்திர் ந வித்யதே । தத ஏவாந்தோ ந வித்யதே । ஶ்ருதிஶ்ச "ந ஜாயதே ம்ரியதே வா விபஶ்சி"தி । மத்பரம் — அஹம் பரோ யஸ்ய தன் மத்பரம் । "இதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம் । ஜீவபூதா"மிதி ஹ்யுக்தம் । பகவச்சரீரதயா பகவச்சேஷதைகரஸம் ஹ்யாத்மஸ்வரூபம் । ததா ச ஶ்ருதி: "ய ஆத்மனி திஷ்டந்நாத்மனோऽந்தரோ யமாத்மா ந வேத யஸ்யாத்மா ஶரீரம் ய ஆத்மாநமந்தரோ யமயதீ"தி । ததா "ஸ காரணம் கரணாதிபாதிப:

---

தரவு செய்யவேணுமென்று எண்ணமே உண்டாகக்கூடாது. அந்தத் தொந்தரவைப் பொறுத்துக்கொள்ள வேணும். அவன் விஷயத்தில் நல்ல பேச்சும், செய்கையும் வரவேணும், அப்படியே எண்ணமும் இருக்கவேணும். இந்த மூன்றையும், 3, 4, 5-வது குணங்களாகச் சொல்லியிருக்கிறது. ஒருவனுக்குப் படிப்பினாலும், நல்ல பிறப்பாலும், பணத்தாலும் கர்வமுண்டாகி, பெரியோர்களை அலக்ஷியம் செய்யும்படி நேரிடும். அந்த கர்வமும், அப்படி அலக்ஷியம் செய்வதும் கூடாது. தன் இளப்பத்தையே நினைத்துக்கொண்டிருக்க வேணும். இது முதலாவது குணம். எல்லாவற்றிற்கும் அஸ்திவாரமாயிருப்பது மூன்று குணங்கள். நல்ல ஸங்கதிகளை சொல்லிக்கொடுக்கும் நல்ல ஆசாரியனிடத்தில் எப்பொழுதும் வணக்கமாகவே யிருப்பது; சாஸ்திரத்தில் சொன்னபடி மனதும், வாக்கும், உடம்பும் சுத்தமாயிருப்பது; சாஸ்திரம் சொன்ன ஸங்கதிகளில் நிலையான நம்புதல். இவைகள் 6, 7, 8-வது குணங்கள். சொல்லப்பட்ட குணங்கள் எல்லாம் இருந்தாலும், பகவானிடத்தில் நிலையான பக்தி இல்லாவிட்டால், ஆத்மாவை உள்ளபடி பார்ப்பது முடியாது. ஆகையால் பகவானுடைய பக்தியை 16-வது குணமாகச் சொல்லியிருக்கிறது.

𑌪𑍋 𑌨 𑌚𑌾𑌸𑍍𑌯 𑌕𑌶𑍍𑌚𑌿𑌜𑍍𑌜𑌨𑌿𑌤𑌾 𑌨 𑌚𑌾𑌧𑌿𑌪𑌃, 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌪𑌤𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑍇𑌶𑌃'' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌾 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌬𑍃𑌹𑌤𑍍𑌤𑍍𑌵𑌗𑍁𑌣𑌯𑍋𑌗𑌿 𑌶𑌰𑍀𑌰𑌾𑌦𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌤𑌰𑌭𑍂𑌤𑌂 𑌸𑍍𑌵𑌤𑌶𑍍𑌶𑌰𑍀𑌰𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑌰𑌹𑌿𑌤𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । '𑌸 𑌚𑌾𑌨𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌯 𑌕𑌲𑍍𑌪𑌤𑍇'' 𑌇𑌤𑌿 𑌹𑌿 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑍇 । 𑌶𑌰𑍀𑌰𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑌿𑌨𑍍𑌨𑌤𑍍𑌵𑌂 𑌚𑌾𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑌮𑍍 । 𑌕𑌰𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌾𑌨𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌤𑍍𑌯𑌮𑍍 । 𑌮𑍁𑌕𑍍𑌤𑍇𑌽𑌪𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌶𑌬𑍍𑌦𑌃 𑌪𑍍𑌰𑌯𑍁𑌜𑍍𑌯𑌤𑍇 ''𑌸 𑌗𑍁𑌣𑌾𑌨𑍍 𑌸𑌮𑌤𑍀𑌤𑍍𑌯𑍈𑌤𑌾𑌨𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌯𑌾𑌯 𑌕𑌲𑍍𑌪𑌤𑍇 ॥ 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌹𑌮𑌮𑍃𑌤𑌸𑍍𑌯𑌾𑌵𑍍𑌯𑌯𑌸𑍍𑌯 𑌚 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌤𑌃 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌾𑌤𑍍𑌮𑌾 𑌨 𑌶𑍋𑌚𑌤𑌿 𑌨 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌤𑌿 ॥ 𑌸𑌮𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 𑌲𑌭𑌤𑍇 𑌪𑌰𑌾𑌮𑍍''𑌇𑌤𑌿 । 𑌨 𑌸𑌤𑍍𑌤𑌨𑍍𑌨𑌾𑌸𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇- 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑌰𑍂𑌪𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌦𑍍𑌵𑌯𑌰𑌹𑌿𑌤𑌤𑌯𑌾 𑌸𑌦𑌸𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌨𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌯𑌾𑌂 𑌹𑌿 𑌦𑍇𑌵𑌾𑌦𑌿𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌭𑌾𑌕𑍍𑌤𑍍𑌵𑍇𑌨 𑌸𑌦𑌿𑌤𑍍𑌯𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌤𑌦𑌨𑌰𑍍𑌹𑌤𑌯𑌾 𑌕𑌾𑌰𑌣𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌯𑌾𑌮𑌸𑌦𑌿𑌤𑍍𑌯𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌤𑌥𑌾 𑌚 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌃 ''𑌅𑌸𑌦𑍍𑌵𑌾 𑌇𑌦𑌮𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌤𑍍 । 𑌤𑌤𑍋 𑌵𑍈 𑌸𑌦𑌜𑌾𑌯𑌤, 𑌤𑌦𑍍𑌧𑍇𑌦𑌂 𑌤𑌰𑍍𑌹𑍍𑌯𑌵𑍍𑌯𑌾𑌕𑍃𑌤𑌮𑌾𑌸𑍀𑌤𑍍𑌤𑌨𑍍𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌵𑍍𑌯𑌾𑌕𑍍𑌰𑌿𑌯𑌤'' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌾 । 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌦𑍍𑌵𑌯𑌾𑌨𑍍𑌵𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌕𑌰𑍍𑌮𑌰𑍂𑌪𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑍇𑌷𑍍𑌟𑌨𑌕𑍃𑌤𑌃; 𑌨 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌕𑍃𑌤 𑌇𑌤𑌿 𑌸𑌦𑌸𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌨𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 ''𑌅𑌸𑌦𑍍𑌵𑌾 𑌇𑌦𑌮𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌤𑍍'' 𑌇𑌤𑌿 𑌕𑌾𑌰𑌣𑌾𑌵𑌸𑍍𑌥𑌂 𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 - 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌵𑌿𑌭𑌾𑌗𑌾𑌨𑌰𑍍𑌹𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌚𑌿𑌦𑍍𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌂 𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌕𑌾𑌰𑌣𑌾𑌵𑌸𑍍𑌥𑌮𑌿𑌤𑌿 𑌕𑌾𑌰𑌣𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌯𑌾𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑌪𑍍𑌯𑌸𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑌵𑌾𑌚𑍍𑌯𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌸𑌾𑌽𑌵𑌸𑍍𑌥𑌾 𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍇𑌤𑌿 𑌪𑌰𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌨 𑌸𑌦𑌸𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑍍𑌯𑌮𑍍 ॥

அவ—உடம்பு அறியப்படும் வஸ்துவென்றும், அதை அறிவதினால் ஜீவன் அதைக்காட்டிலும் வேறு என்றும் சொல்லப்பட்டது. அந்த ஜீவஸ்வரூபத்தைப்பற்றித் தெளிவாய் சொல்லுகிறார்—

கீழ்ச்சொன்ன குணங்கள்வந்து, பார்க்கவேண்டிய ஜீவஸ்வரூபத்தை உள்ளபடி சொல்லுகிறேன். அந்த ஜீவஸ்வரூபத்தை

உள்ளபடி பார்த்தால், பிறப்பு, இறப்பு, கிழத்தனம் முதலான ஸம்ஸாரம் நீங்கி, உயர்ந்த லோகத்தை அநுபவிக்கலாம். அந்த ஜீவஸ்வரூபம் ஒருக்கால் உண்டானதுமில்லை; அதற்கு அழிவுமில்லை; அது எப்போதுமிருக்கிறது. அது என்னை யஜமானனாக உடையது. அதாவது—எப்போதும் அது என் உடம்பாயிருப்பதாலே, என்னுடைய வேலைக்காகவே ஏற்பட்டது அது பெரிது. அதாவது உடம்பைக்காட்டிலும் வேறானதால், அதினுடைய அறிவு என்கிற குணமானது இயற்கையில் உடம்பினால் அளவுபட்டதல்ல. இப்போது ஜீவன் கர்மத்தால் ஒரு உடம்பில் இருப்பதால், அந்த குணம் அளவுபட்டிருக்கிறது. கர்மம் அடியோடு போய்விட்டால், அந்த குணமானது எல்லாவற்றையும் அறியும்படி பெரிதாகிறது. ஒரேகாலத்தில் லக்ஷம் உடம்புகளை எடுத்துக்கொள்ளலாம்.கர்மம் இருக்கும்பொழுதும்,யோகத்தின் சக்தியினால் அனேகம் உடம்புகளை எடுத்துக்கொள்ளலாம். ஆனால் அந்த சக்திநிலையில்லை. ஜீவனுடைய அறிவுக்கு இயற்கையில் சுருக்கமில்லை அது எங்கும் பரவக்கூடியது. அது பகவானுடைய அறிவுபோலுள்ளதுதான். இப்போது கர்மத்தால் சுருங்கியிருக்கிறது. இதைப்பற்றிப் பெரிதென்று சொன்னதேயொழிய, ஆத்மஸ்வரூபம் சின்னதுதான். ஜீவனைப் பிரும்மம் (பெரிது) என்று வேதத்திலும் கீதையிலும் சொல்லியிருக்கிறது. ஜீவன் தேவன் முதலான உடம்பை அடையும்போது, அவனை ஸத் என்று சொல்லுகிறது. பிரளய காலத்தில் ஒரு உடம்பும் இல்லாத ஸமயத்தில், அஸத்து என்று சொல்லுகிறது. இந்த இரண்டு இருப்பும் கர்மத்தினால் உண்டாகிறது கர்மம் அடியோடு போனால் போய்விடும். ஜீவன் ஸத்துமல்ல. அஸத்துமல்ல. அதாவது பிறந்தவனுமல்ல; பிறக்கப்போகிறவனுமல்ல. வேதத்தில் ''அஸத்'' என்கிற சொல் பிரளயகாலத்திலிருக்கும் பிரும்மத்தைச் சொல்லுகிறது. அது ஜீவனைச் சொல்லவில்லையேயென்றால்-அஸத் என்கிற சொல்லுக்கு உருவமும், பெயருமில்லாதது என்று பொருள். ஜீவனுக்குப் பிரளயகாலத்தில் இவையிரண்டு மில்லாமையால், அவன் அஸத்து. அஸத்தான அவன் பிரும்மத்துக்கு உடம்பாயிருப்பதால், பிரும்மத்தையும் வேதம் அஸத்து என்று சொல்லுகிறது. ஆகையாலே கர்மத்தால்

உண்டான இரண்டு இருப்பும் கர்மம் போனவனுக்கு இல்லாமையால், பரிசுத்தமான ஜீவஸ்வரூபத்தை ஸத் என்றும், அஸத்தென்றும் சொல்லக்கூடாது. [12]

ஸர்வத: பாணிபாதம் தத்ஸர்வதோऽக்ஷிஶிரோமுகம் ।
ஸர்வத: ஶ்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்ட²தி ॥ ॥௧௩॥

ஸர்வத: பாணிபாத³ம் தத் - பரிஶுத்³தா⁴த்மஸ்வரூபம் ஸர்வத: பாணிபாத³கார்யஶக்தம்। ததா² ஸர்வதோऽக்ஷிஶிரோமுக²ம் ஸர்வத: ஶ்ருதிமத் - ஸர்வதஶ்சக்ஷுராதி³கார்யக்ருத்। "அபாணிபாதோ³ ஜவனோ க்³ரஹீதா பஶ்யத்யசக்ஷு: ஸ ஶ்ருணோத்யகர்ண:" இதி பரஸ்ய ப்³ரஹ்மணோऽபாணிபாத³ஸ்யாபி ஸர்வத: பாணிபாதா³தி³கார்யகர்த்ருத்வம் ஶ்ரூயதே। ப்ரத்யகா³த்மனோऽபி பரிஶுத்³த⁴ஸ்ய தத்ஸாம்யாபத்த்யா ஸர்வத: பாணிபாதா³தி³கார்யகர்த்ருத்வம் ஶ்ருதிஸித்³த⁴மேவ। "ததா³ வித்³வான் புண்யபாபே விதூ⁴ய நிரஞ்ஜன: பரமம் ஸாம்யமுபைதீ"தி ஹி ஶ்ரூயதே। "இத³ம் ஜ்ஞானமுபாஶ்ரித்ய மம ஸாத⁴ர்ம்யமாக³தா:" இதி ச வக்ஷ்யதே। லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்ட²தி - லோகே யத்³வஸ்துஜாதம் தத்ஸர்வம் வ்யாப்ய திஷ்ட²தி। பரிஶுத்³த⁴ஸ்வரூபம் தே³ஶாதி³பரிச்சே²த³ரஹிததயா ஸர்வக³தமித்யர்த²: ॥ ॥௧௩॥

கர்மம் போய் பரிசுத்தமான ஜீவஸ்வரூபம் கை கால்கள் இல்லாத போதிலும், எல்லா இடங்களிலும் கை கால்களின் வேலைகளைச் செய்ய சக்தியுள்ளது. அப்படியே கண், தலை, வாய், காது, இவைகளில்லாதபோதிலும், எல்லா இடங்களிலும் கண் முதலானவைகளின் வேலையைச் செய்ய சக்தியுள்ளது. பகவானுடைய ஸ்வரூபத்துக்கு கை கால் முதலியவைகள் இல்லை. ஆனாலும் அது எங்கும் அவைகளின் வேலைகளைச் செய்கிறது என்று வேதத்தில் சொல்லியிருக்கிறது. அடியோடு கர்மம் போனவன் பகவானைப் போல் ஆகிறானென்று சொல்லியிருக்கிறபடியாலே, அவனும் அப்படியே செய்கிறான். முக்தனுடைய அறிவு இன்ன இடத்தில்

தான் பரவுகிறது என்று சட்டுப்பாடில்லை. அது எல்லாவிடத்தி லும் எப்பொழுதும் நிலையாய் பரவியிருக்கிறது [13]

𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍁𑌣𑌾𑌭𑌾𑌸𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍 ।
𑌅𑌸𑌕𑍍𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍃𑌚𑍍𑌚𑍈𑌵 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌂 𑌗𑍁𑌣𑌭𑍋𑌕𑍍𑌤𑍃 𑌚 ॥௧௪॥

𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍁𑌣𑌾𑌭𑌾𑌸𑌮𑍍 – 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍁𑌣𑍈𑌰𑌾𑌭𑌾𑌸𑍋 𑌯𑌸𑍍𑌯 𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍁𑌣𑌾𑌭𑌾𑌸𑌮𑍍 - 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍁𑌣𑌾 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑍃𑌤𑍍𑌤𑌯𑌃 - 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌭𑌿𑌰𑌪𑌿 𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍 𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌂 𑌸𑌮𑌰𑍍𑌥𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍 - 𑌵𑌿𑌨𑍈𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌭𑌿𑌃 𑌸𑍍𑌵𑌤 𑌏𑌵 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌜𑌾𑌨𑌾𑌤𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌅𑌸𑌕𑍍𑌤𑌮𑍍-𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤 𑌏𑌵 𑌦𑍇𑌵𑌾𑌦𑌿𑌦𑍇𑌹𑌸𑌙𑍍𑌗𑌰𑌹𑌿𑌤𑌮𑍍 । 𑌸𑌰𑍍𑌵𑌭𑍃𑌚𑍍𑌚𑍈𑌵-𑌦𑍇𑌵𑌾𑌦𑌿𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌭𑌰𑌣𑌸𑌮𑌰𑍍𑌥𑌂 𑌚, '𑌸 𑌏𑌕𑌧𑌾 𑌭𑌵𑌤𑌿 𑌤𑍍𑌰𑌿𑌧𑌾 𑌭𑌵𑌤𑌿' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌃 । 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌂-𑌤𑌥𑌾 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤 𑌏𑌵 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌰𑌹𑌿𑌤𑌂 । 𑌗𑍁𑌣𑌭𑍋𑌕𑍍𑌤𑍃 𑌚-𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌗𑍁𑌣𑌾𑌨𑌾𑌂 𑌭𑍋𑌗𑌸𑌮𑌰𑍍𑌥𑌂 𑌚 ॥ ॥௧௪॥

அந்த முக்தஸ்வரூபம் கண் முதலான இந்திரியங்களாலும், விஷயங்களை அறியச்சக்தியுள்ளது. அவைகள் இல்லாமலும், இயற்கையாகவே, எல்லாவற்றையும் அறியமுடியும். அதற்கு இயற்கையில் தேவன் முதலான உடம்புகள் கிடையாது. எல்லா உடம்புகளையும் எடுத்துக்கொள்ள சக்தியிருக்கிறது. அதற்கு இயற்கையில் ஸத்துவம் முதலான குணங்கள் கிடையாது ஆனாலும் அந்த குணங்களுடைய பலனை அநுபவிக்கச் சக்தியுண்டு [14]

𑌬𑌹𑌿𑌰𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑌚𑌰𑌂 𑌚𑌰𑌮𑍇𑌵 𑌚 ।
𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌤𑌦𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌦𑍂𑌰𑌸𑍍𑌥𑌂 𑌚𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑍇 𑌚 𑌤𑌤𑍍 ॥௧௫॥

𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌦𑍀𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯𑌾𑌶𑌰𑍀𑌰𑍋 𑌬𑌹𑌿𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑌤𑍇-𑌤𑍇𑌷𑍍𑌵𑍇𑌵 𑌭𑍂𑌤𑍇𑌷𑍍𑌵𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 "𑌜𑌕𑍍𑌷𑌤𑍍 𑌕𑍍𑌰𑍀𑌡𑌨𑍍 𑌰𑌮𑌮𑌾𑌣𑌃 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌭𑌿𑌰𑍍𑌵𑌾 𑌯𑌾𑌨𑍈𑌰𑍍𑌵𑌾" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑍍𑌵𑌚𑍍𑌛𑌨𑍍𑌦𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌷𑍁 । 𑌅𑌚𑌰𑌂 𑌚𑌰𑌮𑍇𑌵 𑌚-𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑍋'𑌚𑌰𑌂 𑌚𑌰𑌂 𑌚 𑌦𑍇𑌹𑌿𑌤𑍍𑌵𑍇 । 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌤𑌦𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑍍-𑌏𑌵𑌂 𑌸𑌰𑍍𑌵𑌶𑌕𑍍𑌤𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌂

[illegible] ‖௧௫‖

முக்தனுடைய ஸ்வரூபம் உடம்பில்லாமலுமிருக்கும். உடம்புகளுக்குள்ளும் இருக்கும். கர்மம் இருக்கும்போது உடம்புடனே, அல்லது பிரகிருதியுடனே சேர்ந்தே இருக்கவேணும். ஆத்ம ஸ்வரூபம் தனியாக இருக்க முடியாது. அப்படிப்போல் அல்ல முக்தனுடைய ஸ்வரூபத்துக்கு. அவன் இஷ்டப்படி அனேக சரீரங்களை எடுத்துக் கொள்ளக்கூடும். ஆனால் அவைகள் கர்மத்தினால் வந்தவைகள் அல்ல. ஸ்வபாவத்தில் நடமாட வேண்டியதில்லை. இஷ்டப்படி உடம்புகளை எடுத்துக்கொள்ளும்போது ஸஞ்சரிக்கவும் கூடும். இப்படி எல்லாசக்தியுமுள்ள—எல்லாவற்றையும் அறியக்கூடிய—இந்த ஆத்மஸ்வரூபம் உடம்பிலிருந்தாலும், ரொம்ப சின்னதாக இருப்பதால், கர்மத்தால் கட்டுப்பட்டவர்களால் உடம்பைக் காட்டிலும் வேறாக அறிய முடியாது. கீழ்ச் சொன்ன குணங்களில்லாதவர்களுக்குக்கிட்டத்தில் (அதாவது உடம்பில்) இருந்த போதிலும், ரொம்ப தூரத்தில் இருப்பதுபோல் இருக்கும். அந்த குணங்களுள்ளவர்களுக்கு ரொம்பகிட்ட இருக்கிறது. அதாவது அந்த குணங்களுள்ளவர்கள் அதை நன்றாகப் பார்ப்பார்கள். இல்லாதவர்களுக்கு அது தெரியாது. [15]

அவிபக்தம் ச பூதேஷு விபக்தமிவ ச ஸ்திதம் ‖௧௫½‖

[illegible] ‖

ஜீவன்கள் தேவன் முதலான வெவ்வேறு உடம்புகளில் இருந்தாலும், அறிவுள்ளவர்கள் ஒன்று ஒரே மாதிரிதான். அவர்கள் ஸ்வரூபத்தில் தேவன், மனிதன் முதலான பிரிவுகளில்லை.

இதை அறியாதவர்கள் அதை தேவன் முதலான உடம்புகளாகவே நினைத்து, வெவ்வேறாக எண்ணுகிறார்கள். [15½]

[illegible]

[illegible]||

[illegible]

||௬||

அவ—நான் தேவன், நான் மனிதன் என்று உடம்போடு ஆத்மா ஒன்றாக எண்ணப்பட்டாலும், அது அறிவுள்ளதாக இருப்பதால், உடம்பைக் காட்டிலும் வேறென்று அறியலாமென்று இந்த அத்தியாயம் முதல் சுலோகத்தில் சொல்லப்பட்டது இப்போது வேறு காரணங்களாலும், உடம்பைக் காட்டிலும் அது வேறென்று அறியலாமென்று சொல்லுகிறார்—

பூமி முதலானவைகள் சேர்ந்து உண்டான உடம்பைத் தாக்குகிறது ஆத்மா; தாக்கப்படுவது உடம்பு. ஆகையால் உடம்பைக்காட்டிலும் அது வேறு; 1 பூமி முதலானவைகளாலுண்

1. இங்கு ஒருகேள்வி—சோர்ந்த உடம்புதாமே ஆவிழுங்குகிறது. இதைப்பலருமபார்க்கிறோமே. ஆத்மாவுக்கோ வாய்முதலான அவயங்கள்

டான சோறு முதலானவைகளை ஆத்மாதான் விழுங்குகிறது. விழுங்கப்பட்டதால்வளரும்உடம்பைக்காட்டிலும்விழுங்குகிறஆத்மாவேறு. சோறு முதலானவைகளை ஜரிப்பித்து, கர்ப்பம் முதலானவைகளை உண்டாக்குவதும் ஆத்மாதான். உடம்பு தூக்குகிறதில்லை. பிணமானஉடம்பில்விழுங்குவது, ஜரிப்பிப்பதுமுதலியவை காணப்படவில்லை. ஆகையாலே பூமி முதலானவை சேர்ந்து உண்டான உடம்பானது இந்த வேலைகளைச்செய்கிறதில்லை என்று தீர்மானம் பண்ணலாம் [16]

ஜ்யோதிஷாமபி தஜ்ஜ்யோதிஸ்தமஸ: பரமுச்யதே |
ஜ்ஞாநம் ஜ்ஞேயம் ஜ்ஞாநகம்யம் ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம் ||

ஜ்யோதிஷாம் தீபாதித்யமணிநக்ஷத்ராதீநாமபி ததேவ ஜ்யோதி: ப்ரகாசகம், தீபாதித்யாதீநாம் ஜ்யோதிஷ்ட்வஸாதநம்

---

கிடையாது. இந்த வேலைகளைஆத்மாவின் வேலைகளாக எப்படிச் சொல்லக்கூடும்—என்று, பதில் பூமிமுதலானவைகள் சேர்ந்து, க்ஷேத்திரம் (உடம்பு)என்பது உண்டாயிருக்கிறது. இது உடம்பாயிருந்துகொண்டு, அறிவுள்ளஒருவனுக்கு உட்பட்டு,இந்தவேலைகளைச்செய்கிறதா? அல்லது பூமி முதலானவைகளின் சேர்க்கையாகததானிருந்து,இந்தவேலைகளைச் செய்கிறதா? இதைக்கொண்டு ஒருவன் விழுங்குகிருனு? இதுவேவிழுங்குகிறதா—என்று விசாரிக்கவேணடும. உடம்பாயிருந்துஇந்தவேலைகளைச்செய்வதானல், உடம்புஎனகிற சொல்லாலேயே அதை ஏவி வேலை வாங்குகிற ஆத்மா என்று ஒன்று இருக்கிறதென்றும், இந்தவேலைகளை உடம்பைக்கொண்டு அந்த ஆத்மாவே செய்கிறதென்றும் ஏற்படும். பூமி முதலானவைகளின் சேர்க்கையாகவே இருந்து, இந்த வேலைகளைச் செய்வதானல், பிணமான உடம்பில் இந்தவேலைகள் காணப்படவில்லையே. அந்த பிணமாக இருப்பதும் பூமிமுதலானவைகளின் சேர்க்கைதானே. பிணத்திலும் சில வேலைகள் உண்டாகின்றன. ஆனல் அவைகள் ஒரு ஜீவன் அறிவினல் ஏற்பட்டவையல்ல. ஒருஜீவன் சோற்றை விழுங்குவது முதலான வேலைகளைச் செய்யவேண்டுமென்று நினைக்கிருன். பிறகு உடம்பைக் கொண்டு, அந்த வேலைகளைச் செய்கிருன். பூமி முதலானவைகளால் செய்யப்பட்ட ஒருவஸ்துவில் ஜீவன் என்று ஒன்று இல்லாவிட்டால், உடம்பு என்று பெயர் ஏற்படமாட்டாது. ஐயனர் கோவில் வாசலில் குயவனல் செய்யப் பட்டு, வைக்கப்பட்ட பொம்மைக்கு உடம்பு என்று பெயர் கிடையாது. அது ஒரு வேலையையும் செய்யவும் செய்யாது.

ஜ்ஞாநேநைவ ப்ரகாஶயதி, தீபாதித்யாதயஸ்து விஷயேந்த்ரியஸந்நிகர்ஷவிரோதிஸந்தமஸநிரஸநமாத்ரம் குர்வதே। தாவந்மாத்ரேண தேஷாம் ப்ரகாஶகத்வம்। தமஸ: பரமுச்யதே - தம:ஶப்தஸ்ஸூக்ஷ்மாவஸ்தப்ரக்ருதிவசந:, ப்ரக்ருதே: பரமுச்யத இத்யர்த:। அதோ ஜ்ஞாநம் ஜ்ஞேயம் - ஜ்ஞாநைகாகாரமிதி ஜ்ஞேயம்। தச்ச ஜ்ஞாநகம்யம் - அமாநித்வாதிபிர்ஜ்ஞாநஸாதநை: ப்ராப்யமித்யர்த:। ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம் - ஸர்வஸ்ய மநுஷ்யாதேர்ஹ்ருதி விஶேஷேணாவஸ்திதம் ஸந்நிஹிதம்॥

விளக்கு, ஸூரியன் முதலானவைகள் (ஜ்யோதிஸ்ஸு) உலகத்தில் வஸ்துக்களைக் காட்டுவதாகச் சொல்லப்படுகின்றன. அவைகளையும் ஆத்மாதான் காட்டுகிறது. அவைகள் கண்ணாலே வஸ்துக்களைப் பார்ப்பதற்கு இடைஞ்சலான இருட்டைப் போக்குகின்றன. பிறகு ஆத்மாவிலிருக்கும் அறிவு வஸ்துக்களை ஆத்மாவுக்கு காட்டுகிறது. ஆத்மாவும், அதின் அறிவும் இல்லாவிட்டால், விளக்கு என்ன செய்யும். இருட்டைப் போக்குவதைப்பற்றி, விளக்கு முதலியவைகளை ஜ்யோதிஸ்ஸு (காட்டுகிறது) என்று சொல்லுகிறது. அவைகள் வஸ்துக்களைக் காட்டவில்லை. ஆத்மாதான் அவைகளையும் மற்றவைகளையும் தன்னுடைய அறிவு என்கிற குணத்தால் தனக்குக் காட்டுகிறது. விளக்கு முதலியவைகளுக்கு அறிவு கிடையாது. ஆகையால் அறிவுள்ள ஆத்மாதான் எல்லாவற்றைக் காட்டிலும் உயர்ந்த ஜ்யோதிஸ்ஸு. ஸத்துவம் முதலான குணமுள்ள பிரகிருதியைக் காட்டிலும் 1 வேறு என்று வேதத்தில் சொல்லப்படுகிறது. ஜடமான பிரகிருதியைக் காட்டிலும் வேறாக இருப்பதால், அறிவையே இயற்கையாக உடையது என்று அறியத்தக்கது. கீழ்ச்சொன்ன குணங்களாலேயார்க்கக்கூடியது. எல்லாருடைய ஹிருதயத்திலும் 2 விசேஷமாக இருக்கிறது.

1. சுலோகத்திலிருக்கும் "பரம்" என்கிற சொல்லுக்கு வேறு என்று பொருள் பாஷ்யத்தில் சொல்லப்பட்டது. அதற்கு உயர்ந்தது என்றும் பொருள். பிரகிருதியினுல் உண்டான வஸ்துக்களை ஜீவன் அனுபவிப்பதினுல், பிரகிருதியைக்காட்டிலும் அவன் உயர்ந்தவன் என்று சொல்லலாம்.

2. விசேஷமாக இருப்பதாவது—அனுபவித்துக்கொண்டிருக்கிறது. அல்லது அது ஹிருதயத்திலதான் இருக்கிறது. [illegible] அறி

𑌇𑌤𑌿 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌤𑌥𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌚𑍋𑌕𑍍𑌤𑌂 𑌸𑌮𑌾𑌸𑌤𑌃 ।
𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤 𑌏𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌯 𑌮𑌦𑍍𑌭𑌾𑌵𑌾𑌯𑍋𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 ॥ ॥௧௮॥

𑌏𑌵𑌂 “𑌮𑌹𑌾𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌃” 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 “𑌸𑌙𑍍𑌘𑌾𑌤𑌶𑍍𑌚𑍇𑌤𑌨𑌾 𑌧𑍃𑌤𑌿𑌃” 𑌇𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑍇𑌨 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌸𑌂𑌶𑍋𑌧𑍍𑌯𑍋𑌕𑍍𑌤𑌮𑍍 । “𑌅𑌮𑌾𑌨𑌿𑌤𑍍𑌵𑌮𑍍” 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 “𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌰𑍍𑌥𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍” 𑌇𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌤𑌵𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌾𑌧𑌨𑌮𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 । “𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌤𑍍𑌪𑌰𑌮𑍍” 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 “𑌹𑍃𑌦𑌿 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌵𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌮𑍍” 𑌇𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑍇𑌨 𑌜𑍍𑌞𑍇𑌯𑌸𑍍𑌯 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌂 𑌚 𑌸𑌂𑌕𑍍𑌷𑍇𑌪𑍇𑌣𑍋𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃 𑌏𑌤𑌤𑍍 -𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌂, 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌾𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌾𑌪𑌤𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌯𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌂, 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌂 𑌚 𑌵𑌿

---

விளுல் இருக்கிறது. விளக்கு ஒருஇடத்தில் இருக்கிறது. அதின வெளிச்சம நாலு பக்கமும்பரவுகிறது. அதுபோல் ஆத்மா ஹிருதயத்தில் இருக்கிறது. வெளிச்சம்போன்ற அதின்அறிவு எல்லாஇடத்திலும் பரவுகிறது.

12-வது சுலோகம் முதல் ஆறு சுலோகங்களாலே ஜீவாத்மாவின் ஸ்வரூபம் இன்னபடி இருக்குமென்று சொல்லப்பட்டது. இதனுல் உடம்பைக்காட்டிலும் எல்லா விதத்தாலும் அது வேறு என்று ஏற்படுகிறது. உடம்பில் கை, கால், கண், காது முதலான அங்கங்கள் இருக்கின்றன. அது இந்திரியங்களுக்குஇருப்பிடம். ஸத்துவம் முதலான குணங்களையுடையது. பிரகிருதியிஞல் உண்டானது. ஆத்மாவோ இந்த நாலு விஷயங்களிலும் வேறு. அதில் கை, கால், கண், காது முதலான அங்கங்களில்லை. இந்திரியங்களுக்கு மிருப்பிடமன்று. ஸத்துவம்முதலான மூன்று குணங்களும் அதில் இல்லை. அது பிரகிருதியைக்காட்டிலும் வேறுன திரவியம். உடம்பு ஜடம்; அதாவது—தன்னைக் காட்டுகிற வஸ்துவன்று. ஆத்மா ஸ்வயம்பிரகாசம்; தன்னைக் காட்டுகிற வஸ்து. இப்படிப் பலவிதமாய் உடம்பைக்காட்டிலும் வேறுன ஆத்மா, இப்போது இருப்பதுபோல, உடம்போடே சேர்ந்தே இருக்குமா? அல்லது அதைவிட்டுத் தனியாக இருக்கக்கூடுமோ என்றுல், பதில்—கர்மம் அடியோடு போனுல், உடம்பை விட்டுத் தனியாயுமிருக்கும். வேண்டுமானுல் நினைவிஞலேயே அனேக உடம்புகளை எடுத்துக்கொண்டு, அவைகளுக்குள்ளே இருக்கும். அப்படி உடம்புகளை எடுத்துக்கொள்ளும்போது, இன்ன ஜீவனுக்கு இன்ன உடம்பு என்று கட்டாயமில்லை. வேண்டிய உடம்பை எடுத்துக்கொள்ளத் தகுந்தவன. உடம்புகளில் போலே ஜீவன்களுக்குள்ளே வெவ்வேறு பிரிவுகளில்லை. அவர்கள் அறிவுள்ளவர்கள் என்று ஒரேமாதிரி.

[illegible]

அவ— ஆரம்பித்த ஸங்கதியை முடித்துக் கொண்டு, அதின் பிரயோஜனத்தைச் சொல்லுகிறார்—

5-வது, 6-வது ச்லோகங்களாலே உடம்பின் உண்மையைச் சுருக்கமாகச் சொன்னேன். 7-வது முதல் 11-வது வரையில் ஆத்மாவை அறிவதற்கு உதவியான குணங்கள் சொல்லப்பட்டன. 12-வதுமுதல் 17-வதுவரையில் ஜீவனுடைய உண்மையைச் சுருக்கமாகச் சொல்லிற்று. என்னிடத்தில் பக்தியுள்ளவன் உடம்பின் உண்மையையும், அதைக் காட்டிலும் வேறான ஜீவனுடைய உண்மையையும், அந்த ஜீவனை அறிவதற்கு உதவியான குணங்களின் உண்மையையும் அறிந்தால், என்மாதிரி ஆய்விடுவன். அதாவது ஸம்ஸாரத்தை அடியோடு விடத்தகுந்தவனாக ஆவன். [18]

[illegible]

ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்த்யநாதீ உபாவபி |
விகாராம்ஶ்ச குணாம்ஶ்சைவ வித்தி ப்ரக்ருதிஸம்பவாந் ||க௯||

[illegible] ||க௯||

அவ— பலவிதத்திலே வெவ்வேறான தன்மையுள்ள உடம்பு, ஜீவன்— இவைகளின் சேர்க்கைக்கு இதுமுதல் என்று இல்லை என்பதையும், இவைகள் சேர்ந்தபோது, அவைகளின் வேலை

வெவ்வேறு என்பதையும், ஒன்றின்பின் ஒன்றாக விடாமல் ஒரே மாதிரியாக வந்துகொண்டிருக்கிற அவைகளின் சேர்க்கைக்குக் காரணம் இன்னதென்பதையும் சொல்லுகிறார்—

பிரகிருதிக்கும் ஜீவனுக்கும் சேர்க்கை இதுமுதல் என்று முன் எல்லையில்லாமல்1 வெகுகாலமாய் இருந்துகொண்டிருக்கிறது. இந்த சேர்க்கை ஜீவனுக்கு ஆசை த்வேஷம் முதலானவைகளை உண்டுபண்ணி, கர்மத்தை வளர்த்து, ஸம்ஸாரத்தை வளர்க்கிறது. அதுவே 7-வது முதலான சுலோகங்களில் சொன்ன குணங்களை உண்டுபண்ணி, கர்மத்தை விலக்குவதற்கும் உதவுகிறது. [19]

கார்யகாரணகர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதிருச்யதே।
புருஷ: ஸுகது:கானாம் போக்த்ருத்வே ஹேதுருச்யதே ॥ ॥ 20 ॥

கார்யம்-ஶரீரம், காரணானி-ஜ்ஞானகர்மாத்மகானி ஸேந்த்ரியாணி, தேஷாம் க்ரியாகாரித்வே புருஷாதிஷ்டிதா ப்ரக்ருதிரேவ ஹேது:। புருஷாதிஷ்டிதக்ஷேத்ராகார பரிணதப்ரக்ருத்யாஶ்ரயா போகஸாதனபூதா: க்ரியா இத்யர்த:। புருஷஸ்ய அதிஷ்டாத்ருத்வமேவ। தத்பேக்ஷயா "கர்தா ஶாஸ்த்ரார்தவத்த்வாத்" இத்யாதிகமுக்தம்। ஶரீராதிஷ்டான ப்ரயத்னஹேதுத்வமேவ ஹி புருஷஸ்ய கர்த்ருத்வம்। ப்ரக்ருதிஸம்ஸ்ருஷ்ட: புருஷ: ஸுகது:கானாம் போக்த்ருத்வே ஹேது:-ஸுகது:கானுபவாஶ்ரய இத்யர்த: ॥ 20 ॥

ஜீவனால்2 ஏவப்பட்ட உடம்பும், பதினொரு இந்திரியங்களும் ஜீவனுக்கு ஸுகதுக்கங்களைக் கொடுக்கக்கூடிய வேலைகளைச் செய்

1. பகவானுடைய அனுக்கிரஹத்தினாலே இந்த சேர்க்கைபோகும். இதற்குப்பின் எல்லையுண்டு; முன் எல்லையில்லை. மோக்ஷத்துக்குப்பின் எல்லையில்லை. சம்சாரத்துக்கு இக்கரையில்லை; மோக்ஷத்துக்கு அக்கரையில்லை.

2. ஒருவன் சாப்பிடும்போது, ஆஹாரத்தைப் பல்லு கடிக்கிறது; அனந்தரம் நாக்கு உள்ளேதள்ளுகிறது. ஜீவன் அவைகளை ஏவுகிறவன்; உடம்பு முதலானவைகள் கருவிகள்; அனுபவிக்கிறவன் ஜீவன்.

கின்றன. அவைகளை ஏவுகிற ஜீவன் ஸுகத்தையும், துக்கத்தையும் அநுபவிக்கிறான்.

[20]

ஸ்வ— ஏவம் அந்யோந்யஸம்ஸ்ருஷ்டயோ: ப்ரக்ருதிபுருஷயோ: கார்யபேத உக்த:। புருஷஸ்ய ஸ்வத:ஸ்வாநுபவைகஸுகஸ்யாபி வைஷயிகஸுகது:கோபபோகஹேதுமாஹ—

புருஷ: ப்ரக்ருதிஸ்தோ ஹி புங்க்தே ப்ரக்ருதிஜாந் குணாந் ।

॥௨௦½॥

குணஶப்த: ஸுகாதிஷ்வௌபசாரிக:। ஸ்வத:ஸ்வாநுபவைகஸுகோऽபி புருஷ: ப்ரக்ருதிஸ்த:- ப்ரக்ருதிஸம்ஸ்ருஷ்ட:। ப்ரக்ருதிஜாந் குணாந்- ப்ரக்ருதிஸம்ஸர்கோபாதிகாந் ஸத்த்வாதிகுணகார்யபூதாந் ஸுகது:காதீந், புங்க்தே - அநுபவதி ॥

॥௨௦½॥

அவ— ஒன்றோடொன்று சேர்ந்த பிரகிருதிக்கும், ஜீவனுக்கும் வேலைகள் வெவ்வேறென்று சொல்லப்பட்டன. இயற்கையில் தன்னையே அநுபவித்து, மிகவும் ஸுகப்படக்கூடிய ஜீவன் ஏன் விஷயங்களால் வரும் ஸுகதுக்கங்களை அநுபவிக்கிறான் என்றால், சொல்லுகிறார்—

உடம்பு முதலானவைகளாக ஆகியிருக்கிற பிரகிருதியுடன் 1 சேர்ந்திருக்கையால், அதினுடைய ஸத்துவம் முதலான குணங்களால் உண்டாகும் ஸுகதுக்கங்களை ஜீவன் 2 அநுபவிக்கிறான். [20½]

1. பிரளயகாலத்தில் ஜீவன் பிரகிருதியுடன் சேர்ந்திருந்தாலும், அவனுக்கு ஸுகமும், துக்கமுமில்லை. பிரகிருதி உடம்பாகவும், இந்திரியங்களாகவும் ஆகி, அவைகளை ஜீவன் ஏவும்போது தான், அவைகள் வேலை செய்து, அவனுக்கு ஸுகத்தையும், துக்கத்தையுமுண்டு பண்ணுகின்றன. சிலவேளைகளில் ஜீவன் நினைக்காமலே சிலவேலைகள் நேருகின்றன. அவைகளும் அநுபவிக்கிற ஜீவன் உடம்பில் இருப்பதினால் தான் நேருகின்றன. பெரும்பாலும் இவன் நினைவினாலே தான் வேலைகள் நடக்கின்றன.

2. இங்கு ஓர் ஸந்தேகம்-ஜீவன் இயற்கையாக பரிசுத்தமானவன். தன்னையே அநுபவித்துக்கொண்டிருக்க வேண்டியவன். தன்னைக்காட்டிலும் வேறானவஸ்துக்களை கண் முதலான இந்திரியங்களால் அநுபவி

அவ— ப்ரக்ருதிஸம்ஸர்கே ஹேதுமாஹ—

காரணம் குணஸங்கோऽஸ்ய ஸதஸத்யோநிஜந்மஸு ॥

பூர்வபூர்வ ப்ரக்ருதிபரிணாமரூபதேவமநுஷ்யாதியோநி விஶேஷேஷு ஸ்திதோऽயம் புருஷஸ்தத்தத்யோநி ப்ரயுக்தஸத்வாதிகுணமயேஷு ஸுகாதிஷு ஸக்தஸ்தத்ஸாதநபூதேஷு புண்யபாபகர்மஸு ப்ரவர்ததே। ததஸ்தத்புண்யபாபபலாநுபவாய ஸதஸத்யோநிஷு-ஸாத்வஸாதுயோநிஷு ஜாயதே। ததஶ்ச கர்ம கரோதி। ததஶ்ச ஜாயதே। யாவதுபரதிகாராநாத்மப்ராப்திஸாதநம் குணாந் ஸேவதே, தாவதேவ ஸம்ஸரதி। ததிதமுக்தம்-காரணம் குணஸங்கோऽஸ்ய ஸதஸத்யோநிஜந்மஸ்விதி॥ உக॥

*அவ— ஜீவனுக்கு உடம்புடன் சேர்க்கை ஆறுபோல் பெருகிக்கொண்டிருப்பதற்குக் காரணம் சொல்லுகிறார்—*

*ஜீவனுக்கு உடம்புகளின் சேர்க்கை இப்போது வந்தது என்று சொல்லமுடியாது. அந்தஉடம்புகள் கணக்கில்லாமல் வரிசையாய் வந்துகொண்டிருக்கின்றன. அந்தந்த உடம்பிலிருக்கிற ஜீவன் அததற்குத் தகுந்தபடி மேலிடுகிற ஸத்துவம்முதலானகுண*

---

*த்துவரும் ஸுகங்களையும், துக்கங்களையும் எப்படி அநுபவிக்கக்கூடும். ஆகையாலே, செம்பரத்தின் பூவின் பக்கத்தில் வைக்கப்பட்ட ஸ்படிகத்தில் தெரிகிற அதின் சிகப்பு எப்படி உண்மையில் ஸ்படிகத்திலில்லையோ,அப்படியே இந்தஅநுபவம் ஜீவனுக்குஉண்மையிலில்லை—என்று. இந்த ஸந்தேஹம் சுலோகத்தில் "புங்க்தே-அநுபவிக்கிறான்" என்கிற சொல்லாலே தீர்க்கப்படுகிறது. ஜீவன் அனுபவிக்கிறான என்பது யாருக்கும் பிரத்தியக்ஷமாக இருக்கிறதே. அதை எப்படிப் பொய் என்றுசொல்லுகிறது.*

*உதாரணம்-ஒருவனுக்கு நிலைதப்படி ஸஞ்சரித்த ஒரு பிரும்மசாரி ஒரு ஸ்திரீயைக் கல்யாணம்செய்துகொண்டு,அவளுடன்சேர்ந்ததினுல், பல ஸுகதுக்கங்களை அனுபவிக்கிறான். அதுபோல. சுலோகத்திலிருக்கிற பிரகிருதி என்கிற சொல் பெண்பாலாகவும், புருஷன்என்கிற சொல் ஆண்பாலாகவும் இருப்பதினுல், இந்த உதாரணம் தோன்றுகிறது.*

ங்களாலே அவைகளாலுண்டாகும் ஸுகம் முதலானவைகளில் 1 ஆசையுள்ளவனாகி, அவைகளுக்கு உதவியான புண்ணியங்களையும், பாபங்களையும் செய்கிறான். அந்த புண்ணியங்களுக்கும், பாபங்களுக்கும் ஏற்பட்ட பலன்களை அநுபவிப்பதற்காக அவைகளுக்குத்தகுந்தபடி நல்லதோ, கெட்டதோ 2 உடம்பு மறுபடியும்வருகிறது. முன்போல்மறுபடியும் சுகதுக்கங்களுக்கு ஆசைப்பட்டு கர்மங்களைச்செய்து, மறுபடியும் பிறக்கிறான். 7—வது சுலோகம் முதல் சொன்ன குணங்கள் வருகிறவரையில் இந்த வருத்தத்துக்கு ஓய்வில்லை.
[ 21 ]

𑌉𑌪𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾𑌨𑍁𑌮𑌨𑍍𑌤𑌾 𑌚 𑌭𑌰𑍍𑌤𑌾 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 ।
𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑍇𑌤𑌿 𑌚𑌾𑌪𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌦𑍇𑌹𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑌰𑌃 ॥
॥ ௨௨ ॥

𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑍇𑌹𑍇𑌽𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍋𑌽𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌦𑍇𑌹𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌨𑍁𑌗𑍁𑌣𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌨𑍇𑌨 𑌦𑍇𑌹𑌸𑍍𑌯𑍋𑌪𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾𑌨𑍁𑌮𑌨𑍍𑌤𑌾 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌦𑍇𑌹𑌸𑍍𑌯 𑌭𑌰𑍍𑌤𑌾 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌦𑍇𑌹𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌜𑌨𑌿𑌤𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌯𑍋𑌰𑍍𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌭𑌵𑌤𑌿 । 𑌏𑌵𑌂 𑌦𑍇𑌹𑌨𑌿𑌯𑌮𑌨𑍇𑌨, 𑌦𑍇𑌹𑌧𑌾𑌰𑌣𑍇𑌨, 𑌦𑍇𑌹𑌶𑍇𑌷𑌿𑌤𑍍𑌵𑍇𑌨 𑌚 𑌦𑍇𑌹𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑌾𑌂𑌸𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑍋 𑌭𑌵𑌤𑌿 ।

---

1. ஸத்துவகுணத்தினாலுண்டாகும் ஸுகத்தில் ஆசை எவனுக்கும் வரும். ரஜோகுணத்தினால் வரும் துக்கத்தில் ஆசை எப்படி வரும் என்றால், பதில்—துக்கத்தை ஸுகமாக எண்ணுவதாலே, அதில் ஆசையுண்டாகிறது. உதாரணம்—ஒருவன் பணம் ஸம்பாதிப்பதற்காக வ்யவஸாயத்தை செய்கிறான். அதில் அநேக ஆபத்துக்கள் இருக்கின்றன. பெரும்பாலும் கிடைக்கும் லாபம் கொஞ்சம். அதுகிடைப்பதும் நிச்சயமில்லை. சிலர் அடிபடுவதையும் ஸுகமாக எண்ணுகிறார்கள். இல்லாவிட்டால், ஸந்தோஷமாகச் சண்டைக்குபோவார்களா.

2. பலன்களைஉடம்பைக்கொண்டுதான் அனுபவிக்க வேண்டும். ஜீவாத்மஸ்வரூபம் மிகவும் சின்னது. அதைநினைக்கவும் முடியாது; தொடுகவும்முடியாது. சந்தனத்தாலே ஸுகப்படவேணுமானால், அதற்கு ஒருஉடம்பைக் கொடுத்து, உடம்பில்சந்தனத்தைப்பூசவேணும். அதைச்சுடவேணுமானால், அதற்கு உடம்பைக் கொடுத்து, உடம்பில்தணலைவைக்கவேணும்,

ததா ச வக்ஷ்யதே "ஶரீரம் யதவாப்னோதி யச்சாப்யுத்க்ராமதீ ஶ்வர:। க்ருஹீத்வைதானி ஸம்யாதி வாயுர்கந்தானிவாஶயாத்" இதி। அஸ்மிந் தேஹே தேஹேந்த்ரியமனஸாம் ப்ரதி ஶாஸிதேதி மஹேஶ்வர:। தேஹே மனஸி சாத்மஶப்தோ நைவ வ்யபதிஶ்யதே। "த்யானேனாத்மனி பஶ்யந்தி கேசிதாத்மான மாத்மனா" இதி। அபி ஶப்தாத் தேஹஶரீர வ்யபதேஶ இதி ப்ரதீயதே। "பராத் பர:" "அனாதிமத்பரம்" இத்யாதிநோக்தாபரிச்சின்ன ஜ்ஞானஶக்திரயம் புருஷோ'நாதி ப்ரக்ருதிஸம்பந்தக்ருத குணஸங்காத் தேஹமாத்ராத்மா ச பவதி ॥ ௨௨ ॥

அவ—ஜீவனுக்கு உடம்பு வந்தபிறகு வரும் ஸங்கதிகளைச் சொல்லுகிறார்.

ஜீவன் உடம்பிலிருக்கும்போது, அந்தந்த வேலைகளைச் செய்ய வேணுமென்று எண்ணி, அந்தந்த வேலைகளில் உடம்பை ஏவுகி கிறான். உடம்பு வேலைகளைச் செய்யும்போது, அவைகளை ஒப்புக் கொண்டிருக்கிறான். அந்த உடம்பைத் தாங்குகிறான், அந்த வேலை களினால் உண்டாகும் ஸுகதுக்கங்களை அனுபவிக்கிறான். இப்படி உடம்பை ஏவுவதாலும், தாங்குவதாலும், சேஷியாயிருப்பதாலும் (அதனால் வரும் ஸுகதுக்கங்களை அனுபவிப்பதாலும்), உடம்பு, இந்திரியங்கள், மனஸு, இவைகளுக்கு ராஜாவாக இருக்கிறான். அவைகளைக் குறித்து 1 பரமாத்மா என்றும் சொல்லப்படுகிறான். 12-வது சுலோகத்தில் சொன்னபடி அளவில்லாத அறிவையும் சக்தியையும் அடையவேண்டிய இந்த ஜீவன் நெடுநாளாய் வந்த உடம்பு முதலானவைகளாக ஆயிருக்கும் பிரகிருதியின் சேர்க்கை யால், ஸத்துவம்முதலான குணங்களால் உண்டாகிற ஸுகங்களை

1. ஆத்மா என்கிற சொல் எங்கும் நிறைந்த வஸ்துவைச் சொல் லுகிறது ஜீவன் தன்னுடைய அறிவு என்கிற குணத்தினால் தன் உடம்பில் நிறைந்திருக்கிறான். ஆகையால் அவனை ஆத்மா என்று சொல்லுகிறது. உடம்பையும், மனதையும் ஆத்மாவென்று இந்த அத்தியாயம் 24—வது சுலோகத்தில் சொல்லப் போகிறார்- ஆகையாலே ஜீவனைப் பரமாத்மா என்று இங்கே சொல்லியிருக்கிறது.

[illegible] ॥ ௭ ॥

பிரும்மலோகம்வரையிலுள்ள உலகங்களில் கிடைக்கும் ஸுகத்தைக் கொடுக்கக்கூடிய தர்மங்களும், மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடிய தர்மங்களும், வேதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகள் அவர்களுக்குத் தெரியாது. லக்ஷம்தடவை சொன்னாலும், தமோகுணம் மேலிட்டிருப்பதால், புரியாது. உடம்பும் ஆத்மாவும் வேதத்தில் சொல்லிய கர்மங்களை எப்படியிருந்து செய்ய வேணுமென்று சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறதோ, அப்படி அவர்கள் இருக்கமாட்டார்கள். ஸ்நாநம் செய்து கோவிலுக்குப் போகவேணுமென்று சொல்லியிருக்கிறது. அந்த ஸ்நானத்தைச் செய்யமாட்டார்கள். ஆத்மாவிற்கு தயை, பொறுமை, வணக்கம் இவை முதலானவைகள் வேணுமென்று சொல்லியிருக்கிறது. அவைகள் அவர்களுக்கு இருக்காது. ஸந்தியாவந்தனம் முதலான எந்த வேலைகளாலே உடம்பும் ஆத்மாவும் சுத்தமாகுமோ, அந்த வேலைகளுமிருக்காது. ஸந்தியாவந்தனம் பண்ணாதவன் அசுத்தன்; ஒரு வேலைக்கும் தகாதவன் என்று சொல்லியிருக்கிறது. அவர்களிடத்தில் ஸத்தியம் இருக்காது. பொய்தான் சொல்லுவர்கள். ஏய்க்கிறத்திலேயே ருசியாகையால், நடந்தபடி சொல்ல மாட்டார்கள். தொந்தரவு செய்வதே ஸ்வபாவமானதால், அநுகூலத்தைச் சொல்லமாட்டார்கள். [7]

[illegible]

[illegible] ।
[illegible] ॥ ௮ ॥

ம், மறுபடியும் பிரகிருதியுடன் சேரமாட்டான். அதாவது— மறுபடியும் பிறக்கமாட்டான். இந்த உடம்பு போகிறகாலத்திலே யே அளவில்லாத அறிவுள்ளதாயும், இயற்கையில் ஒருவிதமான கர்மங்களுமில்லாததுமான ஆத்மஸ்வரூபத்தை அடைவன். அதாவது அவனுக்கு எல்லாக்கர்மங்களும் போய்விடும். [23]

𑌧𑍍𑌯𑌾𑌨𑍇𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌕𑍇𑌚𑌿𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 ।
𑌅𑌨𑍍𑌯𑍇 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍇𑌨 𑌯𑍋𑌗𑍇𑌨 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌚𑌾𑌪𑌰𑍇 ॥

𑌕𑍇𑌚𑌿𑌨𑍍𑌨𑌿𑌷𑍍𑌪𑌨𑍍𑌨𑌯𑍋𑌗𑌾𑌃 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌶𑌰𑍀𑌰𑍇𑌽𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌾-𑌮𑌨𑌸𑌾, 𑌧𑍍𑌯𑌾𑌨𑍇𑌨-𑌯𑍋𑌗𑍇𑌨 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 । 𑌅𑌨𑍍𑌯𑍇 𑌚 𑌅𑌨𑌿𑌷𑍍𑌪𑌨𑍍𑌨𑌯𑍋𑌗𑌾𑌃 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍇𑌨 𑌯𑍋𑌗𑍇𑌨-𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍋𑌗𑍍𑌯𑌂 𑌮𑌨𑌃 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 । 𑌅𑌪𑌰𑍇-𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌾𑌨𑌧𑌿𑌕𑌾𑌰𑌿𑌣𑌃 𑌤𑌦𑌧𑌿𑌕𑌾𑌰𑌿𑌣𑍋 𑌵𑌾 𑌸𑍁𑌕𑌰𑍋𑌪𑌾𑌯𑌾𑌸𑌕𑍍𑌤𑌾𑌃 𑌵𑍍𑌯𑌪𑌦𑍇𑌶𑍍𑌯𑌾𑌶𑍍𑌚 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌗𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌮𑌨𑌸𑍋 𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑌾𑌮𑌾𑌪𑌾𑌦𑍍𑌯 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 ॥ ॥௨௪॥

அவ— கீழ்ச்சொன்ன ஸங்கதியையே இரண்டு சுலோகங்களால் விரிவாய்ச் சொல்லி, ஆத்மாவின் அறிவில் உயர்ந்தபடி முதல் பலபடிகளைச் சொல்லுகிறார்.—

தியானம் நிறைவேறின சிலர் உடம்பிலிருக்கும் ஆத்மாவை மனஸினாலே தியானத்தினாலேயே பார்க்கிறார்கள். அதாவது ஆத்மாவைப்பார்க்கும்படி தியானம் சிலர்க்கு நிறைவேறிவிட்டது. ஆத்மாவின் தியானம் நிறைவேறாதவர்கள் ஞானயோகத்தைப்பண்ணி, மனதை ஆத்மாவைத்தியானப்பண்ணத்தகுந்ததாகச்செய்து, பிறகு ஆத்மாவைப்பார்க்கிறார்கள். ஞானயோகம் பண்ண முடியாதவர்களும், முடிந்தபோதிலும், பிரயாஸமில்லாமல் ஆத்மாவை

---

னய நன்றாய் அறிந்தவன் பிராரப்த (பலனைக்கொடுக்க ஆரம்பித்த) கர்மங்களினாலே தொந்தரவுகளை அநுபவித்தாலும், அவனை மற்றவர்களைப் போல் நினைத்து, மறுபடியும் பிறப்பனென்று நினைக்கக்கூடாது.

“இருந்தாலும்” என்கிற சொல்லில் “உம்” என்பதால் தொந்தரவுகளை அநுபவிக்காமல் இருப்பவன் மறுபடியும் பிறக்கமாட்டான் என்று சொல்லவேணுமா என்று காட்டப்படுகிறது.

ப்பார்க்கும்வழியைத் தேடுகிறவர்களும், நாலுபேர்களால் தெரிந்தவனென்றும், நல்லகாரியங்களைச் செய்கிறவன் என்றும் கொண்டாடப்பட்டவர்களும் ஆத்மாவின் உண்மையான அறிவுடன் சேர்ந்த கர்மயோகத்தைச் செய்து, மனஸை ஆத்மாவைத் தியானப்பண்ணத்தகுந்ததாக ப்பண்ணி, ஆத்மாவைப் பார்க்கிறார்கள். [ 24 ]

𑌅𑌨𑍍𑌯𑍇 𑌤𑍍𑌵𑍇𑌵𑌮𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌃 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾𑌨𑍍𑌯𑍇𑌭𑍍𑌯 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇।
𑌤𑍇𑌽𑌪𑌿 𑌚𑌾𑌤𑌿𑌤𑌰𑌨𑍍𑌤𑍍𑌯𑍇𑌵 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌪𑌰𑌾𑌯𑌣𑌾𑌃॥

𑌅𑌨𑍍𑌯𑍇 𑌤𑍁 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌾𑌦𑌿𑌷𑍍𑌵𑌨𑌧𑌿𑌕𑍃𑌤𑌾𑌃, 𑌅𑌨𑍍𑌯𑍇𑌭𑍍𑌯𑌃- 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌿𑌭𑍍𑌯𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌭𑍍𑌯𑌃 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌾𑌦𑌿𑌭𑌿𑌰𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍁𑌪𑌾𑌸𑌤𑍇। 𑌤𑍇𑌽𑌪𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌤𑌿𑌤𑌰𑌨𑍍𑌤𑌿। 𑌯𑍇 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌪𑌰𑌾𑌯𑌣𑌾𑌃- 𑌶𑍍𑌰𑌵𑌣𑌮𑌾𑌤𑍍𑌰𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌃, 𑌤𑍇𑌽𑌪𑌿 𑌚 𑌶𑍍𑌰𑌵𑌣𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌃 𑌪𑍂𑌤𑌪𑌾𑌪𑌾𑌃 𑌕𑍍𑌰𑌮𑍇𑌣 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌾𑌦𑌿𑌕𑌮𑌾𑌰𑌭𑍍𑌯𑌾𑌤𑌿𑌤𑌰𑌨𑍍𑌤𑍍𑌯𑍇𑌵 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑍍। 𑌅𑌪𑌿𑌶𑌬𑍍𑌦𑌾𑌤𑍍𑌤𑍁 𑌪𑍂𑌰𑍍𑌵𑍇𑌭𑍍𑌯𑍋𑌽𑌵𑌮𑌤𑍍𑌵𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇॥ ॥௨௫॥

கர்மயோகத்தையும் செய்யமுடியாத சிலர் உண்மையை அறிந்த பெரியோர்களிடம் கேட்டு, கர்மயோகம் முதலானவைகளைச் செய்து, ஆத்மாவைத் தியானம்பண்ணுகிறார்கள். அவர்களும் ஆத்மவைப்பார்த்து, ஸம்ஸாரத்தைப் போக்குகிறார்கள். எவர்கள் பெரியோர்களிடம் ஆத்மாவின்ஸங்கதிகளைக் கேட்டுக்கொண்டுமாத்திரம் இருக்கிறார்களோ, அதாவது அதற்குத்தகுந்த வேலைகளைச் செய்யவில்லையோ, அவர்களும் கேள்வியினாலே பாபத்தைக்போக்கி, கொஞ்சகாலத்தில் படிப்படியாக க்கர்மயோகம் முதலானவைகளைச்செய்து, ஸம்ஸாரத்தை 1 தாண்டுவர்கள். [ 25 ]

𑌏𑌵𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑌂𑌸𑍃𑌷𑍍𑌟𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍋 𑌵𑌿𑌵𑍇𑌕𑌾𑌨𑍁𑌸𑌨𑍍𑌧𑌾𑌨𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑌂 𑌜𑌙𑍍𑌗𑌮𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌚𑌿𑌦𑌚𑌿𑌤𑍍𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌜𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌹—

1. மறுபிறப்புஆகிய தொந்தரவு போய்விடுமென்று சொன்னதினாலேயே உயர்ந்த ஸுகமும் வரும் என்று ஏற்படுகிறது. அறிவில்லாமையும், கர்மங்களும் அடியோடு போனவன் மறுபிறப்புக்குத் தகுந்தவனோ; அல்ல, அவனுக்கு ஸுகத்துக்கு குறைவு என்ன?

யாவத்ஸஞ்ஜாயதே கிஞ்சித்ஸத்வம் ஸ்தாவரஜங்கமம் ।
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞஸம்யோகாத்தத்வித்தி பரதர்ஷப ॥ ௨௬ ॥

யாவத் ஸ்தாவரஜங்கமாத்மநா ஸத்த்வம் ஜாயதே, தாவத் க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோரிதரேதரஸம்யோகாதேவ ஜாயதே-ஸம்யுக்தயோரேவ ஜாயதே, நத்விதரேதரவியுக்தயோ:॥ ॥௨௬॥

அவ—பிரகிருதியோடு சேர்ந்த ஜீவன் பிரகிருதியைக்காட்டிலும் வேறென்று நினைக்கும் வழியைச் சொல்லுவதற்காக 1, உலகத்தில்—அசையும் பொருளோ, அசையாப்பொருளோ—எல்லாம் பிரகிருதி, ஜீவன்—என்ற இந்தஇரண்டும் சேர்ந்து உண்டானவைகள் என்று சொல்லுகிறார்—

உலகம் ஜங்கமம் (நடமாடுகிறது) என்றும் 2 ஸ்தாவரம், அதாவது—மரம் முதலான நடமாடாதது) என்றும் இருவகையாக இருக்கிறது. இதெல்லாம் பிரகிருதி (அறிவில்லாதது), ஜீவன் (அறிவுள்ளது) என்கிற இந்த இரண்டும் சேர்ந்துதான் உண்டாயிருக்கின்றன. பிரகிருதி மாத்திரமும் அல்ல; ஜீவன் மாத்திரமும் அல்ல.

ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்தம் பரமேஶ்வரம் ।
விநஶ்யத்ஸ்வவிநஶ்யந்தம் ய: பஶ்யதி ஸ பஶ்யதி ॥ ௨௭ ॥

ஸதேவதிர்யக்ஷு ஸர்வேஷு பூதேஷு தேவாதிவிஷமாகாரவிவிக்தம், தத்ர தத்ர தத்தத்தேஹேந்த்ரிய மநாம்ஸி ப்ருதி பரமேஶ்வரத்வேந ஸ்திதமாத்மாநம் ஜ்ஞாத்ருத்வேந ஸமாநாகாரம், தேஷு தேஹாதிஷு விநஶ்யத்ஸு விநாஶாநர்ஹஸ்வபாவேநாவிநஶ்யந்தம் ய: பஶ்யதி, ஸ பஶ்யதி—ஸ ஆத்மாநம் யதாவதவஸ்திதம் பஶ்யதி । யஸ்து தேவா

1 இரண்டுவஸ்துக்கள் இருக்கின்றனவென்று அறிந்தால்தானே, ஒன்றுக்கொன்றின் பேதத்தை காட்டலாம். உடம்புதான் ஆத்மாவென்று நினைத்தவனுக்கு உடம்புவேறு, ஆத்மாவேறு என்று எப்படிக் காட்டமுடியும்.

2. மரம், செடி, கொடிகள் முதலானவைகளில் அறிவிருப்பதாகக் காணப்படாமையாலே ஜைனர்கள் சொல்லுவதுபோல், அவைகளில்ஜீவன் இல்லையென்று நினைக்கக்கூடாதென்று காட்டுவதற்காக, இந்தச் சொல் ஸ்லோகத்தில் சேர்த்திருக்கிறது.

ஷிவிஷமாகாரேணாத்மாநமவி விஷமாகாரம், ஜந்மவிநாஶாஷ்ய-
க்ஷம் ச பஶ்யதி-ஸம்யக்பஶ்யதி ஸம்ஸார-தீர்த்யபிப்ராய: ॥ ॥உஎ॥

இப்படி பிரகிருதியும் ஜீவனும் சேர்ந்து உண்டான எல்லாவஸ்துக்களிலும், ஆத்மா என்கிற வஸ்துக்களை தேவன், மனிதன் முதலான வெவ்வேறு விதமான உடம்புகளைக்காட்டிலும் 1 வேறென்றும், அந்தந்த உடம்பு, இந்திரியங்கள், மனது—இவைகளுக்கு ராஜாவென்றும், அறிவுள்ளது என்பதினால் அவைகள் 2 ஒரேமாதிரியென்றும், அந்த உடம்புகள் அழிந்தபோதிலும், அழியத் தகுதியில்லாமையால், 3 அவைகள் அழியத்தகாதவைகள் என்றும் எவன் பார்க்கிறானோ (அதாவது—ஆத்மா இப்படிப்பட்டதென்று அறிகிறானோ), அவன் ஆத்மாவைஉள்ளபடி அறிகிறான். எவன்உடம்பிலிருக்கிற நீளம், குட்டை, கருப்பு,செகப்பு முதலிய வேற்றுமைகளை ஆத்மாக்களில் இருப்பதாகவும், அவைகள் பிறப்பு, இறப்பு உள்ளவைகள் என்றும் 4 நினைக்கிறானோ, அவனுக்கு ஸம்ஸாரம் ஒருநாளும் போகாது. அவன் பிறப்பதும் சாவதுமாகவே இருப்பன். [27]

---

1. உதாரணம்—கங்கையின் ஜலத்தை மண்குடத்திலும், தங்கக் குடத்திலும் வைத்தபோதிலும், அது மண்ணாகவும், தங்கமாகவும் ஆகிறதில்லை. அப்படியே தேவன், மனிதன் முதலிய உடம்புகளில் ஆத்மாக்கள் இருந்தபோதிலும், தேவன், மனிதன்முதலான வேற்றுமைகள் ஆத்மாக்களுக்குஇல்லை. அவைகளுக்கு அந்த உடம்பிலிருப்புமாத்திரமதான்.

2. உடம்புகளிலிருக்கும்வேற்றுமைகள் ஆத்மக்களில்இல்லையென்பது மாத்திரம் அல்ல. ஆத்மாக்களுடைய ஸ்வரூபத்திலும் ஒன்றுக்கு ஒன்று வேற்றுமையில்லை. அதாவது-எல்லாம் ஒரேமாதிரி. பசுயாடுகளுக்கு அனேக வர்ணங்களிருந்தபோதிலும், பால் வெளுப்பு என்பதால், ஒரேமாதிரியாயிருக்கிறது. அதுபோல எல்லா ஆத்மாக்களும் அறிவுள்ளவை என்பதால் ஒரேமாதிரி.

3. இது 2-வது அத், 17-வது சுலோகததில் விரிவாய் சொல்லப்பட்டிருக்கிறது.

4. வெளுப்பான சங்கை மஞ்சள் என்று நினைப்பதுபோல், இது தப்பான எண்ணம். இப்படி ஆதமாவை நினைக்கிறவன் அதை உண்மையாக அறியவில்லை.

ஸமம் பஶ்யந் ஹி ஸர்வத்ர ஸமவஸ்தி²தமீஶ்வரம் |
ந ஹிநஸ்த்யாத்மநாத்மாநம் ததோ யாதி பராம் க³திம் ||௨௮||

ஸர்வத்ர-தே³வாதி³ஶரீரேஷு தத்³விஷமேஷ்வேகாகாரதயா நியந்த்ருதயா ச அவஸ்தி²தமீஶ்வரம் ஆத்மாநம் தே³வாதி³விஷமாகாரவியுக்தம் ஜ்ஞாநைகாகாரதயா ஸமம் பஶ்யந்நாத்மநாத்மாநம் ந ஹிநஸ்தி-ரக்ஷதி ஸம்ஸாராந்மோசயதி | தத꞉-தஸ்மாஜ்ஜ்ஞாத்ருதயா ஸர்வத்ர ஸமாநாகாரத³ர்ஶநாத் பராம் க³திம் யாதி| க³ம்யத இதி க³தி꞉, பரம் க³ந்தவ்யம் யதா²வத³வஸ்தி²தமாத்மாநம் ப்ராப்நோதி| தே³வாத்³யாகாரயுக்ததயா ஸர்வத்ர விஷமமாத்மாநம் பஶ்யந் ஆத்மாநம் ஹிநஸ்தி ப⁴வஜலதௌ⁴ ப்ரக்ஷிபதி || ||௨௮||

அவ—கீழ்ச் சொன்னதற்குக் காரணம் சொல்லுகிறார்—

தேவன் முதலான எல்லா உடம்புகளிலும் அவைகளுக்கு யஜமானர்களாகவும், அவைகளைத் தூக்குகிறவர்களாகவும், ஏவுகிறவர்களாகவும் ஜீவாத்மாக்கள் இருக்கிறார்கள். அவர்களுக்குத் தேவன் முதலான உடம்புகளின் வேற்றுமைகள் இல்லை என்றும், அவர்களெல்லாரும் அறிவுள்ளவர்கள் என்பதால், ஒரேமாதிரி என்றும் அறிகிறவன் தன்னுடைய மனதினால் தன்னைக் காப்பாற்றுகிறான். அதாவது—ஆத்மாவுக்கு ஸம்ஸாரத்தைப் போக்குகிறான். எல்லாஉடம்புகளிலுமிருக்கும் எல்லாஆத்மாக்களும், அறிவுள்ளவைகள்என்பதால், ஒரேமாதிரிஎன்றுபார்ப்பதினாலே,உயர்ந்த பதவியை அடைகிறான். அதாவது-ஆத்மாவை உள்ளபடி அறிகிறான். ஆத்மாக்களை உடம்புகளாகவே பார்க்கிறவன் தன்னை ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தின் நடுவில் தள்ளிக் கொள்ளுகிறான். [28]

ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணாநி ஸர்வஶ꞉ |
ய꞉ பஶ்யதி ததா²த்மாநமகர்தாரம் ஸ பஶ்யதி ||௨௯||

ஸர்வாணி கர்மாணி காயகாரணகர்த்ருகேஷு ஜாதா꞉ ப்ரக்ருதிரேவ ப்ரவர்த்தத இதி பஞ்சகேக்ஷ்ரீத்யா ப்ரக்ருத்யா க்ரியமாணாநீதி ய꞉ பஶ்யதி, ததா²த்மாநம் ஜ்ஞாநாகாரமகர்

𑌰𑌂 𑌚 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿। 𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑌂𑌯𑍋𑌗𑌸𑍍𑌤𑌦𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌂 𑌤𑌜𑍍𑌜𑌨𑍍𑌯𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌾𑌨𑍁𑌭𑌵𑌶𑍍𑌚 𑌕𑌰𑍍𑌮𑌰𑍂𑌪𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑍃𑌤𑌾𑌨𑍀𑌤𑌿 𑌚 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿। 𑌸 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌯𑌥𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿॥ ॥௨௯॥

எவன் எல்லா வேலைகளும் உடம்பினால் செய்யப்படுகின்றனவென்றும், 1 அப்படியே அறிவையே இயற்கையாக உடையதான ஆத்மா அவைகளைச் செய்யவில்லையென்றும் பார்க்கிறானோ, அவன் ஆத்மாவை உள்ளபடி பார்க்கிறான். அதாவது—இப்போது ஆத்மாக்கள் பல வேலைகளைச் செய்கிறார்கள். அறிவையே இயற்கையாகவுடைய ஜீவன்களுக்கு இந்த வேலைகள் பிரகிருதியுடன் சேர்க்கையால் வருகின்றன. 2ஸ்வபாவத்தால் கிடையாது. ஆத்மாக்களுக்குப் பிரகிருதியுடன் சேர்க்கையும், உடம்பு முதலானவைகளை ஏவுகிறதும், அதினால் வரும் ஸுகதுக்கங்களை அநுபவிப்பதும் கர்மத்தினால் ஏற்படுகின்றன. இப்படி அறிகிறவன் ஆத்மாவை உள்ளபடி அறிகிறான். [29]

𑌯𑌦𑌾 𑌭𑍂𑌤𑌪𑍃𑌥𑌗𑍍𑌭𑌾𑌵𑌮𑍇𑌕𑌸𑍍𑌥𑌮𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ।
𑌤𑌤 𑌏𑌵 𑌚 𑌵𑌿𑌸𑍍𑌤𑌾𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌤𑌦𑌾 ॥௩௦॥

𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌪𑍁𑌰𑍁𑌷𑌦𑍍𑌵𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑍇𑌷𑍁 𑌦𑍇𑌵𑌾𑌦𑌿𑌷𑍁 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌸𑌤𑍍𑌸𑍁 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌦𑍇𑌵𑌤𑍍𑌵𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌤𑍍𑌵𑌹𑍍𑌰𑌸𑍍𑌵𑌤𑍍𑌵𑌦𑍀𑌰𑍍𑌘𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌭𑍂𑌤𑌪𑍃𑌥𑌗𑍍𑌭𑌾𑌵𑌮𑍇𑌕𑌸𑍍𑌥𑌮𑍍 - 𑌏𑌕𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑍍𑌥𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑍍𑌥𑌂 𑌯𑌦𑌾 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 - 𑌨𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌥𑌮𑍍। 𑌤𑌤 𑌏𑌵 - 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌤 𑌏𑌵 𑌉𑌤𑍍𑌤𑌰𑍋𑌤𑍍𑌤𑌰𑌪𑍁𑌤𑍍𑌰𑌪𑍌𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌭𑍇𑌦𑌵𑌿𑌸𑍍𑌤𑌾𑌰𑌂 𑌚 𑌯𑌦𑌾 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌤𑌦𑍈𑌵 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 - 𑌅𑌨𑌵𑌚𑍍𑌛𑌿𑌨𑍍𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑍈𑌕𑌾𑌕𑌾𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ॥௩௦॥

பிரகிருதி, ஜீவன் என்கிற இரண்டும், எள்ளும் எண்ணெயும் போல், ஒன்றோடொன்று சேர்ந்து உண்டான—தேவன் முதலா

---

1. வேலைகளைச் செய்வதை ஆத்மாவை அறிந்தவனும், அதையறியாதவனும் பார்க்கிறார்கள். ஆத்மாவை அறிந்தவன் அவைகளை உடம்பு செய்கிறதென்று பார்க்கிறான்.

2. ஜீவனுக்கு இரண்டு இருப்புகள் இருக்கின்றன. (1) கர்மமுள்ளவனாயிருப்பது. (2) கர்மம் அடியோடு போன இருப்பு. இந்த இரண்டாவது இருப்பிலே இந்த வேலைகளைச் செய்கிறதில்லை.

ன்—எல்லாப் பிராணிகளிலும், தேவன்—மனிதன், நீளம்-குட்டை
இவை முதலான வேற்றுமைகள் இரண்டில் ஒன்றான உடம்பிலி
ருக்கின்றனவென்றும், ஆத்மாவில் இல்லை யென்றும், பிள்ளை, பேரன்
முதலான ஸம்ஸாரத்தின் விரிவுகள் அந்த பிரகிருதியிலேதான்
உண்டாகின்றன என்றும் எவன் எப்போது அறிகிறானோ, அப்
போதே பிரும்மத்தை அடைந்து விட்டான் அதாவது—அளவில்
லாத அறிவுள்ளவனாக ஆகிறான். [30]

அநாதித்வாந்நிர்குணத்வாத் பரமாத்மாயமவ்யய: |
ஶரீரஸ்தோऽபி கௌந்தேய ந கரோதி ந லிப்யதே ||௩௧||

அயம்-பரமாத்மா தேஹாந்நிஷ்க்ருஷ்ட ஸ்வஸ்வரூபேண நிரூபித: ஶரீரஸ்தோऽபி அநாதித்வாத்-அநாரப்யத்வாத், அவ்யய:-வ்யயரஹித: | நிர்குணத்வாத்-ஸத்வாதிகுணரஹிதத்வாத், ந கரோதி ந லிப்யதே-தேஹஸ்வபாவேந ந லிப்யதே || ||௩௧||

உடம்பைக் காட்டிலும் வேறான தன்மையுடையவனென்று
தீர்மானிக்கப்பட்ட இந்த ஜீவன், உடம்பில் இருந்தாலும், உடம்பு
போல் உண்டாகாதபடியால், 1 அழிவில்லாதவன். அந்த ஜீவன்
ஸத்துவம் முதலான குணங்களில்லாதபடியால், உடம்புடன்சேரா
திருந்தால், இப்போதுசெய்யும் வேலைகளைச் செய்ய மாட்டான்
வளர்வது, அழிவது முதலான உடம்பினுடைய குணங்களும் அவ
னுக்கு2வருவதில்லை. அதாவது—ஒருவன் ஓடும்போது, உடம்பு வேர்க்
கிறது. அந்த வேர்வை உடம்பிலிருக்கிறது; ஆத்மாவுக்கில்லை. [31]

---

1. உலகத்தில் எது உண்டாகிறதோ, அதற்கு அழிவை எல்லாரும் பார்க்கிறோம். உண்டாகாமையால், அழிவில்லை.

2. சேற்றில் விழுந்த துணியில் சேறு ஒட்டிக்கொள்ளுகிறது. அது போல், உடம்பிலிருக்கும் ஆத்மாவுக்கு அதினுடைய ஸ்வபாவங்கள் வருமோவென்றால், வருகிறதில்லையென்று கருத்து.

ஒரு வெள்ளைத்துணியை சற்று நேரம் நம் உடம்பில் போட்டுக் கொண்டால், அந்த துணி கருத்துப்போகிறது. அதுபோல் ஆத்மா நெடு நாளாக உடம்பிலிருந்தபோதிலும், அதற்கு உடம்பின் கருப்பு முதலான மலங்கள் வருவதில்லை.

அவ—யத்யபி நிர்குணத்வாந்ந கரோதி, நித்யஸம்ப³ந்தோ⁴ தே³ஹஸம்ஸர்கே³ண ஸ்வயம் ந லிப்யதே தத்ராஹ—

யதா² ஸர்வக³தம் ஸௌக்ஷ்ம்யாதா³காஶம் நோபலிப்யதே।
ஸர்வத்ராவஸ்தி²தோ தே³ஹே ததா²ऽऽத்மா நோபலிப்யதே॥ ॥௩௨॥

யதா² ஆகாஶம் ஸர்வக³தமபி ஸர்வவஸ்துஸம்ஸ்ப்ருஷ்டமபி ஸௌக்ஷ்ம்யாத் ஸர்வவஸ்துத⁴ர்மைர் ந லிப்யதே, ததா²ऽऽத்மாऽதிஸௌக்ஷ்ம்யாத் ஸர்வத்ர தே³வாதி³தே³ஹே அவஸ்தி²தோऽபி தத்³தே³ஹத⁴ர்மைர்ந லிப்யதே॥௩௨॥

அவ—ஸத்த்துவம் முதலான குணங்களில்லாததினால், ஆத்மா வேலை செய்யாமலிருக்கலாம். எப்பொழுதும் உடம்புடன் சேர்ந்திருக்கிறவனுக்கு உடம்பின் அழுக்கு முதலானவைகள் 1 ஏன் வரவில்லை என்றால், சொல்லுகிறார்—

ஆகாசமென்பது எல்லாவஸ்துக்களுடனும் சேர்ந்திருந்தாலும், அதில் ஒருவஸ்துவினுடைய ஸ்வபாவமும் சேருகிறதில்லை நெருப்பின்சுடுகை, தண்ணீரின்குளுமை இவைமுதலானவைகள் ஒன்றும் சேருவதில்லை. ஏனென்றால், அதுமிகவும் ஸூக்ஷ்மமாக இருக்கிறது, அதாவது மெல்லிசாகஇருக்கிறது. 2 அதுபோல் ஜீவாத்மாவும் ஆகாசத்தைக்காட்டிலும் மெல்லிசாக இருப்பதால், எல்லா உடம்

---

1. ஒட்டிக்கொள்ளுகிறஸ்வபாவமுள்ளசேறு காலில் ஒட்டிக்கொள்ளுகிறதே. அதுபோலஉடம்பிலிருப்பது ஏன்ஆத்மாவில்ஒட்டுவதில்லை. உப்பளத்தில்விழுந்தஒருகுச்சியானதுஉப்பாய்போய்விடுகிறது. அதுபோல்உடம்புடன் எப்பொழுதும்சேர்ந்திருக்கிறஆத்மாவுக்கு உடம்பின் ஸ்வபாவங்கள் ஏன் வருவதில்லை.

2. வெய்யில் எல்லா வஸ்துக்களிலும் படுகிறதே. அந்த வஸ்துக்களுடைய ஸ்வபாவம் வெய்யிலுக்கு என்னவருகிறது. ஒன்றும் வரவில்லை. எல்லாவஸ்துக்களிலும் ஒட்டுகிறஜலம் தாமரை இலையின் மேல்பக்கத்தில் ஒட்டுகிறதில்லை. ஆகாசத்திற்கு இன்னொருவஸ்துவின் ஸ்வபாவம் வருவதாக இருந்தால், உலகத்திலிருக்கும் வெவ்வேறுவிதமான எல்லாவஸ்துக்களின் ஸ்வபாவங்களும் வரவேணுமே.

புகளுடனும் சேர்ந்திருந்தாலும் அவைகளின் ஸ்வபாவம் அதற்கு வருகிறதில்லை 1 [32]

யதா ப்ரகாஶயத்யேக꞉ க்ருத்ஸ்நம் லோகமிமம் ரவி꞉ ।
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்நம் ப்ரகாஶயதி பாரத ॥௩௩॥

யதைக ஆதித்ய꞉ ஸ்வயா ப்ரபயா க்ருத்ஸ்நமிமம் லோகம் ப்ரகாஶயதி, ததா க்ஷேத்ரமபி க்ஷேத்ரீ ஸர்வமிதம் க்ஷேத்ரமாபாததலமஸ்தகம் க்ருத்ஸ்நம் - அந்தர்பஹிரூர்த்வமதஶ்ச ஸ்வகீயேந ஜ்ஞாநேந ப்ரகாஶயதி । அத꞉ ப்ரகாஶ்யாத் லோகாத் ப்ரகாஶகாதித்யவத், வேதித்ருவேத்யாத் க்ஷேத்ராத் வேதிதா க்ஷேத்ரஜ்ஞோ(அ)த்யந்தவிலக்ஷணோ(அ)யமாத்மா க்ஷேத்ரஜ்ஞ இத்யர்த꞉ ॥ ॥௩௩॥

அ.—இந்த அத்தியாயத்தில் முதல் சுலோகத்தில் "ஆத்மா அறிகிறது, உடம்பு அறியப்படுகிறது, அதனால் இவையிரண்டும் வேறு" என்று காட்டப்பட்டது. இங்கு அதிகமாக ஒன்று சொல்லுகிறார். ஒரே உடம்பு அநேக வஸ்துக்களின் சேர்க்கையாயிருப்பதாலே, பலவாக இருக்கிறது. அதாவது—தோல், நரம்பு, எலும்பு, மாம்ஸம்—இவை முதலியவைகளாக இருக்கிறது. ஆத்மா அவயவமில்லாத ஒரே வஸ்துவாக இருக்கிறது. இதனாலும் உடம்பும் ஆத்மாவும் வேறு என்று சொல்லப்பட்டது. இரண்டுவிதமான வேற்றுமைகளையும் உதாரணத்தைக்காட்டி, உறுதிப்படுத்துகிறார்—

---

1. 27-வது சுலோகம் முதல் ஆறு சுலோகங்களாலே ஆத்மஸ்வரூபத்தைப்பற்றிச் சொல்லப்பட்ட ஸங்கதிகள் என்னவென்றால், (1) ஆத்மாக்களின் ஸ்வரூபங்களில், உடம்புகளில்போல, வேற்றுமைகிடையாது. அவைகள் ஒரேமாதிரி, நெருப்புப் பொறிகள்போல. கருப்பு, சிகப்பு, வெளுப்பு முதலான பசுக்களின் பால்போல. (2) உடம்புகளைப்போல அவைகளுக்கு அழிவில்லை. (3) உடம்புடன் சேர்ந்த ஆத்மஸ்வரூபம் ஸம்ஸார வேலையொன்றையும் செய்கிறதில்லை. (4) ஆத்மாக்களுக்கு ஸ்வரூபத்தில், உடம்புக்குப்போல, குழந்தைத்தனம், யௌவனம், கிழத்தனம் இவை முதலிய மாறுபாடு, (பரிணாமம்) இல்லை. (5) உடம்புடன் சேர்ந்திருந்தபோதிலும், அவைகளின் ஸ்வபாவங்கள் ஆத்மாக்களில் ஒட்டுகிறதில்லை. 2-வது ஸங்கதிக்குக் காரணம்—ஆத்மாவுக்கு உண்டாவதில்லாமை. 3-வது

ஒரே ஸூரியன் தன்னுடைய 1 வெளிச்சத்தாலே எங்கும் பரவி, எல்லா வஸ்துக்களையும் காட்டுகிறான். அதுபோல் உடம்பி லிருக்கிற ஆத்மா. உடம்பை, உள்ளும் 2 வெளியும், கால் முதல் 3 தலைவரையில், தன் அறிவினால் பரவி, இது என்னுடைய உடம்பு, இப்படிப்பட்டதென்று காட்டுகிறது. ஆகையால் காட்டப்படுகிற உலகத்தைக் காட்டிலும், காட்டுகிற ஸூரியன் வேறாயிருப்பது போல், காட்டப்படுகிற உடம்பைக்காட்டிலும் காட்டுகிற ஆத்மா மிகவும் வேறு. உடம்பு மாதிரியோ என்று துளிக்கூட நினைக்கக் கூடாது. [33]

க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோரேவமந்தரம் ஜ்ஞாநசக்ஷுஷா |
பூதப்ரக்ருதிமோக்ஷம் ச யே விதுர்யாந்தி தே பரம் ||

ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம் யோகஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞவிபாகயோகோ நாம த்ரயோதஶோऽத்யாய: ||

ஏவம்-உக்தேந ப்ரகாரேண க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோரந்தரம்-விஶேஷம் விவேகவிஷயஜ்ஞாநாக்யேந சக்ஷுஷா, யே

---

ச்குக் காரணம்—ஸத்துவம் முதலான குணங்கள் அவைகளில் இல்லாமை. 5-வதுக்குக்காரணம்—அவைகள் மிகவும் மெல்லியவாயிருப்பது.

1. ஜீவனுடைய ஸ்வரூபமும் அறிவு, அவனுடைய குணமும் அறிவு, அதாவது ஜீவன் அறிவாயும், அறிவுள்ளவனாயும் இருக்கிறான். அவனுடைய குணமும் அறிவு என்பதால், ஒரே ஜாதியானபோதிலும், எப்படி ஸூரியனும், அவனுடைய வெளிச்சமும் தேஜஸ்ஸு என்பதால், ஒரே மாதிரியாயிருந்தாலும், ஸூரியனைக்காட்டிலும் அவன் வெளிச்சம் வேறோ, அப்படியே ஆத்மஸ்வரூபத்தைக்காட்டிலும் அவனுடைய அறிவு என்கிற குணம் வேறு என்று உதாரணத்தாலே காட்டப்படுகிறது.

2. உள்ளும்-மாம்ஸம் முதலானவைகள். வெளியும்-தோல் முதலியவைகள்.

3. இது சுலோகத்திலிருக்கிற "கிருத்ஸ்நம்" (எல்லாம்) என்ற சொல்லின் பொருள். இந்தச் சொல்லை சுலோகத்தில் சொன்னதற்குக் கருத்து-உடம்பு ஒன்றாயிருந்தபோதிலும், அதில் அனேக அவயவங்கள் இருப்பதினாலே, அது ஆத்மாவைக்காட்டிலும் வேறு என்றும், உடம்புக்கும் அதின் அவயவங்களில் ஒன்றுக்கும் அறிகிற தன்மையில்லையென்றும்.

விது³:, பூ⁴தப்ரக்ருதிமோக்ஷம் ச தே பரம் யாந்தி—நிர்முக்தப³ந்த⁴மாத்மாநம் ப்ராப்நுவந்தி। மோக்ஷ்யதேऽநேநேதி மோக்ஷ:। அமாநித்வாதி³கம் மோக்ஷஸாத⁴நமித்யர்த²:। க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோர்விவேகவிஷயேண ஜ்ஞாநேந தயோர்விவேகம் விதி³த்வா பூ⁴தாகாரபரிணதப்ரக்ருதிமோக்ஷோபாயபூ⁴தமமாநித்வாதி³கம் சாவக³ம்ய யே யாந்தி—தே நிர்முக்தப³ந்தா⁴: ஸ்வேநாகாரேணாவஸ்தி²தமநவச்சி²ந்நஜ்ஞாநைகாகாரமாத்மாநம் ப்ராப்நுவந்தீத்யர்த²:॥

இதி ஶ்ரீப⁴க³வத்³ராமாநுஜவிரசிதே ஶ்ரீகீ³தாபா⁴ஷ்யே த்ரயோத³ஶோऽத்⁴யாய:.

---

கீழ்ச்சொன்னபடி உடம்புக்கும், ஆத்மாவுக்கும் இருக்கும் வித்தியாஸத்தை—இது வேறு, அது வேறு என்று பிரித்துக்காட்டக்கூடிய யோஜனை என்கிற கண்ணால் எவர்கள் அறிகிறார்களோ; இந்த ஆத்மாவுக்கு உடம்புடன் சேர்க்கை அடியோடு போவதற்கு உதவி 7-வது சுலோகம் முதல் சொன்ன குணங்கள் என்றும் அறிகிறார்களோ—அவர்கள் கர்மத்தினால் உண்டான கட்டு நீங்கி, உள்ளபடி ஆத்மஸ்வரூபத்தை அடைகிறார்கள். அதாவது-கர்மத்தைப் போக்கி, அளவில்லாத அறிவை அடைகிறார்கள்.

ஸ்ரீமதே பகவதே பாஷ்யகாராய மஹாதேசிகாய நம:

---

அத சதுர்தஶோऽத்யாய: ॥

அவ — த்ரயோதஶே ப்ரக்ருதிபுருஷயோரந்யோந்ய ஸம்ஸ்ருஷ்டயோ: ஸ்வரூபயாதாத்ம்யம் விஜ்ஞாய, அமாநித்வாதிபிர்பகவத்பக்த்யநுக்ருஹீதைர் பந்தாந்நிவ்ருத்திருக்தா | தத்ர பந்தஹேது: பூர்வபூர்வஸத்த்வாதிகுணமயஸுகாதிஸங்க இதி சாபிஹிதம் — "காரணம் குணஸங்கோऽஸ்ய ஸதஸத்யோநிஜந்மஸு" இதி | அதேதாநீம் குணாநாம் பந்தஹேதுதாப்ரகாரோ குணநிவர்தநப்ரகாரஶ்சோச்யதே —

ஸ்ரீபகவாநுவாச —

பரம் பூய: ப்ரவக்ஷ்யாமி ஜ்ஞாநாநாம் ஜ்ஞாநமுத்தமம் |
யஜ்ஜ்ஞாத்வா முநய: ஸர்வே பராம் ஸித்திமிதோ கதா: ॥௧॥

பரம் - பூர்வோக்தாதந்யத் ப்ரக்ருதிபுருஷாந்தர்கதஸத்த்வாதிகுணவிஷயம் ஜ்ஞாநம் பூய: ப்ரவக்ஷ்யாமி | தச்ச ஜ்ஞாநம் ஸர்வேஷாம் ப்ரக்ருதிபுருஷவிஷயஜ்ஞாநாநாம் உத்தமம் | யஜ்ஜ்ஞாநம் ஜ்ஞாத்வா ஸர்வே முநய: - தந்மநநஶீலா: இத: - ஸம்ஸாரமண்டலாத் பராம் ஸித்திம் கதா: ॥ ॥௧॥

அவ—பதிமூன்றாவது அத்தியாயத்தில் —ஒன்றோடொன்று சேர்ந்த பிரகிருதி, ஜீவன்—இவைகளுடைய ஸ்வரூபங்கள் வெவ்வேறென்று உள்ளபடி அறிந்து, அதின் 7-வது சுலோகம் முதல் சொன்ன குணங்களாலே ஸம்ஸாரம் போகிறதென்றும், ஆனால் அந்த குணங்கள் மாத்திரம் போதாது; அவைகளுடன் பகவானிடத்தில் பக்தியும் வேணும், பக்திதான் முக்கியம் என்றும், இந்த ஜீவனுக்குப் பந்தம் (பிரகிருதியுடன் சேர்க்கை) வரிசையாய் வந்த ஸத்துவம் முதலான குணங்களாலே உண்டான ஸுகத்தில் ஆசையாலே யென்றும்சொல்லப்பட்டது. இப்போது ஸத்துவம் முதலான குணங்களால் பந்தம் உண்டாகிற விதத்தையும், குணங்களைப் போக்கும் வழியையும் பகவான் சொல்லுகிறார் —

பிரகிருதி. ஜீவன்—இவைகளைப்பற்றியே 1 முன் சொன்ன

1 முன் அத்தியாயங்களில் ஸத்துவம் முதலான குணங்கள் ஸம்ஸாரத்துக்குக் காரணமென்று அந்தந்த இடங்களில் சொல்லப்பட்டது. அதையே இங்கே விரிவாய்ச் சொல்லப்போகிறார்.

தைக் காட்டினும் வேறாயும், ஸத்துவம் முதலான குணங்களைப்பற்றியும் இன்னமும் சொல்லுகிறேன். இந்த ஸங்கதியின் அறிவு பிரகிருதி, ஜீவனைப் பற்றின அறிவுகளுக்குள் மிகவும் உயர்ந்தது. எல்லா ருஷிகளும் இந்த ஸங்கதியை அறிந்து, அதையே எப்பொழுதும் நினைத்து, இந்த ஸம்ஸாரத்தைப் போக்கி, உயர்ந்த ஸ்தானத்தை அடைந்தார்கள். [1]

அவ—புநரபி தஜ்ஜ்ஞாநம் ஃபலேந விஶிநஷ்டி—

இதம் ஜ்ஞாநமுபாஶ்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா: ।
ஸர்கேऽபி நோபஜாயந்தே ப்ரலயே ந வ்யதந்தி ச ॥ ௨ ॥

இதம்-வக்ஷ்யமாணம் ஜ்ஞாநமுபாஶ்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா:-மத்ஸாம்யம் ப்ராப்தா: । ஸர்கேऽபி நோபஜாயந்தே-ந ஸ்ருஷ்டிகர்மதாம் பஜந்தே । ப்ரலயே ந வ்யதந்தி ச-ந ச ஸம்ஹ்ருதிகர்மதாம் ॥ ॥ ௨ ॥

அவ—மறுபடியும் அந்த அறிவு உயர்ந்த பிரயோஜநத்தைக் கொடுக்கும் என்று ஸ்தோத்திரம் பண்ணுகிறார்—

நான் சொல்லப்போகிற ஸங்கதியை அறிகிறவர்கள் என்னைப் போலவே ஆய்விடுவர்கள். அவர்கள் மறுபடியும் பிறக்கிறதில்லை. பிரளய காலத்தில் வரும் 1 தொந்தரவையும் அடைகிறதில்லை. [2]

அவ—அத ப்ராக்ருதாநாம் குணாநாம் பந்தஹேதுதாப்ரகாரம் வக்தும், ஸர்வஸ்ய பூதஜாதஸ்ய ப்ரக்ருதிபுருஷஸம்ஸர்கஜத்வம் 'யாவத்ஸஞ்ஜாயதே கிஞ்சித்' இத்யநேநோக்தம் ஸ்வேநைவ க்ருதமித்யாஹ—

மம யோநிர்மஹத்ப்ரஹ்ம தஸ்மிந் கர்பம் ததாம்யஹம் ।
ஸம்பவ: ஸர்வபூதாநாம் ததோ பவதி பாரத ॥ ௩ ॥

க்ருத்ஸ்நஸ்ய ஜகதோ யோநிபூதம் மம மஹத்ப்ரஹ்ம யத், தஸ்மிந் மஹதி ப்ரஹ்மணி "பூமிராபோऽநலோ வாயு:

1. அந்தத் தொந்தரவாவது—பிரளய காலத்தில் ஜீவன்கள் இந்திரியங்கள் இல்லாமையால், அறிவில்லாதவர்கள் போலிருக்கிறார்கள். அந்த தொந்தரவுமில்லை.

[illegible]

அவ—உலகத்தில் எல்லாப் பிராணிகளும் பிரகிருதி, ஜீவன் -இவைகளுடைய சேர்க்கையாலேதான் உண்டாகின்றனவென்று கீழ் 13 வது அத்தியாயத்தில் 26-வது சுலோகத்தில் சொல்லப்பட்டது. அந்தச் சேர்க்கையைப் பகவானான நான் தானே உண்டு பண்ணுகிறேன் என்று சொல்லுகிறார். எதற்காகவென்றால்—பிரகிருதியினுடைய ஸத்துவம் முதலான குணங்களால் பந்தம் உண்டாகும் வழியைச் சொல்லுவதற்காக.

எல்லா உலகங்களையும் உண்டுபண்ணுகிறது என்னுடைய தான பிரகிருதியென்கிறவஸ்து; அதில் நான் கர்ப்பத்தை வைக்கிறேன். அதாவது—பெண்களுடைய கர்ப்பப்பையில் ஆண்கள் கர்ப்பத்தை வைப்பதுபோல், எல்லாப் பிராணிகளுக்கும் விதை போன்ற ஜீவன்களைப் பிரகிருதியில் சேர்க்கிறேன். ஒரு பூமியில் விதையைப் போடுவதுபோல். அந்தப் பிரகிருதியில் ஜீவன்களைச் சேர்க்கிறேன். ஜீவன்கள் ஸுகதுக்கங்களை அநுபவிப்பதற்கு இடமான பிரகிருதியோடே அநுபவிக்கிற ஜீவன்களைச் சேர்க்கிறேன் என்னுடைய நினைவினால் இப்படிச் சேர்க்கப்பட்ட என்

னுடையதான 1 இரண்டு பிரகிருதிகளிலிருந்துபிரும்மா என்பவர் முதல் சின்னப் புல் வரையிலுள்ள எல்லாப்பிராணிகளும் உண்டாகின்றன. [3]

𑌅𑌵—𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌽𑌪𑌿 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑍋 𑌮𑌯𑍈𑌵 𑌕𑍃𑌤 𑌇𑌤𑍍𑌯𑌾𑌹—

𑌸𑌰𑍍𑌵𑌯𑍋𑌨𑌿𑌷𑍁 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌮𑍂𑌰𑍍𑌤𑌯𑌃 𑌸𑌂𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌯𑌾𑌃 ।
𑌤𑌾𑌸𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌮𑌹𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌰𑌹𑌂 𑌬𑍀𑌜𑌪𑍍𑌰𑌦𑌃 𑌪𑌿𑌤𑌾 ॥௪॥

𑌸𑌰𑍍𑌵𑌾𑌸𑍁 𑌦𑍇𑌵𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌯𑌕𑍍𑌷𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌪𑌶𑍁𑌮𑍃𑌗𑌪𑌕𑍍𑌷𑌿𑌸𑌰𑍀𑌸𑍃𑌪𑌾𑌦𑌿𑌷𑍁 𑌯𑍋𑌨𑌿𑌷𑍁 𑌤𑌤𑍍𑌤𑌨𑍍𑌮𑍂𑌰𑍍𑌤𑌯𑍋 𑌯𑌾𑌃 𑌸𑌂𑌭𑌵𑌨𑍍𑌤𑌿—𑌤𑌾𑌸𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌮𑌹𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌃 𑌕𑌾𑌰𑌣𑌂-𑌮𑌯𑌾 𑌸𑌂𑌯𑍋𑌜𑌿𑌤𑌚𑍇𑌤𑌨𑌵𑌰𑍍𑌗𑌾-𑌮𑌹𑌦𑌾𑌦𑌿𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌨𑍍𑌤𑌾𑌵𑌸𑍍𑌥𑌾 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌃 𑌕𑌾𑌰𑌣𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌅𑌹𑌂 𑌬𑍀𑌜𑌪𑍍𑌰𑌦𑌃 𑌪𑌿𑌤𑌾-𑌤𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌰 𑌚 𑌤𑌤𑍍𑌤𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌗𑍁𑌣𑍍𑌯𑍇𑌨 𑌚𑍇𑌤𑌨𑌵𑌰𑍍𑌗𑌸𑍍𑌯 𑌸𑌂𑌯𑍋𑌜𑌕𑍋𑌽𑌹𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ॥௪॥

அவ—2காரியம் (செய்யப்பட்டது) என்று சொல்லப்படுகிற—ஜீவன், உடம்பு என்கிறவைகளின் சேர்க்கையையும் நான் தான் உண்டு பண்ணுகிறேன் என்று சொல்லுகிறார்—

1. அதாவது—பிரகிருதி, ஜீவன். பிரகிருதியென்பது தாழ்ந்த பிரகிருதி; ஜீவன் உயர்ந்த பிரகிருதி. இவையிரண்டையும் பகவானுடைய பிரகிருதியென்று சொல்லுகிறது.

2. பிரகிருதி, ஜீவன் இவைகளுடைய சேர்க்கை இருவிதம். பிரளயகாலத்தில்அறிவில்லாத பிரகிருதி என்று ஒன்றுதான் இருக்கிறது. ஸ்ருஷ்டிகாலத்தில் அந்த ஒரு வஸ்துவைப் பகவான் தன் நினைவினாலே ஒன்றிலிருந்து ஒன்றாக 23 வஸ்துக்களாகப் பண்ணுகிறார். பண்ணி, அவைகளை ஒன்றோடொன்று சேர்த்து, பிரும்மாண்டம் என்று ஒரு இடத்தையும் செய்து, ஒன்றோடொன்று சேர்த்துப் பண்ணப்பட்ட பிரும்மாவென்கிற உடம்பில் ஒரு ஜீவனைச் சேர்த்தார். அந்தப் பிரும்மாவைக்கொண்டு 14 லோகங்கள் அடங்கிய பிரும்மாண்டத்திலிருக்கும் தேவன், மனிதன், ஆடுமாடு-புல் பூண்டு என்று நான்கு பிரிவுள்ள எல்லா வஸ்துக்களையும் உண்டுபண்ணினார். இதற்குக் காரணாவஸ்தை (ஸிருஷ்டி) என்று பெயர். இதுகீழ 3-வது சுலோகத்தில் சொல்லப்பட்டது.

தேவன், கந்தர்வன், யக்ஷன், ராக்ஷஸன், மனிதன், ஆடு மாடு முதலானவைகள், பக்ஷிகள், பாம்புகள்—இவை முதலான எல்லாவற்றிலுமிருந்து அந்தந்த பிராணிகள் உண்டாகின்றனவே அவைகளுக்கு அறிவுள்ள ஜீவன்களோடே என்னால் சேர்க்கப் பட்ட—மஹத் முதலாய் ஐந்து பூதங்கள் வரையில் மாறின—பிரகிருதிதான் காரணம். அவரவர்கள் கர்மத்துக்குத் தகுந்தபடி அந்தந்தஜீவன்களை அந்தந்த உடம்புகளில் நான்தான்சேர்க்கிறேன்.

𑌅𑌥 — 𑌏𑌵𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌚𑍀𑌨𑌕𑌰𑍍𑌮𑌵𑌶𑌾𑌦𑌚𑌿𑌤𑍍𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑍇𑌣 𑌦𑍇𑌵𑌾𑌦𑌿𑌯𑍋𑌨𑌿𑌷𑍁 𑌜𑌾𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑍁𑌨𑌃𑌪𑍁𑌨𑌰𑍍𑌦𑍇𑌵𑌾𑌦𑌿𑌭𑌾𑌵𑍇𑌨 𑌜𑌨𑍍𑌮𑌹𑍇𑌤𑍁𑌮𑌾𑌹 —

𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌰𑌜𑌸𑍍𑌤𑌮 𑌇𑌤𑌿 𑌗𑍁𑌣𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑌂𑌭𑌵𑌾𑌃 ।
𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌦𑍇𑌹𑍇 𑌦𑍇𑌹𑌿𑌨𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥ ॥௫॥

𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌰𑌜𑌸𑍍𑌤𑌮𑌾𑌂𑌸𑌿 𑌤𑍍𑌰𑌯𑍋 𑌗𑍁𑌣𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌃 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑌿𑌨𑌃 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌾𑌦𑌿𑌕𑌾𑌰𑍍𑌯𑍈𑌕𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑍀𑌯𑌾𑌃 । 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾𑌯𑌾𑌮𑌨𑍁𑌦𑍍𑌭𑍂𑌤𑌾𑌃–𑌤𑌦𑍍𑌵𑌿𑌕𑌾𑌰𑍇𑌷𑍁 𑌮𑌹𑌦𑌾𑌦𑌿𑌷𑍂𑌦𑍍𑌭𑍂𑌤𑌾𑌃–𑌮𑌹𑌦𑌾𑌦𑌿𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌨𑍍𑌤𑌾𑌰𑌬𑍍𑌧𑌦𑍇𑌵𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌦𑌿𑌦𑍇𑌹𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌿𑌨𑌂 𑌦𑍇𑌹𑌿𑌨𑌮𑌵𑍍𑌯𑌯𑌂 𑌸𑍍𑌵

---

இப்போது நாள்தோறும் கீழ்ச்சொன்ன நான்குபிரிவுள்ள வஸ்துக்களிலிருந்து பிராணிகள் உண்டாகின்றன. இவைகளையும் பகவான் தான் உண்டுபண்ணுகிறார். இதற்கு க்கார்யாவஸ்தை (ஸ்ருஷ்டி) யென்றுபெயர். இது இந்த சுலோகத்தில் சொல்லப்படுகிறது. உலகத்தில் ஒருவனுக்கு ஒருபிள்ளையும்,அந்தப்பிள்ளைக்கு ப்பிள்ளையும் பிறக்கின்றன. தகப்பன் பிள்ளையை உண்டுபண்ணினானே ஒழிய, பேரனை உண்டுபண்ணுவதில், தகப்பனுக்கு ஒருவேலையுமில்லை. ஒரு கொல்லையில் முதலில் வாழைக்கன்றுவைக்கப்படுகிறது. அந்தவாழைபெரிதானபிறகு, அதிலிருந்து கன்றுகள் வெடிக்கின்றன.கொல்லைக்காரன் முதல்வாழையைப்போட்டானே ஒழிய, வாழையிலிருந்து கன்றுகள் வெடிப்பதற்கு அவன் பிரயத்தினம் ஒன்றுமில்லை. இந்த இரண்டுபோலல்ல பகவான் உலகத்தை உண்டுபண்ணுவது. பிரகிருதியை உலகமாசப் பண்ணினதும் பகவான்தான். இன்றையதினம் ஒருவனுக்கு ஒருகுழந்தை பிறப்பதும் பகவானால்தான். அவர் நினைக்காவிட்டால், எந்தகாலத்திலும் ஒருவஸ்துவும் உண்டாகாது.

ஸத்த்வம் ரஜஸ்தம இதி குணா: ப்ரக்ருதிஸம்பவா: । நிபத்நந்தி-
மஹாபாஹோ தேஹே தேஹிநமவ்யயம் ॥ ॥௫॥

அவ—முதலில் உலகத்தை உண்டு பண்ணும்போது, அந்தந்த ஜீவன்கள் தங்கள் கர்மத்துக்குத் தகுந்தபடி தேவன் முதலான நாலு விதமாக உண்டானார்கள். அந்த ஜீவன்கள் 1 மறுபடியும் மறுபடியும் அதேமாதிரியாகவோ, வேறு விதமாகவோ, உண்டாவதற்குக் காரணம் சொல்லுகிறார்—

ஸத்துவம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு என்கிற மூன்று குணங்கள் பிரகிருதி என்கிற வஸ்துவுக்கே உள்ள 2 குணங்கள். அவைகள் எப்பொழுதும் அதை விட்டுப் பிரியாமல் இருக்கின்றன. அவைகளால் 3 உண்டாகிற சில ஸங்கதிகளைக் கொண்டுதான் அந்த

---

1. நைமித்திகஸிருஷ்டியின் ஆரம்பத்தில் பகவான் ஜீவனை அவனுடைய கர்மத்துக்குத் தகுந்தபடி உடம்புடன் சேர்த்ததினாலே, அவனுக்குப் பிறப்பு உண்டாயிற்று. அந்த உடம்பு முடியும்போதே, அந்தக் கர்மமும், அதின் பலனும், அதின் அநுபவத்துக்கு உதவியான உடம்பும் போய்விட்டனவே. ஜீவனே இயற்கையில் சுத்தன். எப்படி அவனுக்கு மறுபடி பிறப்பு வந்ததென்று கேள்வி.

2. "குணங்கள்" என்ற சொல்லாலே—ஸாங்கியன் சொல்லுகிறபடி, ஸத்துவம் முதலானவைகள் திரவியம் அன்று என்று காட்டப்படுகிறது.

3. சப்தம், ரூபம் முதலான குணங்களைப்போல், ஸத்துவம் முதலானவைகளைக் கண் முதலான இந்திரியங்களாலே ஒருக்காலும் அறிய முடியாது. ஆனபோதிலும் நமக்கு உண்டாகும் சில ஸங்கதிகளை நாம் அறிகிறோம். அவைகளுக்குக் காரணங்கள் இருக்கவேண்டுமென்று பொதுவாய்த் தீர்மானித்து, அவைகளுக்குக்காரணங்கள் ஸத்துவம் முதலான குணங்களென்று சாஸ்திரத்தாலே அறிகிறோம். விஷத்தினுடையவும், மருந்தினுடையவும் சக்திகண்ணுக்குத் தெரியாதபோதிலும், அதைத் தெரிந்தவன் சொல்லுவதைக்கேட்டு, மருந்தைச் சாப்பிடலாம்; விஷத்தைச் சாப்பிடக்கூடாது என்று முடிவுபண்ணுகிறோம். அப்படியே ஸத்துவம் முதலானவைகள் செய்யும் வேலைகளைக்கேட்டு, ஸத்துவத்தை வளர்க்கவேண்டும் என்றும், மற்றவைகளை விலக்கவேண்டுமென்றும் அறிகிறோம்.

குணங்கள் இருக்கின்றன என்று 1 அறியலாம். அந்த குணங்களைப் பிரகிருதியாயிருக்கிற காலத்தில் 2 அறிய முடியாது. அந்தப்பிரகிருதி மஹத் முதலான வஸ்துக்களாக ஆகிறபோது தான் அவைகளை அறியலாம். அந்த குணங்கள் உடம்பாக ஆன பிரகிருதியுடன் சேர்ந்த ஜீவனை, அந்த உடம்பில் இருப்பதாலே, கட்டுப்படுத்துகின்றன. அந்த ஜீவன் இயற்கையில் 3 குணங்களுடன் சேர்க்கைக்குத் தகாதவன். [5]

அத—ஸத்த்வரஜஸ்தமஸாம் ஸ்வரூபம் பந்தப்ரகாரம் சாஹ—

தத்ர ஸத்த்வம் நிர்மலத்வாத் ப்ரகாசகமநாமயம் |
ஸுகஸங்கேந பத்நாதி ஜ்ஞாநஸங்கேந சாநக ||6||

தத்ர-ஸத்த்வரஜஸ்தமஸ்ஸு ஸத்த்வஸ்ய ஸ்வரூபமீத்ருசம்-நிர்மலத்வாத் ப்ரகாசகம்- ப்ரகாசஸுகாவரணஸ்வபாவரஹிததா நிர்மலத்வம்| ப்ரகாசஸுகஜநநைகாந்தஸ்வபாவதயா ப்ரகாசஸுகஹேதுரித்யர்த:। ப்ரகாசோ வஸ்துயாதாத்ம்யாவபோத:। அநாமயம்-ஆமயகார்யம் ந வித்யத இத்யநாமயம் | அரோகதாஹேதுரித்யர்த: | ஏதச்ச ஸத்த்வம் தேஹிநமேநம் ஸுகஸங்கேந ஜ்ஞாநஸங்கேந ச பத்நாதி। புருஷஸ்ய ஸுகஸங்கம் ஜ்ஞாநஸங்கம் ச ஜநயதீத்யர்த:| ஜ்ஞாநஸுகயோஸ்ஸங்கே ஹி ஜாதே, தத்ஸாதநேஷு லௌகிகவைதிகேஷு ப்ரவர்ததே। ததச்ச தத்பலாநுபவஸாதநபூதாஸு யோநிஷு ஜாயத இதி

1. ஒருவனுக்கு கண் என்கிற இந்திரியம் இருக்கிறதென்பதை, ஒன்றின் பார்வையைக்கொண்டுதான் அறியவேணும். அதுபோல.

2. இந்த குணங்களை அறிவதற்குக் காரணம்—உத்பவம் என்பது. அதாவது—வெளிக்குவருவது. அது பிரகிருதியாய் இருக்கும்போதில்லை. மஹத் முதலாக மாறும்போது உண்டாகிறது. மலர்ந்த பூவிலிருக்கும் வாஸனை மொட்டில் தெரியவில்லை. ஒட்டுமாம்பழத்திலிருக்கும் வாஸனை முதலான குணங்கள்பிஞ்சாயிருக்கும்போது தெரிகிறதில்லை. அதுபோல.

3. இது சுலோகத்தில் "அவ்யயம்" என்கிற சொல்லின் பொருள். இயற்கையில் குணங்களின் சேர்க்கையும், அதினால் உண்டாகும் அறிவின் குறைவு முதலானவைகளும் ஜீவனுக்கு இல்லை.

ஸத்த்வம் ஸுகஜ்ஞாநஸங்கேந பத்நாதி। ஜ்ஞாநஸுகஜநநம் புநரஸ்ய ததேவ ஸங்கஜநநம் ச ஸத்த்வம் த்ருஷ்ணாஸங்கம் ஜநயதி ॥ ॥ சா ॥

அவ—ஸத்துவம் முதலான குணங்களின் ஸ்வபாவத்தையும், அவைகள் ஜீவனைக் கட்டுகிற வழியையும் சொல்லுகிறார்—

அவை மூன்றில் ஸத்துவம் என்கிற குணம் உண்மையான அறிவுக்கும், ஸுகத்துக்கும் இடைஞ்சலன்று. ஆகையால் உண்மையான அறிவையும், வியாதியில்லாமல் பண்ணிஸுகத்தையும் உண்டு பண்ணுகிறது. ஜீவனுக்கு ஸுகத்திலும், உண்மையான அறிவிலும் ஆசையை உண்டாக்குகிறது. அந்த ஆசையினால் அந்த இரண்டையும் கொடுக்கக்கூடிய-உலகத்தினால் ஏற்பட்டவையோ, சாஸ்திரத்தில் ஏற்பட்டவையோ-வேலைகளைச் செய்கிறான். அந்த வேலைகளின் பலனை அநுபவிப்பதற்காக உடம்பு வருகிறது- அதாவது—பிறக்கிறான். இதேமாதிரியாக அடிக்கடி பிறக்கிறான். இந்த வழியாக ஸத்துவம் தொந்தரவு படுத்துகிறது

ரஜோ ராகாத்மகம் வித்தி த்ருஷ்ணாஸங்கஸமுத்பவம் ।
தந்நிபத்நாதி கௌந்தேய கர்மஸங்கேந தேஹிநம் ॥ எ ॥

ரஜோ ராகாத்மகம்—ராகஹேதுபூதம்। ராக:—யோஷித்புருஷயோரந்யோந்யஸ்ப்ருஹா। த்ருஷ்ணாஸங்கஸமுத்பவம்—த்ருஷ்ணாஸங்கயோருத்பவஸ்தாநம் । த்ருஷ்ணாஸங்கஹேதுபூதமிதி யாவத்। த்ருஷ்ணா—ஶப்தாதிஸர்வவிஷயஸ்ப்ருஹா । ஸங்க: புத்ரமித்ராதிஷு ஸம்ஶ்லேஷஸ்ப்ருஹா । ததா தேஹிநம் கர்மஸு-க்ரியாஸு ஸ்ப்ருஹாஜநநத்வாரேண நிபத்நாதி। க்ரியாஸு ஹி ஸ்ப்ருஹயா யா: க்ரியா ஆரபதே தேஹீ, தாஶ்ச புண்யபாபரூபா இதி தத்பலாநுபவஸாதநபூதாஸு யோநிஷு ஜந்மஹேதவோ பவந்தி। அத: கர்மஸங்கேந ரஜோ தேஹிநம் நிபத்நாதி। ததேவம் ரஜோ ராகத்ருஷ்ணாஸங்கஹேது: கர்மஸங்கஹேதுஶ்ச பவதி ॥ ॥ எ ॥

ரஜோகுணம் ஸ்திரீக்குப் புருஷனிடத்திலும், புருஷனுக்கு ஸ்திரீயினிடத்திலும் ஆசையையுண்டுபண்ணுகிறது. சப்தம் முதலிய விஷயங்களில் ஆசையையும், பிள்ளை முதலானவர்களுடன் சேர்ந்திருக்க வேணுமென்கிற ஆசையையும் உண்டு பண்ணுகிறது. நல்ல வஸ்துக்களைப் பார்ப்பதிலும், நல்ல பதார்த்தங்களைச் சாப்பிடுவதிலும், நல்ல வாஸனையுள்ள சந்தனம், புஷ்பம்—இவை முதலியவைகளை அநுபவிப்பதிலும், நல்ல பாட்டுக்களையும், நல்ல பேச்சுக்களையும் கேட்பதிலும் ஆசையை உண்டுபண்ணுகிறது. ஆசையை உண்டு பண்ணி, அதற்குத் தகுந்த 1 வேலைகளில் ஏவுகிறது. புண்ணியமோ, பாபமோ செய்யப்பட்ட அந்த வேலைகளின் பலன்களை அநுபவிப்பதற்காக உடம்புகளுடன் பிறக்கிறான். ரஜஸ்ஸு என்கிற குணம் ஜீவனை இவ்விதமாகத் தொந்தரவு செய்கிறது.

தமஸ்த்வஜ்ஞாநஜம் வித்₃தி⁴ மோஹநம் ஸர்வதே₃ஹிநாம் |
ப்ரமாதா₃லஸ்யநித்₃ராபி₄ஸ்தந்நிப₃த்₄நாதி பா₄ரத || ॥ 8 ॥

ஜ்ஞாநாத₃ந்யதி₃ஹாஜ்ஞாநமபி₄ப்ரேதம் | ஜ்ஞாநம் - வஸ்துயாதா₂த்ம்யாவபோ₃த₄:, தஸ்மாத₃ந்யத்தத்₃விபரீதஜ்ஞாநம் | தமஸ்து வஸ்துயாதா₂த்ம்யவிபரீதவிஷயஜ்ஞாநஜம் | மோஹநம் ஸர்வதே₃ஹிநாம் - மோஹ:-விபர்யயஜ்ஞாநம் விபர்யயஜ்ஞாநஹேதுரித்யர்த₂: | தச்ச-தம: ப்ரமாதா₃லஸ்யநித்₃ராஹேதுதயா தத்₃த்₃வாரேண தே₃ஹிநம் நிப₃த்₄நாதி | ப்ரமாத₃:- கர்தவ்யாத்கர்மணோऽந்யத்ர ப்ரவ்ருத்திஹேதுபூ₄தமநவதா₄நம் | ஆலஸ்யம்-கர்மஸ்வநாரம்ப₄ஸ்வபா₄வ:, ஸ்தப்₃த₄தேதி யாவத் | புருஷஸ்யேந்த்₃ரியப்ரவர்தநஶ்ராந்த்யா ஸர்வேந்த்₃ரியப்ரவர்தநோபரதிர்நித்₃ரா | தத்ர பா₃ஹ்யேந்த்₃ரியப்ரவர்தநோபரதி: ஸ்வப்ந: | மநஸோऽப்யுபரதி: ஸுஷுப்தி: || ॥ 8 ॥

---

1. ஸத்துவகுணம் நல்ல அறிவிலும், ஸுகத்திலும் ஆசையை யுண்டுபண்ணி வேலையில் ஏவுகிறது. ரஜோகுணமும் சிலவேலைகளில் ஏவுகிறது. இப்படியானால், இரண்டு குணங்களுக்கும் வித்தியாஸம் என்னவென்றால்—பதில். ஸத்துவகுணமுள்ளவன் ஸுகத்தைத் தீர்மானித்துக்கொண்டுதான் ஒரு வேலையைச் செய்வன். ரஜோகுணமுள்ள

தமோகுணம் ஒரு வஸ்துவை மாறி எண்ணுவதினால், அதாவது—ஒரு வஸ்துவை வேறு வஸ்துவாக எண்ணுவதினால், எல்லாப் பிராணிகளுக்கும் உண்டாகிறது; அதிதமாதிரி எண்ணத்தை உண்டுபண்ணுகிறது. அது-அவசியம் செய்ய வேண்டிய ஒரு வேலையிருக்கும்போது, அதைக் கவனிக்காமல் இன்னொரு வேலையில் ஏவுகிறது. சோம்பலையும், அதாவது—செய்யவேண்டிய எல்லா வேலைகளிலும் அலுப்பையும், 1 தூக்கத்தையும் உண்டுபண்ணுகிறது. தமோகுணம் இவ்விதம் ஜீவனைத் தொந்தரவு பண்ணுகிறது.

௯.—𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌬𑌨𑍍𑌧𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌷𑍁 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌾𑌨𑍍𑌯𑌾𑌹 —

𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌸𑍁𑌖𑍇 𑌸𑌂𑌜𑌯𑌤𑌿 𑌰𑌜𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌭𑌾𑌰𑌤 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌯 𑌤𑍁 𑌤𑌮𑌃 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑍇 𑌸𑌂𑌜𑌯𑌤𑍍𑌯𑍁𑌤 ॥௯॥

𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌸𑍁𑌖𑌸𑌙𑍍𑌗𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌮𑍍। 𑌰𑌜𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑌙𑍍𑌗𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌮𑍍। 𑌤𑌮𑌸𑍍𑌤𑍁 𑌵𑌸𑍍𑌤𑍁𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌵𑌰𑌣𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌹𑍇𑌤𑍁 𑌤𑌥𑌾 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑍇 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌸𑌙𑍍𑌗𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌮𑍍 ॥ ॥௯॥

௯.—ஸத்துவம் முதலான குணங்கள் ஜீவனைக் கட்டுப்படுத்தும் வழிகளில் முக்கியமானவைகளைச் சொல்லுகிறார்.—

ஸத்துவகுணத்துக்கு ஸுகத்தில் ஆசையையுண்டுபண்ணுவது முக்கியம். ரஜோகுணத்துக்கு வேலையில் ஆசையையுண்டுபண்ணுவது முக்கியம். தமோ குணத்துக்கு வஸ்துவினுடைய உண்

---

வனுக்கு அந்தந்த வஸ்துக்களும், வேலைகளும்தான் வேண்டியது அதினால் உண்டாகும் ஸுகம் கொஞ்சமா? அதிகமா என்று கவனிக்க மாட்டான். இதை-ராஜாவின் ஸ்திரீயை ஆசைப்படுவது, கெட்டபிள்ளையைக் காப்பாற்றுவது, ஒருபலனுமில்லாத உடம்பின்வேலை—இவைகளில் பார்க்கலாம்.

1. தூக்கமாவது—வேலைசெய்வதினால் இந்திரியங்கள் களைத்து, ஓய்ந்திருப்பது. கண்முதலான இந்திரியங்கள் மாத்திரம் ஓயும்போது ஸ்வப்பநம். அப்போது அறிவு உண்டு. மனதும் ஓய்ந்துபோனால், நல்லதூக்கம். அதற்கு "ஸுஷுப்தி" என்று வடமொழியில் பெயர். அப்போது அறிவேயில்லை. தமோகுணமுள்ளவனுக்கு தூக்கம் வேலை செய்து களைப்பினால் வருவதில்லை; தமோகுணத்தினால்வருகிறது.

மையை மறைத்து, தப்பான நினைவை உண்டு பண்ணுவது ஸ்வபாவமாகையால், ஒருவன் செய்ய வேண்டிய வேலைக்கு விரோதமான வேலையைச்செய்வதில் ஆசையையுண்டு பண்ணுவதுமுக்கியம்.

𑌅𑌵—𑌦𑍇𑌹𑌾𑌕𑌾𑌰𑌪𑌰𑌿𑌣𑌤𑌾𑌯𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌃 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑌿𑌨𑌸𑍍𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌯𑍋 𑌗𑍁𑌣𑌾𑌃, 𑌤𑍇 𑌚 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑌿𑌤𑍍𑌵𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌕𑌥𑌂 𑌜𑌨𑌯𑌨𑍍𑌤𑍀𑌤𑍍𑌯𑌤𑍍𑌰𑌾𑌹—

𑌰𑌜𑌸𑍍𑌤𑌮𑌶𑍍𑌚𑌾𑌭𑌿𑌭𑍂𑌯 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌭𑌵𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ।
𑌰𑌜𑌸𑍍𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌤𑌮𑌶𑍍𑌚𑍈𑌵 𑌤𑌮𑌸𑍍𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌰𑌜𑌸𑍍𑌤𑌥𑌾 ॥ ॥௧௦॥

𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌯𑌸𑍍𑌤𑍍𑌰𑌯𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑌂𑌸𑍃𑌷𑍍𑌟𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑌿𑌨𑌃, 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌪𑍍𑌰𑌾𑌚𑍀𑌨𑌕𑌰𑍍𑌮𑌵𑌶𑌾𑌤𑍍 𑌦𑍇𑌹𑌾𑌪𑍍𑌯𑌾𑌯𑌨𑌭𑍂𑌤𑌾𑌹𑌾𑌰𑌵𑍈𑌷𑌮𑍍𑌯𑌾𑌚𑍍𑌚 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌯𑌃 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌾𑌭𑌿𑌭𑌵𑌰𑍂𑌪𑍇𑌣 𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇। 𑌰𑌜𑌸𑍍𑌤𑌮𑌸𑍀 𑌕𑌦𑌾𑌚𑌿𑌦𑌭𑌿𑌭𑍂𑌯 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍁𑌦𑍍𑌰𑌿𑌕𑍍𑌤𑌂 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇। 𑌤𑌥𑌾 𑌤𑌮𑌸𑍍𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍇 𑌚𑌾𑌭𑌿𑌭𑍂𑌯 𑌰𑌜𑌃 𑌕𑌦𑌾𑌚𑌿𑌤𑍍। 𑌕𑌦𑌾𑌚𑌿𑌚𑍍𑌚 𑌰𑌜𑌸𑍍𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍇 𑌚𑌾𑌭𑌿𑌭𑍂𑌯 𑌤𑌮𑌃 ॥ ॥௧௦॥

அவ—பிரகிருதி தான் உடம்பாக ஆகியிருக்கிறது. இதில் மூன்று குணங்களும் எப்போதுமிருக்கின்றனவே. அந்த மூன்றும் ஒன்றுக்கொன்று விரோதமான வேலைகளை (அதாவது—ஸத்துவம் அறிவைக் கொடுக்கும்; தமஸ்ஸு அதைக் கெடுக்கும்; ரஜோகுணம் வேலையைக் கொடுக்கும், தமஸ்ஸு அதைச்செய்ய வொட்டாமல்பண்ணும்)எப்படிச்செய்யும் என்றால்-சொல்லுகிறார்-

உடம்பில் ஸத்துவம் முதலான மூன்றுகுணங்கள் எப்போதுமிருந்தபோதிலும், நெடுநாளாய் வந்த கர்மத்தினாலும், உடம்பை வளர்க்கும் 1 சாப்பாட்டின் வித்தியாஸத்தினாலும், அந்தகுணங்களில் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொன்று மற்றவைகளை அடக்கி மேலிடுகிறது. [10]

1 கர்மத்தினாலும், சாப்பிட்டினாலும் உடம்பில் பித்தம், வாதம், ச்லேஷ்மம் என்கிற மூன்று தாதுக்களில் இருக்கவேண்டிய நிலைமை மாறி, ஒவ்வொன்று ஒருஸமயத்தில் மேலிடுவதுபோல்.

𑌅𑌵—𑌤𑌤𑍍𑌕𑌾𑌰𑍍𑌯𑍈𑌃 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌯𑍁𑌦𑍍𑌰𑍇𑌕𑌵𑍇𑌦𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑌾𑌹—

𑌸𑌰𑍍𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌷𑍁 𑌦𑍇𑌹𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶 𑌉𑌪𑌜𑌾𑌯𑌤𑍇 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌯𑌦𑌾 𑌤𑌦𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌦𑍍𑌵𑌿𑌵𑍃𑌦𑍍𑌧𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌤 ॥ ॥௧௧॥

𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑌾𑌦𑌿𑌷𑍁 𑌜𑍍𑌞𑌾𑌨𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌷𑍁 𑌯𑌦𑌾 𑌵𑌸𑍍𑌤𑍁𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍁𑌪𑌜𑌾𑌯𑌤𑍇, 𑌤𑌦𑌾 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑍇𑌹𑍇 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑌮𑌿𑌤𑌿 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍 ॥ ॥௧௧॥

*அவ—இன்ன இன்ன குணம் மேலிடுகிறது என்பதைக் கார்யங்களைக்கொண்டு தான் கண்டுபிடிக்கவேணும் என்று சொல்லுகிறார்—*

*ஒருவன் கண் முதலான இந்திரியங்களினால் அந்தந்த வஸ்துக்களை உள்ளது உள்ளபடி அறிந்தால், அப்போது ஸத்துவகுணம் மேலிட்டிருக்கிறது என்று அறியலாம்.* [11]

𑌲𑍋𑌭𑌃 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑌶𑌮𑌃 𑌸𑍍𑌪𑍃𑌹𑌾 ।
𑌰𑌜𑌸𑍍𑌯𑍇𑌤𑌾𑌨𑌿 𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 𑌵𑌿𑌵𑍃𑌦𑍍𑌧𑍇 𑌭𑌰𑌤𑌰𑍍𑌷𑌭 ॥ ॥௧௨॥

𑌲𑍋𑌭𑌃-𑌸𑍍𑌵𑌕𑍀𑌯𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌸𑍍𑌯 𑌤𑍍𑌯𑌾𑌗𑌾𑌸𑌹𑌿𑌷𑍍𑌣𑍁𑌤𑌾 । 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃-𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌮𑌨𑌭𑌿𑌸𑌨𑍍𑌧𑌾𑌯𑌾𑌪𑌿 𑌚𑌲𑌨𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑌾 । 𑌆𑌰𑌮𑍍𑌭𑌃-𑌫𑌲𑌸𑌾𑌧𑌨𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌃 । 𑌅𑌶𑌮𑌃-𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌨𑍁𑌪𑌰𑌤𑌿𑌃 । 𑌸𑍍𑌪𑍃𑌹𑌾 𑌵𑌿𑌷𑌯𑍇𑌚𑍍𑌛𑌾 । 𑌏𑌤𑌾𑌨𑌿 𑌰𑌜𑌸𑌿 𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑍇 𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌯𑌦𑌾 𑌲𑍋𑌭𑌾𑌦𑌯𑍋 𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇, 𑌤𑌦𑌾 𑌰𑌜𑌃 𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑌮𑌿𑌤𑌿 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ॥௧௨॥

*தன் சொத்துக்களைப் பிறருக்குக் கொடுக்க மனதாகாமலிருப்பதும், ஒரு பிரயோஜனமுமில்லாமல் ஓடியாடுவதும், காசு முதலான பிரயோஜனங்களுக்காக வேலைகளைச் செய்வதும், இந்திரியங்கள் அடங்காமலிருப்பதும், பார்வை, சாப்பாடு முதலியவைகளில் ஆசையும் இருந்தால், ரஜோகுணம் மேலிட்டிருக்கிறதென்று அறியலாம்.* [12]

𑌅𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑍋𑌽𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑍋 𑌮𑍋𑌹 𑌏𑌵 𑌚 ।
𑌤𑌮𑌸𑍍𑌯𑍇𑌤𑌾𑌨𑌿 𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 𑌵𑌿𑌵𑍃𑌦𑍍𑌧𑍇 𑌕𑍁𑌰𑍁𑌨𑌨𑍍𑌦𑌨 ॥ ॥௧௩॥

𑌅𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌃-𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑍁𑌦𑌯𑌃 । 𑌅𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃-𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑌤𑌾 । 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌃-𑌅𑌕𑌾𑌰𑍍𑌯𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌫𑌲𑌮𑌨𑌵𑌧𑌾𑌨𑌮𑍍 । 𑌮𑍋𑌹𑌃- 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤

ஜ்ஞாநம் | ஏதாநி தமஸி ப்ரவ்ருத்தே ஜாயந்தே, ஏதைஸ்தமஸ: ப்ரவ்ருத்திம் விந்த்யாத் || ||கங||

ஒரு வஸ்துவைப் பார்க்கும்போது, அதிலுள்ள ஸங்கதிகள் உண்மையாய்த் தோன்றாமையையும், சோம்பலும் (அதாவது—ஒரு வேலையையும் செய்யப் பிடிக்காமலிருப்பதும்), தப்பு வேலைகளைச் செய்யும்படியான கவனிக்காமையும், தப்பு எண்ணங்களும் இருந்தால், தமோகுணம் மேலிட்டிருக்கிறதென்று அறியலாம். [13]

யதா ஸத்த்வே ப்ரவ்ருத்தே து ப்ரலயம் யாதி தேஹப்ருத் |
ததோத்தமவிதாம் லோகாநமலாந் ப்ரதிபத்யதே ||கச||

யதா ஸத்த்வம் ப்ரவ்ருத்தம், ததா ஸத்த்வே ப்ரவ்ருத்தே தேஹப்ருத் ப்ரலயம்-மரணம் யாதி சேத், உத்தமவிதாம்-உத்தமதத்த்வவிதாம் ஆத்மயாதாத்ம்யவிதாம் லோகாந்-ஸமூஹாந் அமலாந்-மலரஹிதாந் அஜ்ஞாநரஹிதாந் ப்ரதிபத்யதே-ப்ராப்நோதி | ஸத்த்வே ப்ரவ்ருத்தே து ம்ருத: ஆத்மவிதாம் குலேஷு ஜநித்வா ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞாநஸாதநேஷு புண்யகர்மஸ்வதிகரோதீத்யுக்தம் பவதி||

அவ—செத்துப்போகும் காலத்தில் ரஜஸ்ஸும் தமஸ்ஸும் மேலிடுவதற்குக்காரணங்களை இப்போதே போக்குவதற்காக, அந்தக்காலத்தில் ரஜஸ்ஸுதமஸ்ஸுக்கள் மேலிட்டால் வரும் கெடுதிகளைச் சொல்லுகிறார்—

ஸத்துவகுணம் மேலிட்டிருக்கும்போது, ஒருவன் இறந்தால், ஆத்மஸ்வரூபத்தை உண்மையாக அறிந்தவர்கள் வயிற்றில் பிறந்து, ஆத்மாவின் உண்மையான அறிவைக் கொடுக்கக்கூடிய நல்ல கர்மங்களைச் செய்வன்— [14]

ரஜஸி ப்ரலயம் கத்வா கர்மஸங்கிஷு ஜாயதே ||கச½||

ரஜஸி ப்ரவ்ருத்தே மரணம் ப்ராப்ய ஃபலார்த்தம் கர்ம குர்வதாம் குலேஷு ஜாயதே | தத்ர ஜநித்வா ஸ்வர்காதிஃபலஸாதநகர்மஸ்வதிகரோதீத்யர்த: || ||கச½||

ரஜோகுணம் மேலிட்டிருக்கும்போது இறந்தால், சுவர்க்கம் முதலான பலன்களுக்காக வேலை செய்கிறவர்கள் வயிற்றில் பிறந்து, அந்தமாதிரி வேலைகளைச் செய்வன். [14½]

ததா ப்ரலீநஸ்தமஸி மூடயோநிஷு ஜாயதே॥ ॥௧௫॥

ததா தமஸி ப்ரவ்ருத்தே மரணம் ப்ராப்ய மூடயோநிஷு-ச்வஸூகராதியோநிஷு ஜாயதே। ஸகலபுருஷார்த்தாரம்பாநர்ஹோ ஜாயத இத்யர்த்த:॥ ॥௧௫॥

தமோகுணம் மேலிட்டபோது இறந்தால், நாய், பன்றி, முதலான பிராணிகளாகப் பிறந்து, ஒரு நல்ல வேலையையும் செய்யத்தகாதவனாக ஆவன். [15]

கர்மண: ஸுக்ருதஸ்யாஹு: ஸாத்த்விகம் நிர்மலம் பலம்।
ரஜஸஸ்து பலம் து:கமஜ்ஞாநம் தமஸ: பலம்॥ ॥௧௬॥

ஏவம் ஸத்த்வப்ரவ்ருத்தௌ ம்ருதாநாமாத்மவிதாம் குலே ஜாதேநாநுஷ்டிதஸ்ய ஸுக்ருதஸ்ய-பலாபிஸந்திரஹிதஸ்ய பரமபுருஷாராதநரூபஸ்ய கர்மண:, பலம்-புநரபி ததோऽதிக ஸத்த்வஜநிதம் நிர்மலம்-து:கக்ந்தரஹிதம் ஸாத்த்விகமாஹு: ஸாத்த்விகா: ஸத்த்வகுணபரிணாமவித:। அந்த்யகாலப்ரவ்ருத்தஸ்ய ரஜஸஸ்து பலம் பலஸாத்யகர்மஸங்கிஜந்ம பலாஸக்திபூர்வககர்மாரம்ப தத்பலாநுபவ புநர்ஜந்ம ரஜோவ்ருத்தி பலாஸக்திபூர்வககர்மாரம்ப ரூபம் ஸம்ஸாரப்ரவாஹரூபம் து:கப்ராயமேவ ஸாத்த்விகா: ப்ராஹுரித்யர்த்த:। அஜ்ஞாநம் தமஸ:-அந்த்யகாலப்ரவ்ருத்தஸ்ய தமஸ: பலமஜ்ஞாநபரம்பரமேவ॥ ॥௧௬॥

ஒருவன் ஸத்துவம் வளர்ந்த வேளையில் இறந்து, ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்தவர்கள் வயிற்றில் பிறந்து, பலன்களை விரும்பாமல், எனக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணக்கூடிய கர்மங்களை என் ஸந்தோஷத்துக்காகவே செய்வன். அதனால் இன்னும் அதிகமாக ஸத்துவகுணம் வளர்ந்து, கொஞ்சங்கூட துக்கக்கலப்பில்லாத ஸந்தோஷத்தை அடைகிறான், ரஜோகுணம் மேலிட்டபோது

இறந்தவன் முன்சொன்னபடி ஸ்வர்க்கம் முதலான பலன்களுக்காகக் கர்மங்களைச்செய்கிறவர்கள் வயிற்றில் பிறந்து, மறுபடியும் அதேமாதிரியே கர்மங்களை மேல்மேலும்செய்து, ஸம்ஸாரத்தை வளர்க்கிறான். அவனுக்குஸுகமென்று பேச்சே ஒழிய. முழுவதும் துக்கம் தான். தமஸ்ஸு வளர்ந்தபோது இறந்தவனுக்கு இருக்க இருக்க தப்பு எண்ணம் வளர்கிறது. [ 16 ]

அத² ஸத்த்வாதி³கு³ணஜநிதம் நி:ஶ்ரேயஸாதி³ விஶேஷம் ஆஹ—

ஸத்த்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம் ரஜஸோ லோப⁴ ஏவ ச ।
ப்ரமாத³மோஹௌ தமஸோ ப⁴வதோ(அ)ஜ்ஞாநமேவ ச ॥ ௧௭ ॥

ஏவம் ஸர்வதா³ ஜாதாதி³கு³ணஸ்வபா⁴வாத் யதா²வஸ்தி²தாபரோக்ஷரூபம் ஜ்ஞாநம் ஜாயதே । ததா² ப்ரவ்ருத்³தா⁴த் ரஜஸ: ஸ்வர்கா³தி³ப²லலோபோ⁴ ஜாயதே । ததா² ப்ரவ்ருத்³தா⁴த் தமஸ: ப்ரமாத³: அநவதா⁴ந நிமித்தாஸத்கர்மணி ப்ரவ்ருத்தி:, ததஶ்ச மோஹ: விபரீதஜ்ஞாநம், உத்தரோத்தரம் தத:, ததஶ்சாஜ்ஞாநம் ஜ்ஞாநாபா⁴வ:॥ ॥ ௧௭ ॥

அவ—ஸத்துவம் முதலான குணங்கள் வளர்ந்து வருகிற பிரயோஜனங்கள் என்ன என்றால், சொல்லுகிறார்—

மேலே மேலே ஸத்துவம் வளர்ந்தால், ஆத்மாவை முதலில் உள்ளபடி அறிகிறான். பிறகு இடைவிடாமல் நினைக்கிறான். பிறகு பார்க்கிறான். ரஜஸ்ஸு வளர்ந்தால், சுவர்க்கம் முதலான பலன்களில் ஆசைவளர்கிறது. தமஸ்ஸு வளர்ந்தால், வஸ்துக்களின் உண்மையைக் கவனிக்காமல், கெட்ட காரியங்களைச் செய்வன். அதனால் தப்பு எண்ணம் வளரும். அதனால் தமோகுணம் மேலே மேலே வளரும். அதனால் நல்ல அறிவு அடியோடு போய்விடும். [17]

ஊர்த்⁴வம் க³ச்ச²ந்தி ஸத்த்வஸ்தா² மத்⁴யே திஷ்ட²ந்தி ராஜஸா: ।
ஜக⁴ந்யகு³ணவ்ருத்திஸ்தா² அதோ⁴ க³ச்ச²ந்தி தாமஸா: ॥ ௧௮ ॥

ஸத்த்வோத்³ரேகேண ப்ரகாரேண ஸத்த்வஸ்தா² ஊர்த்⁴வம் க³ச்ச²ந்தி—க்ரமேண ஸம்ஸாரப³ந்தா⁴ந்மோக்ஷம் க³ச்ச²ந்தி । ராஜஸஸ்வபா⁴வாத்³ த்³ருஷ்டப்ரதா⁴ராஜஸா: ஸ்வர்கா³தி³ப²லஸாத⁴நகர்மநிஷ்டா²ய

ததுத்தரோத்தரஸ்ய மாநவஜந்மநி தஸ்மிந் க்ரமேண திஷ்டந்தி மத்யே திஷ்டந்தி। மாநவாவ்ருத்திரூபதயா ஊர்த்வம் ப்ராயஶ ஏவ கச்ச। தாமஸாஸ்து ஜகந்யகுணவ்ருத்திஸ்தா:-உத்தரோத்தரநிக்ருஷ்டதமோகுணவ்ருத்திஷு வர்த்திதா:, அந்த்யஜத்வம், திர்யக்த்வம், தத: க்ருமிகீடாதிஜந்ம, ஸ்தாவரத்வம், ததோऽபி குல்மலதாத்வம், ததஶ்ச ஶிலாகாஷ்டலோஷ்டத்ருணாதித்வம் கச்சந்தீத்யர்த்த: ॥ ॥௧௮॥

ஸத்துவகுணம் மேலிட்டவர்கள் இருக்க இருக்க ஸத்துவம் வளர்ந்து, உயர்ந்த பதவியை அடைகிறார்கள். அதாவது—ஸம்ஸாரத்தைப் போக்குகிறார்கள். ரஜோகுணம் மேலிட்டவர்கள் சுவர்க்கத்தில் ஆசையால் அதற்காக வேலைசெய்து, பலனை அனுபவித்து, மறுபடியும் பிறந்து, அதேமாதிரி கர்மங்களைச் செய்கிறார்கள். ஆகையால் மேலும் போகாமல், கீழும் போகாமல் நடுவில் நிற்கிறார்கள். திரும்பித் திரும்பி வருகிறபடியினாலே, அதைத் தூக்கம் என்றே சொல்லலாம். தமோகுணம் மேலிட்டவர்கள் இருக்க இருக்க தமோகுணம் வளர்ந்து, இருக்க இருக்க கெடுதலான வேலைகளைச் செய்து, கீழே கீழே போகிறார்கள். அதாவது—பறையன்களாகிறார்கள்; பிறகு மாடு பக்ஷி முதலானபிறப்பு; பிறகு புழுவாக பிறப்பு; பிறகு மரம், கொடி, கல்லு, பட்டுப்போன கட்டை, ஓட்டுச்சல்லி, செத்தை-இவை முதலானவைகள் ஆகிறார்கள். [18]

அத—ஸாத்த்விகாஹாரவிஶேஷை: ஸமபிவ்ருத்தஸத்த்வஸ்ய தத்விஶேஷஸ்ய ப்ரவ்ருத்த்யா ப்ரவர்த்திதஸத்த்வாநாம் குணாத்யயத்வாரேண ப்ராப்யப்ரகாரமாஹ—

நாந்யம் குணேப்ய: கர்த்தாரம் யதா த்ரஷ்டாநுபஶ்யதி।
குணேப்யஶ்ச பரம் வேத்தி மத்பாவம் ஸோऽதிகச்சதி ॥௧௯॥

ஏவம் ஸாத்த்விகாஹாரஸேவயா ஸமபிவ்ருத்தஸத்த்வ: பகவதாராதநரூபகர்மாநுஷ்டாநேந ரஜஸ்தமஸீ ஸர்வாத்மநாபிபூய, உத்க்ருஷ்டஸத்த்வநிஷ்டோ யதா த்ரஷ்டா குணேப்யோऽந்யம் கர்த்தாரம் நாநுபஶ்யதி, குணா ஏவ ஸ்வாநுகுணப்ரவ்ருத்திஷு கர்த்தார இதி பஶ்யதி। குணேப்யஶ்ச

பரம் வேத்தி — கர்த்ருப்4யோ கு3ணேப்4யஶ்ச பரம் — அந்யமாத்மாநம் அகர்த்தாரம் வேத்தி | ஸ மத்3பா4வமதி4க3ச்ச2தி — மத்3யோ பா4வஸ்தமதி4க3ச்ச2தி | ஏதது3க்தம் ப4வதி — ஆத்மந: ஸ்வத: பரிஶுத்3த4ஸ்வபா4வஸ்ய பூர்வபூர்வகர்மமூலகு3ணஸங்க3நிமித்தம் விவித4கர்மஸு கர்த்ருத்வம், ஆத்மா து ஸ்வதஸ்த்வகர்த்தா அபரிச்சி2ந்நஜ்ஞாநைகாகார இத்யேவமாத்மாநம் யதா3 பஶ்யதி, ததா3 மத்3பா4வமதி4க3ச்ச2தீதி ||

அவ — நல்ல சாப்பாடுகளாலேயும், பலன்களை விரும்பாமல் நல்ல கர்மங்களைச் செய்வதாலேயும் மேலே மேலே ஸத்துவகுணம் வளர்ந்தவர்கள்—ரஜோகுணம், தமோகுணம் குறைந்து, உயர்ந்த பதவியை அடையும் விதத்தைச் சொல்லுகிறார்:—

சாப்பாட்டை ஸாத்துவிகம், ராஜஸம், தாமஸம் என்று மூன்றுவிதமாகச் சொல்லியிருக்கிறது. அவைகளில் ஸத்துவகுணத்தை வளர்க்கிற ஆஹாரத்தைச் சாப்பிடுவதினாலும், பலன்களை விரும்பாமல்; பகவானுடைய ஸந்தோஷத்துக்காக நல்ல கர்மங்களைச்செய்வதினாலும், ஒருவன் ரஜோகுணத்தையும், தமோகுணத்தையும் இருந்த இடம் தெரியாமல் தொலைத்து, ஸத்துவகுணத்தை மிகவும் வளர்த்து, ஸம்ஸார வேலைகள் எல்லாம் குணங்களாலேதான் உண்டாகின்றன என்றும், ஆத்மா என்பது இயற்கையில் ஒரு வேலையையும் செய்கிறதில்லை யென்றும் அறிகிறான். அவன் என்னைப் போல் ஆகிறான். அதாவது— ஆத்மா நெடுநாளாய் வந்த கர்மத்தினாலே ஸத்துவம் முதலான குணங்களாலே உண்டாகிற பலன்களில் ஆசை உண்டாகி, அதற்காகப் பல வேலைகளைச் செய்கிறான். இயற்கையில் ஒருவித குற்றமுமில்லாதவன்; இதுமாதிரி வேலைகள் அவனுக்குக்கிடையாது; அளவில்லாத அறிவுள்ளவன்—என்று அறிந்தால், அவன் என் மாதிரி ஆய்விடுவன். [19]

அவ — கர்த்ருப்4யோ கு3ணேப்4யோ'ந்யமகர்த்தாரமாத்மாநம் பஶ்யந் மத்3பா4வமதி4க3ச்ச2தீத்யுக்தம் | ஸ மத்3பா4வ: கீத்3ருஶ இத்யத்ராஹ—

கு3ணாநேதாநதீத்ய த்ரீந் தே3ஹீ தே3ஹஸமுத்3ப4வாந் |
ஜந்மம்ருத்யுஜராது3:கை2ர்விமுக்தோ'ம்ருதமஶ்நுதே ||

அயம் தேஹீ தேஹஸமுத்பவாத் — தேஹாகாரபரிணத ப்ரக்ருதிஸமுத்பவாநேதாந் ஸத்த்வாதீந் த்ரீந் குணாநதீத்ய தேப்யோ வ்யாவ்ருத்தம் ஜ்ஞாநைகாகாரமாத்மாநம் பஶ்யந் ஜந்மம்ருத்யுஜராது:கைர்விமுக்தோऽம்ருதமாத்மாநமநுபவதி, ஏஷ மத்பாவ இத்யர்த்த:॥ ॥௨௦॥

அவ—ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி பார்க்கிறவன் பகவானைப்போல ஆகிறான் என்று சொல்லப்பட்டது. பகவானைப்போல ஆகிறது என்பது என்ன என்றால், சொல்லுகிறார்:—

இந்த ஜீவன் உடம்பாக ஆகியிருக்கும் பிரகிருதியினால் ஏற்பட்டிருக்கிற ஸத்துவம் முதலான மூன்று குணங்களையும் ஜயித்து, இயற்கையில் அந்த குணங்களின் சேர்க்கையில்லாத—அறிவையே இயற்கையாக உடைய—ஜீவஸ்வரூபத்தைப் பார்த்து பிறப்பு, சாவு, கிழத்தனம் இவை முதலான தொந்தரவுகளில்லாமல், ஆத்மாவை அநுபவித்து, மிகுந்த ஸுகத்தை அடைகிறான். இது தான் பகவானைப்போல ஆகிறது என்பது அதாவது—பகவான் எப்பொழுதும் அளவில்லாத ஸந்தோஷமுள்ளவராக இருக்கிறார். ஸம்ஸாரிகளான ஜீவன்கள் பலகாரணங்களால் எப்போதும் துக்கப்பட்டுக்கொண்டே இருக்கிறார்கள் அப்படி இல்லாமல் ஆத்மஸ்வரூபத்தைப்பார்த்த ஜீவன்கள் எப்பொழுதும் ஸந்தோஷப்படுகிறார்கள் [1]

---

1 ஆத்ம விஷயமான புஸ்தகத்தைப் படிக்காதவர்கள் ஸம்ஸாரக் கவலையினால் எப்பொழுதும் வருத்தப்படுகிறார்கள் ஆத்மாவைப்பற்றின சாஸ்திரங்களைப் படித்தவித்வான்கள் ஸம்ஸாரக் கவலையினாலும், நான்படித்தவன் என்கிற எண்ணத்தினால் உண்டான சண்டைகளாலும், அதற்குப் புஸ்தகம் எழுதுகிற சிரமங்களாலும் தொந்தரவு படுகிறார்கள். ஸம்ஸாரிகளும், படித்தவர்களும் ஆத்மஸ்வரூபத்தை அறியவேயில்லையே அறிந்து தியானம் செய்வதினால் வரும்பேறானவை எப்படி? யாராவது ஒருவர் ஆத்மஸ்வரூபத்தை அறிந்தவர் இருந்தால், அவரை இந்த வித்வான்கள் அறிந்தவரென்று நினைத்து, அவருடன் பழகினால், அவரால் இவர்களுக்கு அறிவுஏற்படும். இவ்வுலகத்தில் அறிந்தவர் அகப்படுவதே வருத்தம் அப்படி அகப்பட்டாலும், இப்போதையவித்வான்கள் தங்களை ஆத்மஸ்வரூபத்தை நன்றாய் அறிந்தவர்களாக நினைத்திருக்கிறபடியால், அவரை அறிந்தவராக நினைப்பதும், அவருடன் பழகுவதும் ஒருநாளும் நடக்கவே நடக்காது.

ஸ்ரீ:

# ஸ்ரீமத் கீதா பாஷ்யம்.

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜ மஹாதேசிகாய நம: ॥
ஸ்ரீமதே பாதுகாஸேவகராமாநுஜ மஹாதேசிகாய நம: ॥
ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸமஹாதேசிகாய நம: ॥
ஸ்ரீரங்கநாயகதிவ்யமணி பாதுகாப்யாம் நம: ॥
ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸராமாநுஜமஹாதேசிகாய நம: ॥
ஸ்ரீமத்யை கோதாயை நம: ॥
ஸ்ரீகோமளவல்லீஸமேதாபர்யாப்தாம்ருத பரப்ரஹ்மணே நம: ॥

ஸ்ரீமந் நாராயணனுடையது எல்லா லோகங்களும் பெரும் பாலும் அவைகளிலிருக்கிற எல்லா ஜனங்களும் பூமியிலிருக்கிற ஸுகத்தைத்தான் ஆசைப்படுகிறார்கள். பூமியில் துக்கம் கலப் பில்லாத ஸுகம் ஒருவருக்கும் ஒருபோதும் கிடையாது. இதே மாதிரிதான் சாஸ்திரங்களில் சொல்லும் ஸ்வர்க்கம் முதலான உலகங்களிலும் எவருக்கும் ஏதாவதுகுறைவுகள் இருந்துகொண் டேயிருக்கின்றன. இந்த ஸங்கதியைத்தானாக ஒருவனாலும் அறிந் துகொள்ள முடியாது. மிகுந்த பெரியவருடைய கவலையோடு கூடிய உபதேசத்தினாலே தெளிந்த ஒரு பெரியவருடைய அதே மாதிரியான உபதேசங்களாலே இந்தஅறிவு வரவேண்டியது. இப் போது படித்தவர்களோ படிக்காதவர்களோ, ஏழையோ பணக் காரனோ எவனுக்கும் இது தோன்றுவது வருத்தம். ஆனால் படித்தவர்கள் விரிவாய் சொல்லுவார்கள். அவர்களுக்குள் யாருக் கு மனதில் பட்டிருக்கிறதோ துக்கம் கலந்த ஸுகத்தையே எவரும் அநுபவிப்பதனாலே நிலையான ஸுகத்தைப்புஸ்தகங்களைக் கொண்டுதான் அறிந்துகொள்ளவேண்டும். யுக்திகளால் மாத் திரம் ஏற்பட்ட புஸ்தகங்களைக்கொண்டு அதையறிய முடியாது, ஏனென்றால், அதுக்கு மேலும் யுக்திகள் தோன்றுமாகையால்,

ஆத்மவ்யதிரிக்தேஷு வஸ்துஷ்வநிஷ்டேஷு ஸம்ப்ரவ்ருத்தாநி ஸத்த்வரஜஸ்தமஸாம் கார்யாணி ப்ரகாஶப்ரவ்ருத்திமோஹாக்யாநி யோ ந த்வேஷ்டி। ததா ஆத்மவ்யதிரிக்தேஷ்விஷ்டேஷு வஸ்துஷு தாந்யேவ நிவ்ருத்தாநி ந காங்க்ஷதி ॥ ॥௨௨॥

பகவான் சொல்லுகிறார்—

ஒருவன் ஸத்துவகுணத்தினால் ஒருவஸ்துவை அறிகிறான்; ரஜோகுணத்தினால் ஒருவேலையைச் செய்கிறான்; தமோகுணத்தினால் ஒருவஸ்துவை வேறொருவஸ்துவாக நினைக்கிறான். உலகத்தில் ஆத்மாவைத்தவிர 1 மற்ற வஸ்துக்கள் பிடித்தவைகளென்றும், பிடிக்காதவைகளென்றும் இருவகைப்படும். அவைகளில் பிடிக்காத வஸ்துக்களைப் பற்றின அறிவு, வேலை, மயக்கம்—இவைகள் வந்தால், ஒருவன் வருத்தப்படுவன். பிடித்த வஸ்துக்களைப் பற்றின அறிவு முதலானவைகள் வந்து போனால், அவைகள் மறுபடியும் வரவேண்டுமென்று ஆசைப்படுவன். இந்த மூன்றுகுணங்களை ஜயித்தவனுக்கு இப்படி வருத்தமுமில்லை; ஆசையுமில்லை. [22]

உதாஸீநவதாஸீநோ குணைர்யோ ந விசால்யதே ।
குணா வர்த்தந்த இத்யேவ யோऽவதிஷ்டதி நேங்கதே ॥ ௨௩ ॥

---

1. உதாரணம்- ஸத்துவ குணத்தால் ஒருவன் பாம்புமுதலானவைகளைப்பார்க்கிறான். அது பிடிக்காதவஸ்து. அதின் பார்வையினால் வருத்தமில்லை. உலகத்தில் ரஜோ குணத்தால் விரோதிகளுடன் ஒருவன் பேசுகிறான். அவன் வீட்டுக்குப் போகிறான். பிறகு ஏன் பேசினேன், ஏன் போனேன் என்று வருத்தப்படுகிறான். அந்த மாதிரி வேலைகள் நேர்ந்தால், இவன் வருத்தப்படுகிறதில்லை ஒருவன் தமோகுணத்தினால், சத்துருவின் குழந்தையை உள்ளபடி அறியாமல், தன் குழந்தையாக நினைத்துக் கொண்டாடினான். பிறகு அறிந்து வருத்தப்படுகிறான். ஸத்துவ குணத்தினால் ஏற்படுகிற பிள்ளை பெண்டாட்டிகளின் பார்வை தனக்கு இருந்து போய்விட்டால், அந்தப் பார்வை மறுபடியும் வரவேண்டுமென்று விரும்புகிறதில்லை. ரஜோகுணத்தினால் ஏற்படுகிற—பணம் கிடைப்பதற்காகச் செய்யப்படும்—வேலை தவறிப்போனால், அதைப்பற்றி ஆசைப் படுகிறதில்லை. வெகுநாளாக ஒருவனைப் பார்க்கவேணுமென்று நினைத்துக் கொண்டிருந்தவன், அவன் வந்தபோது தமோகுணத்தினால், அவனை வேறொருவனாக நினைத்துவிட்டான். அவன் போய்விட்டான். பிறகு தவறிப்போன அவனுடைய பார்வையை ஆசைப்படுவதில்லை.

உதாஸீநவதாஸீநஃ - குணவ்யதிரிக்தாத்மாவலோகநத்ருப்த்யாऽந்யத்ரோதாஸீநவதாஸீநஃ- குணைர்த்வேஷாகாங்க்ஷாத்வாரேண யோ ந விசால்யதே- குணாஃ ஸ்வேஷு கார்யேஷு ப்ரகாசாதிஷு வர்தந்த இத்யநுஸந்தாய, யஸ்தூஷ்ணீமவதிஷ்டதி| நேங்கதே-ந குணகார்யாநுகுணம் சேஷ்டதே||௨௩||

அவ—உடம்போடேகூட இருப்பவன்—பிடித்தவைகளையும், பிடிக்காதவைகளையும் பற்றின கீழ்ச் சொல்லியவைகளில் எப்படி மனக் கலக்கமில்லாமல் இருப்பன் என்றால், சொல்லுகிறார்—

இவன் ஆத்மாவை மாத்திரம் பார்த்து ஸந்தோஷப்படுகிறபடியால், பிடித்ததோ பிடிக்காததோ, மற்ற வஸ்துக்களைக் கவனிக்கிறதில்லை. அதாவது—வருத்தமும், ஆசையும் உண்டாகிறதில்லை. ஸத்துவம் முதலான குணங்களால் வருத்தத்தையும் ஆசையையும் அடைந்தாலும், ஒரு வேலையைச் செய்வதுமில்லை. பிடித்ததோ, பிடிக்காததோ—அவைகளின் அறிவு முதலானவைகள் ஏற்படும்போது, அவைகள் அந்த 1 குணங்களால் ஏற்படுகின்றனவென்று எண்ணி, 2 அவைகளுக்குத் தகுந்தவேலைகளைச் செய்வதில்லை. பிடிக்காதவஸ்துக்களைப் பார்த்துக் கோபிப்பதும், பிடித்தவஸ்துக்களைப்பார்த்து ஸந்தோஷப்படுவதும் இல்லை. [23]

ஸமது:கஸுகஃ ஸ்வஸ்தஃ ஸமலோஷ்டாஶ்மகாஞ்சநஃ |
துல்யப்ரியாப்ரியோ தீரஸ்துல்யநிந்தாத்மஸம்ஸ்துதிஃ ||௨௪||
மாநாவமாநயோஸ்துல்யஸ்துல்யோ மித்ராரிபக்ஷயோஃ |
ஸர்வாரம்பபரித்யாகீ குணாதீதஃ ஸ உச்யதே || ||௨௫||

ஸமது:கஸுகஃ-ஸுகது:கயோஸ்ஸமசித்தஃ| ஸ்வஸ்தஃ- ஸ்வஸ்மிந் ஸ்திதஃ, ஸ்வாத்மைகப்ரியத்வேந தத்வ்யதிரிக்தபுத்ராதி ஜந்மமரணாதிஸுகது:கயோஸ்ஸமசித்த இத்யர்தஃ| தத ஏவ ஸமலோஷ்டாஶ்மகாஞ்சநஃ| தத ஏவ துல்யப்ரியாப்ரியஃ- து

1. சுலோகத்தில் முதல்பாதத்தில் சொன்னதையே இங்கே விரிவாய்ச் சொல்லுகிறது.

2. இரண்டாவது பாதத்தில் சொன்னதையே இங்கேவிரிவாய்ச் சொல்லுகிறது.

ப்ரியாப்ரியவிஷய꞉ | தீர꞉-ப்ரக்ருத்யாத்மவிவேககுஶல꞉ | தத ஏவ துல்யநிந்தாத்மஸம்ஸ்துதி꞉-ஆத்மநி மநுஷ்யத்வாத்ய ஹிமாநக்ருதகுணாகுணநிமித்தஸ்துதிநிந்தயோ꞉ ஸ்வாஸம்ப ந்தாநுஸந்தாநேந துல்யவ்ருத்தி꞉| தத்யாக்ஷமாநாவமாநயோ꞉ ததா மித்ராரிபக்ஷயோரபி ஸ்வஸம்பந்தாபாவாதேவ து ல்யவ்ருத்தி꞉| ததா தேஹித்வப்ரயுக்தஸர்வாரம்பபரித்யாகீ| ய ஏவம்பூத꞉ ஸ குணாதீத உச்யதே ॥ ॥௨௪-௨௫॥

ஆத்மாவைப் பார்ப்பது தவிர, மற்ற ஸுகத்தையும் துக்கம் போலவே நினைக்கிறான். தன் ஆத்மா ஒன்றையே இன்பமாக நினைத்துக் கொண்டிருப்பதாலே, பிள்ளை பிறந்தது என்றாலும், செத்தது என்றாலும், அவன்மனது 1 ஒரேமாதிரியாயிருக்கும். அதனாலேயே ஓட்டாஞ்செல்லியையும், கருங்கல்லையும், தங்கக்கட்டியையும்ஒரேமாதிரியாகநினைக்கிறான். அதனாலேயேபிடித்தவஸ்துக்களும், பிடிக்காத வஸ்துக்களும் அவனுக்கு ஒரேமாதிரியாக இருக்கின்றன. ஆத்மாவையும், உடம்பையும் வெவ்வேறென்று அறிகிற விஷயத்தில் கெட்டிக்காரனாக இருக்கிறான். அதனாலே தன்னை ஒருவன் வைதாலும், ஸ்தோத்திரம் பண்ணினாலும் 2 ஒரே மாதிரியாக இருக்கிறான். குணத்தைக்கண்டு கௌரவம் செய்வதிலும், தோஷத்தை நினைத்து அலக்ஷியம் செய்வதிலும், அவையிரண்டுக்கும் காரணமாகஏற்படுகிற ஸ்நேஹம், விரோதம் இவையுள்ளவர்களிடத்திலும்—அவையிரண்டிலும் ஆத்மாவுக்கு ஸம்பந்தமில்லை என்று எண்ணி, ஒரேமாதிரியாகஇருக்கிறான். அப்படியே உடம்புக்காக மாத்திரம் ஒரு வேலையையும் செய்கிறதில்லை. இப்போப்பட்டவன் குணங்களை ஜயித்தவன் என்று சொல்லப்படுகிறான்.

---

1. ஸுகம் வந்தால் எம்பிக் குதிக்கிறதும், துக்கம் வந்தால் தலையைத் தொங்கப்போட்டுக் கொள்ளுகிறதுமில்லை.

2. ஒருவன் இவர் ரொம்ப அழகாகஇருக்கிறாரென்று சொன்னான். இன்னொருவன் மிகவும் குரூபியாக இருக்கிறார் என்று சொன்னான். அழகும்,அழகில்லாமையும்உடம்பிலிருக்கிறதென்றுஎண்ணி, அவையிரண்டினால் உடம்பைக்காட்டிலும் வேறான ஆத்மாவுக்கு லாபமும், நஷ்டமுமில்லையென்றுநினைத்து,அவையிரண்டிலும்ஒரேமாதிரியாகஇருக்கிறான்

अथ—अथैवंभूतगुणात्यये प्रधानहेतुमाह—

मां च योऽव्यभिचारेण भक्तियोगेन सेवते ।
स गुणान् समतीत्यैतान् ब्रह्मभूयाय कल्पते ॥

"नान्यं गुणेभ्यः कर्तारम्" इत्यादिनोक्तेन प्रकृत्यात्मविवेकानुसन्धानमात्रेण न गुणात्ययः सम्पत्स्यते; तस्यानादिकालप्रवृत्तविपरीतवासनाबाध्यत्वसम्भवात् । सत्यसंकल्पं परमकारुणिकमाश्रितवात्सल्यजलधिं माम् अव्यभिचारेण—एकान्तविषयेण भक्तियोगेन च यः सेवते, स एतान् गुणान् दुरत्ययानतीत्य ब्रह्मभूयाय—ब्रह्मत्वाय, कल्पते—ब्रह्मभावयोग्यो भवति—यथावस्थितमात्मानममृतमव्ययं प्राप्नोतीत्यर्थः ॥ ॥२६॥

அவ—இந்தமாதிரி குணங்களை ஜயிப்பதற்கு முக்கியமான காரணத்தைச் சொல்லுகிறார் —

கீழ்ச் சொன்னபடி உடம்பு வேறு, ஆத்மா வேறு என்று நினைத்தமாத்திரத்தால் குணங்களுடைய ஜயம் ஏற்படாது. இவை யிரண்டும் வேறு என்றுஎவ்வளவு நினைத்தாலும், இவனுக்கு நெடு நாளாய் வந்த கெட்ட பழக்கம் இந்த நினைவைஅமுக்கிவிடும். இந்த நினைவு இருந்தாலும், நினைவின் வேலை நடக்காது. ஆனால் எப்படி குணங்களுடைய ஜயம் வருமென்றால், என்னைப் பிரபத்திபண்ணி, என்னைத்தவிர வேறு தேவதையையும், என்னைத்தவிர வேறு பிர யோஜநத்தையும் நினைக்காமல், என்னிடத்தில் பக்தியையும்பண்ண வேண்டும். என்னைப் பிரீதியோடு நினைத்து ஸந்தோஷப்படுத்த வேணும். 1 நான் நினைத்தபடி நடத்துகிறவனும், அளவில்லாத

---

1. நெடுநாளாய்வந்த கெட்டபழக்கத்தைப் போக்குவதற்கு வேண்டியபகவானுடைய குணங்கள் சுலோகத்தில்"மாம்" (என்னை) என்கிற சொல்லாலே காட்டப்படுகின்றன என்று கருத்து. பகவான் ஒருவனை க்கர்மத்துக்கு உட்படுத்துவது போல, கர்மத்திலிருந்து விடுவிப்பதிலும் நினைத்தபடி நடத்துகிறவர். இந்தகுணம் ஒருவனைத்தண்டிப்பதற்கும், மன்னிப்பதற்கும் பொதுவானது. அநுக்கிரஹத்துக்கு மாத்திரம் வேண்டியவைகள் மற்றஇரண்டுகுணங்களும்.

தயையுள்ளவனும், என்னிடத்தில் வந்தவர்களிடத்தில், அவர்கள் எவ்வளவு குற்றம் பண்ணினாலும், அவைகளைக் கவனிக்காமல் பிரீதியுள்ளவனாகவும் இருக்கிறேன். இப்படி என்னுடைய கவனிக்காமைக்கும், பிரீதிக்கும் அளவில்லை. இப்படி என்னிடத்தில் பக்தியுடன் தன் ஸ்வரூபத்தைத் தியானம் செய்தால், என் அநுக்கிரஹமில்லாமல் ஜயிக்கமுடியாத ஸத்துவம் முதலான குணங்களை ஜயித்து, பிரும்மமாக ஆவதற்கு (அதாவது - ஆத்மாவை உள்ளபடி இன்பமாகப் பார்ப்பதற்குத்) தகுந்தவனாகிறான். [26]

ப்³ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டா²ஹமம்ருதஸ்யாவ்யயஸ்ய ச ।
ஶாஶ்வதஸ்ய ச த⁴ர்மஸ்ய ஸுக²ஸ்யைகாந்திகஸ்ய ச ॥

ஓம் தத்ஸதி³தி ஶ்ரீமத்³ப⁴க³வத்³கீ³தாஸூபநிஷத்ஸு ப்³ரஹ்மவித்³யாயாம் யோக³ஶாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே³ கு³ணத்ரயவிபா⁴க³யோகோ³ நாம சதுர்த³ஶோ(அ)த்⁴யாய: ॥

ஹி ஶப்³தோ³ ஹேதௌ। யஸ்மாத³ஹமவ்யபி⁴சாரிப⁴க்தியோகே³ந ஸேவிதோ(அ)ம்ருதஸ்யாவ்யயஸ்ய ச ப்³ரஹ்மண: ப்ரதிஷ்டா²; ததா² ஶாஶ்வதஸ்ய ச த⁴ர்மஸ்ய - நிரதிஶயைஶ்வர்யஸ்ய ஐகாந்திகஸ்ய ச ஸுக²ஸ்ய - "வாஸுதே³வஸ்ஸர்வம்" இத்யாதி³நா நிர்தி³ஷ்டஸ்ய ஜ்ஞாநிந: ப்ராப்யஸ்ய ஸுக²ஸ்யேத்யர்த²:। யத்³வா ஶாஶ்வதத⁴ர்மஶப்³த³: ப்ராபகவசந: - ததா²பி பூர்வோத்தரயோ: ப்ராப்யரூபத்வேந தத்ஸாஹசர்யாத³யமபி ப்ராப்யவிஶேஷ:। ஸ தத்ஸம்ப⁴வதி - பூர்வத்ர "தை³வீ ஹ்யேஷா கு³ணமயீ மம மாயா து³ரத்யயா । மாமேவ யே ப்ரபத்³யந்தே" இத்யாரப்⁴ய கு³ணாத்யயஸ்ய தத்³பே⁴த³காக்ஷரைஶ்வர்யப⁴க³வத்ப்ராப்தீநாம் ச ப⁴க³வத்ப்ரபத்த்யேகோபாயதாயா: ப்ரதிபாதி³தத்வாச்ச ஏகாந்தப⁴க³வத்ப்ரபத்த்யேகோபாயோ கு³ணாத்யயஸ்தத்பூர்வகப்³ரஹ்மபா⁴வஶ்சேதி ॥ ॥27॥

இதி ஶ்ரீப⁴க³வத்³ராமாநுஜ விரசிதே ஶ்ரீமத்³கீ³தாபா⁴ஷ்யே சதுர்த³ஶோ(அ)த்⁴யாய:.

அவ— குணங்களின் ஜயத்தையும் பகவான் கொடுக்கிறாரென்றுசொன்னதை உறுதிப்படுத்துவதற்காக, மூன்று விதமான பலன்களைப் பகவான் கொடுக்கிறார் என்று நடு ஆறு அத்தியாயங்களாலே சொல்லப்பட்டதை மறுபடியும் இங்கே சொல்லுகிறார்—

இன்னொருவரையும், இன்னொரு பிரயோஜனத்தையும் நினைக்காமல் செய்யப்பட்ட பக்தியினாலே ஸந்தோஷப்படுத்தப்பட்ட நான்—அழிவில்லாததும், ஒருவிதக் குற்றமில்லாததும், இன்பமானதுமான ஆத்மாவின் அநுபவத்தையும்,பிரும்மப்பட்டத்தைக் காட்டிலுமுயர்ந்ததான ஐசுவரியத்தையும், மோக்ஷ ஸுகத்தையும் கொடுக்கிறவன். ஆகையால் என்னைப் பிரபத்தி பண்ணி, பக்தி பண்ணினால் தான், இந்த எல்லா ஸுகங்களும் கிடைக்கும். இந்த ஸங்கதியை 17—வது அத்தியாயம் 14—வது சுலோகம் முதல் சொல்லியிருக்கிறது, குணங்களை ஜயிப்பதும், அதனால் வரும் ஆத்மாவின் பார்வையும் பகவானைப் பிரபத்தி பண்ணினால் தான்வரும். இந்த ஸங்கதிகளெல்லாம் நல்ல ஆசாரியர்களுடையவும், பகவானுடையவும் அநுக்கிரஹத்தால் மனதில் படவேணும்.

ஸ்ரீமதே பகவதே பஷியகாராய மஹாதேசிகாயநம:.

---

𑌅𑌵-- 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍇 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌭𑍂𑌤𑌯𑍋𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌪𑍁𑌰𑍁𑌷𑌯𑍋𑌃 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌵𑌿𑌶𑍋𑌧𑍍𑌯, 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌸𑍍𑌯𑌾𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑌿𑌨𑍍𑌨𑌜𑍍𑌞𑌾𑌨𑍈𑌕𑌾𑌕𑌾𑌰𑌸𑍍𑌯 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌗𑍁𑌣𑌸𑌙𑍍𑌗𑌪𑍍𑌰𑌵𑌾𑌹𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑍋 𑌦𑍇𑌵𑌾𑌦𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑌪𑌰𑌿𑌣𑌤𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑍋𑌽𑌨𑌾𑌦𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌅𑌨𑌨𑍍𑌤𑌰𑍇𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑍋𑌭𑌯𑌾𑌵𑌸𑍍𑌥𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑍋 𑌗𑍁𑌣𑌸𑌙𑍍𑌗𑌮𑍂𑌲𑍋 𑌭𑌗𑌵𑌤𑍈𑌵 𑌕𑍃𑌤 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾, 𑌗𑍁𑌣𑌸𑌙𑍍𑌗𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌂 𑌸𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑍍𑌯, 𑌗𑍁𑌣𑌸𑌙𑍍𑌗𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌾𑌤𑍍𑌮𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌾𑌵𑌾𑌪𑍍𑌤𑌿𑌶𑍍𑌚 𑌭𑌗𑌵𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌿𑌮𑍂𑌲𑍇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 । 𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌭𑌜𑌨𑍀𑌯𑌸𑍍𑌯 𑌭𑌗𑌵𑌤𑌃 𑌕𑍍𑌷𑌰𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌤𑍍𑌮𑌕𑌬𑌦𑍍𑌧𑌮𑍁𑌕𑍍𑌤𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌮𑌤𑍍𑌤𑌾𑌂, 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌭𑍂𑌤𑌾𑌤𑍍 𑌕𑍍𑌷𑌰𑌾𑌕𑍍𑌷𑌰𑌪𑍁𑌰𑍁𑌷𑌦𑍍𑌵𑌯𑌾𑌤𑍍 𑌨𑌿𑌖𑌿𑌲𑌹𑍇𑌯𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌨𑍀𑌕𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑍈𑌕𑌤𑌾𑌨𑌤𑌯𑌾𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑍋𑌤𑍍𑌕𑌰𑍍𑌷𑍇𑌣 𑌵𑌿𑌜𑌾𑌤𑍀𑌯𑌸𑍍𑌯 𑌭𑌗𑌵𑌤𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌵𑌕𑍍𑌤𑍁𑌮𑌾𑌰𑌭𑌤𑍇 । 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌾𑌵𑌤𑍍 𑌅𑌸𑌙𑍍𑌗𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 𑌛𑌿𑌨𑍍𑌨𑌬𑌨𑍍𑌧𑌨𑍀𑌯𑌕𑍍𑌷𑌰𑌾𑌖𑍍𑌯𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌂 𑌵𑌕𑍍𑌤𑍁𑌂, 𑌬𑌨𑍍𑌧𑌭𑍂𑌤𑌾𑌕𑌾𑌰𑍇𑌣 𑌵𑌿𑌤𑌤𑌾𑌚𑌿𑌤𑍍𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌵𑌿𑌶𑍇𑌷𑌮𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌵𑍃𑌕𑍍𑌷𑌾𑌕𑌾𑌰𑌂 𑌕𑌲𑍍𑌪𑌯𑌨𑍍 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 —

𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍂𑌲𑌮𑌧𑌃𑌶𑌾𑌖𑌮𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌰𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ।
𑌛𑌨𑍍𑌦𑌾𑌂𑌸𑌿 𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑍍𑌣𑌾𑌨𑌿 𑌯𑌸𑍍𑌤𑌂 𑌵𑍇𑌦 𑌸 𑌵𑍇𑌦𑌵𑌿𑌤𑍍 ॥௧॥

𑌯𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌂 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍂𑌲𑌮𑌧𑌃𑌶𑌾𑌖𑌮𑌵𑍍𑌯𑌯𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌃 𑌶𑍍𑌰𑍁𑌤𑌯𑌃, 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍂𑌲𑍋𑌽𑌵𑌾𑌕𑍍𑌶𑌾𑌖 𑌏𑌷𑍋𑌽𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌃 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃, 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍂𑌲𑌮𑌵𑌾𑌕𑍍𑌶𑌾𑌖𑌂 𑌵𑍃𑌕𑍍𑌷𑌂 𑌯𑍋 𑌵𑍇𑌦 𑌸𑌂𑌪𑍍𑌰𑌤𑍀𑌤𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌃 । 𑌸𑌪𑍍𑌤𑌲𑍋𑌕𑍋𑌪𑌰𑌿𑌨𑌿𑌵𑌿𑌷𑍍𑌟𑌚𑌤𑍁𑌰𑍍𑌮𑍁𑌖𑌾𑌦𑌿𑌤𑍍𑌵𑍇𑌨 𑌤𑌸𑍍𑌯𑍋𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍂𑌲𑌤𑍍𑌵𑌮𑍍 । 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌨𑌿𑌵𑌾𑌸𑌿𑌸𑌕𑌲𑌨𑌰𑌪𑌶𑍁𑌮𑍃𑌗𑌕𑍃𑌮𑌿𑌕𑍀𑌟𑌪𑌤𑌙𑍍𑌗𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑌾𑌨𑍍𑌤𑌤𑌯𑌾𑌧𑌃𑌶𑌾𑌖𑌤𑍍𑌵𑌮𑍍 । 𑌅𑌸𑌙𑍍𑌗𑌹𑍇𑌤𑍁𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌦𑌯𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌾𑌕𑍍 𑌪𑍍𑌰𑌵𑌾𑌹𑌰𑍂𑌪𑍇𑌣𑌾𑌨𑍁𑌚𑍍𑌛𑍇𑌦𑍍𑌯𑌤𑍍𑌵𑍇𑌨𑌾𑌵𑍍𑌯𑌯𑌤𑍍𑌵𑌮𑍍 । 𑌯𑌸𑍍𑌯 𑌛𑌨𑍍𑌦𑌾𑌂𑌸𑌿 𑌪𑌰𑍍𑌣𑌾𑌨𑍍𑌯𑌾𑌹𑍁𑌃 । 𑌛𑌨𑍍𑌦𑌾𑌂𑌸𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑌯𑌃 𑌵𑌾𑌯𑌵𑍍𑌯𑌂 𑌶𑍍𑌵𑍇𑌤𑌮𑌾𑌲𑌭𑍇𑌤 𑌭𑍂𑌤𑌿𑌕𑌾𑌮𑌃, 𑌐𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑍇𑌕𑌾𑌦𑌶𑌕𑌪𑌾𑌲𑌂 𑌨𑌿𑌰𑍍𑌵-

வேதஜ்ஞாகாரை:'' இத்யாதிஶ்ருதிஸ்ம்ருதிவாதிபி: கார்யகார-
ணோபயாவஸ்தம் ஸம்ஸாரவ்ருக்ஷ இதி ஹேதும் அஸ்யாஸ்ய
பர்ணாநி | ச்சந்தாம்ஸி வ்ருக்ஷா பர்ணாநி | யஸ்தமேவம்
ஹேதுதத்த்வம் வேத, ஸ வேதவித் | வேதோ ஹி ஸம்ஸாரவ்ரு-
க்ஷச்சேதோபாயம் வததி; சேத்யவ்ருக்ஷஸ்வரூபஜ்ஞாநம் சேத-
நோபாயஜ்ஞாநோபயோகீதி வேதவிதித்யுச்யதே ‖ ‖௧‖

அவ—க்ஷேத்திராத்தியாயம் என்றுசொல்லப்படுகிற 13-வது அத்தியாயத்தில் க்ஷேத்திரம் (இடம்) என்று சொல்லப்பட்ட பிரகிருதியினுடைய ஸ்வரூபத்தையும், க்ஷேத்திரக்ஞன் (இடத்தை அறிகிறவன்) என்று சொல்லப்பட்ட ஜீவனுடைய ஸ்வரூபத்தையும் தெளிவாகச் சொல்லி; ஜீவன் இயற்கையில் ஒருவித குற்றமில்லாதவனுகவும், அளவில்லாதஅறிவுள்ளவனுகவும் இருந்த போதிலும், நெடுநாளாய்வந்த—பிரகிருதியின் ஸத்துவம் முதலான குணங்களாலுண்டான—ஆசையின் வெள்ளத்தினுல், அவனுக்கு தேவன் முதலான உடம்பின்சேர்க்கை நெடுநாளாய் வந்ததென்று சொல்லப்பட்டது. 14-வது அத்தியாயத்தில் (காரணவஸ்தை) ஸிருஷ்டி காலத்தில் உண்டாகிற உடம்பின் சேர்க்கையும், (காரியாவஸ்தை) அது முதல் நாளது வரையில் ஓயாமல் நடந்துவருகிற உடம்பின் சேர்க்கையும் பகவானுலேயே செய்யப்பட்டதென்று சொல்லி; ஜீவனுக்கு ஸத்துவம் முதலான குணங்களால் கட்டு உண்டாகும் வழியை விரிவாகச்சொல்லி; அந்தக்கட்டுப்போய், ஆத்மாவை உள்ளபடி பார்ப்பது பகவானிடத்தில் பக்தியினுல் தான் வரவேண்டுமென்று சொல்லப்பட்டது. 15-வது அத்தியாயத்தில் பக்திபண்ணவேண்டிய பகவானுக்கு க்ஷரம் (பத்தன்), அக்ஷரம் (முக்தன்) என்கிற—ஸம்ஸாரிகளும், ஸம்ஸாரம் போனவர்களும் சொத்துக்கள் என்பதையும்; பகவான்குற்றங்களுக்குச் சத்துரு (ஒருக்காலும் குற்றமில்லாதவர்)—எப்பொழுதும் எல்லா நல்ல குணங்களுக்கும் இருப்பிடம்—ஆகையால் மிகவும் உயர்ந்தவர்; ஆதலால் சொத்தான இந்த இரண்டு வகுப்புக்களைக் காட்டிலும் பகவான் வேறு ஜாதி என்பதையும்; அவர் ஜீவஜாதியேயல்ல என்பதையும்; புருஷோத்தமன், எல்லா புருஷர்களைக்

காட்டிலும் (அதாவது—பகவானும் மஹாலெக்ஷ்மியும் தவிர,மற்ற அறிவுள்ளவர்களெல்லாரும் ஜீவன்கள்; அவர்களெல்லாரையும் காட்டிலும் வேறு ஜாதியாகையால்) உயர்ந்தவர் என்பதையும் சொல்ல ஆரம்பிக்கிறார்.

முதலில் ஒழிவு என்கிற கோடாலியினாலே பந்தம் (ஸம்ஸாரம்) என்கிற மரத்தை வெட்டின அக்ஷரம் (முக்தன்) என்கிற ஸொத்தைச் சொல்லுவதற்காக, வெட்டத்தகுந்த—பந்தம் (கட்டு) என்று சொல்லக்கூடிய—ஸம்ஸாரத்தை (உடற்புமுதலானவைகளை) 1 அரசமரமாகச் சொல்லிக்கொண்டு, பகவான் சொல்லுகிறார்—

ஸம்ஸாரம் என்கிற அரசமரத்துக்கு வேர் 2 மேலே இருக்கிறதென்றும், கிளைகள் கீழே இருக்கின்றன என்றும், அதற்கு அழிவில்லையென்றும், அதற்கு வேதங்கள் இலைகள் என்றும் வேதம் சொல்லுகிறது. இந்த மரத்தை இப்படி எவன் அறிகிறானோ, அவன்தான் வேதத்தின் கருத்தை அறிந்தவன். [1]

---

1. ஸம்ஸாரத்தை அரசமரமாகச் சொல்லுவானேன் என்றால்—அரசமரத்தை உயர்ந்த புண்ணிய விருக்ஷமாகச் சொல்லியிருக்கிறது. அது யாகங்களுக்கு உதவுகிறது. அதுபோல் உடம்பு ஆத்மயாகம் என்கிற பிரபத்திக்கு உபயோகப்படுகிறது. ஜீவன் ஸம்ஸாரத்தைத் தாண்டுவதற்கு அது மிகவும் உதவியாக இருக்கிறது. பாபிகளுக்குத் தொந்தரவைக் கொடுக்கிறதே யொழிய, நல்லவர்களுக்கு மிகவும் நல்லது. பாபிகளும் கடைசியில் இந்த உடம்பினால்தான ஸௌக்கியத்தை அடையவேணும். அதற்காக அரசமரமாகச் சொன்னது.

2. ஸம்ஸாரம்என்கிற மரத்தை வெட்டுவதற்கு வழியை வேதம் சொல்லுகிறது. வெட்டவேண்டிய மரம் தெரியாதபோனால், வெட்டுவது எப்படி? பூமி முதல் ஏழுலோகங்களுக்கு மேலேயிருக்கும் நாலு முகமுள்ள பிரும்மாவினால் உண்டாகிறபடியால், இந்த மரத்துக்கு வேர் மேலே யிருக்கிறதென்றும், பூமியிலும்,அதற்குக்கீழ்லோகங்களிலும்வஸிக்கும் மனிதன், மாடு, புழு, பக்ஷிகள் மரம் என்று சொல்லப்பட்டவைகள் இருப்பதால், கிளைகள்கீழே இருக்கின்றன என்றும், ஒழிவை யுண்டுபண்ணக்கூடிய நல்ல அறிவு ஏற்படும்வரையில், இது வரிசையாய் வளர்ந்து வெட்டுவதற்கு (போக்குவதற்கு) முடியாமலிருப்பதால், அழிவில்லை என்றும் சொல்லப்பட்டது. வேதவாக்கியங்களில் பிள்ளைகள், மாடுகள், பணம்காசுகள்—இவைமுதலானவைகள்உண்டாவதற்குச் சில யாகங்களைச்

அதஶ்சோர்த்வம் ப்ரஸ்ருதாஸ்தஸ்ய ஶாகா குணப்ரவ்ருத்தா விஷயப்ரவாலா: ॥ ॥௧½॥

தஸ்ய மனுஷ்யாதிஶாகஸ்ய வ்ருக்ஷஸ்ய தத்தத்கர்மக்ருதா அத: பஶ்வாதிரூபேண ஶாகா: ப்ரஸ்ருதா பவந்தி। ஊர்த்வம் ச கந்தர்வயக்ஷதேவாதிரூபேண ப்ரஸ்ருதா பவந்தி। தாஶ்ச குணப்ரவ்ருத்தா:—குணை: ஸத்த்வாதிபி: ப்ரவ்ருத்தா:। விஷயப்ரவாலா:—ஶப்தாதிவிஷயபல்லவா:॥

1 மனிதர்கள் முதலானகிளைகளுள்ள அந்த மரத்தில் அந்தந்த ஜீவன்களின் கர்மங்களாலே ஏற்படுகிற-மனிதன், மாடு, முதலான-வேறு கிளைகள் மறுபடியும் கீழே பரவுகின்றன. கந்தர்வன், யக்ஷன் தேவன் முதலான 2 கிளைகள் மேலே பரவுகின்றன. அந்தக்கிளைகள் ஸத்துவம் முதலான 3 குணங்களால் வளர்கின்றன. சப்தம் முதலான விஷயங்கள் அந்த 4 கிளைகளுக்கு த்துளிர்கள். [ $1\frac{1}{2}$ ]

அத—அஸ்ய மூலவ்ருத்தமாஹ—

அதஶ்ச மூலான்யனுஸந்ததானி கர்மானுபந்தீனி மனுஷ்யலோகே ॥ ॥௨॥

---

செய்யவேண்டுமென்று சொல்லியிருக்கிறது. அவைகளால் இந்த ஸம்ஸாரம் வளர்கிறது. ஆகையால் அந்த வேதவாக்கியங்களை இந்த மரத்துக்கு இலைகளாகச் சொல்லுகிறது. இலைகளாலேதான் மரம்வளர்கிறது. இலையில்லாமல் போனால், மரம் பட்டுப்போகும்.

1. நைமித்திக ஸிருஷ்டியை நினைத்து முதல்சுலோகம். நித்திய ஸிருஷ்டியை நினைத்து இந்த சுலோகம்.

2. கர்மங்களைச் செய்கிற பூலோகத்தைப்பற்றி, இந்த சுலோகத்தில் "கீழே மேலே" என்கிற சொற்களைஉபயோகப்படுத்தி யிருக்கிறது. கீழ்மேல் பரவுகிற கிளைகளெல்லாம் பிரும்மாவின் உலகத்துக்குக் கீழே இருப்பதால், முதல் சுலோகத்தோடு விரோதமில்லை.

3. 14—வது அத்தியாயத்தில் சொன்னபடி ஸத்துவம் முதலான குணங்களே மேல்மேல் பிறப்புகளுக்குக்காரணமாயிருப்பதாலே, தேவன், மனிதன் முதலான கிளைகள் குணங்களால் வளர்கின்றன.

4. கிளைகள் துளிர்க்கிறபடியால், அவைகள் இன்பமாக இருக்கின்றன. அதுபோல சப்தம் முதலான விஷயங்களால் மனிதன் முதலான பிறப்புக்கள் இன்பமாக இருக்கின்றன.

स ब्रह्मलोकोर्ध्वमूलस्य वृक्षस्य मनुष्याग्रस्य अधः-मनुष्ये लोके मूलान्यनुसन्ततानि। तानि च कर्मानुबन्धीनि-कर्माण्यनुबन्धीनि मूलान्यस्य मनुष्यलोकेष्ववस्थितमूलः। मनुष्यत्वावस्थायां कृतैर्हि कर्मभिरधो मनुष्यपश्वादयः ऊर्ध्वं च देवादयो भवन्ति ॥ ॥२॥

அவ—எப்படி யென்றால், சொல்லுகிறார்—

பிருமலோகத்தை வேராகவும், மனிதர்களை நுனியாகவும் உடைய இந்த மரத்துக்கு மனித லோகத்தில் கர்மங்கள் ஆகிய 1 வேர்கள் பரவுகின்றன. அதாவது—மனிதனாக இருக்கும் போது செய்யப்பட்டபுண்ணிய பாபங்களாலே, மறுபடியும் கீழே மனிதனாகவும் ஆடு மாடாகவும் பிறக்கிறார்கள். மேல் லோகத்தில் தேவன்களாகவும் ஆகிறார்கள், [2]

न रूपमस्येह तथोपलभ्यते नान्तो न चादि-
र्न च संप्रतिष्ठा ॥ ॥२½॥

अस्य वृक्षस्य चतुर्मुखाद्यत्वेनोर्ध्वमूलत्वम्, तत्सन्तानपरम्परया मनुष्याग्रत्वम्, मनुष्यत्वे कृतैः कर्मभिर्मूलत्वम् अधः पश्वाद्यग्रत्वं च पुनरूर्ध्वाग्रत्वमिति यदुक्तं रूपं तदिह; न तथा संसारिभिरुपलभ्यते। मनुष्योऽहं देवदत्तस्य पुत्रो यज्ञदत्तस्य पिता तदनुरूपपरिग्रहश्चेत्येतावदेवोपलभ्यते। तथाऽस्य वृक्षस्यान्तः विनाशो गुणमयभोगेष्वसङ्गकृत इति नोपलभ्यते। तथाऽस्य गुणसङ्ग एवादिरिति नोपलभ्यते। अस्य प्रतिष्ठा चानात्मन्यात्माभिमानरूपाज्ञानमिति नोपलभ्यते। प्रतितिष्ठत्यस्मिन्निति ह्यज्ञानमेवास्य प्रतिष्ठा ॥ ॥२½॥

---

1. இவைகள் சின்னவேர்கள். ஒருவீட்டின் மாடியில் முளைத்த கொடியிலிருந்து ஒரு கொடி கீழே தொங்கிக்கொண்டு வந்து, பூமியில்

ஸம்ஸாரமாகிய இந்த மரம் பிரும்மாவினிடமிருந்து உண்டாவதால், அவன் வேர். அவன் பிள்ளைகள், பேரன்கள் வழியாய் மனிதன் வரையில் வளர்கிறபடியால், மனிதன் நுனி. மனிதன் பூமியில் இருப்பதால் கிளைகள் கீழே இருக்கின்றன. மனிதப்பிறப்பில் செய்யப்பட்ட புண்ணியபாபங்கள் என்கிற வேர்களால் கீழேயும், மேலேயும் கிளைகள் பரவுகின்றன. இந்த ஸங்கதிகளை ஸம்ஸாரிகள் அறியவில்லை. நான் மனிதன்; ஸ்ரீநிவாஸ அய்யங்காருக்குப் பிள்ளை; நாராயண அய்யங்காருக்குத்தகப்பன்; மனிதனுக்கு வேண்டிய ஸொத்து முதலானவைகள் உள்ளவன்—என்று இவ்வளவைத்தான் அவர்கள் அறிகிறார்கள். இந்த மரம் ஸத்துவம் முதலான குணங்களாலே உண்டாகிற ஸுகங்களில் ஒழிவினால் தொலைகிறது. அவைகளில் ஆசையினால்தான் அது உண்டாகிறது. உடம்பை ஆத்மாவாக நினைப்பதாகிற அஜ்ஞானம் தான் இந்த மரத்துக்கு ஆதாரம் (மரத்துக்குபூமிபோல்). என்றும் அறியவில்லை. [2½]

அஶ்வத்த²மேநம் ஸுவிரூட⁴மூலமஸங்க³ஶஸ்த்ரேண த்³ருடே⁴ந சி²த்வா | தத: பத³ம் தத்பரிமார்கி³தவ்யம் யஸ்மிந் க³தா ந நிவர்தந்தி பூ⁴ய: || ||௩½||

ஏநம்—உக்தப்ரகாரம் ஸுவிரூட⁴மூலம்-ஸுஷ்டு² விவிரூட⁴மூலம் ஸம்யக்ஜ்ஞாநமூலேந த்³ருடே⁴ந விஷயாஸங்க³ரூபேண ஶஸ்த்ரேண சி²த்வா, தத:-விஷயாஸங்கா³த்³விமுக்த: பத³ம் பரிமார்கி³தவ்யம் - அந்வேஷணீயம் | யஸ்மிந் க³தா பூ⁴யோ ந நிவர்தந்தே || ||௩½||

1கீழ்ச்சொல்லிய—கெட்டியாயும்,2பலவிதமாயும், வேர்கள்ருய்

---

பட்டவுடன் வேருண்டாகி, அதிலிருந்து, மேலும் கீழும் கிளைகள் பரவுகின்றன. அதுபோல.

1. வாஸனையாலேமிகவும்கெட்டியாயிருக்கிறது. அ[illegible]ல்லப்போகிற ஒழிவைத் தவிர வேறொன்றாலும் போகாதென்றுகருத்து.

2. பிராயச்சித்தத்தாலே சில கர்மங்களாகிய வேர்களை அறுத்தாலும், மனதாலும், வாக்காலும், உடம்பாலும் நினைவோடும், நினைவில்லாமலும் கெடுநாளாய்ச் செய்யப்பட்ட கர்மங்களாகிற வே[illegible], அவைகளின் விதங்களுக்கும் கணக்கில்லையென்று கருத்து.

ஊன்றின-இந்தஅரசமரத்தை நல்ல [1] அறிவுகளால் ஏற்பட்ட-மிகவும் கெட்டியான (வாய்மழுங்காத)—ஸத்துவம் முதலான குணங்களால் ஏற்படுகிற ஸங்கங்களில்ஒழிவாகிற-கோடாலியாலே வெட்டி, அந்த ஒழிவைக் கொண்டே ஜீவாத்ம ஸ்வரூபத்தைப் பார்க்கப்பாடுபட வேணும் எதைப் பார்த்தால், மறுபடியும் [2] ஸம்ஸாரத்தை அடைய மாட்டார்களோ. [3½]

[illegible]

தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே யத꞉ ப்ரவ்ருத்தி꞉ ப்ரஸ்ருதா புராணீ ॥ ॥ ௪ ॥

[illegible]

1\. விஷயாதி முதலான கஷ்டங்களாலே உண்டாகும் ஒழிவு கொஞ்சகாலமிருந்து போய்விடும். அது கெட்டியாயிருக்காது. அந்த ஒழிவு போதாது—என்று கருத்து.

2\. ஸம்ஸாரம் என்பது பிறப்புமுதலான பலவித துக்கங்கள். இது ஜீவன்களுக்குக் கர்மங்களாலே ஏற்படுகிறது. ஒவ்வொரு ஜீவனுக்கும் நல்ல அறிவினால் ஒழிவுவந்தால், கர்மங்கள் போய், இந்த ஸம்ஸாரம் என்கிற மரம் போய்விடும். மரத்திலிருந்து பழுத்து உதிர்ந்த இலை மறுபடியும் மரத்தில் ஒட்டாததுபோல, இந்த ஜீவன் பிரும்மாவாகிற வேரிலிருந்து உண்டான ஸம்ஸாரத்தில் மறுபடியும் ஒட்டுகிறதில்லை. பிரும்மா என்கிற ஒரு வேரிலிருந்து கணக்கில்லாத ஜீவன்களுக்கு ஒவ்வொருவனுக்கும் ஸம்ஸாரம் என்கிற மரம் உண்டாயிருக்கிறது. இவைஎல்லாவற்றையும் சேர்த்து மரம் என்று பொதுவாகச் சொல்லியிருக்கிறது.

"ते" इति। प्रपद्य यतः प्रवृत्तिरिति वा पाठः। तमेवाद्यं पुरुषं प्रपद्य-शरणमुपगम्य यतः-अज्ञाननिवृत्त्यादेः कृत्स्नस्य चास्य साधनभूता प्रवृत्तिः पुराणी-पुरातनी प्रसृता। पुरातनानां मुमुक्षूणां प्रवृत्तिः पुराणी। पुरातना हि मुमुक्षवस्तमेव शरणमुपगम्य निर्मुक्तबन्धा जाता इत्यर्थः॥

*அவ—நெடுநாளாய் வந்த—ஸத்துவம் முதலான குணங்களாலே ஏற்படும்—ஸுகங்களின் ஆசையும், அதை உண்டுபண்ணுவதான கெட்ட அறிவும் 1 என்னமாய்ப் போகும் என்றால், சொல்லுகிறார்—*

*இந்தத்தப்பான அறிவும், கெட்ட ஆசையும் போகிறதற்காக எல்லா உலகங்களையும் உண்டு பண்ணின 2 பகவானையே கெஞ்ச வேணும். அவராலேதானே இவைகளெல்லாம் நெடுநாளாகப் பெருகிவருகிறது 3.*

*மற்றொருபாடம்—அந்தபகவானை கெஞ்சிக்கேட்டுக்கொண்டு தான் ஸம்ஸாரத்தைப் போக்குகிறது என்பது 4 வெகுகாலமாய் நாளதுவரையில் நடந்துவருகிறது.* [ 4 ]

निर्मानमोहा जितसङ्गदोषा अध्यात्मनित्या विनिवृत्तकामाः।
द्वन्द्वैर्विमुक्ताः सुखदुःखसंज्ञैर्गच्छन्त्यमूढाः पदमव्ययं तत् ॥ ॥५॥

---

1. *ஒழிவாகிய கெட்டியான கோடாலி அகப்பட்டாலன்றோ, ஸம்ஸாரமாகிய மரத்தை வெட்டலாம். அது ஸம்ஸாரிகளுக்கு எப்படி அகப்படும்? என்கிற ஸந்தேஹத்தை அடுத்த சுலோகத்தாலே தீர்க்கிறார்.*

2. *எந்த பகவானுடைய கட்டளைகளை மீறினதாலே பந்தமுண்டாயிருக்கிறதோ, அவரை ஸந்தோஷப் படுத்தினால், அவரே அந்தக்கட்டைத்தரித்து விடுவர் என்று கருத்து.*

3. *இது 7—வது அத்தியாயம் 14—வது சுலோகத்தில் சொல்லப்பட்டது.*

4. *முன்காலத்திலிருந்த முமுக்ஷுக்கள் (ஸம்ஸாரத்தைப் போக்க ஆசைப்பட்டவர்கள்) பகவானையே கெஞ்சிக் கேட்டுக்கொண்டு, பந்தத்தை(கட்டை)ப்போக்கினார்கள் என்று "புராணீ" என்கிற சொல்லாலே காட்டப்பட்டது. புராணீ என்பதற்கு நெடுநாளாய் வந்த என்று பொருள்.*

ஏவம் ஶரணமுபகம்ய, நிர்மாநமோஹா: — நிர்கதாநாத்மந்யாத்மாபிமாநரூபமோஹா: । ஜிதஸங்கதோஷா:-ஜிதகுணமயபோகஸங்காக்யதோஷா: | அத்யாத்மநித்யா: - ஆத்மநி யஜ்ஜ்ஞாநம் ததத்யாத்மம், தந்நித்யா:| விநிவ்ருத்ததத்விதரகாமா:, ஸுகது:கஸம்ஜ்ஞைர்த்வந்த்வைர் விமுக்தா:| அமூடா:-ஆத்மாநாத்மஸ்வபாவஜ்ஞா:| ததவ்யயம் பதம் கச்சந்தி-அநவச்சிந்நஜ்ஞாநாகாரமாத்மாநம் யதாவஸ்திதம் ப்ராப்நுவந்தி। மாம் ஶரணமுபகதாநாம் மத்ப்ரஸாதாதேவைதாவதாஸ்யம் ப்ரவ்ருத்தயத்நஸாகல்யஸித்திர்வ்யக்தா ஸுகரமித்யர்த்த: || ||5||

1 இப்படி என்னைச்சரணாகதி பண்ணி (கெஞ்சிக் கேட்டுக் கொண்டு), ஆத்மா என்பது உடம்புதான் என்கிற தப்பு எண்ணங்களும், ஆசையாகிற தோஷமும் போய், 2 எப்பொழுதும் ஆத்மாவையே நினைத்துக்கொண்டு, மற்ற ஸங்கதிகளில் 3 ஆசையொழிந்து, ஸம்ஸாரத்தில் ஏற்படும் ஸுகதுக்கங்களை 4 நினையாமல், ஆத்மாவையும் உடம்பையும் 5 உள்ளபடி (வெவ்வேறாக) அறிந்து, அழிவில்லாத அந்த வஸ்துவை அடைகிறார்கள். அதாவது-6 அளவில்லாத அறிவையே ஸ்வபாவமாக உடைய ஆத்மா

1. கீழ்சுலோகத்தில் சொன்ன ஸங்கதியை இந்த சுலோகத்தில் விரிவாய்ச் சொல்லுகிறது.

2. யோகம் செய்கிறவேளையில் அதை இடைவிடாமல் நினைப்பது; மற்றவேளைகளிலும் பெரும்பாலும் நினைப்பது.

3. சுலோகத்தில் "விநிவ்ருத்த" என்ற சொல்லில் 'வி' என்கிற சொல்லுக்கு விசேஷமாக என்று அர்த்தம். விசேஷமாய் ஒழிவதாவது விஷயங்கள் கிட்ட இருக்கும்போதும் அவைகளைக் கவனிக்காமை.

4. ஆத்மாவைப் பார்ப்பதற்கு முன்னாலே துக்கங்களைப் பொறுத்துக் கொள்ளுவது. பிறகு துக்கமே வருவதில்லை.

5. முதலில் ஆத்மாவும், உடம்பும் ஒன்று என்கிற எண்ணம் இல்லாமை சொல்லப்பட்டது. இங்கே அந்த எண்ணம் போனதற்குக் காரணம் சொல்லப்படுகிறது. ஆத்மாவுக்கும், உடம்புக்கும் வேற்றுமையைக்காட்டும் அடையாளங்களை அறிந்தால்தான், அந்த எண்ணம் போகும்.

6. இது சுலோகத்திலிருக்கிற "பதம்" என்ற சொல்லின் பொருள் கர்மம் அடியோடு போன ஆத்மஸ்வரூபம் அடையவேண்டியதாகை

வை உள்ளபடி பார்த்து ஸந்தோஷப்படுகிறார்கள். என்னைக்கொண்டு சிக்கெட்டுக்கொள்ளுவதினால், நான் ஸந்தோஷத்தை அடைந்து, அவர்களுக்கு முடியாத இந்த வேலைகளை வெகு ஸுலபமாக முடித்து வைக்கிறேன். 1. [5]

𑌨 𑌤𑌦𑍍𑌭𑌾𑌸𑌯𑌤𑍇 𑌸𑍂𑌰𑍍𑌯𑍋 𑌨 𑌶𑌶𑌾𑌙𑍍𑌕𑍋 𑌨 𑌪𑌾𑌵𑌕𑌃 ।
𑌯𑌦𑍍𑌗𑌤𑍍𑌵𑌾 𑌨 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌤𑌦𑍍𑌧𑌾𑌮 𑌪𑌰𑌮𑌂 𑌮𑌮 ॥ ॥௬॥

𑌤𑌤𑍍-𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃, 𑌨 𑌸𑍂𑌰𑍍𑌯𑍋 𑌭𑌾𑌸𑌯𑌤𑍇, 𑌨 𑌶𑌶𑌾𑌙𑍍𑌕𑌃, 𑌨 𑌪𑌾𑌵𑌕𑌶𑍍𑌚 । 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌮𑍍; 𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌨𑌿 𑌤𑍁 𑌜𑍍𑌯𑍋𑌤𑍀𑌂𑌷𑌿 𑌵𑌿𑌷𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌤𑌮𑍋𑌨𑌿𑌰𑌸𑌨𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣𑍋𑌪𑌕𑌾𑌰𑌕𑌾𑌣𑌿 । 𑌆𑌸𑍍𑌯 𑌚 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑍋 𑌯𑍋𑌗𑌃 । 𑌤𑌦𑍍𑌵𑌿𑌰𑍋𑌧𑌿 𑌚𑌾𑌨𑌾𑌦𑌿𑌕𑌰𑍍𑌮 । 𑌤𑌨𑍍𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌕𑌂 𑌚 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌕𑍍𑌤𑌂 𑌶𑌰𑌣𑌾𑌗𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌮𑍍 । 𑌯𑌦𑍍𑌗𑌤𑍍𑌵𑌾 𑌪𑍁𑌨𑌰𑍍𑌨 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇, 𑌤𑌦𑍍𑌧𑌾𑌮 𑌪𑌰𑌮𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃, 𑌮𑌦𑍀𑌯𑌂 𑌮𑌦𑍍𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍍𑌨 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌂

---

யால், அதையும் பதம் என்று சொல்லுவதுண்டு. பதம் என்கிற சொல் பகவானையும், வைகுண்டமென்கிற லோகத்தையும் சொல்லும். ஆனால் இங்கே அவைகள் அந்த 'பதம்' என்ற சொல்லுக்குப் பொருளல்ல. ஏனென்றால், அடுத்த சுலோகத்தில் "பதம்" என்று சொல்லப்பட்டதை "மமதாம" (என்னுடைய ஜ்யோதிஸ்ஸு) என்று சொல்லுவதாலே, பகவானைக்காட்டிலும் வேறென்று ஏற்படுகிறது. பதம் என்கிற சொல் வைகுண்டத்தையும் சொல்லவில்லை. அது இருக்கிறதென்றுமாத்திரம் தெரிந்துகொண்டால் போதும்; தேடவேண்டியதல்ல, தியானம்பண்ணித் தேடவேண்டியது ஜீவாத்மஸ்வரூபம் தான்.

1. இந்த சுலோகத்தில் சொல்லப்பட்ட ஆறுஸங்கதியில் ஒன்றால் ஒன்று வருகிறது. உடம்பே ஆத்மா என்கிற தப்புஎண்ணம் போனால், விஷயங்களில் ஆசைபோகும். ஆசைபோனால், ஆத்மஸ்வரூபத்தை நினைக்கலாம். அது மிகவும் இன்பமாயிருப்பதாலே, அதினுடைய நினைவே விஷயங்களில் ஆசையை ஒழித்துவிடும். சுலோகத்தில் "ஸங்கம், காமம்" என்ற இரண்டு சொற்கள் இருக்கின்றன. இரண்டுக்கும் ஆசையென்றுதான் பொருள். ஆனால் ஸங்கத்தினால் காமமுண்டாகிறது, 2-வது அத்தியாயம் 62-வது சுலோகத்தைப் பார்க்க.

தஸ்ய பாஸகம் ஸூர்யாதீநி ஹி ஜ்யோதீம்ஷி ந ஜ்ஞாநஜ்யோதிஷ: ப்ரகாசகாநி ஜ்ஞாநமேவ ஸர்வஸ்ய ப்ரகாசகம்॥ ||௬||

ஆத்மாவை உள்ளபடி அறிந்தால், இப்போது படுகிற ஸம்ஸார வருத்தம் தீரும். அந்த ஆத்மஸ்வரூபம் என்கிற தேஜஸ்ஸை ஸூர்யன், சந்திரன், அக்கினி—இவைகளைக்கொண்டு 1 காண முடியாது. யோகத்தினால் (தியானத்தினால்) தான் ஆத்மாவைப் பார்க்கவேணும். மற்ற விஷயங்களிலும் வெளிச்சம் வஸ்துக்களைக் காட்டவில்லை. அறிவுதான் காட்டுகிறது கண் அந்த வஸ்துக்களில் பாவுவதற்கு இடைஞ்சலான இருட்டை மாத்திரம் போக்கி உதவுகிறது. யோகத்தை நெடுநாளாய் வந்த கர்மம் தடுக்கிறது. அதைப்பகவானைச் சரணாகதி பண்ணுவதால் ஏற்படுகிற ஒழிவினால் துலைக்கவேணும். எந்த ஆத்மஸ்வரூபத்தை அடைந்தால் மறுபடியும் ஸம்ஸாரத்தை அடையமாட்டார்களோ, அந்தமிகவும்2 உயர்ந்த தேஜஸ்ஸு என்னுடைய—என்னை விட்டுப்பிரியாமல் எப்பொழுதும் என்னுடன் சேர்ந்திருக்கிற—பிரகாரரூபமான 3 ஸொத்து. 4 [ 6 ]

1. ஒருவன் இருட்டில் ஒரு வஸ்துவைப்பார்த்துப் பயப்படுகிறான். அந்தபயம் ஸூரியன் புறப்பட்டாலும், விளக்கைக் கொண்டுபோனாலும், அங்கே இருக்கும் வஸ்துவை உள்ளபடி பார்ப்பதினாலே போய்விடுகிறது. ஆத்மாவைப்பார்ப்பதற்கு அந்தமாதிரி உதவியையும் வெளிச்சத்தால் செய்யமுடியாது.

2. அறிவுள்ள ஆத்மா இல்லாவிட்டால், ஸூரியன் முதலான வெளிச்சங்களால் என்னப்பிரயோஜனம். ஆகையால் ஆத்மாதான் எல்லாவற்றைக் காட்டிலும் உயர்ந்த தேஜஸ்ஸு.

3. என்னுடைய ஸொத்து என்று சொல்லுவதின் கருத்து—முக்தனாகும்போது ஜீவன் எல்லாவிதத்தாலும் பகவானைப்போல் ஆய்விடுகிறானென்று சொல்லுவதால், ஸ்வதந்திரனாக ஆய்விடுவனோ என்கிற ஸந்தேஹம்வேண்டாம். அப்போதும் பகவானுக்குட்பட்ட அவனுடையஸொத்து—என்று. ஒருவனுக்குச் சொத்தான வீடுபோலன்று பகவானுக்கு ஜீவன். ஜீவன் எப்போதும் பகவானுடன் சேர்ந்தே அவனுக்குப் பிரகாரமாகவே இருக்கிறான்.

4. இந்த சுலோகம் ஜீவனைத்தான் சொல்லுகிறது. பகவானைச் சொல்லவில்லை. ஏனென்றால்—(1) இதில் "தத்" (அது) என்கிற

மமைவாம்ஶோ ஜீவலோகே ஜீவபூ₄த: ஸநாதந: |
மந:ஷஷ்டா₂நீந்த்₃ரியாணி ப்ரக்ருதிஸ்தா₂நி கர்ஷதி || ||௭||

அயம் முக்தஸ்வரூபேண ஸநாதநோ மமாம்ஶ: ஸந் கஶ்சித் அநாதி₃கர்மரூபாவித்₃யாவேஷ்டிதோ ஜீவபூ₄தோ ஜீவலோகே வர்த்தமாநோ தே₃வமநுஷ்யாதி₃ப்ரக்ருதிபரிணாமவிஶேஷஶரீரஸ்தா₂நி மந:ஷஷ்டா₂நீந்த்₃ரியாணி கர்ஷதி | கஶ்சிச்ச ப₃ஹுநா காலேந மஹதா புண்யஸ்ய க்ஷயாய: முக்த: ஸ்வேந ரூபேணாவதிஷ்ட₂தே | ஜீவபூ₄தஸ்து ஸங்குசிதஜ்ஞாநோ ஸ்வயம் கர்மாநுரூபப்ரக்ருதிபரிணாமவிஶேஷரூபஶரீரஸ்தா₂நாமிந்த்₃ரியாணாம் மந:ஷஷ்டா₂நாமீஶ்வர:, தாநி கர்மாநுகு₃ணம் இதஸ்தத: கர்ஷதி || ||௭||

அவ—இப்படி எல்லா ஜீவன்களும் பகவானுடைய ஸொத்தாய், அவருடைய அம்சமாயிருந்தால், நித்திய ஸூரிகளைப் போலே எல்லாஜீவன்களும் பரிசுத்தர்களாக ஏன் இருக்கவில்லை என்றால்—கர்மத்துக்கு உட்பட்ட ஜீவனும் பகவானுடைய ஸொத்துத்தான் என்று சொல்லி, இவன் பத்தன், இவன்முக்தன் என்கிற ஏற்பாட்டுக்குக் காரணத்தைச் சொல்லுகிறார்—

கீழ்ச்சொன்னபடி இயற்கையில் ஒருவிதக் குற்றமுமில்லாதவர்களும், எப்பொழுதும் இருப்பவர்களுமான எல்லா ஜீவன்களும் என்னுடைய ஸொத்துத்தான். ஆனால் அவர்களில் சிலர் நெடுநாளாய் வந்த கர்மத்தினால் கட்டுப்பட்டு, அழிவுள்ள லோகங்களில் தேவன், மனிதன் முதலான உடம்புகளை அடைந்து, அறிவும், சக்தியும் மிகவும்குறைந்து, அந்தஉடம்பிலிருக்கும் மனஸ்ஸுடன் சேர்ந்த ஐந்து இந்திரியங்களுக்குமாத்திரம் யஜமானர்களாய், அவைகளைக்கர்மத்துக்குத் தகுந்தபடி அங்குமிங்கும் இழுக்கிறார்

---

சொல் இருக்கிறது. முன்னால் சொன்னதைத்தான் அது காட்டும். முன்னால் "அழிவில்லாதஅந்தவஸ்துவை" என்றுஜீவனைத்தான் சொல்லிற்று. (2) அடுத்த சுலோகத்தில் ஜீவனையே சொல்லப்போகிறது. (3) இந்த 6—வது சுலோகத்திலும் ஸ்வயம்பிரகாசம் என்கிற குணத்தைக்காட்டும் "தாம" (தேஜஸ்ஸு) என்கிற சொல் இருக்கிறது.

கள். அதாவது—அவைகளைக்கொண்டு வேலைசெய்கிறார்கள். சிலர் கீழ்ச்சொன்னபடி என்னைச் சரணமடைந்து, கர்மத்தைப்போக்கி, ஒருவித தொந்தரவுமில்லாமலிருக்கிறார்கள். [7]

ஶரீரம் யதவாப்நோதி யச்சாப்யுத்க்ராமதீஶ்வர: ।
க்ருஹீத்வைதாநி ஸம்யாதி வாயுர்கந்தாநிவாஶயாத் ॥ ௮ ॥

யச்சரீரமவாப்நோதி, யஸ்மாச்சரீராதுத்க்ராமதி, தத்ராய மிந்த்ரியாணாமீஶ்வர: ஸ ஏதாநீந்த்ரியாணி பூதஸூக்ஷ்மைஸ்ஸஹ க்ருஹீத்வா ஸம்யாதி । வாயுர்கந்தாநிவாஶயாத் - யதா வாயு: ஸ்ரக்சந்தநகஸ்தூரிகாத்யாஶயாத் தத்ஸ்தாநாத் ஸூக்ஷ்மாவயவைஸ்ஸஹ கந்தாந் க்ருஹீத்வாऽந்யத்ர ஸம்யாதி, தத்வதித்யர்த்த: ॥ ॥ ௮ ॥

ஜீவன் எந்த உடம்பை அடைகிறானோ, எந்தஉடம்பிலிருந்து இறக்கும் காலத்தில் வெளிக்கிளம்புகிறானோ; அந்தஉடம்பிலிருக்கும் இந்திரியங்களுக்கு யஜமாநனாய், அந்த இந்திரியங்களுடனும், சின்னதான (ஸூக்ஷ்மமான—கண்ணுக்குத்தெரியாத) பூமி முதலான ஐந்துபூதங்களுடனும் சேர்ந்தே யிருக்கிறான். அதாவது—பிறக்கும்போது அவைகளுடன் வருகிறான். இறக்கும்போதும் அவைகளுடனே போகிறான். காற்றானது பூமாலை, சந்தனம், கஸ்தூரிமுதலான வாஸனைத் திரவியங்களின் ஸூக்ஷ்மமான சில பாகங்களை எடுத்துக்கொண்டு போவதுபோல. [8]

அவ— காநி வா தாநீந்த்ரியாணீத்யத்ராஹ—

ஶ்ரோத்ரம் சக்ஷுஸ்ஸ்பர்ஶநம் ச ரஸநம் க்ராணமேவ ச ,
அதிஷ்டாய மநஶ்சாயம் விஷயாநுபஸேவதே ॥ ॥ ௯ ॥

ஸ தாநி மநஷ்ஷஷ்டாநீந்த்ரியாண்யதிஷ்டாய ஸ்வஸ்வவிஷயப்ரவ்ருத்த்யநுகுணாநி க்ருத்வா, தாந் ஶப்தாதீந் விஷயாநுபஸேவதே—உபபுங்க்தே ॥ ॥ ௯ ॥

அவ—எப்போதும் ஜீவனுடன் சேர்ந்திருக்கிற இந்திரியங்கள் எவைகள் என்றால், சொல்லுகிறார்—

காது, கண், த்வக்கு, நாக்கு, மூக்கு, மனது என்கிற ஆறு இந்திரியங்களை அதனதின் வேலைகளைச் செய்யும்படியாகச் செய்து, சப்தம் முதலான விஷயங்களை அநுபவிக்கிறான். [9]

உத்க்ராமந்தம் ஸ்தி²தம் வாபி பு⁴ஞ்ஜாநம் வா கு³ணாந்விதம் |
விமூடா⁴ நாநுபஶ்யந்தி பஶ்யந்தி ஜ்ஞாநசக்ஷுஷ: ||௧௦||

ஏவம் கு³ணாந்விதம் ஸத்த்வாதி³கு³ணமயப்ரக்ருதிபரிணாமவிஶேஷமநுஷ்யத்வாதி³ஸம்ஸ்தா²நபிண்ட³ஸம்ஸ்ருஷ்டம் பிண்ட³விஶேஷாதுத்க்ராமந்தம், பிண்ட³விஶேஷே ஸ்தி²தம் வா கு³ணமயாந், விஷயாந் பு⁴ஞ்ஜாநம் வா கதா³சித³பி ப்ரக்ருதிபரிணாமவிஶேஷமநுஷ்யத்வாதி³ பிண்டா³த்³விலக்ஷணம் ஜ்ஞாநைகாகாரம் விமூடா⁴ நாநுபஶ்யந்தி | விமூடா⁴: மநுஷ்யத்வாதி³பிண்டா³காராத்மாபி⁴மாநிந: | ஜ்ஞாநசக்ஷுஷஸ்து பிண்டா³த்மவிவேகவிஷயஜ்ஞாநா: | ஸர்வாவஸ்த²ஸ்வபி விவிக்தாகாரமேவ பஶ்யந்தி || ||௧௦||

அவ—ஜீவன்களுக்குக் கர்மங்களாகிற விலங்கும், உடம்பாகிற ஜயிலும், அதற்குள் நுழைவதிலும், அதைவிட்டு வெளிக்கிளம்புவதிலும் உள்ள வருத்தமும், அதிலிருக்கும்போது விஷம் கலந்த தேன்போன்ற—மிகவும் இளப்பமான—விஷயங்களை அநுபவிப்பதும் சொல்லப்பட்டன. மேலே ஜயிலுக்குக்காரணம் பகவானுடைய சொத்தாகிய ஆத்மஸ்வரூபத்தைத் திருடினது (அதாவது—தன்னுடைய சொத்தென்று எண்ணுவது) என்றுகாட்டி, ஆத்மஸ்வரூபம் காணப்படாததால், இல்லையென்கிற சங்கையைக்கண்டிக்கிறார்.

மனிதன் முதலான உடம்பையே ஆத்மாவாக எண்ணுகிறவர்கள் (அதாவது—உடம்பு தவிர, ஆத்மாஎன்று ஒன்றிருக்கிறது என்று அறியாதவர்கள்) ஸத்துவம் முதலான மூன்றுகுணங்களுள்ள உடம்புடன் சேர்ந்த ஜீவனை, அந்தஉடம்பிலிருக்கும்போதும், விஷயங்களை அநுபவிக்கும்போதும், அதைவிட்டுக்கிளம்பும்போதும் ஒருக்காலும் உடம்பைக்காட்டிலும் வேறாகவும், அறிவையே இயற்கையாக உடையவனாகவும் நினைக்கிறதில்லை. உடம்புவேறு. ஆத்மா வேறு என்று ஞானக்கண்ணால் அறிந்தவர்கள் எல்லா ஸமயங்களிலும் இவனை வேறாகவே நினைக்கிறார்கள். [10]

யதந்தோ யோகி₃நஶ்சைநம் பஶ்யந்த்யாத்மந்யவஸ்தி₂தம் | யதந்தோऽப்யக்ருதாத்மாநோ நைநம் பஶ்யந்த்யசேதஸ꞉ ||௧௧||

மத்ப்ரபத்திபூர்வகம் கர்மயோகா₃தி₃ஷு யதமாநாஸ்தத ஏவ நிர்மலாந்த꞉கரணா யோகி₃நோ யோகா₃க்₂யேந சக்ஷுஷா ஆத்மநி ஶரீரே அவஸ்தி₂தமபி ஶரீராத்₃விவிக்தம் ஸ்வேந ரூபேணாவஸ்தி₂தமேநம் பஶ்யந்தி | யதமாநா அப்யக்ருதாத்மாநோ மத்ப்ரபத்திவிரஹிணஸ்தத ஏவாஸம்ஸ்க்ருதமநஸ꞉ | அத ஏவாசேதஸ꞉ - ஆத்மாவலோகநஸமர்த₂சேதோரஹிதா꞉ | நைநம் பஶ்யந்தி || ||௧௧||

என்னைச் சரணாகதிபண்ணி, கர்மயோகம் முதலானவைகளைச் செய்கிறவர்கள் அவைகளாலே மனது தெளிந்து, யோகம் (தியானம்) என்கிறகண்ணாலே, உடம்பிலிருந்தாலும், உடம்பைக்காட்டிலும் வேறான ஆத்மஸ்வரூபத்தை அவனுக்கு ஏற்பட்ட நிலைமையோடு இருப்பவனாகப் பார்க்கிறார்கள். என்னைச் சரணாகதிபண்ணாமல், கர்மயோகம் முதலியவைகளை ஆரம்பித்தவர்கள் மனது [1] ஸம்ஸ்காரத்தை (தெளிவையுண்டுபண்ணக்கூடிய வேலையை) அடையாமல், மனது தெளியாமலும், ஆத்மாவைப் பார்க்க சக்தியில்லாமலும் இருப்பதால், ஆத்மாவைப் பார்க்கிறார்களில்லை. [ 11 ]

ஏவம் ப₃த்₃த₄முக்தோப₄யாவஸ்த₂ஸ்ய ஸந்நிக்ருஷ்டவிப்ரக்ருஷ்டவிலக்ஷணஸ்ய சேதநஸ்ய ஸ்வரூபம் ப்ரதிபாத்₃ய ப்ரகாஶகதயா ப்ரகாஶகாநாம் ஜ்யோதிஷாமபி ப்ரகாஶகஜ்ஞாநஜ்யோதிராத்மா ப₄க₃வத꞉ ஸ்வரூபஸ்ய ஸ்வவைப₄வம் ப்ரபஞ்சயதி — “ததே₃வாஸ்ய ஸ்வாம் ஜ்யோதிர்ஜ்யோதிஷாம் ஜ்யோதிஸ்தமஸ꞉ பரஸ்தாத்” இதி | ஶ்ருதிஸித்₃த₄ம் ஸர்வஸ்ய ப்ரகாஶகத்வேந ஜ்யோதிஷாம் ஜ்யோதிரபி ப₄க₃வத₃தீ₄நம் —

யதா₃தி₃த்யக₃தம் தேஜோ ஜக₃த்₃பா₄ஸயதேऽகி₂லம் |
யச்சந்த்₃ரமஸி யச்சாக்₃நௌ தத்தேஜோ வித்₃தி₄ மாமகம் || ||௧௨||

---

1. ஸம்ஸ்காரமில்லாத மனது வேலைக்கு உதவாமையால், இல்லாதது போல.

ஸர்வஸ்ய ஜகதோ பாஸகமாதித்யசந்த்ராக்நிஸ்தம் யத் தேஜ:, தந்மதீயம் தேஜ:। தைஸ்தைராராதிதேந மயா தேப்யோ தத்தமிதி வித்தி ॥ ॥௧௨॥

அ.வ—ஸூரியன், சந்திரன், அக்கினிமுதலான வெளிச்சங்கள் வஸ்துக்களின் பார்வைக்கு இடைஞ்சலான இருட்டைப்போக்கி, இந்திரியங்களுக்கு உதவிசெய்கிறபடியால், ஜ்யோதிஸ்ஸு என்று சொல்லப்படுகின்றன. அவைகள் வஸ்துக்களைக்காட்டுகிறதில்லை. காட்டுகிறது அறிவுள்ளஆத்மாதான். அந்த தேஜஸ்ஸுக்களுக்கும் பிரகாசமான(அவைகளால்பிரயோஜனத்தைஅடைகிறதான)-பத்தன், முக்தன் என்ற இருவகையான—அறிவை வெளிச்சமாக வுடைய—ஆத்மா பகவானுடைய ஸொத்து என்று சொல்லப்பட்டது.(சு—6, 7). இப்போது பிரகிருதியிலிருந்து உண்டாகியிருக்கிற ஸூரியன் முதலானவைகளுடைய தேஜஸ்ஸும் (வெளிச்சமும்) பகவானுடைய ஸொத்து (பகவானால் கொடுக்கப்பட்டது) என்று சொல்லுகிறார்—

எல்லாலோகங்களையும் காட்டுகிற ஸூரியன் முதலானவைகளுடைய தேஜஸ்ஸு என்னுடையது. என்னை அவர்கள் சிலசேவைகளால் ஸந்தோஷப்படுத்தினபடியால் 1 என்னுடைய தேஜஸ்ஸை அவர்களுக்குக் கொடுத்திருக்கிறேன்—என்றுநினை. [ 12 ]

௧௩.—வ்யாப்திவ்யாஜேந பூததாரிண்யா தாரகத்வமுக்தி தீயேத்யாஹ—

காமாவிஶ்ய ச பூதாநி தாரயாம்யஹமோஜஸா । புஷ்ணாமி சௌஷதீ: ஸர்வா: ஸோமோ பூத்வா ரஸாத்மக: ॥

---

1. எல்லாம் இயற்கையில் பகவானுடையஸொத்து. கர்மங்களால் பகவானை ஸந்தோஷப்படுத்தினவர்களுக்கு அவர் கொஞ்சகாலம் அவைகளைக் கொடுத்துவைக்கிறார். ஆகையால் ஸூரியன் முதலானவைகளிடமிருக்கும் வெளிச்சம்பகவானதுதான்என்று இங்கேசொல்லிற்று.சிலர் சொல்லுகிறார்கள்—ஸூரியன் தேஜஸ்ஸு என்னுடையது என்று சொல்லியிருக்கிறது.ஸூரியனுடையது என்னுடையதாகஎன்னமாகஆகும். ஆனகயால்ஸூரியனும், நானும் ஒன்று என்று சொல்லப்படுகிறது—என்று. அதுபிசகு. ஏனென்றால், ஸூரியனிடத்திலிருப்பது என்று சொல்லியிருக்கிறதேயொழிய, ஸூரியனுடையது என்று சொல்லவில்லை,

அஹம் ப்ருதிவீமாவிஶ்ய, ஸர்வாணி பூதாநி அப்ரதிஹதஸா-
மர்த்யேந ஓஜஸா தாரயாமி ॥ ததா அஹம் அம்ருதரஸ-
மய: ஸோமோ பூத்வா ஸர்வா ஓஷதீ: புஷ்ணாமி ॥ ||௧௩||

அ—எல்லாவஸ்துக்களையும் பூமி தூக்குகிறது. பூமியினுடைய அநதசக்தி என்னுடையது என்று சொல்லுகிறார்—

நான் பூமிக்குள்ளே நுழைந்து, ஒருவராலும் தடுக்கமுடியாத என்னுடைய சக்தியினாலே எல்லாப் பிராணிகளையும் 1 தூக்குகிறேன். 2 அமிருதரஸமான சந்திரனாக ஆகி, எல்லாமரம் செடிகளையும் வளர்க்கிறேன் (காப்பாற்றுகிறேன்.) [13]

அஹம் வைஶ்வாநரோ பூத்வா ப்ராணிநாம் தேஹமாஶ்ரித: |
ப்ராணாபாநஸமாயுக்த: பசாம்யந்நம் சதுர்விதம் ||௧௪||

அஹம் வைஶ்வாநர: ஜாடராநலோ பூத்வா ப்ராணிநாம் தேஹமாஶ்ரித:, தைர்புக்தம் பக்ஷ்யபோஜ்யலேஹ்யசோஷ்யாத்மகம் சதுர்விதமந்நம் ப்ராணாபாநவ்ருத்தி ஸமாயுக்த: பசாமி ॥ ||௧௪||

---

1. உலகத்தில் ஒரு விசுப்பலகையில் ஒரு வஸ்துவை வைத்தால், அந்தப்பலகையின் சேர்க்கை அந்தவஸ்து கீழே விழுவதைத்தடுக்கிறது. அதனால் அந்தப்பலகை அந்தவஸ்துவைத் தூக்குகிறதென்று சொல்லுகிறது. ஒருமனிதன் உள்ளே போவதை ஒருசுவர் தடுக்கிறது. ஏனென்றால், அந்த சுவருக்குள் அவனால் நுழையமுடியவில்லை. ஒருஉள்ளில் பெரியநெருப்பு எரியும்போது, கதவுதிறந்திருந்தாலும், அந்த நெருப்பின் கானல் நுழையமுடியாமல் தடுக்கிறது. அந்த கானல் சுவர்போலல்ல. ஆனாலும் தடுப்பதில் சுவரில்காட்டிலும் அதிகம். பகவான் பலகைபோலும், சுவர்போலுமல்ல, நினைவினால் தூக்குகிறார். நெருப்பு தனசக்தியினால் தடுப்பதுபோல. எவ்வளவு பெரிதாக இருந்தாலும், இதுகீழே விழவேண்டாமென்று அவர் நினைத்தால், அதுவிழுவதில்லை. ஸூரியன் கீழே விழாமலிருப்பது பகவானுடைய நினைவினால்தான்.

2. பகலில் கடும்வெய்யிலினால் தபித்தமரங்கள் சந்திரனுடைய நிலவினால் குளிர்ச்சியை அடைகின்றன. சந்திரன் என்பது அனலில்லாமல் குளிர்ந்த தண்ணீர்போன்றது. பிணத்தின்பேரில் அமிருதம் என்பதைத் தடவினால், அதின்சக்தியினால் மறுபடியும்உயிர்வருமாம். அந்த சக்தியுள்ளதை அமிருதம் என்றுசொல்லுகிறார்கள்.

[illegible] ‖கரு‖

அவ—இந்த இடத்தில் பகவானுடைய சொத்தான சந்திரனும், அக்னியும் பகவானாகவே சொல்லப்பட்டன. இவைகளும், இன்னும் உலகத்திலிருக்கும் எல்லாவஸ்துக்களும் பகவானுக்கு ஸொத்தாகையால், அவரைக்காட்டிலும் வேறாக இருந்தாலும், அவைகள் பகவான் என்றே வேதம்சொல்லுகிறது. அதற்குக் காரணத்தைச் சொல்லுகிறார்—

அந்தச் சந்திரனும், அக்கினியும், இன்னும் எல்லாப்பிராணிகளும் ஒருகாரியத்தைச் செய்வதோ, செய்யாமலிருப்பதோ, அவைகளுக்குக் காரணமான அறிவு உண்டாவதற்கு இடமான அவர்களுடைய ஹிருதயத்தில், எல்லாவற்றையும் என்னுடைய நினைவினால்ஏவிக்கொண்டு, ஆத்மாவாகஇருக்கிறேன். ஆகையால்எல்லா ஆத்மாக்களுக்கும் நினைவும், அறிவும், மறதியும் (அல்லது ஊஹிப்பதும்)—எல்லாம் என்னால்தான் உண்டாகின்றன. அக்னி, ஸூரியன், வாயு, ஸோமன், இந்திரன்முதலான வேதத்திலிருக்கும்

எல்லாச் சொற்களும் அக்கினி, ஸூரியன் முதலானவர்களைச் சொன்னபோதிலும், அவர்களுக்கு ஆத்மாவான என்னைத்தான் சொல்லுகின்றன. உடம்பைச்சொல்லும்—பெருத்தவன் என்கிற—சொல் அதிலிருக்கும் ஆத்மாவைச்சொல்லுவதுபோல. வேதத்தில் சொல்லப்பட்ட யாகம் முதலான கர்மங்களுக்கு பலன்களைக் கொடுப்பவனும் நானே. எல்லாவேதங்களும் என்னைத்தான் சொல்லுகின்றன என்கிறஸங்கதி எனக்குத்தான் தெரியும். இப்படியல்லாமல் வேறாக அறிந்தவன் வேதத்தை உள்ளபடி அறிந்தவனில்லை.

நினைவாவது—(ஸ்ம்ருதி:) கண் முதலான இந்திரியங்களால் ஒருவன் ஒரு வஸ்துவை அறிந்து, கொஞ்சகாலம் ஆனபிறகு, அதை மறந்துபோகிறான். பிறகு ஒரு ஸமயத்தில் சில வஸ்துக்களைப் பார்க்கும்போது, முன் மறந்துபோன வஸ்துவின் நினைவுவருகிறது. அதைத்தான் ஸ்ம்ருதிஎன்று சொல்லுகிறது. அந்தநினைவு எப்படி வருகிறது என்றால்—முன்னே உண்டான பார்வையால் ஆத்மாவில் ஸம்ஸ்காரம் என்று ஒன்று உண்டாகிறது. இப்போது உண்டாகிற ஒரு பார்வை முதலானதால், அந்த ஸம்ஸ்காரம் கிளம்பி, நினைவுஉண்டாகிறது. உதாரணம்—ஒருஸமயத்தில் ஒருவன் ஒருயானையையும் யானைக்காரனையும் பார்த்தான். பார்த்து ஒரு வருஷமாயிற்று. பிறகு யானைக்காரனைமட்டும் பார்த்தான், உடனே அந்த யானையின் நினைவுவருகிறது. யானையைப்பற்றின நினைவு ஸம்ஸ்காரத்தினால்தான் உண்டாகிறது. கண் முதலானதினால் இல்லை. அறிவு (ஞானம்) என்பது கண்முதலான இந்திரியங்களாலும், ஹேதுக்களாலும் (அதாவது—ஒரு இடத்தில் புகையைப் பார்த்து அதில் நெருப்பு இருக்கிறதென்று அறிவது), சொல்லுகளாலும், யோகத்தினாலும் வஸ்துக்களை அறிவது. ஊஹிப்பதாவது—யாகம் சுவர்க்கத்தைக் கொடுக்கிறதென்று ஒரு பிரமாணம் இருக்கிறது. பண்ணின உடனே போகிற யாகம் என்கிற வேலை வெகுநாள் கழித்துவரும் ஸ்வர்க்கத்தை எப்படிக் கொடுக்கும் என்றால்—யாகம் என்பது ஒரு தேவதைக்கு ஒரு பதார்த்தத்தைக் கொடுப்பது. அதனால் ஸந்தோஷமடைந்த நிலையான அந்த தேவதை சுவர்க்கத்தைக் கொடுக்கிறது. உலகத்தில் ஒருவனுக்குஒருவன் அன்போடு சிலபண்டங்களைக் கொடுத்தால்,

வாங்கி ஸந்தோஷத்தை அடைந்தவன் கொடுத்தவனுக்கு வேண்டியவைகளைக்கொடுப்பதுபோல. ஆகையால் யாகத்தால் ஸ்வர்க்கமுண்டாகும் என்கிற பிரமாணம் ஸரிதான், தப்பு அன்று என்றுகண்டு பிடிப்பது ஊஹம். பிரமாணங்களின் கருத்தைக் கண்டு பிடிப்பதற்கு உதவியான சில யுக்திகளால் உண்டாகிற அறிவை ஊஹம் என்று சொல்லுகிறது. [15]

𑌅𑌵 — 𑌅𑌵𑍇𑌦𑌾 𑌉𑌕𑍍𑌤𑌵𑍇𑌦 𑌸𑌰𑍍𑌵𑌵𑍇𑌦𑌾𑌨𑌾𑌂 𑌸𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑌂 𑌸𑌂𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌤𑌿 —

𑌦𑍍𑌵𑌾𑌵𑌿𑌮𑍌 𑌪𑍁𑌰𑍁𑌷𑍌 𑌲𑍋𑌕𑍇 𑌕𑍍𑌷𑌰𑌶𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑌰 𑌏𑌵 𑌚 ।
𑌕𑍍𑌷𑌰𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌕𑍂𑌟𑌸𑍍𑌥𑍋𑌽𑌕𑍍𑌷𑌰 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

𑌕𑍍𑌷𑌰𑌶𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑌰𑌶𑍍𑌚𑍇𑌤𑌿 𑌦𑍍𑌵𑌾𑌵𑌿𑌮𑍌 𑌪𑍁𑌰𑍁𑌷𑍌 𑌲𑍋𑌕𑍇 𑌪𑍍𑌰𑌥𑌿𑌤𑍌 । 𑌤𑌤𑍍𑌰 𑌕𑍍𑌷𑌰𑌶𑌬𑍍𑌦𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌜𑍀𑌵𑌶𑌬𑍍𑌦𑌾𑌭𑌿𑌲𑌪𑌨𑍀𑌯𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑌿𑌸𑍍𑌤𑌮𑍍𑌬𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌕𑍍𑌷𑌰𑌣𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌾𑌚𑍇𑌤𑌨𑌸𑌂𑌸𑍃𑌷𑍍𑌟𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 । 𑌅𑌤𑍍𑌰𑌾𑌚𑍇𑌤𑌨𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌰𑍂𑌪𑍈𑌕𑍋𑌪𑌾𑌧𑌿𑌨𑌾 𑌪𑍁𑌰𑍁𑌷 𑌇𑌤𑍍𑌯𑍇𑌕𑌤𑍍𑌵𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑌃 । 𑌅𑌕𑍍𑌷𑌰𑌶𑌬𑍍𑌦𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑌃 𑌕𑍂𑌟𑌸𑍍𑌥𑌃 𑌅𑌚𑍇𑌤𑌨𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌵𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌸𑍍𑌵𑍇𑌨 𑌰𑍂𑌪𑍇𑌣𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 । 𑌸 𑌅𑌚𑍇𑌤𑌨𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌾𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 𑌅𑌚𑍇𑌤𑌨𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌵𑌿𑌶𑍇𑌷𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑌿𑌦𑍇𑌹𑌾𑌸𑌾𑌧𑌾𑌰𑌣𑍋 𑌨 𑌭𑌵𑌤𑍀𑌤𑌿 𑌕𑍂𑌟𑌸𑍍𑌥 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌤𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑍇𑌕𑌤𑍍𑌵𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶 𑌏𑌕𑍋𑌪𑌾𑌧𑌿𑌨𑌾 । 𑌨 𑌹𑍀𑌤𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑌨𑌾𑌦𑍌 𑌕𑌾𑌲𑍇 𑌮𑍁𑌕𑍍𑌤 𑌏𑌕 𑌏𑌵 । 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌂 '𑌬𑌹𑌵𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑌪𑌸𑌾 𑌪𑍂𑌤𑌾 𑌮𑌦𑍍𑌭𑌾𑌵𑌮𑌾𑌗𑌤𑌾𑌃' 𑌸𑌰𑍍𑌗𑍇𑌽𑌪𑌿 𑌨𑍋𑌪𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 𑌪𑍍𑌰𑌲𑌯𑍇 𑌨 𑌵𑍍𑌯𑌥𑌨𑍍𑌤𑌿 𑌚𑍇𑌤𑌿 ॥ ॥௧௬॥

அவ—நான் எல்லா வேதங்களுடைய உண்மையான அர்த்தங்களை அறிந்தபடியாலே, அவைகளுக்குள் முக்கியமான பொருளைச் சொல்லுகிறேன். கேள்.

க்ஷரன் (பத்தன்), அக்ஷரன் (முக்தன்) என்று இரண்டு புருஷர்கள் இருக்கிறார்கள்—என்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறதென்று எல்லாருக்கும் தெரியும். அவர்களில் க்ஷரன் என்

பவர்கள்—பிறப்பும், இறப்பும் உள்ளவர்களாய்—நான்முகமுள்ள பிரும்மாமுதல் பச்சைப்புல், அல்லது புழுவரையிலுள்ள—எப்போதும் மாறிக்கொண்டிருக்கும் பிரகிருதியோடு சேர்ந்த—எல்லா ஜீவன்கள். அக்ஷரன் என்பவர்கள் பிரகிருதியின் சேர்க்கை நீங்கி, தன் நிலைமையோடிருக்கிற முக்தர்கள். அவர்களுக்குக் கர்மத்தினால் கொஞ்சகாலம் ஒரு உடம்பில் கட்டாயம் இருக்கவேண்டியதில்லாமையால், அவர்களைக்கூடஸ்தன் (பொது) என்று சொல்லுகிறது. [16]

உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத: |
யோ லோகத்ரயமாவிஶ்ய பிபர்த்யவ்யய ஈஶ்வர: ||௧௭||

உத்தம:புருஷஸ்து அந்ய: க்ஷராக்ஷரஶப்தநிர்திஷ்டாப்யாம் பத்தமுக்தபுருஷாப்யாமர்த்தாந்தரபூத:| பரமாத்மேத்யுதாஹ்ருத: ஸர்வாஸு ஶ்ருதிஷு| பரமாத்மேதி நிர்தேஶாதேவ ஹ்யுத்தம: புருஷோ பத்தமுக்தபுருஷாப்யாமர்த்தாந்தரபூத இத்யவகம்யதே| கதம்? யோ லோகத்ரயமாவிஶ்ய பிபர்த்தி- லோக்யத இதி லோக:, தத்த்ரயம் லோகத்ரயம், அசேதநம் தத்ஸம்ஸ்ருஷ்டஶ்சேதநோ முக்தஶ்சேதி ப்ரமாணாவகம்யமேதத்த்ரயம் ய ஆத்மதயா ஆவிஶ்ய பிபர்த்தி| ஸ தஸ்மாத்வ்யாப்யாத் பர்த்தவ்யாச்சார்த்தாந்தரபூத:| இதஶ்சோக்தலோகத்ரயாதர்த்தாந்தரபூத:; யதோऽவ்யய ஈஶ்வரஶ்ச| அவ்யயஸ்வபாவோ ஹி வ்யயஸ்வபாவாதசேதநாத் தத்ஸம்பந்தாத் ததநுஸாரிணஶ்சேதநாத்தத்ஸம்பந்தயோக்யதயா வ்யயஸ்வ ஸம்பந்திநோ முக்தாச்சார்த்தாந்தரமேவ| ததைதஸ்ய லோகத்ரயஸ்யேஶ்வரஶ்சேஶிதவ்யாதஸ்மாதர்த்தாந்தரபூத:||

உத்தம (உயர்ந்த) புருஷன் என்பவன் மேற்சொன்ன இரண்டு வகுப்பார்களைக் காட்டிலும் வேறு ஜாதிக்காரர். அவர் பரமாத்மா (மிகவும் உயர்ந்த ஆத்மா) என்று எல்லா வேதங்களிலும் சொல்லப்படுகிறார். ஏனென்றால்—அறிவில்லாத பிரகிருதி, அதோடு சேர்ந்த ஜீவன் (பத்தன்), முக்தன் என்று பிரமாணங்களாலே அறியக்கூடிய இந்த மூன்றிலும் ஆத்மாவாய் நுழைந்து,

தாங்குகிறபடியால், நுழையப்பட்டு தாங்கப்படுவதைக் காட்டிலும் அவர் வேறு. வேறு காரணமும் உண்டு. உடம்பு முதலான அறிவில்லாத வஸ்து உண்டாகிறது; அழிகிறது; அதுடன் சேர்ந்த ஜீவன் (பத்தன்)பிறப்பு, இறப்பு முதலான பல தொந்தரவுகளை அநுபவிக்கிறான். முக்தன் இவைகளை முன்னே அநுபவித்தான். பகவான் இவைகள் ஒன்றுமில்லாதவரும், இவைகளைப் போக்குகிறவரும் ஆயிருக்கிறார். ஆகையால்அவைகளைக்காட்டிலும்வேறு. மேலும், பகவான் அவைகளை ஆளுகிறார். அவைகள் ஆளப்படுமவைகள். ஆகையாலும் அவைகளைக்காட்டிலும் வேறுஜாதி. [17]

யஸ்மாத் க்ஷரமதீதோ(அ)ஹமக்ஷராதபி சோத்தம: | அதோ(அ)ஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: ||

யஸ்மாதேவமுக்தலக்ஷணம் க்ஷரம் புருஷமதீதோ(அ)ஹம் அக்ஷராந்முக்தாதபி உத்தமத்வாத் புருஷோத்தம:; அதோ(அ)ஹம் லோகே வேதே ச புருஷோத்தம இதி ப்ரதிதோ(அ)ஸ்மி — வேதார்தாவலோகநாத் லோக இதி ஸ்ம்ருதிரிஹ லோக உச்யதே, ஸ்ருதௌ ஸ்ம்ருதௌ சேத்யர்த: | ஸ்ருதௌ தாவத் — ‘பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே ஸ உத்தம: புருஷ:’ இத்யாதௌ | ஸ்ம்ருதாவபி ‘‘அம்ஸாவதாரம் புருஷோத்தமஸ்ய ஹ்யநாதிமத்யாந்தமஜஸ்ய விஷ்ணோ:’’ இத்யாதௌ || ||கஅ||

அ—இப்படி பகவான் மற்ற எல்லாவற்றைக் காட்டிலும் வேறுஜாதி என்பது பரமாத்மா என்கிற பெயரினால் தீர்மானிக்கப்பட்டது. அதுவே அநேகமாதிரியான இன்னொரு பெயரினால் உறுதிப்படுத்தப்படுகிறது—

கீழ்ச்சொன்ன காரணங்களால் க்ஷரன், அக்ஷரன் என்கிற இருவகையாரைக்காட்டிலும்நான் 1 மேலாகஇருப்பதாலும் (அதா

1. முக்தன் பத்தனைக்காட்டிலுமுயர்ந்தவன். அவனைக்காட்டிலும் பகவான் உயர்ந்தவர். ஆகையால் மிகவும் உயர்ந்தவர்.

வது—அவர்களுடைய குற்றங்கள் ஒன்றும் ஒருகாலத்திலும் என்னிடத்தில் இல்லாமையாமதும்), வேதத்திலும், ஸ்ம்ருதியிலும் என்னைப் புருஷோத்தமன் (மிகவும் உயர்ந்தபுருஷன்) என்று சொல்லியிருக்கிறது. [18]

𑌯𑍋 𑌮𑌾𑌮𑍇𑌵𑌮𑌸𑌂𑌮𑍂𑌢𑍋 𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌮𑍍।
𑌸 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌭𑌜𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑌾𑌵𑍇𑌨 𑌭𑌾𑌰𑌤 ॥ ॥௧௯॥

𑌯𑌃 𑌏𑌵𑌮𑍍 𑌉𑌕𑍍𑌤𑍇𑌨 𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍇𑌣 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌂 𑌮𑌾𑌮𑌸𑌂𑌮𑍂𑌢𑍋 𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌕𑍍𑌷𑌰𑌾𑌕𑍍𑌷𑌰𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌵𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌤𑌯𑌾 𑌵𑍍𑌯𑌾𑌪𑌨𑌭𑌰𑌣𑌸𑍍𑌵𑌾𑌮𑍍𑌯𑌾𑌦𑌿𑌭𑌿𑌶𑍍𑌚 𑌵𑌿𑌜𑌾𑌤𑍀𑌯𑌂 𑌜𑌾𑌨𑌾𑌤𑌿। 𑌸 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌤𑍍—𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌯𑌤𑌯𑌾 𑌯𑌦𑍍𑌵𑍇𑌦𑌿𑌤𑌵𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌵𑍇𑌦। 𑌭𑌜𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑌾𑌵𑍇𑌨—𑌯𑍇 𑌚 𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌯𑌤𑌯𑌾 𑌮𑌦𑍍𑌭𑌜𑌨𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌾 𑌨𑌿𑌖𑌿𑌲𑌵𑍇𑌦𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌸𑍍𑌤𑍈𑌃 𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑍍𑌭𑌜𑌨𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍈𑌰𑍍𑌮𑌾𑌂 𑌭𑌜𑌤𑍇। 𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑍍𑌮𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑍈𑌰𑍍𑌵𑍇𑌦𑌨𑍈𑌰𑍍𑌮𑌮 𑌯𑌾 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌃, 𑌯𑌾 𑌚 𑌮𑌮 𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑍍𑌮𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑍈𑌰𑍍𑌭𑌜𑌨𑍈𑌃, 𑌉𑌭𑌯𑌵𑌿𑌧𑌾 𑌸𑌾 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌰𑌨𑍇𑌨 𑌵𑍇𑌦𑌨𑍇𑌨 𑌮𑌮 𑌜𑌾𑌯𑌤𑍇॥ ॥௧௯॥

இப்படி புருஷோத்தமன் என்கிறசொல்லுக்குப் பொருள் சொன்னது—பகவானை அப்படியே நினைக்க வேண்டுமென்பதற்காக என்று காட்டிக்கொண்டு, பகவான்புருஷோத்தமன் (மிகவும் உயர்ந்தபுருஷன்) என்கிற அறிவை ஸ்தோத்திரம் பண்ணுகிறார்—

கீழ்ச்சொன்ன காரணங்களாலே (அதாவது—ஸ்வபாவத்தில் மாறுதலில்லாமை, எல்லாவற்றிலும் நிறைந்து, அவைகளைத்தாங்கி ஏவுகை—இவைமுதலானவைகளாலே) புருஷோத்தமனான என்னை எவன் மயங்காமல், உள்ளபடி க்ஷரன், அக்ஷரன் என்றவர்களைக்காட்டிலும் வேறுஜாதியென்று அறிகிறானோ; அவன் என்னை அடைவதற்காக அறியவேண்டிய எல்லா ஸங்கதிகளையும் அறிந்தவன். என்னை அடையவேண்டியதற்காக என்னைத்தியானம்செய்யவேண்டிய எல்லாவிதத்தாலும் என்னைத்தியானம் செய்கிறான். அதாவது—என்னைப்பற்றின எல்லாஅறிவுகளாலும், அதற்குத் தகுந்த எல்லா வேலைகளாலும் நான் என்னஸந்தோஷத்தை அடைவேனோ, அதை இந்தநினைவாலேயே அடைகிறேன். விதங்களாவன—என்னை நினைப்

பது, என்பெயர்களைச் சொல்லுவது, என்வேலைகளைச் செய்வது, என்னை வணங்குவது முதலானவைகள். [19]

மூ—𑌇𑌤𑌿 𑌗𑍁𑌹𑍍𑌯𑌤𑌮𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑌿𑌦𑌮𑍁𑌕𑍍𑌤𑌂 𑌮𑌯𑌾𑌨𑌘 । 𑌏𑌤𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌨𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌕𑍃𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑌶𑍍𑌚 𑌭𑌾𑌰𑌤 ॥ ॥௨௦॥

𑌓𑌂 𑌤𑌤𑍍𑌸𑌤𑍍 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍂𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌮 𑌪𑌞𑍍𑌚𑌦𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

[illegible] ॥௨௦॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌵𑌿𑌰𑌚𑌿𑌤𑍇 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌭𑌾𑌷𑍍𑌯𑍇 𑌪𑌞𑍍𑌚𑌦𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ।

---

அவ—இப்படி பகவான் புருஷோத்தமன் என்று அறிவதைக் கொண்டாடுகிறார்—

கீழ்ச்சொன்ன காரணங்களாலே நான் மிகவும் உயர்ந்த புருஷன் என்பது சாஸ்திரத்திலுல் சொல்லப்பட்ட ஸங்கதிகளுக்குள் மிகவும் உயர்ந்தாஹஸ்யம். அதாவது—ஒருவராலும் அறியமுடியாதது. ஒருவர் தெரிந்து சொன்னாலும் மனதில்படாது. அதை நீ குற்றமில்லாதவனுகையாலே, மிகவும் தகுந்தவன் என்று நினைத்து, உனக்குச் சொன்னேன். இது உன் மனதில்பட்டால், என்னை

அடைவதற்கு உதவியான எல்லா அறிவும் வந்துவிட்டதுபோல். என்னை அடைவதற்காகச் செய்யவேண்டிய எல்லா வேலைகளையும் செய்ததுபோல. இங்கே சாஸ்திரத்தினால் ஏற்படுகிற—பகவான் உயர்ந்த புருஷன் என்கிற—நிலைமையைச் சொல்லிற்று ஞானங்களால் ஏற்படும் அவருடைய பார்வையைச் சொல்லவில்லை. 1 [20]

---

1. ஒருவன் இந்த ஸங்கதியை அறிந்தால்தான், மற்ற அறியவேண்டிய எல்லா ஸங்கதிகளையும் அறிவன்; செய்யவேண்டிய எல்லா வேலைகளையும் செய்வன், அவைகளுக்கு இதுதான் வேர். ஆகையால் இதின் அறிவதையே மற்ற எல்லாவற்றின் அறிவாகவும், எல்லா வேலைகளாகவும் கொண்டாடினார். இதனால் மற்ற அறிவுகளையும், மற்ற வேலைகளையும் வேண்டாமென்று சொல்லக்கூடாது. அவைகள் கட்டாயம்வேணும்.

ஸ்ரீமதே பகவதே பாஷ்யகாராய மஹாதேசிகாய நம:

## 𑌷𑌷𑍍𑌠𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃

𑌅𑌥-𑌅𑌤𑍀𑌤𑍇𑌨𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌤𑍍𑌰𑌯𑍇𑌣 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌪𑍁𑌰𑍁𑌷𑌯𑍋𑌰𑍍𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌯𑍋𑌃 𑌸𑌂𑌸𑍃𑌷𑍍𑌟𑌯𑍋𑌶𑍍𑌚 𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌵𑌿𑌯𑍋𑌗𑌯𑍋𑌶𑍍𑌚 𑌗𑍁𑌣𑌸𑌙𑍍𑌗𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑍍𑌯𑌯𑌹𑍇𑌤𑍁𑌕𑌤𑍍𑌵𑌂, 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍇𑌣𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌯𑍋𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌪𑍁𑌰𑍁𑌷𑌯𑍋𑌰𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌤𑍍𑌵𑌂, 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌮𑌤𑍋 𑌭𑌗𑌵𑌤𑍋 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌭𑍂𑌤𑌾𑌦𑌚𑌿𑌦𑍍𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌶𑍍𑌚𑌿𑌦𑍍𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌶𑍍𑌚 𑌬𑌦𑍍𑌧𑌮𑍁𑌕𑍍𑌤𑍋𑌭𑌯𑌰𑍂𑌪𑌾𑌦𑌵𑍍𑌯𑌯𑌤𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑌨𑌭𑌰𑌣𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌤𑍍𑌵𑍈𑌰𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌤𑌰𑌤𑌯𑌾 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌤𑍍𑌵𑍇𑌨 𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌂 𑌚 𑌵𑌰𑍍𑌣𑌿𑌤𑌮𑍍 । 𑌅𑌨𑌨𑍍𑌤𑌰𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌸𑍍𑌥𑍇𑌮𑍍𑌨𑍇 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌶𑍍𑌯𑌤𑌾𑌂 𑌵𑌕𑍍𑌤𑍁𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌶𑍍𑌯𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌯𑍋𑌰𑍍𑌦𑍇𑌵𑌾𑌸𑍁𑌰𑌸𑌰𑍍𑌗𑌯𑍋𑌰𑍍𑌵𑌿𑌭𑌾𑌗𑌂 𑌵𑌦𑌤𑌿—

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚—

𑌅𑌭𑌯𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 ।
𑌦𑌾𑌨𑌂 𑌦𑌮𑌶𑍍𑌚 𑌯𑌜𑍍𑌞𑌶𑍍𑌚 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌸𑍍𑌤𑌪 𑌆𑌰𑍍𑌜𑌵𑌮𑍍 ॥ ॥௧॥
𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 𑌸𑌤𑍍𑌯𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌸𑍍𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌪𑍈𑌶𑍁𑌨𑌮𑍍 ।
𑌦𑌯𑌾 𑌭𑍂𑌤𑍇𑌷𑍍𑌵𑌲𑍋𑌲𑍁𑌪𑍍𑌤𑍍𑌵𑌂 𑌮𑌾𑌰𑍍𑌦𑌵𑌂 𑌹𑍍𑌰𑍀𑌰𑌚𑌾𑌪𑌲𑌮𑍍 ॥௨॥
𑌤𑍇𑌜𑌃 𑌕𑍍𑌷𑌮𑌾 𑌧𑍃𑌤𑌿𑌃 𑌶𑍌𑌚𑌮𑌦𑍍𑌰𑍋𑌹𑍋 𑌨𑌾𑌤𑌿𑌮𑌾𑌨𑌿𑌤𑌾 ।
𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌸𑌂𑌪𑌦𑌂 𑌦𑍈𑌵𑍀𑌮𑌭𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌰𑌤 ॥ ॥௩॥

𑌇𑌷𑍍𑌟𑌾𑌨𑌿𑌷𑍍𑌟𑌵𑌿𑌯𑍋𑌗𑌸𑌂𑌯𑍋𑌗𑌰𑍂𑌪𑌸𑍍𑌯 𑌦𑍁𑌃𑌖𑌸𑍍𑌯 𑌹𑍇𑌤𑍁𑌦𑌰𑍍𑌶𑌨𑌜𑌂 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌭𑌯𑌂, 𑌤𑌨𑍍𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑌭𑌯𑌂 । 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌃-𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌸𑍍𑌯 𑌰𑌜𑌸𑍍𑌤𑌮𑍋𑌭𑍍𑌯𑌾𑌮𑌸𑍍𑌪𑍃𑌷𑍍𑌟𑌤𑍍𑌵𑌮𑍍 । 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃-𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌵𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌵𑌿𑌵𑍇𑌕𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 । 𑌦𑌾𑌨𑌂-𑌨𑍍𑌯𑌾𑌯𑌾𑌰𑍍𑌜𑌿𑌤𑌧𑌨𑌸𑍍𑌯 𑌸𑌤𑍍𑌪𑌾𑌤𑍍𑌰𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌨𑌮𑍍 । 𑌦𑌮𑌃-𑌮𑌨𑌸𑍋 𑌵𑌿𑌷𑌯𑍇𑌭𑍍𑌯𑍋 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑌸𑌂𑌶𑍀𑌲𑌨𑌮𑍍 । 𑌯𑌜𑍍𑌞𑌃-𑌫𑌲𑌾𑌭𑌿𑌸𑌨𑍍𑌧𑌿𑌰𑌹𑌿𑌤𑌭𑌗𑌵𑌦𑌾𑌰𑌾𑌧𑌨𑌰𑍂𑌪𑌮𑌹𑌾𑌯𑌜𑍍𑌞𑌾𑌦𑍍𑌯𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌮𑍍 । 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌃-𑌸𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌕𑌭𑌗𑌵𑌤𑍍𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌤𑌦𑌾𑌰𑌾𑌧𑌨𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌕𑌃 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑍋 𑌵𑍇𑌦 𑌇𑌤𑍍𑌯𑌨𑍁𑌸𑌨𑍍𑌧𑌾𑌯 𑌵𑍇𑌦𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 । 𑌤𑌪𑌃-𑌕𑍃𑌚𑍍𑌛𑍍𑌰𑌚𑌾𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌯𑌣𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑍍𑌯𑍁𑌪𑌵𑌾𑌸𑌾𑌦𑍇𑌰𑍍𑌭𑌗𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑍀𑌣𑌨𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑌾𑌪𑌾𑌦𑌨𑌸𑍍𑌯 𑌕𑌰𑌣𑌮𑍍 । 𑌆𑌰𑍍𑌜𑌵𑌮𑍍-

[illegible] ‖ ௧ ‖

அவ—நடந்த மூன்று அத்தியாயங்களிலே-பிரிந்தும், சேர்ந்துமிருக்கிற பிரகிருதி-ஜீவன்களுடைய உண்மையும், அந்த சேர்க்கை ஸத்துவம் முதலான குணங்களாலே உண்டாகிற ஸங்கங்களில் ஆசையினால் உண்டாகிறது என்பதும், ஆசை போனால் அது போய்விடுமென்பதும், சேர்ந்தாலும், பிரிந்தாலும் அவையிரண்டும் பகவானுடைய ஸொத்தென்பதும், பகவான் தன்னுடைய ஸொத்தான அறிவில்லாத வஸ்துவைக்காட்டிலும், பக்தன் முக்

தன் என்று இருவகையான அறிவுள்ள வஸ்துக்களைக் காட்டிலும் ஒருவிதமான மாறுபாடில்லாததினாலும், அவைகளில் நுழைந்திருப்பதாலும், அவைகளைத் தாங்குவதாலும், அவைகளுக்கு யஜமானனாக இருப்பதாலும் வேறு வஸ்துவாகையால், மிகவும் உயர்ந்த புருஷன் என்கிற பகவானுடைய உண்மையும் சொல்லப்பட்டன. இப்போது சாஸ்திரத்திற்கு உட்பட்டவன்தான் கீழ்ச் சொன்ன எல்லா ஸங்கதிகளையும் நம்புவன் என்று காண்பிப்பதற்காக, சாஸ்திரத்திற்கு உட்பட்டவன் தெய்வப்பிறவி யென்றும், அவன் இன்னமாதிரி இருப்பன் என்றும், சாஸ்திரத்திற்குஉட்படாதவன் அஸுரப்பிறவி யென்றும், அவன் இன்னமாதிரி இருப்பன் என்றும், பிரித்து பகவான் சொல்லுகிறார்—

தெய்வப்பிறவிக்கு அடையாளங்களைச் சொல்லுகிறார். (1) உலகத்தில் பிடித்த வஸ்துவின் பிரிவென்றும், பிடிக்காத வஸ்துவின் சேர்க்கையென்றும் துக்கம் இரண்டுவிதம். ஒருவன் இவை இரண்டும் வருவதற்கு அடையாளங்களைக் கண்டால், நடுங்குவன். அது இல்லாமை (அபயம்); (2) மனதில் 1 ரஜோகுணம், தமோகுணம் இல்லாமை; (3) உடம்பைக்காட்டிலும் வேறான ஆத்மாவின் உண்மையை அறிவதில் 2 நிலையாயிருக்கை; (4) நியாயமாய் ஸம்பாதித்த தன் ஸொத்தை நல்ல பாத்திரத்தில் (தகுந்தவர்களுக்கு) தானம் செய்வது; (5) மனதை விஷயங்களில் போகாமல் பழக்குவது; (6) பலன்களை விரும்பாமல், பகவானுடைய ஸந்தோஷத்திற்காக,

---

1 சுலோகத்தில் ஸம்சுத்தி என்கிற சொல்லுக்கு நல்ல சுத்தி என்று பொருள். அதாவது—ஆசை, பொறாமை, மோசம் செய்வது முதலான எல்லா விதமான தோஷங்களில்லாமை. அவைகளை உண்டு பண்ணுகிற ரஜஸ்ஸும் தமஸ்ஸும் போனால், அவைகள் தானே போய் விடுமென்று எண்ணி, அந்தச்சொல்லுக்கு ரஜோகுணம் தமோகுணம்இல்லாமை என்று பொருள் எழுதினது.

2 சுலோகத்தில்—ஞானயோகம் என்கிற சொல்லாலே கர்மயோகம் முதலானவைகள் வேண்டாமென்று சொல்லப்படவில்லை. ஸத்துவ குணம் மேலிட்டவனுக்கு அவைகளும் வேண்டும். ஆகையால் இந்தச் சொல்லாலே கர்மயோகம், ஞானயோகம்,பக்தியோகம்—இவைமூன்றுக்கும் வேண்டிய சாஸ்திரத்தில் சொல்லியபடி உடம்பைக் காட்டிலும் வேறான ஜீவஸ்வரூபத்தை நினைப்பது தான் சொல்லப்படுகிறது.

வைசுவதேவம் முதலான நித்தியகர்மங்களைச் செய்கை; (7) வேதம் முழுவதும் 1 பகவானையும், எல்லா உலகமும் அவர் சொத்து என்பதையும், அவரை ஸந்தோஷப்படுத்தும் வழியையும் சொல்லுகிறது என்று நினைத்து, எப்பொழுதும் வேதத்தைச் சொல்லுகை; (8) ஒருவன் பகவானை ஸந்தோஷப்படுத்துவதான வேலைகளைச் செய்வதற்காக. முதலில் 2 கிருச்சிரம், சாந்திராயணம், சாப்பிடக்கூடாது என்று சொல்லப்பட்ட ஏகாதசி முதலான நாள்களில் சாப்பிடாமலிருப்பது முதலானவைகளைச் செய்கை; (9) பிறர்விஷயத்தில் மனது, வாக்கு, உடம்பு—இந்த மூன்றின் வேலைகளும் ஒத்திருப்பது; (10) பிறருக்குத் தொந்தரவு செய்யாமலிருக்கை; (11) நிஜம்சொல்லுவது, அதாவது—கண்ணால் கண்டபடி சொல்லுகை; அதை ஜனங்களுக்கு தொந்தரவுக்காகச் சொல்லக்கூடாது; நன்மைக்காகச் சொல்லலாம்; (12) பிறருக்குத் தொந்தரவைக் கொடுக்கக்கூடிய மனக்கலக்கம் இல்லாமை; (13) தன் நன்மைக்கு இடைஞ்சலான தன் வஸ்துக்களை விடுகை; (14) கண் முதலான இந்திரியங்களைச் சப்தம் முதலான விஷயங்களில் அழுந்தாமல் தடுத்துப் பழக்குகை; (15) பிறருக்கு இடைஞ்சலுக்காகக் கோழுச்சொல்லாமை; (16) எல்லாப்பிராணிகளிடத்திலும் (சத்துருக்களிடத்திலும், சிநேகிதர்களிடத்திலும்) தயை—அதாவது—அவர்கள் வருத்தப்பட்டால் அதைக்கண்டு தாங்காமலிருக்கை, (17) தனக்குத் தகாத சப்தம் முதலான விஷயங்களில் ஆசையில்லாமை; (18) கெட்டியாய் இல்லாமை, அதாவது—பயப்படாமல் ஸாதுக்கள் தன்கிட்ட நெருங்கிப் பழகத்தகுந்தவனாக இருக்கை; சுவர்—தன்

---

1. இரண்டாவது அத்தியாயம் 46-வது சுலோகத்தில் சொன்னபடி-மோக்ஷத்தை அடைய ஆசைப்படுகிறவன்கொஞ்சபலன்களைக்கொடுக்கும் தாழ்ந்த தேவதைகளின் பூஜையைச் சொல்லும் பாகத்தைப் படிக்கக்கூடாது—என்று ஸந்தேஹமுண்டாகலாம். [illegible] முழுவதும் என்ற சொல். ஆனால் அவன் எண்ண வேண்டிய விதம் வேறு. அது வியாக்கியானத்தில் சொல்லப்படுகிறது.

2. சுலோகத்தில் தபஸ் என்கிற சொல்லுக்கு சாஸ்திரத்தில் சொல்லியபடி ஸுகத்தைக் குறைப்பது என்று பொருள். அதைக் குறைக்கும்விதம் இங்கே சொல்லப்படுகிறது.

ணீர் போலில்லாமல் கெட்டியாயிருப்பதால், ஒன்றினாலும் அதில் நுழைய முடியவில்லை. (19) தப்புக்காரியங்களைப் பண்ணினாலும், பண்ணுவதிலும் வெட்கப்படுகை; (20) தான் ஆசைப்படக்கூடிய விஷயங்கள் கிட்டஇருக்கும்போது, அவைகளினால் கலங்காமலிருக்கை, (21) கெட்டமனிதர்கள் தன்னை அவமானம் பண்ணமுடியாமல் இருக்கையும், கெட்டமனிதர்களைக் கண்டிக்கத்தகுந்தவனாக இருக்கையும். சபலம் முதலியவைகளால் கெட்டமனிதனிடம் போனால், அவன் அவமானம் பண்ணுவதற்கு இடம் உண்டாகும். அப்படிப்போகாமலிருக்கை; கெட்டமனிதர்கள் அவமானப்படுத்துவதற்குக் காரணமான சபலம் முதலியவைகள் இல்லாமலிருக்கை; (22) பிறரால் தொந்தரவுகளை அனுபவிக்கும்போதும், அவர்கள் விஷயத்தில் மனது கலங்காமலிருக்கை; (23) எவ்வளவுபெரிய ஆபத்திலும், செய்யவேண்டியகாரியத்தை, விடாமல் தைரியத்துடன் செய்கை; (24) செய்யவேண்டியகாரியங்களைச்செய்வதற்கு, கண்முலான இந்திரியங்களும்மனதும்சாஸ்திரத்தில்சொல்லியபடி தகுந்தவைகளாக இருக்கை; (25) எவர்களையும்அவர்களிஷ்டப்படி நடக்கவொட்டாமல் தடுப்பது துரோஹம். அது இல்லாமலிருக்கை; அதாவது-பலமுள்ளவன் இளைத்தவனை நியாயமில்லாமல் தன்வலிமையால் வசப்படுத்திக்கொள்ளுகிறவன். அதில்லாமலிருக்கை; (26) சிலர் தங்கள்யோக்கியதையைமீறிக் கர்வப்படுகிறார்கள். அது இல்லாமலிருக்கை; உலகத்தில்யாருக்கும் கர்வம் என்பதேகூடாது. பணமோ, படிப்போ, குலமோ, அதற்குத்தகுந்ததாக இருந்தால், போனால் போகட்டும் என்று பொறுக்கக்கொள்ளலாம். அதைமீறி இருந்தால், அதுமிகவும் பிசகு. ஆயிரம் ரூபாய் உள்ளவனுக்கு பதினாயிரம்ரூபாய் உள்ளவன் கர்வமிருந்தால், அதை ஒரு ஜனமும் ஸஹியாது. இந்த இருபத்தாறு குணங்களும் தேவப்பிறப்புள்ளவர்களுக்கு இருக்கும். அவர்களாவன—பகவானுடைய உத்திரவை நடத்துவதற்காக பிறந்தவர்கள். அவர்களுக்கு இந்தகுணங்கள்கட்டாயம் இருக்கும்.

தம்போ தர்போபிமாநஶ்ச க்ரோத: பாருஷ்யமேவ ச ।
அஜ்ஞாநம் சாபிஜாதஸ்ய பார்த ஸம்பதமாஸுரீம் ॥ ௪ ॥

தம்ப: - தார்மிகத்வக்யாபநாய தர்மாநுஷ்டாநம் ; தர்ப: க்ருத்யாக்ருத்யாவிவேககரோ விஷயாநுபவநிமித்தோ ஹ

ஷஹேது: அதிமாநஸ்து - ஸ்வவித்யாபிஜநாநநுரூபோந்நத்யபிமாந: । க்ரோத: - பரபீடாபலசித்தவிகார: । பாருஷ்யம் - ஸாதூநாமுத்வேககர: ஸ்வபாவ: । அஜ்ஞாநம் - பராவரதத்த்வக்ருத்யாக்ருத்யாவிவேக: । ஏதே ஸ்வபாவா ஆஸுரீம் ஸம்பதமபிஜாதஸ்ய பவந்தி । ஆஸுரீ - பகவதாஜ்ஞாதிவ்ருத்திஶீலா: ॥ ॥ ௪ ॥

(1) பகவானுடைய உத்திரவை நடத்தவேணுமென்றுஎண்ணமில்லாமல், நாலுபேர்கள் தன்னை நல்லதர்மிஷ்டன் என்று கொண்டாடுவதற்காகத்தர்மங்களைச்செய்கை; (2) இன்னதைச் செய்யலாம், இன்னதைச் செய்யக்கூடாது என்று தோன்றவொட்டாமல் பண்ணுகிற—பணம், பிள்ளை, பெண்டாட்டி முதலானவைகளை அனுபவிப்பதினால் உண்டாகும்—தலை தெரியாமல் வருகிற—ஸந்தோஷம். (3) தன்னுடைய படிப்பு, பணம், குலம், முதலானவைகளுக்குத் தகாத கர்வம். முதல் மூன்று சுலோகங்களில் 26-வது குணமாகச் சொன்னதற்கு எதிர்தட்டானது; (4) பிறருக்குத் தொந்தரவு பண்ணக்கூடிய மனக்கலக்கம்; (5) நல்லவர்களுக்கு 1 நடுக்கத்தை உண்டுபண்ணக்கூடிய ஸ்வபாவம்; (6) இன்னது உயர்ந்தது; இன்னது இளப்பம் என்றும்; இன்னகாரியத்தைச செய்யலாம்; இன்ன காரியத்தைச் செய்யக்கூடாதென்றும் பிரித்து அறியாமை. இந்த ஆறு 2 குணங்களும் அஸுரப்பிறப்புள்ளவர்களுக்கு இருக்கும். அஸுரப்பிறப்பாவது பகவானுடைய உத்திரவை மீற வேணுமென்றே பிறந்தவர்கள். [ 4 ]

தைவீ ஸம்பத்விமோக்ஷாய நிபந்தாயாஸுரீ மதா ॥ ௫ ॥

தைவீ - பகவதாஜ்ஞாநுவ்ருத்திரூபா ஸம்பத் விமோக்ஷாய - பந்தாந்நிவ்ருத்தயே பவதி - க்ரமேண பகவத்ப்ராப்தயே ச பவதீத்யர்த்த: । ஆஸுரீ - பகவதாஜ்ஞாதிவ்ருத்திரூபா ஸம்பத் நிபந்தாய பவதி - அதோகதிப்ராப்தயே பவதீத்யர்த்த: ॥ ॥ ௫ ॥

1. கெட்டவர்கள் விஷயத்தில் கடுமையாக இருப்பது அதிகக் கெடுதலன்று.

2. இங்கே ஆறு குணங்களைமாத்திரம் சொன்னபோதிலும், முதல் மூன்றுசுலோகங்களில் சொன்ன குணங்களில்லாமையையும் சொன்னதாக வைத்துக்கொள்ளவேணும்.

அவ—இருபத்தாறு குணங்களில் ஆசையும், ஆறுகுணங்களில் வெறுப்பும் உண்டாவதற்காக இருபத்தாறுகுணங்கள் மோக்ஷத்தைக்கொடுக்குமென்றும், ஆறு குணங்கள் ஸம்ஸாரத்தைக்கொடுக்கும் என்றும் சொல்லுகிறார். இது ஏற்கனவே 14-வது அத்தியாயம் 18-வது ச்லோகம் முதல் சொல்லப்பட்டிருக்கிறது. இருபத்தாறு குணங்கள் ஸத்துவத்தின் வேலை. ஆறு குணங்கள் ரஜஸ்ஸு தமஸ்ஸுக்களின் வேலை—

தேவப்பிறப்பாகிற (அதாவது—என் உத்திரவுப்படி நடக்கிற) பெரிய ஸம்பத்து இப்போது இருக்கும் ஸம்ஸாரத்தைப் போக்கி, என்னிடம் வருவதற்கு படிப்படியாய் உதவுகிறது. அஸுரப்பிறப்பு (என்னுடைய உத்திரவை மீறிநடப்பது) அதோகதியை (அதாவது—இப்போது இருக்கும் நிலைமையைக்காட்டிலும் இன்னும்கீழே கீழேபோவதை) அடையும்படி செய்கிறது. [4½]

அவ— [illegible] அர்ஜுநாயாஹ—

மா ஶுச: ஸம்பதம் தைவீமபிஜாதோ'ஸி பாண்டவ ||௫||

ஶோகம் மா க்ருதா:, த்வம் து தைவீம் ஸம்பதமபிஜாதோ'ஸி | பாண்டவ-தர்மிஷ்டஸ்ய ஹி பாண்டோஸ்தநய ஸாத்த்விகோ ஹ்யஸீத்யபிப்ராய: || ||௫||

அவ—இந்த இரண்டு பிரிவையும் கேட்ட அர்ஜுனன்—நான் இவைகளில் எந்தப்பிரிவோ, தெரியவில்லையே என்று நடுங்கினான். அப்போது பகவான்சொல்லுகிறார்—

அப்பா! நீ துக்கப்படாதே.[1] நீயோ தேவப்பிறப்பு பெரிய தர்மிஷ்டனான பாண்டுமஹாராஜனிற்குப் பிறந்தபிள்ளையல்லவா, நல்லவர்களுடைய வயிற்றில் கெட்டபிள்ளைகள் பிறக்குமா. [5]

---

1. அர்ஜுனனுக்குச் சண்டையின ஆரம்பத்தில் பந்துக்கள் சாகிறார்கள் என்று ஒருவருத்தம் உண்டாயிற்று. அது கீழே பகவான் பண்ணின உபதேசத்தினால் போய்விட்டது. இது அந்த துக்கமல்ல. அது ஆத்மாமுதலானவைகளை அறியாததினால் வந்தது. இது நான் நல்லபிறப்போ இல்லையோ என்ற ஸந்தேஹத்தால் வந்தது.

த்³வௌ பூ⁴தஸர்கௌ³ லோகே(அ)ஸ்மிந் தை³வ ஆஸுர ஏவ ச। தை³வோ விஸ்தரஶ꞉ ப்ரோக்த ஆஸுரம் பார்த² மே ஶ்ருணு ॥ ௬ ॥

அஸ்மிந் - கர்மலோகே, கர்மகாரிணாம் பூ⁴தாநாம் ஸர்கோ³ த்³விவித⁴꞉ - தை³வ ஆஸுரஶ்சேதி। ஸர்க³꞉ - உத்பத்தி꞉, உத்பத்திவேலாயாம் ப்ராசீநபுண்யாபுண்யரூபகர்மவஶாத் ப⁴க³வதா³நுகூல்யே தத்ப்ராதிகூல்யே ச நியதா ஜாதா இத்யர்த²꞉। தத்ர தை³வஸ்ஸர்கோ³ விஸ்தரஶ꞉ ப்ரோக்த꞉। தை³வோ நாம ஸ்வபா⁴வோ ப⁴க³வதா³ஜ்ஞாநுவ்ருத்திரூப꞉ கர்மயோகா³தி³꞉, ஸ கர்மயோகா³தி³ரூப꞉ தை³வ꞉ ஸர்கோ³ விஸ்தரஶ꞉ ப்ரோக்த꞉। ஆஸுரம் பார்த² மே ஶ்ருணு - ஸாவதா⁴நோ ஶ்ருணு॥

*அவ — இப்படிக்கையில் எல்லா ஆத்மாக்களும் ஸமமாயிருக்க, சிலர் தேவப்பிறப்பென்றும், சிலர் அஸுரப் பிறப்பென்றும், பிரிவதற்கு காரணமென்ன என்னும் ஸங்கைதனைத் தீர்த்துக் கொண்டு, அஸுரப்பிறப்பின் குணங்களை அறியாமல் விலக்கவேண்டுமென்று காட்டுவதற்காக, அஸுரப்பிறப்புள்ளவர்கள் நடவடிக்கையை விஸ்தாரமாய் சொல்லுகிறார் —*

*கர்மத்தினால் ஏற்படுகிற இந்தலோகத்தில் கர்மங்களைச்செய்யும் ஜனங்கள் தேவப்பிறப்பென்றும், அஸுரப்பிறப்பென்றும் இருவகை. நெடுநாளாய்வந்த புண்ணியங்களாலும், பாபங்களாலும் பிறக்கிற காலத்திலேயே பகவானுடைய உத்திரவை நடத்துவதற்காகவென்றும், அதை மீறுவதற்காகவேயென்றும் இருவகையாகவே ஜநங்கள் பிறந்திருக்கிறார்கள் அதாவது-பகவான் அவர்களை அப்படியே பிறப்பித்திருக்கிறார். தேவப்பிறப்புக்களின் வேலைகளைப்பற்றி கீழே விரிவாய் சொல்லியாய்விட்டது. அதாவது — யோகம் முதலானவைகள். அஸுரப்பிறப்புக்களின் வேலைகளைச் சொல்லுகிறேன், கேள்.* [6]

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச ஜநா ந விது³ராஸுரா꞉। ந ஶௌசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்³யதே ॥ ௭ ॥

𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌞𑍍𑌚 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌞𑍍𑌚-𑌅𑌭𑍍𑌯𑍁𑌦𑌯𑌸𑌾𑌧𑌨𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑌸𑌾𑌧𑌨𑌂 𑌚 𑌵𑍈𑌦𑌿𑌕𑌂 𑌧𑌰𑍍𑌮𑌮𑌾𑌸𑍁𑌰𑌾 𑌨 𑌵𑌿𑌦𑍁𑌃-𑌨𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿 | 𑌶𑍌𑌚𑌂 - 𑌵𑍈𑌦𑌿𑌕𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌂, 𑌤𑌦𑍍𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌂 𑌚𑌾𑌸𑍍𑌤𑍇𑌷𑍁 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇| 𑌨𑌾𑌪𑌿 𑌚𑌾𑌚𑌾𑌰𑌃- 𑌤𑌦𑍍𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌶𑍌𑌚𑌂 𑌯𑍇𑌨 𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌵𑌨𑍍𑌦𑌨𑌾𑌦𑌿𑌨𑌾 𑌰𑍂𑌪𑌾𑌚𑌾𑌰𑍇𑌣 𑌜𑌾𑌯𑌤𑍇, 𑌸𑍋𑌽𑌪𑍍𑌯𑌾𑌚𑌾𑌰𑌸𑍍𑌤𑍇𑌷𑍁 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇| 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌂 "𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌹𑍀𑌨𑍋𑌽𑌶𑍁𑌚𑌿𑌰𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌨𑌰𑍍𑌹𑌃 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑍁" 𑌇𑌤𑌿| 𑌤𑌥𑌾 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌚 𑌤𑍇𑌷𑍁 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇-𑌯𑌥𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌭𑍂𑌤𑌹𑌿𑌤𑌰𑍂𑌪𑌂 𑌭𑌾𑌷𑌣𑌂 𑌤𑍇𑌷𑍁 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 || ||௭||

பிரும்மலோகம்வரையிலுள்ள உலகங்களில் கிடைக்கும் ஸுகத்தைக் கொடுக்கக்கூடிய தர்மங்களும், மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடிய தர்மங்களும், வேதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகள் அவர்களுக்குத் தெரியாது. லக்ஷம்தடவை சொன்னலும், தமோகுணம் மேலிட்டிருப்பதால், புரியாது. உடம்பும் ஆத்மாவும் வேதத்தில் சொல்லிய கர்மங்களை எப்படியிருந்து செய்ய வேணுமென்று சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறதோ, அப்படி அவர்கள் இருக்கமாட்டார்கள். ஸ்நாநம் செய்து கோவிலுக்குப் போகவேணுமென்று சொல்லியிருக்கிறது. அந்த ஸ்நானத்தைச் செய்யமாட்டார்கள். ஆத்மாவிற்கு தயை, பொருமை, வணக்கம் இவை முதலானவைகள் வேணுமென்று சொல்லியிருக்கிறது. அவைகள் அவர்களுக்கு இருக்காது. ஸந்தியாவந்தனம் முதலான எந்த வேலைகளாலே உடம்பும் ஆத்மாவும் சுத்தமாகுமோ, அந்த வேலைகளுமிருக்காது. ஸந்தியாவந்தனம் பண்ணுதவன் அசுத்தன்; ஒரு வேலைக்கும் தகாதவன் என்று சொல்லியிருக்கிறது. அவர்களிடத்தில் ஸத்தியம் இருக்காது. பொய்தான் சொல்லுவார்கள். ஏய்க்கிறத்திலேயே ருசியாகையால், நடந்தபடி சொல்லமாட்டார்கள். தொந்தரவு செய்வதே ஸ்வபாவமானதால், அனுகூலத்தைச் சொல்லமாட்டார்கள். [7]

— 𑌕𑌿𑌞𑍍𑌚 —

𑌅𑌸𑌤𑍍𑌯𑌮𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌂 𑌤𑍇 𑌜𑌗𑌦𑌾𑌹𑍁𑌰𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 |
𑌅𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌸𑌮𑍍𑌭𑍂𑌤𑌂 𑌕𑌿𑌮𑌨𑍍𑌯𑌤𑍍𑌕𑌾𑌮𑌹𑍈𑌤𑍁𑌕𑌮𑍍 || ||௮||

அஸத்யம் ஜகதேதத் ஸத்யப்ரஹ்மகார்யதயா ப்ரஹ்மாத்மகமிதி நாஹு:। அப்ரதிஷ்டம் ததா ப்ரஹ்மணி ப்ரதிஷ்டிதமிதி ந வதந்தி। ப்ரஹ்மணாऽநந்தேந த்ருதா ஹி ப்ருதிவீ ஸர்வாந் லோகாந் பிபர்த்தி। யதோக்தம் – 'தேநேயம் நாகவர்யேண ஶிரஸா வித்ருதா மஹீ। பிபர்த்தி மாலாம் லோகாநாம் ஸதேவாஸுரமாநுஷாம்॥' இதி। அநீஶ்வரம் ஸத்யஸங்கல்பேந ப்ரஹ்மணா ஸர்வேஶ்வரேணேதம் நியமிதமிதி ச ந வதந்தி। "அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே" இத்யுக்தம்। வதந்தி சைவம் – அபரஸ்பரஸம்பூதம் கிமந்யத் – யோஷித்புருஷயோ: பரஸ்பரஸம்பந்தேந ஜாதமிதம் மநுஷ்யபஶ்வாதிகமுபலப்யதே। அநேவம்பூதம் கிமந்யதுபலப்யதே ॥ அத: ஸர்வமிதம் ஜகத் காமஹைதுகமிதி ॥ ॥8॥

அவ—இன்னும்,

இந்த உலகத்தை, பிரும்மத்தால் உண்டானதாகையால், பிரும்மமென்றும், பிரும்மத்தால் தூக்கப்படுகிறதென்றும் சொல்லுகிறதில்லை. பகவான் இந்த பூமியை ஆதிசேஷனைக்கொண்டு தூக்குகிறபடியால்தான், இது எல்லா உலகங்களையும் தூக்குகிறது என்று சொல்லியிருக்கிறது. நினைத்தபடி நடத்துகிறவனும், எல்லாவிதத்தாலும் அளவில்லாமல் உயர்ந்தவனும், எல்லா உலகத்தையும் அடக்கி ஆளுகிறவனுமான என்னாலே எல்லா உலகமும் [1] ஏவப்படுகிறதென்றும் (எல்லா வேலைகளும் என் ஆணையாய்த்தான் நடக்கிறதென்றும்) சொல்லுகிறதில்லை. இப்படிச் சொல்லாததுமன்னியில், வேறு விதமாகவும் சொல்லுகிறார்கள்—இவ்வுலகத்தில் மனிதனோ, ஆடுமாடு முதலானவைகளோ, எல்லாம் ஆணும்பெண்ணும் சேர்ந்துதான் உண்டாகிறது. கண்ணுக்குப்படுவதில் அப்படியில்லாதது ஒன்றுமில்லை. ஆகையால் எல்லா உலகமும் காமத்தால் உண்டாகிறது என்று. [2] [8]

---

1. என்னைத்தவிர வேறு ஒருவரை—இன்னொருத்தனை—உலகத்திற்கு ராஜாவாகச் சொல்லுகிறவர்களும் அஸுரர்களே.

2. இதுபோலவே மண்ணில் விதையைப்போட்டால் மரம் உண்டாகி

ஏதாம் த்ருஷ்டிமவஷ்டப்ய நஷ்டாத்மாநோऽல்பபுத்தய: ।
ப்ரபவந்த்யுக்ரகர்மாண: க்ஷயாய ஜகதோऽஹிதா: ॥௯॥

ஏதாம் த்ருஷ்டிமவஷ்டப்ய-அவலம்ப்ய, நஷ்டாத்மாந:-அத்ருஷ்ட தேஹாதிரிக்தாத்மாந:, அல்பபுத்தய:-படாதிவத் ஜ்ஞேயபூதே தேஹே ஜ்ஞாத்ருத்வேந தேஹவ்யதிரிக்தம் ஆத்மாநமஜாநந்த: விவேகாக்ஷமா:, உக்ரகர்மாண:-ஸர்வேஷாம் ஹிம்ஸகா: ஜகத: க்ஷயாய ப்ரபவந்தி ॥ ॥௯॥

கீழ்ச்சொன்ன தப்புஎண்ணத்தினால், உடம்பைக் காட்டிலும் வேறாக ஜீவனை அறியாமல், கொஞ்ச புத்தியுள்ளவர்களாய் (அதாவது—குடத்தைப்போல் உடம்பு அறியப்படுகிறது; அறிவுள்ளதன்று; ஆத்மா அதை அறிகிறது. ஆகையால் அது உடம்பைக் காட்டிலும் வேறு—என்று பிரித்து அறியமுடியாமல்), கடுமையான வேலைகளைச் செய்துகொண்டு, (அதாவது-எல்லாரையும் ஹிம்ஸித்துக்கொண்டு), உலகத்தை அழிக்கிறார்கள். 1 [ 9 ]

காமமாஸ்ரித்ய துஷ்பூரம் தம்பமாநமதாந்விதா: । மோஹாத் க்ருஹீத்வாஸத்க்ராஹாந் ப்ரவர்த்தந்தேऽஸுசிவ்ரதா: ॥ ॥௧௦॥

துஷ்பூரம்-துஷ்ப்ராபவிஷயம் காமமாஸ்ரித்ய தத்ஸிஷாதயிஷயா மோஹாத்-அஜ்ஞாநாத், அஸத்க்ராஹாந்-அந்யாயார்ஜிதாந் அஸத்பரிக்ரஹாந் க்ருஹீத்வா அஸுசிவ்ரதா:-அஸாஸ்த்ரவிஹிதவ்ரதயுக்தா: தம்பமாநமதாந்விதா: ப்ரவர்த்தந்தே ॥ ॥௧௦॥

---

றது, இதற்கு தெய்வம் என்னத்துக்கு? இதேமாதிரி உலகத்தில் ஒவ்வொரு வஸ்துவும் ஒவ்வொரு காரணத்தால் உண்டாகிறது. அந்தக் காரணமே போதுமே; பிரும்மம் என்னத்துக்கு; அதில் பிரும்மத்திற்கு என்னவேலை—என்று,

1. அவர்கள் தாங்கள்கெடுவதுமன்னியில், மற்றவர்களையும்கெடுக்கிறார்கள். அதாவது—அவர்கள் பகவானால் ஏற்படுத்தப்பட்ட தர்மமார்க்கத்தைக் கவனிக்கிறதில்லை. மூடர்களான மற்றவர்கள் அவர்கள் செய்வதைப் பார்த்து, அவர்கள் சொல்வதைக்கேட்டு, அவைகளைஸரியானவைகள் என்று நம்பி, தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் (அறம், பொருள், இன்பம், வீடு) என்ற புருஷார்த்தங்களை அடையாமல், மூன்று விதமான (தன்னால் வருவது, மற்ற பிராணிகளால்வருவது, தெய்வத்தால்வருவது) தொந்தரவுகளுள்ள ஸம்ஸாரத்தில் அழுந்துகிறார்கள்.

அடையமுடியாத ஒரு வஸ்துவை ஒரு பிரயோஜனமாக ஆசைப்பட்டு, அதை அடைவதற்காக, இன்னது நல்லது, இன்னது பொல்லாதது என்று அறியமுடியாததினாலே, அநியாயமாக (திருட்டு முதலான தப்புவழிகளாலே) பணம் முதலானவைகளை ஸம்பாதித்து, சாஸ்திரத்தில் சொல்லப்படாத (பார்ப்பதற்கும், தொடுவதற்கும் தகாதபடி பண்ணுகிற) விரதங்களுடனும் தம்பம், கர்வம், மதம்[1] (இவை)—இவைகளுடனும் கர்மங்களைச் செய்கிறார்கள். [ 10 ]

சிந்தாமபரிமேயாம் ச ப்ரளயாந்தாமுபாஶ்ரிதா: |
காமோபபோ⁴க³பரமா ஏதாவதி³தி நிஶ்சிதா: ॥ ॥௧௧॥

[illegible] சிந்தாமபரிமேயாம் - அபரிமேயாம் ப்ரளயாந்தாம்-ப்ராக்ருதப்ரளயாவதிகஸாத்⁴யவிஷயாம் சிந்தாமுபாஶ்ரிதா:। ததா² காமோபபோ⁴க³பரமா:-காமோபபோ⁴க³ ஏவ பரமபுருஷார்த² இதி மந்வாநா:, ஏதாவதி³தி நிஶ்சிதா:-இதோऽதி⁴க: புருஷார்தோ² ந வித்³யத இதி ஸஞ்ஜாதநிஶ்சயா: ॥ ॥ ௧௧ ॥

அவ—இப்படி வேலைகளைச் செய்கிறவர்களுக்கு மேல் மேல் வரும் கெடுதிகளைச் சொல்லுகிறார்—

இன்றைக்கோ, நாளைக்கோ அவர்கள் சாகப்போகிறார்கள். அப்படி இருக்கச்செய்தேயும், அவர்கள் நினைவுகளுக்கு கணக்கில்லை. ஸம்பாதிக்கவேண்டிய பணம் முதலானவைகளுக்கு இத்தனையென்று கணக்கில்லை. 2 அவைகளுக்கு வேலைசெய்ய வேணுமானால், பிரளய காலம்வரையில் வேலை செய்தாலும் முடியாது. 3 பின்னை, பெண்டாட்டி முதலானவர்களை அநுபவிப்பதுதான் மிகவும் உயர்ந்த

1. மதம் என்பது, பணம், படிப்பு, உயர்ந்த பிறப்பு, இவைகளால் வரும்—இவ்விடப்படி வேலைகளைச் செய்யும்படி பண்ணுகிற—கொழுப்பு.

2. இதினால் நினைவுகளை நிறைவேற்ற முடியாதென்பதும், எடுத்துக் கொள்ளும் பிரயாஸம் வீணென்றும் காட்டப்படுகிறது.

3. எல்லையில்லாத காலத்தினால் முடிக்கவேண்டிய வேலைகளை மிகவும் கொஞ்சகாலத்தில் முடிக்க ஆசைப்படுகிறார்களென்று மூடத்தனம் காட்டப்படுகிறது.

புருஷார்த்தமென்று எண்ணுகிறார்கள். இதற்கு மேற்பட்ட புரு ஷார்த்தம் இல்லை என்று நிர்மாணித்திருக்கிறார்கள். [11]

ஆஶாபாஶஶதைர்பத்தா꞉ காமக்ரோதபராயணா꞉ ।
ஈஹந்தே காமபோகார்த்தமந்யாயேநார்த்தஸஞ்சயாந் ॥

ஆஶாபாஶஶதை꞉ - ஆஶாரூபபாஶஶதைர்பத்தா꞉, காமக்ரோதபராயணா꞉ - காமக்ரோதைகநிஷ்டா꞉, காமபோகார்த்தமந்யாயேநார்த்தஸஞ்சயாந் இதி ஸம்பந்த꞉ ॥ ॥கஉ॥

ஆசைகள் என்கிற நல்ல கயிறுகளால் கட்டுப்பட்டிருக்கிறார்கள். அந்தக்கயிறுகளுக்குக் கணக்கில்லை. கயிற்றைக் கத்தியால் அறுக்கலாம்; ஆசையை அறுக்கமுடியாது. எப்பொழுதும் பிள்ளை, பெண்டாட்டி முதலானவைகளை அனுபவிப்பதும், கோபித்துக்கொள்வதும்தான் அவர்களுக்கு வேலை. தங்கள் இஷ்டப்படி எல்லாம் அனுபவிப்பதற்காக தப்புவழியால் பணம் முதலியவைகளை ஸம்பாதிக்க வேலைசெய்கிறார்கள். 1 [12]

இதமத்ய மயா லப்தமிமம் ப்ராப்ஸ்யே மநோரதம் ।
இதமஸ்தீதமபி மே பவிஷ்யதி புநர்தநம் ॥ ॥கங॥

இதம் க்ஷேத்ரபுத்ராதிகம் ஸர்வம் மயா மத்ஸாமர்த்யேநைவ லப்தம், நாத்ருஷ்டாதிநா । இமம் ச மநோரதமஹமேவ ப்ராப்ஸ்யே நாத்ருஷ்டாதிஸஹித꞉ ॥ இதம் தநம் மே அஸ்தி। இதமபி புநர்மத்ஸாமர்த்யேநைவ பவிஷ்யதி ॥ ॥கங॥

அவ—ஞானயோகம் செய்கிறவன் இன்னவிஷயத்தில் மனது அடங்கிற்று; இன்னவிஷயத்தில மனது அடங்கவில்லை—என்று பார்ப்பதுபோல், பிள்ளை, பெண்டாட்டி முதலான அநுபவங்களைத் தேடுகிறவன் இன்னது கிடைத்தது, இன்னது கிடைக்கவில்லை—என்று கவனிப்பதைச் சொல்லுகிறார்—

1. முன்சுலோகத்தில் நினைவையே (நிஷ்டா) சொல்லிற்று. இந்த சுலோகத்தில் ஆசையைச் சொல்லுகிறது. பலன்வேண்டுமென்று ஆசை; பலனுக்காகச்செய்யவேண்டியதில் நினைவு. ஆசைப்படுமவைகளுக்கு கணக்கில்லாமையால், ஆசை முதலியவைகளுக்கும் கணக்கில்லை.

நிலம், பிள்ளை முதலானவைகளெல்லாவற்றையும், என்னுடைய ஸாமர்த்தியத்தினாலேயேதான் ஸம்பாதித்தேன். அதிருஷ்டம் முதலானவைகளால் அன்று. இன்னும் அநேக ஸங்கதிகளையும் என் ஸாமர்த்தியத்தினாலேதான் ஸம்பாதிக்கப் போகிறேன். அதிருஷ்டம் என்று ஒன்றுஇருப்பதாகவே நான் நினைக்கவில்லை என்று சொல்லுகிறார்கள். இந்தலக்ஷம்ரூபாய் பணமும் என் ஸாமர்த்தியத்தாலேதான் ஸம்பாதிக்கப்பட்டது. அதினாலேயேதான் இப்பவும் குறைவில்லாமலிருக்கிறது. இன்னமும் என் ஸாமர்த்தியத்தாலேயே அநேகபணங்களை ஸம்பாதிக்கப் போகிறேன். [13]

அஸௌ மயா ஹத: ஶத்ருர் ஹநிஷ்யே சாபராநபி ||

அஸௌ மயா பலவதா ஹத: ஶத்ரு:। அபராநபி ஶத்ரூநஹம் ஶூரோ வீரஶ்ச ஹநிஷ்யே। கிமத்ருஷ்டேந மந்தமதிபி: பரிகல்பிதேநாஶக்தைஶ்ச பரிகல்பிதேந || ||13½||

என்னுடைய பலத்தினால் இந்த சத்துருவைக் கொன்றேன். இன்னும் அநேக சத்துருக்களையும் 1. சூரனும்வீரனுமான நான் கொல்லப்போகிறேன். அறிவும், பலமும் இல்லாதவர்கள் சொல்லுகிற அதிருஷ்டத்தின் ஒத்தாசை எனக்கு என்னத்துக்கு? [13½]

அபி — ததா ச —

ஈஶ்வரோ'ஹமஹம் போகீ ஸித்தோ'ஹம் பலவாந் ஸுகீ ||

ஈஶ்வரோ'ஹம் - ஸ்வாயத்தோ'ஹம், அந்யேஷாம் சாஹமேவ நியந்தா। அஹம் போகீ - ஸ்வத ஏவாஹம் போகீ, நாத்ருஷ்டாதிபி:। ஸித்தோ'ஹம் - ஸ்வத: ஸித்தோ'ஹம், ந கஸ்மாச்சித் அத்ருஷ்டாதே:। ததா ஸ்வத ஏவ பலவாந் ஸ்வத ஏவ ஸுகீ ||14||

அபி — அப்படியே.—

நான் ஒருவருக்கு உட்பட்டவனில்லை. எல்லாரையும் நான் தான் அடக்கி ஆளுகிறேன். என்னுடைய ஸாமர்த்தியத்தினாலேதான் எல்லா ஸுகங்களையும் அனுபவிக்கிறேன். அதிருஷ்

1 சூரன்—புலிபோல சத்துருவின் சேனையைச் செத்ததைபோல எண்ணி, பயமில்லாமல் அதில் நுழைகிறவன். வீரன்—சண்டைபோடும் போது களைப்பு முதலானவை இல்லாதவன்.

டம் முதலானவைகளின் ஒத்தாசை எனக்கு வேண்டியதில்லை. இந்தமாதிரி நான் ஆகியிருக்கிறதும் என்னாலேயேதான். அதிருஷ்டத்தினாலில்லை. எனக்கு இருக்கும் பலமும் ஸாதகமும் என்னாலேயேதான். [14]

ஆட்யோபிஜநவாநஸ்மி கோந்யோஸ்தி ஸத்ருஶோ மயா ॥

அஹம் ஸ்வதஶ்சாட்யோஸ்மி, அபிஜநவாநஸ்மி, ஸ்வத ஏவோத்தமகுலப்ரஸூதோஸ்மி| அஸ்மிந் லோகே மயா ஸத்ருஶ: கோந்ய: ஸ்வஸாமர்த்யலப்தவிபவோ வித்யதே ॥௧௪½॥

என்னாலேதான் நான் பெரிய பணக்காரனாக இருக்கிறேன். உயர்ந்த குலத்தில் நானாகவேதான் பிறந்தேன். என்மாதிரி தன் ஸாமர்த்தியத்தினாலேயே எல்லா ஸம்பத்தையும் ஸம்பாதித்தவன் இன்னொருவன் யார் இருக்கிறான். [14½]

யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்ய இத்யஜ்ஞாநவிமோஹிதா: ॥

அஹம் ஸ்வயமேவ யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்யே இத்யஜ்ஞாநவிமோஹிதா:- ஈஶ்வராநுக்ரஹநிரபேக்ஷேண ஸ்வேநைவ யாகாதிகம் கர்தும் ஶக்யமித்யஜ்ஞாநவிமோஹிதா மந்யந்தே ॥

நானே யாகம்பண்ணப் போகிறேன். நானே கொடுக்கப்போகிறேன். நானே ஸந்தோஷப்படப்போகிறேன். (எனக்கு தெய்வத்தின் ஒத்தாசை என்னத்துக்கு). எல்லா வேலைகளையும் என்னாலேயே செய்யமுடியுமென்று நினைக்கிறார்கள். அது தப்பு எண்ணத்தினாலேயே. [15]

அநேகசித்தவிப்ராந்தா மோஹஜாலஸமாவ்ருதா: ।
ப்ரஸக்தா: காமபோகேஷு பதந்தி நரகேऽஶுசௌ ॥

அத்ருஷ்டஸஹகாரரஹிதே ஸ்வயமேவ ஸர்வம் கர்தும் ஶக்யமிதி க்ருத்வா, ஏவம் கார்யம், இதம் கார்யம் இதி கார்யாந் அநேகசித்தவிப்ராந்தா:, ஏவம் ரூபேண மோஹஜாலஸமாவ்ருதா: காமபோகேஷு ப்ரஸக்தா: மத்யே ம்ருதா: அஶுசௌ நரகே பதந்தி ॥ ॥௧௬॥

அதிருஷ்டம், ஈச்வரன்—இவை முதலான ஒத்தாசையில்லாமல் எல்லாம் என்னாலேயே செய்யமுடியுமென்று நினைத்து, இப்படிச் செய்வேன்; இதையும் செய்வேன்; இன்னும் மற்ற எந்த வேலையையும் செய்வேன் என்கிற தப்பு எண்ணங்களுள்ளவர்களாயும், உள்ளபடி அறியாதவர்களாயும், தங்களிஷ்டப்படி ஸுகங்களை அனுபவிப்பதை ஆசைப்பட்டு, வேலைகளைச் செய்கிறார்கள். நடுவில் செத்துப்போய், ரத்தம், எச்சல முதலானவைகள் ரொம்பிய நரகத்தில் விழுகிறார்கள். [16]

ஆத்மஸம்பாவிதா: ஸ்தப்தா தநமாநமதாந்விதா:| ||கசு½||

ஆத்மநைவ ஸம்பாவிதா:—ஆத்மநைவாத்மாநம் ஸம்பாவயந்த்ய: | ஸ்தப்தா:-பரிபூர்ணம் மந்யமாநா ந கிஞ்சித் குர்வாணா:| கதம்? தநமாநமதாந்விதா:-தநேந வித்யாபிஜநாபிமாநேந ச ஜநித மதாந்விதா: || ||கசு½||

தாங்களே தங்களைஸ்தோத்திரப் பண்ணிக்கொள்ளுகிறார்கள். ஸாதுக்கள் தங்களை இன்னொருவர் ஸ்தோத்திரம் பண்ணும்போதுகூட வெட்கப்படுகிறார்கள். தங்களுக்கு ஒருவிதமான குறைவுமில்லை என்று நினைத்து, ஒரு வேலையையும் செய்கிறதில்லை. பகவானையும் ஆசாரியர்களையும் கூட ஸேவிக்கிறதில்லை. பணம், படிப்பு, குலம் உள்ளவன் என்கிற எண்ணத்தினால் உண்டான கொழுப்பை அடைந்திருக்கிறார்கள் [16½]

யஜந்தே நாமயஜ்ஞைஸ்தே தம்பேநாவிதிபூர்வகம்||

நாமயஜ்ஞை:—நாமப்ரயோஜநைர்யஜ்ஞை: தீக்ஷிதாதி நாம ப்ரயோஜநைர்யஜ்ஞைர்யஜந்தே| தம்பேந ஹேதுநா யஷ்டவ்யதயாவிதிபூர்வகம் அவிதிபூர்வகம் யஜந்தே ||

அவர்கள் யாகங்களைப்பண்ணுவது தீக்ஷிதன் என்கிற பெயருக்காகவும், இவன் யாகம் பண்ணினான் என்று நாலுபேர்கள் சொல்லுவதற்காகவும்தான். ஸ்வர்க்கத்துக்காக இல்லை. அதைச் செய்வதும் சாஸ்திரத்தில் சொல்லியபடியல்ல. [17]

ஏவம்—தேஷாம் ப்ரவ்ருத்தா யஜ்ஞாதயஸ்தாம:—

𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌂 𑌬𑌲𑌂 𑌦𑌰𑍍𑌪𑌂 𑌕𑌾𑌮𑌂 𑌕𑍍𑌰𑍋𑌧𑌂 𑌚 𑌸𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 ।
𑌮𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌪𑌰𑌦𑍇𑌹𑍇𑌷𑍁 𑌪𑍍𑌰𑌦𑍍𑌵𑌿𑌷𑌨𑍍𑌤𑍋𑌽𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌕𑌾𑌃 ॥

𑌅𑌨𑌨𑍍𑌯𑌾𑌧𑍀𑌨𑍋𑌽𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑌰𑍋𑌮𑍀𑌤𑍍𑌯𑍇𑌵𑌂𑌰𑍂𑌪𑌮𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃, 𑌤𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌕𑌰𑌣𑍇 𑌮𑌦𑍍𑌬𑌲𑌮𑍇𑌵 𑌪𑌰𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌮𑌿𑌤𑌿 𑌬𑌲𑌂, 𑌅𑌤𑍋 𑌮𑌤𑍍𑌸𑌦𑍃𑌶𑍋 𑌨 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌦𑌰𑍍𑌪𑌂, 𑌏𑌵𑌂𑌭𑍂𑌤𑌸𑍍𑌯 𑌮𑌮 𑌕𑌾𑌮𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌸𑌮𑍍𑌪𑌤𑍍𑌸𑍍𑌯𑌤 𑌇𑌤𑌿 𑌕𑌾𑌮𑌂, 𑌯𑍇 𑌚 𑌮𑌮𑌾𑌨𑌿𑌷𑍍𑌟𑌕𑌾𑌰𑌿𑌣𑌸𑍍𑌤𑌾𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌹𑌨𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑍀𑌤𑌿 𑌚 𑌕𑍍𑌰𑍋𑌧𑌂, 𑌏𑌵𑌮𑍇𑌤𑌾𑌨𑍍 𑌸𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃, 𑌸𑍍𑌵𑌦𑍇𑌹𑍇𑌷𑍁 𑌪𑌰𑌦𑍇𑌹𑍇𑌷𑍁 𑌚𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑌯𑌿𑌤𑌾𑌰𑌂 𑌪𑌰𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌮𑌾𑌂 𑌪𑍍𑌰𑌦𑍍𑌵𑌿𑌷𑌨𑍍𑌤𑌃- 𑌅𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌕𑌾𑌃 𑌕𑍁𑌯𑍁𑌕𑍍𑌤𑌿𑌭𑌿𑌃 𑌦𑍋𑌷𑌾𑌵𑌿𑌷𑍍𑌕𑌰𑌣𑍇𑌨𑌾𑌸𑌹𑌮𑌾𑌨𑌾𑌃 𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌾𑌦𑍀𑌨𑍍 𑌸𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑌾 𑌯𑌾𑌗𑌾𑌦𑌿𑌕𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌜𑌾𑌤𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌤 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥ ॥ ௧௮ ॥

அவ—அவர்கள் மேலே சொல்லப்போகிறபடி யாகம் பண்ணுகிறார்கள் என்று சொல்லுகிறார்—

ஒருவருடைய உதவியுமில்லாமல் நானே எல்லாவற்றையும் செய்வேன். எனக்கு தெய்வத்தின் உதவியும் வேண்டாம் என்கிற எண்ணத்தையும் (அகங்காரத்தையும்), என் பலமே எல்லா காரியங்களையும் செய்யப் போதுமானது என்கிற எண்ணத்தையும் (பலத்தையும்), இந்த இரண்டினால் உண்டாகிற—என் மாதிரி ஒருவருமில்லை என்கிற—எண்ணத்தையும் (தர்ப்பத்தையும்), இப்படிப் பட்ட எனக்கு நினைத்தமாத்திரத்தில் எல்லாம் கிடைக்கும் என்கிற எண்ணத்தையும் (காமத்தையும்), எனக்கு எவர்களாவது இடைஞ்சல் செய்தால், அவர்களெல்லாரையும் கொன்றுவிடுவேன் என்கிற எண்ணத்தையும் (குரோதத்தையும்)—இவைகளை அடைந்து, தன்னுடம்பிலும், பிறருடைய உடம்புகளிலுமிருந்து, எல்லா வேலைகளையும் செய்விக்கிற—மிகவும்உயர்ந்த புருஷனை நான் ஒருவன் இருக்கிறேன் என்று யாராவது சொன்னால், அந்தசசொல்லைப் பொறுக்காமல், நான் இல்லை என்பதற்குக் கோணலான பல யுக்திகள் சொல்லுகிறார்கள். இந்த அழகிலே யாகம் முதலான எல்லா

வேலைகளையும் செய்கிறார்கள். யாகம் என்பது என்ன? எதற்காகச் செய்கிறோம் என்பது முதலானவைகளைக் கவனிக்கிறதில்லை. [18]

தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந்|
க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு ||

யஏவம் மாம் த்விஷந்தி, தாந் க்ரூராந் நராதமாந் அஶுபாந் அஜஸ்ரம் ஸம்ஸாரேஷு ஜந்மஜராமரணாதி ரூபேண பரிவர்தமாநேஷு ஸந்தாநேஷு, தத்ராபி ஆஸுரீஷ்வேவ யோநிஷு க்ஷிபாமி—மதாநுகூல்ய ப்ரத்யநீகேஷ்வேவ ஜந்மஸு க்ஷிபாமி, தத்தஜ்ஜந்மப்ராப்த்யநுகுணப்ரவ்ருத்திஹேதுபூத புத்திஷ்வேவ க்ரூராஸு ஸம்யோஜயாமீத்யர்த: ||௧௯||

1 கீழ்ச்சொன்னபடி யார் என்னிடத்தில் த்வேஷம் பண்ணுகிறார்களோ, அவர்களையும் (1), நான் இல்லை என்பதற்குக் கோணலான யுக்திகளைச் சொல்லுகிறவர்களையும் (2), என்னைத் தெரிந்தும் என்கிட்ட வாராதவர்களையும் (3), நான் இருக்கிறேன் என்று அறியாதவர்களையும் (4) நான் எப்பொழுதும் ஸம்ஸாரத்திலேயே போடுகிறேன். (அதாவது—பிறப்பு, கிழத்தனம், சாவு, மறுபடியும் பிறப்பு—இதேமாதிரி ஓயாமல்சுற்றும்படி செய்கிறேன்). அதிலும், அஸுரப் பிறப்பிலேயே போடுகிறேன். (அதாவது—எனக்கு சத்ருவாகவே பிறப்பிக்கிறேன்). அந்தப் பிறப்பைக் கொடுக்கும்படியான வேலைகளைச் செய்யும்படி கொடுமையான நினைவுகளை நானே உண்டுபண்ணுகிறேன். [19]

ஆஸுரீம் யோநிமாபந்நா மூடா ஜந்மநி ஜந்மநி|
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம்|| ||௨௦||

மதாநுகூல்யப்ரத்யநீகஜந்மாபந்நா: புநரபி ஜந்மநி ஜந்மநி மூடா:—விபரீதஜ்ஞாநா: மாமப்ராப்யைவ— அஸ்தி

1. இந்தச்லோகத்திலிருக்கும், த்விஷத:—க்ரூராந்—நராதமாந்—அஶுபாந்—என்கிற நாலு சொற்களாலே 7-வது அத்தியாயம் 15-வது ச்லோகத்தில் சொல்லப்பட்ட நாலுவிதமான பாபிகள் சொல்லப்படுகிறார்கள்.

[illegible]
[illegible] ||உ0||

அந்த பிறப்பை அடைந்து, அவர்கள் மறுபடியும் பிறப்புகள் தோறும் இதேமாதிரி கெட்ட நினைவுகளையே அடைந்து, எல்லாருக்கும் ராஜாவாய் பகவானான வாஸுதேவன் ஒருவனிருக்கிறானென்று அறியாமலே இன்னும் கீழே கீழே போகிறார்கள். அதாவது—இருக்க இருக்க இளப்பமான பிறப்புக்களையே அடைகிறார்கள்.

[illegible]
[illegible]
[illegible] ||

[illegible] ||உக||

அவ—ஆத்மாவை உள்ளபடி அறியவொட்டாமல் செய்கிறதாக கீழ்ச்சொன்ன இந்த அஸுரஸ்வபாவத்துக்கு வேர் எது? அதாவது, இது எதனால் உண்டாகிறதென்றால், அதைச்சொல்லுகிறார்—

கீழ்ச்சொன்ன அஸுரர்களுடைய ஸ்வபாவமாகிற நரகத்திற்கு மூன்று வாசற்படிகள் இருக்கின்றன. அதாவது—அவைகள் வழியாகத்தான் நரகத்தை அடையவேணும். அவைகளால் தான் அந்த ஸ்வபாவங்கள் உண்டாகின்றன. அவைகள் தான் ஆத்மாவை உள்ளபடி அறிய வொட்டாமல் பண்ணி, ஜீவன்களுக்கு எல்லையில்லாத கெடுதிகளை உண்டு பண்ணுகின்றன. அவைகளாவன—(1) காமம், (2) குரோதம் (3) லோபம். காமமாவது-விஷயங்களை அனுபவிப்பதில், அநுபவித்தாலல்லது தாங்கமுடியாத ஆசை. குரோதமாவது—அப்படி அனுபவிக்க முடியாமல் போனால், மனது கலங்கி கிட்ட இருப்பவர்களை அடிக்கவும், வைய்யவும் பண்ணுகிற மனக்

கலக்கம். லோபமாவது-தனக்கு ஏராளமான சொத்து இருந்தபோதிலும், காலணக்கூட பிறருக்குக் கொடுக்க மனதாகாமலிருப்பது. ஆகையால் இந்த மூன்றையும் விடு. மிகவும் 1 கொடுமையான நரகத்திற்குக் காரணமாகஇருப்பதால், இந்தமூன்றையும் அடியோடு தொலைக்கவேண்டும். [21]

𑌏𑌤𑍈𑌰𑍍𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌤𑌮𑍋𑌦𑍍𑌵𑌾𑌰𑍈𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑌿𑌰𑍍𑌨𑌰𑌃 ।
𑌆𑌚𑌰𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑍍𑌤𑌤𑍋 𑌯𑌾𑌤𑌿 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 ॥

𑌏𑌤𑍈𑌃 𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌲𑍋𑌭𑍈𑌸𑍍𑌤𑌮𑍋𑌦𑍍𑌵𑌾𑌰𑍈𑌰𑍍𑌮𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌹𑍇𑌤𑍁𑌭𑌿𑌰𑍍𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌨𑌰 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 𑌆𑌚𑌰𑌤𑌿 — 𑌲𑌬𑍍𑌧𑌮𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑍋 𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌯𑍇 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 — 𑌤𑌤𑌶𑍍𑌚 𑌮𑌾𑌮𑍇𑌵 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌂 𑌯𑌾𑌤𑌿 ॥ ॥௨௨॥

நரகத்துக்கு வழியாயும், என்னைப்பற்றித் தப்பான நினைவுகளைக் கொடுக்கக்கூடியதாயும்இருக்கிற இந்த மூன்றுகளுமில்லாதவன் ஆத்மாவுக்கு க்ஷேமங்களைக் கொடுக்கக்கூடிய வேலைகளைச் செய்வன். அதாவது—என்னை உள்ளபடி அறிந்து, எனக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கக்கூடிய வேலைகளைச் செய்வன். அதனால் அடையவேண்டியவைகளில் மிகவும் உயர்ந்த என்னை அடைவன்.

அவ—𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌨𑌾𑌦𑌰𑍋 𑌨𑌰𑌕𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌹𑍇𑌤𑍁𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌹—

𑌯𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌿𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑌤𑌃 ।
𑌨 𑌸 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨 𑌸𑍁𑌖𑌂 𑌨 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 ॥

𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂-𑌵𑍇𑌦𑌾𑌃, 𑌵𑌿𑌧𑌿𑌰𑌨𑍁𑌶𑌾𑌸𑌨𑌂, 𑌵𑍇𑌦𑌾𑌖𑍍𑌯𑌂 𑌮𑌦𑌨𑍁𑌶𑌾𑌸𑌨𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯𑌯𑌃 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑌤𑍋 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇-𑌸𑍍𑌵𑌚𑍍𑌛𑌨𑍍𑌦𑌾𑌨𑍁𑌗𑌣𑌮𑌾𑌰𑍍𑌗𑍇𑌣 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇, 𑌨 𑌸 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿-𑌨 𑌕𑌾𑌮𑌪𑍍𑌯𑌾𑌮𑍁𑌷𑍍𑌮𑌿𑌕𑍀𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿-𑌨 𑌸𑍁𑌖𑌂 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑍈𑌹𑌿𑌕𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿, 𑌨 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌂, 𑌕𑍁𑌤𑌃 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥௨௩॥

அவ—ஜீவனுக்கு நரகத்தைக் கொடுக்கக்கூடிய ஸங்கதிகளுக்குள் சாஸ்திரத்தை அலக்ஷியம் 1 பண்ணுவது தான் மிகவும் முக்கியமானது என்று சொல்லுகிறார்—

1. இப்போது உலகத்தில் [illegible] ஒன்றுதான், யாரும் சாஸ்திரத்தை அலக்ஷியம் பண்ணுகிறார்கள்.

ஆசைப்பட்டுச் செய்தவனுக்குத்தான் பலன்களைக் கொடுக்கும். மோக்ஷத்தை விரும்புகிறவனுக்கு பலன்களில் ஆசையில்லாததி னால், அந்த பலன்கள் அவனுக்கு வருகிறதில்லை பூமியில் விழு ந்த விதை,நினைக்காமல்போனாலும், முளைக்காமலிருக்குமோ என்று கேட்டது ஸரியன்று சுருந்தபூமியில் விழுந்த நல்ல விதை கட்டா யம் முளைக்கவேணுமென்று பகவானுடைய ஏற்பாடு. அது போலன்று இந்த விஷயம். ஏனென்றால் ஜீவனைகளை நிலையான தன னிடத்துக்கு அழைத்துக்கொண்டு போவதில்தான் பகவானுக்கு இஷ்டம். ஸ்வர்க்கம் முதலான பலன்களை இவர்கள் கேட்பதும், தான் கொடுப்பதும் பகவானுக்கு இஷ்டமில்லை. ஐயோ இவர் கள் சின்ன பலன்களை கேட்கிறார்களே என்று வருத்தமும் உண்டு. தன்னை ஸந்தோஷப்படுத்துவதற்காக இவர்களைக் கர்மங்களைச் செய்யும்படி அவர் ஏற்படுத்தியிருக்கிறார் ஆகையால் இவர்கள்சின்ன பலனைகளைக் கேட்காவிட்டால், அவர் கொடுக்கமாட்டார். மேலும் இவர்கள் பலன்களை விடவார்களா.சின்ன பலன்களை விட்டு அளவில் லாமல் உயர்ந்த பலனையன்றோ கேட்கிறார்கள். கர்மங்களுக்குப் பகவான் பலன் கொடுக்கிறவராக இருக்கையாலும், கேடகாவிட் டால் பலனைக்கொடுக்கவேண்டாமென்று எண்ணியிருக்கையாலும் விதையைப்போலன்று கர்மம். [12]

அத இதாநீம் பகவதி பரமபுருஷே கர்த்ருத்வாநுஸந்தாநேந ஆத்மந்யகர்த்ருத்வாநுஸந்தாநப்ரகாரமாஹ| தத ஏவ ஫லகர்மணோரபி த்யாகோ பவதீதி| பரமபுருஷோ ஹி ஸ்வகீயேந ஜீவாத்மநா ஸ்வகீயைஶ்ச கரணகளேபரப்ராணை: ஸ்வகீயாநி கர்மாணி ஸ்வலீலாப்ரயோஜநாய காரயதே| அதோ ஜீவாத்மகதம் கர்த்ருத்வம் பரமாத்மாயத்தம். தத்ராயமநுஸந்தேய: க்ரம: பரமபுருஷஸ்யைவ—

பஞ்சைதாநி மஹாபாஹோ காரணாநி நிபோத மே,
ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தாநி ஸித்தயே ஸர்வகர்மணாம்||

ஸாங்க்யா புத்தி:, ஸாங்க்யே க்ருதாந்தே யதாவஸ்தித

[illegible] ‖ கரு ‖

அவ—இப்படி கர்மங்களைச் செய்யும்போதே, கர்த்ருத்வம் முதலான மூன்றையும் விடுவதுதான் சாஸ்திரத்தில் சொல்லிய ஸந்நியாஸம்; அது தான த்யாகமென்பதும் என்று சொல்லப்பட்டது இப்போது-உள்ளே ஆத்மாவாயிருந்து ஏவுகிற பகவானே தான எல்லா வேலைகளையும் செய்கிறார் என்று நினைத்து. நான ஒன்றையும் செய்யவில்லை என்று நினைக்கும் விதத்தைச் சொல்லுகிறார். அதினாலேயே பலனும், வேலையும் செய்கிற ஜீவனுடையவைகளன்று என்று ஏற்படுகிறது. மிகவும் உயர்ந்த புருஷனான பகவான் தன்னுடைய ஸொத்தான ஜீவனைக் கொண்டு, தன் ஸொத்தான ஜீவனுடைய உடம்பு, இந்திரியங்கள், பிராணன்—இவைகளாலே, தன்னுடைய ப்ரீதிக்காக வேலைகளைச் செய்ய ஆரம்பிக்கிறார் ஆகையால் ஜீவனுக்கு உண்டாகிற-பசி தீருகிறது முதலான-ப்ரயோஜனமும், அதற்காக ஏற்பட்ட சாப்பாடு முதலான வேலையும் பகவானுடையவைகள் தான். தாயார் குழந்தைக்கு சாதம் ஊட்டுவதும், தனக்கு வருத்தம் இல்லாமைக்குத்தான். குழந்தைக்குத்தான் மனவருத்தமில்லையே; விளையாட்டில் ஆசையுள்ள குழந்தைக்குப் பசியில்லை. பசி என்பது நினைவு, குழந்தைக்கு மாத்திரமல்ல ஆசையுடன் ஒன்றை பார்க்கிறவனுக்கு பசிக்குமா. பசியிருந்தால், சாப்பிடக்கூப்பிட்டால், கோபித்துக் கொள்ளுவனே—

உண்மையான ஸங்கதிகளைத் தீர்மானிப்பதற்காக ஏற்பட்ட வேதபாகத்தை (வேதத்தில் ஒரு இடத்தை)க்கொண்டு அறிந்ததில், உலகத்தில் நடக்கும் எல்லா வேலைகளும் ஐந்து பேர்கள் சேர்ந்து நடக்கின்றன என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ஐந்தையும்

சொல்லுகிறேன், கேள் அந்த வேதத்தின் இடமானது—உடம்பு, கண் முதலான இந்திரியங்கள், பிராணன், ஜீவாத்மா, இந்த நான்கையும் உதவியாக வைத்துக்கொண்டு, பகவான் தானே எல்லாவற்றையும் செய்கிறானென்று தீர்மானித்திருக்கிறது [13]

அத ஆஹ—

அதிஷ்டாநம் ததா கர்த்தா கரணம் ச ப்ருதக்விதம்।
விவிதாஶ்ச ப்ருதக்சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம்॥
ஶரீரவாங்மநோபிர்யத் கர்ம ப்ராரபதே நர꞉। ந்யாய்யம்
வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ꞉ ॥௧௫॥

ந்யாய்யே-ஶாஸ்த்ரஸித்தே விபரீதே-ப்ரதிஷித்தே வா ஸர்வஸ்மிந் கர்மணி ஶாரீரே வாசிகே மாநஸே ச பஞ்சைதே ஹேதவ꞉। அதிஷ்டாநம்-ஶரீரம், அதிஷ்டீயதே ஜீவாத்மநேதி மஹாபூதஸங்காதரூபம் ஶரீரமதிஷ்டாநம்। ததா கர்த்தா-ஜீவாத்மா, அஸ்ய ஜீவாத்மநோ ஜ்ஞாத்ருத்வம் கர்த்ருத்வம் ச "ஜ்ஞோ(அ)த ஏவ, கர்த்தா ஶாஸ்த்ரார்த்தவத்த்வாத்" இத்யதிகரணத்வயே ப்ரதிபாதிதம்। கரணம் ச ப்ருதக்விதம்-வாக்பாணிபாதாதிபஞ்சகம் ஸமநஸ்கம் கர்மேந்த்ரியம் ப்ருதக்விதம் கர்மநிஷ்பத்தௌ ப்ருதக்வ்யாபாரம்। விவிதாஶ்ச ப்ருதக்சேஷ்டா-சேஷ்டாஶப்தேந வாயுவ்ருத்திபேதா அபிதீயந்தே। ஶரீரேந்த்ரியதாரணஸ்ய ப்ராணாபாநாதிபேதபிந்நஸ்ய வாயோ꞉ பஞ்சாத்மநோ விவிதாஶ்ச சேஷ்டா இதி। தைவம் சைவாத்ர பஞ்சமம் அத்ர கர்மஹேதுகலாபே தைவம் பஞ்சமம் பரமாத்மா அந்தர்யாமீ கர்மநிஷ்பத்தௌ ப்ரதாநஹேதுரித்யர்த்த꞉। உக்தம் ஹி "ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ மத்த꞉ ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநம் ச" இதி। வக்ஷ்யதி ச "ஈஶ்வர꞉ ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶே(அ)ர்ஜுந திஷ்டதி। ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா" இதி। பராயத்தம் ச ஜீவாத்மந꞉ கர்த்ருத்வம் "பராத்து தச்ச்ருதே꞉" இத்யுக்தம்। ந சைவம் பராயத்தே ஜீவாத்மந꞉ கர்த்ருத்வே, ஜீவாத்மா கர்

ण्यनियोज्यो भवतीति विधिनिषेधशास्त्राण्यनर्थका
नि स्युः। इति चेत्—नैतदेवम्; [illegible] मामेव वशी
[illegible] "[illegible] विहित प्रतिषिद्ध[illegible]
[illegible]" इति। एवं तदायत्तं भवति—परमात्मना दत्तै
स्तदाधारैश्च करणकलेबरादिभिस्तदाहितशक्तिभिः स्व
यं च जीवात्मा तदाधारस्तदाहितशक्तिः सन् कर्मनिष्पत्तये
स्वेच्छया करणाद्यधिष्ठानाकारं प्रयत्नं चारभते। तद
न्तरवस्थितः परमात्मा स्वानुमतिदानेन तं प्रवर्तयतीति
जीवस्यापि स्वबुद्ध्यैव प्रवृत्तिहेतुत्वमस्ति। यथा
गुरुतरशिलामहीरुहादिचलनादिफलप्रवृत्तिषु ब
हुपुरुषसाध्यासु बहूनां हेतुत्वं विधि
निषेधभाक्त्वं चेति ॥ ॥கரு॥

அவ—அதைச சொல்லுகிறார்—

*சாஸ்திரத்துக்கு ஒத்தவைகளோ, சாஸ்திரத்திற்கு விரோதமான வைகளோ, 1 உடம்பினாலும், வாக்கினாலும், மனதினாலும் செய்யப் படும்—ஜீவன்களுடைய எல்லா வேலைகளும், 2 ஐந்து காரணங்க ளால் உண்டாகின்றன. அவைகளாவன—ஜீவனால் ஆட்டிவைக் கப்படும் உடம்பு, 3 வேலைசெய்கிற ஜீவன், வெவ்வேறு விதங்களா*

---

1. *இந்த ஐந்து மில்லாமல் ஒரு வேலையும் கிடையாது. அப்படி இருக்க, சில வேலைகளைச் சாரீரம் (உடம்பினால் செய்யப்பட்டது), வாசிகம் (வாக்கினால்), மானஸம், (மனதினால்) என்றும சொல்லுவதற் குக் காரணம் - அவைகளில் உடமபு முதலானவைகளின் வேலை அதிக மாக இருப்பது.*

2. *ஜீவனைக்கொண்டு தைவம் செய்கிற வேலைகளுக்குத்தான் இந்த ஐந்து. தைவம் மாத்திரம செயகிற ஸருஷ்டி முதலான வேலை களுக்கல்ல.*

3. *சுலோகத்தில் ஜீவனை "கர்த்தா" என்று சொல்லியிருக்கிறது. கர்த்தா என்பவன் ஸ்வதந்திரன் (ஒருவனுக்கு உட்படாதவன்) என்று வியாகரணத்தில் சொல்லியிருக்கிறது. அப்படியிருக்க, அவனை தைவத் துக்கு அதீனமெனறு எப்படிச் சொல்லலாம் எனருல்? ஒருவன் ஒரு வேலையைச்செய்வதற்கு அறிவு, ஆசை, பிரயத்தினம்-இந்தமூன்றும் வே*

னவேலைகளை உடைய-மனதோடுகூடிய-ஐந்து கர்மேந்திரியங்கள், உடம்பு முதலானவைகளை வேலைக்கு உதவப்பண்ணுகிற பிராணன, இவைகளுக்கு ஆதமாவாக இருநது ஏவுகிற பகவான்-ஆக ஐந்து. இவைகள் எல்லாவற்றிற்குள்ளும் பகவான்தான் 2 முக்கியமானவர் ஜீவன் பகவானதீனமாக வேலைகளைச் செய்கிறுன் என்று சொல்லப்பட்டிருக்கிறது

இதில் ஒருகேள்வி—ஜீவன பகவானுடைய அதீனமாக எல்லா வேலைகளையும் செய்கிறதாக இருநதால், ஜீவனைக்குறித்து இதைச் செய் என்றும் இதைசசெய்யாதே என்றும், உத்திரவுபண்ணுவது எப்படிக்கூடும? பலமுள்ளவனுலே இழுக்கப்படுகிற பலமில்லாதவனைப் போவென்று உத்திரவு பண்ணுகிறது வீண். பலமுள்ளவனுலே தடுக்கப்பட்ட பலமில்லாதவனைக் குறித்தும் அந்த உத்திரவு கூடாது வெனனறுல்—அவனுல் போகமுடியாது. அப்படியே இழுக்கப்படுகிறவனை போகாதே என்று உததிரவு பண்ணுகிறதும் வீண். அவனுலே போகாமலிருக்கமுடியாதாகையால், தடுக்கப்பட்டவனைப் போகாதே என்று உத்திரவு பண்ணுவதும் வீண் அவன் ஏறகனவே போகமுடியாமலிருக்கையால்—என்று

---

ணும. ஜீவனுக்கு இவைகளைப்பகவான் உணடுபணணுகிறுரென்று உபநிஷததுக்கள சொல்லுகினறன. பிறகு ஜீவன்செயகிறுன். ஜீவனுக்கு அறிவு முதலானவைகளைக்கொடுத்து பகவான் ஒரு வேலையைச்செய்விக்கிறுர்.வெள்ளம்முதலானவை ஒருவனை இழுககிறதுபோல், பலாத்காரததிஞல்அன்று. இதை யறியாமல் ஒரு கேள்வி கேட்கப்பட்டது.

1. தைவம எனகிற சொல்லுக்கு அதிருஷ்டம் எனறுதான பிரஸித்தமான பொருள். அது எல்லா வேலைகளுக்கும் உதவியாக இருக்கத்தகுந்தது. அப்படி இருக்க, அதற்கு பகவானைப் பொருளாக ஏன் சொல்லவேணும என்றுல, பதில்—கர்மம் செய்த உடனேயே போய்விடுகிறபடியால, அதனுல உன்டாகிற அதிருஷ்டம் பலனைக்கொடுக்கிறது என்று சொல்லவேணும். அது பகவானுடைய ஸஙகல்பம் (எண்ணம்) தான். அதைக்காரணமாகச் சொலலுவதைக் காட்டிலும், பகவானையே காரணமென்று சொல்லுவது ஸரியானது. தைவம் எனகிற சொல்லுக்கு பகவானும் பொருளதான்.

2. எப்படி உடம்பு முதலானவைகளை ஏவுகிறதிஞல் ஜீவன் முககியமான காரணமோ,அப்படியே அவனையும் ஏவுகிறதிஞலே பகவான் இன்னும் முக்கியமான காரணம்.

இந்தக் கேள்விக்குப் பிரும்ம ஸூத்திரம் பண்ணின வியாஸரே பதில் சொல்லியிருக்கிறார். அதாவது—பகவான் ஜீவன்களுக்கு உடம்பையும். கண் முதலான இந்திரியங்களையும், அவைகளுக்குச் சில சக்திகளையும் கொடுத்திருக்கிறார் அந்த சக்தியாவது சுற்றிவிட்ட யந்திரங்கள்போல் சில வேலைகளைச் செய்வது. ஜீவன்களுக்கும் சில சக்தியைக் கொடுத்திருக்கிறார். அதாவது— உடம்பையும், இந்திரியங்களையும் ஏவுகிற சக்தி. ஜீவனையும், உடம்பு, கண் முதலானவைகளையும் பகவானே தூக்குகிறார். ஜீவன் ஒரு வேலையைச் செய்வதற்காக ஒரு வஸ்துவைக் காட்டுகிறார். இவன் எடுக்கப் போவதற்காக ரூபாயை கண்ணுக்குக் காட்டுகிறார். இவைகள் எல்லாம் ஜீவன் தன் இச்சைப்படி வேலை செய்வதற்கு உதவியேயல்லாது விரோதமன்று. அவன் வேலை செய்வதற்கும், செய்யாமல் இருப்பதற்கும் பொதுவானவைகள் இப்படிப்பட்ட ஜீவன் ஒரு வேலையைச் செய்ய ஆசைப்பட்டு, பிரயத்தனம் செய்கிறான். அதாவது—உடம்பு முதலானவைகளை ஏவுகிறான்.

ஜீவனுக்கு ஆத்மாவாக இருந்து ஏவுகிற பகவான் ஜீவனுக்கு உத்திரவு கொடுத்து, அந்தவேலையைசசெய்யும்படி செய்கிறார். ஆகையால் ஜீவனுக்கும்தன்நினைவினாலேயே ஒரு வேலையைச்செய்யும்படியான சகதி இருக்கிறது. ஆகையால் அவனைப்பற்றி செய்யென்றும், செய்யாதே என்றும் உத்திரவுபண்ணலாம். உதாரணம்—ஆயிரம் பேர்கள் சேர்ந்து ஒரு தேரை இழுக்கிறார்கள். அவ்விடத்தில் "நிற்காதே இழு" என்று ஒவ்வொருவனையும் உத்திரவு பண்ணுகிறார்கள். 1

---

1. ஜீவனுக்கு இது முதல் என்று இல்லாமல், ஒன்றினால் ஒன்று வளர்ந்து கொண்டு வரும்—புண்ணியம், பாபம் என்று இருவகையான—கர்மம் என்று ஒன்றிருக்கிறது. அதற்குத் தகுந்தபடி வேலைகளைச செய்ய ஆரம்பிககிறான். அதற்கு பகவான் செய்யென்று உத்திரவு கொடுக்கிறார். இதினால் ஜீவன் இஷ்டமிருந்தால் வேலை செய்வது என்பது போகவில்லை. ஒருவன தன்னொருவனால் செய்யமுடியாததை மற்றவர்கள் உதவியினால் செய்கிறான்- அதினால் லாபநஷ்டம் அவனுக்கு இல்லாமல் போகவில்லை. அதுபோல் பகவனில்லாமல் போனால், ஒரு வேலையும் நடக்காது. அவவளவைப் பற்றித்தான் ஜீவனுடைய வேலை பகவானதீனம் என்று சொன்னது.

𑌤𑌤𑍍𑌰𑍈𑌵𑌂 𑌸𑌤𑌿 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌤𑍁 𑌯𑌃 ।
𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌕𑍃𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌤𑍍𑌵𑌾𑌨𑍍𑌨 𑌸 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌦𑍁𑌰𑍍𑌮𑌤𑌿𑌃 ॥௧௬॥

𑌏𑌵𑌂 𑌵𑌸𑍍𑌤𑍁𑌤𑌃 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑍁𑌮𑌤𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑍇 𑌜𑍀𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌸𑌤𑌿, 𑌤𑌤𑍍𑌰 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌕𑍇𑌵𑌲𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍇𑌵 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌂 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿, 𑌸 𑌦𑍁𑌰𑍍𑌮𑌤𑌿𑌃-𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌮𑌤𑌿𑌃. 𑌅𑌕𑍃𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍-𑌅𑌨𑌿𑌷𑍍𑌪𑌨𑍍𑌨𑌯𑌥𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌵𑌸𑍍𑌤𑍁𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌨 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿-𑌨 𑌯𑌥𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ॥ ॥௧௬॥

இப்படி ஜீவன் பகவானுடைய உதவியைக்கொண்டே எல்லா வேலைகளையும் செய்கிறான். அவருடைய உதவி இல்லாமல்

ஜீவனுக்கு இஷ்டப்படி வேலை செய்யச் சக்தி இருக்கிறது ஒன்றை செய்தால், அவனைத் தடுப்பாரில்லை. உதாரணம்—(1) ஒரு பூமியில் அவரை, புடல், பாகல்—இவை முதலான விதைகளைப் போடுகிறோம். இவை எல்லாவற்றிற்கும் ஜலத்தைக் கொட்டுகிறோம். ஜலமில்லாமல்போனால் ஒரு விதையும் முளைக்காது, அந்தந்த விதைக்குத் தகுந்தபடி வெவ்வேறு விதமான முளைகள் உண்டாகின்றன. அந்த முளைகளின் வேறுபாடு விதைகளின் சக்தியாலே யொழிய ஜலத்தினால் அன்று. பகவான ஜலம் போல எல்லாவற்றிற்கும் பொதுவான காரணம். (2) ஒரு தகப்பனுக்கு இரண்டு பிள்ளைகள். அவன் ஒவ்வொரு பிள்ளைக்கும் ரூ 2000 வீதம் பணம் கொடுத்தான். அவர்களில் ஒருவன் தன் கர்மத்திற்குத் தகுந்தபடி லாபம் வரும்படியான வேலையையும், மற்றொருவன் தன கர்மத்திற்குத் தகுந்தபடி நஷ்டம் வரும்படியான வேலையையும் செய்ய ஆரம்பித்தார்கள். இரண்டுபேரும் தகப்பனை வந்து கேட்டார்கள். தகப்பனுக்கு ஒன்றில் லாபம் வரும் என்றும், ஒன்றில் நஷ்டம் வரும் என்றும் தெரியும். ஆனாலும் தகப்பன் கர்மத்துக்குத் தகுந்தபடி பலன் கொடுக்கவேண்டியதாகையால், இரண்டு பேர்களுக்கும் அவரவர்கள் இஷ்டப்படி செய்ய உத்திரவுகொடுத்தான். தகப்பன் தானாக ஒருவனையும் இந்த வேலையைச் செய்யென்று ஏவவில்லை. தகப்பன் உத்திரவும், ஸஹாயமும் இல்லாவிட்டால், ஒருவன் வேலையும் நடக்காது. தகப்பன அதீனம் என்பது இவ்வளவுதான். ஆகையால் கீழ்ச்சொன்ன உத்திரவுகள் கூடும். ஜீவன் ஒரு வேலையைச் செய்வதற்கு உடம்பு முதலானவைகளின உதவி வேண்டியிருந்தாலும், செய், செய்யாதேயென்று உத்திரவு பண்ணக்கூடும். அப்படி செய்வதினாலும், செய்யாததினாலும் வரும் புண்ணிய பாபங்களை அடையவும் கூடும்.

போனால், இவனால் ஒரு வேலையும் செய்யமுடியாது. அப்படி இருக்கும்போது, ஜீவன் அநந்தவேலைகளை பகவான் உதவியன்னியில் தான் ஒருவனாகச்செய்வதாக நினைத்தால், அவன் தப்பாக நினைக்கிறவன். ஆத்மாவைப்பற்றின-சாஸ்திரத்தினால்உண்டான—அறிவு இல்லாத அவனுக்கு வஸ்துவினுடைய உண்மையைப்பற்றின அறிவு ஏற்படாதபடியால், வேலை செய்கிறவன் இன்னொனென்று உள்ளபடி அறியவில்லை. [16]

யஸ்ய நாஹங்க்ருதோ பா⁴வோ பு³த்³தி⁴ர்யஸ்ய ந லிப்யதே।
ஹத்வா(அ)பி ஸ இமாம்ல்லோகாந்ந ஹந்தி ந நிப³த்⁴யதே॥௧௭॥

பரமபுருஷகர்த்ருத்வாநுஸந்தா⁴நேந யஸ்ய பா⁴வ:—கர்த்ருத்வவிஷயோ போ³தோ⁴ நாஹங்க்ருத:—நாஹமிமா நக்ருத:, அஹம் கரோமீதி ஜ்ஞாநம் யஸ்ய நவித்³யத இத்யர்த²:। பு³த்³தி⁴ர்யஸ்ய ந லிப்யதே—அஸ்மிந் கர்மணி மம கர்த்ருத்வாபா⁴வாதே³தத்ப²லம் ந மயா ஸம்ப³த்⁴யதே, ந ச மதீ³யம் கர்மேதி யஸ்ய பு³த்³தி⁴ர்ஜாயத இத்யர்த²:। ஸ இமாந் லோகாந் யுத்³தே⁴ ஹத்வாபி தாந் ந ஹந்தி—ந கேவலம் பீ⁴ஷ்மாதீ³நித்யர்த²:। ததஸ்தேந யுத்³தா⁴க்²யேந கர்மணா ந நிப³த்⁴யதே—தத்ப²லம் நாநுப⁴வதீத்யர்த²: ॥ ௧௭ ॥

அவ—வேலையை நான் செய்யவில்லையென்கிற நினைவின் பலனைச் சொல்லுகிறார்—

பகவானே எல்லாவேலைகளையும் செய்கிறார் என்று நினைத்து, நான் ஒருவனாகவே இந்த வேலையைச் செய்கிறேன் என்று எவன எண்ணவில்லையோ; அதினால் இந்த வேலையினுடைய பலனும் என்னதன்று; இந்த வேலையும் என்னுடையது அன்று என்றும் நினைக்கிறானோ, அவன் சண்டையில் இந்த எல்லா உலகத்தையும் கொன்றாலும்; அவர்களை அவன் கொல்லவில்லை. பீஷ்மர் முதலானவர்களை மாத்திரம்கொல்லவில்லை என்பதில்லை. ஆகையால் சண்டையில் எல்லாரையும் கொல்லுவது அவனுக்கு,கெடுதியை உண்டுபண்ணாது.

அத²—ஸர்வகர்மஸு கர்த்ருத்வாத்³யநுஸந்தா⁴நம் ஸத்த்வகு³ண வ்ருத்³தி⁴ஹேதுரிதி ஸத்த்வோபாதே³யதாஜ்ஞாபநாய கர்ம-

𑌣𑌿 𑌸𑌕𑌲𑌾𑌨𑌿 𑌗𑍁𑌣𑌤𑌃 𑌤𑍍𑌰𑍈𑌵𑌿𑌧𑍍𑌯𑍇𑌨 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑍍, 𑌕𑌰𑍍𑌮𑌚𑍋𑌦𑌨𑌾 𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌂 𑌤𑌾𑌵𑌦𑌾𑌹 —

𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌪𑌰𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌾 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌾 𑌕𑌰𑍍𑌮𑌚𑍋𑌦𑌨𑌾 ।
𑌕𑌰𑌣𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍍𑌤𑍇𑌤𑌿 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑌃 ॥௧௮॥

𑌜𑍍𑌞𑌾𑌨𑌂-𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌷𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂, 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌚-𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮, 𑌪𑌰𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌾-𑌤𑌸𑍍𑌯 𑌬𑍋𑌦𑍍𑌧𑌾 𑌇𑌤𑌿 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌾 𑌕𑌰𑍍𑌮𑌚𑍋𑌦𑌨𑌾. 𑌬𑍋𑌧𑌬𑍋𑌧𑍍𑌯𑌬𑍋𑌦𑍍𑌧𑍃𑌯𑍋𑌗𑌾𑌜𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑍍𑌟𑍋𑌮𑌾𑌦𑌿 𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌧𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃। 𑌤𑌤𑍍𑌰 𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌰𑍂𑌪𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 𑌸𑌂𑌗𑍍𑌰𑍃𑌹𑍍𑌯𑌤𑍇-𑌕𑌰𑌣𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍍𑌤𑍇𑌤𑌿। 𑌕𑌰𑌣𑌂 𑌸𑌾𑌧𑌨𑌭𑍂𑌤𑌂 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌂। 𑌕𑌰𑍍𑌮 𑌯𑌾𑌗𑌾𑌦𑌿𑌕𑌮𑍍। 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌤𑍇𑌤𑌿॥

அவ—நான் செய்யவில்லை என்பது முதலான எண்ணங்கள் ஸத்துவ குணம் வளர்ந்தால் தான் வரும். அதற்காக ஸத்துவத்தைத்தான் எடுத்துக்கொள்ளவேண்டியது என்று காட்டுவதற்காக, ஸத்துவம் முதலான குணங்களால் கர்மங்களுக்கு ஏற்படும் வித்தியாஸத்தை விரிவாகச் சொல்லப்போகிறார். முதலில் கர்மங்களுடைய விதியை (அதாவது இதைச் செய் என்கிற கட்டளையை)ப் பற்றிச் சொல்லுகிறார்—

செய்யவேண்டிய கர்மங்களைப்பற்றின அறிவு, செய்யவேண்டிய கர்மங்கள் (வேலைகள்), வேலைகளை அறிகிறவன்- இந்த மூன்றும் சேர்ந்து தான் ஒரு கர்மத்தினுடைய விதி (இதைச்செய் என்கிற கட்டளை) ஏற்படுகிறது. அவைகளில், அறியவேண்டிய கர்மங்களில் மூன்று பாகங்கள் இருக்கின்றன. அவையாவன—கர்மத்துக்கு உதவியான திரவியம் முதலானவைகள், கர்மம், அதைச்செய்கிறவன் 1

𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌚 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌚 𑌤𑍍𑌰𑌿𑌧𑍈𑌵 𑌗𑍁𑌣𑌭𑍇𑌦𑌤𑌃 ।
𑌪𑍍𑌰𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 𑌗𑍁𑌣𑌸𑌂𑌖𑍍𑌯𑌾𑌨𑍇 𑌯𑌥𑌾𑌵𑌚𑍍𑌛𑍃𑌣𑍁 𑌤𑌾𑌨𑍍𑌯𑌪𑌿 ॥

𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌷𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌨𑍁𑌷𑍍𑌠𑍀𑌯𑌮𑌾𑌨𑌂 𑌚 𑌕𑌰𑍍𑌮 𑌤

1. உதாரணம்—ஸோமயாகம் என்கிற கர்மத்தில் ஸோமம் என்பது காரியத்துக்கு வேண்டிய திரவியம். அதன் ரஸத்தை தேவதைகளுக்குக் கொடுப்பது கர்மம். அதைச்செய்கிறவன் ஒருவன்-என்று மூன்று.

𑌕𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌣𑌞𑍍𑌚 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌚, 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌭𑍇𑌦𑌤𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌧𑍈𑌵 𑌪𑍍𑌰𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌗𑍁𑌣𑌸𑌙𑍍𑌖𑍍𑌯𑌾𑌨𑍇 - 𑌗𑍁𑌣𑌕𑌾𑌰𑍍𑌯𑌗𑌣𑌨𑍇, 𑌯𑌥𑌾𑌵𑌚𑍍𑌛𑍃𑌣𑍁 𑌤𑌾𑌨𑍍𑌯𑌪𑌿 - 𑌤𑌾𑌨𑌿 𑌗𑍁𑌣𑌤𑍋 𑌭𑌿𑌨𑍍𑌨𑌾𑌨𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑍀𑌨𑌿 𑌯𑌥𑌾𑌵𑌚𑍍𑌛𑍃𑌣𑍁 ॥

*செய்யவேண்டிய கர்மத்தைப்பற்றின அறிவு, செய்யப்படும் கர்மம், அதைச்செய்கிறவன்-இவை ஸத்துவம் முதலான குணங்களால் மூன்றுவிதமாக இருக்கின்றன. அவைகளை உள்ளபடிசொல்லுகிறேன், கேள்.* 1 [19]

𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌯𑍇𑌨𑍈𑌕𑌂 𑌭𑌾𑌵𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍀𑌕𑍍𑌷𑌤𑍇 ।
𑌅𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌂 𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑍇𑌷𑍁 𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌮𑍍 ॥௨௦॥

𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌾𑌰𑌿𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌾𑌦𑌿𑌰𑍂𑌪𑍇𑌣 𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑍇𑌷𑍁 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌕𑌰𑍍𑌮𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌿𑌷𑍁 𑌯𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑍈𑌕𑌾𑌕𑌾𑌰𑌤𑍍𑌵𑌂 𑌭𑌾𑌵𑌂 𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌯𑌨𑍇𑌕𑌾𑌕𑌾𑌰𑍇𑌷𑍍𑌵𑌪𑌿 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌸𑌿𑌤𑌦𑍀𑌰𑍍𑌘𑌾𑌦𑌿𑌵𑌿𑌭𑌾𑌗𑌵𑌤𑍍𑌸𑍁 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌕𑌾𑌰𑌤𑌯𑌾 𑌵𑌿𑌭𑌾𑌗𑌰𑌹𑌿𑌤𑌮𑌵𑍍𑌯𑌯𑌂 𑌵𑍍𑌯𑌯𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑍇𑌷𑍍𑌵𑌪𑌿 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌦𑌿𑌶𑌰𑍀𑌰𑍇𑌷𑍍𑌵𑌵𑍍𑌯𑌯𑌂 𑌅𑌵𑌿𑌕𑍃𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌮𑌂 𑌚 𑌕𑌰𑍍𑌮𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌵𑍈𑌷𑌮𑍍𑌯𑍇𑌽𑌪𑍀𑌕𑍍𑌷𑌤𑍇, 𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 ॥ ॥௨௦॥

*கர்மம் செய்கிறவர்களுக்குள் பிராமணன் முதலான பிரிவுகளும், பிருஹ்மசாரி முதலான பிரிவுகளுமிருக்கின்றன. அவர்களில் உடம்பைக் காட்டிலும் வேறாய், அறிவுள்ளதாய், அழிவில்லாததாய், ஆத்மாவென்று ஒன்று இருப்பதாக அறியவேணும். அதிலும் பிராமணன்முதலானஜாதிப்பிரிவும், கருப்பு சிகப்பு, நீளம், குட்டை—இவை முதலான பிரிவுகளும் உடம்புகளுக்கே ஒழிய ஆத்மாக்களுக்கு இல்லை, ஆத்மாக்கள் எல்லாரும் ஞானஸ்வ*

---

1. 18—வது சுலோகத்தில்முன்பாதியில் சொன்னமூன்றையே இந்த சுலோகத்தில் சொல்லுகிறார். பின் பாதியில் சொன்ன மூன்றில்—கர்தா (செய்கிறவன) பரிகஞாதா (அறிகிறவன்) என்று சொல்லப்பட்டவனதான். கர்மம என்பது க்ஞேயம (அறிய வேண்டியது,) என்று சொல்லப்பட்டதுதான். கரணம் என்பது காமத்துடன் சேர்ந்திருக்கிற தென்று அதைதநதனியாய்ச்சொல்லவில்லை.

ரூபம் (அறிவுள்ளவன்) என்பதால் ஒரே மாதிரி. அழியக்கூடிய உடம்புகளில் இருந்தாலும், அவர்களுக்கு அழிவில்லை. மாறுபாடு முதலானவைகள் இல்லை. ஸ்வர்க்கம் முதலான அந்த கர்மங்களின் பலன்களை ஆசைப்படத்தகுந்தவர்களுமில்லை. இவ்விதமாக ஆத்மாவைக்கர்மம் செய்யவேணுமென்று நினைக்கிற வேளைகளில் அறியவேணும். இந்த அறிவை [1] ஸாத்துவிகம் என்று சொல்லுகிறது [20]

ப்ருதக்த்வேந து யஜ்ஜ்ஞாநம் நாநாபாவாந் ப்ருதக்விதாந் ।
வேத்தி ஸர்வேஷு பூதேஷு தஜ்ஜ்ஞாநம் வித்தி ராஜஸம் ॥

ஸர்வேஷு பூதேஷு ப்ராஹ்மணாதிஷு ப்ராஹ்மணாத்யாகாரப்ருதக்த்வேநாத்மவ்ருத்தி நாநாபாவாந் ஸிததீர்க்காதிப்ருதக்த்வேந ச ப்ருதக்விதாந் ஸ்வர்காதிஸம்யோக்யயோக்யாந் கர்மாதிகாரவேளாயாம் யஜ்ஜ்ஞாநம் வேத்தி தஜ்ஜ்ஞாநம் ராஜஸம் வித்தி ॥ ।௨௧॥

ஆத்மாக்களுக்கு பிராமணன் முதலான பிரிவுகளும், கருப்பு சிகப்பு, நீளம், குட்டை—இவை முதலான பிரிவுகளும் இருக்கின்றனவென்றும், அவர்கள் அந்தக்கர்மங்களின் சுவர்க்கம் முதலான பலன்களை அடையத்தகுந்தவர்கள் என்றும் கர்மம் செய்யும் போதுஉண்டாகும் நினைவை ராஜஸம் என்றுசொல்லுகிறது. [21]

யத்து க்ருத்ஸ்நவதேகஸ்மிந் கார்யே ஸக்தமஹேதுகம் ।
அதத்த்வார்த்தவதல்பம் ச தத்தாமஸமுதாஹ்ருதம் ॥ ॥௨௨॥

யத்து-ஜ்ஞாநமேகஸ்மிந் கார்யே-ஏகஸ்மிந் கர்த்தவ்யே கர்மணி ப்ரேதபூதகணாத்யாராதநரூபே அத்யல்பஃபலே

1. ஜீவன்கள் பகவானுடைய ஸொத்து. இவர்கள் எந்தப்பலன்களை அனுபவித்தால், பகவானுக்கு இஷ்டமாயிருக்குமோ, அவைகளைத்தான் ஆசைப்படவேண்டியது. இவர்கள் சுவர்க்கம் முதலானவைகளை அனுபவிப்பது பகவானுக்கு இஷ்டமன்று. ஆகையால் அவைகளை ஆசைப்படத்தகுந்தவர்களல்ல. இது முதலான உண்மையை அவன் அறிந்திருக்கிறபடியால், அந்த அறிவை ஸாத்துவிகம் என்று சொல்லுகிறது. ஸத்துவம் என்பது உண்மையைக்காட்டும்.

[illegible] ॥ ௨௨ ॥

சிலர் பிரேதம், பூதம்-இவை முதலானவைகளுக்கு ஸந்தோஷத்தைக் கொடுப்பதும், மிகவும் கொஞ்சமான பலனைக்கொடுப்பதுமான ஒரு வேலையை மிகவும் பெரியபலனைக்கொடுக்கிறதாக நினைக்கிறார்கள், இப்படி அவர்கள் நினைப்பதற்கு துளிக்கூட நியாயமில்லை. ராஜஸமான அறிவுள்ளவர்களைப்போல் ஆத்மாக்களைப்பல பிரிவுள்ளவாகளாகவும் நினைக்கிறார்கள். எந்த நினைவினால் இப்படி நினைக்கிறார்களோ அந்தஅறிவைத்தாமஸம் என்றுசொல்லுகிறது.

[illegible]

[illegible] ॥ ௨௩ ॥

[illegible] ॥ ௨௩ ॥

அவ—கர்மத்தைச் செய்யவேணுமென்று நினைக்கும் வேளையில் அந்தக்கர்மத்தைச்செய்யத்தகுந்த ஜீவனைப்பற்றின அறிவை மூன்று விதமாகச்சொல்லி, செய்யப்படும்கர்மத்தினுடையமூன்று விதங்களைச் சொல்லுகிறார்—

தன்னுடைய வர்ணத்துக்கும், ஆசிரமத்துக்கும்தகுந்ததும், சீழ்4-வதுசுலோகத்தில் சொன்னபடி மூன்று ஸங்கதிகளைவிட்டதும், கீர்த்தி வருவதற்காகவும், அகீர்த்திபோவதற்காகவும் செய்

யப்படாததுமான எந்தவேலை சுவர்க்கம் முதலான அதின் பலனை விரும்பாமல், இதை அவசியம் செய்ய வேணுமென்று நினைத்து, செய்யப்படுகிறதோ, அந்தக் கர்மத்தை ஸாத்துவிகம் என்றுசொல்லுகிறது [23]

யத்து காமேப்ஸுநா கர்ம ஸாஹங்காரேண வா புந:|
க்ரியதே பஹுளாயாஸம் தத்ராஜஸமுதாஹ்ருதம் ||

யத்து புந: காமேப்ஸுநா-ஃபலப்ரேப்ஸுநா ஸாஹங்காரேண வா । வாஶப்தஶ்சார்த்தே । கர்த்ருத்வாபிமாநயுக்தேந ச பஹுளாயாஸம் யத்கர்ம க்ரியதே; தத்ராஜஸம் । பஹுளாயாஸத்வம் கர்ம மயைவ க்ரியத இத்யேவம்ரூபாபிமாநயுக்தேந யத்கர்ம க்ரியதே, தத்ராஜஸமித்யர்த்த:|| ||௨௪||

பகவானைக் கலக்காமல் நான் செய்கிறேன் என்கிறஎண்ணத்துடனும், பலனை ஆசைப்பட்டும், மிகவும்பிரயாஸமுள்ளஇந்தவேலையை நானுகக்கொண்டு செய்கிறேன்; இன்னொருவரால்முடியாது 1 என்கிறஎண்ணத்துடனும்எந்தக்கர்மம்செய்யப்படுகிறதோ, அதை ராஜஸம் என்று சொல்லுகிறது [24]

அநுபந்தம் க்ஷயம் ஹிம்ஸாமநபேக்ஷ்ய ச பௌருஷம்|
மோஹாதாரப்யதே கர்ம யத்தத்தாமஸமுச்யதே ||௨௫||

க்ருதே கர்மண்யநுபந்த்யாநம் து:கமநுபந்த:| க்ஷய: கர்மணி க்ரியமாணே அர்த்தவிநாஶ:| ஹிம்ஸா தத்ர ப்ராணிபீடா| பௌருஷம்-ஸ்வஸ்ய கர்மஸமாபநஸாமர்த்யம்| ஏதாந்யநபேக்ஷ்ய-அவிம்ருஶ்ய, மோஹாத்-பரமபுருஷகர்த்ருத்வாஜ்ஞாநாத் யத்கர்மாரப்யதே, தத்தாமஸமுச்யதே|| ||௨௫||

ஒரு வேலையைச் செய்யும்போது-அதைச்செய்தபிறகு வருகிற 2 தொந்தரவுகளையும், செய்யும்போது வருகிறபணச்செலவை

---

1 அந்த வேலைக்கு அவ்வளவு பிரயாஸம் வேண்டாம். அது ரஜோகுணத்தால் ஏற்படுகிறது.

2 தனக்கும் மற்றவர்களுக்கும் வரும்தொந்தரவுகள், இது "பிராணிகள்" என்று பொதுவாய்ச் சொன்னதினுல் ஏற்படுகிறது.

யும், பிராணிகளுடைய தொந்தரவுகளையும், தன்னால் அந்த வேலையைச்செய்துமுடிக்க முடியும்முடியாது என்பதையும், யுக்திகளையும் சாஸ்திரத்தையும்கொண்டு கவனிக்காமலும், தைவம் செய்கிறது என்று அறியாமலும், எந்த வேலை செய்யப்படுகிறதோ, அந்த வேலையைத்தாமஸம் என்று சொல்லுகிறது　　[25]

முக்தஸங்கோऽநஹம்வாதீ த்ருத்யுத்ஸாஹஸமந்வித꞉ ।
ஸித்த்யஸித்த்யோர்நிர்விகார꞉ கர்தா ஸாத்விக உச்யதே ॥

முக்தஸங்க꞉-ஃபலஸங்கரஹித꞉। அநஹம்வாதீ-கர்த்ருத்வாபிமாநரஹித꞉। த்ருத்யுத்ஸாஹஸமந்வித꞉-ப்ராரப்தே கர்மணி யாவத்ஸமாப்த்யவர்ஜநீயது꞉கதாரணம் த்ருதி꞉, உத்ஸாஹ꞉-உத்யுக்தசேதஸ்த்வம், தாப்யாம் ஸமந்வித꞉। ஸித்த்யஸித்த்யோர்நிர்விகார꞉-யுத்தாதௌ கர்மணி ததுபகரணதநார்ஜநாதௌ ச ஸித்த்யஸித்த்யோரவிக்ருதசித்த꞉। கர்தா ஸாத்விக உச்யதே ॥　　॥ ௨௬ ॥

கர்மத்தினால் வரும் ஸ்வர்க்கம் முதலான பலன்களில் ஆசையில்லாதவன்; நான் செய்கிறேன் என்று எண்ணமில்லாதவன்; ஆரம்பித்தகாரியம் முடிவதற்குள் வரும் தொந்தரவுகளுக்குப் பயப்படாதவன்; அந்தக் காரியத்தைச் செய்துமுடிப்பதில் ஆவலுள்ளவன்; சண்டை முதலானகாரியங்களிலும், அவைகளுக்கு உதவியாகப் பணம் கிடைப்பதற்காகச்செய்கிற வேலைகளிலும், பலன்கள் கிடைத்தாலும், கிடைக்காவிட்டாலும், கலக்கமில்லாத மனதுள்ளவன் — இவ்விதமாக இருந்து கர்மங்களைச்செய்கிறவனை ஸாத்துவிகனென்று சொல்லுகிறது.　　[26]

ராகீ கர்மபலப்ரேப்ஸுர்லுப்தோ ஹிம்ஸாத்மகோऽஶுசி꞉।
ஹர்ஷஶோகாந்வித꞉ கர்தா ராஜஸ꞉ பரிகீர்தித꞉ ॥௨௭॥

ராகீ-யஶோऽர்தீ। கர்மபலப்ரேப்ஸு꞉- கர்மபலார்தீ। லுப்த꞉-கர்மாபேக்ஷிதத்ரவ்யவ்யயஸ்வபாவரஹித। ஹிம்ஸாத்மக꞉-பராந் பீடயித்வா தை꞉ கர்மகர்தா। அஶுசி꞉-கர்மாபேக்ஷித ஶுத்திரஹித꞉। ஹர்ஷஶோகாந்வித꞉ யுத்தா

யுத்தாதிகர்மணி ஜயாதிநிமித்தஹர்ஷஶோகாந்விதः கர்தா ராஜஸः பரிகீர்திதः || ||௨௭||

கீர்த்தியையும், கர்மத்தினால் வரும் ஸ்வர்க்கம் முதலான பலன்களையும் விரும்புகிறவன்; செய்கிற கர்மங்களுக்கு எவ்வளவு திரவியம் செலவழிக்க வேணுமோ, அதைச் செலவழிக்க மனதாகாதவன்; பிறர்களைத் தொந்தரவுபண்ணி, அவர்களைக்கொண்டு, வேலை செய்கிறவன்; கர்மங்களைச் செய்வதற்கு வேண்டிய சுத்தியில்லாதவன்; சண்டை முதலானவைகளில் தனக்கு வேண்டிய பலன் கிடைத்தால் ஸந்தோஷப்படுகிறவன்; கிடைக்காவிட்டால் வருத்தப்படுகிறவன்—இவ்விதமாக இருந்து கர்மங்களைச் செய்கிறவனை ராஜஸன் என்று சொல்லுகிறது. [27]

அயுக்தः ப்ராக்ருதः ஸ்தப்தः ஶடோ நைஷ்க்ருதிகோऽலஸः।
விஷாதீ தீர்கஸூத்ரீ ச கர்தா தாமஸ உச்யதே ||௨௮||

அயுக்தः-ஶாஸ்த்ரீயகர்மாயோக்யः விகர்மஸ்தः| ப்ராக்ருதः-அநப்யஸ்தவித்யः| ஸ்தப்தः-அநாரம்பஶீலः| ஶடः-அபிசாராதிகர்மருசிः| நைஷ்க்ருதிகः-வஞ்சநபரः| அலஸः-ஆரப்தேஷ்வபி கர்மஸு மந்தப்ரவ்ருத்திः-| விஷாதீ-அதிமாத்ராவஸாதஶீலः| தீர்கஸூத்ரீ-அபிசாராதிகர்ம குர்வந் பரேஷு தீர்ககாலாவஸ்தாயிநமநர்த்தம் பர்யாலோசயந் யः-ஏவம்பூதோ யः கர்தா ஸ தாமஸः || || ௨௮ ||

சாஸ்திரத்தில் சொல்லிய கர்மங்களுக்குத் தகாதவன்; நல்ல புஸ்தகங்களைப் பெரியவர்களிடம்கேட்டு நல்ல ஸங்கதிகளை அறியாதவன்; சோம்பலுள்ளவன், (அதாவது—ஒரு வேலையையும் செய்ய ஆரம்பிக்கப் பிடிக்காதவன்); பிறருக்குக் கொலை வரையிலுள்ள தொந்தரவைச்செய்ய ஆசையுள்ளவன், பொய் முதலானவைகளால் பிறரை ஏய்க்கிறவன்; செய்ய ஆரம்பித்த காரியத்திலும் சோம்பலுள்ளவன், (அதாவது—சுருசுருப்பாய் முடிக்காதவன்); எப்பொழுதும் எதைப்பற்றியாவது வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிற ஸ்வபாவமுள்ளவன்; பிறர்களுக்குக் கொலை முதலானவைகளைச் செய்து, நெடு நாள் வரைக்கும்உள்ள தொந்தரவை உண்டுபண்ண வே

ண்டுமென்று நினைக்கிறவன்—இப்படியிருந்து வேலைகளைச் செய்கிறவனைத் தாமஸன் என்று சொல்லுகிறது. [28]

ஏவம்—கர்த்தவ்யகர்மவிஷயஜ்ஞாநே, கர்த்தவ்யே கர்மணி, கர்த்தரி ச ஸத்த்வாதிகுணதஸ் த்ரைவித்யமுக்த்வா | இதாநீம் ஸர்வதத்த்வஸர்வபுருஷார்த்தநிச்சயரூபாயா புத்தே: த்ருதேச்ச குணதஸ் த்ரைவித்யமாஹ —

புத்தேர்பேதம் த்ருதேச்சைவ குணதஸ்த்ரிவிதம் ச்ருணு |
ப்ரோச்யமாநமசேஷேண ப்ருதக்த்வேந தநஞ்ஜய || ௨௯

புத்தி:—விவேகபூர்வகம் நிச்சயரூபம் ஜ்ஞாநம் | த்ருதி:—ஆரப்தாயா: க்ரியாயா விக்நோபநிபாதேऽபி தாரணம் | தயோ: ஸத்த்வாதிகுணதஸ்த்ரிவிதம் பேதம் ப்ரோச்யமாநம் யதாவச்ச்ருணு || ௨௯ ||

அவ—இப்படிச செய்யவேண்டிய கர்மஙகளைப்பற்றின அறிவும், செய்பத்தகுந்த கர்மங்களும், அவைகளைச் செய்கிறவனும், ஸததுவப் முதலான மூன்று குணங்களாலே மூன்று விதஙகள் என்று சொல்லப்பட்டன. இபபோது எல்லா வஸ்துக்களின் இருப்பைப்பற்றியும், தனக்கு வேண்டிய எல்லாப் பிரயோஜனங்களைப் பற்றியும் ஏற்படுகிறதீர்மானமான அறிவிக்கும், "த்ருதி" (ஒருகாரியத்தைக் கட்டாயம் முடிக்கவேணும் என்ற எண்ணம்), என்பதற்கும் ஸத்துவம் முதலானவைகளால் ஏற்படும் விதநியாஸத்தைச சொல்லுகிறார்—

ஒரு ஸங்கதியைப்பற்றி யோஜித்து உண்டாகிற— எதிர்கக்ஷிகளைத் தள்ளும்படியான-தீர்மானத்திற்கும், ஒரு காரியத்தைச் செய்ய ஆரம்பித்து, நடுவில் என்ன இடைஞ்சல் வந்தாலும், அதை விடாமல் முடிக்கவேணும் என்கிறஎண்ணத்துக்கும் (த்ருதிக்கும்) ஸத்துவம் முதலானவைகளால் ஏற்படும் வித்தியாஸத்தை உள்ளபடி சொல்லுகிறேன், கேள். [29]

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச கார்யாகார்யே பயாபயே |
பந்தம் மோக்ஷம் ச யா வேத்தி புத்தி: ஸா பார்த்த ஸாத்த்விகீ ||

ப்ரவ்ருத்திரப்யுதயஸாதநபூதோ தர்ம꞉। நிவ்ருத்திர்மோக்ஷஸாதநபூத꞉। தாவுபௌ யதாவஸ்திதௌ யயா புத்திர்வேத்தி। கார்யாகார்யே ஸர்வவர்ணாநாம் ப்ரவ்ருத்திநிவ்ருத்தி தர்மயோரநுஷ்டாநாம் தேஶகாலாவஸ்தாவிஶேஷேஷு இதம் கார்யமிதமகார்யமிதி யா வேத்தி। பயாபயே-ஶாஸ்த்ராதிவ்ருத்திஸமுத்தாநம், ததநுவ்ருத்திஸமுத்தாநம் | பந்தம் மோக்ஷம் ச-ஸம்ஸாரயாதாத்ம்யம் தத்விமோகயாதாத்ம்யம் ச யா வேத்தி, ஸா ஸாத்த்விகீ புத்தி꞉ ॥ ॥ ௩0 ॥

மோக்ஷம் தவிர மற்ற பலன்களைக் கொடுக்கும் தர்மங்களையும், மோக்ஷத்தைக் கொடுக்கும் தர்மங்களையும் எந்த புத்தி உள்ளபடி அறிகிறதோ; அந்தந்த வர்ணத்தார்கள் கீழ்ச்சொன்ன இரண்டு தர்மங்களில் ஒன்றைச்செய்யும்போது, இடங்களுக்கும், காலங்களுக்கும், தங்கள் இருப்புக்கும் தகுந்தபடி இதைச் செய்ய வேணும், இதைச் செய்யக்கூடாது என்று எந்த புத்தி உள்ளபடி அறிகிறதோ; இந்த ஸங்கதி சாஸ்திரத்திற்கு விரோதமானது; இது நடுங்கவேண்டிய ஸங்கதி; இது சாஸ்திரத்திற்கு ஒத்தது; இது ஸுகத்தைக் கொடுக்கக்கூடியது என்பதையும், பந்தம் (ஸம்ஸாரம்) என்பது இன்னது, மோக்ஷம் என்பது இன்னது என்பதையும் எந்த புத்தி உள்ளபடி அறிகிறதோ—அதை ஸாத்துவிகம் என்று சொல்லுகிறது. [30]

யயா தர்மமதர்மம் ச கார்யம் சாகார்யமேவ ச |
அயதாவத்ப்ரஜாநாதி புத்தி꞉ ஸா பார்த ராஜஸீ ||௩௧||

யயா பூர்வோக்தம் த்விவிதம் தர்மம் தத்விபரீதம் ச தத³நுஷ்டாநாம் தேஶகாலாவஸ்தாதிஷு கார்யம் சாகார்யம் ச யதாவந்ந ஜாநாதி, ஸா ராஜஸீ புத்தி꞉ ॥ ॥௩௧॥

கீழ்ச்சொன்ன இரண்டு தர்மங்களையும், அவைகளுக்கு எதிர்த்தட்டானவைகளையும் (அதர்மங்களையும்), அந்த தர்மங்களைச்செய்யும்போது இடம், காலம், அவஸ்தை (இருப்பு)—இவைகளுக்குத் தகுந்தபடி எதைச் செய்யவேண்டியது, எதை செய்யக்கூடாது

என்பதையும், உள்ளபடி எந்த புத்தி அறியவில்லையோ, அதை ராஜஸம் என்று சொல்லுகிறது. [31]

அதர்மம் தர்மமிதி யா மந்யதே தமஸாவ்ருதா ।
ஸர்வார்த்தாந் விபரீதாம்ஶ்ச புத்தி: ஸா பார்த்த தாமஸீ ॥

தாமஸீ து புத்திஸ்தமஸாவ்ருதா ஸதீ ஸர்வாநர்த்தாந் விபரீதாந் மந்யதே। அதர்மம் தர்மம், ஸந்தமஸந்தம், அஸந்தம் ஸந்தம், பரம் ச தத்த்வமபரம், அபரம் ச பரம், ஏவம் ஸர்வம் விபரீதம் மந்யத இத்யர்த்த: ॥

தமோகுணம் மேலிட்டு, எந்த புத்தி கீழ்ச்சொன்ன எல்லா ஸங்கதிகளை மாறுதலாக நினைக்கிறதோ, அதாவது—அதர்மத்தைத் தர்மமென்றும், தர்மத்தை அதர்மமென்றும், இருப்பதை இல்லையென்றும், இல்லாததை இருப்பதென்றும், உயர்ந்த வஸ்துவை இளப்பமென்றும், இளப்பத்தைஉயர்ந்ததென்றும் நினைக்கிறதோ, அதைத் தாமஸம் என்று சொல்லுகிறது. 1 [32]

த்ருத்யா யயா தாரயதே மந: ப்ராணேந்த்ரியக்ரியா: ।
யோகேநாவ்யபிசாரிண்யா த்ருதி: ஸா பார்த்த ஸாத்த்விகீ ॥

யயா த்ருத்யா யோகேநாவ்யபிசாரிண்யா மந:ப்ராணேந்த்ரியாணாம் க்ரியா: புருஷோ தாரயதே। யோகோ மோக்ஷஸாதநம் பகவதுபாஸநம்। யோகேந — யோகப்ரயோஜநேந அவ்யபிசாரிண்யா—யோகோத்தேஶேந ப்ரவ்ருத்தா மந:ப்ராணேந்த்ரியக்ரியா: யயா த்ருத்யா தாரயதே ஸா ஸாத்த்விகீத்யர்த்த: ॥ ॥ ௩௩ ॥

மோக்ஷத்திற்காக பகவானைத் தியானம்செய்ய 2 உதவியான

---

1. ஸாத்துவிக புத்தி உள்ளதை உள்ளபடி நினைக்கிறது. ராஜஸ புத்தி சங்கை மஞ்சள் நிறமுள்ளதாக நினைக்கிறது. இதில் சங்கு என்பது ஸரி. மஞ்சள் நிறம் என்பது பிசகு. தாமஸபுத்தி மாமரத்தைப் புளிய மரமென்று நினைக்கிறது. இரண்டாவதிற்கு குணத்தில் மாறாட்டம். மூன்றாவதற்கு உருப்படியிலேயே மாறாட்டம்.

2. மனதின் வேலை தியானம்செய்து ஆத்மாவைப்பார்ப்பது. பிராணன் வேலை பிராணாயாமம்செய்வது. இது தியானத்திற்குஇடைஞ்சலான

மனது, பிராணன், இந்திரியங்கள்-இவைகளின் வேலைகளை விடாமல் நடத்துவதை (தருதியை) ஸாத்துவிகம் என்று சொல்லுகிறது. இதை உறுதியென்றும் சொல்லுகிறது. [33]

𑌯𑌯𑌾 𑌤𑍁 𑌧𑌰𑍍𑌮𑌕𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍 𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 𑌧𑌾𑌰𑌯𑌤𑍇𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑍀 𑌧𑍃𑌤𑌿𑌃 𑌸𑌾 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌰𑌾𑌜𑌸𑍀 ॥௩௪॥

𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑍀 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌧𑌰𑍍𑌮𑌕𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍 𑌯𑌯𑌾 𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 𑌧𑌾𑌰𑌯𑌤𑍇 𑌸𑌾 𑌰𑌾𑌜𑌸𑍀 । 𑌧𑌰𑍍𑌮𑌕𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌶𑌬𑍍𑌦𑍇𑌨 𑌤𑌤𑍍𑌸𑌾𑌧𑌨𑌭𑍂𑌤𑌾 𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑍀𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌰𑌾𑌜𑌸𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 𑌧𑌰𑍍𑌮𑌕𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌾 𑌏𑌵 𑌵𑌿𑌵𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌃 । 𑌅𑌤𑍋 𑌧𑌰𑍍𑌮𑌕𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌯𑌾 𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑍀𑌨𑌾𑌂 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 𑌯𑌯𑌾 𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 𑌧𑌾𑌰𑌯𑌤𑍇, 𑌸𑌾 𑌰𑌾𑌜𑌸𑍀 𑌧𑍃𑌤𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 । ॥ ௩௪ ॥

கர்மங்களால் வரும்—ஸ்வர்க்கம் முதலான—பலன்களில் அதிகமான ஆசையால், தர்மம், அர்த்தம், காமம், (அறம், பொருள் இன்பம்) என்கிற மூன்று பலன்களைக் கொடுக்கக்கூடிய மனது முதலானவைகளின் வேலைகளை விடாமல்நடத்த வேணுமெனகிற எண்ணத்தை (த்ருதியை) ராஜஸம் என்று சொல்லுகிறது [34]

𑌯𑌯𑌾 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌂 𑌭𑌯𑌂 𑌶𑍋𑌕𑌂 𑌵𑌿𑌷𑌾𑌦𑌂 𑌮𑌦𑌮𑍇𑌵 𑌚 ।
𑌨 𑌵𑌿𑌮𑍁𑌞𑍍𑌚𑌤𑌿 𑌦𑍁𑌰𑍍𑌮𑍇𑌧𑌾 𑌧𑍃𑌤𑌿𑌃 𑌸𑌾 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌤𑌾𑌮𑌸𑍀 ॥௩௫॥

𑌯𑌯𑌾 𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌂 𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌂 𑌮𑌦𑌂 𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍁𑌭𑌵𑌜𑌨𑌿𑌤𑌂 𑌮𑌦𑌂, 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌮𑌦𑌾𑌵𑌹𑌾𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌾 𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌦𑍁𑌰𑍍𑌮𑍇𑌧𑌾 𑌨 𑌵𑌿𑌮𑍁𑌞𑍍𑌚𑌤𑌿 𑌧𑌾𑌰𑌯𑌤𑌿 । 𑌭𑌯𑌶𑍋𑌕𑌵𑌿𑌷𑌾𑌦𑌶𑌬𑍍𑌦𑌾𑌶𑍍𑌚 𑌭𑌯𑌶𑍋𑌕𑌾𑌦𑌿𑌦𑌾𑌯𑌿𑌵𑌿𑌷𑌯𑌪𑌰𑌾𑌃 । 𑌤𑌤𑍍𑌸𑌾𑌧𑌨𑌭𑍂𑌤𑌾𑌶𑍍𑌚 𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌦𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 𑌯𑌯𑌾 𑌧𑌾𑌰𑌯𑌤𑍇, 𑌸𑌾 𑌧𑍃𑌤𑌿𑌸𑍍𑌤𑌾𑌮𑌸𑍀 ॥௩௫॥

தூக்கத்தையும், பிள்ளை, பணம் முதலானவைகளை அனுபவிப்பதினால் வரும திமிரையும், உண்டுபண்ணக்கூடிய வேலைகளையும், பயத்தையும், சோகத்தையும், விஷாததையும் கொடுக்கக்

---

சிரமத்தையும் ப ங்களையும் போககுகிறது. இந்திரியங்கள் வேலை திப ன ம் செய்யாத வேளைகளில் அதறகு உதவியானவைகளைச் செயவது.

கூடிய வேலைகளையும் விடாமல் நடத்தவேணுமென்கிற கெட்ட எண்ணத்தை (த்ருதியை)த் தாமஸம் என்று சொல்லுகிறது.1 [35]

ஸுகம் த்விதாநீம் த்ரிவிதம் ஸ்ருணு மே பரதர்ஷப ||

ஸர்வஸ்யைதஸ்ய ஜ்ஞாநகர்மகர்த்ருபுத்தித்ருதிபேதஸ்ய யத்ஸாத்யம் ஸுகம் தத் குணதஸ் த்ரைவித்யேநேதாநீம் ஸ்ருணு ||

சீழ்ச்சொன்ன அறிவு முதலானவைகளால் அடையவேண்டிய பிரயோஜநம் ஸுகம். அந்தஸுகம் மூன்று விதமென்பதைச் சொல்லுகிறேன்; கேள். [35½]

அப்யாஸாத் ரமதே யத்ர து:காந்தம் ச நிகச்சதி ||36||

யஸ்மிந் ஸுகே சிரகாலாப்யாஸாத் க்ரமேண நிரதிசயாம் ரதிம் ப்ராப்நோதி| து:காந்தம் ச நிகச்சதி - நிகிலஸ்ய ஸாம்ஸாரிகஸ்ய து:கஸ்யாந்தம் நிகச்சதி || ||36||

எந்த ஸுகத்தை வெகுகாலம் அனுபவித்து, இருக்க இருக்க அளவில்லாத ஸந்தோஷத்தை ஒருவன் அடைவனோ, ஸம்ஸாரத்தினால் ஏற்படுகிற எல்லா துக்கங்களும அடியோடு போய்விடுமோ; அது ஸாத்துவிகம். [36]

அத — ததேவ விசிநஷ்டி —

யத்ததக்ரே விஷமிவ பரிணாமே(அ)ம்ருதோபமம் |

தத்ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்தமாத்மபுத்திப்ரஸாதஜம் ||37||

யத் தத்ஸுகமக்ரே - யோகோபக்ரமவேலாயாம் பஹுலாயாஸஸாத்யத்வாத் விவிக்தஸ்வரூபஸ்யாநநுபூதத்வாச்ச விஷமிவ து:கமிவ பவதி| பரிணாமே(அ)ம்ருதோபமம் - பரிணாமே - வி

---

1. பயத்தைக்கொடுக்குமவேலைவனுத்தவனோடு சண்டை. அது இவனுடைய திமிரினல் உண்டாகிறது. சோகத்தைக் கொடுக்கும் வேலை பந்துக்களுக்கு மனவருத்தம். அது இவனுடைய கோபத்தினல் உண்டாகிறது. விஷாதத்தைக் கொடுக்கும் வேலை வீணுகப் பணத்தைச் செலவழிப்பது. நல்ல விஷயத்தில் இருக்கும் த்ருதியை உறுதியென்று சொல்லுகிறது. கெட்ட விஷயத்திலிருக்கும் த்ருதியைப் பிடிவாதமென்று சொல்லுகிறது.

பாகே அப்யாஸபலேந விவிக்தஸ்வரூபாவிர்பாவேந அம்ருதோபமம் பவதி। தத் ஆத்மபுத்திப்ரஸாதஜம் - ஆத்மவிஷயா புத்திர் ஆத்மபுத்தி: தஸ்யா: நிவ்ருத்தஸகலேதரவிஷயத்வம் ப்ரஸாத:। நிவ்ருத்தஸகலேதரவிஷயபுத்த்யா விவிக்தஸ்வபாவாத்மாநுபவஜநிதம் ஸுகம் அம்ருதோபமம் பவதி। தத் ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்தம் ॥ ॥ ௩௭ ॥

அவ—அதைப்பற்றி நன்றாய்ச் சொல்லுகிறார்—

எந்த ஸுகத்தைக் கொடுக்கக்கூடிய வேலை, அதாவது—ஆத்மாவின் தியானம்—1 ஆரம்பிக்கும் காலத்தில்விஷம்போலிருக்குமோ; அதாவது—மிகுந்த பிரயாஸத்தோடு அதைச் செய்யவேண்டியதாகையாலும், உடம்பைக்காட்டிலும் வேறாக ஆத்மாவென்று ஒரு வஸ்துவை இதுவரையில் அறியாததினாலும், மிகுந்ததொந்தரவைக் கொடுக்குமோ, நல்லகர்மங்களைச் செய்வதினால் பகவானுக்கு மிகுந்த ஸந்தோஷமுண்டாய், அதினால் உடம்பைக்காட்டிலும் வேறான ஞானஸ்வரூபமான ஆத்மாவின் நினைவு பழக்கத்தினால் வளரும்போது, அமிருதம்போல் ஸுகமாயிருக்குமோ, அதாவது—வேறு வஸ்துக்களை நினையாமல் ஆத்மா ஒன்றையே பார்த்துக்கொண்டிருப்பதினால் அளவில்லாத ஸுகத்தை அநுபவிப்பனோ—அந்தஸுகத்தைஸாத்துவிகமென்று சொல்லுகிறது. [37]

விஷயேந்த்ரியஸம்யோகாத் யத்தத³க்ரே(அ)ம்ருதோபமம் ।
பரிணாமே விஷமிவ தத்ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ ௩௮ ॥

அக்ரே - அநுபவவேலாயாம் விஷயேந்த்ரியஸம்யோகாத் யத்தத் அம்ருதமிவ பவதி । பரிணாமே - விபாகே விஷயாணாம் அநுபவநிவ்ருத்தக்ஷயாதௌ நிவ்ருத்தே தஸ்ய ச ஸுகஸ்ய நிரயாதிநிமித்தத்வாத் விஷமிவ பீதம் பவதி । தத்ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ ॥ ௩௮ ॥

---

1 ஒருவன் ஒருவித்தையைப் படிக்க ஆரம்பிக்கும் போது, மிகவும் அலுப்பாக இருக்கும். ஜன்மாந்திரஸுக்ருதத்தினாலும், பெரியோர்களுடைய அநுக்கிரஹத்தினாலும், அந்தவித்தை மனதில் நன்றாய்ப்பட்டால், பிறகு அவனுக்கும் அவனால்பலபேர்களுக்கும் மிகுந்தஸுகம்உண்டாகிறது.

எந்த ஸுகம் கண் முதலான இந்திரியங்கள் பார்க்கத் தகுந்தது முதலான விஷயங்களுடன் சேர்ந்து உண்டாகி, அனுபவிக்கும் வேளையில் அமிருதம்போல் மிகவும் இன்பமாயிருந்து, பிறகு அது ஸுகமாகத் தோன்றுவதற்குக் காரணமான பசி முதலானவை போனபோது, மிகுந்த தொந்தரவைக் கொடுப்பதாலும், மேலும் நரகம் முதலான பெரிய தொந்தரவுகளைக் கொடுக்கக்கூடியதாகையாலும், விஷத்தைச் சாப்பிட்டதுபோல் இருக்குமோ—அதை ராஜஸம் என்று சொல்லுகிறது. 1 [38]

யத³க்³ரே சாநுப³ந்தே⁴ ச ஸுக²ம் மோஹநமாத்மந: |
நித்³ராலஸ்யப்ரமாதோ³த்த²ம் தத்தாமஸமுதா³ஹ்ருதம் ||௩௯||

யத்ஸுக²மக்³ரே சாநுப³ந்தே⁴ ச—அநுப⁴வவேலாயாம் விபாகே ச, ஆத்மநோ மோஹநம்—மோஹஹேதுர்ப⁴வதி| மோஹோ(அ)த்ர யதா²வஸ்தி²தவஸ்த்வப்ரகாஶ: | நித்³ராலஸ்யப்ரமாதோ³த்த²ம்—நித்³ராலஸ்யப்ரமாத³ஜநிதம் | நித்³ராதே³ர்ஹ்யநுப⁴வவேலாயாமபி மோஹஹேதுத்வம் | நித்³ராயா மோஹஹேதுத்வம் ஸ்பஷ்டம் | ஆலஸ்யப்ரமாத³யோஶ்ச இந்த்³ரியவ்யாபாரமாந்த்³யரூபத்வேந ஜ்ஞாநமாந்த்³யஹேதுத்வம் | அநுப⁴வவேலாயாமபி ஜ்ஞாநமாந்த்³யம் ப⁴வதி| தத ஏவ விபாகேऽபி மோஹஹேதுத்வம்| தத்ஸுக²ம் தாமஸமுதா³ஹ்ருதம் | அதோ முமுக்ஷுணா ராஜஸதாமஸே ஸுகே² நிரஸ்ய ஸாத்த்விகமேவோபாதே³யமித்யுக்தம் ப⁴வதி || ||௩௯||

---

1. உதாரணம்—ஒருவன் நல்ல பசியாக இருந்த ஸமயத்தில் விஷம் கலந்த ஸாதத்தை ஸாப்பிட்டு விடுகிறான். அப்போது மிகவும் ஸுகமாக இருந்தது. பிறகு அளவில்லாத தொந்தரவு உண்டாகிறது. அதுபோல். இன்னொரு உதாரணம்—ஒருவன் ஒரு பெண் மிகவும் அழகாகவும் சமத்தாகவும் இருக்கிறதென்று அதைக் கல்லியாணம் செய்துகொண்டு, அதைப்பார்ப்பதையும், தொடுவதையும், அத்துடன் பேசுவதையும் மிகுந்த ஸுகமென்று அனுபவிக்கிறான். பிறகு பிள்ளை, பெண்கள் பிறந்து, அவைகளுக்காக மாடு, வீடு முதலானவைகள் நேர்ந்தபோது, ஐயோ, ஐயோ என்று மிகவும் தவிக்கிறான். அந்த ஸுகத்தை (முதலில் உண்டான ஸுகத்தை) ராஜஸம் என்று சொல்லுகிறது.

எந்த ஸுகம் அனுபவிக்கும்போதும், அனுபவித்த பிறகும் வஸ்துக்களை உள்ளபடி அறியவொட்டாமல் பண்ணுமோ, அதாவது—இரண்டு காலத்திலும் உண்மையான அறிவு இராதோ, அது தாமஸம். இதை அனுபவிக்கும்போது, இன்ன வஸ்து இன்னது என்று அதின் உண்மை தெரியாது பிறகு அது கெடுதலென்று அதின் உண்மை சில ஸுகத்தில் தெரியும். அப்படியில்லாமல் வஸ்துவின் உண்மை பிறகும் தெரிகிறதில்லை. அந்த ஸுகம் தூக்கத்தினாலும், சோம்பலாலும், கவனக்குறைவாலும் உண்டாகிறது. தூக்கம் அறிவைக் கெடுக்கிறது. சோம்பலுள்ளவனுக்கு அறிவு எப்படி வரும்? கவனிக்காதவனுக்கும் அறிவு இல்லை. ஆகையால் மோக்ஷத்தை ஆசைப்படுகிறவன் ரஜோகுண—தமோகுணங்களை அடியோடு தள்ளி, ஸத்துவகுணத்தைமாத்திரம் எடுத்துக்கொள்ள வேண்டியதென்று சொன்னதாக ஆகிறது [39]

ந தத³ஸ்தி ப்ருதி²வ்யாம் வா தி³வி தே³வேஷு வா புந꞉ ।
ஸத்த்வம் ப்ரக்ருதிஜைர்முக்தம் யதே³பி⁴꞉ ஸ்யாத்த்ரிபி⁴ர்கு³ணை꞉॥

ப்ருதி²வ்யாம் மநுஷ்யாதி³ஷு தி³வி தே³வேஷு வா ப்ரக்ருதிஸம்ஸ்ருஷ்டேஷு ப்³ரஹ்மாதி³ஸ்தா²வராந்தேஷு ப்ரக்ருதிஜைரேபி⁴ஸ்த்ரிபி⁴ர்கு³ணைர்முக்தம் யத்ஸத்த்வம் ப்ராணிஜாதம் ந தத³ஸ்தி॥

அவ—மோக்ஷத்தை அடைவதற்கு முன்பு, இந்த ஸத்துவம் முதலான மூன்று குணங்களுடையவேலைகளைப் பிரும்மாமுதலானவர்களாலேயும் விடமுடியாதென்று சொல்லிக்கொண்டு, மூன்று குணங்களைப்பற்றின பேச்சை முடிக்கிறார்—

பூமியில் மனிதன் முதலானவர்களோ, தேவலோகத்தில் தேவர் முதலானவர்களோ, பிரகிருதியோடு சேர்ந்த-பிரும்மா முதல் மரம்வரையிலுள்ள—எல்லாப்பிராணிகளும் பிரகிருதியில் உண்டான ஸத்துவம்முதலானகுணங்களுக்குட்பட்டவைகள். அவைகளில் இந்த மூன்று குணங்கள் இல்லாதபிராணிகளே கிடையாது. [40]

ஸ்வ—"த்யாகே³நைகே அம்ருதத்வமாநஶு꞉" இத்யாதி³ஷு மோக்ஷஸாத⁴நதயா நிர்தி³ஷ்டௌ த்யாக³꞉ ஸந்ந்யாஸஶப்³தா³ர்தௌ² ஐகாந்த்யௌ, ஸ ச க்ரியாணாமேவ கர்த்ருத்வத்யாக³மூ

ஜ்ஞ:, ஏவமுக்தேநாஸ்த்யாக: கர்த்ருத்வத்யாகஸ்ச பரமபுரு-
ஷே கர்த்ருத்வாநுஸந்தாநேநோக்தம் | ஸத்த்வம் ஸத்த்வ-
குணவ்ருத்திகார்யமிதி ஸர்வோபாதேயதாஜ்ஞாபநாய ஸத்த்வ-
ரஜஸ்தமஸாம் கார்யபேதா: ப்ரபஞ்சிதா: || இதாநீமேவம்பூ-
தஸ்ய மோக்ஷஸாதநதயா க்ரியமாணஸ்ய கர்மண: பரமபு-
ருஷாராதநவேஷதாம் ததாநுஷ்டிதஸ்ய ச கர்மணஸ்தத்ப்ரா-
ப்திலக்ஷணம் பலம் ப்ரதிபாதயிதும், ப்ராஹ்மணாத்யதிகாரி-
ணாம் ஸ்வபாவாநுபந்தி ஸத்த்வாதிகுணபேதபிந்நம் வ்ருத்த்யா
ஸஹ கர்தவ்யகர்மஸ்வரூபமாஹ—

ப்ராஹ்மணக்ஷத்ரியவிஶாம் ஶூத்ராணாம் ச பரந்தப |
கர்மாணி ப்ரவிபக்தாநி ஸ்வபாவப்ரபவைர்குணை: ||

ப்ராஹ்மணக்ஷத்ரியவிஶாம் ஸ்வகீயோ பாவ: ஸ்வபாவ: ப்ரா-
ஹ்மணாதிஜந்மஹேதுபூதம் ப்ராசீநகர்மேத்யர்த்த: | தத்ப்ரப-
வா: ஸத்த்வாதயோ குணா: | ப்ராஹ்மணஸ்ய ஸ்வபாவப்ரபவோ
ரஜஸ்தமோபிபவேநோத்பூதஸ்ஸத்த்வகுண: | க்ஷத்ரியஸ்ய ஸ்வபா-
வப்ரபவஸ்ஸத்த்வதமோபிபவேநோத்பூதோ ரஜோகுண: | வை-
ஶ்யஸ்ய ஸ்வபாவப்ரபவ: ஸத்த்வரஜோபிபவேநால்போத்ரிக்தஸ்தமோ-
குண: | ஶூத்ரஸ்ய ஸ்வபாவப்ரபவஸ்து ரஜஸ்ஸத்த்வாபிபவேநா-
த்யுத்ரிக்தஸ்தமோகுண: | ஏபி: ஸ்வபாவப்ரபவைர்குணை:
ஸஹ ப்ரவிபக்தாநி கர்மாணி ஶாஸ்த்ரை: ப்ரதிபாதிதாநி |
ப்ராஹ்மணாதய ஏவம்குணகா:, தேஷாம் சைதாநி கர்மாணி,
வ்ருத்தயஶ்சைதா இதி ஹி விபஜ்ய ப்ரதிபாதயந்தி ஶாஸ்த்ராணி ||

*அவ—மோக்ஷத்துக்கு உதவியாகச் சொல்லப்பட்ட "தியா கம்" என்பதும், "ஸன்னியாஸம்" என்பதும் ஒன்றுதான்; அது எல்லா கர்மங்களைச்செய்துகொண்டே கீழ்ச்சொன்ன மூன்று ஸங் கதிகளை விடுவது; பகவான்தான் எல்லா வேலைகளையும் செய் கிறார் என்கிற நினைவினால் அந்த மூன்றையும் ஒருவன் விடு கிறான்; இவை யெல்லாம் ஸத்துவகுணம் மேலிட்டால்தான் உண்டாகுமாகையால், ஸத்துவத்தைத் தான் கட்டாயம் எடுத்*

துக் கொள்ளவேணும் என்றுசொல்லிக் காட்டுவதற்காக, ஸத்துவம் முதலான குணங்களுடைய வெவ்வேறு விதமான வேலைகள் விரிவாகச் சொல்லப்பட்டன. இப்போது மோக்ஷத்திற்காக இப்படிச் செய்யப்படுகிற கர்மங்கள் பகவானுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணுகின்றன என்பதையும், அதினால் பகவானை அடையலாம் என்பதையும் சொல்லுவதற்காக பிராமணன் முதலான நான்கு வர்ணத்தார்க்கும் பிழைக்கும் வழியையும், அவர்கள் செய்யவேண்டிய வேலைகளையும் சொல்லுகிறார். நான்கு வர்ணத்தாருக்கும் ஒருவருக்கொருவர் ஸத்துவம் முதலான குணங்களில் அதிகமும் குறைவுமிருக்கின்றன. அதனால் இவையிரண்டும் (பிழைக்கும் வழியும், வேலைகளும்) வேறுபடுகின்றனஎன்றுசொல்லுகிறார்-

பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன்—இவர்களுக்கு அந்தந்த பிறப்புக்கள் நெடுநாளாய்வந்தஅவரவர்களின் கர்மங்களின் தாரதம்மியங்களால் ஏற்படுகின்றன. அந்த தாரதம்மியத்தினால் ஸத்துவம்முதலான குணங்களுக்கும் தாரதம்மியம்உண்டாகிறது. அதாவது—பிராமண ஜாதிக்கு ரஜோகுணமும், தமோகுணமும் மிகவும் குறைந்து, ஸத்துவகுணம் மேலிட்டிருக்கிறது. க்ஷத்திரியஜாதிக்கு தமோகுணமும்ஸத்துவகுணமும்குறைந்து, ரஜோகுணம் மேலிட்டிருக்கிறது. வைசியஜாதிக்கு ஸத்துவகுணமும் ரஜோகுணமும் குறைந்து, தமோகுணம் கொஞ்சம் மேலிட்டிருக்கிறது. சூத்திரஜாதிக்கு ஸத்துவகுணமும் ரஜோகுணமும் குறைந்து, தமோகுணம்அதிகமாகமேலிட்டிருக்கிறது. இந்ததாரதம்மியததினால் அவரவர்களுக்குசெய்யவேண்டியவேலைகளையும், பிழைப்புக்கு வழிகளையும் வெவ்வேறு விதமாக சாஸ்திரம் சொல்லுகிறது.

ஶமோ த3மஸ்தபஃ ஶௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச ।
ஜ்ஞாநம் விஜ்ஞாநமாஸ்திக்யம் ப்3ரஹ்மகர்ம ஸ்வபா4வஜம் ॥ ௪௨ ॥

ஶமஃ-பா3ஹ்யேந்த்3ரியநியமநம்। த3மஃ-அந்தஃகரண நியமநம்। தபஃ-போ4க3நியமநரூபஃ ஶாஸ்த்ரஸித்3த4: காயக்லேஶ:। ஶௌசம் ஶாஸ்த்ரீயகர்மயோக்3யதா। க்ஷாந்திஃ- பரைஃ பீட்3யமாநஸ்யாபி அவிக்ருதசித்ததா। ஆர்ஜவம்-பரேஷு மநோவாக்காய

[illegible] ॥௪௨॥

*அவ—பிராமணன் வேலையைச் சொல்லுகிறார்—*

*கண் முதலான இந்திரியங்களேயும், மனதையும் ஏற்பட்டவைகள் தவிர மற்ற விஷயங்களில் போகாதபடி அடக்குவது; சாஸ்திரத்திற்கு ஒத்தபடி சாப்பாட்டை நிறுத்துவது முதலானவைகளாலே உடம்பை ஒடுக்குவது; சாஸ்திரத்தில் சொல்லிய கர்மங்களைச் செய்வதற்காக ஸ்நாநம் முதலானவைகளைச செய்வது; பிறர்கள் எவ்வளவு தொந்தரவு பண்ணின போதிலும், மனது கலங்காமை; பிறர்கள் விஷயத்தில் மனதிலிருப்பதற்குத் தகுந்தபடி பேசுவதும், வேலை செய்வதும்; உயர்நத வஸ்துக்களேயும், இளப்பமான வஸ்துக்களேயும் உள்ளபடி அறிவது; உயர்நத வஸ்துவிற்கு மாத்திரமுள்ள குணங்களை மிகவும் நன்ருக அறிவது; வேதத்தில்*

சொல்லிய எல்லா ஸங்கதிகளும் உண்மைதான், பொய்யல்ல என்கிற உயர்ந்த தீர்மானம்; அதாவது—இன்னொருவர் என்ன சொன்னாலும், இந்தத் தீர்மானத்தை மாற்றமுடியாமை; ஆனால் அதுபிடிவாதமல்ல. அதாவது-பகவானென்றும், புருஷோத்தமனென்றும், பரப்பிரும்மமென்றும் சொல்லப்படுகிற வாஸுதேவன் ஒருவிதக் குற்றங்களுமில்லாதவர்; இயற்கையாகவே அளவில்லாமல் உயர்ந்த கணக்கில்லாத நல்லகுணங்களுள்ளவர்; இப்படிப்பட்டவர் என்று எல்லா உபநிஷத்துக்களும் அவரைத்தான் சொல்லுகின்றன; அவர் ஒருவர்தான் எல்லா உலகங்களையும் உண்டுபண்ணுகிறார்; தூக்குகிறார்; ஏவுகிறார்; வேதங்களில் சொல்லிய எல்லாக் கர்மங்களாலும் அவர்தான் ஸந்தோஷத்தை அடைகிறார்; ஸந்தோஷத்தை அடைந்து, அந்தக் கர்மங்களுக்குத் தகுந்தபடி தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம், (அறம், பொருள், இன்பம், வீடு) என்கிற நான்கு புருஷார்த்தங்களையும் கொடுக்கிறார்—என்று வேதத்தில் சொல்லியிருக்கிறது. இந்த ஸங்கதிகளை இந்த கீதையிலும் (அ-5, சு-29; அ-7, சு-7; அ-10, சு-3-8; அ-15, சு-15: அ-18, சு-46) சொல்லியிருக்கிறது. இந்த அர்த்தங்களில் நம்புதலை ஆஸ்திக்கியம் என்று சொல்லுகிறது. கீழ்ச்சொன்ன வேலைகள் பிராமணனுக்கு ஏற்பட்டவைகள்.[1] [42]

ஶௌர்யம் தேஜோ த்⁴ருதிர் தா³க்ஷ்யம் யுத்³தே⁴ சாப்யபலாயநம் । தா³நமீஶ்வரபா⁴வஶ்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபா⁴வஜம் ॥

ஶௌர்யம்-யுத்³தே⁴ நிர்ப⁴யப்ரவேஶஸாமர்த்²யம்। தேஜ:-பரைரநபி⁴ப⁴வநீயதா। த்⁴ருதி:-ப்ராரப்³தே⁴ கர்மணி விக்⁴நோப

1. கீழ்ச்சொன்ன வேலைகளெல்லாம்ஸத்துவகுணம்மிகவுமமேலிட்டிருந்தால்தான்வரும்.இவைகள்பிராமணஜாதிக்குவரக்கூடியவைகள்என்பதற்காகச் சொல்லியிருக்கிறதேயொழிய, ஸத்துவகுணம் மேலிட்டிருக்கிறது என்பது பிராமணஜாதிக்குமாத்திரம்என்று இல்லை. எல்லா ஜாதியிலும் வரலாம். பிராமணஜாதியில் இல்லாமலுமிருக்கலாம். ஆனால் இந்த ஜாதியில் அதிகமாக இருக்கக்கூடியது. பிராமணத்தன்மை என்பது இருவகை, குணத்தினால் வருவது ஒன்று. பிறப்பினால் வருவது ஒன்று. ஆனால் குணத்தினால் வருவதுதான் உயர்ந்தது. இரண்டும் சேர்ந்தால், பாலும் சர்க்கரையும் சேர்ந்தது போல.

𑌨𑌿𑌪𑌾𑌤𑍇𑌽𑌪𑌿 𑌤𑌤𑍍𑌸𑌮𑌾𑌪𑌨𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌮𑍍 । 𑌦𑌾𑌕𑍍𑌷𑍍𑌯𑌂-𑌸𑌰𑍍𑌵𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌨𑌿𑌰𑍍
𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌮𑍍 । 𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌚𑌾𑌪𑍍𑌯𑌪𑌲𑌾𑌯𑌨𑌂-𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌚𑌾𑌤𑍍𑌮
𑌮𑌰𑌣𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑍇𑌽𑌪𑍍𑌯𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑌮𑍍। 𑌦𑌾𑌨𑌂-𑌸𑍍𑌵𑌕𑍀𑌯𑌸𑍍𑌯 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰
𑌸𑍍𑌵𑌤𑍍𑌵𑌾𑌪𑌾𑌦𑌨𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 । 𑌈𑌶𑍍𑌵𑌰𑌭𑌾𑌵𑌃- 𑌸𑍍𑌵𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤
𑌸𑌕𑌲𑌜𑌨𑌨𑌿𑌯𑌮𑌨𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌮𑍍। 𑌏𑌤𑌤𑍍 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵
𑌜𑌂 𑌕𑌰𑍍𑌮 ॥ ॥ ௪௩ ॥

*அ.வ.—க்ஷத்திரியன் வேலைகளைச் சொல்லுகிறார்—*

சண்டையில் பயமில்லாமல் நுழையும் சக்தி; (புலி என்பது எந்த ஸங்கதிகளுக்கும் பயப்படாமல், சுட்டாலும் மேல் வந்து விழும், அதுபோல்); பிறர்களால்அவமானம் பண்ணமுடியாமலிருப்பது; அதாவது— நுழைந்து, தோல்வி யடையாமலிருப்பது; எல்லாக் காரியங்களையும் முடிக்கிற சக்தி; ஆரம்பித்த காரியத்திற்கு என்ன தடங்கல் நேரிட்டாலும், அதை விடாமல் முடிக்கும் சக்தி; சண்டையில் தனக்குச சாவு கட்டாயம் நேரிடும் என்று தீர்மானமிருக்கச்செய்தேயும், பயந்து ஓடாமலிருக்கை; தன் ஸொத்தைப் பிறர்களுக்கு விற்கவும், வாங்கவும் தகுந்ததாக ஆகும்படி கொடுப்பது; எல்லா ஜனங்களையும் அடக்கி ஆளுகை—இவைகள் க்ஷத்திரியனுக்கு ஸ்வபாவத்தால வரக்கூடிய வேலைகள். [43]

𑌕𑍃𑌷𑌿𑌗𑍌𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌵𑌾𑌣𑌿𑌜𑍍𑌯𑌂 𑌵𑍈𑌶𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌜𑌮𑍍 ।

𑌕𑍃𑌷𑌿𑌃-𑌸𑌸𑍍𑌯𑍋𑌤𑍍𑌪𑌾𑌦𑌨𑌂 𑌕𑌰𑍍𑌷𑌣𑌮𑍍। 𑌗𑍌𑌰𑌕𑍍𑌷𑌂-𑌪𑌶𑍁
𑌪𑌾𑌲𑌨𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌵𑌾𑌣𑌿𑌜𑍍𑌯𑌂-𑌧𑌨𑌸𑌞𑍍𑌚𑌯𑌹𑍇𑌤𑍁𑌭𑌿𑌤𑌂 𑌕𑍍𑌰
𑌯𑌵𑌿𑌕𑍍𑌰𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌕𑌰𑍍𑌮 । 𑌏𑌤𑌦𑍍𑌵𑍈𑌶𑍍𑌯𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌜𑌂 𑌕𑌰𑍍𑌮 ॥

*அ.வ.— வைசியன் வேலைகளையும் தொழில்களையும் சொல்லுகிறார்—*

உழுது பயிர்ச்செலவு பண்ணுகிறது; மாடுகளைக் காப்பாற்றுகிறது; பணம் சம்பாதிப்பதற்காக வித்துவாங்கி வியாபாரம் பண்ணுகிறது—இவைகள் வைசியனுக்கு ஸ்வபாவத்தாலுண்டான வேலைகள். [43½]

𑌪𑌰𑌿𑌚𑌰𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌶𑍂𑌦𑍍𑌰𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌜𑌮𑍍 ।௪௪॥

पूर्ववर्णत्रयपरिचर्यारूपं च शूद्रस्य स्वभावजं कर्म । तदेतच्चतुर्णां वर्णानां वृत्तिसहितकर्तव्यानां शास्त्रविहितानां यज्ञादिकर्मणां प्रदर्शनायोक्तम् । यज्ञादयो हि त्रयाणां वर्णानां साधारणाः, शमादयोऽपि त्रयाणां वर्णानां मुमुक्षूणां साधारणाः । ब्राह्मणस्य तु सत्त्वोद्रिक्तस्य स्वाभाविकत्वेन शमदमादयः सुखोपादाना इति कृत्वा तस्य शमादयः स्वभावजं कर्मेत्युक्तम् । क्षत्रियवैश्ययोस्तु स्वतो रजस्तमःप्रधानत्वेन शमदमादयो दुःखोपादाना इति कृत्वा न तत्कर्मेत्युक्तम् । ब्राह्मणस्य तु वृत्तिर्याजनाध्यापनप्रतिग्रहाः । क्षत्रियस्य जनपदपरिपालनम् । वैश्यस्य च कृष्यादयो यथोक्ताः । शूद्रस्य तु कर्तव्यं वृत्तिश्च पूर्ववर्णत्रयपरिचर्यैव ॥

॥௪௪॥

அவ—சூத்திரன வேலையைச சொல்லுகிறார்—

பிராமணன முதலான மூன்று ஜாதியாருக்கும் வேலை செய்வது சூத்திரர்களுக்கு ஸ்வபாவத்தாலுண்டான வேலை

இப்படிக் கீழே நாலு வர்ணத்தார்க்கும் சில வேலைகளை மாத்திரம் சொல்லிற்று இன்னமும் சில வேலைகளுமுண்டு. மூன்று ஜாதியாரும் யக்ஞம் முதலானவைகளைச் செய்யவேண்டியது கண் முதலான இந்திரியங்களை அடக்குவது முதலானவைகளையும் ஸம்ஸாரத்தைப் போக்கவேணுமென்றிருக்கிற மூன்று ஜாதியாரும் செய்யவேண்டியது. பிராமணஜாதிக்கு இயற்கையில் ஸத்துவகுணம் மேலிட்டிருப்பதால், அவர்களால் அவைகளை ஸுகமாகச செய்யமுடியும என்பதற்காக, அவைகளை அவர்களுக்கு ஸ்வபாவத்தாலுண்டாகும் வேலைகளாகச் சொன்னது. க்ஷத்திரியர்களும், வைசியர்களும் ரஜோகுணமும் தமோகுணமும் மேலிட்டிருப்பவர்களானபடியால், இவைகளை வருத்தப்பட்டுச செய்ய வேண்டியதாகையாலே, அவைகளை அவர்கள் வேலைகளாகச சொல்லவில்லை பிராமணனுக்குப்பிழைப்பு—பிறர்களுக்கு

யாகத்தைச் செய்விப்பதும், வேதம் முதலானவைகளைச் சொல்லி விப்பதும், பிறர்கள் கொடுப்பதை வாங்கிக்கொள்ளுவதும். க்ஷத்திரியர்களுக்கு தேசத்தைக் காப்பாற்றி வரிவாங்குவது. 1 வைசியர்களுக்கும், சூத்திரர்களுக்கும் முன் சொன்னதொழில்தான் பிழைப்புக்கு வழி. [44]

𑌸𑍍𑌵𑍇 𑌸𑍍𑌵𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌭𑌿𑌰𑌤𑌃 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌲𑌭𑌤𑍇 𑌨𑌰𑌃 ।
𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌨𑌿𑌰𑌤𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌯𑌥𑌾 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 𑌤𑌚𑍍𑌛𑍃𑌣𑍁 ॥ ॥௪௫॥

𑌸𑍍𑌵𑍇 𑌸𑍍𑌵𑍇-𑌯𑌥𑍋𑌦𑌿𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌭𑌿𑌰𑌤𑍋 𑌨𑌰𑌃 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂-𑌪𑌰𑌮𑌪𑌦𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌂 𑌲𑌭𑌤𑍇 । 𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌨𑌿𑌰𑌤𑍋 𑌯𑌥𑌾 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿-𑌪𑌰𑌮𑌪𑌦𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿, 𑌤𑌥𑌾 𑌶𑍃𑌣𑍁 ॥ ॥௪௫॥

அந்தந்த ஜாதிக்கு ஏற்பட்ட கர்மங்களை ஆசையுடன் செய்கிறவன் பரமபதத்தை (மிகவும் உயர்ந்த இடத்தை) அடைகிறான். எப்படி அடைகிறான் என்றால், சொல்லுகிறேன், கேள். [45]

𑌯𑌤𑌃 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌯𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌤𑌮𑍍 ।
𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌤𑌮𑌭𑍍𑌯𑌰𑍍𑌚𑍍𑌯 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 𑌮𑌾𑌨𑌵𑌃 ॥ ॥௪௬॥

𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌾 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃, 𑌯𑍇𑌨 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌤𑌂। 𑌸𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌤𑌂 𑌮𑌾𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌤𑌯𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑌭𑍍𑌯𑌰𑍍𑌚𑍍𑌯, 𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌨𑍍𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌰𑍂𑌪𑌾𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 𑌮𑌾𑌨𑌵𑌃। 𑌮𑌤𑍍𑌤 𑌏𑌵 𑌸𑌰𑍍𑌵𑌮𑍁𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇, 𑌮𑌯𑍈𑌵 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌤𑌮𑌿𑌤𑌿 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍇𑌵𑍋𑌕𑍍𑌤𑌂 "𑌅𑌹𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌃 𑌪𑍍𑌰𑌲𑌯𑌸𑍍𑌤𑌥𑌾। 𑌮𑌤𑍍𑌤𑌃 𑌪𑌰𑌤𑌰𑌂 𑌨𑌾𑌨𑍍𑌯𑌤𑍍 𑌕𑌿𑌂𑌚𑌿𑌦𑌸𑍍𑌤𑌿 𑌧𑌨𑌂𑌜𑌯, 𑌮𑌯𑌾 𑌤𑌤𑌮𑌿𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌜𑌗𑌦𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌨𑌾, 𑌮𑌯𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑍇𑌣 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑍍𑌸𑍂𑌯𑌤𑍇 𑌸𑌚𑌰𑌾𑌚𑌰𑌂, 𑌅𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌭𑌵𑍋 𑌮𑌤𑍍𑌤𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌷𑍁 ॥ ॥௪௬॥

1. தயைமுதலான நல்லகுணங்களும், நல்ல ஸம்ஸ்காரங்களும், (அதாவது—சங்கு சக்கிரங்களைத்தரிப்பது, மந்திரங்களைப்பெற்றுக்கொள்ளுவது) உள்ள சூத்திரர்களுக்கு சிலதர்மங்கள்சொல்லப்படுகின்றன. அவைகளை—அவர்களுக்கேற்பட்ட வேலைகளுக்கு விரோதமில்லாமல், முன்ஜாதியார்கள் உத்திரவின் பேரில்-செய்யவேண்டியது. அப்போதும் அவர்கள் வேலைகளாக எண்ணிக்கொண்டு செய்யவேண்டியது.

அறிவுள்ள ஜீவன்கள், அறிவில்லாத வஸ்துக்கள்—என்று இருவகையானஎல்லாம் எவனால் உண்டாகின்றனவோ, இருக்கின்றனவோ, வேலைகளைச்செய்கின்றனவோ; எவனெல்லோருக்கும் உள்ளே நுழைந்து ஆத்மாவாக இருக்கிறானோ; இந்திரன் முதலான எல்லா தேவதைகளுக்கும் ஆத்மாவாகஇருக்கும் அந்த 1 எனனை அவரவர்களுக்கு ஏற்பட்ட வேலைகளைச்செய்து,2 எவர்கள் பூஜை செய்கிறார்களோ (ஸந்தோஷப்படுத்துகிறார்களோ); நான் ஸந்தோஷப்பட்டு அவர்களை என்னிடம் அழைத்துக்கொள்ளுகிறேன். [46]

ஶ்ரேயாந் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத் ஸ்வநுஷ்டிதாத்|

ஏவம் க்ருத்ஸ்நஜகத்காரணபரமபுருஷாராதநவேஷ்யதே:-ஷேணைவாவாப்தம் யோக்யாயத:| ப்ரக்ருதிஸம்ஸ்ருஷ்டேந ஹி புருஷேண இந்த்ரியவ்யாபாரரூப: கர்மயோக: ஸுகரோ பவதி| அத: கர்மயோகாக்ய: ஸ்வதர்மோ விகுணோ(அ)பி பரதர்மாத்-இந்த்ரியஜயநிஷ்பாத்யாத் ஜ்ஞாநயோகாத் ஸகலேந்த்ரியநியமநரூபதயா ஸப்ரமாதாத் ஸ்வநுஷ்டிதாத் ஶ்ரேயாந் ||௪௭½||

அவ—இப்படி பிராமணன் முதலானவர்ணங்களுக்கும், பிரம்மசரியம் முதலான ஆசிரமங்களுக்கும் ஏற்பட்ட கர்மங்களை விட

---

1 சுலோகத்தில் 'தம' (அவனை) என்று சொல்லியிருக்க, வியாக்கியானத்தில் எனனைஎன்றுபொருள்சொல்லுவதற்குக்காரணம்—ஸ்ரீ கிருஷ்ணபகவான் எல்லா உலகங்களையும் தானே உண்டுபண்ணினதாயும், எல்லா உலகங்களிலும் ஆத்மாவாகத்தான் நுழைந்திருப்பதாயும் முன்னாலேயே சொல்லியிருக்கிறார். 7-வது அத்,சு-6,7;9-வது அ,சு-4-10; 10-வதுஅ, சு-8;இவைகளைப்பார்க்க. ஆகையால் இச்சுலோகத்தில்'அவனை' என்று சொல்லப்பட்டவர் கிருஷ்ணபகவான் தான்.

2. சூத்திரர்கள் இந்த சுலோகத்தில் சொன்னபடி பகவானை பூஜித்தால், வேறு பிறப்பில் கர்மயோகம் முதலானவைகளைசெய்யத் தகுதியை அடைந்து, அவைகளைச்செய்து, பரமபதத்தை அடையலாம். விதுரர் சூத்திரனாகப்பிறந்தபோதிலும், பக்தியோகம் செய்தாரேஎன்றால்—பதில்—அவர் முன் பிறப்பில் பக்திபண்ணஆரம்பித்தவர். அதை இந்தப் பிறப்பிலும் செய்தார். சூத்திரப் பிறப்பில் ஆரம்பிக்கக்கூடாதேயொழிய ஆரம்பித்ததை நடத்தலாம்.

வே கூடாதென்றும், அவைகளாலே பகவானை அடையும் விதமும் சொல்லப்பட்டது. ஞானயோகம் செய்யத்தகுந்தவனும் கர்மயோகத்தையே செய்யவேண்டியதென்று மூன்றாவது அத்தியாயத்தில் சொன்னதைச் சொல்ல ஆரம்பிக்கிறார்—

கர்மயோகம் என்பது இந்திரியங்களின் வேலை. அதை உடம்புடன் சேர்ந்தவன் ஸுலபமாகச்செய்யலாம். 1 அது ஸொந்த தர்மம். ஞான யோகம் என்பதை இந்திரியங்களை ஜயித்தவன் செய்யவேண்டியது. அது பிறருடைய வேலை. அதாவது—உயர்ந்த கெட்டிக்காரனாலேயே தான் செய்யக்கூடியது. எல்லாராலும் செய்யக்கூடாதது. அது ஒருக்கால் முடியாதபோனாலும் போகும். அதைக்காட்டிலும் கொஞ்சம் குறைவாயிருந்தாலும், கர்மயோகத்தையே செய்யவேண்டியது. [46½]

ஸவ—ததேவோபபாதயதி—

ஸ்வபாவநியதம் கர்ம குர்வந்நாப்நோதி கில்பிஷம்॥ ௪௭॥

ப்ரக்ருதிஸம்ஸ்ருஷ்டஸ்ய இந்த்ரியவ்யாபாரரூபதயா ஸ்வபாவத ஏவ நியதத்வாத் கர்மண:- கர்ம குர்வந் கில்பிஷம் ஸம்ஸாரம் ந ப்ராப்நோதி। அப்ரமாதத்வாத் கர்மண:। ஜ்ஞாநயோகஸ்து ஸுஸம்யதேந்த்ரியேண ஸாத்யதயா ஸப்ரமாதத்வாத் தந்நிஷ்டஸ்ய ப்ரமாதாத் கில்பிஷம் ப்ராப்திரவஶ்யம்பாவீ ॥ ॥௪௭॥

அவ—அதற்கே யுக்தி சொல்லுகிறார்—

உடம்போடு இருக்கிற ஜீவனுக்குக் கண் முதலான இந்திரியங்களைக்கொண்டு வேலைசெய்வதே வழக்கம். இந்திரியங்களை அடக்

---

1. சுலோகத்தில ஸ்வதர்மம்—(தன்னுடைய தர்மம்) என்பதற்கு தன் வர்ணத்திற்கும், ஆசிரமத்திற்கும் ஏற்பட்ட தர்மம் என்று பொருளல்ல. அது பொருளானால், பரதர்மம் (அயலாருடைய தர்மம்) என்பது வேறு வர்ணத்திற்கும், ஆசிரமத்திற்கும் ஏற்பட்டவைகள் என்று ஆகும். அதைச் செய்யக்கூடாது. செய்யக்கூடாததையும் செய்யத்தகுந்ததையும் சேர்த்து, அதைக்காட்டிலும் இது நல்லதென்று சொல்லுவது ஸரியன்று. பொய்சொல்லுவதைக் காட்டிலும் உண்மையைப் பேசுவது நல்லதென்று சொல்லுவது வழக்கமில்லை. ஆகையால் சொந்ததர்மம் என்பது கர்மயோகம். பிறருடையதர்மம் என்பது ஞானயோகம் என்றுதான் பொருள்.

குவது என்றால் முடியாது கர்மயோகம் என்பது இந்திரியங்களுடைய வேலை. ஆகையால் அதைத் தவறுதலில்லாமல் நடத்தமுடியும். அதனால் ஸம்ஸாரத்தைப் போக்குவன. இந்திரியங்களை அடக்குவதாகிற ஞான யோகத்தைச்செய்ய ஆரம்பித்தால், அதைஸரியாய் நடத்திமுடிப்பது வருத்தம். அது நடுவில் நின்றுபோனால், ஸம்ஸாரம் போகாது. [47]

அவ—அதஃ கர்மநிஷ்டைவ ஜ்யாயஸீதி த்ருதீயோக்தம் ஸ்மாரயதி—

ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோஷமபி ந த்யஜேத் ।
ஸர்வாரம்பா ஹி தோஷேண தூமேநாக்நிரிவாவ்ருதாஃ ॥

அதஸ்ஸஹஜத்வேந ஸுகரத்வாத் அப்ரமாதத்வாச்ச கர்ம ஸதோஷம்-ஸதுஃகமபி ந த்யஜேத்। ஜ்ஞாநயோகயோக்யோऽபி கர்மயோகமேவ குர்வீதேத்யர்த்தஃ। ஸர்வாரம்பாஃ-கர்மாரம்பாஃ ஜ்ஞாநாரம்பாஶ்ச ஹி தோஷேண-துஃகேந தூமேநாக்நிரிவாவ்ருதாஃ। அயம்து விஶேஷஃ-கர்மயோகஸ்ஸுகரோऽப்ரமாதஶ்ச। ஜ்ஞாநயோகஸ்தத்விபரீத இதி ॥ ௪௮ ॥

அவ—ஆகையால் கர்மயோகம் தான் மிகவும் நல்லது என்று மூன்றாவது அத்தியாயத்தில் சொல்லியதை நினைப்பு மூட்டுகிறார்—

ஆகையால் கர்மயோகம் வருத்தமில்லாமல் செய்து முடிக்கக்கூடியதாகையாலும், ஞானயோகத்தைப் போல் நடுவில் நின்று போகக்கூடியதல்லாமையாலும், அதைச்செய்வதில் உடம்புக்கு வருத்தம் முதலானவைகள் இருந்தாலும், ஞானயோகத்தைப் பண்ணத்தகுந்தவனும் கர்மயோகத்தைத் தான் செய்யவேண்டியது. அதை விடக்கூடாது. நெருப்புக்குப் புகைபோல எல்லா வேலைகளிலும் தொந்தரவு இருக்கிறது. 1தொந்தரவு கர்மயோகத்

1. இந்த சுலோகம் முன்பாதியில்-ஞானயோகத்தில் தொந்தரவுஇல்லை,அதைச் செய்யலாம்என்றுநினைத்து, ஒருவன் அதைச்செய்வனோ என்று பயந்து, தொந்தரவு இல்லை என்பதை ஒப்புக்கொண்டு, காமயோகத்தையே செய்யவேண்டியதென்று சொன்னார் பின்பாதியில்—ஞானயோகத்தில் தொந்தரவு இல்லை என்பது சரியல்ல. அதிலும் தொந்தரவு

திலுமிருக்கிறது. ஞானயோகத்திலுமிருக்கிறது. ஆனால் கர்ம யோகத்தை முழுக்க நடத்தலாம். லகுவாய்ச் செய்யலாம். ஞான யோகத்தைமுழுக்கநடத்தமுடியாது அதைசசெய்வதுகஷ்டம்[48]

असक्तबुद्धिः सर्वत्र जितात्मा विगतस्पृहः ।
नैष्कर्म्यसिद्धिं परमां संन्यासेनाधिगच्छति ॥

सर्वत्र-कर्मसु असक्तबुद्धिः। जितात्मा-जितमनाः। परमपुरुषकर्तृत्वानुसन्धानेन आत्मकर्तृत्वे विगतस्पृहः। एवं त्यागादनन्तरोक्तेन संन्यासेन युक्तः कर्म कुर्वन्, परमां नैष्कर्म्यसिद्धिमधिगच्छति-परमां ध्याननिष्ठां ज्ञानयोगस्यापि फलभूतामधिगच्छतीत्यर्थः। वक्ष्यमाणध्यानयोगावाप्तिं सर्वेन्द्रियकर्मोपरतिरूपामधिगच्छति॥ ॥४९॥

கர்மங்களின் பலன்களை விரும்பாமல், மனதை ஆத்மாவைத் தவிர மற்ற விஷயங்களில் போகாமல் அடக்கி, பகவானே எல்லா வேலைகளையும் செய்கிறார் என்கிற நினைவினால், நானே வேலைகளைச் செய்கிறேன் என்கிற 1 எண்ணமில்லாமல், கர்மங்களைச் செய்கிறவன் ஞானயோகத்தினால் வரக்கூடியதான ஆத்மாவின் தியானத்தை அடைகிறான் அதாவது—கர்மங்களால் பகவான் ஸந்தோஷத்தை அடைந்து இவனை எல்லா இந்திரியங்களை அடக்கி, ஆத்மாவைத் தியானம்பண்ணத் தகுந்தவனாகச் செய்கிறார். [49]

सिद्धिं प्राप्तो यथा ब्रह्म तथाप्नोति निबोध मे ।
समासेनैव कौन्तेय निष्ठा ज्ञानस्य या परा ॥

सिद्धिं प्राप्तः - आप्रयाणादहरहरनुष्ठीयमान कर्मयोगनिष्पाद्यां ध्यानसिद्धिं प्राप्तो यथा-येन प्रकारा

---

இருக்கிறதென்று காட்டுகிறார். கர்மயோகம் செய்வதில உடம்புக்கு மாத்திரம் தொந்தரவு ஞான யோகத்தில உடம்பில் மறைந்திருக்கிற ஜீவாத்மஸ்வரூபத்தைத் தேடுவதறகாக மனதையும் இந்திரியங்களையும் அடக்குவது மிகவும் கஷ்டம்.

1. ஸ்வப்நத்தில்கூட இந்த எண்ணம் வராதபடி அது போகவேணுமென்று கருத்து

[illegible] ॥ ௫0 ॥

சரீரம் போகிற வரையில் ஒவ்வொரு நாளும் கர்மயோகத்தைச் செய்து, தியானம்பண்ண[1] ஆரம்பித்தவன் எப்படி இருந்து ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி பார்க்கிறான் என்பதைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன் கேள். ஆத்மாவைப் பார்ப்பதுதான் தியானத்தினால் அடையவேண்டிய உயர்ந்த பிரயோஜநம். [50]

[illegible] ॥ ௫௧ ॥

[illegible] ॥ ௫௨ ॥

[illegible] ॥ ௫௩ ॥

[illegible]

1. இது 6-வது அத். 7,8,9-வது ச்லோகங்களில் சொல்லப்பட்டது

…रहितः। शान्तः—आत्मानुभवैकसुखः। एवंभूतो ध्यानयोगं कुर्वन् ब्रह्मभूयाय कल्पते ब्रह्मभावाय कल्पते। सर्वबन्धविनिर्मुक्तो यथावस्थितात्मानमनुभवतीत्यर्थः॥ ॥௫௩॥

ஆத்மாவை உள்ளபடி 1 நன்ருய் அறிந்து, 2 உறுதியுடன் ஆத்மாவைத் தவிர மற்ற விஷயங்களில் மனதை போகவொட்டாமல் தடுத்து, ஆத்மாவைத் தியானம் செய்யத் தகுநததாகப்பண்ணி, சப்தம் முதலான விஷயங்களின் 3 கிட்டத்தில் இல்லாமல், அவைகளைப்பற்றி வரும் ஆசையையும், த்வேஷத்தையும் போக்கி, ஆத்மாவைத் தியானம் பண்ணுவதற்கு இடைஞ்சல்கள் ஒன்றும் இல்லாத இடத்தில் இருந்துகொண்டு, அதிகமாகச் சாப்பிட்டாமலும், அடியோடு ஆஹாரத்தை விடாமலும். 4 மனது, வாக்கு, உடம்பு—இவைகளைத் தியானத்திற்கு உதவியாகப் பண்ணிக்கொண்டு, உடம்பை விடுமளவும் தினந்தோறும் இதேமாதிரி தியானத்தைச் செய்துகொண்டு, தியானிக்கத்தகுந்த ஆத்மாவைத் தவிர 5 மற்ற விஷயங்களில் தோஷங்களை கவனித்து, அவைகளில் ஒழிவை வளர்த்துக்கொண்டு, உடம்புதான் ஆத்மா என்கிற எண்ணத்

---

1. அறியவேண்டிய ஸங்கதிகளில் குறைவு, சந்தேகம், தப்பு எண்ணம்-இவைகளில்லாமை அறிவுக்கு நன்மை.

2. 33-வது சுலோகத்தில் சொன்ன ஸாத்துவிகமான த்ருதி (உறுதி).

3. விஷயங்கள் கிட்ட இருந்தால், மனது கலங்கும். அதற்காக அவைகளைக் கிட்ட வைத்துக்கொள்ளாமல் இருக்கவேண்டும்.

4. அசங்காத ஆஸனத்தில்உட்கார்ந்து இருப்பதால், உடம்பு உதவுகிறது. பிரணவத்தைத் தவிர வேறு ஒரு சொல்லையும் சொல்லாமையால், வாக்கு. மனது பகவானுடைய திருமேனியை நினைப்பதால்.

5. கண் முதலான இந்திரியங்களால் அறியப்படும் விஷயங்களில் ஆசையை விடுகையை 51-வது சுலோகத்தில் சொன்னார். இங்கே மனதினுல் ஏற்படும் ஆசையின் ஒழிவைச் சொல்லுகிறது. 6-வது அத், 24-வது சுலோகம் குறிப்பைப் பார்க்க. சுலோகத்தில் "வைராக்யம் ஸமுபாச்ரித:" (ஒழிவை நன்ருய் அடைந்து) என்கிற சொற்கள் இருக்கின்றன. ஒழிவுமுன்னமேயேஉண்டாயிருந்தாலும், அதைவிஷயங்களின் குற்றங்களை நினைத்து நினைத்துபலப்படுத்துவது நன்ருய்அடைவது.

தையும், அந்த எண்ணம் வளருவதற்குக் காரணமான வாஸனையின் 1 பலத்தையும், அதனால் ஏற்படும்-தான் எடுத்துக்கொள்ளத் தகுந்த ஸங்கதியை எடுத்துக்கொள்ளாமல் பண்ணும்—2 கொழுப்பையும், காமத்தையும், கோபத்தையும், உடம்பைச்சேர்ந்த வஸ்துக்களையும் விட்டுவிட்டு, ஆத்மாவைச் சேராத வஸ்துக்களை (பிள்ளை பெண்டாட்டி முதலானவைகளை) தன்னுடையவைகள் (ஆத்மாவினுடையவைகள்) என்று நினையாமல், ஆத்மாவை அநுபவிப்பதையே ஸுகமாக நினைத்து, ஆத்மாவைத் தியானம் செய்கிறவன் எல்லா ஸம்ஸாரமும்போய், ஆத்மாவை உள்ளபடி பார்ப்பன். [51-52-53]

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌤𑌃 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌾𑌤𑍍𑌮𑌾 𑌨 𑌶𑍋𑌚𑌤𑌿 𑌨 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌤𑌿 ।
𑌸𑌮𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 𑌲𑌭𑌤𑍇 𑌪𑌰𑌾𑌮𑍍 ॥

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌤𑌃-𑌆𑌵𑌿𑌰𑍍𑌭𑍂𑌤𑌾𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑌿𑌨𑍍𑌨𑌜𑍍𑌞𑌾𑌨𑍈𑌕𑌾𑌕𑌾𑌰𑌮𑌦𑍇𑌕𑌶𑍇𑌷𑌤𑍍𑌵𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌃। "𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌽𑌹𑌮𑍍" 𑌇𑌤𑌿 𑌹𑌿 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍇। 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌾𑌤𑍍𑌮𑌾-𑌕𑍍𑌲𑍇𑌶𑌕𑌰𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑌕𑌲𑍁𑌷𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌃। 𑌮𑌦𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌂 𑌨 𑌕𑌞𑍍𑌚𑌨 𑌭𑍂𑌤𑌵𑌿𑌶𑍇𑌷𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌶𑍋𑌚𑌤𑌿। 𑌨 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌤𑌿। 𑌅𑌪𑌿 𑌤𑍁 𑌮𑌦𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑍇𑌷𑍁 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌅𑌨𑌾𑌦𑌰𑌣𑍀𑌯𑌤𑌾𑌯𑌾𑌂 𑌸𑌮𑌃 𑌨𑌿𑌖𑌿𑌲𑌂 𑌵𑌸𑍍𑌤𑍁𑌜𑌾𑌤𑌂 𑌤𑍃𑌣𑌵𑌨𑍍𑌮𑌨𑍍𑌯𑌮𑌾𑌨𑌃। 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 𑌲𑌭𑌤𑍇 𑌪𑌰𑌾𑌮𑍍-𑌮𑌯𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑍇 𑌨𑌿𑌖𑌿𑌲𑌜𑌗𑌦𑍁𑌦𑍍𑌭𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌪𑍍𑌰𑌲𑌯𑌲𑍀𑌲𑍇 𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌸𑌮𑌸𑍍𑌤𑌹𑍇𑌯𑌗𑌨𑍍𑌧𑍇𑌽𑌨𑌵𑌧𑌿𑌕𑌾𑌤𑌿𑌶𑌯𑌾𑌸𑌙𑍍𑌖𑍍𑌯𑍇𑌯𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌗𑌣𑍌𑌘𑌮𑌹𑌾𑌰𑍍𑌣𑌵𑍇 𑌲𑌾𑌵𑌣𑍍𑌯𑌾𑌮𑍃𑌤𑌸𑌾𑌗𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑌿 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌨𑌯𑌨𑍇 𑌸𑍍𑌵𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌨𑌿 𑌅𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌨𑍁𑌭𑌵𑌰𑍂𑌪𑌾𑌂 𑌪𑌰𑌾𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 𑌲𑌭𑌤𑍇 ॥ ॥ ௫௪ ॥

---

1. உடம்பு, மனது, பிராணன்-இவைகளுக்கு பலமிருப்பது தியானத்திற்கு இடைஞ்சலன்று. ஆகையால் பலம் என்கிற சொல்லுக்கு கெட்ட வாஸனையின பலமென்றுதான் பொருள்.

2. நான் தியானம் செய்கிறேன்; நான் ஒழிவுள்ளவன என்கிற எண்ணததால் வரும தர்ப்பம (கொழுப்பும) தள்ளத்தகுநதது. எல்லாரையும் அலக்ஷியம் பணணும்படி செய்கிறது. மரியாதை பண்ண வேணடியவாகளை மரியாதை பணணவொட்டாமல் பண்ணுவது. இது தர்ப்பத்தின வேலை.

அவ—இப்படி கர்மயோகத்தாலே தியானம் வழியாய் ஆத்மாவின் பார்வை கிடைப்பது சொல்லப்பட்டது. அதினால் பகவானைத் தியானம் செய்யத் தகுதி வருமென்று சொல்லுகிறார்—

அளவில்லாத அறிவையே இயற்கையாக உடையவனும் எனக்கு இஷ்டப்படி நடப்பதையே ஸ்வபாவமாக உடையவனுமான ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி பார்க்கிறவன், அறிவில்லாமை முதலானவைகளால் கலங்காதவனாய், ஒருவிதக் குற்றமுமில்லாதவனாய், என்னைத்தவிர எந்த வஸ்து போனாலும், துக்கப்படுகிறதில்லை. 1 என்னைத்தவிர எந்த வஸ்துவையும் விரும்புகிறதுமில்லை. என்னைத்தவிர வேறாக இருப்பதால், அவைகள் பிடித்ததோ, பிடிக்காததோ—எல்லா வஸ்துக்களையும் விடுவதில் அவன் ஒரே மாதிரி. என்னைத்தவிர மற்ற எல்லா வஸ்துக்களையும் திருணமாக நினைக்கிறான். இவன் எல்லா விதத்தாலும் உயர்ந்தவனான, அதாவது—எல்லாஉலகத்துக்கும்ராஜாவாயும், எல்லாஉலகத்தையும்விளையாட்டாக உண்டுபண்ணி, காப்பாற்றி, அழிப்பவனாயும், ஒருவிதக்குற்றமில்லாதவனாயும், கணக்கில்லாத—எல்லையில்லாமல் உயர்ந்த—எல்லாநல்லகுணங்களுக்கும்ஒரேஇருப்பிடமாயும், அழகுக்குஸமுத்திரமாயும், தாமரைப்பூப்போன்ற கண்ணுள்ளவனாயும், மஹாலக்ஷ்மியோடு கூடினவனுமான, என்னை 2 தனக்கு யஜமானனாகநினைத்து, என்னைத்தியானம் செய்கிறான். அதாவது—இன்பமாக இடைவிடாமல் நினைக்கிறான். [ 54 ]

---

1. துக்கப்படாமையும், விரும்பாமையும் 6-வது அத்தியாயம், 22—வது சுலோகத்தில் சொல்லப்பட்டன. அதை இங்கே நினைப்பூட்டுகிறார். ஆத்மாவைப் பார்க்கும்போது, அதினுடைய ஸுகத்தினால் வெளியில் இருக்கும் வஸ்துக்களில் வெறுப்பு உண்டாகிறது. தன் ஸ்வரூபத்தை பார்ப்பதைக்காட்டிலும், பகவானைப்பார்ப்பது அதிகஸுகமென்று கேட்டிருப்பதால், அவரை அடைந்து அனுபவிக்கவேண்டும் என்றும் ஆசை உண்டாகுமென்றுகருத்து.

2. என்னை என்கிற சொல்லாலே-பகவானை மிகுந்தபிரீதியுடனே தியானம் பண்ணவேண்டியதற்காக அந்த வேளையில் நினைக்கவேண்டிய ஸங்கதிகள் சொல்லப்படுகின்றன என்றுகருத்து. எல்லா உலகத்திற்கும் ராஜாவென்பதால், மற்றவர்கள் தியானம் செய்கிற ஜீவனைப்போலவே பகவானால் ஆளப்படுகிறவர்களென்றும், கர்மத்தால் கட்டுப்பட்டவர்

அத— ததேவாஹ—

பக்த்யா மாமபிஜாநாதி யாவாந்யஶ்சாஸ்மி தத்த்வத: |
ததோ மாம் தத்த்வதோ ஜ்ஞாத்வா விஶதே ததநந்தரம் ||

ஸ்வரூபத: ஸ்வபாவதஶ்ச யோऽஹம், குணதோ விபூதிதோ யாவாம்ஶ்சாஹம், தம் மாமேவம்ரூபயா பக்த்யா தத்த்வதோऽபிஜாநாதி| மாம் தத்த்வதோ ஜ்ஞாத்வா ததநந்தரம்-தத்த்வஜ்ஞாநாநந்தரம் ததோ மாம் விஶதே-ப்ரவிஶதி | தத்த்வத: ஸ்வரூபஸ்வபாவகுணவிபூதிதர்ஶநோத்தரகாலபாவிந்யா அநவதிகாதிஶயபக்த்யா மாம் ப்ராப்நோதீத்யர்த:| அத்ர தத இதி ப்ராப்திஹேதுதயா நிர்திஷ்டா பக்திரேவாபிதீயதே, “பக்த்யா த்வநந்யயா ஶக்ய:” இதி தஸ்யா ஏவ தத்த்வத: ப்ரவேஶஹேதுத்வாபிதாநாத் || || ருரு ||

---

கனென்றும், அவாகளாலே தனக்கு ஆகவேண்டிய தொன்றுமில்லையெ ன்றும்; “எல்லா உலகத்தையும் .....அழிப்பவனும்” என்பதால் தனக்கு உடம்பையும், இந்திரியஙகளையும் கொடுத்ததுமுதலான பெரிய உபகாரங் களைச்செய்த பகவான் இருககையில், அவரால் உண்டுபண்ணப்பட்டு அழிக்கப்பட்டவாகளில் எவனிடம் போகவேண்டியது என்றும்; ‘ஒரு விதக்குற்றமில்லாதவனும்” என்பதிலுலே பகவானை உள்ளபடி அறிந் தால்,மற்றவர்களிடத்தில்போல அலக்ஷியம் முதலானவைகளைச் செய்ய ககாரணமில்லையென்றும்; “கணக்கிலலாத......இருப்பிடமாயும்” என் பதாலே ஒவவொரு குணத்தின் பெருமையே மனதை இழுக்கிறது; எல்லா குணங்களும் இருப்பவனைப்பற்றிக் கேட்பானேன்; பகவான் மிகவும் உயர்ந்தவரா யிருந்தாலும், மிகவும் ஸுலபர்; அவரைததான் அடையவேண்டும் என்றும்; “அழகுக்குஸமுத்திரமாயும” எனபதாலே ப கவானுடைய அப்பிராகிருதமான திருமேனியைத் தியானம் பண்ணவே ணும் என்றும்; “தாமரைப்பூ......ளவனுயும” என்பதாலே, எல்லாபாபங கள்ம் போகவேணுமென்று ஆசைப்படுகிறவன்—பகவான் தாமரைஇதழ் போன்ற கண்களை உடையவா என்று நினைக்கவேண்டும் என்றும்; அவவிதமான திருக்கண்கள் எல்லாப் பாபங்களையும் போக்கத் தகுந்த வைகள் என்றும்; “மஹாலக்ஷிமி .....வனும” எனபதால் அவள் பக வானுடன எப்போதும் கூடஇருக்கிறுள்; அடைவதும், தியானம் செய் வதும், அவளுடன் சேர்ந்த பகவான்தான் என்றும் கட்டப்படுகிறது.

*அவ—அந்தத் தியானத்துக்குப் பிரயோஜனத்தைச் சொல்லுகிறார்—*

*கீழ்ச்சொன்னபடி பக்தி செய்தால், என்னுடைய ஸ்வரூபத்தையும், 1 ஸ்வபாவங்களையும், 2 குணங்களையும், ஸொத்துக்களையும் உள்ளபடி ஒன்றுகூட விடாமல் பார்ப்பன். பார்த்தஉடனே அளவில்லாத பக்தி வரும். பிறகு அதனால் என்னையே அடைவன்.*

ஸ்வ—ஸ்வவர்ணாஶ்ரமோசிதநித்யநைமித்திககர்மணாம் அபி த்யக்தபலாதிகாநாம் பரமபுருஷாராதநரூபாணாம் அநுஷ்டாநப்ரகார உக்த:। இதாநீம் காம்யாநாமபி கர்மணாம் உக்தேநைவ ப்ரகாரேணாநுஷ்டிதாநாம் ஸ்வவிபாகமித்யாஹ—

ஸர்வகர்மாண்யபி ஸதா குர்வாணோ மத்வ்யபாஶ்ரய:।
மத்ப்ரஸாதாதவாப்நோதி ஶாஶ்வதம் பதமவ்யயம் ॥ ௫௬ ॥

ந கேவலம் நித்யநைமித்திகாநி கர்மாணி, அபி து ஸர்வாணி காம்யாந்யபி கர்மாணி மத்வ்யபாஶ்ரய:-மயி ஸந்ந்யஸ்தகர்த்ருத்வாதிக: குர்வாணோ மத்ப்ரஸாதாத் ஶாஶ்வதம் பதமவ்யயம்-அவிகலம் ப்ராப்நோதி। பத்யத இதி பதம் மாம் ப்ராப்நோதீத்யர்த: ॥ ॥௫௬॥

*அவ—இப்படி ஜாதிக்கும், ஆசிரமத்திற்கும் தகுந்த நித்தியம், நைமித்திகம் என்கிற இருவித கர்மங்களை அவைகளின் பலன் முதலானவைகளைவிட்டு, பகவானுடைய பூஜையென்று நினைத்துச் செய்தால், அவைகளால் பகவான் ஸந்தோஷத்தை அடைந்து, கொடுக்கும் பலன் சொல்லப்பட்டது. இவைகளைப்போல காம்மியம் என்று சொல்லப்பட்ட கர்மங்களையும் செய்தால், அவைகளுக்கும் இதேமாதிரி பலன் வருகிறதென்று சொல்லுகிறார்—*

*இப்பொழுது சொன்னது நித்திய—நைமித்திகங்களுக்குமாத்திரமல்ல. காம்மியம் என்று சொல்லப்பட்ட எல்லாகர்மங்களையும்,*

---

1. *எல்லாத் தியானங்களிலும் நினைக்கவேண்டிய ஸ்வரூப நிரூபக குணங்கள்.*

2. *ஞானம், சக்தி முதலான மற்ற குணங்கள்.*

அவைகளின் பலனை விரும்பாமல், கீழ்ச்சொல்லியபடி மூன்றையும் விட்டுச் செய்கிறவன், அதினால் எனக்கு உண்டாகும் ஸந்தோஷத்தினால் அழிவில்லாதவனும், ஒருவிதக் குறைவில்லாதவனுமான என்னை அடைகிறான். [56]

அவ—யஸ்மாதேவம் தஸ்மாத்—

சேதஸா ஸர்வகர்மாணி மயி ஸந்ந்யஸ்ய மத்பர: ।
புத்தியோகமுபாஶ்ரித்ய மச்சித்த: ஸததம் பவ ॥ ॥௫௭॥

சேதஸா—ஆத்மநோ மதீயத்வமந்நியாம்யத்வபுத்த்யா, உக்தம் ஹி “மயி ஸர்வாணி கர்மாணி ஸந்ந்யஸ்யாத்யாத்மசேதஸா” இதி। ஸர்வகர்மாணி ஸகர்த்ருகாணி ஸாராத்யாணி மயி ஸந்ந்யஸ்ய மத்பர:—அஹமேவ ப்ராப்ய இத்யநுஸந்தாய கர்மாணி குர்வந்நேவம் புத்தியோகமுபாஶ்ரித்ய ஸததம் மச்சித்தோ பவ.

அவ—இப்படி இருக்கிறபடியினாலே——

நீ உன்னை என்னுடைய சொத்தாகவும், என்னால் ஏவப்படுகிறவனாகவும் நினைத்து, எல்லாக் கார்யங்களையும் பகவான்தான் செய்கிறார்; அவர்தான் அவைகளால் ஸந்தோஷத்தையும் அடைகிறார் என்றும், பகவானைத் தான் அடையவேணுமென்றும் நினைத்து, கர்மங்களைப் பண்ணிக்கொண்டு, கீழ்ச்சொன்ன நினைவை ஒருபொழுதும் விடாமல், என்னைத் தியானம் செய்துகொண்டிரு.

மச்சித்த: ஸர்வதுர்காணி மத்ப்ரஸாதாத்தரிஷ்யஸி॥ ॥௫௭½॥

ஏவம் மச்சித்த: ஸர்வகர்மாணி குர்வந் ஸர்வாணி ஸாம்ஸாரிகாணி துர்காணி மத்ப்ரஸாதாதேவ தரிஷ்யஸி॥ ॥௫௭½॥

இப்படி என்னை நினைத்துக்கொண்டு, எல்லாக் கர்மங்களையும் நீ செய்தால், என்னுடைய ஸந்தோஷத்தாலேயே ஸம்ஸாரத்தால் ஏற்படும் எல்லாக் கஷ்டங்களும் உனக்குப் போய்விடும். [57½]

அத சேத்த்வமஹங்காராந்ந ஶ்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி ॥

அத த்வமஹங்காராத்—அஹமேவ க்ருத்யாக்ருத்யவிஷயம் ஸர்வம் ஜாநாமீதி பாவாத் மதுக்தம் ந ஶ்ரோஷ்யஸி சேத், விநங்க்ஷ்யஸி—விநஷ்டோ பவிஷ்யஸி। நஹி கஶ்சிந்மத்வ்யதிரிக்த: க்ருத்ஸ்ந

ப்ராணி ஜாதஸ்ய க்ருத்யாக்ருத்யயோஜ்ஞாதா ப்ரஸாஸிதா வா க்வசித் ॥ ॥ருஅ॥

அவ—இப்படி சில நினைவுடனும் சில நியமங்களுடனும் செய்யப்படும், நித்தியம்—நைமித்திகம், காம்மியம்—என்று மூன்றுவகையான கர்மங்களினுல்படிப்படியாய்பகவானைப்பூர்ணமாய்அடையலாம் என்று காட்டி, யாரும் கர்மயோகத்தையே செய்யவேண்டியதென்று முடித்தார். இப்போது அதைச் செய்யாதபோனுல் வரும் குற்றத்தைச் சொல்லுகிறுர்—

இன்னது செய்யவேண்டியது, இன்னது செய்யக்கூடாதது. என்பதெல்லாம் எனக்கே தெரியும்; எனக்கு ஒருவர் சொல்லவேண்டாம் என்று நினைத்து, நான்சொன்னதை நீ 1கேட்காவிட்டால், நீ அழிந்து போய்விடுவாய், அதாவது— ஸம்ஸாரத்திலேயே இருப்பாய். 2என்னைத்தவிர இன்ஞெருவனுல இந்தப்பிராணிகளெல்லாம் இன்னதைச் செய்யலாம். இன்னதைச் செய்யக்கூடாது என்பதை அறியவும், அவைகளை அடக்கி ஆளவும் முடியாது. [ 58 ]

யத்யஹங்காரமாச்ரித்ய ந யோத்ஸ்ய இதி மந்யஸே ।
மித்யைஷ வ்யவஸாயஸ்தே ப்ரக்ருதிஸ்த்வாம் நியோக்ஷ்யதி॥

---

1. அர்ஜுனன் கேட்டுக்கொண்டே இருக்கையில், 'கேட்காவிட்டால்' என்பதற்கு, கேட்டதை நான் சொன்னபடி செய்யாவிட்டால் என்றுபொருள்.

2. எல்லாவற்றையும் நன்குய் அறிந்தவனும், பகவானைக் காட்டிலும் வேருய், வேண்டியவனுமான ஒருவன் இருந்தால், பகவான் சொல்லுவதைக் கேட்காமல் இருக்கலாம். அப்படி ஒருவனுமில்லை. 'நீ அழிந்து விடுவாய்' என்றுசொன்னது சாபமன்று. அப்படிச்சொல்லியாவது தான்சொன்ன வேலைகளை அவனைக்கொண்டு நடத்துவதற்காக. உபதேசம் பண்ணுகிற மற்றவர்களையும் பகவானதான் உபதேசம் பண்ணும்படி செய்திருக்கிறுர். ஆனுல் அவர்களுக்கெல்லாம் தெரியாது. சில சங்கதிகளைத்தான் சொல்லுவர்கள். பகவானே எல்லாருக்கும் இது நல்லது, இன்னது பொல்லாதது என்று எல்லாம் அறிந்தவர். மற்றவர்கள் சொல்லும் சாஸ்திரங்களும், அவர்களால் அறியப்படாத வேதங்களும் பகவானுடைய உத்திரவாக இருப்பதால்தான செல்வாக்கை அடைகின்றன.

யத்யஹங்காரமாஶ்ரித்ய ஹிதாஹிதஜ்ஞானே ஸ்வாதந்த்ர்யாபிமானாத் மந்நியோகமனாத்ருத்ய ந யோத்ஸ்ய இதி மன்யஸே, ஏஷ தே ஸ்வாதந்த்ர்யவ்யவஸாயோ மித்யா பவிஷ்யதி। யத: ப்ரக்ருதிஸ்த்வாம் யுத்தே நியோக்ஷ்யதி—த்வத்ஸ்வாதந்த்ர்யாபிமானம் க்ஷாத்ரஜம் ப்ரக்ருதிர்நியோக்ஷ்யதி॥ ॥ ௫௯ ॥

அவ—பகவான் சொன்னதைக் கேட்பதின்பலன் சண்டைசெய்வது; அதைச் செய்யாவிட்டால்வரும் கெடுதிசொல்லப்பட்டது. இப்போது சண்டை செய்யாதிருப்பதே முடியாதென்று சொல்லுகிறார்——

எனக்கு நல்லது, பொல்லாதது எல்லாம் எனக்கேதெரியும் என்று, உன்னை இன்னொருவருக்கு உட்படாதவன் என்று நினைத்து, என் உத்திரவை லக்ஷியம் பண்ணுமல், நான்சண்டைப்படுவதில்லை என்று நினைத்தால், உன்னுடைய இந்த எண்ணம் நிறைவேறுது ஒருவருக்கும் உட்படாதவன் நான்தான்; மற்ற யாரும் என் அதீனமாக இருப்பவர்கள்; என்னுடைய இந்த சக்தியில் அகப்பட்டுக் கொண்டு இருப்பதுதோன்றுமலிருக்கிற உன்னை பிரகிருதி 1 கட்டாயம் சண்டை போடும்படி செய்யும். [59]

கவ—ததேவாஹ—

ஸ்வபாவஜேன கௌந்தேய நிபத்த: ஸ்வேன கர்மணா।
கர்தும் நேச்சஸி யன்மோஹாத் கரிஷ்யஸ்யவஶோऽபி தத்॥

ஸ்வபாவஜம் ஹி க்ஷத்ரியஸ்ய கர்ம ஶௌர்யம்। ஸ்வபாவஜேன ஶௌர்யாக்யேன ஸ்வேன கர்மணா நிபத்தஸ்த்வமவஶ:—பரைர்தர்ஷணமஸஹமான: ஸ்வயமேவ தத் யுத்தம் கரிஷ்யஸி; யதிதானீம் மோஹாதஜ்ஞானாத் கர்தும் நேச்சஸி ॥௬0॥

1. பிரகிருதிஅறிவில்லாதது. அதுசெய்யுமோஎன்றால், முட்டாளான உனக்கு அறிவில்லாத வஸ்துதான் சொல்லிக்கொடுக்கவேணுமென்று பகவான் பரிஹாஸம் பண்ணுகிறார். அதாவது—நான் சொன்னபடி கேட்டால், உன்வேலை முழுவதையும் நான்பார்த்துக்கொள்ளுவேன். அப்படிச் செய்யாவிட்டால், நான் வேடிக்கை பார்த்துக்கொண்டு இருப்பேன். நீ அறிவில்லாதபிரகிருதிக்குஉட்பட்டுத்தொந்தரவைக்கொடுக்கக் கூடிய வேலைகளையே செய்வாய் என்று கருத்து.

*அ.—அதற்கு யுக்தி சொல்லுகிறார்.—*

*க்ஷத்திரியனாய்ப் பிறந்தவனுக்கு சௌரியம் என்பது ஏற்பட்ட குணம். அதை உன்னால் தள்ளமுடியாது. ஆனதால் நீ உன்னிடஷ்ப்படி நடக்கமுடியாது அதற்கு ஸ்வாதீனப்பட்டிருப்பதால், பிறர் உன்னை ஒரு வார்த்தை இளப்பமாகச் சொல்லும்போது, அதைத்தாங்கமுடியாமல், உனக்கு ஏற்பட்ட அந்த சண்டையை நீயே கட்டாயம் பண்ணப்போகிறாய்; எதை இப்பொழுது உன் மனதில் படாமல் செய்யவேண்டாம என்று நினைக்கிறாயோ. 1*

௬௧—ஸர்வம் ஹி பூதஜாதம் ஸர்வேஶ்வரேண மயா பூர்வகர்மாநுகுணம் ப்ரக்ருத்யநுவர்தநே நியமிதம், தச்ச்ருணு—

ஈஶ்வரஸ்ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶேऽர்ஜுந திஷ்டதி ।
ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா ॥ ௬௧ ॥

ஈஶ்வர:-ஸர்வநியமநஶீலோ வாஸுதேவ: ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶே-ஸர்வப்ரவ்ருத்திநிவ்ருத்திமூலஜ்ஞாநோதயப்ரதேஶே திஷ்டதி । கிம் குர்வந் திஷ்டதி ? யந்த்ராரூடாநி ஸர்வபூதாநி மாயயா ப்ராமயந்-ஸ்வேநைவ நிர்மிதம் தேஹேந்த்ரியாவஸ்தம் ப்ரக்ருத்யாக்யம் யந்த்ரமாரூடாநி ஸர்வபூதாநி ஸ்வகீயயா ஸத்த்வாதிகுணமய்யா மாயயா குணாநுகுணம் ப்ரவர்தயந் திஷ்டதீத்யர்த: । பூர்வமேவோக்தம்-"ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ மத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநம் ச" இதி, "மத்த: ஸர்வம் ப்ரவர்ததே" இதி ச । ஶ்ருதிஶ்ச "ய ஆத்மநி திஷ்டந்" இத்யாதிகா ॥ ॥ ௬௧ ॥

---

1. *சண்டை செய்யவேண்டிய காலததில் அதை விட்டுவிட்டு, அந்தக்காலம் போனபிறகு, பிறர் பண்ணும் அவமானத்தினால் வெட்கப்பட்டு, நீ சண்டை செய்வாய்—இது வெள்ளம் போனபிறகு அணைபோடுவது போலாகும்—என்று கருத்து. இது நினைக்கிறாயோ என்கிற நிகழ்காலத்தைக காட்டும் சொல்லாலும், 'பண்ணப்போகிறாய்' எனகிற வருங்காலத்தைக்காட்டும் சொல்லாலும் ஏற்படுகிறது.*

அவ—எல்லா ஜீவன்களும், எல்லாலோகத்தையும் அடக்கி ஆளுகிற என்னாலே, நெடு நாளாய் வந்தகர்மத்துக்குத் தகுந்தபடி பிரகிருதியினுடைய ஸத்துவம் முதலான குணங்களுக்குத் தகுந்தபடியே வேலையைச் செய்யும்படி ஏற்படுத்தப் பட்டிருக்கிறார்கள். அதைச் சொல்லுகிறேன், கேள்—

எல்லா லோகங்களையும் அடக்கி ஆளுவதையே இயற்கையாக உடைய1 வாஸுதேவன் எல்லாப் பிராணிகளுடைய ஹிருதயத்தில்இருக்கிறார். அந்தஹிருதயம் தான் ஒரு காரியத்தைச் செய்வதற்கும், செய்யாமலிருப்பதற்கும்காரணமான நினைவு உண்டாகிற இடம். எதைக்கொண்டு, என்ன செய்துகொண்டு இருக்கிறார்? தன்னாலே உண்டு பண்ணப் பட்டு உடம்பாகவும், இந்திரியங்களாகவும் ஆகியிருக்கிற பிரகிருதியாகிற யந்திரத்தில் ஏறியிருக்கிற எல்லாப்பிராணிகளையும், தன்னுடையதான—ஸத்துவம் முதலான குணங்களோடுகூடிய- மாயை என்று சொல்லப் படுகிற பிரகிருதியைக் கொண்டு,2 அந்த ஸத்துவம் முதலான குணங்களுக்குத் தகுந்தபடி வேலைகளைச் செய்யும்படி பண்ணிக்கொண்டிருக்கிறார். இந்த ஸங்கதி முன்பே 15-வது அ,15—வதுசுலோகத்திலும், 10-வது அ,8-வது சுலோகத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.3 [61]

---

1 வாஸுதேவன் என்கிற சொல்லுக்கு எங்கும் நிறைந்தவன் என்று பொருள். அவர் ஹிருதயத்தில் இருப்பதற்குக் காரணம் இதினால் சொல்லப் படுகிறது.

2 ஜீவனுடைய உடம்பில் நுழைந்து கொண்டு, ஒருபிசாசு அவனை ஏவுவதுபோல, பகவான் அவனை ஏவவில்லை. ஸத்துவம் முதலான குணங்கள்மேலிட்டவஸ்துக்களைக் காட்டி, முன்னால் உண்டாயிருக்கிற வாஸனையைக்கொண்டு, ஆசையை உண்டுபண்ணி ஏவுகிறார் என்று கருத்து.

3. பகவான் ஒன்றும் செய்யாமல் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தால், அர்ஜுனன் எப்படி ஒன்றைச் செய்வன். அப்படிச் செய்தால், பகவான் எல்லாவேலைகளுக்கும் காரணம் என்பது எப்படி—என்று ஒரு கேள்வி. அதற்குப்பதில்—யாரையும் பிரகிருதிக்கு உட்படும்படி பகவான் தான் ஏற்பாடு செய்திருக்கிறார். ஆனால் ஜீவன் செய்யும் வேலைகளுக்கு பகவான் பொதுவான காரணம். ஆகையால் ஒருவித விரோதமில்லை—என்று.

अव— [illegible] —

तमेव शरणं गच्छ सर्वभावेन भारत । तत्प्रसादात्परां शान्तिं स्थानं प्राप्स्यसि शाश्वतम् ॥ ६२ ॥

यस्मादेवं तस्मात्तमेव सर्वस्य प्रशासितारं आश्रितवात्सल्येन [illegible] ईश्वरं सर्वभावेन सर्वात्मना शरणं गच्छ सर्वात्मनानुवर्तस्व । अन्यथापि तन्मायाप्रेरितेनाज्ञेन त्वया युद्धादिकरणमवर्जनीयम् । तथा सति नष्टो भविष्यसि । तदानुकूल्यकरणेन युद्धादिकं कृत्वा तत्प्रसादात् परां शान्तिं सर्वकर्मबन्धोपशमनं स्थानं च शाश्वतं प्राप्स्यसि । यदभिधीयते श्रुतिशतैः— 'तद्विष्णोः परमं पदं सदा पश्यन्ति सूरयः', 'ते ह नाकं महिमानः सचन्त यत्र पूर्वे साध्याः सन्ति देवाः', 'यत्रर्षयः प्रथमजा ये पुराणाः', 'परेण नाकं निहितं गुहायाम्', 'यो अस्याध्यक्षः परमे व्योमन्', 'अथ यदतः परो दिवो ज्योतिर्दीप्यते', 'सोऽध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पदम्' इत्यादिभिः ॥ ॥ ६२ ॥

அவ—எல்லாப் பிராணிகளாலும், இந்தப் பிரகிருதியை மீற முடியவில்லையே; அதை மீறுவதற்கு வழி என்ன என்றால்—சொல்லுகிறார்—

ஜீவன்கள் தாங்களாகவே பிரகிருதியில் அகப்பட்டுக்கொண்டார்களோ; ஈசுவரனாலேயன்றோ பிரகிருதியினால் கட்டுப்பட்டிருக்கிறார்கள். ஆகையாலே எல்லாலோகத்தையும் அடக்கி ஆளுகிறவனும், தன்னைச் சேர்ந்தவர்கள் எவ்வளவு குற்றம் பண்ணினாலும், அதைக்கவனிக்க வெட்டாதபடி பண்ணுகிற அவர்களிடத்திலிருக்கும் ஒரு பிரீதியினாலே உனக்குக் குதிரை ஓட்டிக்கொண்டும், இந்தக்காரியத்தை இப்படிச்செய்யென்று உனக்கு உத்திரவுபண்ணிக்கொண்டும்இருக்கிறஅவரை 7-வது அ,19-வதுசு;9-வது அ,30-வது

சுலோகங்களில் சொல்லியபடி எல்லாவித உறவாகவும் நினைத்து, அவர் சொன்னபடி செய் அப்படி நீ கேட்காதபோனாலும், மாயை என்கிற அவருக்கதீனமான பிரகிருதியினாலேஏவப்பட்டு, வேண்டா மென்று சொன்னோமே என்பதை அறியாமல், நீ அந்த சண்டை முதலானவைகளைச்செய்தே தீருவாய். உன்னால் அவைகளை நிறுத் தமுடியாது. அந்த வேலைகளைப் பின்பு பண்ணினாலும், அவரை யஜமானனாக நினைக்காததினாலே கெட்டுப்போய் விடுவாய். ஸம்ஸா ரத்தை யடைவாய். ஆகையால் அவர் சொன்னபடி சண்டை முதலானவைகளைச் செய். அப்படி நீ பண்ணினாயேயானால், அவ ருடைய ஸந்தோஷத்தினாலே எல்லாக் கர்மங்களும் நீங்கி, அழி வில்லாத உயர்ந்த இடத்தை அடைவாய்; எந்த இடத்தை வேதங் கள் மிகவும் உயர்ந்ததாகச் சொல்லுகின்றனவோ. [62]

இதி தெ ஜ்ஞாநமாக்யாதம் குஹ்யாத் குஹ்யதரம் மயா ।
விம்ருஶ்யைததஶேஷேண யதேச்சஸி ததா குரு ॥ ௬௩ ॥

இத்யேவம் தெ முமுக்ஷுபிரதிகம்யம் ஜ்ஞாநம் ஸர்வஸ்மாத் குஹ்யாத் குஹ்யதரம் கர்மயோகவிஷயம் ஜ்ஞாநயோகவிஷயம் பக்தியோகவிஷயம் ச ஸர்வமாக்யாதம் । ஏததஶேஷேண விம்ருஶ்ய ஸ்வாதிகாராநுரூபம் யதேச்சஸி ததா குரு । கர்மயோகம் ஜ்ஞாநயோகம் பக்தியோகம் வா யதேஷ்டமாதிஷ்டேத்யர்த: ॥ ॥ ௬௩ ॥

கீழ்ச்சொல்லியபடி மோக்ஷத்தை ஆசைப்பட்டவர்கள் அறிய வேண்டிய 1 ரஹஸ்யமான (ஒருவராலும் அறியமுடியாதவை களைக் காட்டிலும் ரஹஸ்யமான) கர்மயோகம், ஞானயோகம், பக் தியோகம்—இவைகளைப்பற்றின எல்லா ஸங்கதிகளையும் மிகவும்

1. மற்ற சாஸ்திரங்களைக் காட்டிலும், வேதம ரஹஸ்யமானது. அதிலும் உபநிஷத்துக்களில் சொல்லப்பட்டது அதிக ரஹஸ்யம்- (குஹ்யதரம்). அது கர்மயோகம் முதலானவைகள். அவைகளிலும் மிகவும ரஹஸ்யமானது பகதியோகம் (குஹ்யதமம்). இதை மேலே சொல்லப் போகிறார்.

தெளிவாகச் சொன்னேன். இவைகள் எல்லாவற்றையும் நீ 1 நன்றாய் யோஜித்து, நீ உனக்குத் தகுந்ததான எதைச் செய்ய வேணுமென்று நினைக்கிறாயோ, அதைச்செய். 2 [63]

ஸர்வகுஹ்யதமம் பூய: ஶ்ருணு மே பரமம் வச: ।
இஷ்டோऽஸி மே த்ருடமிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம் ॥

ஸர்வேஷ்வேதேஷு குஹ்யேஷு பக்தியோகஸ்ய ஶ்ரேஷ்ட்யாத் ஸர்வகுஹ்யதமத்வமிதி பூர்வமேவோக்தம் । "இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே" இத்யாதௌ । பூயோऽபி தத்விஷயம் பரமம் மே வச: ஶ்ருணு । இஷ்டோऽஸி மே த்ருடமிதி ததஸ்தே ஹிதம் வக்ஷ்யாமி ॥ ॥ ௬௪ ॥

அவ—கர்மயோகம் முதலான மூன்றையும், பொதுவாய் அதிக ரஹஸ்யமென்று சொல்லிமுடித்தார். அவைகளில் மோக்ஷத்திற்குக்கிட்டின சாதனமாய் இருப்பதாலே, பக்தியோகம் மிகவும்ரஹஸ்யம் என்றும், அதிலேயே கீதாசாஸ்திரத்திற்கு முக்கியக் கருத்தென்றும் சொல்லுகிறார்—

ரஹஸ்யமான இந்த எல்லா ஸங்கதிகளுக்குள்ளும் பக்தியோகம்மிகவும் உயர்ந்தது என்றுமுன்னமேயே சொல்லியிருக்கிறேன். (9-வது அ, சு-1). இதைப்பற்றி மறுபடியும் தெளிவாகச சொல்லுகிறேன், கேள்—நீ எனக்கு மிகவும் வேண்டியவனாக இருப்பதினாலே, உன்னுடைய க்ஷேமத்திற்காக இதைச் சொல்லுகிறேன். [64]

---

1. அவஸரப்பட்டு முதலிலேயே பக்தி யோகத்தை ஆரம்பித்து விடாதே என்று கருத்து.

2. சுலோகத்தில் 'யதேச்சஸி' (எப்படி நினைக்கிறாயோ.) என்பதற்கு சண்டை செய்ய இஷ்டமிருந்தால், செய்; இஷ்டம் இல்லாவிட்டால், வேண்டாமெனறு பொருளல்ல. கர்மயோகமோ, ஞானயோகமோ, பக்தியோகமோ, எதைச் செய்தாலும், வர்ணத்துக்கும், ஆசிரமத்திற்கும் ஏற்பட்ட நித்திய—நைமித்திகஙகளான கர்மஙகளை கட்டாயம் செய்ய வேண்டியது என்று கீழே அவரே நிர்மானித்திருக்கிறபடியாலும், இங்கே 59,60-வதுசுலோகங்களிலும், அர்ஜுனன் சண்டையை விடக்கூடாதென்று பகவான் சொன்ன படியாலும், உபதேசம் பண்ணப்பட்ட கர்மயோகம் முதலானவைகளில், இதுதனக்குத்தகுந்தது என்று நிர்மானித்து, அதைச் செய் என்று தான் பொருள்.

மந்மநா ப⁴வ மத்³ப⁴க்தோ மத்³யாஜீ மாம் நமஸ்குரு | மாமேவை-
ஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜாநே ப்ரியோ(அ)ஸி மே || ௬௫ ||

வேதாந்தேஷு "வேதா³ஹமேதம் புருஷம் மஹாந்தம் | ஆதி³த்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் | தமேவம் வித்³வாநம்ருத இஹ ப⁴வதி | நாந்ய: பந்தா² வித்³யதே(அ)யநாய" இத்யாதி³ஷு விஹிதம் வேத³நத்⁴யாநோபாஸநாதி³ஶப்³த³வாச்யம் த³ர்ஶநஸமாநாகாரம் ஸ்ம்ருதிஸந்தாநம் அத்யர்த²ப்ரியமிஹ மந்மநா ப⁴வேதி விதீ⁴யதே | மத்³ப⁴க்த:—அத்யர்த²மத்ப்ரிய:, அத்யர்த²ப்ரியத்வேந நிரதிஶயப்ரியாம் ஸ்ம்ருதிஸந்ததிம் குர்வீதேத்யர்த²: | மத்³யாஜீ—தத்ராபி மத்³ப⁴க்த இத்யநுஷஜ்யதே | யஜநம்—பூஜநம், அத்யர்த²ப்ரியமதா³ராத⁴நபரோ ப⁴வ | ஆராத⁴நம் ஹி பரிபூர்ணஶேஷவ்ருத்தி: | மாம் நமஸ்குரு—நமோ நமநம் | மய்யதிமாத்ரப்ரஹ்வீபா⁴வம் அத்யர்த²ப்ரியம் குர்வித்யர்த²: | ஏவம் வர்த்தமாநோ மாமேவைஷ்யஸி | ஏதத் ஸத்யம் தே ப்ரதிஜாநே—தவ ப்ரதிஜ்ஞாம் கரோமி | நோபச்ச²ந்த³நமாத்ரம் | யதஸ்த்வம் ப்ரியோ(அ)ஸி மே | "ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோ(அ)த்யர்த²மஹம் ஸ ச மம ப்ரிய:" இதி பூர்வமேவோக்தம் | யஸ்ய மய்யதிமாத்ரா ப்ரீதிர்வர்த்ததே, மமாபி தஸ்மிந் அதிமாத்ரா ப்ரீதிர்ப⁴வதீதி தத்³வியோக³மஸஹமாநோ(அ)ஹம் தம் மாம் ப்ராபயாமி | அத: ஸத்யமேவ ப்ரதிஜ்ஞாதம் மாமேவைஷ்யஸீதி || ௬௫ ||

உபநிஷத்துக்களில் வேதனம், தியானம், உபாஸனம்—இவை முதலான சொற்களாலே சொல்லப் பட்டும்—கண்ணாலே பார்ப்பது போலிருப்பதுமான-மிகவும் இன்பமாக—இடைவிடாத—நினைவைச் செய்யவேணுமென்று இந்த ச்லோகத்தில் சொல்லுகிறார். உலகத்தில் சத்துருக்களையும், பாம்பு, வியாதிமுதலானவைகளையும் நினைப்பதுண்டு. ஆனால் அவைகளை நினைக்கும்போது, ஒருவன் நடுங்குவன். அது போலில்லாமல், என்னை உனக்கு மிகவும் வேண்டிய பிள்ளை, பெண்டாட்டிகளைப் போல் நினை எந்த எந்த வேலைகள் செய்தால், எனக்குமிகுந்த ஸந்தோஷமாக இருக்குமோ,

அந்தந்தவேலைகளை எல்லாம்மிகவும் பிரியமாகச்செய். என்விஷயத்தில் உனக்கு இருக்கும் வணக்கத்துக்கு அளவிருக்கக்கூடாது. இப்படி நீ இருந்தால் என்னிடம் வந்து அளவில்லாத—நிலையான—ஸுகத்தை அடைவாய. இதை ஏய்ப்புக்குச் சொல்லுகிறேன் என்று நினைக்காதே. உண்மை சொல்லுகிறேன். நீ இந்த விஷயத்தில் என்ன பிரதிக்ஞை பண்ணச்சொன்னாலும் பண்ணுவேன். எனக்கு உன்னிடத்தில் மிகுந்த ப்ரீதி இருக்கிறதன்றோ. 7-வது அ,17-வது சுலோகத்திலே முன்னேயே சொல்லியிருக்கிறேன்—என்னிடத்தில் யாருக்கு மிகுந்த பிரீதியிருக்கிறதோ, அவர்களிடத்தில் எனக்கும் மிகுந்த பிரீதி. அவர்களுடைய பிரிவை என்னால் தாங்கமுடியவில்லை. ஆகையால் அவர்களை நான் என்னிடத்திற்கு அழைத்துக்கொண்டு போகிறேன்-என்று. ஆகையால் என்னை நீ அடைவாய் என்று சொன்னது உண்மையே. வேண்டியவனை வேண்டியவன் அழைத்துக் கொள்ளுகிறான் என்பது பொய்யாக இருக்குமோ. [65]

ஸர்வத⁴ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ ।
அஹம் த்வா ஸர்வபாபேப்⁴யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச:॥

கர்மயோக³ஜ்ஞாநயோக³ப⁴க்தியோக³ரூபாந் ஸர்வாந் த⁴ர்மாந் பரமநி:ஶ்ரேயஸஸாத⁴நபூ⁴தாந் மதா³ராத⁴நத்வேந அதிமாத்ரப்ரீத்யா யதா²தி⁴காரம் குர்வாண ஏவோக்தரீத்யா ப²லகர்மகர்த்ருத்வாதி³பரித்யாகே³ந பரித்யஜ்ய, மாமேகமேவ கர்தாரமாராத்⁴யம் ப்ராப்யமுபாயம் சாநுஸந்த⁴த்ஸ்வ। ஏஷ ஏவ ஸர்வத⁴ர்மாணாம் ஶாஸ்த்ரீயபரித்யாக³ இதி "நிஶ்சயம் ஶ்ருணு மே தத்ர த்யாகே³ ப⁴ரதஸத்தம। த்யாகோ³ ஹி புருஷவ்யாக்⁴ர த்ரிவித⁴: ஸம்ப்ரகீர்தித:" இத்யாரப்⁴ய "ஸங்க³ம் த்யக்த்வா ப²லம் சைவ ஸ த்யாக³: ஸாத்த்விகோ மத:, ந ஹி தே³ஹப்⁴ருதா ஶக்யம் த்யக்தும் கர்மாண்யஶேஷத:। யஸ்து கர்மப²லத்யாகீ³ ஸ த்யாகீ³த்யபி⁴தீ⁴யதே" இத்யத்⁴யாயாதௌ³ ஸுத்³ருட⁴முபபாதி³தம்। அஹம் த்வா ஸர்வபாபேப்⁴யோ மோக்ஷயிஷ்யாமி-ஏவம் வர்தமாநம் த்வாம் மத்ப்ராப்திவிரோதி⁴ப்⁴யோ(அ)நாதி³காலஸஞ்சிதாநந்த

[illegible]

[illegible]

[illegible] || ௬௬ ||

அவ—இப்படி விரிவாயும், சுருக்கமாயும் சொல்லப்பட்ட கர்மயோகம் முதலான மூன்றுக்கும் பொதுவாய் வேண்டிய மிகவும் ஸாரமான நினைவை (4-வது— சுலோகத்தில் சொன்னதை)க் காட்டி, அதிலேயே கீழ் சுலோகத்தில் சொன்ன—பகவானிடம் போவதென்கிற-இஷ்டத்திற்கு இடைஞ்சல்கள் போய்விடும் என்று சொல்லுகிறார்—

கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் என்று சொல்லப் படுகிற— மிகவும் உயர்ந்த பலனான மோக்ஷத்திற்காகச் செய்ய வேண்டியவைகளான 1—எல்லா தர்மங்களில் உனக்கு எதைச் செய்யமுடியுமோ, அதை என்னுடைய பூஜை என்று அளவில்லாத

1. படிப்படியாகவோ, நேராகவோ கொடுக்கக்கூடிய.

பிரீதியுடன் செய்து கொண்டே, இந்த அத்தியாயம் 4-வது சுலோகத்தில் சொல்லியபடி, 1, மூன்றுஸங்கதிகளைவிட்டு, என்னை 2 ஒருவனையே எல்லாவேலைகளையும் செய்கிறவனாகவும், எல்லா வேலைகளாலேயும் ஸந்தோஷப்படுத்தவேண்டியவனாகவும், அடையத்தகுந்தவனாகவும், 3 எல்லாஸுகங்களையும்கொடுக்கிறவனாகவும் நினை. இந்த ஸங்கதி இந்த அத்தியாயத்தில் முதலில் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி இருக்கும்உனக்குஎன்னை அடைவதற்கு இடைஞ்சலான—நெடுநாளாய் செய்யப்பட்ட—கணக்கில்லாத—செய்யச் சொன்னதை விட்டது, செய்யவேண்டாமென்று சொன்னதைச் செய்தது என்று இருவகைப்பட்ட—எல்லாப் பாபங்களையும் 4 நான் போக்கி விடுவேன். நீ கொஞ்சமேனும் கவலைப்படாதே. 5

---

1. மூன்றையும்-இதின்பலனை விடுவதுஒன்று. பகவானுக்கு வேலைக்காரனானவன் ஐசுவரியம முதலானவைகளை அடியோடு விடவேணும்; மோக்ஷத்தையும் தனக்காக என்று விரும்பக்கூடாதென்று கருத்து.

2. ஒருவனையே—வேறு தர்மங்களைச் செய்கிறவன்தான் அவைகளைச்செய்வதாகவும்,இந்திரன்முதலானவர்களைஸந்தோஷப்படுத்துவதாகவும், ஸுவர்க்கம் முதலானவைகளை அடையவேண்டியதாயும், தான்செய்யும் கர்மங்களை அவைகளுக்குச் சாதனமாகவும் நினைக்கிறான். அப்படி அர்ஜுனன் நினைக்கக்கூடாதெனறும், இந்தநாலும் பகவான்தான் என்று நினைக்கவேண்டு மென்றும் கருத்து.

3. உடனே அழிந்து போகிற—ஒருவனால் செய்யப்படும்—யாகம், தியானம் முதலான கர்மங்கள் காலம் கழித்துவரும் பலன்களைக் கொடுக்கமாட்டாது. ஏற்கனவே இருக்கிறவனும், நிலையானவனும், எல்லாம் தெரிந்தவனும்,நினைத்தபடி நடத்தக்கூடியவனும், கேட்டதைக்கொடுப்பவனும், எல்லாக் கர்மங்களாலும் ஸந்தோஷப்படுகிறவனுமானபகவானே எல்லாக் கர்மங்களுக்கும் பலன்களைக் கொடுக்கிறார். இப்படி நினைக்கவேண்டும் என்று கருத்து.

4 நான்—பலனைக்கொடுப்பதற்குத்தகுதியாக எல்லாம்தெரிந்தவனாயும், எதையும் செய்யச்சக்தியுள்ளவனாயும், மிகுந்த தயையுள்ளவனாயுமிருக்கிற நான்.

5. கீழ் சுலோகத்தில் பகவானை அடைவது சொல்லப்பட்டது. இந்த சுலோகம் இடைஞ்சல்கள் போவதைச்சொல்லுகிறது.

அவ—கீழ்ச்சொன்ன பொருளில் சில கேள்விகள் ஏற்படுகின்றன. அதற்காகஇரண்டாவதுபொருளை ஸ்ரீ பாஷியகாரர் அருளிச்செய்கிறார்.

அந்தக் கேள்விகளாவன— (1) கீழே பகவான் கர்மயோகம் முதலான மூன்றையும் சொனனார். பிறகு மிகவும் உயர்ந்த ரஹஸ்யமாயும் கீதாசாஸ்திரத்திறகு முக்கியமான கருத்தாயுமிருககிற பக்தியோகத்தை க்கட்டாயம் பணணு என்று மறபடியும் தீரமானமாய்ச சொன்னார். பிறகு மூன்றுக்கும் பொதுவான மூனறு ஸங்கதிகளை விடுவது என்பதை மறுபடியும் சொல்லுவானேன்? (2) இந்த சுலோகத்தில் "மாசுவ:— துக்கப்படாதே" என்று சொல்லியிருக்கிறது. இதற்கு முன அர்ஜுனனுக்கு இரண்டுதடவை துக்கம் வந்திருந்தது. முதலில் துக்கம் பந்துக்கள் செற்றுப்போகிறார்கள் என்று. அது ஆத்மாவையும், உடமபையும்பற்றி பகவான் சொன்னதினால், அவனுக்குத் தெளிவு பிறந்து இருந்த இடம தெரியாமல் போய்விட்டது. 16-வது அத்தியாயம் 5-வதுசுலோகததில் ஒருதுக்கம்வந்தது. அதுவும்போய்விட்டது. இப்போது அவனுக்கு என்ன துக்கம் வந்தது; எதற்கு துக்கப்படாதே என்று பகவான் சொல்லுகிறார்? கீழே பகவான் சொன்ன ஸங்

---

பெருமாள் என்று வாயினால் சொல்லுகிறோமே யொழிய, பெருமாளென்பவரை உயிரோடு நாம் கண்ணால் பார்க்கவில்லை. பகவான் ஸ்ரீ ராமனாகஅவதாரம் பண்ணபோது, அவர் காட்டுக்குப் போனதாகவும், அந்த பட்டணத்திலிருந்த ஜனங்கள் அவர் பிரிவைத் தாங்காமல், போட்டது போட்டபடி வீடுமுதலானவைகளை விட்டு, அவருடனேகாட்டுக்குப் போனதாகவும் கதையிருக்கிறது. அழகும், எல்லையில்லாமல் கொடுப்பது முதலான எல்லாகுணங்களும் பொருந்திய அவரைப்பார்த்தபடியால், அந்த ஜனங்கள் அப்படிச் செய்தாகள். நாமும் அப்படிப்பார்த்தால், ஒருக்கால் அப்படிச்செய்வோமோ, என்னமோ. ஆகையால் இப்போது நமக்கு பகவானிடத்தில் பிரீதிவருவது மிகவும் வருத்தம். அதற்காக அந்தபக்தி வருவதற்கு இடைஞ்சலாயிருக்கும் நம்முடைய பாபங்களை நாம்துலைக்கவேண்டும். அந்தப்பாபஙகளுக்குக் கணக்கில்லை. பாபங்களைப் போக்குவதற்கு சாஸ்திரததில் வேலைகளைச் சொல்லியிருக்கிறது. அவைகளுக்குப் பிராயச்சித்தம் என்று பெயர். நம்முடைய பாபஙகளுக்கு எத்தனை காலம் பிராயசசிததம் பண்ணினாலும் போதாது. நாமிருக்கும் காலமோ கொஞ்சம். ஆகையால் அர்ஜுனன—கணக்கில்லாத பாபங்களைச் செய்த என்னால் எப்படி பக்தியோகம் ஆரம்பிக்க முடியுமென்று நினைத்து, அளவில்லாத துக்கத்தை அடைந்தான். அப்போது பகவான் அவனுடைய துக்கத்தைப்போக்குவதற்காகச் சொல்லுகிறார்.

கதிகள் புரியவில்லையா? அவைகளைச் செய்யத் தகுதியில்லையா? அவர் சொன்ன கர்மயோகம் முதலானவைகளில் இன்னதுதான் முக்கியம் என்று தீர்மானிக்க முடியவில்லையா? அல்லது பலன் கிடைக்குமோ கிடைக்காதோ என்று ஸந்தேகமா? அவன் உயர்ந்த க்ஷத்திரியன; உயர்ந்த தர்மிஷ்டன். அவன் சொன்னதையெல்லாம் அறியத்தகுந்தவன். எல்லா நல்ல காமங்களையும் செய்யத்தகுந்தவன்- இது முக்கியமென்று தீர்மானிக்கத்தகுந்தவன். பகவானிடத்தில் உயர்ந்த நம்பிக்கையுள்ளவன். ஆகையால் இவைகள் அவனுக்கு வராது. வேறென்ன துக்கம் என்றால், பக்தி யோகம் செய்வதிலும், அதின் பலன் கிடைப்பதிலும், காலதாமதத்தையும், அதைச் செய்வதில் மிகுந்த வருத்தத்தையும்,தனக்குப் பகவானிடம் சீக்கிரம் போகவேணுமென்கிற மிகுந்த ஆவலையும் பார்த்து துக்கப்பட்டான. அதற்காகச்சரணாகதியென்கிற-லகுவான-சீக்கிரம் பலன் கொடுக்கிற-உபாயத்தைசசொல்லுகிறார் என்கிற பொருள்தான் இந்த இடத்திற்கு ஒட்டும். அதைச் சொல்லுகிறார்—

அர்ஜுனா! பக்தியோகம் ஆரம்பிப்பதற்கு[1] இடைஞ்சல்களான பாபங்களை நீ இதுமுதல் என்று இல்லாமல் செய்திருக்கிறாய். அவைகள் எத்தனையோ விதங்கள். அவைகளுக்குக் கணக்கில்லை. அவைகளைப் போக்குவதற்காகச் சாஸ்திரத்தில் ஏற்பட்ட கிருச்சிரம், சாந்திராயணம், கூச்மாண்டஹோமம், வைசுவானரேஷ்டி, விராதபதிஷ்டி, பவித்ரேஷ்டி, திரிவித் அக்னிஷ்டோமம்-இவை முதலான—அநேக விதஙகளான-கணக்கில்லாத—[2] பிராயச்சித்தங்களைச் செய்யவேணும். அதற்கு வெகுகாலம் ஆகும். ஒரு பிறப்பில் [3] செய்யமுடியாது. செய்வதும் வருத்தம். ஆகையால் உன்

1. சுலோகததில் எல்லாப் பாபங்களிலுமிருந்து என்பதற்கு-பக்தி யோகம் செய்வதுஅடையவேண்டிய பலனையிருப்பதாலே, அதற்குஇடைஞ்சலான எல்லா பாபம என்றுதான் பொருள்.

2. சுலோகத்தில் (ஸர்வ-தர்ம) என்கிற சொல்லுக்கு இந்த யோஜனையில் சாஸ்திரத்தில் பாபஙகளுக்குப் பிராயச்சித்தமாகச் சொன்ன தர்மங்கள் என்றுபொருள். எல்லா தர்மஙகளையும் என்று சுலோகத்தில் சொல்லியதற்குக் கருதது—அவைகள் அனேகவிதஙகள் என்றும்,அவைகளுக்கு கணக்கில்லை யெனறும்.

3. இந்தப்பொருளில் நித்தியஙகளாயும், நைமித்திகங்களாயும் இருக்கும் எல்லாக்கர்மங்களையும் விடசசொல்லவில்லை. செய்யமுடியாத பிராயச்சித்தஙகளைததான் விடச்சொன்னது.

ளுல் அவைகளைச் செய்யமுடியாது. அவைகளைச்செய்தால் வரக் கூடிய பக்தி உனக்கு வருவதற்காக அவைகளைச் செய்ய முடியா யாமல் வருத்தப்படுகிற நீ அளவில்லாத தயையுள்ளவனும், தார தம்மியம் பாராமல் எல்லா உலகங்களையும் காப்பாற்றுகிறவனும், தன்னை அடைந்தவர்கள் என்ன குற்றம் பண்ணபோதிலும், அவைகளைக் கவனிக்காமல் அவர்களிடத்தில் அளவில்லாத பிரீதி பண்ணுபவனுமான என்னை 1 ஒருவனையே சரணுகதி பண்ணு. பிறகு நான் பக்தியோகத்திற்கு இடைஞ்சலான உன்னுடைய எல்லாப் பாபங்களையும் நீ பிராயச்சித்தம் பண்ணுமலே போக்கு கிறேன். நீ 2 துக்கப்படாதே. [66]

---

1. ஒருவனையே என்று சொன்னது எல்லா தர்மங்கள் என்பதற கு எதிர்த்தட்டாக. ஆகையால் பகவானைச் சரணுகதிசெய்வது ஒன்றே எல்லாவிதப் பிராயசசித்தம் என்று கருத்து.

2. பக்தியோகம் செய்யமுடியாதவன் இந்த சரணுகதியைச் செய்யலாம். அப்போது 'தர்மம்' என்பது பக்தியோகமும், அதின் அங் கங்களான காமயோகம் முதலானவைகளும். 'பாபம்' என்கிற சொல்லுக் குப்பகவானிடம் போவதற்குஇடைஞ்சலான எலலாப்பாபங்களும் என்று பொருள். இது தவிர எவன்எவனுக்கு எந்தஎந்தபலனில்ஆசை இருக்கிற தோ, அதற்கு ஏற்பட்ட உபாயத்தைச் செய்ய முடியாவிட்டால், அவன் அந்த உபாயத்தைவிட்டு, பகவான் ஒருவரையே சரணுகதி பண்ணவேண் டும் எனறு காட்டப்படுகிறது.

ஸ்ரீ பாஷ்யகாரர் இந்த சுலோகத்திற்குப்பொருள் எழுதுகை யில் பக்தியோகம் மோக்ஷத்தைக் கொடுக்கிறதென்று எழுதியிருக்கிறார். ஆகையால் அவரைத்தைவமாகநினைத்த நம்போன்றவர்கள் பக்தியோகம் பண்ணுவது பிசகு எனறு சொன்னல், அவர் திருவுள்ளத்திற்கு மிகவும் வருத்தமாக இருக்கும். ஆனல் பகதியோகத்தை நம்மால் செய்யமுடியா து என்று மட்டும்தான் சொல்லலாம். மேலும எனனைச்சரணுகதி பண் ணு (கெஞ்சிக கேட்டுக்கொள்) என்று பகவான் உத்திரவுபண்ணி யிருக் கும்போது, நாம் அப்படிக் கேட்காமலிருந்தாலும, அவரே நம்முடைய இஷ்டத்தைக் கொடுப்பரென்று சொல்லி, நாம் சரணுகதி செய்யாம லிருப்பதும் ஸரியன்று. ஒருவராலும் அறியமுடியாததும, சாஸ்திரத் தில் மறைந்திருப்பதுமான நல்ல ஸங்கதிகளைத் தெரிவிதது நடத்துவ தற்காக ஸ்ரீ பாஷ்யகாரரால் ஏற்படுத்தப்பட்ட புஸ்தகங்களைத்தவிர, அவ ருடைய அபிப்பிராயமான அந்த ஸங்கதிகளை வேறு எந்த வழியால் அறி யலாம். அந்த வழி அவா புஸ்தகத்திற்கு ஒத்துக்கொள்ளாமலிருந்தால்,

𑌇𑌦𑌂 𑌤𑍇 𑌨𑌾𑌤𑌪𑌸𑍍𑌕𑌾𑌯 𑌨𑌾𑌭𑌕𑍍𑌤𑌾𑌯 𑌕𑌦𑌾𑌚𑌨। 𑌨 𑌚𑌾𑌶𑍁-
𑌶𑍍𑌰𑍂𑌷𑌵𑍇 𑌵𑌾𑌚𑍍𑌯𑌂 𑌨 𑌚 𑌮𑌾𑌂 𑌯𑍋𑌽𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌤𑌿 ॥௬௭॥

𑌇𑌦𑌂 𑌤𑍇 𑌪𑌰𑌮𑌂 𑌗𑍁𑌹𑍍𑌯𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌮𑌯𑍋𑌪𑌦𑌿𑌷𑍍𑌟𑌮𑍍। 𑌅𑌤𑌪𑌸𑍍𑌕𑌾𑌯-𑌅𑌤𑌪𑍍𑌤𑌤𑌪𑌸𑍇 𑌤𑍍𑌵𑌯𑌾 𑌨 𑌵𑌾𑌚𑍍𑌯𑌂। 𑌤𑍍𑌵𑌯𑌿 𑌵𑌕𑍍𑌤𑌰𑌿 𑌮𑌯𑌿 𑌚𑌾𑌭𑌕𑍍𑌤𑌾𑌯 𑌕𑌦𑌾𑌚𑌨 𑌨 𑌵𑌾𑌚𑍍𑌯𑌮𑍍. 𑌤𑌪𑍍𑌤𑌤𑌪𑌸𑍇𑌽𑌭𑌕𑍍𑌤𑌾𑌯 𑌨 𑌵𑌾𑌚𑍍𑌯𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃। 𑌨 𑌚𑌾𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌵𑍇-𑌭𑌕𑍍𑌤𑌾𑌯𑌾𑌪𑍍𑌯𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌵𑍇 𑌨 𑌵𑌾𑌚𑍍𑌯𑌮𑍍। 𑌨 𑌚 𑌮𑌾𑌂 𑌯𑍋𑌽𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌤𑌿-𑌮𑌦𑍀𑌯𑍇 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇 𑌮𑌦𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑍇 𑌮𑌦𑍍𑌗𑍁𑌣𑍇𑌷𑍁 𑌚 𑌕𑌥𑌿𑌤𑍇𑌷𑍁 𑌯𑍋 𑌦𑍋𑌷𑌮𑌾𑌵𑌿𑌷𑍍𑌕𑌰𑍋𑌤𑌿, 𑌨 𑌤𑌸𑍍𑌮𑍈 𑌵𑌾𑌚𑍍𑌯𑌮𑍍। 𑌅𑌸𑌮𑌾𑌨𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌿𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑌸𑍍𑌤𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌪𑌰𑌿𑌹𑌰𑌣𑍀𑌯𑌤𑌾𑌜𑍍𑌞𑌾𑌪𑌨𑌾𑌯 ॥ ॥௬௭॥

உனக்கு நான் சொன்னது மிகவும் ரஹஸ்யமானது. அந்த ஸங்கதிகளை நல்ல தபஸ்ஸுக்களைசெய்யாதவனுக்கும், தபஸ்ஸு உள்ளவனாக இருந்தாலும், சொல்லுகிற உன்னிடத்திலும், உனக்குச் சொன்ன என்னிடத்திலும் பக்தியில்லாதவனுக்கும், அப்படி பக்தி இருந்தாலும். இந்த ஸங்கதிகளைக் கேட்க ஆவலில்லாதவனுக்கும் சொல்லாதே. என் ஸ்வரூபத்தையும், நான் எல்லா உலகங்களையும் அடக்கி ஆளுகிறேன் என்பதையும், ஞானம், சக்தி, தயை முதலான என்னுடைய குணங்களையும் ஒருவன் சொல்லும போது, எவன் அதைப் பொறுக்காமல், தூஷிக்கிறானோ, அவனுக்கும் சொல்லாதே. அதாவது—தைவத்தை ஒப்புக்கொள்ளாதவனுக்குச் சொல்லாதே. கீழேசொல்லப்பட்டமூன்று பேர்களுக்கும் சொன்னாலும் சொல்லலாம். இந்த நாலாவது பேர்வழிக்கு ஒரு நாளும் சொல்லாதே. [67]

𑌯 𑌇𑌦𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌗𑍁𑌹𑍍𑌯𑌂 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍇𑌷𑍍𑌵𑌭𑌿𑌧𑌾𑌸𑍍𑌯𑌤𑌿 ।
𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 𑌮𑌯𑌿 𑌪𑌰𑌾𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌮𑌾𑌮𑍇𑌵𑍈𑌷𑍍𑌯𑌤𑍍𑌯𑌸𑌂𑌶𑌯𑌃 ॥

𑌇𑌦𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌗𑍁𑌹𑍍𑌯𑌂 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍇𑌷𑍁 𑌯𑍋𑌽𑌭𑌿𑌧𑌾𑌸𑍍𑌯𑌤𑌿-𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌸𑍍𑌯𑌤𑌿। 𑌸 𑌮𑌯𑌿 𑌪𑌰𑌾𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌮𑌾𑌮𑍇𑌵𑍈𑌷𑍍𑌯𑌤𑌿। 𑌨 𑌤𑌤𑍍𑌰 𑌸𑌂𑌶𑌯𑌃 ॥ ॥௬௮॥

---

அவருடைய அபிப்பிராயத்தை உள்ளபடி அறியவேண்டுமென்று தபிக்கிற ஒருவன் அதை எப்படி நம்பலாம்.

எவன் இந்த உயர்ந்த ரஹஸ்யத்தை என்னுடைய பக்தர்களுக்குச சொல்லுகிறானோ அவனுக்கு என்னிடத்தில் 1 உயர்ந்த பக்தி உண்டாகி, அதனால்அவன் என்னிடமே 2 வந்து சேருவன்.' இதில் ஸந்தேகமே இல்லை 3 [ 68 ]

न च तस्मान्मनुष्येषु कश्चिन्मे प्रियकृत्तमः ।
भविता न च मे तस्मादन्यः प्रियतरो भुवि ॥ ६९ ॥

सर्वेषु मनुष्येष्वितः पूर्वं तस्मादन्यो मनुष्यो मे न कश्चित्प्रियकृत्तमोऽभूत् । इतः उत्तरं च न भविता । अयोग्यानामुपादानं योग्यानामनुपदेशे तद्धानिरिष्टतमत्वात् ॥ ॥ ६९ ॥

உலகத்திலிருக்கும் மனிதர்களுக்குள் இதற்கு முன்பு அவன் மாதிரி எனக்கு மிகவும இன்பமான வேலைகளைச் செய்தவன் ஒருவனுமில்லை. இனிமேல உண்டாகப்போகிறதுமில்லை. [69]

अध्येष्यते च य इमं धर्म्यं संवादमावयोः ।
ज्ञानयज्ञेन तेनाहमिष्टः स्यामिति मे मतिः ॥ ७० ॥

आवयोरिमं धर्म्यं संवादं योऽध्येष्यते, तेन ज्ञानयज्ञेनाहमिष्टः स्यामिति मे मतिः । अस्मिन् यो ज्ञानयज्ञोऽभिधेयः, तेनाहमेतदध्ययनमात्रेणेष्टः स्यामित्यर्थः ॥ ॥ ७० ॥

---

1. உயர்ந்த பக்தி—பரபக்தி. தகுந்தவர்களுக்குச்சொல்லுவதும் கர்மயோகத்தில் சேர்ந்தது. பக்தியோகத்திற்கு முளைபோன்ற பகவானுடைய வேலைகளில் சேர்ந்தது என்று கருத்து.

2. பகவானுடைய கீதைக்கு உண்மையான அர்த்தத்தை மனதில் பட்டுச் சொல்லுகிறவனுக்கு தாழ்ந்த பலன்களில் ஆசையை பகவான் உண்டுபண்ணமாட்டார் என்று கருத்து.

3 இவ்விடத்தில் கெட்டவர்களுக்குச்சொல்லாதே என்று முதலில் சொல்லி, பிறகு நல்லவர்களுக்குச் சொல்லு என்று பகவான் சொல்லியிருக்கிறார். எதற்காகவென்றால்-நல்லவர்களுக்குச் சொல்லாமலிருந்தாலும இருக்கலாம். கெட்டவர்களுக்குச் சொல்லக்கூடாதென்று தன் கருத்தைக் காட்டுவதற்காக.

அவ—இந்த கீதையை ஆசாரியனிடத்தில் படித்தால் வரும் பலனைச் சொல்லுகிறார்—

எவன் மிகுந்த புண்ணியத்தை உண்டுபண்ணக்கூடிய—நாம் இரண்டுபேரும் பேசிக்கொண்ட—இந்த வார்த்தையை அதாவது—கீதையை வேதத்தைப்போல் குருவினிடத்தில் கேட்கிறானோ. அவனை இதைப்படித்த மாத்திரத்தினாலேயே இந்த கீதையில் உயர்ந்ததாகச் சொல்லப்பட்ட 1 ஞான யக்ஞம் என்கிற வேலையைச் செய்தவனாக நினைத்து, அவனிடத்தில் மிகுந்த ஸந்தோஷத்தை அடைகிறேன், [70]

ஶ்ரத்தாவாநநஸூயஶ்ச ஶ்ருணுயாதபி யோ நர꞉ |
ஸோऽபி முக்த꞉ ஶுபாம்ல்லோகாந் ப்ராப்நுயாத் புண்ய
கர்மணாம் || ||௭௧||

ஶ்ரத்தாவாநநஸூயஶ்ச யோ நர꞉ ஶ்ருணுயாதபி தச்
ச்ரவணமாத்ரேண ஸோऽபி பக்திவிரோதிபாபேப்யோ மு
க்த꞉ புண்யகர்மணாம் பக்தாநாம் லோகாந் ஸமூஹாந்
ப்ராப்நுயாத் || ||௭௧||

இந்தக் கீதையை 2 கேட்பவனுக்கும், கேட்கவேணுமென்று ஆசைப்படுகிறவனுக்கும், கீதை கீதை என்கிறாயே கீதையில் என்ன இருக்கிறது என்று வையாதவனுக்கும் பக்திக்கு இடைஞ்சலான பாபங்கள்போய், என்னுடைய பக்தர்கள் கூட்டங்களோடு சேருவார்கள். [71]

---

1. 9-வது அத்தியாயம் 15-வது சுலோகத்தில் சொல்லப்பட்டது.
2. சுலோகத்தில் 'ச' (உம்) என்கிற சொல்லாலே முன்னாலே (4-வது அத்தியாயம் 34-வது சுலோகம்) சொல்லப்பட்டபடி ஆசாரியனிடத்தில் வணக்கம முதலானவைகளையும் சேர்த்துக்கொள்ள வேணுமென்று காட்டப்படுகிறது.

இங்கே கேட்பதாவது குருவினிடத்திலிருந்து முறைப்படி கேட்பதுதான். தானாய் புஸ்தகத்தைப் பார்ப்பதும், ஒருவரிடம்கேட்டபோதிலும், முறைப்படி இல்லாமல் கேட்பதும் கூடாதென்று கருத்து. அவைகளால் பக்திக்கு இடைஞ்சல்களான பாபங்கள் போகாது.

𑌕𑌚𑍍𑌚𑌿𑌦𑍇𑌤𑌚𑍍𑌛𑍍𑌰𑍁𑌤𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌤𑍍𑌵𑌯𑍈𑌕𑌾𑌗𑍍𑌰𑍇𑌣 𑌚𑍇𑌤𑌸𑌾 ।
𑌕𑌚𑍍𑌚𑌿𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌮𑍋𑌹𑌃 𑌪𑍍𑌰𑌣𑌷𑍍𑌟𑌸𑍍𑌤𑍇 𑌧𑌨𑌂𑌜𑌯 ॥ ௭௨ ॥

𑌮𑌯𑌾 𑌕𑌥𑌿𑌤𑌮𑍇𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌯𑌾𑌽𑌵𑌹𑌿𑌤𑍇𑌨 𑌚𑍇𑌤𑌸𑌾 𑌕𑌚𑍍𑌚𑌿𑌚𑍍𑌛𑍍𑌰𑍁𑌤𑌂? 𑌤𑌵𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌮𑍋𑌹𑌃 𑌕𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌪𑍍𑌰𑌣𑌷𑍍𑌟𑌃? 𑌯𑍇𑌨𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌮𑍋𑌹𑌿𑌤𑍋 𑌨 𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌮𑍀𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌵𑌾𑌨𑍍 ॥ ௭௨ ॥

அர்ஜுந? நான் மிகவும் கவலைப்பட்டுச் சொன்ன ஸங்கதிகளை நீ கவனித்துக் கேட்டாயோ. அதனால் எந்த மயக்கத்தினால் முன்பு சண்டை செய்ய மாட்டேனென்று சொன்னாயோ, அந்த மயக்கம் தீர்ந்ததோ. 1 [72]

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 —

𑌨𑌷𑍍𑌟𑍋 𑌮𑍋𑌹𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌰𑍍𑌲𑌬𑍍𑌧𑌾 𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌨𑍍𑌮𑌯𑌾𑌚𑍍𑌯𑍁𑌤 ।
𑌸𑍍𑌥𑌿𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌗𑌤𑌸𑌨𑍍𑌦𑍇𑌹𑌃 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑍇 𑌵𑌚𑌨𑌂 𑌤𑌵 ॥

𑌮𑍋𑌹𑍋 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 । 𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌤𑍍𑌤𑌦𑍍𑌵𑌿𑌨𑌷𑍍𑌟𑌂 । 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌰𑍍𑌯𑌥𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 । 𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌦𑍇𑌵 𑌤𑌚𑍍𑌚 𑌲𑌬𑍍𑌧𑌂 । 𑌅𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍌 𑌆𑌤𑍍𑌮𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌰𑍂𑌪𑍋 𑌮𑍋𑌹𑌃, 𑌪𑌰𑌮𑌪𑍁𑌰𑍁𑌷𑌶𑌰𑍀𑌰𑌤𑌯𑌾 𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌕𑌸𑍍𑌯 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌸𑍍𑌯 𑌚𑌿𑌦𑌚𑌿𑌦𑍍𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌃 𑌅𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌰𑍂𑌪𑌶𑍍𑌚, 𑌨𑌿𑌤𑍍𑌯𑌨𑍈𑌮𑌿𑌤𑍍𑌤𑌿𑌕𑌰𑍂𑌪𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌪𑌰𑌮𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑌾𑌧𑌨𑌤𑌯𑌾 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌯𑌭𑍂𑌤𑌸𑍍𑌯 𑌬𑌨𑍍𑌧𑌕𑌤𑍍𑌵𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍂𑌪𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑍋 𑌵𑌿𑌨𑌷𑍍𑌟𑌃 । 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌵𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌤𑍍𑌵𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌰𑌹𑌿𑌤𑌤𑌾, 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌰𑍈𑌕𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑌾, 𑌪𑌰𑌮𑌪𑍁𑌰𑍁𑌷𑌶𑍇𑌷𑌤𑌾, 𑌤𑌨𑍍𑌨𑌿𑌯𑌾𑌮𑍍𑌯𑍈𑌕𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌤𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌂, 𑌨𑌿𑌖𑌿𑌲𑌜𑌗𑌦𑍁𑌦𑍍𑌭𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌪𑍍𑌰𑌲𑌯𑌲𑍀𑌲𑌾𑌶𑍇𑌷𑌦𑍋𑌷𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌨𑍀𑌕𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑍈𑌕𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌿𑌕𑌾𑌨𑌵𑌧𑌿𑌕𑌾𑌤𑌿𑌶𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌬𑌲𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌵𑍀𑌰𑍍𑌯𑌶𑌕𑍍𑌤𑌿𑌤𑍇𑌜𑌃𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌿𑌸𑌮𑌸𑍍𑌤𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌗𑌣𑌮𑌹𑌾𑌰𑍍𑌣𑌵 𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌶𑌬𑍍𑌦𑌾𑌭𑌿𑌧𑍇𑌯𑌪𑌰𑌮𑌪𑍁-

1. அர்ஜுநன் மனது இப்போது இருக்கிறது பகவானுக்குத் தெரியும். ஆனபோதிலும், அவனுடைய மனதின இருப்பை அவன் வாயாலே சொல்லிக் கேட்கவேணுமெனகிற ஆசையினாலே, தனக்குத் தெரியாததுபோல கேட்கிறார்.

[illegible] पुरुषयाथात्म्यज्ञानं च, सर्वं परावरतत्त्वयाथात्म्यविज्ञान [illegible] नित्यनैमित्तिककर्म [illegible] ज्ञानं च लब्धम्। ततश्च [illegible] विपरीतज्ञानं [illegible] स्थितोऽस्मि गतसन्देहः [illegible] जानन्नेव युद्धादिकर्तव्यताविषयं तव वचनं करिष्ये। यथोक्तं युद्धादिकं करिष्य इत्यर्थः॥ ॥ ७३ ॥

அவ—அர்ஜுநன் சொல்லுகிறான்—

நீர் என் விஷயத்தில் மிகவும் கவலைப்பட்டு, மிகவும் இன்பமாகச் சொல்லியபோது, நான் கொஞ்சம் ஸந்தோஷப்பட்டதையே வியாஜமாகக்கொண்டு, என்னிடத்தில் அளவில்லாத ஸந்தோஷத்தை அடைந்து, நல்ல ஸங்கதிகளைச் சொல்லிக் கொடுத்தபடியால், எனக்கு தப்பு எண்ணங்கள் எல்லாம்போய் விட்டன. அவைகளாவன—உடம்புதான் ஆத்மாஎன்கிற தப்பு எண்ணம்; உம்முடைய உடம்பான உலகத்தைப்பற்றி உம்முடைய உடம்புஎன்று அறியாமையும்; உடம்பு அன்றுஎன்கிற எண்ணமும்; நித்தியம், நைமித்திகம் முதலான-சாஸ்திரத்தில் சொல்லிய-கர்மங்களைச்செய்வதனுல் மிகவும் உயர்ந்த புருஷனை நீர் மிகவும் ஸந்தோஷமடைந்து, செய்கிறவர்களைஉம்மிடம் அழைத்துக்கொள்ளுவீர்என்று சாஸ்திரத்தில் சொல்லியிருக்க, அந்தக்கர்மங்கள் ஸம்ஸாரத்தைக்கொடுக்கும் என்கிறதப்புஎண்ணம்-இவை முதலானவைகள். அதாவது-எந்தவஸ்துக்களைப்பற்றியும அவைகளின உண்மையே தான் தோன்றுகிறது. ஆத்மா உடம்பைக் காட்டிலும் வேறு; அழிவது முதலான உடம்பின் கெட்ட ஸ்வபாவங்கள ஒன்றுமில்லாதது; அறிவையே இயறகையாக உடையது; எப்பொழுதும் உமக்கு இஷ்டமான வேலைகளைச் செய்வதற்கே ஏற்பட்டது; எப்பொழுதும் உம்மால் ஏவத்தகுந்தது; நீர் எல்லா உலகங்களையும் விளையாட்டாக உண்டுபண்ணி, காப்பாற்றி, அழிக்கிறீர்; மோக்ஷத்தையும கொடுக்கி

நீர்; ஒருவிதக்குற்றமும் உம்மிடத்தில் கிட்டாது; நீர் உயர்ந்த எல்லாநல்லகுணங்களும் இயற்கையாகவே உடையவர்; பரப்பிரும்மமென்றும் பரமபுருஷனென்றும் சொல்லப்படுகிறவர்; இப்படித் தெரிந்து, இந்த அறிவை எப்பொதும் பழக்க வேண்டும்; உம்முடைய ஸந்தோஷத்திற்காகவே நித்தியகர்மங்களையும், நைமித்திக கர்மங்களையும் செய்யவேண்டியது; கெட்டகாரியங்களைச் செய்யாமலிருக்கவேண்டியது; கண்முதலானவைகளையும், மனதையும் அடக்குவது, தயை, பொறுமை முதலான ஆத்மாவுக்கு இருக்க வேண்டிய நல்ல குணங்களை வளர்க்க வேண்டியது; இவைகளைச்செய்தால், பக்தி என்று சொல்லப்படுகிற உம்முடைய தியானம் நாளுக்குநாள் வளர்ந்து நிறைவேறி, அதனால் உம்மை அடையலாம்; உபநிஷத்துக்களில மிகவும் உயர்ந்த புருஷனாகச் சொல்லப்படுகிறவர் எனக்குதேரோட்டுனை வாஸுதேவன்என்கிற நீர்தான்-இவைகளை ஸந்தேகமில்லாமல் அறிந்தேன். பந்துக்களிடத்தில் ஸ்நேஹத்தினாலும், தயையினாலும பலவிதமான தப்பு எண்ணங்கள் அளவில்லாமல் வளர்ந்து, அதனால் ஏற்பட்ட எல்லா துக்கங்களும் போய் விட்டன. இப்போது மிகவும் ஸந்தோஷமாக இருக்கிறது. சண்டைக்காக வில்லில் பாணங்களைப் பூட்டியாய் விட்டது. [73]

௭௪.—𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌯 𑌸𑍍𑌵𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌃 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌶𑍍𑌚 𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌕𑌿𑌂 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑍀𑌤𑌿 𑌪𑍃𑌷𑍍𑌟𑌵𑌤𑍇 𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚—

𑌇𑌤𑍍𑌯𑌹𑌂 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌪𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌚 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।
𑌸𑌂𑌵𑌾𑌦𑌮𑌿𑌮𑌮𑌶𑍍𑌰𑍌𑌷𑌮𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 𑌰𑍋𑌮𑌹𑌰𑍍𑌷𑌣𑌮𑍍 ॥ ௭௪ ॥

𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌸𑍍𑌯-𑌵𑌸𑍁𑌦𑍇𑌵𑌸𑍂𑌨𑍋𑌃, 𑌪𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌚 𑌤𑌤𑍍𑌪𑌿𑌤𑍃𑌷𑍍𑌵𑌸𑍁𑌃 𑌪𑍁𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃-𑌮𑌹𑌾𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 [illegible] 𑌰𑍋𑌮𑌹𑌰𑍍𑌷𑌣𑌮𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 𑌸𑌂𑌵𑌾𑌦𑌮𑌹𑌂 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌮𑌶𑍍𑌰𑍌𑌷𑌂-𑌶𑍍𑌰𑍁𑌤𑌵𑌾𑌨𑌸𑍍𑌮𑌿 ॥ ௭௪ ॥

அவ—சண்டையில் என்பிள்ளைகளும் பாண்டுவின் பிள்ளைகளும் என்ன செய்தார்கள் என்று கேட்ட திருதராஷ்டிரருக்கு ஸஞ்சயர் சொல்லுகிறார்—

கீழ்ச்சொன்னபடி வஸுதேவருடைய பிள்ளையான ஸ்ரீகிருஷ்ணனுக்கும், அவனுக்கு அத்தை பிள்ளையாயும், உயர்ந்தபுத்தி

உள்ளவனுயும், அந்த ஸ்ரீ கிருஷ்ணனுடைய இரண்டு திருவடிகளையும் நம்பி அடைந்தவனுயுமிருக்கிற அர்ஜுனனுக்கும், நடந்த-மயிர்க் கூச்சலை உண்டு பண்ணக் கூடிய—ஆச்சரியமான-வார்த்தைகளை அவரவர்கள் சொன்னபடியே நான் கேட்டேன். (74).

வ்யாஸப்ரஸாதாச்ச்ருதவாநேதத்குஹ்யமஹம் பரம் ।
யோகம் யோகேஶ்வராத்க்ருஷ்ணாத்ஸாக்ஷாத்கதயத: ஸ்வயம் ‖௭௫‖

வ்யாஸப்ரஸாதாத் வ்யாஸாநுக்ரஹேண திவ்யசக்ஷுஶ்ஶ்ரோத்ரலாபாத் ஏதத் பரம் யோகாக்யம் குஹ்யம் யோகேஶ்வராத் ஜ்ஞாநபலைஶ்வர்யவீர்யஶக்திதேஜஸாம் நிதேஸ்ஸ்வயமேவ கதயத: க்ருஷ்ணாத் ஸ்வயமேவ கதயத: ஸாக்ஷாச்ச்ருதவாநஹம். ‖௭௫‖

நல்ல ஆசார்யரான வியாஸருடைய அனுக்கிரஹத்தினுல் எல்லாஸங்கதிகளையும் பார்க்கக்கூடிய கண்ணையும், எல்லாஸங்கதிகளையும் கேட்கக்கூடிய காதையும் அடைந்து, உயர்ந்த ரஹஸ்யமான பக்தியோகத்தை ஞானம், சக்தி முதலான உயர்ந்தகுணங்களுள்ள ஸ்ரீகிருஷ்ணபகவான் தானேசொல்லும்போது நான் நேரில் கேட்டேன். அவர் சிஷியர்கள் வழியாய் கேட்கவில்லை. [75]

ராஜந் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ஸம்வாதமிமமத்புதம் । கேஶவார்ஜுநயோ: புண்யம் ஹ்ருஷ்யாமி ச முஹுர்முஹு: ‖

கேஶவார்ஜுநயோரிமம் புண்யமத்புதம் ஸம்வாதம் ஸாக்ஷாச்ச்ருதம் ஸ்ம்ருத்வா முஹுர்முஹுர்ஹ்ருஷ்யாமி ‖ ‖௭௬‖

இப்படிநேரில்கேட்ட-ஸ்ரீகிருஷ்ணனுக்கும்அர்ஜுனனுக்கும் நடந்த—எல்லாபாபத்தைப் போக்கக்கூடிய-மிகவும் ஆச்சரியமான-வார்த்தையை நினைத்து நினைத்து, அளவில்லாமல் ஸந்தோஷத்தை அடைகிறேன். [76]

தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ரூபமத்யத்புதம் ஹரே: ।
விஸ்மயோ மே மஹாந் ராஜந் ஹ்ருஷ்யாமி ச புந: புந: ‖

தச்சார்ஜுநாய ப்ரகாஶிதமைஶ்வரம் ஹரேரத்யத்புதம் ரூபம் மயா ஸாக்ஷாத்க்ருதம் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ஹ்ருஷ்யதோ மே மஹாந் விஸ்மயோ ஜாயதே । புந: புநஶ்ச ஹ்ருஷ்யாமி ‖ ‖௭௭‖

அர்ஜுநனுக்குப் பகவானால் காண்பிக்கப்பட்ட—எல்லாதேவதைகளுக்கும் ராஜாவான அவருடைய— எல்லாலோகத்தையும் அடக்கி ஆளுவதைக் கண்ணுக்குக்காட்டின-மிகவும் ஆச்சரியமான உருவத்தை நான் பார்த்தேன். அதை நினைத்து நினைத்து, அளவில்லாத ஸந்தோஷமும் ஆச்சரியமும் உண்டாகிறது. [77]

𑌏𑌵𑌂 — 𑌇𑌤𑍍𑌥𑌂 𑌬𑌹𑍁𑌮𑌾𑌨𑍋𑌕𑍍𑌤𑌨 —

𑌯𑌤𑍍𑌰 𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑍋 𑌯𑌤𑍍𑌰 𑌪𑌾𑌰𑍍𑌥𑍋 𑌧𑌨𑍁𑌰𑍍𑌧𑌰𑌃।
𑌤𑌤𑍍𑌰 𑌶𑍍𑌰𑍀𑌰𑍍𑌵𑌿𑌜𑌯𑍋 𑌭𑍂𑌤𑌿𑌰𑍍𑌧𑍍𑌰𑍁𑌵𑌾 𑌨𑍀𑌤𑌿𑌰𑍍𑌮𑌤𑌿𑌰𑍍𑌮𑌮 ॥

𑍐 𑌤𑌤𑍍𑌸𑌦𑌿𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑍇 𑌶𑌤𑌸𑌾𑌹𑌸𑍍𑌰𑍍𑌯𑌾𑌂 𑌸𑌂𑌹𑌿𑌤𑌾-
𑌯𑌾𑌂 𑌵𑍈𑌯𑌾𑌸𑌿𑌕𑍍𑌯𑌾𑌂 𑌪𑌾𑌰𑌮𑌹𑌂𑌸𑍍𑌯𑌾𑌂 𑌶𑍍𑌰𑍀𑌭𑍀𑌷𑍍𑌮𑌪𑌰𑍍𑌵𑌣𑌿
𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍂𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂
𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇 𑌸𑌕𑌲
𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌸𑌙𑍍𑌗𑍍𑌰𑌹𑌣𑌮𑍋𑌕𑍍𑌷𑍋𑌪𑌦𑍇𑌶𑌯𑍋𑌗𑍋
𑌨𑌾𑌮𑌾𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯 𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 𑌨𑌮𑌃 ॥

---

𑌯𑌤𑍍𑌰 𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰𑌃- 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌸𑍍𑌯𑍋𑌚𑍍𑌚𑌾𑌵𑌚𑌰𑍂𑌪𑍇𑌣𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌸𑍍𑌯 𑌚𑍇𑌤𑌨𑌸𑍍𑌯𑌾𑌚𑍇𑌤𑌨𑌸𑍍𑌯 𑌚 𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑍋 𑌯𑍇 𑌯𑍇 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌯𑍋𑌗𑌾𑌸𑍍𑌤𑍇𑌷𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌯𑍋𑌗𑌾𑌨𑌾𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌃 𑌸𑍍𑌵𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌾𑌯𑌤𑍍𑌤𑌸𑍍𑌵𑍇𑌤𑌰𑌸𑌮𑌸𑍍𑌤𑌵𑌸𑍍𑌤𑍁𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑌿 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌭𑍇𑌦𑌃-𑌕𑍃𑌷𑍍𑌣𑌃 𑌵𑌸𑍁𑌦𑍇𑌵𑌸𑍂𑌨𑍁𑌃-𑌯𑌤𑍍𑌰𑌚 𑌪𑌾𑌰𑍍𑌥𑍋𑌧𑌨𑍁𑌰𑍍𑌧𑌰𑌃 𑌤𑌤𑍍𑌪𑌿𑌤𑍃𑌷𑍍𑌵𑌸𑍁𑌃 𑌪𑍁𑌤𑍍𑌰𑌃- 𑌤𑌤𑍍𑌪𑌦𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑍈𑌕𑌾𑌶𑍍𑌰𑌯𑌃- 𑌤𑌤𑍍𑌰 𑌶𑍍𑌰𑍀𑌰𑍍𑌵𑌿𑌜𑌯𑍋 𑌭𑍂𑌤𑌿𑌰𑍍𑌨𑍀𑌤𑌿𑌰𑍍𑌧𑍍𑌰𑍁𑌵𑌾 𑌨𑌿𑌶𑍍𑌚𑌲𑌾-𑌇𑌤𑌿 𑌮𑌤𑌿𑌰𑍍𑌮𑌮𑍇𑌤𑌿 ॥ ॥ 78 ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌵𑌿𑌰𑌚𑌿𑌤𑍇 𑌶𑍍𑌰𑍀𑌗𑍀𑌤𑌾𑌭𑌾𑌷𑍍𑌯𑍇
𑌅𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃.

𑌶𑍍𑌰𑍀𑌗𑍀𑌤𑌾𑌭𑌾𑌷𑍍𑌯𑌂 𑌸𑌂𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑍍 ॥

𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌯 𑌨𑌮𑌃 ॥

அவ—என்னத்துக்குப் 1பல வார்த்தைகளைச் சொல்லவேணும்—

எந்தக்கக்ஷியில் உலகத்தில் இருக்கும் அறிவுள்ளது அறிவில்லாதது என்று இருவகையான எல்லாவஸ்துக்களுக்கும், எந்த எந்த ஆச்சரியமான குணங்கள் இருக்கின்றனவோ. அவைகளை தன் நினைவு மாத்திரத்தினலேயே ஏற்படுத்துகிற எல்லாவஸ்துக்களுடைய வெவ்வேறுவிதமான ஸ்வரூபம், இருப்பு, வேலைகள், என்கிற மூன்றையும் தன்னுடைய நினைவுப்படி செய்துகொண்டிக்கிற, வஸுதேவருடைய பிள்ளையான கிருஷ்ணன் இருக்கிறாரோ; அவருக்கு அத்தையான குந்தி பிள்ளையான—அவருடையஇரண்டு திருவடிகளையே தனக்கு எல்லா விதத்துக்கும் நம்பியிருக்கிற- உயர்ந்த வில்லாளியான—அர்ஜுநன் எந்தக்கக்ஷியிலிருக்கிறானே,

---

1. திருதராஷ்ட்டிரன் துர்யோதனனுக்கு ஜெயம் வரவேணுமென்கிற ஆசையினல் சண்டையில் என்ன நடந்தது என்று ஸஞ்சயனைக்கேட்டான். சண்டை ஆரம்பிப்பதற்கு முன்னலேயே பகவானுடைய விச்வரூப உடம்பில் துர்யோதனன் முதலானவர்கள் பகவானுடைய வாயில் கஷ்டப்பட்டதாகப் பார்த்ததாலும் (அ- 11- சு. 26. 27.), இவர்களை ஏற்கனவே நான் கொன்று விட்டேன் என்று பகவான சொன்னதைக் கேட்டதாலும் (சு-33), துர்யோதனன சாகப்போகிறான் என்று ஸஞ்ஜயருக்குத் தெரிந்துவிட்டது. இதை எப்படி நேராகச் சொல்லுகிறதென்று யோஜித்து, குருவம்சத்தாரும் பாஞ்சால தேசத்தாரும் பாதிவார்த்தை சொல்லும்போதே முழுஸங்கதிகளையும் அறிவர்களென்கிற சொல் இருப்பதாலே, இந்தவார்த்தையினலேயே அவன் தெரிந்து கொள்ளுவானென்று நினைத்து, அதை மறைபொருளாக அவர்களுடைய வார்த்தைகளைக்கேட்டேன் என்று சொன்னர். பிள்ளைகளிடமிருக்கும் கடுமையான சபலத்தினலே, அப்போதும் தெரிந்து கொள்ளவில்லை. பிறகு இதினலாவது தெரிந்து கொள்ளட்டும் என்று நினைத்து, 'அந்த உருவத்தை நினைத்து ஸந்தோஷப்படுகிறேன்' என்று சொன்னர். அப்பொழுதும் எல்லா விதத்தாலும் குருடனை (அதாவது—வெளிக் கண்ணுமில்லை. உள் கண்ணன அறிவு மில்லை) திருதராஷ்ட்டிரன் தெரிந்து கொள்ளவில்லை. இவ்வளவிலும அறிந்து கொள்ளாதஉனக்கு நேராகவே சொல்லுகிறேன் என்று சொல்லுகிறா.

அந்தக்கக்ஷிககாராகளுககுததான 1ஸ்ரீயும், விஜயமும், பூதியும, நிலையான நீதியும இருககுமெனறு என அபிபபிராயம. [78]

---

1 ஸ்ரீ என்பது ஒருவிதக்குறைவனனியில ராஜ்ஜியம முதலான எலலா ஸமபததுககளினநிறைவு விஜயம்-சததுருககளைத தொலைப்பது. பூதி—எலலாவிதஸம்பதது அதாவது—எலலா வறறையும அடக்கிஆளு வது முதலான சகதி. நீதி-அநதநத சாஸ்திரஙகளைக கொண்டு இடம காலம முதலானவைகளுககுத தகுந்தபடி இநத இநத வேலைகளைச செய யவேணடியது, இநத இநத வேலைகளைச செயயக கூடாதென்கிற உள் ளபடியான தீர்மானமும், அதறகுத் தகுநத வேலையும. நிலையாயிருப பதாவது—மிகுந்த ஜாககிரதையும், அறிவும உளளவாகளாலும எவவிதத் தாலும மாறற முடியாமலிருககை

பதினெட்டாவது அததியாயம முறறிற்று.

ஸ்ரீமதே வேதாநத ராமாநுஜ மஹாதேசிகாயநம.

ஸ்ரீகீதை முறறிறறு.